ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.







ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்

## முதலாவது,

# பாலகாண்டம்.

## சிறப்புப்பாயிரம்.

உலகம்யாவையுந்தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
* அலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணங்களே. (க)

சிற்குணத்தர்தெரிவருநன்னிலை
எற்குணர்த்தரிதெண்ணியமூன்றனுள்
முற்குணத்தவரேமுதலோரவர்
நற்குணக்கடலாடுதனன்றரோ. (உ)

ஆதியந்த † மரியெனயாவையும்
ஓதினாரலகில்லனவுள்ளன
வேதமென்பனமெய்ந்நெறிநன்மையன்
பாதமல்லதுபற்றிலர்பற்றிலார். (ங)

---

* அலகிலா-அளவில்லாத.

† அரியன எனப் பாடங் கூறுவாருமுளர்.

ஓசைபெற்றுயர்பாற்கடலுற்றொரு
பூசைமுற்றவுநக்குபுபுக்கென
ஆசைபற்றியறையலுற்றேன்மற் * றிக்
காசில்கொற்றத்திராமன்கதையரோ. (௪)

நொய்தினொய்யசொனூற்கலுற்றேனெனை
வைதவைவின்மராமரமேழ்தொளை
எய்தவெய்யவற்கெய்தியமாக்கதை
செய்தசெய்தவன்சொன்னின்றதேயத்தே. (௫)

வையமென்னையிகழவுமாசெனக்
கெய்தவும்மிதியம்புவதியாதெனிற்
பொய்யில்கேள்விப்புலமையினோர்புகல்
தெய்வமாக்கவிமாட்சிதெரிக்கவே. (௬)

தேவபாடையினிக்கதைசெய்தவர்
மூவரானவர்தம்முளுமுந்திய
நாவினாருரையின்படிநான்றமிழ்ப்
பாவினாலிதுணர்த்தியபண்பரோ. (௭)

துறையடுத்தவிருத்தத்தொகைக்கவிக்
குறையடுத்தசெவிகளுக்கோதில்யாழ்
நறையடுத்தவசுணநன்மாச்செவிப்
பறையடுத்ததுபோலுமென்பாவரோ. (௮)

முத்தமிழ்த்துறையின்முறைபோகிய
† உத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவென்
பித்தர்சொன்னவும்பேதையர்சொன்னவும்
பத்தர்சொன்னவும்பன்னப்பெறுபவோ. (௯)

அறையுமாடரங்கும்மடப்பிள்ளைகள்
தறையிற்கீறிடிற்றச்சருங்காய்வரோ
‡ இறையுஞானமிலாதவென்புன்கவி
முறையினாலுணர்ந்தாருமுனிவரோ. (௧0)

* "இக்காசில் கொற்றத்திராமன்-இலங்கையர்வேந்தன் போரிடைத் தன் றானைமுழுதும் படத்தமியனாய்ப் பட்டானதுநிலைமைநோக்கி அயோத்திய ரிறைமேற் செல்லாது இன்றுபோய் நாளைநின் றானையொடு வாவென விட்டாற்போல்வது" இதனைப் "பேராண்மை" யென்றதற்குப் பரிமேலழகருரையானு முணர்க.

† உத்தமக்கவிகள் —சிறப்பினையுடைய கவிகளுக்கென்பதன்றி அறியாமையாகிய இருளையொழித்த கவிகளுக்கென் றுரைப்பினு மமையும்.

‡ இறையு ஞானமிலாத-சிறிதேனு மெய்யுணர்ச்சியில்லாத எனக் கொள்க. உம்மை-இழிவுசிறப்பு.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமத்கம்பராமாயணம்.

# பாலகாண்டம்.

அபியுக்தர் செய்தருளிய

## தனியன்கள்.

---

### நேரிசை வெண்பா.

தராதலத்தினுள்ள தமிழ்க் * குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றே—இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வானடிபணியுமாதித்தன்
கம்பநாட்டாழ்வான்கவி. (க)

### நேரிசை கட்டளைக்கலித்துறை.

வாழ்வார்திருவெண்ணெய்நல்லூர்ச்சடையப்பன்வாழ்த்துபெறத்
தாழ்வாருயரப்புலவோர்கவிருடானகலப்
போழ்வார்கதிரினுதித்ததெய்வப்புலமைக்கம்பநாட்
டாழ்வார்பதத்தைச்சிந்திப்பவர்க்கியாதுமரியதன்றே. (உ)

### விருத்தங்கள்.

அம்பராவணிசடையரனயன்முதல்
உம்பரான்முனிவரால்யோகராலுயர்
இம்பராற்பிணிக்கருமிராமவேழஞ்சேர்
கம்பராம்புலவரைக்கருத்திருத்துவாம். (௩)

### வேறு.

சம்பநாடன்னுமைசெவிசாற்றுபூங்
கொம்பனுடன்கொழுனனிராமப்பேர்
பம்பநாடழைக்குங்கதைபாச்செய்த
கம்பநாடன்கழறலையிற்கொள்வாம். (௪)

---

* குற்றம் ஈண்டு சொற்சோர்வு பொருட்சோர்வு.

வேறு.

நாரணன்விளையாட்டெல்லாநாரதமுனிவன்கூற
ஆரணக்கவிதைசெய்தானறிந்த * வான்மீகியென்பான்
சீரணிசோழநாட்டுத்திருவழுந்தூருள்வாழ்வோன்
காரணக்கொடையான்கம்பன்றமிழினாற்கவிசெய்தானே. (௫)

† அம்பிலே ‡ லையைநாட்டியமரர்க்கன்றமுதமீந்த
தம்பிரானென்னத்தானுந்தமிழிலேதாலைநாட்டிக்
கம்பநாடுடையவள்ளல்கவிச்சக்கிரவர்த்திபார்மேல்
நம்புபாமாலையாலேநரருக்கின்றமுதமீந்தான். (௬)

எண்ணியசகாத்தமெண்ணூற்றேழின்மேற்சடையன்வாழ்வு
நண்ணியவெண்ணெய்நல்லூர்தன்னிலேகம்பநாடன்
பண்ணியவிராமகாதைபங்குனியத்தநாளில்
கண்ணியவரங்கர்முன்னேகவியரங்கேற்றினானே. (௭)

வேறு.

இம்பர்நாட்டிற்செல்வமெல்லாமெய்தியரசாண்டிருந்தாலும்
உம்பர்நாட்டிற்கற்பகக்காவோங்குநீழலிருந்தாலும்
செம்பொன்மேருவனையபுயத்திறல்சேரிராமன்றிருக்கதையிற்
கம்பநாடன்கவிதையிற்போற்கற்றோர்க்கிதயங்களியாதே. (௮)

வேறு.

‡ கழுந்தராயுனகழல்பணியாதவர்கதிர்மணிமுடிமீதே
அழுந்தவாளிகள்தொடுசிலைராகவவபிநவகவிநாதன்
விழுந்தஞாயிறுவெழுவதன்முன்மறைவேதியருடனாய்ந்
தெழுந்தஞாயிறுவிழுவதன்முன்கவிபாடினனெழுநூறே. (௯)

வேறு.

$ நாடியபொருள்கைகூடும்ஞானமும்புகழுமுண்டாம்
வீடியல்வழியதாக்கும்வேரியங்கமலைநோக்கும்
நீடியவரக்கர்சேனைநீறுபட்டழியவாகை
சூடியசிலையிராமன்றோள்வலிகூறுவோர்க்கே. (௧)

வேறு.

நன்மையுஞ்செல்வமுநாளுநல்குமே
தின்மையும்பாவமுஞ்சிதைந்துதேயுமே

---

* வல்மீகம்-புற்று: புற்றிலிருந்து கேட்டிருந்தனன் ஆதலானும் புற்றிலிருந்து வெளிப்பட்டானாகலானும் வால்மீகியெனக் காரணக்குறியாயிற்று.

† அம்பு-நீர். ‡ சிலை-கல், மலை-மந்தரமலை. § கழுந்து படைக்கலங்களிற் கைப்பிடியாற்றேய்ந்த இடம். இவ்வுவமையால் அறிவுதேய்ந்தவர் என்றவாறாயிற்று. $ நாடியபொருள்-கல்வி. செல்வங்கள்.

சென்மமுமரணமுமின்றித்தீருமே
இம்மையே * ராமவென்றிரண்டெழுத்தினால். (௨)

வடகலைதென்கலைவடுகுகன்னடம்
இடமுளபாடையாதொன்றினாயினும்
திடமுளரகுகுலத்திராமன்றன்கதை
அடைவுடன்கேட்பவ † ரமரராவரே. (௩)

வென்றிசேரிலங்கையானைவென்றமால்வீரமோத
நின்றராமாயணத்தினிகழ்ந்திடுகதைகடம்மில்
ஒன்றினைப்படித்தோர்தாமுமுரைத்திடக்கேட்டோர்தாமும்
நன்றிதுவென்றோர்தாமுநரகமெய்திடாரே. (௪)

இராகவன்கதையிலொருகவிதன்னிலேகபாதத்தினையுரைப்போர்
பராவருமலரோனுலகினிலவனும்பன்முறைவழுத்தவீற்றிருந்து
புராதனமறையுமண்டர்பொற்பதமும்பொன்றுநாளனைத்தினும்பொன்றா
அராவணையமலனுலகெனும்பரமபதத்தினையணுகுவரன்றே. (௫)

வேறு.

‡ இறுவரம்பிலிராமவென்றோரும்பர்
நிறுவரென்பதுநிச்சயமாதலான்
மறுவின்மாக்கதைகேட்பவர்வைகுந்தம்
பெறுவரென்பதுபேசவும்வேண்டுமோ. (௬)

அன்னதானமகிலநற்றானங்கள்
கன்னிதானங்கபிலையின்றானமே
சொன்னதானப்பலனெனச்சொல்லுவர்
மன்னிராமகதைமறவார்க்கரோ. (௭)

ஆதியரியோகமாநாராயணர்திருக்கதையறிந்தனுதினம்பரவுவோர், நீதியனுபோகநெறிநின்றுநெடுநாளதினிறந்துசகதண்டமுழுதுக், காதிபர்களாயரசுசெய்துளநினைத்ததுகிடைத்தருள்பொறுத்துமுடிவில், சோதிவடிவாயழிவில்முத்திபெறுவாரெனவுரைத்தசுருதித்தொகைகளே. (௮)

வேறு.

இனையநற்காதைமுற்றுமெழுதினோர்வியந்தோர்கற்றோர்
அனையதுதன்னைச்சொல்வோர்க்கரும்பொருள்கொடுத்துக்கேட்போர்
கனைகடற்புடவிமீதேகாவலர்க்கரசாய்வாழ்ந்து
வினையமதறுத்துமேலாம்விண்ணவன்பதத்திற்சேர்வார். (௯)

கரைசெறிகாண்டமேழுகதைகளாயிரத்தெண்ணூறு
பரவுறுசமரம்பத்துப்படலநூற்றிருபத்தெட்டே
யுரைசெயும்விருத்தம்பன்னீராயிரத்தொருபத்தாறு
வரமிகுகம்பன்சொன்னவண்ணமுந்தொண்ணூற்றாறே. (௧௦)

---

* ராமவென்னு மிரண்டெழுத்தின் உச்சாரணத்தால் சகல துன்பமும்போய் நன்மையுண்டாகும், என்பதை கூறியவாறாயிற்று.

† அமரர்-(௧) இறவாதவர் என்னும் பொருள்படுவதோர் சொல்லாதலால் அதற்கு நித்தியசூரிகளென்று பொருள்கூறலாம். (௨) தேவர்கள்.

‡ இறுவரம்பின்-மரணகாலத்தில்.



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

# காப்புகள்.

## நம்மாழ்வார் துதி.

தருகைநீண்ட * தயரதன்றன் றரும்
இருகைவேழத்திராகவன் றன்கதை
திருகைவேலைத்தரைமிசைச்செப்பிடக்
குருகைநாதன்குரைகழல்காப்பதே. (க)

## அநுமார் துதி.

† அஞ்சிலேயொன்றுபெற்ற ‡ னஞ்சிலேயொன்றைத்தாவி
§ அஞ்சிலேயொன்றாறாகவாரியற்காகவேகி
$ அஞ்சிலேயொன்றுபெற்றவணங்கைக்கண்டயலாரூரில்
¶ அஞ்சிலேயொன்றைவைத்தானவனெம்மையளித்துக்காப்பான். (உ)

## சரஸ்வதி துதி.

0 புத்தகம்படிகைமாலைகுண்டிகைபொருள்சேர்ஞான
வித்தகந்தரித்தசெங்கைவிமலையையமலைதன்னை
மெய்த்தகொந்தளகபாரமுகிழ்முலைத்தவளமேனி
மைத்தகுகருங்கட்செவ்வாயணங்கினைவணங்கல்செய்வாம். (ங)

---

* தசரதன்-பத்துத்திக்கினும் தன்னிரதத்தைச் செலுத்தும் ஆற்றலுள்ளோன்.

† அஞ்சிலேயொன்று (பஞ்சபூதங்களிலொன்று) வாயு. ‡ சமுத்திரம். § ஆகாசம். $ பூமி. ¶ நெருப்பு. 0 புத்தகம், படிகமாலை, குண்டிகை, ஞானவித்தகம், என்பவற்றிற்கு முறையே, இடப்பாற் கீழ்க்கரம், வலப்பாற் கீழ்க்கரம், இடப்பால் மேற்கரம், வலப்பான் மேற்கரம் என்பன இடங்களாம்.

* நடையினின்றுயர்நாயகன்றோற்றத்தி
னிடைநிகழ்ந்தவிராமாவதாரப்பேர்த்
தொடைநிரம்பியதோமறுமாக்கதை
சடையன்வெண்ணெய்நல்லூர்வயிற்றந்ததே. (௧௧)

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௧.

---

## ௧-வது, ஆற்றுப்படலம்.

ஆசலம்புரியைம்பொறிவாளியும்
காசலம்புமுலையவர்கண்ணெனும்
பூசலம்புநெறியின்புறஞ்செலாக்
கோசலம்புனையாற்றணிகூறுவாம். (௧)

† நீறணிந்தகடவுணிறத்தவான்
ஆறணிந்துசென்றார்கலிமேய்ந்தகிற்
சேறணிந்தமுலைத்திருமங்கைதன்
வீறணிந்தவன்மேனியினீண்டதே. (௨)

பம்பிமேகம்பரந்ததுபானுவால்
‡ நம்பன்மாதுலன்வெம்மையைநண்ணினான்
அம்பினாட்டுதுமென்றகன்குன்றின்மேல்
இம்பர்வாரியெழுந்ததுபோன்றதே. (௩)

புள்ளிமால்வரைபொன்னெனோக்கிவான்
வெள்ளிவீழிடைவீழ்த்தெனத்தாரைகள்
§ உள்ளியுள்ளவெல்லாமுவந்தீயுமவ்
வள்ளியோரின்வழங்கினமேகமே. (௪)

மானநேர்ந்தறநோக்கிமனுநெறி
போனதண்குடைவேந்தன்புகழெனா

---

* நடையினின்றுயர் இராமாவதாரமெனவும், நாயகன் தோற்றத்திடைநிகழ்ந்த இராமாவதார மெனவுமொட்டுக.

† நீறணிந்த கடவுணிறத்த வென்பது நீற்றினைப்புனைந்த கடவுள்நிறத்தையுடையனவாகிய மேகங்களை, நிறத்த வினையாலணையும்பெயர், நிறத்தவானெனக் கொண்டு வேறு விரிப்பாருமுளர். மேகங்கள் சிவனைப் பாலப்போய் திருமாலைப்போலத் திரும்பின வென்பது கருத்து.

‡ நம்பன்மாதுலன்-சிவபெருமான்மாமனாகிய பருவதராசன். நம்பன்மாதுலன்-நம்புதற்குரியமாமன். § உள்ளியென்றது: இளமை, யாக்கை செல்வ மென்னுமிவை நிலையாமையுடையவென நினைத்தென்பதை.

# உ-வது, நாட்டுப்படலம்.



* வாங்கரும்பாதநான்கும்வகுத்தவான்மீகியென்பான்
தீங்கவிசெவிகளாரத்தேவரும்பருகச்செய்தான்
ஆங்கவன்புகழ்ந்தநாட்டையன்பெனுநறவமாந்தி
மூங்கையான்பேசலுற்றானென்னயானென்மொழியலுற்றேன். (௧)

வரம்பெலாமுத்தந்தத்துமடையெலாம்பணிலமாநீர்க்
குரம்பெலாஞ்செம்பொன்மேதிக்குழியெலாங்கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாம்பவளஞ்சாலிப்பரப்பெலாமன்னம்பாங்கர்க்
கரம்பெலாஞ்செந்தேன்சந்தக்காவெலாங்களிவண்டீட்டம். (௨)

ஆறுபாயரவமள்ளராலைபாயமலையாலைச்
சாறுபாயோதைவேலைச்சங்குவாய்பொங்குமோதை
ஏறுபாய்தமரநீரிலெருமைபாய்துழனியின்ன
மாறுமாறாகித்தம்மின்மயங்குமாமருதவேலி. (௩)

தண்டலைமயில்களாடத்தாமரைவிளக்கந்தாங்கக்
கொண்டல்கண்முழவினேங்கக்குவளைகண்விழித்துநோக்கத்
தெண்டிரையெழினிகாட்டத்தேம்பிழிமகரயாழின்
வண்டுகளினிதுபாடமருதம்வீற்றிருக்குமாதோ. (௪)

தாமரைப்படுவவண்டுந்துகைவருந்திருவுந்தண்டார்க்
காமுகர்ப்படுவமாதர்கண்களுங்காமனம்பும்
† மாமுகிற்படுவவாரிப்பவளமும்மயங்குமுத்தும்
‡ நாமுதற்படுவமெய்யுநாமநூற்பொருளுமன்றே. (௫)

நீரிடையுறங்குஞ்சங்கநிழலிடையுறங்குமேதி
§ தாரிடையுறங்கும்வண்டுதாமரையுறங்குஞ்செய்யாள்
தூரிடையுறங்குமாமைதுறையிடையுறங்குமிப்பி
போரிடையுறங்குமன்னம்பொழிலிடையுறங்குந்தோகை. (௬)

படையுழவெழுந்தபொன்னும்பணிலங்களுயிர்த்தமுத்தும்
இடறியபரம்பிற்காந்துமிணமணித்தொகையுமெல்லும்
மிடைபசுங்கதிருமீனுமென்றழைக்கரும்பும்வண்டுங்
கடைசியர்முகமும்போதுங்கண்மலர்ந்தொளிருமாதோ. (௭)

---

* எட்டெழுத்தானாய அடிகள் நான்கமைந்துள்ளனவாக வகுத்த பெருமைதோன்ற 'வாங்கரும்பாத நான்கும்வகுத்த' வென்றார்.

† மா-கருமை. இதனை 'மைத்தழையாநின்ற மாமிடற்றம்பலவன்' என்றதற்குப் பேராசிரியர் கூறலானுமறிக.

‡ முதல் ஏழனுருபு. நாம்-அச்சம்; இவ்வுரிச்சொல் ஈறுதிரிந்து நின்றது; 'நாமநீர்வையக்கணி' என்புழிப் பரிமேலழகர் கூறலானுமறிக.

§ தார்-பூ.

தெள்விளிச்சிறியாழ்ப்பாணர்தேம்பிழிநறவமாந்தி
வள்விசிக்கருவிபம்பவயின்வயின்வழங்குபாடல்
வெள்ளிவெண்மாடத்தும்பர்வெயில்விரிபசும்பொற்பள்ளி
எள்ளருங்கருங்கட்டோகையின்றுயிலெழுப்புமன்றே. (௮)

ஆலைவாய்க்கரும்பின்றேனுமரிதலைப்பாளைத்தேனுஞ்
சோலைவாய்க்கனியின்றேனுந்தொடையிழியிறாலின்றேனும்
மாலைவாயுகுத்ததேனும்வரம்பிகந்தோடிவங்க
வேலைவாய்மடுப்பவுண்டுமீனெலாங்களிக்குமாதோ. (௯)

பண்கள்வாய்மிழற்றுமின்சொற்கடைசியர்பரந்துநீண்ட
கண்கைகான்முகம்வாயொக்குங்களையலாற்களையிலாமை
உண்கள்வார்கடைவாய்மள்ளர்களைகலாதுலாவிநிற்பார்
பெண்கள்பால்வைத்தநேயம்பிழைப்பரோசிறியோர்பெற்றால். (௧௦)

புதுப்புனல்குடையுமாதர்பூவொடுநாவிபூத்த
கதுப்புறுவெறியேநாறுங்கருங்கடற்றரங்கமென்றால்
மதுப்பொதிமழலைச்செவ்வாய்வாட்கடைக்கண்ணின்மைந்தர்
விதுப்புறநோக்குமன்னார்விகுதியைவிளம்பலாமோ. (௧௧)

வெண்டளக்கலவைச்சேறுங்குங்குமக்குழைவுமென்சாந்துங்
குண்டலக்கோலமைந்தர்குடைந்தநீர்க்கொள்ளைசாற்றில்
தண்டலைப்பரப்புஞ்சாலிவேலியுந்தழீஇயவைப்பும்
வண்டலிட்டோடுமெண்ணுமதுகரமொய்க்குமாதோ. (௧௨)

சேலுண்டவொண்கணாரிற்றிரிகின்றசெங்காலன்னம்
மாலுண்டநளினப்பள்ளிவளர்த்தியமழலைப்பிள்ளை
காலுண்டசேற்றுமேதிகன்றுள்ளிக்கனைப்பச்சோர்ந்த
பாலுண்டுதுயிலப்பச்சைத்தேரைதாலாட்டும்பண்ணை. (௧௩)

குயிலினம்வதுவைசெய்யக்கொம்பிடைக்குனிக்குமஞ்ஞை
அயில்விழிமகளிராடுமரங்கினுக்கழகுசெய்யப்
பயில்சிறையரசவன்னம்பன்மலர்ப்பள்ளிநின்றும்
துயிலெழத்தும்பிகாலைச்செவ்வழிமுரல்வசோலை. (௧௪)

பொருந்தியமகளிரோடுவதுவையிற்பொருந்துவாரும்
பருந்தொடுநிழல்சென்றன்னவியலிசைப்பயன்றுய்ப்பாரும்
மருந்தினுமினியகேள்விசெவியுறமாந்துவாரும்
* விருந்தினர்முகங்கண்டன்னவிழாவணிவிரும்புவாரும். (௧௫)

---

* தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாரை நினைந்து செய்வனவாகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கீதலன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாதலின், 'விருந்தினர் முகங்கண்டன்ன' என்றார். இவ்வாறே பரிமேலழகர் கூறுவதுங் காண்க.

கறப்புறுமனமுங்கண்ணிற்சிவப்புறுசூட்டுங்காட்டி
உறப்புறுபடையிற்றாக்கியுறுபகையின்றிச்சீறி
வெறுப்பிலகளிப்பின்வெம்போர்மதுகையவீரவாழ்க்கை
மறுப்படவாவிபேணுவாரணம்பொருத்துவாரும்.

எருமைநாகின்றசெங்கணேற்றையோடேற்றைச்சீற்றச்
துருமினையென்னத்தாக்கியூழுறநெருக்கியொன்றாய்
விரியிருளிரண்டுகூறாய்வெகுண்டனவனையநோக்கி
அரியினங்குஞ்சியார்ப்பமஞ்சுறவார்க்கின்றாரும்.

முள்ளரைமுளரிவெள்ளிமுளையிறமுத்தும்பொன்னும்
தள்ளுறமணிகள்சிந்தச்சலஞ்சலம்புலம்பச்சாலில்
துள்ளிமீன்றுடிப்பவாமைதலைபுடைசுரிப்பத்தூம்பி
னுள்வராலொளிப்பமள்ளருழுபகடுரப்புவாரும்.

முந்துமுக்கனியினானாமுதிரையின்முழுத்தநெய்யில்
செந்தயிர்க்கண்டங்கண்டமிடையிடைசெறிந்தசோற்றில்
தந்தமிலிருந்துதாமும்விருந்தொடுதமரினோடும்
அந்தணரமுதருண்டியயிலுறுமமலையெங்கும்.

முறையறிந்தவாவைநீக்கிமுனிவுழிமுனிந்துவெஃகும்
இறையறிந்துயிர்க்குநல்குமிசைகெழுவேந்தன்காக்கப்
பொறைதவிர்ந்துயிர்க்குந்தெய்வப்பூதலந்தன்னிற்பொன்னின்
நிறைபரஞ்சொரிந்துவங்கநெடுமுதுகாற்றுநெய்தல்.

எறிதருமரியின்சும்மையெடுத்துவானிட்டபோர்கள்
குறிகளும்போற்றிக்கொள்வார்கொள்ளுநெற்குவைகள்செய்வார்
வறியவர்க்குதவிமிக்கவிருந்துணமனையினுய்ப்பான்
நெறிகளும்புதையப்பண்டிநிரைத்துமண்ணெரியவூர்வார்.

கதிர்படுவயலினுள்ளகடிகமழ்பொழிலினுள்ள
முதிர்பலமரத்தினுள்ளமுதிரைநன்புறவினுள்ள
பதிபடுகொடியினுள்ளபடிவளர்குழியினுள்ள
மதுவனமலரிற்கொள்ளும்வண்டெனமள்ளர்கொள்வார்.

வேறு.

* பருவமங்கையர்பங்கயவாண்முகத்
துருவவுண்கணேயொண்பெடையாமெனக்
கருதியன்பொடுகாமுற்றுவைகலும்
மருதவேலியின்வைகினவண்டரோ.

* மங்கைப்பருவத்தவரை நோக்கிப் பருவமங்கையர் என்றதெ

வேளைவென்றமுகத்தியர்வெம்முலை
ஆளைநின்றுமுனிந்திடுமங்கொர்பால்
பாளைதந்தமதுப்பருகிப்பரு
வாளைநின்றுமதர்க்குமருங்கெலாம். (௨௪)

ஈரநீர்படிந்திந்நிலத்தேசில
கார்களென்னவருங்கருமேதிகள்
ஊரினின்றகன்றுள்ளிடவுண்முலை
தாரைகொள்ளத்தழைப்பனசாலியே. (௨௫)

முட்டிலட்டின்முழங்குறவாக்கிய
நெட்டிலைக்கழுநீர்நெடுநீத்தந்தான்
* பட்டமென்கமுகோங்கு † படப்பைபோய்
நட்டசெந்நெலினாறுவளர்க்குமே. (௨௬)

சூட்டுடைத்துணைத்தூநிறவாரணம்
தாட்டுணைக்குடையுந்தகைசான்மணி
மேட்டிமைப்பனமின்மினியாமெனக்
கூட்டினுய்க்குங் ‡ குரீஇக்குழாமரோ. (௨௭)

தோயும்வெண்டயிர்மத்தொலிதுள்ளவும்
§ ஆயவெள்வளைவாய்விட்டரற்றவும்
தேயுநுண்ணிடைசென்றுவணங்கவும்
ஆயமங்கையரங்கைவருந்துவார். (௨௮)

குற்றபாகு $ கொழிப்பவர்கோணெறி
கற்றிலாதகருங்கணுளைச்சியர்
முற்றிலாரமுகந்துதம்முன்றிலில்
சிற்றில்கோலிச்சிதறியமுத்தமே. (௨௯)

துருவைமென்பிணையீன்றதுளக்கிலா
வரிமருப்பினவன்றலையேற்றைறவான்
¶ உருமிடித்தெனத்தாக்குறுமொல்லொலி
வெருவிமால்வரைச்சூன்மழைமின்னுமே. (௩0)

---

* பட்டம்-குளங்கள். † படப்பை-மருதநிலச்சோலைகள். ‡ குரீ-தூக்கணங்குருவிகள். § அங்கைவருந்துதலால் வளைவாய் விட்டரற்றலை வாய்விட்டுக் கதறவுமெனவும், இடைசென்று வணங்கலை இடைசென்று தாழவுமெனவு முரைத்துக்கொள்க.

$ கொழிப்பவர் என்புழிக்கொழிப்பன என்பது சொல்லெச்சம்.

¶ ஆட்டின மொன்றோடொன்று தாக்குமொல்லொலி கேட்டுப்பயந்து சூன்மழைவாயங்காப்ப மின்னுக்கான்றலின், சூன்மழை மின்னுமே என்றார். இதனைக் 'கருங்கொண் மூவாய் திறந்த மின்னுப்போற்றோன்றி' எனப்பிறருங் கூறலானுமுணர்க மால்வரை என்றார் 'மால்போலுங் குவடுகளையுடைய மலைஎனப்படுதலின். இதனை 'மால்வரை' யென்பதற்கு நச்சினார்க்கினியர் கூறியதனாலு முணர்க. இனிப் பெரிய மலையென்பது மொன்று; வரை-ஆகுபெயர்.

திணைச்சிலம்புவதீஞ்சொலிளங்கிளி
நணைச்சிலம்புவநாகிளவண்டுபூம்
* புனைச்சிலம்புவபுள்ளினம்வள்ளியோர்
மனைச்சிலம்புவமங்கலவள்ளையே. (௫௧)

கன்றுடைப்பிடிநீக்கிக்களிற்றினம்
வன்றொடர்ப்படுக்கும்வனவாரிசூழ்
குன்றுடைக்குலமள்ளர்குழூஉக்குரல்
இன்றுணைக்களியன்னபிரிக்குமே. (௫௨)

வள்ளிகொள்பவர்கொள்வனமாமணி
† துள்ளிகொள்வனதூங்கியமாங்கனி
புள்ளிகொள்வனபொன்விரிபுன்னைகள்
பள்ளிகொள்வனபங்கயத்தன்னமே. (௫௩)

‡ கொன்றைவேய்ங்குழற்கோவலர்முன்றிலிற்
கன்றறக்குங்குரவைகடைசியர்
புன்றலைப்புனங்காப்புடைபோதரச்
சென்றிசைக்குழலோச்சியர்செவ்வழி. (௫௪)

சேம்புகால்பொரச்செங்கழுநீர்க்குளத்
§ தூம்புகாலச்சுரிவளைமேய்வன
காம்புகால்பொரக்கண்ணகன்மால்வரைப்
பாம்புநான்றெனப்பாய்பசுந்தேறலே. (௫௫)

பெருந்தடங்கட்பிறைநுதலார்க்கெலாம்
பொருந்துசெல்வமுங்கல்வியும்பூத்தலால்
வருந்திவந்தவர்க்கீதலும்வைகலும்
விருந்துமன்றிவிளைவனயாவையே. (௫௬)

$ பிறைமுகத்தலைப்பெட்பினிரும்புபோழ்
குறைகறித்திரள்குப்பைபருப்பொடு
நிறைவெண்முத்தினிறத்தரிசிக்குவை
உறைவகோட்பினவூட்டிடந்தோறெலாம். (௫௭)

கலஞ்சுரக்குநிதியங்கணக்கிலா
நிலஞ்சுரக்குநிறைவளநன்மணி

---

* புனலென்பது புனையெனப் போலியாய் வந்தது.
† துள்ளி என்பது விரிக்கும் விழிவிரித்தல்.
‡ கொன்றைக்காயானும் வேயானுஞ்செய்தகுழல் 'இதனைக்' கொன்றையந்தீங்குழல் கேளாமோதோழி, எனப் பிறருங்கூறலானுமறிக.
§ அரிவளைமேய்வனபசுந்தேறலே என்றொட்டுக.
$ பிறைமுகத்தலைப் பெட்பினிரும்பு-கோடரி.

பிலஞ்சுரக்கும்பெறுதற்கரியதங்
குலஞ்சுரக்குமொழுக்கங்குடிக்கெலாம். (௩௮)

கூற்றமில்லையோர்குற்றமிலாமையாற்
சீற்றமில்லைதஞ்சிந்தையிற்செய்கையால்
* ஆற்றனல்லறமல்லதிலாமையால்
ஏற்றமல்லதிழிதகவில்லையே. (௩௯)

நெறிகடந்துபரந்தனநீத்தமே
குறியழிந்தனகுங்குமத்தோள்களே
சிறியமங்கையர்தேயுமருங்குலே
வெறியவும்மவர்மென்மலர்க்கூந்தலே. (௪௦)

அகிலிடும்புகையட்டிலிடும்புகை
நகிலினாலைநறும்புகைநான்மறை
புகலும்வேள்வியிற்பூம்புகையோடளாய்
முகிலின்விம்மிமுழங்கினவெங்கணும். (௪௧)

வேறு.

இயல்புடைபெயர்வனமயிலின்மணியிமைப்பின்
வெயில்புடைபெயர்வனமுலையவர்குழல்போற்
புயல்புடைபெயர்வனபொழிலவர்விழிபோற்
கயல்புடைபெயர்வனகடிகமழ்கழனி. (௪௨)

இடையிறமகளிர்களெறிபுனன்மறுகக்
குடைபவர்துவரிதழலர்வனகுமுதம்
† மடைபெயவனமெனமடநடையளகக்
கடைசியர்முகமெனமலர்வனகமலம். (௪௩)

‡ விதியினைநகுவனவயில்விழிபிடியின்
கதியினைநகுவனவவர்நடைகமலப்
பொதியினைநகுவனபுணர்முலைகலைவாழ்
மதியினைநகுவனவனிதையர்வதனம். (௪௪)

பகலினொடிகலுவபடர்மணிமடவார்
§ நகிலினொடிகலுவநளிவளரிளநீர்
துகிலினொடிகலுவசுதைபுரைநுரைகார்
முகிலினொடிகலுவகடிமணமுரசம். (௪௫)

---

* ஆற்றனல்லற மல்லதிலாமையாலெனற்கு நல்லறமே ஆற்றல் அல்லதாகிய பாவமில்லாமையா லெனக்கொள்க. † மடநடையளகக் கடைசியர் என்பதற்கு இளநடையிளகுகின்ற அக்கடைசியரெனவிரிக்க. ‡ விதியினை நகுவனவென்பதற்கு விதித்தற்றொழிலைச் சிரிப்பன என்ப தன்றிப் பிரமசரிய வொழுக்கத்தைநோக்கிச் சிரிப்பனவென்று விரிக்கினுமமையும். § நகிலம் நகில்என அம்முச்சாரியை குறைந்தது.

காரொடுநிகர்வனகடிபொழில்கழனிப்
போரொடுநிகர்வனபுணர்முலையணைசூழ்
நீரொடுநிகர்வனநிறைகடனிதிசால்
ஊரொடுநிகர்வனவிமையவருலகம். (சகு)

நென்மலையல்லனநிரைவருதாளம்
சொன்மலையல்லனதொடுகடலமிர்தம்
நன்மலையல்லனநதிதருநிதியம்
பொன்மலையல்லனமணிபடுபுளினம். (சஎ)

பந்தினையிளையவர்பயிலிடமயிலூர்
கந்தனையனையவர்கலைதெரிகழகம்
சந்தனவனமலசண்பகவனமாம்
நந்தனவனமலநறைவிரிபுறவம். (சஅ)

கோகிலநவில்வனவிளையவர்குதலைப்
பாகியல்கிளவிகளவர்பயினடமே
கேகயநவில்வனகிளரிளவளையின்
நாகுகளுமிழ்வனநகைபுரைதரளம். (சகூ)

பழையர்தமனையனபழநறைநுகரும்
உழவர்தமனையனவுழுதொழில்புரியும்
மழவர்தமனையனமணவொலியிசையின்
கிழவர்தமனையனகிளைபயில்வளையாம். (ருo)

கோதைகள்சொரிவனகுளிரிளநறவம்
பாதைகள்சொரிவனபருமணிகனகம்
ஊதைகள்சொரிவனவுறையுறுமமுதம்
காதைகள்சொரிவனசெவிநுகர்கவிகள். (ருக)

வேறு.

இடங்கொள்சாயல்கண்டிளைஞர்சிந்தைபோல்
தடங்கொள்சோலைவாய்மலர்பெய்தாழ்குழல்
வடங்கொள்பூண்முலைமடந்தைமாரொடும்
தொடர்ந்துபோவனதோகைமஞ்ஞைகள். (ருஉ)

வண்மையில்லையோர்வறுமையின்மையால்
திண்மையில்லைநேர்செறுநரின்மையால்
உண்மையில்லைபொய்யுரையிலாமையால்
* வெண்மையில்லைபல்கேள்விமேவலால். (ருங)

---

* வெண்மை-வெளிற்றுத்தன்மை, அறியாமை.

எள்ளுமேனலுமிறுங்குஞ்சாமையும்
கொள்ளுங்கொள்ளையிற்கொணரும்பண்டியும்
அள்ளலோங்களத்தழுநின்பண்டியும்
தள்ளுநீர்மையிற்றலைமயங்குமே. (௫௪)

* உயருஞ்சார்விலாவுயிர்கள்செய்வினைப்
பெயரும்பல்கதிப்பிறக்குமாறுபோல்
அயிருந்தேனுமின்பாகுமாயரூர்த்
தயிரும்வேரியுந்தலைமயங்குமே. (௫௫)

கூறுபாடலுங்குழலின்பாடலும்
வேறுவேறுநின்றிசைக்கும்வீதிவாய்
ஆறுமாறும்வந்தெதிர்ந்தவாமெனச்
† சாறும்வேள்வியுந்தலைமயங்குமே. (௫௬)

‡ மூக்கிற்றூக்குறுமூரிநந்துநேர்
தாக்கிற்றூக்குறும்பறையுந்தண்ணுமை
வீக்கிற்றூக்குறும்விளியுமள்ளர்தம்
வாக்கிற்றூக்குறுமொலியின்மாயுமே. (௫௭)

§ தாலியைம்படைதழுவுமார்பிடை
மாலைவாயமுதொழுகுமக்களைப்
பாலினூட்டுவார்செங்கைபங்கயம்
வால்நிலாவுறக்குவிவமானுமே. (௫௮)

பொற்பினின்றனபொலிவுபொய்யிலா
நிற்பினின்றனநீதிமாதரார்
அற்பினின்றனவறங்களன்னவர்
$ கற்பினின்றனகாலமாரியே. (௫௯)

சோலைமாநிலந்துருவியாவரே
வேலைகண்டுதாமீளவல்லவர்
சாலும்வார்புனற்சரயுவும் ¶ பல
காலினோடியுங்கண்டதில்லையே. (௬௦)

---

* இருவகைப்பற்றையுந் துறந்தலை 'உயருஞ்சார்விலாவுயிர்கள்' என்றார். † சாறு-திருவிழா. ‡ வலியநந்து மூக்கினொலிக்குமொலியுமென்பதற்கு "மூக்கிற்றூக்குமூரிநந்தும்" என்றார். மூக்கினொலென்பாருமுளர், அது பொருந்தாமையறிக.

§ தாலியைம்படை தழுவுமார்பினில் என்பதற்கு தாலியும் ஐம்படையும் தழுவப்பட்ட மார்பினிடத்து என்க. தாலியாகிய ஐம்படை என்பாருமுளர், திருமகளே அவ்வடிவமாகலின் அவட்கு மெய்க்காப்பாளர் போற் பஞ்சாயுதங்களைக் கூறவேண்டுமாகலா னங்ஙனங்கூறல் பொருந்தாமையறிக. $ மாதரார் கற்புடைமையான்மாரிநிற்பது என்பது. ¶ பல காலினோடியும் - பலகால்களா னோடியுமெனவும், பலமுறையினோடியுமெனவுஞ் சிலேடைப்பொருள் பயப்பதுங்காண்க.

வீடுசேரநீர்வேலைகான்மடுத்
தூடுபேரினுமூலைவிலாநலம்
கூடுகோசலமென்னுங்கோதிலா
நாடுகூறினுநகரங்கூறுவாம். (சுக)

உ-வது நாட்டுப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-சுஉ.

---

## ங-வது, நகரப்படலம்.

செவ்வியமதுரம்சேர்ந்தநற்பொருளிற்சீரியகூரியதீஞ் * சொல்
வவ்வியகவிஞரனைவரும் † வடநூன்முனிவரும்புகழ்ந்ததுவரம்பில்
எவ்வுலகத்தோரியாவருந்தவஞ்செய்தேறுவானுதரிக்கின்ற
அவ்வுலகத்தோரிழிவதற்கருத்திபுரிகின்றதயோத்திமாநகரம். (க)

நிலமகண்முகமோதிலகமோகண்ணோநிறைநெடுமங்கலநாணோ
இலகுபூண்முலைமேலாரமோவுயிரினிருக்கையோதிருமகட்கினிய [னோர்
மலர்கொலோமாயோன்மார்பினன்மணிகள்வைத்தபொற்பெட்டியோவா
உலகின்மேலுலகோவூழியினிறுதியுறையுளோயாதெனவுரைப்பாம். ()

உமைக்கொருபாகத்தொருவனு ‡ மிருவர்க்கொருதனிக்கொழுநனு
மலர்மேல், கமைப்பெருஞ்செல்வக் கடவுளுமுதலோர்கண்டிலாநகரது
காண்பான், அமைப்பருங்காதன்முன் பிடித்துந்தவந்தரஞ் சந்திராதித்
தர், இமைப்பிலர்திரிவரிதுவலாலதனுக்கியம்பலாமுவமைமற்றியாதோ.

அயின்முகக்குலிசத்தமரர்கோனகருமளகையுமென்றிவையயனூர்
பயிலுறவுற்றபடிபெரும்பாலுமிப்பெருந்திருநகர்படைப்பான்
மயன்முதற்றெய்வத்தச்சருந்தத்தமனத்தொழினுணினர்மறந்தார்
புயலுறுகுடுமிநெடுநிலைமாடத்திந்நகர்புகலுமாறெவனோ. (ச)

புண்ணியம்புரிந்தோர்புகுவதுதுறக்கமென்னுமீதருமறைப்பொருளே
மண்ணிடையாவரிராகவனன்றிமாதவமறத்தொடும்வளர்த்தார்
§ எண்ணருங்குணத்தினவனினிதிருந்திங்கேழுலகாள்விடமென்றால்
$ ஒண்ணுமோவதனின்வேறொருபோகமுறைவிடமுண்டெனவுரைத்தல்.

---

* சொல்வவ்விய கவிஞரனைவரும்-ஆழ்வார் தொடக்கமானவரை.

† வடநூன்முனிவரும்-வான்மீகபகவான் தொடக்கமானவரை.

‡ இருவர்க்கொருதனிக்கொழுநன்-உபேந்திரனை, இவ்வாறுகூறுது வேறுகூறுவாருமுளர். § எண்ணருங்குணம்-எட்டாகிய அருங்குணமென்க, அவை தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என எண்ணுதற்கரிய குணமெனினுமாமென்க. $ ஒண்ணுமோ-மரீஇயது.

தங்குமாபொருளுந்தருமமுந்துணையாத்தம்பகைப்புலன்களைத்தவிர்க்கும், பொங்குமாதவமு ஞானமும்புணர்ந்தோரியாவர்க்கும்புகலிடமான, செங்கண்மால் பிறந்தாண்டளப்பருங்காலந்திருவின் வீற்றிருந்தமை தெரிந்தால், அங்கண்மாஞாலத்துந்நகரொக்கும் பொன்னகரமரர்நாட்டியாதோ. (௬)

அரசெலாமவணவணியெலாமவணவரும்பெறன்மணியெலாமவண
புரசைமால்களிறும்புரவியுந்தேரும்பூதலத்தியாவையுமவண
விரசுவார்முனிவர்விண்ணவரியக்கர்விஞ்சையர்முதலினோரெவரும்
உரைசெய்வாராஞானபோததனுக்குவமைதானரிதரோவுளதோ. (௭)

நால்வகைச்சதுரம் விதிமுறைநாட்டிநனிதவவுயர்ந்தன பனிதோய், மால்வரைக்குலத்தினியாவையுமில்லை யாதலாலுவமைமற்றில்லை, நூல்வரைத்தொடர்ந்துபயத்தொடும்புகு வணங்கியநவலருமுணர்வே,போல்வகைத்தல்லாலுயர்வினோடுயர்ந்ததென்னலாம்பொன்மதினிலையே. ()

மேவருமுணர்வுமுடிவிலாமையினுல்வேதமுமொக்கும்விண்புகலால்
தேவருமொக்குமுனிவருமொக்குந்திண்பொறியடக்கியசெயலால்
காவலிற் * கலையூர்கன்னியையொக்குஞ்சூலத்தாற்காளியையொக்கும்
யாவையுமொக்கும்பெருமையாலெய்தற்கருமையாலீசனையொக்கும். (௯)

பஞ்சிவான்மதியையூட்டியவனையபடருகிர்ப்பங்கயச்செங்கால், வஞ்சிபோன்மருங்குல் குரும்பைபோற்கொங்கை யாங்குவேய்வைத்தமென் பணைத்தோள், அஞ்சொலார்பயிலுமயோத்திமாநகரினழகுடைத்தன்றெனவறிவான், இஞ்சிவானோங்கி யிமையவருலகங் காணியவெழுந்த தொத்துளதே. (௧௰)

கோவிடையுலகமளத்தலிற்பகைஞர்முடித்தலைகோடலின்மனுவின்
நூல்நெறிநடக்குஞ்செவ்வையின்யார்க்குநோக்கருங்காவலின்வலியின்
வேலொடுவாள்விற்பயிற்றலின்வெய்யசூழ்ச்சியின்வெலற்கருவலத்திற்
சால்புடையுயர்விற்சக்கரநடத்துந்தன்மையிற்றலைவரொத்துளதே. (

சினத்தயில்கொலைவாள் சிலைமழுத்தண்டு சக்கரந்தோமரமுலக்கை, கனத்திடையுருமின் வெருவருங்கவண்கல்லென்றிவைகணிப்பிலகொதுகின், இனத்தையுமுவணத்திறையையுமியங்குங்காலையுமதமலகினைவார், மனத்தையுமெறியும்பொறியுளவென்றான் மற்றினியுணர்த்துவதெவனோ.

பூணினும்புகழேயமையுமென்றினையபொற்பினின்றுயிர்நனிபுரக்கும்
யாணரெண்டிசைக்குமிருளறவிமைக்குமிரவிதன்குலமுதனிருபர்
சேணையுங்கடந்துதிசையையுங்கடந்துதிகிரியுஞ்செந்தனிக்கோலும்
† ஆணையுங்கடக்குமாயினுநகருக்கணியெனவியற்றியதன்றே. (௧௩)

---

* கலையூர்கன்னி-துர்க்கை.

† ஆணை-பாகதச்சிதைவு, வட்டம், கண்ணன் என்றாற்போல.

அன்னமாமதிலுக்காழிமால்வரையையலைகடல்சூழ்ந்தனவகழி
பொன்விலைமகளிர்மனமெனக்கீழ்போய்ப்புன்கவியெனத்தெளிவின்றிக்
கன்னியரல்குற்றடமெனயார்க்கும்படிவருங்காப்பினதாகி
நன்னெறிவிலக்கும்பொறியெனவெறியுங்கராத்ததுநவிலலுற்றதுநாம். ()

வேறு.

ஏகுகின்றதங்கணங்களோடுமெல்லைகாண்கிலா
நாகமொன்றகன்கிடங்கைநாமவேலையாமென
மேகமொண்டுகொண்டெழுந்துவிண்டொடர்ந்தகுன்றமென்
றூகநொந்துநின்றுதாரையம்மதிற்கண்வீசுமே. (கரு)

அந்தமாமதிற்புறத்தகத்தெழுந்தலர்ந்தநீள்
கந்தநாறுபங்கயத்தகானமானமாதரார்
முந்துவாண்முகங்களுக்குடைந்துபோனமொய்ம்பெலாம்
வந்துபோர்மலைக்கமாமதில்வளைத்தமானுமே. (கசு)

சூழ்ந்த * நாஞ்சில்சூழ்ந்தவாரைசுற்றுமுற்றுபாரெலாம்
போழ்ந்தமாகிடங்கிடைக்கிடந்துபொங்கிடங்கர்மா
தாழ்ந்தவங்கவாரியிற்றடுப்பொருமதத்திறல்
ஆழ்ந்தயானைமீதெழுந்தழுந்துகின்றபோலுமே. (கஎ)

ஈரும்வாளின்வால்விதிர்த்தெயிற்றிளம்பிறைக்குலம்
பேரமின்னிவாய்விரிதெதிர்ந்தகட்பிறங்குதீச்
சோரவொன்றையொன்றுமுன்றொடர்ந்துசீறிடங்கர்மா
போரில்வந்துசீறுகின்றபோரரக்கர்போலுமே. (கஅ)

ஆளுமன்னம்வெண்குடைக்குலங்களாவருங்கராக்
கோளெலாமுலாவுகின்றகுன்றமன்னயானையாத்
தாளுலாவுபங்கயத் † தரங்கமுந்துரங்கமா
வாளும்வேலுமீனமாகமன்னர்சேனைமானுமே. (ககூ)

விளிம்புதெற்றிமுற்றுவித்துவெள்ளிகட்டியுள்ளுறப்
பளிங்குபொற்றலத்தகட்டடுத்துறப்படுத்தலின்
தளிந்தகற்றலத்தொடச்சலத்தினைத்தணித்துறத்
தெளிந்துணர்த்துகிற்றுமென்றதேவராலுமாவதே. (உ0)

அன்னநீரகன்கிடங்குசூழ்கிடந்தவாழியைத்
துன்னிவேறுசூழ்கிடந்ததூங்குவீங்கிருட்பிழம்
பென்னலாமிரும்புசூழ்கிடந்தசோலையெண்ணிலப்
பொன்னின்மாமதிட்குடுத்தநீலவாடைபோலுமே. (உக)

---

* நாஞ்சில்-மதிலுறுப்பு.

எல்லைநின்றவென்றியானையென்னநின்றமுன்னமால்
ஒல்லையும்பர்நாடளந்ததாளின்மீதுயர்ந்தவால்
மல்லன்ஞாலம்யாவுநீதிமாறுறாவழக்கினால்
நல்லவாறுசொல்லும்வேதநான்குமன்னவாயிலே. (உஉ)

தாவில்பொற்றலத்தினற்றவத்தினோர்கடங்குதாட்
பூவுயிர்த்தகற்பகப்பொதும்பர்புக்கொதுங்குமால்
ஆவியொத்தவன்புசேவல்கூவவந்தணைந்திடா
ஓவியப்புறாவின்மாடிருக்கலூடுபேடையே. (உங)

கல்லடித்தடுக்கிவாய்பளிங்கரிந்துகட்டிமீ
தெல்லிடப்பசும்பொன்வைத்திலங்குபன்மணிக்குலம்
வில்லிடக்குயிற்றிவாள்விரிக்கும்வெள்ளிமாமரம்
புல்லிடக்கிடத்திவச்சிரத்தகால்பொருத்தியே. (உச)

மரகதத்திலங்குபோதிகைத்தலத்துவச்சிரம்
புரைதபுத்தடுக்கிமீதுபொன்குயிற்றினின்குலா
நிரைமணிக்குலத்தினினீள்வகுத்தவோரிமேல்
விரவுகைத்தலத்திலுய்த்துமேதகத்தின்மீதரோ. (உரு)

ஏழ் * பொழிற்குமேழ்நிலத்தலஞ்சமைத்ததென்னநால்
ஊழுறக்குவித்தமைத்தவும்பர்செம்பொன்வேய்ந்துமீச்
சூழ்சுடர்ச்சிரத்துநன்மணித்தசும்புதோன்றலால்
வாழ்நிலக்குலக்கொழுந்தைமௌலிசூட்டியன்னவே. (உசு)

வேறு.

திங்களுங்கரிதெனவெண்மைநீற்றிய
சங்கவெண்சுதையுடைத்தவளமாளிகை
வெங்கடுங்கால்பொரமேக்குநோக்கிய
பொங்கிரும்பாற்கடற்றரங்கம்போலுமே. (உஎ)

புள்ளியம்புறவிறைபொருந்துமாளிகை
தள்ளருந்தமணியத்தகடுவேய்ந்தன
எள்ளருங்கதிரவனிளவெயிற்குழாம்
வெள்ளியங்கிரிமிசைவிரிந்தபோலுமே. (உஅ)

வயிரநற்கான்மிசைமரகதத்துலாம்
செயிரறப்போதிகைகிடத்திச்சித்திரம்
உயிர்பெறக்குயிற்றியவும்பர்நாட்டவர்
அயிருறவிமைப்பனவளவில்கோடியே. (உகூ)

* பொழில்-உலகம்.

சந்திரகாந்தத்தின்றலத்தசந்தனப்
பந்திசெய்தூணின்மேற்பவளப்போதிகைச்
செந்தனிமணித்துலாஞ்செறிந்ததிண்சுவர்
இந்திரநீலத்தவெண்ணில்கோடியே. (ரு0)

பாடகக்காலடிபதுமத்தொப்பன
சேடரைத்தழீஇயனசெய்யவாயின
நாடகத்தொழிலனநடுவுதுய்யன
ஆடகத்தோற்றத்தவளவிலாதன. (ருக)

புக்கவர்கண்ணிணைபொருந்துறுதொளி
தொக்குடன்றயங்கிவிண்ணவரிற்றோன்றலால்
திக்குறநினைப்பினிற்செல்லுந்தெய்வவீ
டொக்கின்றிமைப்பன * வும்பர்நாட்டினும். (ருஉ)

அணியிழைமகளிருமலங்கல்வீரரும்
தணிவனவறநெறிதணிவிலாதன
மணியினும்பொன்னினும்வனைந்தவல்லது
பணிபிறிதியன்றனபாங்குமில்லையே. (ருரு)

வானுறநிமிர்ந்தனவரம்பில்செல்வத்தோர்
தானுயர்புகழெனத்தயங்குசோதிய
ஊனமிலறநெறியுற்றவெண்ணிலாக்
கோனிகர்குடிகடங்கொள்ளைசான்றன. (ருச)

அருவியிற்றாழ்ந்துமுத்தலங்குதாமத்த
விரிமுகிற்குலமெனக்கொடிவிராயின
பருமணிக்குவையன † பசும்பொற்கோடிய
பொருமயிற்கணத்தனமலையும்போன்றன. (ருரு)

அகிலிடுகொழும்புகையளாய்மயங்கின
முகிலொடுவேற்றுமைதெரிகலாமுழுத்
துகிலொடுநெடுங்கொடிச்சூலமின்னுவ
பகலிடுமின்னணிப்பரப்புப்போன்றவே. (ருகூ)

துடியிடைப்பணைமுலைத்தோகையன்னவர்
அடியிணைச்சிலம்புபூண்டாற்றுமாளிகைக்
கொடியிடைத்தரளவெண்கோவைசூழ்வன
கடியுடைக்கற்பகங்கான்றமாலையே. (ருஎ)

---

* உம்பர்நாட்டினுமென்புழி உம்பர்கள் நிச்சயிக்கினுமென்றும், உம்பருலகைப்பார்க்கினுமென்று முரைப்பினுமமையும்.

† பசும்பொன்-மாற்றுயர்ந்தபொன்.

காண்வருநெடுவரைக்கதலிக்கானம்போல்
கோணிமிர்பதாகையின்குழாந்தழைத்தன
வாணணிமழுங்கிடமடங்கிவைகலும்
சேண்மதிதேய்வதக்கொடிகடேய்க்கவே. (௩௮)

பொன்றிணிமண்டபமல்லபூத்தொடர்
மன்றுகளல்லனமாடமாளிகை
குன்றுகளல்லனமணிசெய்குட்டிம
முன்றில்களல்லனமுத்தின்பந்தரே. (௩௯)

மின்னெனவிளக்கெனவெயிற்பிழம்பெனத்
துன்னியதமனியத்தொழிறழைத்தவக்
கன்னிநன்னகர்நிழல்கதுவலாலரோ
பொன்னுலகாயதப்புலவர்வானமே. (௪௰)

எழுநிடத்தகன்றிடையொன்றியெற்படு
பொழுதிடைப்போதலிற்புரிசைப்பொன்மதில்
அழன்மணிதிருத்தியவயோத்தியாளுடை
நிழலெனப்பொலியுமானேமிவான்சுடர். (௪௧)

ஆய்ந்தமேகலையவரம்பொன்மாளிகை
வேய்ந்தகாரகிற்புகையுண்டமேகம்போய்த்
தோய்ந்தமாகடனறுந்தூபநாறுமேல்
பாய்ந்ததாரையினிலைபகரல்வேண்டுமோ. (௪௨)

* குழலிசைமடந்தையர்குதலைக்கோதையர்
மழலையங்குழலிசைமகரயாழிசை
எழிலிசைமடந்தையரின்சொலின்னிசை
பழையர்தஞ்சேரியிற்பொருநர்பாட்டிசை. (௪௩)

கண்ணிடைக்கனல்சொரிகளிறுகால்கொடு
மண்ணிடைவெட்டுவவேட்குமைந்தர்கள்
பண்ணைகள்பயிலிடங்குழிபடைப்பன
சுண்ணமக்குழிகளைத்தொடர்ந்துதூர்ப்பன. (௪௪)

பந்துகண்மடந்தையர்பயிற்றுவாரிடைச்
சிந்துவமுத்தினமவைதிரட்டுவார்
அந்தமில்சிலதிய † ராற்றகுப்பைகள்
சந்திரனொளிகெடத்தழைப்பதண்ணிலா. (௪௫)

---

* குழலிசைமடந்தையர் மழலையங்குழலிசை எழிலிசைமடந்தையரின் சொலின்னிசையெனவும், குதலையங்கோதையர் மகரயாழிசைபழையர்தஞ்சேரியிற் பொருநர்பாட்டிசையெனவும் நிரனிறையாக வைத்துப் பொருள்கொள்க.

† ஆற்ற என்பதில் இன்இடைநிலை தொகுத்தல்பெற்றது.

அரங்கிடைமடந்தையராடுவாரவர்
கருங்கடைக்கண்ணயில்காமர்நெஞ்சினை
உருங்குவமற்றவருயிர்களன்னவர்
மருங்குல்போற்றேய்வனவளர்வதாசையே. (சசு)

பொழிவனசோலைகள்புதியதேன்சில
விழைவனதென்றலுமிளிறமெல்லென
நுழைவனவன்னவைநுழையநோவொடு
குழைவனபிரிந்தவர்கொதிக்குங்கொங்கையே. (சஎ)

இறங்குவமகரயாழெடுத்தவின்னிசை
நிறங்கிளர்பாடலாணிமிர்வவவ்வழி
கறங்குவவள்விசிகருவிகண்முகிழ்த்
துறங்குவமகளிரோடோதுங்கிள்ளையே. (சஅ)

குதைவரிச்சிலைநுதற்கொவ்வைவாய்ச்சியர்
பதயுகத்தொழில்கொடுபழிப்பிலாதன
ததைமலர்த்தாமரையன்னதாளினல்
உதைபடச்சிவப்பனவரவுத்தோள்களே. (சகூ)

பொழுதுணர்வரியவப்பொருவின்மாநகர்த்
தொழுதகைம்மடந்தையர்சுடர்விளக்கெனப்
பழுதறமேனியைப்பார்க்குமாசைகொல்
எழுதுசித்திரங்களுமிமைப்பிலாதவே. (ருo)

தணிமலர்த்திருமகடயங்குமாளிகை
இணரொளிபரப்பிநின்றிருடுரப்பன
திணிசுடர்நெய்யுடைத்தீவிளக்கமோ
மணிவிளக்கல்லனமகளிர்மேனியே. (ருக)

பதங்களிற்றண்ணுமைபாணிபண்ணுற
விதங்களின்விதிமுறைசதிமிதிப்பவர்
மதங்கியரச்சதிவகுத்துக்காட்டுவ
சதங்கைகளல்லனபுரவித்தார்களே. (ருஉ)

முளைப்பனமுறுவலம்முறுவல்வெந்துயர்
விளைப்பனவன்றியுமெலிந்துநாடொறும்
இளைப்பனநுண்ணிடையிளைப்பமென்முலை
திளைப்பனமுத்தொடுசெம்பொனாரமே. (ருங)

இடையிடையெங்கணுங்களியரூதன
நடையினவன்னங்கணளினநீர்க்கயல்

பெடையிளவண்டுகள்பிரசமாந்திடுங்
கடகரியல்லனமகளிர்கண்களே. (௫௪)

தழல்விழியாளியுந்துணையுந்தாழ்வரை
முழைவிழைகிரிநிகர்களிற்றின்மும்மத
மழைவிழும்விழுந்தொறுமண்ணுயிர்க்குழறக்
குழைவிழு * மவில்விழுங்கொடித்திண்டேர்களே. (௫௫)

ஆடுவார்புரவியின்குரத்தையார்ப்பன
சூடுவாரிகழ்த்தவத்தொங்கன்மாலைகள்
ஓடுவாரிழுக்குவவூடலூடுநக்
கூடுவார்வனமுலைகொழித்தசாந்தமே. (௫௬)

இளைப்பருங்குரங்களாலியுளிபாரினைக்
கிளைப்பனவவ்வழிகிளர்ந்ததூளியின்
ஒளிப்பனமணியவையொளிர்பிறங்குதேன்
துளிப்பனகுமரர்தந்தோளின்மாலையே. (௫௭)

விலக்கருங்கரிமதம்வேங்கைநாறுவ
குலக்கொடிமாதர்வாய்க்குமுதநாறுவ
† கலக்கடைக்கணிப்பருங்கதிர்கணாறுவ
மலர்க்கடிநாறுவமகளிர்கூந்தலே. (௫௮)

‡ கோவையிந்நகரொடெண்குறிக்கலாதவத்
தேவர்தந்நகரியைச்செப்புகின்றதென்
யாவையும்வழங்கிடத்திகலியிந்நகர்
ஆவணங்கண்டபினளகைதோற்றதே. (௫௯)

அதிர்கழலொலிப்பனவயிலிமைப்பன
கதிர்மணியணிவெயில்கால்வமான்மதம்
முதிர்பறக்கமழ்வனமுத்தமின்னுவ
மதுகரந்திசைப்பனமைந்தரீட்டமே. (௬௦)

வளையொலியயிரொலிமகரயாழிணையின்
கிளையொலிமுழவொலிகின்னரத்தொலி

---

* அவற்றில் என்பது அவில்எனச் சாரியையுள்வழி அற்றுச்சாரியை தவிர்ந்துநின்றது, இவ்வாறு பலவின்படர்க்கை, பலவினீட்டமென வருதலிற்காண்க. இதற்கு வேறுகூறுவாருமுளர். † கலங்கடை-கலக்கடை என வலிக்கும்வழிவலித்தல்.

‡ கோவையிந்நகரொடெண் குறிக்கலாத என்பது எழுநகரமென்னும் கோவையினின்ற இந்நகரத்தொடு எண்ணிக்கூறாத எனக்கொள்க. இவ்வாறு கூறாதுகோ இந்நகரெனவும் ஐசாரியையெனவுங்கொண்டு கூறுவாருமுளர். அவர் எழுநகரத்தொடிதனையு மொன்றெனக் கொள்ளும் பெற்றிமை யறியார்போலுமெனக் கடாவியொழிக.

துளையொலிபல்லியந் துவைக்குஞ்சும்மையின்
விளையொலிகடலொலிமெலியவிம்முமே. (௬௧)

மன்னவர்தருதிறையளக்குமண்டபம்
அன்னமென்னடையவராடுமண்டபம்
உன்னருமருமறையோதுமண்டபம்
பன்னருங் * கலைதெரி † பட்டிமண்டபம். (௬௨)

இரவியிற்சுடர்மணியிமைக்குந்தோரணத்
தெருவினிற்சிறியனதிசைகள்சேண்விளங்
கருவியிற்பெரியனவானைத்தானங்கள்
பரவையிற்பெரியனபுரவிப்பந்தியே. (௬௩)

‡ சூளிகைமழைமுகில்தொடக்குந்தோரண
§ மாளிகைமலர்வனமகளிர்வாண்முகம்
வாளிகளன்னவைமலர்வமற்றவை
ஆளிகளன்னவர்நிறத்திறும்பவே. (௬௪)

மன்னவர்கழலொடுமாறுகொள்வன
பொன்னணித்தேரொலிபுரவித்தாரொலி
இன்னகையவர்சிலம்பேங்கவேங்குவ
கன்னியர்குடைதுறைக்கமலவன்னமே. (௬௫)

ஊடவுங்கூடவுமுயிரினின்னிசை
பாடவும்விறலியர்பாடல்கேட்கவும்
ஆடவுமகன்புனலாடியம்மலர்
சூடவும்பொழுதுபோஞ்சிலர்க்கத்தொன்னகர். (௬௬)

முழங்குதிண்கடகரிமுன்பினூரவும்
எழுங்குரத்திவுளியோடிரதமேறவும்
பழங்கணேடிரந்தவர்பரிவுதீர்தர
வழங்கவும்பொழுதுபோஞ்சிலர்க்கம்மாநகர். (௬௭)

கரியொடுகரியெதிர்பொருத்திக்கைப்படை
வரிசிலைமுதலியவழங்கிவாளுளைப்
புரவியிற்பொருவில் $ செண்டாடிப்போர்க்கலை
தெரிதலிற்பொழுதுபோஞ்சிலர்க்கச்சேணகர். (௬௮)

---

* கலைமகளாவன-வியாகரணம், போர்நூல், கணிதநூல், மனுநூல் இதிகாசம்முதலியவை. † பட்டிமண்டபம்-கல்விதெரியுமண்டபம், இதனைப் 'பட்டிமண்டபமேற்றினை' எனப் பிறருங் கூறுதல் காண்க.

‡ சூளிகை-சிகரம். § பெண்கள்முகங்களை மாளிகைமலர்வன எனவும், அன்னவைவாளிகளை மலர்வன சிங்கவேறு போல்வார் மார்பிற்றைப்பனவெனவும் பொருளமைத்துக் கொள்க. வாளிகள் கண்களுக்குருவகம். $ செண்டாடி என்றது வையாளிவீதியில் விளையாடியென்க,

நந்தனவனத்தலர்கொய்துநவ்விபோல்
வந்திளையவரொடுவாவியாடிவாய்ச்
செந்துவரவழிதரத்தேறல்மாந்திச்சூ
துந்தலிற்பொழுதுபோகுஞ்சிலர்க்கவ்வொண்ணகர். (௬௯)

வேறு.

நானாவிதமாகளிமாதிரவீதியோடி
மீனாறுவேலைப்புனல்வெண்முகிலுண்ணுமாபோல்
ஆனாதமாடத்திடையாடுகொடிக்கணீப்போய்
* வானாறுநுண்ணிப்புனல்வற்றிடநக்குமன்றே. (௭0)

† வன்றோரணங்கள்புணர்வாயிலும்வானிலும்பர்
சென்றோங்கிமேலோரிடநில்லெனச்செம்பொனிஞ்சி
குன்றோங்குதோளார்குணங்கூட்டிசைக்குப்பையென்ன
ஒன்றோடொன்றும்முயர்ந்தோங்கினவும்பர்நாண. (௭௧)

காடும்புனமுங்கடலன்னகிடங்குமாதர்
ஆடுங்குளனும்மருவிச்சுனைக்குன்றுமும்பர்
வீடும்பிறவும்மணிப்பந்தரும் ‡ வீணைவண்டு
பாடும்பொழிலும்மலர்ப்பல்லவப்பள்ளிமன்றே (௭௨)

தெள்வார்மழையுந்திரையாழியுமுட்கநாளும்
வள்வார்முரசம்மதிர்மாநகர்வாழுமாக்கள்
கள்வாரிலாமைப்பொருள்காவலுமில்லையாதுங்
கொள்வாரிலாமைக்கொடுப்பார்களுமில்லைமாதோ. (௭௩)

கல்லாதுநிற்பார்பிறரின்மையிற்கல்விமுற்ற
வல்லாருமில்லையவைவல்லரல்லாருமில்லை
எல்லாருமெல்லாப்பெருஞ்செல்வமுமெய்தலாலே
இல்லாருமில்லையுடையார்களுமில்லைமாதோ. (௭௪)

§ ஏகம்முதற்கல்விமுளைத்தெழுந்தெண்ணில்கேள்வி
ஆகம்முதற்றிண்பணைபோக்கியருந்தவத்தின்
சாகந்தழைத்தன்பரும்பித்தருமம்மலர்ந்து
போகங்கனியொன்றுபழுத்ததுபோலுமன்றே. (௭௫)

௩-வது, நகரப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௬௭.

---

* வானாறு-ஆகாயகங்கை. † தோரணவாயிலு மதிலும் தோளார் இசைக்குப்பையென்னு மவ்வொன்றோடுகோபுரமுமதிலுந் தேவர் நாண மிக வோங்கினவென்றுரைத்துக் கொள்க. ‡ வீணைவண்டு-வீணைபோல வண்டென்றியைக்க. § கல்வியாகிய ஒரு முதல் முளைத்து மேற்போந்து எண்ணிறந்த கேள்வியாகிய அம்முதன்மையும் வன்மையுமுடைய கவடுகளைப்போக்கி அருந்தவமாகிய இலைகள் தழைத்து அன்பரும் பித் தருமாகிய மலர் மலர்ந்து போகமாகிய கனியொன்று பழுத்ததுபோலு மெனக் கொள்க. அன்பினை மலராகக் கூறாமை ஏகதேசவுருவகம்.

## ௪-வது, அரசியற்படலம்.

அம்மாணகருக்கரசன்னரசர்க்கரசன்
செம்மாண்டனிக்கோலுலகேழினுஞ்செல்லநின்றான்
இம்மாண்கதைக்கோரிறையாயவிராமனென்னும்
மொய்ம்மாண்கழலோற்றருநல்லறமூர்த்தியன்னான். (௧)

ஆதிம்மதியும்மருளும்மறனும்மமைவும்
* ஏதின்மிடல்வீரமுமீகையுமெண்ணில்யாவும்
நீதிந்நிலையும்மிவைநேமியினோர்க்குநின்ற
பாதிம்முழுதும்மிவற்கேபணிகேட்பமன்னோ. (௨)

† மொய்யார்கலிசூழ்முதுபாரின்முகந்துதானக்
கையார்புனலானனையாதனகையுமில்லை
மொய்யாயவேதத்துறைவேந்தருக்கேய்ந்தயாரும்
செய்யாதயாகமிவன்செய்துமறந்தமாதோ. (௩)

தாயொக்குமன்பிற்றவமொக்குநலம்பயப்பின்
சேயொக்குமுன்னின்றொருசெல்கதியுய்க்குநீரால்
நோயொக்குமென்னின்மருந்தொக்குநுணங்குகேள்வி
ஆயப்புகுங்காலறிவொக்குமெவர்க்குமன்னான். (௪)

ஈய்ந்தேகடந்தானிரப்போர்கடலெண்ணினுண்ணூல்
ஆய்ந்தேகடந்தானறிவென்னுமளக்கர்வாயால்
காய்ந்தேகடந்தான்பகைவேலைகருத்துமுற்றத்
தோய்ந்தேகடந்தான்றிருவிற்றொடர்போகபௌவம். (௫)

வேறு.

‡ வெள்ளமும்பறவையும்விலங்கும்வேசியர்
உள்ளமுமொருவழியோடநின்றவன்
தள்ளரும்பெரும்புகழ்த்தயரதப்பெயர்
வள்ளல்வள்ளுறையயின்மன்னர்மன்னனே. (௬)

§ நேமிமால்வரைமதிலாகநீள்புறப்
பாமமாகடல்கிடங்காகப்பன்மணி

---

* ஏதமென்றது-கடைகுறைந்துநின்றது. † மொய்-வலிமை.

‡ மிக்கமழையும் பெயலின்மையு மின்மையான் வெள்ளமுமொரு ழியோடவெனவும், பறவையும் விலங்கும் தத்தமக்குவேண்டு முணவுந் ாஞ்சென்றுழிப் பெறுதலின் அவையொருவழியோடவெனவும், தாம டந்த தலைவனையன்றிப் பிறரெவ்வளவு நிதியமீட்டினும் விழையாமை ின் வேசியருள்ளமுமொருவழியோடவெனவுங்கொள்க. மிக்கமழையை துதிவிருட்டியெனவும், பெயலின்மையை அநாவிருட்டியெனவும் கூறுவர் டநூலார். § நேமிமால்வரையே மதிலாகவும், கடலே யகழியாகவும், லையே மாளிகையாகவும் அரசனுக்கிவ்வுலகம் அயோத்தியோலுமென் ியைக்க.

வாமமாளிகைமலையாகமன்னற்குப்
பூமியுமயோத்திமாநகரம்போலுமே. (௭)

* ஆவரும்வன்மைநேரறிந்துதீட்டலால்
மேவருங்கையடைவேலுந்தேயுமால்
கோவுடைநெடுமணிமகுடகோடியால்
சேவடியடைந்தபொற்கழலுந்தேயுமால். (௮)

மண்ணிடையுயிர்தொறும்வளர்ந்துதேய்வின்றித்
தண்ணிழல்பரப்புமிருளைத்தள்ளவும்
அண்ணறன்குடைமதியமையுமாதலான்
விண்ணிடைமதியினைமிகையிதென்னவே. (௯)

வயிரவான்பூணணிமடங்கன்மொய்ம்பினான்
உயிரெலாந்தன்னுயிரொப்பவோம்பலாற்
செயிரிலாவுலகினிற் † சென்றுநின்றவாழ்
உயிரெலாமுறைவதோருடம்புமாயினான். (௧௦)

குன்றெனவுயரியகுவவுத்தோளினான்
வென்றியந்திகிரிவெம்பரிதியாமென
ஒன்றெனவுலகிடையுலாவிமீமிசை
நின்றுநின்றுயிர்தொறுநெடிதுகாக்குமே. (௧௧)

எய்யெனவெழுபகையெங்குமின்மையான்
மொய்பொருதினவுறுமுழவுத்தோளினான்
வையகமுழுவதும்வறிஞரோம்புமோர்
செய்யெனக்காத்தினிதரசுசெய்கின்றான். (௧௨)

௩-வது, அரசியற்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௭௯.

---

* ஆவர் வன்மையுநேரறிந்து தீட்டலால் என உம்மையை வன்மையிடத்திற் கூட்டுக. யாவருமென்றது மரீஇயது.

† சென்றுநின்று வாழுயிரெலாம்-இயங்குதிணைநிலைத்திணைகள்.

## ரு-வது, திருவவதாரப்படலம்.



ஆயவனொருபகலயனையேநிகர்
தூயமாமுனிவரற்றொழுதுதொல்குலத்
தாயருந்தந்தையுந்தவமுமன்பினால்
மேயவான்கடவுளும்பிறவும்வேறுநீ. (க)

எங்குலத்தலைவர்களிரவிதன்னினும்
தங்குலம்விளங்குறத்தரணிதாங்கினார்
மங்குநரில்லெனவரம்பில்வையகம்
இங்குனதருளினாலினிதிறோம்பினேன். (உ)

அறுபதினாயிரமாண்டுமாண்டுற
உறுபகையொடுக்கியிவ்வுலகையோம்பினேன்
பிறிதொருகுறையிலையெற்பின்வையகம்
மறுகுறுமென்பதோர்மறுக்கமுண்டரோ. (ங)

அருந்தவமுனிவருமந்தணாளரும்
வருந்துதலின்றியேவாழ்வின்வைகினார்
இருந்துயருழக்குநரெற்பினென்பதோர்
அருந்துயர்வருத்துமென்னகத்தையென்றனன். (ச)

முரசறைசெழுங்கடைமுத்தமாமுடி
அரசர்தங்கோமகனனையகூறலும்
விரைசெறிகமலமென்பொகுட்டுமேவிய
வரசரோருகன்மகன்மனத்தினெண்ணினான். (ரு)

அலைகடனடுவணோரனந்தன்பாய்மிசை
மலையெனவிழிதுயில்வளருமாமுகில்
கொலைதொழிலரக்கர்தங்கொடுமைதீர்ப்பனென்
றுலைவுருமமரருக்குரைத்தவாய்மையை. (சு)

சுடுதொழிலரக்கராற்றொலைந்துவானுளோர்
கடுவமர்களனடிகலந்துகூறலும்
படுபொருளுணர்ந்தவப்பரமன்யாமினி
அடுவதில்லெனமறுத்தவரொடேகினான். (எ)

கறைமிடற்றிறைவனுங்கடவுளோர்களும்
மறைமுதற்கிழவனைவந்துநண்ணலும்
முறைமையிற்கடன்முறைமுற்றிமுண்டகத்
திறைவனுமவரொடுமினிதினேகினான். (அ)

வடவரைக்குடுமியினடுவெண்மாசறு
சுடர்மணிமண்டபந்துன்னிநான்முகக்
கடவுளையடிதொழுதமரகண்டகர்
இடிநிகர்வினையமதியம்பினரோ. (௯)

* பாகசாதனன் றனைப்பாசத்தார்த்தடல்
† மேகநாதன்புகுந்திலங்கைமேயநாள்
போகமாமலருறைபுனிதன்மீட்டமை
தோகைபாகற்குறச்சொல்லினரோ. (௧௦)

இருபதுகரந்தலையீரைந்தென்னுமத்
திருவிலிவலிக்கொருசெயலின்றெங்களால்
கருமுகிலெனவளர்கருணையங்கடல்
பொருதிடர்தணிக்கினுண்டெனும்புணர்ப்பினர். (௧௧)

திரைகெழுபயோததித்துயிலுந்தெய்வவான்
மரகதமலையினைவழுத்திநெஞ்சினாற்
கரகமலங்குவித்திருந்தகாலையிற்
‡ பரகதியுணர்ந்தவர்க்குதவுபண்ணவன். (௧௨)

§ கருமுகிற்றாமரைக்காடுபூத்துநீ
டிருசுடரிருபுறத்தேந்தியேடவிழ்
திருவொடும்பொலியவோர்செம்பொற்குன்றின்மேல்
வருவபோற்கலுழன்மேல்வந்துதோன்றினன். (௧௩)

எழுந்தனர்கறைமிடற்றிறையுந்தாமரைச்
செழுந்தவிசுகந்தவத்தேவுஞ்சென்றெதிர்
விழுந்தனரடிமிசைவிண்ணுளோரொடுந்
தொழுந்தொறுந்தொழுந்தொறுங்களிதுளங்குவார். (௧௪)

ஆடினர்பாடினரங்குமிங்குமா
ஓடினருவகைமாநறவுண்டோர்கிலார்
வீடினரரக்கரென்றுவக்கும்விம்மலால்
சூடினர்முறைமுறைதுளவத்தாண்மலர். (௧௫)

பொன்வரையிழிவதோர்புயலின்பொற்புற
என்னையாளுடையவன்றோணின்றெம்பிரான்

---

* பாகசாதனன்-இந்திரன். † மேகநாதன்பிறப்புக்காலத்தில் மேககர்ச்சனைபோல் ஒலித்தமையால் இந்திரசித்துக்கு மேகநாதனென்னும் பெயர் உண்டாயிற்று.

‡ பரகதி என்றது நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தை.

§ இறைவனைமுகிலாகவும், அவரவயவங்களைத்தாமரைமலராகவும், ஆழியையுஞ் சங்கையும் இருசுடராகவும், கருளனைப்பொற்குன்றாகவும், கூறினர். முகிலிடத்துத்தாமரை கூறினமையான் இல்பொருளுவமை.

சென்னிவான் றடவுமண்டபத்துச்சேர்ந்தரி
துன்னுபொற்பீடமேற்பொலிந்துதோன்றினன். (கசு)

விதியொடுமுனிவரும்விண்ணுளோர்களும்
மதிவளர்சடைமுடிமழுவலாளனும்
அதிசயமுடனுவந்தயலிருந்துழி
கொதிகொள்வேலரக்கர்தங்கொடுமைகூறினர். (கஎ)

ஐயிருதலையினோனனுசராதியாம்
மெய்வலியரக்கரால்விண்ணுமண்ணுமே
செய்தவமிழந்தனதிருவிலையக
உய்திறமில்லையென் றுயிர்ப்புவீங்கினர். (கஅ)

எங்களின்வரங்களாலரக்கரென்றுளார்
பொங்குமூவுலகையும்புடைத்தழித்தனர்
செங்கணையகவினித்தீர்த்தலில்லையேல்
நங்குவருலகையோர்நொடியினென்றனர். (கக)

என்றனரிடருழந்திறைஞ்சியேத்தலும்
மன்றலர்துளவினன்வருந்தல்வஞ்சகர்
தந்தலையறுத்திடர்தணிப்பன்றூரணிக்
கொன்றுநீர் * கேண்மெனவுரைத்தன்மேயினன். (உ0)

வானுளோரனைவரும்வானரங்களாக்
கானினும்வரையினுங்கடிதடத்தினும்
சேனையோடவதரித்திடுமின்சென்றென
ஆனனமலர்ந்தனனருளினாழியான். (உக)

† மசரதமனையவர்வரமும்வாழ்வுமோர்
நிசரதகணைகளானீறுசெய்யயாம்
சுசரதுரகமாக்கடல்கொள்காவலன்
தசரதன்மதலையாவருதுந்தாரணி. (உஉ)

வளையொடுதிகிரியும்வடவைதீதர
விளைதருகடுவுடைவிரிகொள்பாயலும்
இளைஞர்களெனவடிபரவவேகிநாம்
வளைமதிலயோத்தியில்வருதுமென்றனன். (உங)

என்றவனுரைத்தபோதெழுந்துதுள்ளினர்
நன்றிகொண்மங்கலநாதம்பாடினர்
மன்றலர்செழுந்துளவணியுமாயனர்
இன்றுறைமையளித்தனரென்னுமேம்பலால். (உச)

---

* கேளும் என்பது கேண்மென நின்றது. இதுமகரக்குறுக்கம்.
† மசரதமனையவர்-பேய்த்தேரன்னவர்.

### வேறு.

போயதெம்பொருமலென்றுவிந்திரனுவகைபூத்தான்
தூயமாமலருளோனுஞ்சுடர்மதிசூடியோனும்
சேயுயர்விசும்புளோருந்தீர்ந்ததெஞ்சிறுமையென்றார்
மாயிருஞாலமுண்டோன்கலுழன்மேற்சரணம்வைத்தான். (௨௫)

என்னையாளுடையவையன்கலுழன்மீதெழுந்துபோய
பின்னர்வானவரைநோக்கிப்பிதாமகன்பேசுகின்றான்
முன்னரே * யெண்கின்வேந்தன்யானெனமொழிகின்றான்மற்
றன்னவாறெவருநீர்போயவதரித்திடுமினென்றான். (௨௬)

தருவுடைக்கடவுள்வேந்தன்சாற்றுவானெனதுகூறு
மருவலர்க்கசனியன்னவாலியுமகனுமென்ன
இரவிமற்றெனதுகூறங்கவற்கிளையவனென்றோத
அரியுமற்றெனதுகூறுநீலனென்றறைந்திட்டானல். (௨௭)

வாயுமற்றெனதுகூறுமாருதியெனலுமற்றோர்
காயுமர்க்கடங்களாகிக்காசினியதனின்மீது
போயிடத்துணிந்தோமென்றார்புராரிமற்றியானேவாத
சேயெனப்புகன்றான்மற்றைத்திசையுளோர்க்கவதியுண்டோ. (௨௮)

அருடருகமலக்கண்ணனருண்முறையலருளோனும்
இருடருமிடற்றினோனுமமரருமினையராகி
மருடருவனத்தின்மண்ணின்வானரராகிவந்தார்
பொருடருமிறைவர்தத்தமுறைவிடஞ்சென்றுபுக்கார். (௨௯)

ஈதுமுன்னிகழ்ந்தவண்ணமெனமுனியிதயத்தெண்ணி
† மாதிரம்பொருததிண்டோண்மன்னநீவருந்தலேழ்
பூதலமுழுதுங்காக்கும்புதல்வரையளிக்கும்வேள்வி
சீதரமுயலினையசிந்தைநோய்தீருமென்றான். (௩௦)

என்னமாமுனிவன்கூறவெழுந்துபேருவகைபொங்க
மன்னவர்மன்னனந்தமாமுனிசரணஞ்சூடி
உன்னையேபுகல்புக்கேனுக்குறுகண்வந்தடைவதுண்டோ
அன்னதற்கடியேன்செய்யும்பணியினிதளித்தியென்றான். (௩௧)

மாசறுசுரர்களோடுமற்றுளோர்தமையுமீன்ற
காசிபனருளுமைந்தன்விபண்டகன்கங்கைசூடும்
ஈசனும்புகழ்தற்கொத்தோனிருங்கலைபிறவுமெண்ணில்
தேசுடைத்தந்தையொப்பான்றிருவருள்புனைந்தமைந்தன். (௩௨)

---

* எண்கு-கரடி.

† மாதிரம்-மலை, திக்குமென்பாருமுளர்.

வருகலைபிறவுநீதிமநுநெறிவரம்பில்வாய்மை
தருகலைமறையுமெண்ணிற்சதுமுகற்குவமைசான்றோன்
திருகலையுடையவிந்தசெகத்துளோர்தன்மைசேரா
ஒருகலைமுகச * சிருங்கவுயர்தவன்வருதல்வேண்டும். (௩௩)

பாந்தளின்மகுடகோடிபரித்தபாரதனில்வைகும்
மாந்தரைவிலங்கென்றுன்னுமனத்தன்மாதவத்தனெண்ணில்
பூந்தவிசுகர்துளோனும்புராரியும்புரந்தற்கொத்த
சாந்தனுல்வேள்விமுற்றிற்றனயர்களுளராமென்றான். (௩௪)

ஆங்குரையினையகூறுமருந்தவர்க்கரசன்செய்ய
பூங்கழலெழுந்துவாழ்த்திப்பூதலமன்னர்மன்னன்
தீங்கறுகுணத்தான்மிக்கசெழுந்தவன்யாண்டையுள்ளான்
ஈங்கியான்புரியுந்தன்மையியம்புதியிறைவவென்றான். (௩௫)

வேறு.

† புத்தானகொடுவினையோ டருந்துயரம்போயொளிப்பப்புவனந்தாங்கும், சத்தானகுணமுடையோன் றனையினொடுநண்ணரியின் சாலைபோல்வான், எத்தானும்வெலற்கரியான் மனுகுலத்தேவர்துதித்தோனிலங்குமௌலி, உத்தானபாதனரு ளுரோமபதனென்றுளனியவுலகையாள்வான். (௩௬)

அன்னவன்றன் புரந்தருகுஞ்சிருநாட்டினெடுங்காலமளவதாக, மின்னியெழுமுகிலின்றிவெந்துயரம்பெருகுதலும் வேந்தனன்னால், மன்னுமுனிவரையழைத்துமாதானங்கொடுக்கினும் வான்வழங்காதாகப், பின்னுமுனிவரர்க்கேட்பக்கலைக்கோட்டுமுனிவரின்வான் ‡ பிலிற்றுமென்றார்

ஓதநெடுங்கடலாடையுலகினில்வாழ்மனிதர்விலங்கெனவேயுன்னும், கோதில்குணத் தருந்தவனைக் கொணரும்வகை யாவதெனக் குனிக்கும் வேலை, சோதிநுதற்கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த்தரளநகைத் துணைமென்கொங்கை, மாதரெழுந்தியாமேகியருந்தவனைக்கொணர்துமெனவணக்கஞ்செய்தார். (௩௭)

ஆங்கவரம் மொழியுரைப்ப வரசன்மகிழ்ந் தவர்க்கணிதூசாதியாய, பாங்குளமற் றவையருளிப் பனிப்பிறையைப் பழித்தநுதற் பணைத்தவேய்த்தோள், எங்குமிடைதடித்தமுலை யிருண்டகுழன் மருண்டவிழியிலவச்செவ்வாய்ப், பூங்கொடியீரேகுமெனத்தொழுதிறைஞ்சியிரதமிசைப்போயினரே. (௩௮)

வேறு.

ஓசனைபலகடந்தினியொரோசனை
ஏசறுதவனுறையிடமிதென்றுழிப்
பாசிழைமடந்தையர்பன்னசாலைசெய்
தாசறுமருந்தவத்தவரின்வைகினார். (௪௦)

* சிருங்கம்-கொம்பு. † புத்-ஓர் நரகவிசேடம். ‡ பிலிற்றல்-துளித்தல்.

அருந்தவன் றந்தையையற்றநோக்கியே
கருந்தடங்கண்ணியர்கலைவலாளனிற்
பொருந்தினர்பொருந்துபுவிலங்கெனுப்புரிந்
திருந்தவரிவரெனவினையசெய்தனன். (௩௪)

* அருக்கியமுதலினோடாசனங்கொடுத்
திருக்கெனவிருந்தபினினியகூறலும்
முருக்கிதழ்மடந்தையர்முனிவனைத்தொழூஉப்
பொருக்கெனவெழுந்துபோய்ப்புரையுட்புக்கனர். (௩௫)

திருந்திழையவர்சிலதினங்கணீத்துழி
மருந்தினுமினியனவருக்கைவாழைமா
† தருந்தருங்கனியொடுதாழைபிறபலம்
அருந்தவவருந்தெனவருளினாரோ. (௩௬)

இன்னனபல்பகலிருந்தபின்றிரு
நன்றுதன்மடந்தையர்நவையின்மாதவன்
றன்னையெம்மிடத்தினுஞ்சாரல்வேண்டுமென்
றன்னவற்றொழுதலுமவரொடேகினான். (௩௭)

விம்முறுமுவகையர்வியந்தெழுந்தனர்
அம்மவிதிதுவெனவகலுணெறி
செம்மையின்முனிவரன்றொடாசென்றனர்
தம்மனமெனமருட்டடையலார்களே. (௩௮)

‡ வளநகர்முனிவரன்வருமுன் § வானவன்
களனமர்கடுவெனக்கருகிவான்முகில்
சளசளவெனமழைத்தாரைகான்றன
குளனொடுநதிகடங்குறைநிரப்பவே. (௩௯)

பெரும்புனனதிகளுங்குளங்களும்பெட்பறக்
கரும்பொடுசெந்நெலுங்கவின்கொண்டோங்கிட
இரும்புயல்ககனமீதிடைவிடாதெழுந்
$ தரும்புனல்சொரிந்தபோதரசுணர்ந்தனன். (௪௰)

---

* அருக்கியமுதலினோடு என்றமையால் அருக்கியம், பாத்யம் ஆசமனம் என்னும் மூன்றுங் கொள்ளப்படும். அருக்கியம்-தலையில் தெளித்துக் கொள்ளுதற்குரியநீர். பாத்யம் - கால்கழுவுதற்குரிய நீர். ஆசமநம்- உட்கொள்ளுதற்குரியநீர்: இவற்றை கைந்நீர், அடிநீர் முக்குடிநீரெனலும் பொருந்தும்.

† தருத்தருங்கனி-மெலிந்துநின்றது. ‡ வளநகரென்றார் இதுகாறு மிந்நகர் வளமில்லாதாக முனிவன் போந்தமையான் வளனெய்தலின்.

§ வானவன் ஈண்டு முக்கட்கடவுளை யுணர்த்திற்று.

$ அரும்புனலென்றார் இதுகாறும் வான்பிலிற்றாது பெய்தலின்.

காமமும்வெகுளியுங் * களிப்புங்கைத்தெழு
கோமுனியிவணடைந்தனன்கொல்கொவ்வைவாய்த்
தாமரைமலர்முகத்தரளவாணகைத்
தூமமென்குழலியர்புணர்த்தசூழ்ச்சியால். (௪௮)

என்றெழுந்தருமறைமுனிவர்யாரொடும்
சென்றிரண்டியோசனைசேனைசூழ்தர
மன்றலங்குழலியர்நடுவண்மாதவக்
குன்றினையெதிர்ந்தனன்குவவுத்தோளினான். (௪௯)

வீழ்ந்தனனடிமிசைவிழிகணீர்தர
வாழ்ந்தனமினியெனமகிழுஞ்சிந்தையான்
தாழ்ந்தெழுமாதரார்தம்மைநோக்கிநீர்
† போழ்ந்தனிரெனதிடர்புணர்ப்பினாலென்றான். (௫0)

அரசனுமுனிவருமடைந்தவாயிடை
வரமுனிவஞ்சமென்றுணர்ந்தமாலைவாய்
வெருவினர்விண்ணவர்வேந்தன்வேண்டலால்
‡ கரையெறியாதலைகடலும்போன்றனன். (௫௧)

வள்ளுறுவயிரவாண்மன்னன்பன்முறை
எள்ளருமுனிவனையிறைஞ்சியாரினும்
தள்ளருந்துயரமுஞ்சமைவுஞ்சாற்றலும்
உள்ளுறவெகுளிபோயொளித்ததாமரோ. (௫௨)

அருள்சுரந்தரசனுக்காசியுங்கொடுத்
தருடருதேரின்மீதொல்லையேறிநற்
§ பொருடருமுனிவருந்தொடரப்போயினன்
மருளொழியுணர்வுடைவரதமாதவன். (௫௩)

அடைந்தனன்வளநகரலங்கரித்தெதிர்
மிடைந்திடமுனியொடுவேந்தன்கோயில்புக்
கொடுங்கலில்பொற்குழாத்துறையுளெய்தியோர்
மடங்கலாதனத்திடைமுனியைவைத்தனன். (௫௪)

அருக்கியமுதலியகடன்களாற்றிவே
றுரைக்குவதிலதெனவுவந்துதானருண்
முருக்கிதழிளமுலை $ முகநலாடனை
¶ இருக்கொடுவிதிமுறையினிதினீந்தனன். (௫௫)

* களிப்பு-மயக்கம். † போழ்தல்-பிளத்தல். ‡ கரையெறியாத-ஈறு தொகுத்தல்பெற்றது. § பொருடருமுனிவர்-மெய்ம்மைப்பொருளையுபதேசிக்கு முற்றத்துறந்த முனிவர். $ முகநலாள்-அழகான முகத்தையுடையபெண், பெண்ணின் பெயரெனக் கூறுவாருமுளர். ¶ இருக்கொடு விதிமுறை என்புழி ஒடு உருபு ஆனுருபின் பொருளது.

வறுமைநோய்தணிதரவான்வழங்கவே
உறுதுயர்தணிந்ததவ்வுலகம்வேந்தருள்
செறிகுழல்போற்றிடத்திருந்துமாதவத்
தறிஞனுண் * டிருக்குநனரசவென்றனன். (௫௬)

வேறு.

என்றலுமேமுனிவரன்ற னடியிறைஞ்சியீண்டேகிக் கொணர்வெனென்னாத், துன்றுகழன்முடிவேந்தடிபோற்றச்சுமந்திரனேமுதல்வராய வன்றிறல்சேரமைச்சர்தொழ மாமணித்தேரேறுதலும்வானோர்வாழ்த்தி, இன்றெமதுவினைமுடிந்ததெனச்சொரிந்தார்மலர்மாரியிடைவிடாமல். ()

காகளமும்பல்லியமுங்கனைகடலின்மேன்முழங்கக்கானம்பாட
மாகதர்களருமறைநூல்வேதியர்கள்வாழ்த்தெடுப்பமதுரச்செவ்வாய்த்
தோகையர்பல்லாண்டிசைப்பக்கடற்றானைபுடைசூழச்சுடரோனென்ன
எகியருநெறிநீங்கியுரோமபதன்றிருநாட்டையெதிர்ந்தானன்றே. (௫௮)

கொழுந்தோடிப்படர்கீர்த்திக் கோவேந்தனடைந்தமைசென் றொற்றர்கூறக், கழுந்தோடும்வரிசிலைக் கைக்கடற்றானைபுடைசூழக்கழற்கால் வேந்தன், செழுந்தோடும்பல்கலனும்மில்வீச † மாகதர்கள்திரண்டுபாட, எழுந்தோடுமுவகையுடன்யோசனைசென்றானசையெதிர்கோளெண்ணி

எதிர்கொள்வான்வருகின்றவயவேந்தன் றனைக்கண்ணுற்றெழிலிராண, அதிர்கின்ற பொலந்தேர்நின் றரசர்பிரானிழிந்துழிச்சென் றடியின்வீழ,முதிர்கின்றபெருங்காதறழைத்தோங்கவெடுத்திறுகமுயங்கலோடும், கதிர்கொண்ட சுடர்வேலான் றனைநோக்கியிவையுரைத்தான் களிப்பின்மிக்கான். (௬௦)

யான்செய்தமாதவமோ விவ்வுலகஞ்செய்தவமோ யாதோவிங்கண், ‡ வான்செய்தசுடர்வேலோயடைந்ததெனமனமகிழ மணித்தேரேற்றித், தேன்செய்ததார்மௌலித்தேர்வேந்தைச்செழுநகரிற்கொணர்ந்தான்றெவ்வர், ஊன்செய்தசுடர்வடிவேலுரோமபதனென்றுரைக்கு முரவுத்தோளான். (௬௧)

ஆடகப்பொற்சுடரிமைக்குமணிமாடத்திடையொருமண்டபத்தையண்மிப், பாடகச்செம்பதுமமலர்ப்பாவையர்பல்லாண்டிசைப்பப்பைம்பொற்பீடத், § தேடுதுற்றவடிவேலோன் றனையிருத்திக்கடன்முறைகள்யாவுமீந்து, தோடுதுற்றமலர்த்தாரான்விருந்தளிப்பவினிதுவந்தான் $ சுரர்நாடீந்தான். (௬௨)

---

* இருக்குநானென்றதில் நகரம் நிகழ்காலங் காட்டிற்று.

† மாகதர்-நின்றுபுகழ்வோர். ‡ இந்திரனுக்குச் சம்பரனை வெற்றி கொண்டு இந்திரபதமளித்த பெருமிதந்தோன்றி வான்செய்த சுடர்வேலோய் என்றார். வான்செய்த சுடர்வேல்-ஆகாயத்தில் விளங்குகின்ற சூரியனையொத்த வேல் அல்லது மேலானகாந்தியையுடைய வேல் என்றும் பொருளுரைத்தலுமாம்.

§ ஏடுதுற்றவடிவேல்-இலைவடிவாகச் செய்யப்பட்டவேல்.

$ சுரர்நாடீந்தானென்பதற்கு 'வான்செய்த சுடர்வேலோய்' என்றதற்குரைத்தாங்குரைக்க.

செவ்விநறுஞ்சாந்தளித்துத்தேர்வேந்தன்றனைநோக்கியிவணீசேர்ந்த
கவ்வையுரைத்தருள்கவெனநிகழ்ந்தபரிசரசர்பிரான்கழறலோடும் [ன்ற
* அவ்வியநீத்துயர்ந்தமனத்தருந்தவனைக்கொணர்ந்தாங்கண்விடுப்பெனு
செவ்விமுடியோயெனலுந்தேரேறிச்சேனையொடுமயோத்திசேர்ந்தான்.

மன்னர்பிரானகன்றதற்பின்வயவேந்தனருமறைநூல்வடிவங்கொண்ட
தன்னமுனிவரனுறையுடனையணுகியிணையடித்தாமரைகளம்பொன்
மன்னுமணிமுடியணிந்தவரன்முறைசெய்திடலிவணீவருதற்கொத்த
தென்னையெனவடியேற்கோர்வரமருளுமடிகளெனயாவதென்றான். ()

† புறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்கபெருந்தகைதன்புகழிற்பூத்த .
அறனென்றதிருமனத்தானமரர்களுக்கிடரிழைக்குமவுணராயோர் [ன்
திறலுண்டவடிவேலான் றசரதனென்றுயர்கீர்த்திச் செங்கோல்வேந்த
விறல்கொண்டமணிமாடவயோத்திநகரடைந்திவணீடலென்றான். ()

அவ்வரந்தந்தனமினித்தேர்கொணர்தியெனவருந்தவத்தோனறைத லோடும், வெவ்வரந்தின்றயில்படைக்குருஞ் சுடர்வேலோ னடியிறைஞ்சி வேந்தர்வேந்தன், கவ்வையொழிந்துயர்ந்தனனென்றதிர்குரற்றேர் கொணர்ந்திதனிற்கலைவலாளன், செவ்விநறுற்றிருவினொடும் போந்தேறுகெனவேறிச்சிறந்தான்மன்னோ. (சுசு)

வேறு.

குணிசிலைவயவனுங்கரங்கள்கூப்பிடத்
துணியறுமுனிவரர்தொடர்ந்துசூழ்வர
வணிதைய ‡ மருமறைவடிவுபோன்றொளிர்
முனிவனும்பொறிமிசைநெறியைமுன்னினர். (சுஎ)

அந்தரதுந்துமிமுழக்கியாய்மலர்
சிந்தினர்களித்தனரறமுந்தேவரும்
வெந்தெழுகொடுவினைவீழ்க்குமெய்ம்முதல்
வந்தெழவருடருவானென்றெண்ணியே. (சுஅ)

தூதுவரவ்வழியயோத்திதுன்னினர்
மாதிரம்பொருததோண்மன்னர்மன்னன்முன்
ஓதினர்முனிவரவோதவேந்தனும்
காதலென்றளவறுகடலுளாழ்ந்தனன். (சுகூ)

எழுந்தனன்பொருக்கெனவிரதமேறினன்
பொழிந்தனமலர்மழையாசிபூத்தன

---

* அவ்விய நீத்துயர்ந்தமனத் தருந்தவன்-கலைக்கோட்டு முனிவன்.

† புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகையென்றது சிபியரசனை. இதனை 'அன்பிலரெல்லா' மென்புழிப் பரிமேலழகர் கூறலானுமுணர்க.

‡ அருமறைவடிவுபோன்றொளிர்முனிவன்-கலைக்கோட்டுமுனிவன்.

மொழிந்தனபல்லியமுரசமார்த்தன
விழுந்தனதீவினைவேரினோடுமே. (எ0)

பிதிர்ந்தெதம்மனத்துயர்ப்பிறங்கலென்றுகொண்
டதிர்ந்தெழுமுரசுடையரசர்கோமகன்
* முதிர்ந்தமாதவமுடைமுனியைக்கண்களால்
எதிர்ந்தனன்யோசனையிரண்டொடொன்றினே. (எக)

நற்றவமனைத்துமோர்நவையிலாவுருப்
பெற்றிவணடைந்தெனப்பிறங்குவான்றனைச்
சுற்றியசீரையுமுழையின்றோற்றமும்
முற்றுறப்பொலிதருமூர்த்தியான்றனை. (எஉ)

அண்டர்கடியாமுமரக்கராற்றலும்
விண்டிடப்பொலிதரும்வினைவலாளனைக்
குண்டிகைகுடையொடுகுலவுநூன்முறைத்
தண்டொடுபொலிதருதடக்கையான்றனை. (எங)

இழிந்துபோயிரதமாண்டினைகொடாண்மலர்
விழுந்தனன்வேந்தர்தம்வேந்தன்மெய்ம்மையான்
மொழிந்தனனாசிகண்முதியனான்மறைக்
கொழுந்துமேற்படர்தரக்கொளுகொம்பாயினான். (எச)

அயல்வருமுனிவருமாசிகூறிடப்
புயல்பொழிதடக்கையாற்றொழுதுபொங்குநீர்க்
கயல்பொருவிழியொடுகலைவலாளனை
இயல்பொடுகொணர்ந்தனனிரதமேற்றியே. (எரு)

அடிகுரான்முரசதிரயோத்திமாநகர்
முடியுடைவேந்தனம்முனிவனோடுமோர்
கடிகையினடைந்தனன்கமலவாண்முக
வடிவுடைமடந்தையர்வாழ்த்தெடுப்பவே. (எசு)

கசட்டுறு † வினைத்தொழிற்கள்வராயுழல்
அசட்டர்களைவரையறுவராக்கிய
வசிட்டனுமருமறைவடிவுபோன்றொளிர்
வசிட்டனும்வேத்தவைபொலியமேவினார். (எஎ)

---

* முதிர்ந்தமாதவமுடைய முனியை, பிறங்குவான்றனை, மூர்த்தியான்றனை, வினைவலாளனை, தடக்கையான்றனைக் கண்களால் யோசனையிரண்டொடொன்றின் எதிர்ந்தனனெனக் கூட்டி முடிக்க.

† வினைத்தொழில் ஒருபொருட்பன்மொழி. ஈண்டுத் தீவினையையுணர்த்திற்று.

மாமணிமண்டபமன்னிமாசறு
தூமணித்தவிசிடைச்சுருதியேநிகர்
கோமுனிக்காசனையிருத்திக்கொள்கடன்
ஏமுறத்திருத்திவேறினையசெப்பினான். (௭௮)

சான்றவர்சான்றவதருமமாதவம்
போன்றொளிர்புனிதநின்னருளிற்பூத்தவென்
* ஆன்றதொல்குலமினியாசின்வைகுமால்
யான்றவமுடைமையுமிழப்பின்றாமரோ. (௭௯)

என்னலுமுனிவானினிதினோக்குறா
† மன்னவர்மன்னகேள்வசிட்டனென்னுமோர்
நன்னெடுந்தவன்றுணைநவையில்செய்கைநீ
நின்னையிவ்வுலகினினிருபர்நேர்வரோ. (௮0)

என்றனபற்பலவினிமைகூறிநற்
குன்றுறழ்வரிசிலைக்கு யுத்ததோளினாய்
நன்றிகொ ‡ ளரிமகநடாத்தவெண்ணியோ
இன்றெனையழைத்ததிங்கியம்புவாயென்றான். (௮௧)

உலப்பில்பல்லாண்டெலாமுறுகணின்றியே
தலப்பொறையாற்றினென்றனயர்வந்திலர்
§ அலப்புநீருடுத்தபாரளிக்குமைந்தரை
நலப்புகழ்பெறவினிநல்கவேண்டுமால். (௮௨)

என்றலுமரசநீயிரங்கலிவ்வுல
கொன்றுமோவுலகமீரேழுமோம்பிடும்
வன்றிறன் $ மைந்தரையளிக்குமாமகம்
இன்றுநீயியற்றுதற்கெழுகவீண்டென்றான். (௮௩)

ஆயதற்குரியனகலப்பையாவையும்
ஏயெனக்கொணர்ந்தனர்நிருபர்நேர்தலும்
தூயாற்புனல்படிஇசைசுருதிநூன்முறை
சாய்வறத்திருத்தியசாலைபுக்கனன். (௮௪)

முழங் ¶ கழன்மும்மையுமுடுகியாகுதி
வழங்கியேயீராறுதிங்கள்வாய்த்தபின்

---

* இட்சுவாகுதொட்டு வந்த அரசர்பரம்பரையாதலின் ஆன்ற தொல்குலமென்றார். † மன்னவர் மன்ன-சக்கரவர்த்தியே. ‡ அரிமகம்-பரிமேதம். § அலப்புநீர்-கடல். $ மைந்தரையளிக்கு மாமகம்-புத்திரகாமேஷ்டியாகம். ¶ அழன் மும்மையுமென்றது-ஆகவானீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம் என்பவற்றை. இதனை 'முத்தீச்செல்வத்திருபிறப்பாளர்' என்புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

தழங்கினதுந்துமிதாவில்வானகம்
விழுங்கினர்விண்ணவர்வெளியின்றென்னவே. (௮௫)

முகமலரொளிர்தரமொய்த்துவானுளோர்
அகவிரைநறுமலர்தூவியார்த்தெழத்
தகவுடைமுனியுமத்தழலினாப்பணை
மகவருளாகுதிவழங்கினானரோ. (௮௬)

ஆயிடைக்கனலினின்றம்பொற்றட்டமீத்
தூயநற்சுதைநிகர்பிண்டமொன்றுசூழ்
தீயெரிப்பங்கியுஞ்சிவந்தகண்ணுமா
எயெனப்பூதமொன்றெழுந்ததேந்தியே. (௮௭)

வைத்ததுதரைமிசைமறித்துமவ்வழித்
தைத்ததுபூதமத்தவனும்வேந்தனை
உய்த்தநல்லமிர்தினை * யுரியமாதர்கட்
கத்தகுமரபினாலளித்தியாலென்றான். (௮௮)

மாமுனியருள்வழிமன்னர்மன்னவன்
தூமமென்சுரிகுழற்றொண்டைத்தூயவாய்க்
காமரொண்கௌசலைகரத்தினோர்பகிர்
தாமுறவளித்தனன்சங்கமார்த்தெழ. (௮௯)

கைகயன்றனையைதன்கரத்துமம்முறைச்
செய்கையினளித்தனன்தேவரார்த்தெழப்
பொய்கையுநதிகளும்பொழிலுமோதிமம்
வைகுறுகோசலமன்னர்மன்னனே. (௯0)

† நமித்திரர்நடுக்குறுநலங்கொண்மொய்ம்புடை
நிமித்திருமரபுளான்முன்னர்நீர்மையின்
சுமித்திரைக்களித்தனன்சுரர்க்குவேந்தினிச்
‡ சமித்ததென்பகையெனத்தமரொடார்ப்பவே. (௯௧)

§ பின்னுமப்பெருந்தகைபிதிர்ந்துவீழ்ந்தது
தன்னையுஞ்சுமித்திரைதனக்குநல்கினான்
ஒன்னலர்க்கிடமும்வேறுலகினோங்கிய
மன்னுயிர்தமக்குநீள்வலமுந்துள்ளவே. (௯௨)

வாம்பரிவேள்வியு $ மகாரைநல்குவ
தாம்புரையாவுதிபிறவுமந்தணன்

---

* உரியமாதர் என்றது ஈண்டு-பட்டமகிஷிகள் மூவர்.
† நமித்திரர்-பகைவர்.
‡ சமித்தது-அடங்கிற்று.
§ பின்னும் வினைமாற்றுப்பொருளில் வருவதோரிடைச்சொல்.
$ மகவை என்றும் பாடம்.

ஓம்பிடமுடிந்தபினுலகுகாவலன்
எம்பலோடெழுந்தனனியாருமேத்தவே. (௯௩)

முருடருபல்லியமுழங்கியார்த்தன
இருடருமுலகமுமிடரினீங்கின
தெருடருவேள்வியின்கடன்கழர்ந்துழி
அருடருமவையின்வந்தரசனெய்தினான். (௯௪)

செய்ம்முறைகடன்முறைதிறம்பலின்றியே
மெய்ம்முறைகடவுளருக்கீந்துவிண்ணுளோர்க்
கம்முறையளித்துநீடந்தணாளர்க்கும்
கைம்முறையளித்தனன்கனகமாரியே. (௯௫)

வேந்தர்கட்கரசொடுவெறுக்கைதேர்பரி
வாய்ந்தநற்றுகிலொடுவரிசைக்கேற்பன
ஈந்தனன்பல்லியந்துவைப்பவேகிநீர்
தோய்ந்தனன்சரயுநற்றுறைக்கணெய்தியே. (௯௬)

முரசினங்கறங்கிடமுத்தவெண்குடை
* விரசிமேனிபுற்றிடவேந்தர்சூழ்தர
அரசவையடைந்துழியயனுநாணுற
உரைசெறிமுனிவன்றாள்வணங்கியோங்கினான். (௯௭)

அரியநற்றவமுடைவசிட்டனாணையால்
† இரலைநற்சிருங்கமாவிறைவன்றாடொழா
உரியபற்பலவுரைபயிற்றியுய்ந்தனன்
பெரியநற்றவவினிப்பெறுவதியாதென்றான். (௯௮)

எந்தைநின்னருளினாலிடரினீங்கியே
உய்ந்தனனடியனேனென்னவொண்டவன்
சிந்தையுண்மகிழ்ச்சியால்வாழ்த்தித்தேர்மிசை
வந்தமாதவரொடும்வழிக்கொண்டேகினான். (௯௯)

‡ வாங்கியதுயருடைமன்னன்பின்னரும்
பாங்குடைமுனிவர்தாள்பழிச்சியேத்தல்கொண்
டோங்கியவுவகையராகியோடெழா
நீங்கினரிருந்தனனேமிவேந்தனே. (க00)

தெரிவையர்மூவருஞ்சிறிதுநாட்செலீஇ
மருவியவயாவொடுவருத்தந்துய்த்தலால்

* விரசிடுசிபுறர என்றும்பாடம்.

† இரலைநற்சிருங்கமாவிறைவன்-கலைக்கோட்டுமுனி.

‡ வாங்கியதுயர்-துன்பம்நீங்கின.

பொருவருதிருமுகமன்றிப்பொற்புநீ
டுருவமுமதியமோடொப்பத்தோன்றினார். (க0க)

ஆயிடைப்பருவம்வந்தடைந்தவெல்லையின்
மாயிருபுவிமகண்மகிழ்வினோங்கிட
வேய்புனர்பூசமும்விண்ணுளோர்புகழ்
தூயகர்க்கடகமுமெழுந்துதுள்ளவே. (க0உ)

சித்தருமியக்கருந்தெரிவைமார்களும்
வித்தகமுனிவரும்விண்ணுளோர்களும்
நித்தருமுறைமுறைநெருங்கியார்ப்புறத்
தத்துறலொழிந்துநீடருமமோங்கவே. (க0ங)

ஒருபகலுலகெலாமுதரத்துட்பொதிந்
தருமறைக்குணர்வருமவனையஞ்சனக்
கருமுகிற்கொழுந்தெழில்காட்டுஞ்சோதியைத்
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை. (க0ச)

ஆசையும்விசும்புநின்றமரரார்த்தெழ
வாசவன்முதலினோர்வணங்கிவாழ்த்துறப்
பூசமுமீனமும்பொலியநல்கினாள்
மாசறுகேகயன்மாதுமைந்தனை. (க0ரு)

தளையவிழ்தருவுடைச * சயிலகோபனுங்
கிளையுமந்தரமிசைக் † கெழுமியார்த்தெழ
அளைபுகுமரவினோடலவன்வாழ்வுற
இளையவற்பயந்தனளிளையமென்கொடி. (க0சு)

படங்கிளர்பஃறலைப்பாந்தளேந்துபார்
நடங்கிளர்தரமறைவிலநாடகம்
மடங்கலுமகமுமேவாழ்வினோங்கிட
விடங்கிளர்விழியிணைமீட்டுமீன்றனள். (க0எ)

ஆடினரரம்பையரமுதவேழிசை
பாடினர்கின்னரர்துவைத்தபல்லியம்
வீடினரரக்கரென்றுவக்கும்விம்மலால்
ஓடினருலவினரும்பர்முற்றுமே. (க0அ)

ஓடினரரசன்மாட்டுவகை ‡ கூறினின்
றூடினர்சிலதியரந்தணாளர்கள்
கூடினர்நாளொடுகோளுநின்றமை
நாடினருலகினிநவையின்றென்றனர். (க0கூ)

* சயிலகோபன்-பூருவத்தில் மலைகளைக் கோபித்துச சிறகுகளை வெட்டினன் ஆதலால் இந்திரனுக்குச சயிலகோபனென்று பெயர் வழங்கிவருகின்றது.

† கெழுமியார்ப்புற என்றும்பாடம். ‡ கூறநின் என்றும்பாடம்.

மேடமாமதிதிதிநவமிமீன்கழை
நீடுறுமாலைகர்க்கடகநீதிசேர்
ஓடைமாகளிறனனுதயராசிகோள
நாடிணேகாதசர்நால்வருச்சரே. (கக0)

நீதி-ஒழுக்கமானது, சேர-சேர்ந்த, ஓடை- முகலணியையுடைய, மா-பெருமைபொருந்திய, களிறு யானையை, அனன் ஒத்தவனாகிய (இராமமூர்த்தியினது அவதாரகாலையில்) மா-பெருமைபொருந்திய, மதி மாஸமானது, மேடம்-மேஷமாயும், திதி-திதியானது, நவமி-நவமியாயும், மீன்-நட்சத்திரமானது. கழை-புநர்பூசமாயும், கர்க்கடகம்-கடகமானது, உதயராசி-உதயமும், இராசிலக்கினமாகிய சந்திரலக்கினமுமாயும், மால்-புதன், ஈ-ராஜஸதானமாகிய பத்தாமிடத்திலும், கோள் - கேதுவிற்கு, நாடு-மிதுனமானது, இல-வீடாயும, ஏகாதசா-பதினொன்றுக்குடையவா, நால்வர்-நான்குபேர், உச்சர்-உச்சஸ்தானத்திலும், நீடுறும்-பலமாய் நிற்கும். ஏகாரம் தேற்றம்.

இராமர் ஜாதகம்.

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன். | சூரியன். புதன். | | கேது |
| | | | சந்திரன் லக்கினம் குரு. |
| செவ்வாய் | | இராசி. | |
| இராகு. | | சனி. | |

என்றனர்சாதக * மீசற்கேனையா
தன்றனக்குந்தகுமுறையிற்றன்றெரிந்
தொன்றியதமனியத்தெழுதியோதினார்
வன்றிறற்சுரர்குருவாபுரதெதெப்பவே. (ககக)

மாமுனிதன்றெடுமென்னார்மன்னவன்
ஏமுறப்புனல்பட இவிததொடின்பொருள்
தாமுறவழங்கிவெண்சங்கமார்ப்புறக்
கோமகார்திருமுகங்குறுகிநோக்கினான். (ககஉ)

இறைதவிர்ந்திடுகபாரியாண்டொரேழுநிதி
நிறைதருசாலைதாழ்நீக்கியாவையும்
முறைகெடவறியவர்முகந்துகொள்கென
அறைபறையென்றனனரசர்கோமகன். (ககங)

* ஈசன் ஈண்டு-சிராமன்.

படையொழிந்திடுகதம்பதிகளேயினி
விடைபெறுகுகமுடிவேந்தர்வேதியர்
நடையுறுநியமமுநவையின்றுறுக
கடவுளர் * விழாவொடுகளிக்கவெங்கணும். (௧௧௪)

ஆலயம்புதுக்குகவந்தணாளர்தம்
சாலையுஞ்சதுக்கமுஞ்சமைக்கசந்தியும்
காலையுமாலையுங்கடவுளர்க்கணி
மாலையுந்தீபமும்வழங்குகென்றனன். (௧௧௫)

என்புழிவள்ளுவரியானைமீமிசை
நண்பறையறைந்தனர்நகரமாந்தரும்
பின்பிறழ்நசைப்பினர்தாமும்விம்மலால்
இன்பமென்றளக்கருமளக்கரெய்தினர். (௧௧௬)

ஆர்த்தனர்முறைமுறையன்பினுடல்
போர்த்தனபுளகம்வேர்பொடித்தனணிதி
தூர்த்தனரெதிரெதிர்சொல்லினர்க்கெலாம்
கீர்த்தனென்றறிந்ததோவவர்தஞ்சிந்தையே. (௧௧௭)

பண்ணையுமாயமுந்திரளும்பாகரும்
கண்ணகன்றிருநகர்களிப்புக்கைமிக
தெண்ணெயுங்களபமுமிழுதுமானமும்
சுண்ணமுந்தூவினவீதிதோறுமே. (௧௧௮)

வேறு.

இத்தகைமாநக † ரீராறுநாளும்
சித்தமுறுங்களியோடுசிறந்தே
தத்தமையொன்றுமுணர்ந்திலராவா
மெய்த்தவனும்விதிப்பமதித்தான். (௧௧௯)

கராமலையத்தளர்கைக்கரியெய்த்தே
அராவணையிற்றுயில்வோயெனவந்நாள்
விராவியளித்தருண்மெய்ப்பொருளுக்கே
இராமனெனப்பெயரீந்தனனன்றே. (௧௨௦)

கரதலமுற்றெளிர்நெல்லிகடுப்ப
விரதமறைப்பொருண்மெய்ந்நெறிகண்ட
வரத ‡ னுதித்திடுமற்றையவொளியைப்
பரதனெனப்பெயர்பன்னினனன்றே. (௧௨௧)

* விழவொடுகளிப்ப என்றும்பாடம்.
† ஈராறுநாள் என்றதனைப்பத்துநாளுங்கடந்த விரண்டாநாள் எனப் பெரியாரும் பணித்தமையானறிக.
‡ உதித்திட என்றும்பாடம்.

உலக்குநர்வஞ்சகரும்பருமுய்ந்தார்
நிலக்கொடியுந்துயர்நீத்தனளிந்த
விலக்கருமொய்ம்பின்விளங்கொளிநாமம்
இலக்குவனென்னவிசைத்தனனன்றே. (கஉஉ)

முத்துருக்கொண்டுசெம்முளரியலர்ந்தால்
ஒத்திருக்கும்மெழிலுடையவியவொளியால்
எத்திருக்குங்கெடுமென்பகையெண்ணுறச
சத்துருக்கனென்னசசாற்றினனம்ம. (கஉங)

பொய்வழியின்முனிபுகறருமறையால்
இவ்வழிபெயர்களிசைத்துழியிறைவன்
கைவழிநிதியெனுநிகிலமறையோர்
மெய்வழியுவரிநிறைத்தனமென்மேல். (கஉச)

காவியுமொளிர்தருகமலமுமெனவே
* ஓவியவெழிலுடையொருவனையலதோர்
ஆவியுமுடலமுமிலவெனவருமின்
மேவினனுலகுடைவேந்தர்தம்வேந்தன். (கஉரு)

அமிர்துகுருதலையொடணிநடைபயிலாத்
திமிரமதறவருதினகரனெனவும்
† தமரமதுடன்வளர்சதுமறையெனவும்
குமரர்கணிலமகள்குறைவறவளர்நாள். (கஉசு)

சவுளமொ ‡ டுபநயம்விதிமுறைதருகுற்
றிவளவதெனவொருகரைபிறிதிலவா
உவள்தருமறையினொடொழிவறுகலையும்
§ தவள்மதிபுனையரனிகர்முனிதரவே. (கஉஎ)

யானையுமிரதமுமிவுளியுமுதலா
ஏனையபிறவுமவியல்பினினடையுற்
றானுறுபடைபலசிலையொடுபயிலா
$ வானவர்தனிமுதல்கிளையொடுவளர. (கஉஅ)

அருமறைமுனிவருமமரருமவனித்
திருவுமநகருறைசெனமுமிடரோ
டிருவினைதுணிதருமிவர்களினிவணின்
றொருபொழுதகல்கிலமுறையெனவுறுவார். (கஉகூ)

* கரியகோலத்திருமேனியனுகிய ஸ்ரீராமனை 'ஓவிய வெழிலுடையொருவன்' என்ருர். † தமரமதுடன் என்ருர் எழிசையோடுகூடிய மறையொலியை. ‡ உபநயனமென்றதும், § தவளமென்றதும் குறைந்துநின்றன. $ அயர்வருமமரர்களதிபதி என்பதுதோன்ற வானவர் தனிமுதல் என்ருர்.

ஐயனுமிளவலுமணிநிலமகடன்
செய்தவமுடைமைகடெரிதரநிதியும்
மைதவழ்பொழில்களும்வாவியுமருவி
நெய்குழலுறுமிழையெனநிலைதிரிவார். (கரு0)

பரதனுமிளவலுமொருநொடிபகிரா
திரதமுதியுரியுமியரினுமறைநூல்
உரைதருபொழுதினுமொழிகிலரெனையாள்
வரதனுமிளவலுமெனமருவினரே. (கருக)

வீரருமிளைஞரும்வெறிபொழில்களின்வாய்
ஈரமொடுறைதருமுனிவரரிடைபோய்ச
* சோர்பொழுதணிநகர்துறுகுவரெதிர்வார்
கார்வரவலர்பயிர்பொருவுவர்களியால். (கருஉ)

எமையுயரனையருநிவர்தடமுலையோய்
சேழிளர்மதலையர்கிளைகளுநினையார்
வாழியவெனவயாமனநுறுகடவுட்
டாழ்குவாக சிலதயாதபெனவே. (கருங)

கடல்கருமுகிலொளிரகமலமரலரா
வடவரையுடன்வருசெயலெனமறையும்
தடவுதலறிவருதணிமுதலவனும்
புடைவருமிளவலுமெனநகர்புகல்வார். (கருச)

எதிர்வருமவர்களையெமையுடையிறைவன்
முதிர்தருகருணையின்முகமலரொளிரா
எதுவினையிடரிலையினிதினுமனையும்
மகிதருகுமரரும்வலியர்கொலெனவே. (கருரு)

† அஃதையநனையெமதரசெனவுடையேம்
இஃதொருபொருளலவெமதுயிருடனேழ்
மகிதலமுழுதையுமுறநவிமலரோன்
உருபகலளவெனவுரைநனிபுரிவார். (கருசா)

வேறு.

இப்பரிசணிநகருறையும்யாவரும்
மெய்ப்புகழ்புனைதரவிளையவீரர்கள்

---

* சோர்பொழுது-மாலைக்காலம்.

† அகதியைய என்றது அஃதைய என நின்றது, இதனை 'அஃதை தந்தை' எனப்பிறருங் கூறுதல்காண்க.

தப்பறவடிநிழறமுவியேத்துற
* முப்பரம்பொருளுக்குமுதல்வன்வைகுறும். (கஎ)
அரசர்தம்பெருமகனகிலம்யாவையும்
விரசுறுதனிக்குடைவிளங்கவென்றிசேர்
முரசொலிகறங்கிடமுனிவரேத்துறக்
கரைசெயலரியதோர்களிப்பின்வைகுநாள். (கஅ)

ரு-வது, திருவவதாரப்படலம்-முற்றிற்று.
ஆகதிருவிருத்தம்-கஎ.

## சா-வது, கையடைப்படலம்.

நனைவருகற்பகநாட்டுநன்னகர்
அனைவருமணைதரவயிர்க்குஞ்சிந்தையான்
நினையவுமரியதுவிசும்பினீண்டதோர்
புனைமணிமண்டபம்பொலியவெய்தினன். (க)
தூயமெல்லரியணைப்பொலிந்துதோன்றினன்
சேயிருவிசும்பிடைத்திரியுஞ் † சாரணர்
நாயகனிவன்கொலென்றயிர்த்துநாட்டமோர்
ஆயிரமில்லையென்றையநீங்கினர். (உ)

விசுவாமித்திரர் வருதல்.

மடங்கல்போன்மொய்ம்பினன்முன்னர்மன்னுயிர்
அடங்கலுமுலகும்வேறமைத்துத்தேவரோ
டிடங்கொளுன்முகனையும்படைப்பெனீண்டெனத்
தொடங்கிய ‡ துனியுறுமுனிவன்றோன்றினன். (ங)

வேறு.

வந்துமுனியெய்துதலுமார்பினணியாரம்
அந்தரதலத்திரவியஞ்சவொளிவிஞ்சக்
கந்தமலரிற்கடவுடன்வரவுகாணும்
இந்திரனெனக்கடிதெழுந்தடிபணிந்தான். (ச)
பணிந்துமணிசெற்றபுகுயிற்றியவிர்பைம்பொன்
அணிந்ததவிசிட்டதிலருத்தியொடிருத்தி
இணைந்தகமலச்சரணருச்சனைசெய்தின்றே
துணிந்ததென்வினைத்தொடர்பெனத்தொழுதுசொன்னன். (ரு)

---

* முப்பரம்பொருளுக்கு முதல்வன்-சங்கருடணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்னும் வியூகர் மூவருக்கு முதற்பொருளை; இதனை 'முப்பரம்பொருளிற் குண்முதலே' என்றிவ்வாசிரியர் பிற்கூறுதலுமிப் பெற்றிநோக்கி. † சாரணர்-தேவவொற்றர். ‡ துனியுறுமுனிவன்-கோசிகன்.

நிலஞ்செய்தவமென் றுணரினன் றுநெடியோயென்
நலஞ்செய்வினையுண் டெனினுமன் றுநகர்நீயான்
வலஞ்செய்துவணங்கவெளிவந்தவிதுமுந் தென்
குலஞ்செய்தவமென் றினிதுகூ றமுனிகூறும். (௬)

வேறு.

என்னனையமுனிவரருமிமையவருமிடையூறொன் றுடையாராகல்
பன்னகமுநகுவெள்ளிப்பனிவரையும்பாற்கடலும்பதுமபீடத்
தன்னகருங்கற்பகநாட்டணிநகருமணிமாடவயோத்தியென்னும்
பொன்னகருமல்லாதுபுகலுண்டோவிகல்கடந்தபுலவுவேலோய். (௭)

இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்குநிழலிருக்கையிழந்துபோந்து, நின்றளிக்கும் * தனிக்குடையினிழலொதுங்கிக்குறையிரந்து நிற்ப நோக்கிக், குன்றளிக்குங்குலமணித்தோட்சம்பரனைக் குலத்தோடுந்தொலைத்துநீகொண், டன்றளித்தவரசன்றோபுரந்தர † னின்றாள்கின்றதரச வென்றான். (௮)

உரைசெய்யுமளவினவன்முகநோக்கியுள்ளத்திலொருவராலும்
கரைசெய்யவரியதொருபேருவகைக்கடல்பெருகக்கரங்கள்கூப்பி
அரசெய்தியிருந்தபயனெய்தினன்மற்றினிச்செய்வதருளுகென்று [கே.
முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப் பின்மொழியு முனிவனுங்

தருவனத்துள்யானியற்றுந் ‡ தகைவேள்விக்கிடையூறுதவஞ்செய்வோர்கள், வெருவரச்சென் றடை § காமவெகுளியெனவிருதரிடைவிலக்காவண்ணம், செருமுகத்துக்காத்தியெனச்சிறுவர்நால்வரினுங்கரியசெம்மல், 0 ஒருவனைத்தந்திடுதியென வுயிரிரக்குங்கொடுங்கூற்றி னுளையச் சொன்னான். (௧௦)

எண்ணிலாவருந்தவத்தோனியம்பியசொன் மருமத்தினெறிவேல்பாய்ந்த
புண்ணிலாம்பெரும்புழையிற்கனனுழைந்தாலெனச்செவியிற்புகுதலோ
உண்ணிலாவியதுயரம்பிடித்துந்தவாருயிர்நின்றூசலாடக் [டும்
கண்ணிலான்பெற்றிழந்தாலெனவுழந்தான்கடுந்துயரங்காலவேலான். ()

தொடையூற்றிற்றேன்றுளிக்கு நறுந்தாராவொருவண்ணந் துயரநீங்கிப், $ படையூற்றமிலன்சிறியனிவன்பெரியோய்பணியிதுவேற்பணிநீர்க்கங்கை, புடையூற்றுஞ்சடையானுநான்முகனும்புரந்தரனும்புகுந்துசெய்யும், இடையூற்றுக்கிடையூறா யான்காப்பென் பெருவேள்விக் கெழுக வென்றான். (௧௨)

என்றனனென்றலு முனிவோடெழுந்தனன்மண் படைத்தமுனியிறுதிக்காலம், அன்றெனவாமெனவிமையோ ரயிர்த்தனர்மேல்வெயில்கர

* தனிக்குடைக்கீழ்நின்றொதுங்கி எனவும்பாடம். † இற்றைப்போதவ னரசாள்வது நின்னாற் கொடுக்கப்பட்டதென்பார் இன்றரசாள்வதென்றார். ‡ தவவேள்வி என்றும்பாடம். § காமவெகுளியெனக் கூறினமையான் மயக்கமென்பதையு முபலக்கணத்தாற் கூறிக்கொள்க.

0 ஒருவனை-ஒப்பற்றவனை. $ படையூற்றமிலனென் றிவ்வாசிரியர் கூறியதை முதனூலாசிரியரும் இன்னும் பதினாறாண்டு நிரம்பிற்றில்லையென்றும், நிசாசரர் பூசலுக்கிவனுதவானென்றும், தாமரைக்கண்ணனையழைத்தல் பொருந்தாதுகாணென்றுங்கூறுவர், இதனை வடநூலார்வாய்க் கேட்டுணர்க.

ந்ததங்குமிங்கும், நின்றனவுந்திரிந்தனபீநிவந்தகொழுங் கடைப்புருவநெ
ற்றிமுற்றச், சென்றனவந்ததுநகையுஞ்சிவந்தனகண் ணிருண்டனபோய்
த்திசைகளெல்லாம். (௪௩)

வேறு.

* கறுத்தமாமுனிகருத்தையுன்னிநீ
பொறுத்தியென்றவற்புகன்றுநின்மகற்
குறுத்தலாகலாவுறுதியெய்துநாள்
மறுத்தியோவெனுவசிட்டன்கூறினன். (௪௪)

† பெய்யுமாரியாற்பெருகுவெள்ளம்போய்
மொய்கொள்வேலைவாய்முடுகுமாறுபோல்
ஐயநின்மகற்களவில்விஞ்சைவந்
தெய்துகாலமின்றெதிர்ந்ததென்னவே. (௪௫)

குருவின்வாசகங்கொண்டுகொற்றவன்
திருவின்கேள்வனைக்கொணர்மின்சென்றென
வருகவென்றனனென்னவேலொடும்வந்
தருகுசார்ந்தனனறிவினும்பரான். (௪௬)

வந்தநம்பியைத்தம்பிதன்னொடு
முந்தைநான்மறைமுனிக்குக்காட்டிநற்
றந்தைநீதனித்தாயுநீயிவர்க்
கெந்தைதந்தனனியைந்தசெய்கென்றான். (௪௭)

கொடுத்தமைந்தரைக்கொண்டுசிந்தைமுந்
தெடுத்தசிற்றம்விட்டினிதுவாழ்த்திமேல்
அடுத்தவேள்விபோய்முடித்துநாமெனு
நடத்தன்மேயினனவைக்கணீங்கினன். (௪௮)

வென்றிவாள்புடைவிசித்துமெய்ம்மைபோல்
என்றுந்தேய்வுறுத்தூணியாத்திரு
குன்றம்போன்றுயர்தோளிற்கொற்ற ‡ வில்
ஒன்றுதாங்கினனுலகந்தாங்கினன். (௪௯)

அன்னதம்பியுந்தானுமையனும்
மன்னனின்னுயிர்வழிக்கொண்டாலெனச்

---

* துணியுறுமுனிவன் என்றதும் பின் கறுத்தமாமுனி என்றதும் கோசிகனை. † முனிவர்யாவரு மிறைவன்பால் விஞ்சையாவு மடைந்து மீட்டுமவனிடந் தருவதியல்பாதலாற் பெய்யுமாரியாற் பெருகுவெள்ளம் போய்-மொய்கொள் வேலைவாய்முடுகுமாறுபோலென்றுவமையாற் கூறினார்.

‡ உலகமெலாந் தன்னகட்டில் தாங்கிக் கிதுவொருபொருளன் றென்பார் கொற்றவில் ஒன்றுதாங்கின னுலகந்தாங்கினனென்றார்.

சொன்னமாதவற்றொடர்ந்தசாயைபோல்
பொன்னின்மாநகர்ப்புரிசைநீங்கினான். (௨௰)

வரங்கண்மாசறத்தவஞ்செய்தோர்கள்வாழ
புரங்கணேரிலாநகரநீங்கிப்போய்
அரங்கினாடுவார்சிலம்பினன்னநின்
றிரங்குவார்புனற்சரயுவெய்தினார். (௨௧)

கரும்புகால்பொரக் ‡ கழனிவார்ந்ததேன்
வரம்புரீஇமருதவேலிவாய்
அரும்புகொங்கையாரம்மமேலாகிபோல்
சுரும்புவாழ்வதோர்சோலை § யையினார். (௨௨)

தாழுமாமழைதழுவுநெற்றியால்
சூழியானைபோற்றோன்றுமால்வரைப்
பாழிமாமுகட்டுச்சிப்பசுமைமா
எழுமேறப்போயாறுமேறினார். (௨௩)

தேயுமாதவற்றொழுது † தேவர்தம்
நாவுளாகுதியயக்கும்வேள்விவாய்
தாவுமாபுகைதழுவுசோலைகண்
டியாவதீதென்றனவர்க்குமோதினான். (௨௪)

௬-வது கையடைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௱௪௧.

---

## ஏ-வது, தாடகைவதைப்படலம்.



* திங்கண்மேவுஞ்சடைத்தேவன்மேன்மாரவேள்
இங்குநின்றெய்யவுமெரிதருநுதல்விழிப்
பொங்குகோபஞ்சுடப்பூளைவீயன்னதன்
அங்கம்வெந்தன்றுதொட்டனங்கனேயாயினான். (௧)

வாரணத்துரிவையான்மதனைச்சினவுநாள்
ஈரமற்றங்கமிங்குகுத்தலாலிவணெலாம்
ஆரணத்துறையுளாயங்கநாடிதுவுமக
காரணக்குறியுடைக்காமனாசிரமமே. (௨)

பற்றவாவேரொடும்பசையறப்பிறவிபோய்
முற்றவாலுணர்வுமேன்முடுகினாரறிவுசென்

---

‡ கமுகின்வார்ந்ததேன் வரம்பை என்றும்பாடம்.
§ நண்ணினார் என்றும்பாடம்.
† தேவர்தம்நா-கனற்கடவுள்.
* திங்கண்மேவுஞ்சடைத்தேவன்-சிவபெருமான்.

றுற்றவானவனிருந்தியோகுசெய்தனனெனிற்
சொற்றவாமளவதோமற்றிதன்றூய்மையே. (௩)

என்றவந்தணனியம்பலும்வியந்தவவயிற்
சென்றவர்தெதிரெழுஞ்செந்நெறிச்செல்வரோ
டன்றுறைந்தலர்கதிர்ப்பரிதிமண்டிலமகன்
குன்றினின்றிவரவோர்சுடுசுரங்குறுகினார். (௪)

பரிதிவானவனிலம்பசையறப்பருகுவான்
விருதுமேற்கொண்டெலாம்வேனிலேயல்லதோர்
இருதுவேறின்மையாலெரிசுடர்க்கடவுளும்
கருதின்வேமுள்ளமுங்காணில்வேம்நயனமும். (௫)

படியின்மேல்வெம்மையைப்பகரினும்பகருநா
முடியவேமுடியவுய்ந்துளரும்வான்முகடும்வேம்
விடியுமேல்வெயிலும்வேமழையும்வேமின்றிரோ
டிடியும்வேமென்னில்வேறியாவைவேவாதவே. (௬)

விஞ்சுவான்மழையின்மேலம்புமேலும்படச்
செஞ்செவே * செருமுகத்தமர்செயுந்திறனிலா
வஞ்சர்தீவினையினான்மானமாமணியிழந்
தஞ்சினார்நெஞ்சுபோலென்றுமாறாதரோ. (௭)

பேய்பிளந்தொக்கநின்றுலர் † பெருங்கள்ளியின்
தாய்பிளந்துக்ககாரகில்களுந்தழையிலா
வேய்பிளந்துக்கவெண்டரளமும்விடவரா
வாய்பிளந்துக்கசெம்மணியுமேவனமெலாம். (௮)

பாருமோடாதுநீடாதெனும்பாலதே
சூருமோடாதுகூடாதரோசூரியன்
தேருமோடாதுமாமாகமீதேரினோர்
காருமோடாதுநீள்காலுமோடாதரோ. (௯)

கண்கிழித்துமிழ்விடக்கனலராவாசுகா
விண்கிழித்தொளிருமின்னனையபன்மணிவெயில்
மண்கிழித்திடவெழுஞ்சுடர்கண்மண்மகளுடற்
புண்கிழித்திடவெழுங்குருதியேபோலுமே. (௧௦)

வேறு.

புழுங்குவெம்பசியொடுபுரளும்போரரா
விழுங்க ‡ வந்தெழுந்தெதிர்விரித்தவாயின்வாய்

* செருமுகத்தன்றியே திறனிலாவஞ்சர் தீவினைகளான் என்றும் பாடம்.

† கள்ளிவயிறினகில்பிறக்குமென்றதனாற் பெருங் கள்ளியின்றாய்ப் பிளந்துக்ககாரகில்களுமென்றார். ‡ வந்தெதிரெதிர் என்றும்பாடம்.

முழங்குதிண்கரிபுகுமுடுகிமீமிசை
வழங்குவெங்கதிர்சுடமறைவுதேடியே. (௧௧)

ஏகவெங்கனலரசிருந்தகாட்டினில்
காகமுங்கரிகளுங்கரிந்துசாம்பின
மாகவெங்கனலெனும்வடவைத்தீச்சுட
மேகமுங்கரிந்திடைவீழ்ந்தபோலுமே. (௧௨)

கானகத்தியங்கியகழுதின்றேர்க்குலம்
தானகத்தெழுதலாற்றலைக்கொண்டோடிப்போய்
மேனிமிர்ந்தெழுந்திடல்விசும்பும்வேமெனு
வானவர்க்கிரங்கிநீர்வளர்ந்ததொத்ததே. (௧௩)

ஏய்ந்தவக்கனலிடையெழுந்தகானற்றேர்
காய்ந்தவக்கடுவனங்காக்கும்வேனிலின்
வேந்தனுக்கரசவீற்றிருக்கச்செய்ததோர்
பாய்ந்தபொற்காலுடைப்பளிங்குப்பீடமே. (௧௪)

தாவரு * மிருவினைசெற்றுத்தள்ளரு
† மூவகைப்பகையரண்கடந்துமுத்தியில்
போவதுபுரிபவர்மனமும்பொன்விலைப்
பாவையர்மனமும்போற்பசையுமற்றதே. (௧௫)

பொரிபரற்படர்நிலம்பொடிந்துகீழுற
விரிதலிற்பெருவழிவிளங்கித்தோன்றலால்
அரிமணிப்பணத்தராவரசனாட்டினும்
எரிகதிர்க்கிளிதுபுக்கியங்கலாயதே. (௧௬)

எரிந்தெழுகொடுஞ்சுரமினையதெய்தலும்
அருந்தவனிவர்பெரிதளவிலாற்றலைப்
பொருந்தினராயினும்பூவின்மெல்லியர்
வருந்துவர்சிறிதெனமனத்தினெக்கினான். (௧௭)

நோக்கினனவர்முகநோக்கநோக்குடைந்
கோக்குமாருமடிகுறுகநான்முகன்
ஆக்கிய ‡ விஞ்ஞைகளிரண்டுமவ்வழி
ஊக்கினனவையவருள்ளத்துள்ளினார். (௧௮)

உள்ளியகாலையினாழித் § தீயையும்
எள்ளுறுகொழுங்கன $ லெரியும்வெஞ்சுரம்
தெள்ளுதண்புனலிடைச்சேறலொத்தது
வள்ளலுமுனிவனைவணங்கிக்கூறுவான். (௧௯)

---

* இருவினை-புண்ணியபாவங்கள். † மூவகைப்பகை-காமவெகுளி மயக்கங்களை. ‡ விஞ்சைகளிரண்டு-பலம், அதிபலம் என்பன. § தீயினை என்றும்பாடம். $ கனலெஞ்சும் என்றும்பாடம்.

* சுழிபடுகங்கையந்தொங்கன்மௌலியான்
விழிபடவெந்ததோவேறுதானுண்டோ
பழிபடர்மன்னவன்படைத்தநாட்டினுங்
கழிவதென்காரணமறிஞகூறென்றான். (௨௦)

என்றலுமிராமனைநோக்கியின்னுயிர்
கொன்றுழல்வாழ்க்கையள்கூற்றின்றோற்றத்தாள்
அன்றியுமையிருநூறுமையன்மா
வொன்றியவலியினளுறுதிகேளெனா. (௨௧)

மண்ணுருத்தெடுப்பினுங்கடலைவாரினும்
விண்ணுருத்திடிப்பினும்வேண்டிற்செய்கிற்பாள்
எண்ணுருத்தெரிவரும்பாவமீண்டியோர்
பெண்ணுருக்கொண்டெனத்தெரியும்பெற்றியாள். (௨௨)

† பெருவரையிரண்டொடும்பிறந்தநஞ்சொடும்
உருமுறழ்முழக்கொடூழித்தீயொடும்
இருபிறைசெறிந்தெழுகடலுண்டாமெனின்
வெருவருதோற்றத்தண்மேனிமானுமே. (௨௩)

சூடகவரவுறழ்சூலக்கையினள்
காடுறைவாழ்க்கையள்கண்ணிற்காண்பரேல்
‡ ஆடவர்பெண்மையையவாவுந்தோளினாய்
தாடகையென்பதச்சழக்கிநாமமே. (௨௪)

கன்னவிறோளினாய்கமலத்தோனருள்
மன்னுயிரனைத்தையும்வாரிவாய்மடுத்
தின்னுயிர்வளர்க்குமோரெரிகொள்கூற்றநேர்
அன்னவள்யாவளென்றறையக்கேட்டியால். (௨௫)

இயக்கர்தங்குலத்துளானுலகமெங்கணும்
வியக்குறுமொய்ம்பினானெரியின்வெம்மையான்
§ மயக்கிலன்சரனெனும்வலத்தினானருள்
துயக்கிலன்சுகேதுவென்றுளனோர்தூய்மையான். (௨௬)

அன்னவன்மகவிலாதயருஞ்சிந்தையான்
மன்னெடுந்தாமரைமலரின்வைகுறும்

---

* சுழிபடுகங்கையந்தொங்கன்மௌலியான்-சிவன். † வரையிரண்டு-தனங்கள், பிறந்தநஞ்சு ஈண்டுகண், ஊழித்தீ என்றது கூந்தலை, இருபிறை என்றது வளைந்தவெயிற்றை. கடலென்ற துருவத்தை. இருபிறைசெறிந்தெழுகடலென்றது இல்பொருளுவமை. ‡ ஆடவர்பெண்மையையவாவுந்தோளினாயென்றார் முற்றத்துறந்த முனிவரும் இவன் அழகிற்சாலநைந்து துவக்குண்டமையை.

§ மயக்கில்கற்சரன் என்றும் பாடம்.

நன்னெடுமுதல்வனைவழுத்திநற்றவம்
பன்னெடும்பகலெலாம்பயின்றபான்மையான். (௨௭)

முந்தினனருமறைக்கிழவன்முற்றுநின்
சிந்தனையென்னெனச்சிறுவரின்மையான்
நொந்தனனருள்கென நுணங்குகேள்வியாய்
மைந்தர்களிலையொருமகளுண்டாமென்றான். (௨௮)

பூமடமயிலினைப்பொருவும்பொற்பொடும்
ஏமுறுமதமலையீரைஞ்ஞூறுடைத்
தாமிகுவலியொடுந்தனையைத்தோன்றுநீ
போவெனமலரயன்புகன்றுபோயினான். (௨௯)

ஆயவனருள்வழியலர்ந்ததாமரைச்
சேயவளெனவளர்செவ்விகண்டிவட்
காயவன்யார்கொலென்றாய்ந்துதன்கிளை
நாயகன்சுந்தனென்பவற்குநல்கினான். (௩௦)

காமனுமிரதியுங்கலந்தகாட்சிபோ
றாமெனவியக்கனுமணங்கனாளும்வே
றியாமமும்பகலுமோரீறின்றென்னலாய்த்
தாமுறுபெருங்களிச்சலதிமூழ்கினார். (௩௧)

பற்பலநாட்செலீஇப் * பதுமைபோன்றொளிர்
பொற்பினாள்வயிற்றிடைப்புவனமேங்கிட
வெற்பணிபுயத்துமாரீசனும்விறல்
மற்பொருசுவாகுவும்வந்துதோன்றினார். (௩௨)

மாயமும்வஞ்சமும்வரம்பிலாற்றலும்
தாயினும்பழகினார்தமக்குந்நேர்வொணா
தாயவர்வளர்வுழியவரையீன்றவக்
காய்சினத்தியக்கனுங்களிப்பின்மேன்மையான். (௩௩)

தீதுறுமவுணர்கடமைதீர்தரா
மோதுறுகடலெலாமொருகைமொண்டிடு
† மாதவனுறைவிடமதனின்வந்துநீள்
பாதவமனைத்தையும்பறித்துவீசினான். (௩௪)

விழைவுறுமாதவம்வெஃகினோர்விரும்
புழைகலையிரலையையுயிருண்டோங்கிய

---

* பதுமா என்றது பதுமைஎன நின்றது, ஈண்டு திருமகள்; பதுமைபோலிய என்றும்பாடம்.

† மாதவனென்றதும் தமிழெனுமளப்பருஞ்சலதிதந்தவன் என்றதும் அகத்தியனாரை.

* வழைமுதன்மரனெலாமடிப்பமாதவன்
தழலெழவிழித்தனன்சாம்பராயினான். (௩௫)

மற்றவன்விளிந்தமைமைந்தர்தம்மொடும்
பொற்றொடிகேட்டுவெங்கனலிற்பொங்குறா
முற்றுறமுடிக்குவன்முனியையென்றெழா
நற்றவனுறைவிடமதனைநண்ணினாள். (௩௬)

இடியொடுமடங்கலும்வரியுமேங்கிடக்
கடிகெடவமரர்கள்கதிருமுட்குறத்
தடியுடைமுகிற்குலஞ்சலிப்பவண்டமும்
வெடிபடவதிர்த்தெதிர்விளித்துமண்டவே. (௩௭)

தமிழெழுமளப்பருஞ்சலிதந்தவன்
உமிழ்கனல்விழிவழியொழுகவுங்கரித்
தழிவனசெய்தலாலரக்கராகியே
இழிகெனவுரைத்தனனசனியெஞ்சவே. (௩௮)

வெருக்கொளவுலகையும்விண்ணுளோரையும்
முருக்கியெவ்வுயிருமுண்டுழலுமூர்க்கராம்
அரக்கர்களாயினரக்கணத்தினில்
உருக்கியசெம்பொனவுமிழ்கட்டையினர். (௩௯)

ஆங்கவன்வெகுளியுமறைந்தசாபமும்
தாங்கினரெதிர்செயுந்தருக்கிலாமையின்
நீங்கினர்சுமாலியைநேர்ந்துநிற்கியாம்
ஓங்கியபுதல்வரென்றுறவுகூர்ந்தனர். (௪0)

அவனொடும்பாதலத்தனேகநாட்செலீஇத்
தவனுறு † தசமுகன்றனக்குமாதுலர்
இவரெனப்புடைத்தழித்துலகமெங்கணும்
பவனனிற்றிரிகுநர்பதகிமைந்தர்கள். (௪௧)

மிகுந்திறன்மைந்தரைவேறுநீங்குறாத்
தகுந்தொழின்முனிவரன்சலத்தையுன்னியே
‡ வகுந்துவின்வசுவரியதிந்தகிவ்வனம்
புகுந்தனளழலெனப்புழுங்குநெஞ்சினாள். (௪௨)

§ உளப்பரும்பிணிப்புறுவுலோபமொன்றுமே
அளப்பருங்குணங்களையழிக்குமாறுபோல்
கிளப்பருங்கொடுமையவரக்கிசேடிலா
வளப்பருமருதவைப்பழித்துமாற்றினாள். (௪௩)

---

* வழையொடு என்றும்பாடம். † தசமுகன்-இராவணன். ‡ வகுந்து-வழி. § உள்ளத்திற் பருமையாகிய பிணிப்படையாத பற்றுள்ளமொன்றே அளவில்லாத நற்குணங்களையழிக்கும் வண்ணம்போல் எனக்கொள்க.

வேறு.

இலங்கையரசன்பணியமைந்தொரிடையூறு
விலங்கல்வலிகொண்டெனதுவேள்விநலிகின்றாள்
அலங்கன்முகிலேயவளிவ்வங்கநிலமெங்கும்
குலங்களொடடங்கநனிகொன்றுதிரிகின்றாள். (௪௪)

முன்னுலகளித்துமுறைநின்றவுயிரெல்லாம்
தன்னுயிரெனக்கருது * தன்மையவன்மைந்த
என்னினியுணர்த்துவதினிச்சிறிதுநாளின்
மன்னுயிரனைத்தையும்வயிற்றினிடுமென்றான். (௪௫)

அங்கிறைவனப்பரிசுரைப்பவதுகேளா
கொங்குறைநறைக்குலமலர்ச்செனிகுலுக்கா
எங்குறைவதித்தொழிலியற்றுபவளென்றான்
† சங்குறைகரத்தொருதனிச்சிலைதரித்தான். (௪௬)

கைவரையெனத்தகையகாளையுரைகேளா
ஐவரையகத்திடையடைத்தமுனியைய
இவ்வரையிருப்பதவளொன்பதனின்முன்போர்
மைவரைநெருப்பெரியவந்ததெனவந்தாள். (௪௭)

சிலம்புகள்சிலம்பிடைச்செறித்தகழலோடு
நிலம்புகமிதித்தனளெளித்தகுழிவேலைச்
சலம்புகவனற்றறுகணந்தகனுமஞ்சிப்
பிலம்புகநிலைக்கிரிகள்பின்றொடரவந்தாள். (௪௮)

இறைக்கடைதுடித்தபுருவத்தவெயிறென்னும்
பிறைக்கடைபிறக்கிடமடித்தபிலவாயள்
மறைக்கடையரக்கி ‡ வடவைக்கனலிரண்டாய்
நிறைக்கடன்முளைத்தெனநெருப்பெழவிழித்தாள். (௪௯)

கடங்கலுழ்தடங்களிறுகையொடுகைதெற்றா
வடங்கொளநுடங்குமிடையாண்மறுகிவானோர்
இடங்களுநெடுந்திசையுமேழுலகுமெங்கும்
அடங்கலுநடுங்கவுருமஞ்சநனியார்த்தாள். (௫௦)

---

* மகனறிவுதந்தையறிவாகலின் நீயுமவ்வாறு செய்வையென்பார் தன்மையவன் மைந்த எனவுங்கூறினார். † சங்கேந்தியகை வறிதேகிடப்ப அறத்தைநிறுத்தற்பொருட் டசுரரைக்கொல்ல வில்லேந்திநிற்றலின், சங்குறைகரத்தொரு தனிசசிலைதரித்தானென்றார். ‡ கரியகடல்போல் மேனியும், அக்கடலில் வடவைத்தீ யிரண்டாய் முளைத்தாற்போல் வளைந்தவெயிறுந்தோன்றலின் வடவைக்கனலிரண்டாய் நிறைக்கடன் முளைத்தென என்றார்.

ஆர்த்தவரைநோக்கிநகைசெய்தெவருமஞ்சக்
கூர்த்தநுதிமுத்தலையயிற்கொடியகூற்றைப்
பார்த்தெயிறுதின்றுபகுவாய்முழைதிறந்தோர்
வார்த்தையுரைசெய்தனளிடிக்குமழையன்னாள். (௫௧)

கடக்கரும்வலத்தெனதுகாவலிதில்யாவும்
கெடக்கருவறுத்தனனினிச்சுவைகிடக்கும்
* விடக்கரிதெனக்கருதியோவிதிகொடுந்தப்
படக்கருதியோபகர்மின்வந்தபரிசென்றே. (௫௨)

மேகமவையிற்றுகவிழித்தனள்புழுங்கா
மாகவரையற்றுகவுதைத்தனண் † மதித்திண்
பாகமெனுமுற்றெயிறதுக்கியயில்பற்றா
ஆகமுறவுய்த்தெறிவனென்றெதிரழன்றாள். (௫௩)

அண்ணன்முனிவற்கதுகருத்தெனினுமாவி
உண்ணவடிக்கணைதொடுக்கிலனுயிர்க்கே
‡ துண்ணெனும்வினைத்தொழிறொடங்கியுள்ளேனும்
பெண்ணெனமனத்திடை § பெருந்தகைநினைந்தான். (௫௪)

வேறு.

வெறிந்தசெம்மயிர்வெள் 0 ளெயிற்றாடனை
எறிந்துகொல்வெனென்றேற்கவும்பார்க்கிலாச்
செறிந்ததாரவன்சிந்தைக்கருத்தெலாம்
அறிந்துநான்மறையந்தணன்கூறுவான். (௫௫)

நீதென்றுள்ளவையாவையுஞ்செய்தமைக்
கோதென்றுண்டிலளித்தனையேகுறை
யாதென்றெண்ணுவதிக்கொடியாளையும்
மாதென்றெண்ணுவதோமணிப்பூணினாய். (௫௬)

நாண்மையேயுடையார்பிழைத்தானசை
ஆண்மையேபெற்றவன்றிறலாடவர்
$ தோண்மையேயிவள்பேர்சொலத் ¶ தோற்குமால்
ஆண்மையென்னும || தார்வசத்தாகுமே. (௫௭)

இந்திரன்னிடைந்தானுடைந்தோடினார்
தந்திரம்படத்தானவர்வானவர்

---

* விடக்கு-ஊண். † மதித்திண்பாகம்-பிறைக்கோடு. வினைத்தொழில் என்றது ஒருபொருட்பன்மொழி. ‡ துண்ணெனுமென்ற அடையான் தீத்தொழில் என்பது படநின்றது. § பெருந்தகை-பெருந்தன்மையுடைய இராமனை அன்மொழித்தொகை. 0 எயிற்றுளயில் என்றும்பாடம் $ தோண்மை-தோளாற்றலை. வாண்மை-வாட்டொழிற்சிறப்பை. ¶ தோற்பரேல் என்றும்பாடம். || ஆரிடைவைகுமே என்றும்பாடம்.

மந்தரம்பிவடோளெனின்மைந்தரோ
டந்தரம்பினியாதுகொலாண்மையே. (௫௮)

* மன்னர்மன்னவன்காதலமற்றுமொன்
றின்னம்யானுரைக்கின்றதியாதெனின்
முன்னொர்காலநிகழ்ந்தமுறைமையீ
தென்னவோதலுற்றான்றவத்திறலான். (௫௯)

† பிருகுவென்னும்பெருந்தவன்றன்மனை
வருகயற்கட்கியாதிவல் ‡ லாசுரர்க்
குருகுகாதலுறவுறவாதலே
கருதியாவிகவர்ந்தனனேமியான். (௬௦)

வானகந்தனின்மண்ணினின்மன்னுயிர்
§ போனகந்தனக்கென்றெணும்புந்திய
தானவள் $ குமதிப்பெயராடனை
ஊனொழித்தனன்வச்சிரத்தும்பர்கோன். (௬௧)

ஆதலாலரிக்காகண்டலன்றனக்
கோதுகீர்த்தியுண்டாயவல்லாதிடை
ஏதமென்பனவெய்தியவோசொலாய்
தாதுடர்ந்துதயங்கியதாரினாய். (௬௨)

¶ கறங்கடற்றிகிரிப்படிகாத்தவர்
பிறங்கடைப்பெரியோய்பெரியோரொடும்
மறங்கொடித்தரைமன்னுயிர்மாய்த்துநின்
றறங்கெடுத்தவட்காண்மையும்வேண்டுமோ. (௬௩)

சாற்றுநாளற்றதெண்ணித்தருமம்பார்த்
தேற்றும்விண்ணெனபதன்றியிவளைப்போல்
|| நாற்றங்கேட்டலுந்தின்னநயப்பதோர்
கூற்றுண்டோசொலாய்கூற்றுறழ்வேலினாய். (௬௪)

மன்னும்பல்லுயிர்வாரித்தன்வாய்ப்பெய்து
தின்னும்புன்மையிற் () தீமையெதோவைய
பின்னுந்தாழ்குழற்பேதைமைப்பெண்ணிவள்
என்னுந்தன்மையெளிமையின்பாலதே. (௬௫)

---

* சக்கரவர்த்தித் திருமகனென்றழைப்பது நோக்கி 'மன்னர்மன்னவன்காதல' என்றார். † பிருகுமனைவி கியாதியென்பாள் அசுரர்க்குப் புகலிடந்தந்து மாயோன் சக்கரத்தால் மாண்டாளென்பது. ‡ ஆசுரரென்றது நீட்டும்வழி நீட்டல்பெற்றது. § போனகம்-உண்டி. $ குமதி-விரோசனனென்னு மசுரன் மகள். ¶ கறங்கிடத்திகிரி என்றும்பாடம்.

|| நாற்றங்கேட்டலுமென்றதிலக்கணை, கொலையென்றது ஐயீற்று ஒவ்வொருமைவினைமுற்று. நாளற்றதெண்ணித் தருமம்பார்த்து விண்ணிலேற்றுங் கூற்றைப்போலாது நாற்றங்கேட்டலுந்தின்ன நயப்பதுநோக்கி, ஓர் கூற்றுண்டோ என்றார். () தீமைமேதையைய என்றும்பாடம்.

ஈறினல்லறம்பார்த்திசைத்தேனிவட்
சீறிநின்றிதுசெப்புகின்றேனலேன்
ஆறிநின்றதறனன்றரக்கியைக்
கோறியென்றெதிரந்தணன்கூறினான். (௬௬)

ஐயனங்கதுகேட்டறனல்லவும்
எய்தினாலதுசெய்கவென்றேவினால்
மெய்யநின்னுரைவேதமெனக்கொடு
செய்கையன்றோவறஞ்செயுமாறென்றான். (௬௭)

* கங்கைத்தீம்புனனாடன்கருத்தையும்
மங்கைத்தீயனையாளும்மனக்கொளாச
செங்கைச்சூலவெந்தீயினைத்தீயதன்
வெங்கட்டீயொடுமேற்செலவீசினாள். (௬௮)

† புதியகூற்றனையாள்புகைந்தேவிய
கதிர்கொண்மூவிலைக்காலவெந்தீமுனி
விதியைமேற்கொண்டுநின்றவன்மேலுவா
மதியின்மேல்வருநாகமெனவந்ததே. (௬௯)

மாலுமக்கணம்வாளியைத்தொட்டதும்
கோலவிற்கால்குனித்ததுங்கண்டிலர்
காலனைப்பறித்தக்கடியாள்விட்ட
சூலமற்றனதுண்டங்கள்கண்டனர். (௭0)

அல்லின்மாரியனையநிறத்தவள்
சொல்லின்மாத்திரையிற்கட ‡ றூர்ப்பதோர்
கல்லின்மாரியைக்கைவகுத்தாளது
வில்லின்மாரியின்வீரன்விலக்கினான். (௭௧)

வேறு.

§ சொல்லொக்குங்கடியவேகச்சுடுசரங்கரியசெம்மல்
அல்லொக்குநிறத்தினாண்மேல்விடுதலும்வயிரக்குன்றக்
கல்லொக்கு $ நெஞ்சிற்றங்காதப்புறங்கழன்றுகல்லாப்
புல்லர்க்குநல்லோர்சொன்னபொருளெனப்போயிற்றன்றே. (௭௨)

---

* கங்கைத்தீம்புனனாடனென்றதிராமனை. தீயானது புனலையவித்தன் முறையாதலின் தீய்புனனாடனென்றும், தீயனையாளுமென்றுங்கூறினார். † சாற்றங்கேட்டலுந் தின்னநயப்பதோர் கூற்றுண்டோ என்றதைவற்புறுத்தற்குப்புதியகூற்றனையாளென்றார். ‡ தூர்ப்பன என்றும்பாடம்.

§ நிறைமொழி என்பதுபற்றிச சொல்லொக்குமெனச சுடுசரத்துக்குவமைகூறினார். $ கல்வியறிவில்லாத புல்லறிவுடையார்க்கு நல்லோர் கூறிய உறுதிமொழி சிறிதும் பயன்படாமையின் 'நெஞ்சிற்றங்காதப் புறங்கழன்று புல்லார்க்கு நல்லோர் சொன்னபொரு' ளென்றுவமை முகத்தாற் கூறினார்.

பொன்னெடுங்குன்றமன்னான்புகர்முகப்பகழியென்னும்
மன்னெடுங்காலவன்காற்றடித்தலுமிடித்துவானில்
கன்னெடுமாரிபெய்யக்கடையுகத்தெழுந்தமேகம்
மின்னொடுமசனியோடும்வீழ்வதேபோலவீழ்ந்தாள். (௭௩)

பொடியுடைக்கானமெங்குங்குருதிநீர்பொங்கவீழ்ந்த
தடியுடையெயிற்றுப்பேழ்வாய்த்தாடகைதலைகடோறும்
முடியுடையரக்கற்கந்நாண்முந்தியுற்பாதமாகப்
படியிடையற்றுவீழ்ந்தவெற்றியம்பதாகையொத்தாள். (௭௪)

கான்றிரிந்தாழியாகத்தாடகைகடினமார்பது
தூன்றியபகழிவாயூடொழுகியகுருதிவெள்ளம்
ஆன்றவக்கானமெல்லாமாயினதந்திமாலைத்
தோன்றியசெக்கர்வானந்தொடக்கற்றப்போதொத்ததே. (௭௫)

வாசநாண்மலரோனன்னமாமுனிபணிமறுத்த
காசலாங்கனகப்பைம்பூட்காகுத்தன்கன்னிப்போரில்
கூசிவாளரக்கர்தங்கள்குலத்துயிர்குடிக்கவஞ்சி
ஆசையாலுழலுங்கூற்றுஞ்சுவைசிறிதறிந்ததன்றே. (௭௬)

யாமுமெம்மிருக்கைபெற்றோமுனக்கிடையூறில்லை
கோமகற்கினியதெய்வப்படைக்கலங்கொடுத்தியென்று
மாமுனிக்குரைத்துப்பின்னர் * விற்கொண்டமழையனான்மேல்
பூமழைபொழிந்துவாழ்த்திவிண்ணவர்போயினாரே. (௭௭)

எ-வது, தாடகைவதைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௱௯.

---

## அ-வது, வேள்விப்படலம்.

விண்ணவர்போயபின்றைவிரிந்தபூமழையினாலே
தண்ணெனுங்கானநீங்கித்தாங்கருந்தவத்தின்மிக்கோன்
மண்ணவர்வறுமைநோய்க்குமருந்தனசடையன்வெண்ணெய்
அண்ணறன்சொல்லேயன்னபடைக்கலமருளினானே. (௧)

ஆறியவறிஞன்கூறியளித்தலுமண்ணறன்பால்
ஊறியவுவகையோடும்பர்தம்படைகளெல்லாம்
தேறியமனத்தான்செய்தநல்வினைப்பயன்களெல்லாம்
மாறியபிறப்பிற்றேடிவருவபோல்வந்தவன்றே. (௨)

* இந்திரவில்லொடுதோன்று மேகம்போலெய்தியமைநோக்கி 'விற்கொண்டமழையனா' னென்றார்.

மேவினம்பிரிதலாற்றேம்வீரநீவிதியினெம்மை
ஏவினசெய்துநிற்றியிளையவன்போலவென்று
தேவர்தம்படைகள்செப்பசெவ்விதென்றவனுநேரப்
* பூவைபோனிறத்தினாற்குப்புறத்தொழில்புரிந்தவன்றே. (௩)

இனையனநிகழ்ந்தபின்னர்க்காவதமிரண்டுசென்றார்
அனையவர் § கேட்கவாண்டோராரவம்வந்தணுகித்தோன்ற
முனைவவீதியாவதென்றமுன்னவன்வினவப்பின்னர்
வினையறநோற்றுநின்றமேலவன்விளம்பலுற்றான். (௪)

மானசமடுவிற்றோன்றிவருதலாற்சரயுவென்றே
மேன்முறையமரர்போற்றும்விழுநதியதனினோடும்
ஆனகோமதிவந்தெய்துமரவமதென்னவப்பாற்
போனபின்பவங்கடீர்க்கும்புனிதமாநதியையுற்றார். (௫)

சுரர்தொழுதிறைஞ்சற்கொத்ததாநதியாவதென்று
† வரமுனிதன்னையண்ணல்வினவுறமலருள்வைகும்
பிரமனன்றளித்தவென்றிப்பெருந்தகைக்குசனென்றோதும்
அரசர்கோன்மனைவிதன்பாலளித்தவர்நால்வராகும். (௬)

குசன்குசநாபன்கோதில்குணத்தினாதூர்த்தன்கொற்றத்
திசைகெழுவசுவென்றோதுமிவர்பெயரிவாகடம்பல்
குசன்கவுசாம்பிநாபன்குளிர்மகோதயமாதூர்த்தன்
வசையிறன்மவனமற்றைவசுகிரிவிரசம்வாழ்ந்தார். (௭)

அவர்களிற்குசநாபற்கேயையிருபதின்மரஞ்சொல்
துவரிதழ்த்தெரிவைநல்லார்தோன்றினர்வளருநாளில்
இவர்பொழிற்றலைக்கணுய்த்தெய்துழிவாயுவெய்திக்
கவர்மனத்தனனாயந்தக்கன்னியர்தம்மைநோக்கி. (௮)

‡ கொடித்தனிமகரங்கொண்டோன்குனிசிலைசரத்தானொந்தேன்
வடித்தடங்கண்ணீரென்னைமணத்திரென்றுரைப்பவெந்தை
அடித்தலத்துரைத்துநோடாத்திடினணைதுமென்ன
ஒடித்தனன்வெரிநைவீழ்ந்தாரொளிவளைமகளிரெல்லாம். (௯)

சமிரணனகன்றபின்னர்த்தையலார்தவழ்ந்துசென்றே
அமிர்துகுகுதலைமாழ்கியரசன்மாட்டுரைப்பவன்னான்
நிமிர்குழன்மடவார்த்தேற்றிநிறைதவன்சூளியென்னும்
திமிரறுபிரமதத்தற்களித்தனன்றிருவனாரை. (௧௦)

* காயாம்பூவையொத்த நிறத்தனாகலின் 'பூவைபோனிறத்தினா' னென்றார். § காணவாண்டோ என்றும்பாடம்.
† வரமுனி-கோசிகன்.
‡ கொடித்தனிமகரங்கொண்டவன்-மன்மதன்.

ஐயமில்சிந்தையனந்தணர்தம்பால்
வையமும்யாவும்வழங்கவலித்தான். (க௯)

ஆயதறிந்தனர்வானவரந்நாள்
மாயனைவந்துவணங்கியிரந்தார்
தீயவன்வெந்தொழிறீரெனநின்றார்
நாயகனும்மதுசெய்யநயந்தான். (௨0)

வாமனாவதாரம்.

காலநுனித்துணர்காசிபனென்னும்
வாலறிவற்கதிதிக்கொருமகவாய்
நீலநிறத்துநெடுந்தகைவந்தோர்
* ஆலமர்வித்தினருங்குறளானான். (௨௧)

முப்புரிநூலினன்முஞ்சியன்விஞ்சை
கற்பதொர்நாவனனற்படிகையன்
† அற்புதனற்புதரேயறியுநான்
சிற்பதமொப்பதொர்மெய்க்கொடுசென்றான். (௨௨)

அன்றவன்வந்ததறிந்துலகெல்லாம்
வென்றவன்முந்தியெதிர்கொண்டான்
நின்றனினந்தணரில்லைநிறைந்தாய்
என்றனினுய்ந்தவர் ‡ யாருளரென்றான். (௨௩)

ஆண்டகை § யவ்வகைகூறவறிந்தோன்
வேண்டினர்வேட்கையின்மேற்படவீசி
$ நீண்டகையாயினிநின்னுழைவந்தோர்
மாண்டவரல்லவர்மாண்பிலரென்றான். (௨௪)

சிந்தையுவந்தெதிரென்செயவென்றான்
அந்தணனோரடிமண்ணருளுண்டேல்
வெந்திறலாயிதுவேண்டுமெனாமுன்
தந்தெனனென்றனன்வெள்ளிதடுத்தான். (௨௫)

---

* ஆலமர்வித்தி னருங்குறளானான்—ஆலின் சிறுவித்துப்போலச் சிறுகுறள் வடிவமானான் என்றதென்க. அதன் வித்து மிகச் சிறியதேனும் யானை, தேர், குதிரை, காலாள் என்னு நால்வகைப்படைக்குந் தங்க நிழல்பயப்பதுபோல முன்னர்ச் சிறுகுறளாகச்சென்று பின் நீண்டமையி னவ்வா றுவமைகூறினா. அமர்-சிறுமை, இதனை 'அமர்மெய்யுடையவனானான்' என்றிவ்வாசிரியர் கூறுதலுங்காண்க.

† மெய்யுணர்ச்சியுடையாராற் காணப்படுவனாகலின் 'அற்புதரேயறியு' மென்றும், அவர்க்குத்தான் இறப்ப நுண்ணிய ஞானத்திருமேனி காட்டலின் 'சிற்பதமொப்பதொர மெய்க்கொடு சென்றான்' என்றுங் கூறினார். ‡ யாரினியென்றான் என்றும்பாடம். § அவ்வழிகூற என்றும்பாடம். $ ஈகைக்குணமுடைமையிற் சிறந்தோனாகலின் 'நீண்டகையா' யென்றும், நின்னுழையிரந்தார் மாட்சிமையுடையராகலின் 'மாண்டவ' ரென்றும், அல்லாதாரன்ன ரல்லராகலின் 'அல்லவர்மாண்பில' ரென்றுங் கூறினார்.

கண்டதிறத்திதுகைதவமைய
கொண்டனிறக்குறளென்பதுகொள்ளேல்
* அண்டமுமுற்றுமகண்டமுமேனாள்
உண்டவனுமிதுணர்ந்துகொளென்றான். (௨௬)

நினக்கிலையென்கைநிமிர்ந்திடவந்து
தனக்கியலாவகைதாழ்வதுதாழ்வில்
† கனக்கரியானதுகைத்தலமென்னின்
எனக்கிதன்மேனலம்யாதுகொலென்றான். (௨௭)

துன்னினர்துன்னலரென்பதுசொல்லார்
முன்னியநன்னெறிநூலவர்முன்னவ்
‡ துன்னியதானமுயர்ந்தவர்கொள்க
என்னினிவன்றனையாவருயர்ந்தார். (௨௮)

§ வெள்ளியையாதல்விளம்பினைமேலோர்
வள்ளியராகவழங்குவதல்லால்
எள்ளுநவென்சிலவின்னுயிரேனும்
$ கொள்ளுதல்தீதுகொடுப்பதுநன்றால். (௨௯)

மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர்கண்மாயா
¶ ஏந்தியகைகொடிரந்தவரெந்தாய்
வீந்தவரென்பவர்வீந்தவரேனும்
ஈந்தவரல்லதிருந்தவர்யாரே. (௩௦)

அடுப்பவரும்பழிசெய்தவரல்லர்
கொடுப்பவர்முன்புகொடேலெனநின்று
தடுப்பவரேபகைதம்மையுமன்னார்
கெடுப்பவரன்னதொர்கேடிலையென்றான். (௩௧)

கட்டுரையிற்றமைகைத்துளபோழ்தே
இட்டிசைகொண்டறனெய்தமுயன்றோர்
உட்டெறுவெம்பகையாவது || லோபம்
விட்டிடலென்றுவிலக்கினர்தாமே. (௩௨)

---

* உலகமுண்ட பெருவாயனாகலின் 'அண்டமுமுற்று மகண்டமு மேனாளுண்டவ' னென்றனரென்க. † கனக்கரியான்-மேகம்போலுங்கரிய மேனியன். ‡ தக்குழியீதலே நன்றென்பதுபற்றி 'உன்னியதானமுயர்ந் தவர்கொள்க' என்றார்.

§ வெள்ளியை-வெள்ளியென்னும் பெயரையுடையை, எனவும் வெள்ளறிவையுடைய எனவும் இருபொருள்படநின்றது நேரே ஆசிரியனாதலின் சிலேடையாகக்கூறினான். $ கொள்ளுதல் தீதுகொடுப்பதுநன்று என்பதனை 'நல்லாறெனினுங் கொளறீது மேலுலக மில்லெனினு மீதலே நன்று' என்ற குறட்பொருளை யுட்கொண்டது.

¶ செத்தாரின் வேறல்லராதலின் 'ஏந்தியகைகொ டிரந்தவர் வீய்ந் தவ' ரென்றும் புகழுடம்போடழியாதிருப்பது கருதி 'வீய்ந்தவரேனும் ஈந்தவரல்ல திருந்தவர்யாரே' யென்றுங்கூறினர். || லோபம் ஒருவர்க் கிருக்கினிருமையும் கெடுக்குமாயுத மென்க.

வேறு.

எடுத்தொருவருக்கொருவரீவதனின்முன்னே
தடுப்பது * நினக்கழகிதோதகவில்வெள்ளி
† கொடுப்பதுவிலக்குகொடியோயுனதுசுற்றம்
உடுப்பதுவுமுண்பதுவுமின்றிவிடுகின்றாய். (௩௩)

வேறு.

முடியவிம்மொழியெலாமொழிந்துமந்திரி
கொடியனென்றுரைத்தசொலொன்றுங்கொண்டிலன்
அடியொருமூன்றுநீயளந்துகொள்கென
நெடியவன்குறியகைநீரினீட்டினான். (௩௪)

‡ கயந்தருநறும்புனல்கையிற்றீண்டலும்
பயந்தவர்களுமிகழ்குறளன்பார்த்தெதிர்
வியந்தவர்வெருக்கொளவிசும்பினோங்கினான்
உயர்ந்தவர்க்குதவியவுதவியொப்பவே. (௩௫)

நின்றகான்மண்ணெலாநிரப்பியப்புறம்
சென்றுபாவிற்றிலைசிறிதுபாரென
ஒன்றவானகமெலாமொடுக்கியும்பரை
வென்றகான்மீண்டதுவெளிபெறாமையே. (௩௬)

உலகெலாமுள்ளடியடக்கியோரடிக்
கலகிலாதவ்வடிக்கண்பன்மெய்யதாம்
இலகுலாந்துழாய்முடியேகநாயகன்
சிலகுலாந்தோளினாய்சிறியன்சாலவே. (௩௭)

உரியதிந்திரற்கிதென்றுலகமீந்துபோய்
விரிதிரைப்பாற்கடற்பள்ளிமேவினான்
கரியவனுலகெலாங்கடந்ததாளிணை
திருமகள்கரந்தொடச்சிவந்துகாட்டவே. (௩௮)

ஆதலாலருவினையறுக்குமாரிய
காதலாற்கண்டவர்பிறவிகாண்குறார்
வேதநான்முறைமையால்வேள்விமுற்றுவேற்
கீதலாதில்லைவேறிருக்கற்பாலதே. (௩௯)

ஈண்டிருந்தியற்றுவென்யாகம்யானென
நீண்டபூம்பழுவத்துநெறியினெய்திப்பின்

---

* நினக்கிதழகோதகை என்றும்பாடம்.

† கொடுப்பதுவிலக்கு கொடியோயென்பதனை 'கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ முண்பதூஉமின்றிக்கெடும்' என்பதனுணர்க.

‡ புதுப்புனலென்றது கருதி 'கயந்தருநறும்புன' லென்றார்.

வேண்டுவகொண்டுதன்வேள்விமேவினான்
காண்டகுகுமரனைக்காவலேவியே. (௪0)

எண்ணுதற்காக்கரிதிரண்டுமூன்றுநாள்
விண்ணவர்க்காக்கியமுனிவன்வேள்வியை
மண்ணினைக்காக்கின்றமன்னன்மைந்தர்கள்
கண்ணினைக்காக்கின்றவிமையிற்காத்தனர். (௪௧)

காத்தனர்கிரிகின்றகாலையீரரில்
மூத்தவன்முழுதுணர்முனியைமுன்னிநீ
தீத்தொழிலியற்றுவரென்றதீயவா
* எத்தருங்குணத்திறையவரென்றென்றனன். (௪௨)

வார்த்தைமாறுரைத்திலன்முனிவன்மௌனியாய்ப்
போர்த்தொழிற்குமரனுங்கோமுகம்போர்த்தபின்
பார்த்தனன்விசும்பினைப் † பருவமேகம்போல்
ஆர்த்தனரிடித்தனரசனியரேசவே. (௪௩)

எய்தனரொறிமரமரியுங்கருமாய்
பெய்தனர்பெருவரைபிடுகிட்டினர்
வைதனர்தெழித்தனராமழுக்கொண்டோச்சினர்
செய்தனரொன்றலசியமாயமே. (௪௪)

மானகுபடைகலமுருத்துட்சின
கானகமறைத்தனகாலமாரிபோல்
மீனகுதிரைக்கடல்விசும்பும்போர்த்தென
வானகமறைத்தனவனைத்தசேனையே. (௪௫)

‡ வில்லொடுமின்னுவாண்மிடைந்துலாவிடப்
பல்லியங்கடிப்பினிடிக்கும்பல்படை
ஒல்லெனவுரறியவூழிப் § பேர்ச்சியின்
வல்லைவந்தெழுந்ததோர்மழையும்போன்றவே. (௪௬)

கவருடையெயிற்றினாகடித்தவாயினர்
துவர்நிறப்பங்கியர்சுழல்கட்டீயினர்
பவர்சடையந்தணைபணித்ததீயவர்
இவரெனவிலக்குவற்கிராமன்காட்டினான். (௪௭)

கண்டவக்குமரனுங்கடைக்கண்டீயுக
விண்டனைநோக்கித்தன்வில்லைநோக்கினான்

---

* எத்தவருங்குணத்திறையென்றது ஈறுதொகுக்கப்பட்டது.
† பருவமேகம்-கார்காலமேகம்.
‡ வில்லொடுபெயழிவாண் என்றும்பாடம்.
§ பேர்ச்சியுள் என்றும்பாடம்.

அண்டர்நாயகவினிக்காண்டியீண்டவர்
துண்டம்வீழ்வனவெனத்தொழுதுசொல்லினன். (சஅ)

தாமவேலரக்கர்தந்திணமுஞ்சோரியும்
ஓமவெங்கனலிடையுகுமென்றன்னியத்
தாமரைக்கண்ணனுஞ்சரங்களேகொடு
கோமுனியிருக்கையோர்கூடமாக்கினன். (சக)

நஞ்சடவெழுதலுநடுங்கிநாண்மதிச
செஞ்சடைக்கடவுளையடையுந்தேவர்போல்
வஞ்சனையரக்கரைவெருவிமாதவர்
அஞ்சனவண்ணநின்னபயம்யாமென்றார். (ருO)

கவித்தனன்கரதலநகலநகனீரெனச
செவித்தலநிறத்தினன்சிலையின்றெய்வநாண்
புவித்தலநகுருதியின்புணரியாக்கினன்
குவித்தனனரக்கர்தஞ்சிரத்தின்குன்றமே. (ருக)

திருமகனுமகன் * றெய்வவாளிதான்
வெருவருதாடகைபயந்தவீரர்கள்
இருவரிலொருவனைக்கடலிலிட்டதந்
கொருவனையந்தகபுரத்தினுய்த்ததே. (ருஉ)

துணர்த்தபூந்தொடையலான்பகழிதூவினன்
கணத்திடைவிசும்பினைக்கவித்துத்தூர்த்தலால்
பிணத்திடைநடந்திவர்பிடிப்பரீண்டெனா
உணர்த்தினரொருவர்முன்னொருவரோடினார். (ருங)

ஓடினவரக்கரையுருமின்வெங்கணை
கூடின † குறைத்தலைமிறைத்துக்கூத்துநின்
றாடினவலகையுமையன்கீர்த்தியைப்
பாடினபறந்தனபறவைப்பந்தரே. (ருச)

பந்தரைக்கிழித்தனபரந்தபூமழை
அந்தரதுந்துமிமுகிலினார்த்தன
இந்திரன்முதலியவமரரீண்டினார்
சுந்தரவில்லியைத்தொழுதுவாழ்த்தினார். (ருரு)

வேறு.

புனிதமாதவராசியின்பூமழைபொழிந்தார்
அனையகானத்துமரங்களுமலர்மழைசொரிந்த

* காந்தருவக்கணை, அக்கினிக்கணை, வாயுக்கணை, இவற்றை முறையே சுபாகு, மாரீசன், இவரையொழித்ததற்கு அரக்கர்மேல் விடுத்தலைக் காண்க.

† குறைத்தலை-கவந்தம்.

முனியுமவ்வழிவேள்வியைமுறைறமையின்முற்றி
இனியசிந்தையனிராமனுக்கினையனவிசைத்தான். (௩௬)

பாக்கியம்மெனக்குளதெனநினைவுறும்பான்மை
போக்கிநிற்கிதுபொருளெனவுணர்கிலென்புவனம்
* ஆக்கிமற்றவையகிலமுமணிவயிற்றடக்கிக்
காக்குநீயொருவேள்விகாத்தனையெனுங்கருத்தே. (௩௭)

என்றுகூறியபின்னரவ்வெழின்மலர்க்கானத்
தன்றுதானுறைந்தருந்தவமுனிவரோடிருந்த
குன்றுபோற்குணத்தானைநிர்கோசலைக்குரிசில்
இன்றியான்செயும்பணியென்சொல்பணியெனவிசைத்தான். (௩௮)

அரியயான்சொலினையரிற்கரியதொன்றில்லை
† பெரியகாரியமுளவவைமுடிப்பதுபின்னர்
விரியும்வார்புனன்மருதஞ்சூழ்மிதிலையர்கோமான்
புரியும்வேள்வியுங்காண்டுநாமெழுகென்றுபோனார். (௩௯)

அ-வது, வேள்விப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௬௭௮.

## ௯-வது அகலிகைப்படலம்.

அகலிகையின் சாபவிமோசனத்தின் வரலாறுகளைக் கூறுகின்றபடலம்.

அலம்புமாமணியாரத்தோடகிலலைபுளின
நலம்பெய்பூண்முலைநாகிளவஞ்சியாமருங்குற்
புலம்புமேகலைப்புதுமலர்ப்புனையறற்கூந்தற்
சிலம்புசூழுங்காற்சோணமாந்தெரிவையைச்சேர்ந்தார். (௧)

நதிக்குவந்தவரெய்தலுமருணன்றனயனக்
கதிக்குமுந்துறுகலினமான்றேரொடுங்கதிரோன்
உதிக்குங்காலையிற்றண்மைசெய்வான்றனதுருவில்
கொதிக்கும்வெம்மையையாற்றுவான்போற்கடற்குளித்தான். (௨)

கறங்குதண்புனற்கடிநெடுந்தாளுடைக்கமலத்
‡ தறங்கொணுண்மலர்க்கோயில்களிதழ்க்கதவடைப்பப்
பிறங்குதாமரைவனம்விட்டுப்பெடையொடுகளிவண்
டிறங்குகின்றதோர்நறுமலர்ச்சோலைபுக்குறைந்தார். (௩)

* 'ஏருருமிறையோனு நான்முகனுமிமையோருங் - கூருருந்தனி யுடம்ப' னாகலின் 'புவனமாக்கிமற்றவையகிலமுந் தன்வயிற்றடக்கிக் காக்குநீ' என்றார்.

† ஈசன்வில்லொடித்தன்முதலிய பற்றிப் 'பெரியகாரியமுள' என்றார். ‡ அவ்வப்பருவங்களின் மலருமியல்புநோக்கி 'அறங்கொணுண்மல' ரென்றார்.

இனையசோலைமற்றியாதெனவிராகவன்வினவ
வினையெலாமறநோற்றவன்விளம்புவான்மேனாள்
தனயரானவர்க்கிரங்கியேகாசிபன்றனது
மனையுளாள்தவம்புரிந்தனளிவணெனவலித்தான். (௪)

அண்டகோளகைக்கப்புறத்தென்னையாளுடைய
கொண்ட * நீள்பதத்தெய்தியோர்விஞ்சையர்கோதை
புண்டரீகமென்பதத்தியைப்புகழ்ந்தனள்புகழ
வண்டருமதுமாலைகைக்கொடுத்தனண்மகிழ்ந்து. (௫)

அன்னமாலையையாழிடைப்பிணித்தயனுலகம்
கன்னிமீடலுங் † கசட்டுறுமுனியெதிர்காணா
என்னையாளுடைநாயகிக்கிசையெடுப்பவளென்
றன்னள்தாளிணைவணங்கிநின்றேத்தலுமனையாள். (௬)

உலகம்யாவையும்படைத்தளித்துண்டிடுமொருவன்
இலகுமார்பகத்திருந்துயிர்யாவையுமீன்ற
திலகவாணுதல்சென்னியிற்சூடியதெரியல்
அலகின்மாமுனிபெறுகெனவளித்தனளளியால். (௭)

தெய்வநாயகிசென்னியிற்சூடியதெரியல்
ஐயயான்பெறப்புரிந்ததெத்தவமெனவாடி
வெய்யமாமுனிசென்னியிற்சூடியேவினைபோய்
உய்யுமாறிதென்றுவந்துவந்தும்பர்நாடடைந்தான். (௮)

பெய்யுமாமுகில்வெள்ளியம்பிறங்கன்மீப்பிறழும்
செய்யதாமரையாயிரமலர்ந்துசெங்கதிரின்
மொய்யசோதியைமிலைச்சியமுறைமைபோன்றொளிரும்
மெய்யினோடையிராவதக்களிற்றின்மேல்விளங்க. (௯)

அரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியனங்கன்
சரம்பெய்தூணியிற்றளிரடிநூபுரந்தழைப்பக்
கரும்பையுஞ்சுவைகைப்பித்தகுதலையர்விளரி
நிரம்புபாடலோடாடினர்வீதிகணெருங்க. (௧௦)

நீலமால்வரைதவழ்தருகதிர்நிலாக்கற்றை
போலவேயிருபுடையினுஞ்சாமரைபுரளக்
கோலமாமதிகுறைவறநிறைந்தொளிகுலாவ
மேலிவர்ந்தெனவெள்ளியந்தனிக்குடைவிளங்க. (௧௧)

---

* நீள்பதம்-அந்தமிலின்பவீடு. † கசட்டுறுமுனி, வெய்யமாமுனி, வெஞ்சொன்மாமுனி, மறநிலாமுனி, தனையொவாதவன், கொடியோன் எனக்கூறியன-துருவாசனை என்க.

தழங்குபேரியுங்குறட்டொடுபாண்டிலுஞ்சங்கும்
வழங்குகம்பலைமங்கலகீதத்தைமறைப்ப
முழங்குநான்மறைமூரிநீர்முழக்கெனவுலகை
* விழுங்குமாவரும்விழாவணிகண்டுளம்வியந்தான். (கஉ.)

தனையொவாதவன்மகிழ்ச்சியால்வாசவன்றன்கை
வனையுமாலையைநீட்டலுந்தோட்டியால்வாங்கித்
துனைவலத்தயிராவதத்தெருத்திடைத்தொடுத்தான்
† பனைசெய்கையிறுற்பறித்தடிப்படுத்ததப்பகடு. (கங)

கண்டமாமுனிவிழிவழியொழுகுவெங்கனலால்
அண்டகூடமுஞ்சாம்பராயொழியுமென்றழியா
விண்டுநீங்கினர்விண்ணவரிருசுடர்மீண்ட
எண்டிசாமுகநிருண்டனசுழன்றதெவ்வுலகும். (கச)

புகையெழுந்தனவுயிர்தொறுமெயில்பொடித்தவனில்
நகையெழுந்தனசிவந்தனபுருவநன்னுதலில்
சிகையெழுஞ்சுடர்விழியினைசனியுந்திகைப்ப
மிகையெழுந்திடுசதமககேளெனவெகுண்டான். (கரு)

பூதநாயகன்புவிமகளுயகன்பொருவில்
வேதநாயகன்மார்பகத்தினிதுயிற்றிருக்கும்
ஆதிநாயகிவிருப்புறத்தெரியல்கொண்டணைந்து
மாதராள்வயின்பெற்றனன்முயன்றமாதவத்தால். (கசு)

இன்றுநின்பெருஞ்செல்விகண்டுவகையினீந்த
மன்றலந்தொடையிகழ்ந்தனைநினதுமாநிதியும்
ஒன்றலாதபல்வளங்களுமுவரிபுக்கொளிப்பக்
குன்றிநீதுயருறுகெனவுரைத்தனன்கொடியோன். (கஎ)

ஆரமடந்தையர்கற்பகநவநிதியமிர்தம்
‡ சுரபிவாம்பரிமதமலைமுதலியதொடக்கற்
றொருபெரும்பொருளின்றியேயுவரிபுக்கொளிப்பு
வெருவியோடினவெண்ணெய்வாழ்கண்ணன்மேவாரின். (கஅ)

வெய்யமாமுனிவெகுளியால்விண்ணகமுதலாம்
வையம்யாவையும்வறுமைநோய்நலிதரவானோர்
தையல்பாகனுஞ்சதுமுகக்கடவுளுங்கூடிச்
செய்யதாமரைத்திருமறுமார்பனைச்சேர்ந்தார். (க௯)

---

* விழுங்குமாறு என்பது கடைக்குறைந்துநின்றது.

† பனைசெய்கை என்புழிசெய உவமவுருபு.

‡ சுரபி-காமதேனு, வாம்பரி என்றது உச்சைசிரவத்தை, மதமலை-ஐராவதம்.

வெஞ்சொன்மாமுனிவெகுளியால்விளைந்தமைவிளம்பிக்
கஞ்சநாண்மலர்க்கிழவனுங்கடவுளர்பிறரும்
தஞ்சமில்லைநின்சரணமேசரணெனச்சலியா
தஞ்சலஞ்சலென்றுரைத்தனனுலகெலாமளந்தோன். (உ0)

மத்துமந்தரம்வாசுகிகடைகயிறடைதூண்
மெத்துசந்திரன்சுராசுரர்வேறுவேறுள்ள
கொத்திரண்டுபால்வலிப்பவரோடதிகொடுத்துக்
கத்துவாரிதிமறுகுறவமிழ்தெழக்கடைமின். (உக)

யாமுமவ்வயின்வருதுநீர்கதுமெனவெழுந்து
போமினென்றருள்புரிதலுமிறைஞ்சினர்புகழ்ந்தார்
* நாமமின்றெனக்குனித்தனர்நல்குரவொழிந்த
தாமெனும்பெருங்களிதுளக்குறுதலாலமரர். (உஉ)

மலைபிடுங்கினர்வாசுகிபிணித்தனர்மதியை
நிலைபெறும்படிநட்டனரோடதிநிரைத்தார்
அலைபெறும்படிபயோததிகடைந்தனரவனி
நிலைதளர்ந்திடவனந்தனுங்கீழுறநெளித்தான். (உங)

திறல்கொளாமையாய்முதுகினில்மந்தரந்திரிய
விறல்கொளாயிரந்தடக்கைகள்பரப்பிநீவலிப்ப
மறனிலாமுனிவெகுளியின்மடிந்தனவரவே
† அறனிலார்மனத்தடையலாநெடுந்தகையமைத்தான். (உச)

இறந்துநீங்கினயாவையுமெம்பிரானருளாற்
பிறந்தவவ்வயின்சுராசுரர்தங்களிற்பிணங்கச்
சிறந்தமோகினிமடந்தையாலவுணர்தஞ்செய்கை
துறந்துமாண்டனராரமிர்தமரர்கள்துய்த்தார். (உரு)

வெருவுமாலமும்பிறையும்வெவ்விடையவற்கீந்து
தருவும் ‡ வேறுளதகைமையுஞ்சதமகற்கருளி
மருவுதொல்பெருவளங்களும்வேறுறவழங்கித்
திருவுமாரமுமணிந்தனன்சீதரமூர்த்தி. (உசா)

அந்தவேலையிற்றிதிபெருந்துயருழந்தழிவாள்
வந்துகாசிபன்மலரடிவணங்கியென்மைந்தர்
இந்திராதியர்புணர்ப்பினாலிறந்தனரெனக்கோர்
மைந்தனீயருளவர்தமைமடித்தலுக்கென்றாள். (உஎ)

* நாம்-அச்சம் அது அம்மு முச்சாரியை பெற்றது. † அறன் இலா மனத்து அடையலா நெடுந்தகை என்றது திருமாலை, அறன் நில்லா மனத்தெனக் கோடலுமமையும். ‡ வேறுளதகைமையுமென்றது சிந்தாமணி காமதேனு அமுதம் ஐராவத முதலியனவென்க.

என்றுகூறலுமகவுணக்களித்தனமினிநீ
சென்றுபாரிடைப் * பருவமோராயிரந்தீர
நின்றுமாதவம்புரிதியேனினைவுமுற்றுதியென்
றன்றுகூறிடப்புரிந்தனளருந்தவமனையாள். (௨௮)

கேட்டவாசவனன்னவட்கடிமையிற்கிடைத்து
வாட்டமாதவத்துணர்ந்தவள்கயிற்றுறுமகவை
வீட்டியேயெழுகூறுசெய்திடுதலுமிம்ப
நாட்டநீர்தரமருத்தெனுநாமமுநவின்றான். (௨௯)

ஆயதிவ்விடமவ்விடமலிர்மதியணிந்த
தூயவன்றனைக் † கரிவையிற்றோன்றியதொல்லை
வாயுவும்புனற்கங்கையும்பொறுக்கலாவலத்த
‡ சேய்வளர்ந்தருள்சரவணமென்பதுந்தெரித்தான். (௩0)

காலன்மேனியிற்கருகிருள்கடிந்துலகளிப்பான்
நீலவார்கலித்தேரொடுநிறைநகதிர்க்கடவுள்
மாலின்மாமணியுந்தியினயனொடுவந்த
மூலதாமரைமுழுமலர்முளைத்தெனமுளைத்தான். (௩௧)

அங்குநின்றெழுந்தயன்முதன்மூவருமனையார்
செங்கணேற்றவன்செறிசடைப் § பழுவத்திழிநறைத்தேன்
பொங்குகொன்றையிற்றொழுகலாற் $ பொன்னியைப்பொருவும்
கங்கையென்னுமக்கரைபொருதிருநதிகண்டார். (௩௨)

இந்தமாநதிக்குற்றுளதகைமையயாவும்
எந்தைகூறுகென்றிராகவன்வினவுறவெனையாள்
மைந்தநின்றிருமரபுளானயோத்திமாநகர்வாழ்
விந்தைசேர்புயஞ்சகரனிம்மேதினிபுரந்தோன். (௩௩)

விறல்கொள்வேந்தனுக்குரியவரிருவரில்விதர்ப்பை
பொறையினல்கியபோசணனென்றொருபுதல்வன்
பறவைவேந்தனுக்கிளையமென்சுமதிமுற்பயந்த
அறனின்மைந்த ¶ ராறயுதர்மற்றஞ்சுமானவன்சேய். (௩௪)

திண்டிறற்புனைசகரனுந்தனயர்சேவகந்தான்
கண்டுமுற்றிய || வயமகம்புரிதலுங்கனன்று

---

* பருவம்-ஆண்டு. † அரிவை-கண்டு மலையரையன்மகள்; குமைவயில் என்றும் பாடம். ‡ சேய்-முருகன். § பழுவம்-காடு.

$ பொன்னியைப் பொருவுங் கங்கைஎன்றார் 'கங்கையிற்புனிதமாய காவிரி' எனப்பெரியாரும் பணித்தலினென்க.

¶ ஆறயுதர்-அறுபதினாயிரம்பேர். அயுதம்-பதினாயிரம்.

|| அயமகம்-பரிமேதம். கபிலனதிடையினில் எனயுருபின் மேலுருபுவந்தமையை 'நிலவார் நிலமிசைமேல்' என வருதலானுமமைத்துக் கொள்க. அயம்-குதிரை, மேதம்-கொலை.

வண்டுதுற்றதார்வாசவற்குணர்த்தினர்வானோர்
ஒண்டிறற்பரிகபிலனதிடையினிலொளித்தான். (௩௫)

வாவுவாசிபின்சென்றனனஞ்சுமான்மறுகிப்
பூவினோரிடமின்றியேயாடினன்புகுந்து
தேவர்கோமகன்கரந்தமையறிந்திலன்திகைத்து
மேவு * தாதைதன்றாதைபாலுரைத்தனன்மீண்டு. (௩௬)

கேட்டவேந்தனுமதலையர்க்கம்மொழிகிளத்த
வாட்டமீக்கொளச்சகரர்கள்வடவையின்மறுகி
நாட்டம்வெங்கனல்பொழிதரநானிலந்தடவித்
தோட்டு † நுங்கினர்புவியினைப்பாதலந்தோன்ற. (௩௭)

நூறியோசனையகலமுமாழமுமடங்கக்
கூறுசெய்தனரென்பரால்வடகுணதிசையின்
ஏறுமாதவக்கபிலன்பிணியுளிகண்டெரியிற்
சீறிவைதனர்செருக்கினர்நெருக்கினர்செறுத்தார். (௩௮)

மூளும்வெஞ்சினத்தருந்தவன்முனிந்தெரிவிழிப்பப்
‡ பூளைசூடிதனகையினிலெயில்பொடிந்தனபோல்
ஆளுமைந்தராறயுதருஞ்சாம்பராயவிந்தார்
வேள்விகண்டநல்வேந்தனுக்குரைத்தனர்வேகர். (௩௯)

உழைத்துவெந்துயர்க்கூறுகாண்கிலனுணர்வொழியா
தழைத்துமைந்தனன்மைந்தனையவர்கழிந்தனரேல்
இழைத்தவேள்வியின்றிழப்பதோவெனவவனெழுந்து
தழைத்தமாதவக்கபிலன்வாழ்பாதலஞ்சார்ந்தான். (௪௦)

விண்டுநீங்கினருடலுகுபிறங்கல்வெண்ணீறு
கண்டுதுண்ணெனுமனத்தினன்கபிலமாமுனிதன்
புண்டரீகமென்றாடொழுதெழுந்தனன்புகலக்
கொண்டுபோகநின்னிவுளியென்றுற்றதுங்குறித்தான். (௪௧)

பழுதிலாதவனுரைத்தசொற்கேட்டலும்பரிவால்
தொழுதுவாம்பரிகொணர்ந்தவிசுரர்களுக்கீயா
முழுதும்வேள்வியைமுற்றுவித்தரசனுமுடிந்தான்
§ எழுதுகீர்த்தியாய்மைந்தனுக்கரசியலீந்து. (௪௨)

---

* தாதைதன்றாதையென்றது சகரனை.

† நுங்குதல்-விழுங்குதல்.

‡ பூளைசூடிதனகையினிலெயில் பொடிந்தனபோல் - சிவபிரானது நகையாற் புரம் பொடிபடுத்தமைபோல்.

§ முற்றுந்துறந்த முனிவரும் விரும்பும் புகழினையுடையனாதலின் இராமனை எழுதுகீர்த்தியா யென்றார்.

பகீரதன் வரலாறு.

சகரர்தொட்டலாற்சாகரமெனப்பெயர்தழைப்ப
மகரவாரிதிசிறந்ததுமகிதலமுழுதும்
நிகரின்மைந்தனேபுரந்தனனிவனெடுமரபில்
பகிரதன்னெனும்பார்த்திபன்வந்தனன்பரிவால். (௪௩)

உலகம்யாவையும்பொதுவறத்திகிரியையுருட்டி
இலகுமன்னவனிருந்தூழியிறந்தமைவினவ
அலகிறூன்முனியுரைத்திடக்கேட்டனனரசன்
திலகமண்ணுறவணங்கிநின்றொருமொழிசெப்பும். (௪௪)

* கொடியமாமுனிவெருளியின்மடிந்தவெங்குரவர்
முடியநீணிரயத்தினிலழுந்திடுமுறைமை
கடியுமாறெனக்கருந்தவமதற்குறாகருமம்
அடிகள்சொற்றுகவென்றலுமந்தணனறைவான். (௪௫)

வையமாளுடைமன்னவர்மன்னவமடிந்தோர்
உய்யநீடவமொழிவறுபகலெலாமொருங்கே
செய்யதாண்மலர்க்கிழவனைநோக்கிநீசெய்தி
நையலென்றினிதுரைத்தனனவையறுமுனிவன். (௪௬)

ஞாலம்யாவையுஞ்சுமந்திரன்றன்வயினல்கிக்
கோலுமாதவத்திமகிரிமருங்கினிற்குறுகிக்
காலமோர்பதினாயிரமருந்தவங்கழிப்ப
மூலதாமரைமுழுமுதற்கிழவன்முந்தினனே. (௪௭)

நின்பெருந்தவம்வியந்தனமானதுநின்குரவர்
முன்பிறந்தனாருந்தவன்முனிவிறைவினல்
மன்பெரும்புவியதனில்வானதிகொடுத்தணுகி
என்புதோயுமேலிருங்கதிபெறுவரென்றிசைத்தான். (௪௮)

மாகநன்னதிபுவியிடைவருகின்மற்றவள்தன்
வேகமாற்றுதல்கண்ணுதற்கன்றிவேறரிதால்
தோகைபாகனைநோக்கியருந்தவந்தொடங்கென்
றேகினானுலகனைத்துமெய்யுயிர்கருநீந்தான். (௪௯)

மங்கைபாகனைநோக்கிமுன்மொழிந்தவருடம்
தங்குமாதவம்புரிதலுந்தழனிறக்கடவுள்
அங்குவந்துநின்கருத்தினைமுடித்துமென்றகன்றான்
கங்கையைத்தொழக் † காலமையாயிரங்கழித்தான். (௫௰)

ஒருமடக்கொடியாகிவந்துனதுமாதவமென்
பொருபுனற்கொடிவரினவள்வேகமார்பொறுப்பார்

---

* கொடியமாமுனி ஈண்டு கபிலர்
† காலம் ஈண்டு வருடத்தை.

அரனுரைத்தசொல்விநோதமற்றின்னுநீயறிந்து
பெருகுநற்றவம்புரியெனவராதிபெயர்ந்தாள். (ருக)

கரந்தைமத்தமோடெருக்கலர்கூவிளைகடுக்கை
நிரந்தபொற்சடை * நின்மலக்கொழுந்தினைநினையா
அரந்தையுற்றவனிரண்டரையாயிரமாண்டு
புரிந்துநற்றவம்பொலிதரவவைமகள்புனிதன். (ருஉ)

எதிர்ந்துநின்றினைவென்னெனவிறைஞ்சியெம்பெரும
அதிர்ந்துகங்கையித்தரைத்தனளென்றலுமஞ்சேல்
பிதிர்ந்திடாவகைகாத்துமென்றேகியபின்றை
முதிர்ந்தமாதவமிரண்டரையாயிரமுடித்தான். (ருங)

பெருகுநீரொடுபூதியும்வாயுவும்பிறங்கு
சருகும்வெங்கதிரொளியையுந்துய்த்துமற்றதையும்
பருகலின்றியுமுப்பதினாயிரம்பருவம்
முருகுகாதலின்மன்னவனருந்தவமுயன்றான். (ருச)

உந்தியம்புயத்துதித்தவனுறைதருமுலகும்
இந்திராதியருலகமுநடுக்குறவிரைத்து
வந்துதோன்றினள்வராநதிமலைமகள்கொழுநன்
சிந்திடாதொருசடையினிற்கரந்தனன்சேர. (ருரு)

புன்னுனித்திருபனியெனவராநதிபுனிதன்
சென்னியிற் † கரந்தொளிதரவணங்கினன்றிகைத்து
மன்னனிற்றலும்வருந்தனஞ்சடையள்வானதியின்
றென்னவிட்டனனொருசிறிதவனிபோந்திழிந்தாள். (ருசு)

இழிந்தகங்கைமுன்மன்னவன்விரைவொடுமேகக்
கழிந்தமன்னவர்கதிபெறமுடுகியகதியால்
அழுந்துமாதவச்சன்னுவின்வேள்வியையழிப்பக்
கொழுந்துவிட்டெரிவெகுளியன்குடங்கையிற்கொள்ளா. (ருஎ)

உண்டுவந்தனன்மறைமுனிக்கணங்கள்கண்டுவப்பக்
கண்டுவேந்தனும்வணங்கிமுன்னிகழ்ந்தனகழறக்
கொண்டுபோகெனச்செவிவழிக்கொடுத்தனன்குதித்து
விண்டுநீங்கினருடலுகுபொடியின்மேவினளே. (ருஅ)

நிரயமுற்றியசகரர்க ‡ ணெடுங்கதிசெல்ல
விரைமலர்ப்பொழிந்தார்த்தனவிண்ணவர்குழாங்கள்

* அநாதிமலமுத்தனென்பதுபற்றி நின்மலக்கொழுந்தென்றார்.

† கரந்தொளிதர-ஒருபொருட்பன்மொழி.

‡ நெடுங்கதி-பராங்கதி.

முரசமுற்றியபல்லியமுறைமுறைமுழங்க
அரசனப்பொழுதணிமதிலயோத்திமீண்டடைந்தான். (௪௯)

அண்டகோளகைப்புறத்ததாயகிலமன்றளந்த
புண்டரீகமென்பதத்திடைப்பிறந்துபூமகனோர்
கொண்டதீர்த்தமாயரன்கொளப்பகீரதன்கொணர
மண்டலத்துவந்தடைந்ததிம்மாநதிமைந்த. (௫0)

சகரர்தம்பொருட்டருந்தவம்பெரும்பகல்தன்னிற்
பகீரதன்கொணர்ந்திடுதலாற்பகீரதியாகி
மகிதலத்திடைச்சன்னுவின்செவிவழிவரலால்
நிகரில்சானவியெனப்பெயர்படைத்ததிந்நதியும். (௫௧)

என்றுகூறலும்வியப்பினோடுவந்தனரிறைஞ்சிச்
சென்றுதீர்த்தனர்கங்கையைவிசாலைவாழ்நிருபக்
குன்றுபோற்புயத்தரசன்வந்தடியிணைகுறுக
நின்றுசொல்லுரைவிளம்பிமற்றவன்வயினீங்கா. (௫௨)

பள்ளிநீங்கியபங்கயப்புனைதலென்னனை
வெள்ளவான்கரைகரையுறுகடைசியர்மிதிப்ப
கள்ளவாணெடுங்கண்ணெனிப்புல்கயலெனக்கருதா
அள்ளிநாணுறுமகன்பணைத்திலைநாடடைந்தார். (௫௩)

வரம்பில்வான்சிறைமதகுகண்முழவொலிவழங்க
அரும்புநாண்மலரசோகங்களவர்விளக்கெடுப்ப
நரம்பினின்றதேன்றாரைகொணறுமலர்யாழின்
சுரும்புபாண்செயத்தோகைநின்றாடுவசோலை. (௫௪)

பட்டவாணுதன்மடந்தையர் * பார்ப்பெனுந்தூதால்
எட்டவாதரித்துழல்பவரிதயங்கள்வெறுப்ப
வட்டநாண் † மரைமலரின்மேல்வயலிடைமள்ளர்
கட்டகாவியங்கட்கடைகழிப்பனகழனி. (௫௫)

தூவியன்னந்தமினமென்றுநடைகண்டுதொடரக்
கூவுமென்குயிற்குதலையர்குடைந்ததண்புனல்வாய்ப்
ஓவில்குங்குமச்சுவடுறவொன்றொடொன்றுவாடிப்
‡ பூவுறங்கினும்புள்ளுறங்காதனபொய்கை. (௫௬)

முறையினின்முதுமேதியின்முலைவழிபாலுந்
துறையினின்றுயர்மாங்கனிதூங்கியசாறும்

* பார்ப்பு-பார்வை. † மரை முதற்குறைந்துநின்றது. ‡ பூவுறங்கினும்-மலர்குவியினும். பூவென்றது தாமரை மலரை. அதுபூவினிற்சிறந்தமைப்பற்றி என்க. பூவென்பது பொறிவாழ்பூவே.

அறையுமென்கரும்பாடியவமுதமுமழிதே
நறையுமல்லதுநளிர்புனல்பெருகலாநதிகள். (௬௭)

இழைக்குநுண்ணிடையிடைதரமுகடுயர்கொங்கை
மழைக்கண்மங்கையராங்கினில்வயிரியர்முழவம்
முழக்குமின்னிசைவெருவியமோட்டிள * மூரி
உழக்கவாளைகள்பாளையிற்குதிப்பனவோடை. (௬௮)

† படைநெடுங்கண்வாளுறைபுகப்படர்புனன்மூழ்கிக்
கடையமுன்கடற்செழுந்திருவெழும்படிகாட்டி
மிடையும்வெள்வளைபுள்ளொடுமொலிப்பமெல்லியலார்
குடையவண்டினங்கடிமலர்குடைவனகுளங்கள். (௬௯)

இனையநாட்டினையினிதுசென்றிஞ்சிசூழ்மிதிலை
புனையுநீள்கொடிப்புரிசையின்புறத்துவந்திறுத்தார்
மனையின்மாட்சியையழித்திழிமாதவப்பள்ளி
கனையுமேட்டுயர்கருங்கலோர்வெள்ளிடைக்கண்டார். (௭௦)

கண்டகல்மிசைக்காகுத்தன்கழற்றுகள்கதுவ
உண்ட ‡ பேதைமைமயக்கற § வேறுபட்டுருவங்
கொண்டுமெய்யுணர்பவன்கழல்கூடியதொப்பப்
பண்டைவண்ணமாய்நின்றனண்மாமுனிபணிப்பான். (௭௧)

வேறு.

மாயிருவிசும்பிற்கங்கை $ மண்மிசையழித்தோன்மைந்த
மேயினவுவகையோடுமின்னனைவொதுங்கிநின்றாள்
தீவினைநயந்துசெய்ததேவர்கோன்றனக்குச்செங்கண்
ஆயிரமளித்தோன்பன்னியகலிகையாகுமென்றான். (௭௨)

பொன்னையேர்சடையான்கூறக்கேட்டலும்பூவின்கேள்வன்
என்னையேயென்னையேயிவ்வுலகியலிருந்தவண்ணம்
முன்னையூழ்வினையினாலோவொன்றுமுடிந்ததுண்டோ
அன்னையேயனையாட்கிவ்வாறடுத்தவாறருளுகென்றான். (௭௩)

அவ்வுரையிராமன்கூறவறிஞனுமவனைநோக்கிச்
செவ்வியோய்கேட்டிமேனாள்செறிசுடர்க்குலிசத்தண்ணல்

---

* மூரி-எருமை. † குளங்களின்கண் மாதர்குடையுந்தோறும் விழிப்பதின்மையான் படைநெடுங்கண்வாளுறை புகப்படர்புனன் மூழ்கியென்றும், அதன்கண்மூழ்கி யெழுதலைக்கடையமுன் கடற்செழுந்திருவெழும்படி காட்டி என்றுங்கூறினர்.

‡ பேதைமைமயக்கென்றது அறியாமையாகிய மயக்கத்தை. § வேறுபட்டுருவங்கொண்டு திவ்வியதேகிகளாகி, திவ்வியதேகிகள்-நித்தியசூரிகள். $ மண்மிசையழித்தோன் பகீரதனை.

* அவ்வியமவித்தசிந்தைமுனிவனையற்றநோக்கி
நவ்விபோல்விழியினாடன்வனமுலைநணுகலுற்றான். (எச)

தையலாளயனைவேலுமன்மதன்சரமும்பாய
உய்யலாமுறுதிநாடியுழல்பவனொருநாளுற்ற
மையலாலறிவுநீங்கிமாமுனிக்கற்றஞ்செய்து
பொய்யிலாவுள்ளத்தான்றனுருவமேகொண்டுபுக்கான். (எரு)

புக்கவளோடுங்காமப்புதுமணமதுவின்றேறல்
† ஒக்கவுண்டிருத்தலோடுமுணர்ந்தனளுணர்ந்தபின்னுந்
தக்கதன்றென்னவோராடாழ்ந்தனளிருப்பத்தாழா
முக்கணானனையவாற்றன்முனிவனு ‡ முடுகிவந்தான். (எசா)

சரந்தரு § சாபமல்லாற்றடுப்பருஞ்சாபம்வல்லை
வரந்தருமுனிவனெய்தவருதலும்வெருவிமாயா
நிரந்தரமுலகினிற்குநெடும்பழிபூண்டாணின்றான்
புரந்தரனடுங்கியாங்கோர்பூசையாய்ப்போகலுற்றான். (எஎ)

தீவிழிசிந்தநோக்கிச்செய்தவைபுணர்ந்தசெய்ய
தூயவனவனை $ நின்கைச்சுடுசரமனையசொல்லால்
ஆயிரமாதர்க்குள்ளவடையாளமுனக்குண்டாகென்
றேயினனவையெலாம்வந்திமைப்பதனகலிமைப்பின்முன்னம். (எஅ)

எல்லையிலுணர்வுமெய்தியவர்க்குநகைவந்தெய்தப்
புல்லியபழியினோடும்புரந்தரன்போயபின்றை
மெல்லியலாளைநோக்கிவிலைமகளனையநீயுங்
¶ கல்லியலாதியென்றான்கருங்கலாய்மருங்குவீழ்வாள். (எகூ)

|| பிழைத்ததுபொறுத்தலென்றும்பெரியவர்கடனேயென்பார்
அழற்றருங்கடவுளன்னாய்முடிவிதற்கருளென்னத்
தழைத்துவண்டிமிருந்தண்டார்த்தசரதராமனென்பான்
கழற்றுகள்கதுவவிந்தக்கல்லுருத்தவிர்தியென்றான். (அ0)

அந்தவிந்திரனைக்கண்டவமரர்கள்பிரமன்முன்னா
வந்துகோதமனைவேண்டமற்றவைதவிர்த்துமாறாச்

---

* அவ்வியமவித்தசிந்தைமுனிவனென்றது கோதமனை.

† ஒக்கவுண்டு-இருவர்மனமொன்றுபட்டிருந்தின்பந்துய்த்தல்.

‡ முடுகிவருதற்குக் காரணம் ஞானவுணர்ச்சி.

§ சாபமிரண்டின்முன்னையதாகில்; பின்னையதுவெகுண்டுசொல்லல்

$ நின்கைச்சுடுசரமனையசொல்லால் என்றார் நின்கணையிலக்கொழியாதது போன்றம்முனிவன் மொழியுமன்னதாகலின்.

¶ கல்லியலாதியெனச் சபித்தலைக்கூறுவதே முறை. இவ்வாறு கூறாது வேறுபடக் கூறுவாருமுளர்.

|| "பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும்புகழ்" என்பவாகலின் பிழைத்தது பொறுத்தலென்றும் பெரியவர்கடனே என்றதென்க.

சிந்தையின்முனிவுதீர்ந்துசிறந்தவாயிரங்கண்ணுக்கத்
தந்தமதுலகுபுக்கார்தையலுங்கிடந்தாள்கல்லாய். (௮௧)

இவ்வண்ணநிகழ்ந்தவண்ணமினியிந்தவுலகுக்கெல்லாம்
உய்வண்ணமன்றிமற்றோர்துயர்வண்ணமுறுவதுண்டோ
மைவண்ணத்தரக்கிபோரின்மழைவண்ணத்தண்ணலேயுன்
* கைவண்ணமங்குகண்டேன்கால்வண்ணமிங்குக்கண்டேன். (௮௨)

† தீதிலாவுதவிசெய்தசேவடிக்கரியசெம்மல்
கோதிலாக்குணத்தான்சொன்னபொருளெலாமனத்திற்கொண்டு
மாதவ § னருளுண்டாகவழிபடுபடருறாதே
போதிநீயன்னையென்றுபொன்னடிவணங்கிப்போனான். (௮௩)

அருந்தவனுறையுளன்னையனையவனணுகலோடும்
விருந்தினர்தம்மைக்காணுமெய்ம்முனிவியந்தநெஞ்சன்
பரிந்தெதிர்கொண்டுபுக்குக்கடன்முறைபழுதுறாமற்
புரிந்தபின் ‡ காதிசெம்மல்புனிதமாதவனைநோக்கி. (௮௪)

அஞ்சனவண்ணத்தான்றனடித்துகள்கதுவாமுன்னம்
வஞ்சிபோலிடையாண்முன்னைவண்ணத்தளாகிநின்றாள்
நெஞ்சினாற்பிழைப்பிலாளைநீயழைத்திடுகவென்னக்
கஞ்சமாமுனிவனன்னமுனிவனுங்கருத்துட்கொண்டான். (௮௫)

குணங்களாலுயர்ந்தவள்ளல்கோதமன்கமலத்தாள்கள்
வணங்கினன்வலங்கொண்டேத்திமாசறுகற்பின்மிக்க
அணங்கினையவன்கையீந்தாண்டருந்தவனோடும்வாச
மணங்கிளர்சோலைநீங்கிமணிமதிற்கிடக்கைகண்டார். (௮௬)

௯-வது, அகலிகைப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௫௯௬.

---

* கைவண்ணந்தாடகைபாலுங்கால்வண்ணமகலிகைபாலுங்கண்டேனென்றமையால், வில்வண்ணமுதலிய சிலவற்றையுங்காணவிரும்புகிறேனெனக் குறிப்பித்தாராயிற்று.

† தீதிலாவுதவி-முன்னும்பின்னுமாகியவுதவியை நோக்காதுசெய்யுமுதவி. § அருளுண்டாகில் வழிபடர் என்றும்பாடம்.

‡ காதியரசன் மைந்தனாகலின் கோசிகனைக் காதிசெம்மலென்றும் ராஜரிஷியென்றுங் கூறுவர்.

# ௧0-வது, மிதிலைக்காட்சிப்படலம்.

ஸ்ரீராமபிரானுர் மிதிலாநகரத்தைக் கண்ணுற்றுச்சென்ற செய்தியைச் சொல்லுகிற படலம்.

மையறுமலரினீங்கியான்செய்மாதவத்தின்வந்து
செய்யவளிருந்தாளென்றுசெழுமணிக்கொடிகளென்னும்
கைகளைநீட்டியந்தக்கடிநகர்கமலச்செங்கண்
ஐயனையொல்லைவாவென்றழைப்பதுபோன்றதம்மா. (௧)

நிரம்பியமாடத்தும்பர்நிரைமணிக்கொடிகளெல்லாம்
தரம்பிறரின்மையுன்னித்தருமமேதூதுசெல்ல
* வரம்பில்பேரழகினளைமணஞ்செய்வான்வருகின்றனென்
றரம்பையர்விசும்பினூடுமாடலினுடைக்கண்டார். (௨)

† தயிருறுமத்திற்காமசரம்படத்தலைப்பட்டுடும்
உயிருறுகாதலாளினென்னைறயொன்றொருவகிலாச்
செயிருறுமனத்தவாகித்தீத்திரள்செங்கண்சிந்த
வயிரவான்மருப்பியானைமலையெனமலைவகண்டார். (௩)

பகற்கதிர்மறையவானம்பாற்கடல்கடுப்பநீண்ட
துகிற்கொடிமிதிலைமாடத்தும்பரிற்றுவன்றிநின்ற
முகிற்குலந்தடவுந்தோறுநனைவனமுகிலிற்சூழ்ந்த
அகிற்புகைகதுவுந்தோறும்புலர்வனவாடக்கண்டார். (௪)

ஆதரித்தமுதிற்கோலேய்த்தவயவமமைக்குந்தன்மை
யாதெனத்திகைக்குமல்லான் ‡ மதனற்குமெழுதவொண்ணுச்
சீதையைத்தருதலாலேதிருமகளிருந்தசெய்ய
போதெனப்பொலிந்ததோன்றும்பொன்மதின்மிதிலைபுக்கார். (௫)

சொற்கலைமுனிவனுண்டசுடர்மணிக்கடலுந்துன்னி
அற்கலந்திலங்குபன்மீனரும்பியவானும்போல
§ விற்கலைநுதலினருமைந்தரும்வெறுத்துநீத்த
பொற்கலன்கிடந்தமாடநெடுந்தெருவதனிற்போனர். (௬)

$ தாறுமாய்தறுகட்குன்றந்தடமதவருவிதாழ்ப்ப
ஆறுமாய்க்கலினமாவிலாழியாலழிந்தோராறாய்ச்

---

* அழகினுக்கழகு செய்பவளாகலின் வரம்பில்பேரழகினளை என்றதென்க. † தயிர்பரைமத்தியாண்டுங்கலக்குதலான் அதனையே காமசரம் பாய்ந்துவருத்தற்குவமைகூறினர். ‡ மதனற்கும் என்புழி நான்காவது மூன்ருவதன் பொருளது, உம்மை உயர்வுசிறப்பு. § வில்கலை எனவும், விற்கு அலை எனவும் பிரித்துப் பொருளுரைக்க. $ தாறுமாய்ப்பது யானைகளாதலின் தாறுமாய் தறுகட்குன்றமென்றர். தறுகட்குன்றமென்றதியானையை, தாறு-இருப்புமுள்.

சேறுமாய்த்தேர்களோடத்துகளுமாயொன்றோடொன்று
மாறுமாறாகிவாளாக்கிடக்கிலாமறுகிற்சென்றார். (ஏ)

தண்டுதலின்றியொன்றித்தலைத்தலைசிறந்தகாதல்
உண்டபின்கலவிப்போரினொசிந்தமென்மகளிரேபோல்
பண்டருகிளவியார்தம் * புலவியிற்பரிந்தகோதை
வண்டொடுகிடந்துதேன்சோர்மணிநெடுந்தெருவிற்சென்றார். (அ)

நெய்திரணரம்பிற்றந்தமழலையினியன்றபாடல்
தைவருமகரவீணைதண்ணுமைதழுவித்தூங்கக்
† கைவழிநயனஞ்செல்லக்கண்வழிமனமுஞ்செல்ல
ஐயநுண்ணிடையாராடுமாடகவரங்குகண்டார். (கூ)

பூசலினெழுந்தவண்டுமெருங்கினுக்கிரங்கிப்பொங்க
மாசறுபிறவிபோலவருவதுபோவதாகிக்
காசறுபவளசெங்காய்மரகதக்கமுகுபூண்ட
ஊசலின்மகளிர்மைந்தர்சிந்தையோடுலவக்கண்டார். (க0)

வரப்பறுமணியும்பொன்னுமாரமுங்கவரிவாலும்
சுரத்திடையகிலுமஞ்ஞைத்தோகையுந்தும்பிக்கொம்பும்
குரப்பணைநிரப்புமள்ளர்குவிப்புறக்கரைகடோறும்
‡ பரப்பியபொன்னியன்னவாவணம்பலவுங்கண்டார். (கக)

வள்ளுகிர்த்தளிர்க்கைநோவமாடகம்பற்றிவார்ந்த
கள்ளெனநரம்புவீக்கிக் § கண்ணொடுமனமுங்கூட்டி
வெள்ளியமுறுவறோன்றவிருந்தெனமகளிரீந்த
தெள்விளிப்பாணிர்தீந்தேன்செவிமடுத்தினிதுசென்றார். (கஉ)

கொட்புறுகலினப்பாய்மா $ குலான்மகன்முடுக்கிவிட்ட
மட்கலத்திகிரிபோலவாளியின்வருவமேலோர்
நட்பினினிடையறாவாய்ஞானிகளுணர்வினொன்றாய்க்
கட்புலத்தினையவென்றுதெரிவிலதெரியக்கண்டார். (கந)

* புலவி-ஊடல். † கூத்தியர்தாம் கருத்திற் பயின்றபாடலை யரங்கினிடைக்கண்ணானும், அதன்பயனைக் கையானுங் காட்டன்முறைமையான் கைவழிநயனஞ்செல்லக் கண்வழிமனமுஞ்செல்ல என்றார்.

‡ மள்ளர் பொன்னிக் கரைகடோறும் பல வேறு தானியங்களைப் பரப்பியவாறுபோல அவ்வாவணங்கிடத்தலினதனையே யுவமைகூறினார்.

§ மனஞ்சென்றவழிக்கண் செல்வதியல்பாதலின் கண்ணொடு மனமுங்கூட்டி என்றதென்க.

$ குலான் இடைக்குறைந்துநின்றது. குலாலன்மகன் முடுக்கிவிட்ட மட்கலத்திகிரிபோல மேலோர் நட்பினின் இடையறாவாயும், வாளியின் வருவபோல ஞானிகளுணர்வினொன்றாயும், இன்னவெனக்காண்ப தரிதாகலின் கட்புலத்தினையவென்று தெரிவில என்றுங் கூறினார்.

வாளரம்பொருதவேலுமன்மதன்சிலையும்வண்டின்
கேளொடுகிடந்தநீலச்சுருளுஞ் * செங்கிடையுங்கொண்டு
நீளிருங்களங்கநீக்கித்திரைமணிமாடநெற்றிச்
† சாளரந்தோறுந்தோன்றுஞ்சந்திரவுதயங்கண்டார். (கச)

பளிக்குவள்ளத்துவார்த்தபசுநறுந்தேறன்மாந்தி
வெளிப்படுநகையவாகிவெறியனமிழற்றுகின்ற
ஒளிப்பினுமொளிக்கவொட்டாவூடலையுணர்த்துமாபோல்
களிப்பினையுணர்த்துஞ்செவ்விக்கமலங்கள்பலவுங்கண்டார். (கரு)

மெய்வருபோகமொக்கவுடனுண்டுவிலையுங்கொள்ளும்
பையரவல்குலார்தமுள்ளமும்பளிங்கும்போல
மையரிநெடுங்கணோக்கம்படுதலுங்கருகிவந்து
கைபுகிற்சிவந்துகாட்டுங்காசுகள்பலவுங்கண்டார். (கசு)

கடகமுங்குழையும்பூணுமாரமுங்கலிங்கநுண்ணூல்
வடகமுமகரயாழும்வட்டினிகொடுத்துவாசத்
தொடையலங்கோதைசோரப்பூசலாய்ச்சிவப்பத்தொட்டுப்
படைநெடுங்கண்ணார்வட்டாட்டாடிடம்பலவுங்கண்டார். (கஎ)

(வேறு.)

‡ பங்கயங்குவளையாம்பல்படர்கொடிவள்ளைநீலம்
செங்கிடைநரந்தங்கொண்டைசினைவாலிணையதேம்பத்
தங்கள்வேறுவமையில்லாவவயவந்தழுவிச்சாலும்
மங்கையர்விரும்பியாடும்வாவிகள்பலவுங்கண்டார். (கஅ)

இயங்குறுபுலன்களங்குநீங்குங்கொண்டேகவேகி
மயங்குபுதிரிந்து § நின்றுமறுகுறுமுணர்விவென்னப்
புயங்களிற்கலவைச்சாந்தும்புணர்முலைச்சுவடுநீங்காப்
பயங்கெழுகுமரர்வாளாட்டாடிடம்பலவுங்கண்டார். (ககூ)

வெஞ்சினமுருவிற்றென்னுமேனியர்மீவண்டிற்றீயும்
நெஞ்சின $ ஈசன்கண்ணினொருப்புறவனங்களன்னார்
செஞ்சிலைக்கரத்தர்மாதர்புலவிகள்திருத்திச்சேர்ந்த
குஞ்சியர்சூழநின்றமைந்தர்தங்குழாங்கள்கண்டார். (உ0)

* செங்கிடை-செவந்தசடை. † மாதர் இறைவனைச் சாளரந்தொறுங்காண்டலின் அவர்முகத்தை நோக்கிச் சந்திரவுதயங் கண்டாரென்றார். ‡ பங்கயம், குவளை, ஆம்பல் முதலியன முறையே, முகம், கண், வாய், இடை, காது, கண், இதழ், வயிறு, கண், கணைக்கால். என வுருவகத்தாற்கூறினார். இணைய என்பதனாற் பிறவுறுப்புங்கொள்க. § புலன்வழி மனஞ்சென்று திரிதலின் நின்று மறுகுறு முணர்வினென்ன என்றதென்க. $ ஈசன் கண்ணினொருப்புறு வனங்களென்றார் "உருவளர் காமன்" எனப் பிறருங் கூறுதல்பற்றியென்க.

வேறு.

பாகொக்குஞ்சொற்பைங்கிளியோடும்பலபேசி
மாகத்தும்பர்மங்கையர்நாணமலர்கொய்யும்
தோகைக்கொம்பினன்னவர்க்கன்னநடைதோற்றுப்
போகக்கண்டுவெண்டினமார்க்கும்பொழில்கண்டார். (உக)

உம்பர்க்கேயும்மாளிகையோளிநிழல்பாய
இம்பர்த்தோன்றுங்நாகர்தநாட்டினெழில்காட்டிப்
பம்பிப்பொங்குங்கங்கையினூழ்ந்தபடைமன்னன்
அம்பொற்கோயிற்பொன்மதில்சுற்றம்மகழ்கண்டார். (உஉ)

* பொன்னின்சோதிபோதினினாற்றம்பொலிவேபோல்
தென்னுண்டேனிற்றீஞ்சுவைசெஞ்சொற்கவியின்பம்
கன்னிம்மாடத்தும்பரின்மாடேகழிபேடோ
டன்னம்மாடுமூன்றுறைகண்டங்கயனின்றார் (உங)

செப்புங்காலைசெங்கமலத்தோன்முதல்யாரும்
எப்பெண்பாலுங்கொண் † டுவமிப்போருவமிக்கும்
அப்பெண்டானேயாயினபோதிங்கயல்வேறோர்
ஒப்பொன்கேகொண்டெவ்வகைநாடியுரைசெய்வேம். (உச)

உமையாளொக்கும்மங்கையருசசிக்கரம்வைக்கும்
கமையாண்மேனிகண்டவர்காட்சிக்கரைகாணா
இமையாநாட்டம்பெற்றிலமென்றாரிருகண்ணால்
அமையாதென்றாரந்தரவானத்தவரெல்லாம். (உரு)

வென்றம்மானைத்தாரயில்வேலுங்கொலைவாளும்
பின்றம் ‡ மானப்பேர்கயலஞ்சப்பிறழ்கண்ணாள்
குன்றம்மாடக்கோவினளிக்குங்கடலன்றி
அன்றம்மாடத்தும்பாளிக்கும்மமுதன்னாள். (உசு)

பெருந்தேரல்குற்பெண்ணணிவாளொப்பாளொருபெண்ணைத்
தருந்தானென்றானுன்முகனின்னுந்தரலாமே
அருந்தாவந்தத்தேவரிரந்தாலமிர்தென்னும்
மருந்தேயல்லா § தென்னினிநல்கும்மணியாழி. (உஎ)

அனையாண்மேனிகண்டபினண்டத்தரசாளும்
வினையோர்மேவும்மேனகையாதியினிர்வேற்கண்

* பொன்னிற்சோதியும் போதினினாற்றமும் தேனிற்றீஞ்சுவையும் கவியினின்பமும்போலும் விளங்குபவளாகவி னங்ஙன முவமங்கூறினார்.
† உவமிப்போருவமிக்கும அப்பெண்-திருமாமகளை. ‡ எதுகைநோக்கி விரிந்துநின்றது. § திருமகள் கற்பகமுதலியபொருளை முன்னல்கினமையின் என்னினி நல்குமணியாழி என்றார்.

இளையோருள்ளத்தின்னலினோர்தம்முகமென்னும்
பனிதோய்வானின்வெண்மதிக்கென்றும்பகலன்றே. (௨௮)

மலர்மேனின்றிம்மங்கையிவ்வையத்திடைவைகப்
பலகாலுந்தம்மெய்ந்நனிவாடும்படிநோற்றார்
அலகோவில்லாவந்தணரோநல்லறமேயோ
உலகோவானோவும்பர்கொலோவீதுணரேமால். (௨௯)

தன்னேரில்லாமங்கையர்செங்கைத்தளிர்மானே
அன்னேதேனேயாரமிர்தேயென்றடிபோற்ற
முன்னேமுன்னேமொய்ம்மலர்தூவிமுறைசாலப்
பொன்னேசூழும்பூவினொதுங்கிப்பொலிகின்றாள். (௩0)

பொன்சேர்மென்காற்கிண்கிணியாரம்புனையாரம்
கொன்சேரல்குன்மேகலைதாங்குங்கொடியன்னார்
தன்சேர்கோலத்தின்னெழில்காணச்சதகோடி
பின்சேவிக்கமின்னரசென்னும்படிநின்றாள். (௩௧)

கொல்லும்வேலுங்கூற்றமுமென்னுமிவையெல்லாம்
வெல்லும்வெல்லும்மென்னமதர்க்கும்விழிகொண்டாள்
சொல்லுந்தன்மைத்தன்றதுகுன்றுஞ்சுவருந்திண்
கல்லும்புல்லுங்கண்டுருகப்பெண்கனிநின்றாள். (௩௨)

வேறு.

வெங்களிவிழிக்கொருவிழவுமாயவர்
கண்களிற்காணவேகளிப்புநல்கலான்
மங்கையர்க்கினியதோர்மருந்துமாயவள்
எங்கணையகற்கினியாவதாங்கொலோ. (௩௩)

இழைகளுங்குழைகளுமின்னமுன்னமே
மழைபொருகண்ணிணைமடந்தைமாரொடும்
பழகியவெனினுமப்பாவைதோன்றலால்
* அழகெனுமதுவுமோரழகுபெற்றதே. (௩௪)

எண்ணருநலத்தினாளிணையினின்றுழி
† கண்ணொடுகண்ணிணைகௌவியொன்றையொன்
றுண்ணவுநிலைபெறாதுணர்வுமொன்றிட
அண்ணலுநோக்கினானவளுநோக்கினாள். (௩௫)

* இப்பெண்ணரசியழகான அனைத்தாமழகுசெய்தலின் அழகெனுமதுவுமோரழகுபெற்றதே என்றமைத்துணர்க.

† இது 'கண்ணொடுகண்ணிணைநோக்கொக்கின் வாய்ச்சொற்களென்னபயனுமில' என்னுந் திருக்குறட்பொருளை யுட்கொண்டதென்க.

நோக்கியநோக்கெனு நுதிகொள்வேலிணை
ஆக்கியமதுகையான்றோளி னாழ்ந்தன
வீக்கியகனைகழல்வீரன்செங்கணும்
தாக்கணங்கனையவடனத்திற்றைத்தவே. (௩௬)

பருகியநோக்கெனும்பாசத்தாற்பிணித்
தொருவரையொருவர்தம்முள்ளமீர்த்தலால்
வரிசிலையண்ணலும்வாட்கணங்கையும்
இருவருமாறிப்புக்கிதயமெய்தினார். (௩௭)

மருங்கிலாநங்கையும்வசையினையனும்
ஒருங்கியவிரண்டுடற்குயிரொன்றாயினார்
கருங்கடற்பள்ளியிற்கலவிநீங்கிப்போய்ப்
* பிரிந்தவர்கூடினாற்பேசல்வேண்டுமோ. (௩௮)

அந்தமிலழகனையணங்கிலாமையாற்
பைந்தொடியோவியப்பாவைபோன்றனள்
சிந்தையு † நிறையுமெய்ந்நலனும்பின்செல
மைந்தனுமுனியொடுமறையப்போயினான். (௩௯)

பிறையெனுநுதலவள்பெண்மையென்படும்
நறைகமழலங்கலானயனகோசரம்
மறைதலுமனமெனுமத்தயானையின்
‡ நிறையெனுமங்குசநிமிர்ந்துபோயதே. (௪0)

மாலுறவருதலுமனமுமெய்யுந்தன்
நூலுறுமருங்குல்போலுடங்குவாணெடுங்
§ காலுறுகண்வழிபுகுந்தகாதனோய்
பாலுறுபிரையெனப்பரந்ததெங்குமே. (௪௧)

நோமுறுநோய்நிலைநுவலகிற்றிலள்
ஊமரின்மனத்திடையுன்னிவிம்முவாள்

---

* சனகியை இராமனும், இராமனைச் சனகியுங் காண்டன்மாத்திரையிற் பிரிவுநீங்கிக்கூடிய கூட்டத்தை யொத்தலின் கடற்பள்ளியிற் கலவி நீங்கிப் போய்ப்பிரிந்தவர் கூடினாற் பேசவேண்டுமே என்றார். † நிறையாவது தனக்குள்ளே அடக்கத்தக்கவைகளை யடக்கியிருத்தல். ஆடூக்குணநான்கிலொன்று, நான்காவன—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி. ‡ நிறை என்றது கற்பை, 'கற்பென்னுந் திண்மையுண்டாகப்பெறின்' எனப்பிறருங்கூறுதலிப் பெற்றி நோக்கியென்க. பெண்மைக்குணங்கள் நான்காவன:—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, என்பன. § காதனோய் கண்வழிச்சேறல் மயிர்க்கால்வழியாதலின் காலுறுகண்வழி என்றும், பால்பிரையுற்ற வழிமுழுதும் வியாபித்துத்தயிராக வேறுபடல் போற்காதலுற்றுத்தான் வேறுபடலின் பாலுறுபிரையெனப் பரந்த தெங்குமே யென்றுங்கூறினார். பிரை-குடத்திலுள்ள பாலையுறைவிக்கும் சிறுமோர்த்துளி.

காமனுமொருசரங்கருத்தினெய்தனன்
வேமெரியதனிடைவிறகிட்டென்னவே. (௪௨)

நிழலிடுகுண்டலமதனினெய்யிடா
அழலிடாமிளிர்ந்திடுமயில்கொள்கண்ணினாள்
சுழலிடுகூந்தலுந்துகிலுஞ்சோர்தரத்
தழலிடுவல்லியேபோலச்சாம்பினாள். (௪௩)

தழுங்கியகலைகளுநிறையுஞ்சங்கமும்
மழுங்கியவுள்ளமுமறிவுமாமையும்
இழந்தவளிமையவர்கடையயாவையும்
* வழங்கியகடலெனவறியளாயினாள். (௪௪)

கலங்குழைந்துகநெடுநாணுங்கண்ணற
நலங்குழைதரநகின்முகத்தினேயுண்டு
மலங்குழையெனவுயிர்வருந்திச்சோர்தரப்
பொலங்குழைமயிலைக்கொண்டரிதிற்போயினார். (௪௫)

காதொடுங்குழைபொருகயற்கணங்கைதன்
பாதமுங்கரங்களுமனையபல்லவத்
தாதொடுங்குழையொடுமடுத்ததண்பனிச்
சீதநுண்டுளிமலரமளிசேர்த்தினார். (௪௬)

நாளருநறுமலரமளிநண்ணினாள்
பூளைவீபுரை † பனிபுயற்குத்தேம்பிய
தாளதாமரைமலர்ததைந்தபொய்கையும்
வாளராநுங்கியமதியும்போலவே. (௪௭)

மலைநிரைத்தடத்துகுமழைக்கணாலிபோன்
முலைமுகட்டுதிர்ந்தனநெடுங்கண்முத்தினஞ்
சிலைநுதற்கடையுறைசெறிந்தவேர்வுதன்
உலைமுகப்புகைநிகருயிர்ப்பின்மாய்ந்ததே. (௪௮)

கம்பமில்கொடுமனக் ‡ காமவேடன்கை
அம்பொடுசோர்வதோர்மயிலுமன்னவள்
வெம்புறுமனத்தனல்வெதுப்பமென்மலர்க்
கொம்பெனவமளியிற்குழைந்துசாய்ந்தனள். (௪௯)

* கற்பகமுதலிய எல்லாப்பொருள்களும் பாற்கடல்வழங்கிய பிற்றை ஞான்றுவறிய தாயதைக் 'கலையுநிறையுஞ் சங்கமுமுதலிய' விழந்தமைக் குவமங்கூறினார்.

† பனிப்புயற்குத்தேம்பிய தாளதாமரை மலர்ததைந்த பொய்கையும் வாளராநுங்கியமதியும், செவ்வியும் ஒளியுமிழத்தல்பற்றி அவற்றையே யுவமங்கூறினார்.

‡ கானவேடன் எனப் பாடங்கொள்வாருமுண்டு.

சொரிந்தனநறுமலர்சுறுக்கொண்டேறின
பொரிந்தனகலவைகள்பொறியிற்சிந்தின
எரிந்தவெங்கனல்சுடவிழையிற்கோத்தநூல்
பரிந்தனகரிந்தனபல்லவங்களே. (ருo)

தாதியர்செவிலியர்தாயர்தெளவையர்
மாதுயருழந்தனர்விழுந்துமாழ்கினர்
யாதுகொலிதுவெனவெண்ணுறேற்றலர்
போதுடனயினீர்சுழற்றிப்போக்கினர். (ருக)

அருகினின்றசைக்கின்றவாலவட்டக்கால்
எரியினைமிகுத்திடவிழையுமாலையும்
கரிகுவதீகுவகனல்வகாட்டலால்
உருகுபொற்பாவையுமொத்துத்தோன்றினள். (ருஉ)

அல்லினைவகுத்ததோரலங்கற்காடெனும்
வல்லெழுவல்லவோர்மரகதப்பெருங்
கல்லெனுமிருபுயங்கமலங்கண்ணெனும்
* வில்லொடும்பிழிந்ததோர்மேகமென்னுமால். (ருங)

நெருக்கியுட்புகுந்தருநிறையும் † பெண்மையும்
உருக்கியென்னுயிரொடுமுண்டுபோனவன்
பொருப்புறழ்தோள்புணர்புண்ணியத்தது
கருப்புவில்லன்றவன்காமனல்லனே. (ருச)

பெண்வழிநலனொடும்பிறந்தநாணொடும்
எண்வழியுணர்வுநானெங்குங்காண்கிலென்
மண்வழிநடந்தடிவருந்தப்போனவன்
‡ கண்வழிநுழையுமோர்கள்வனேகொலாம். (ருரு)

இந்திரநீலமொத்திருண்டகுஞ்சியும்
சந்திரவதனமுந் § தாழ்ந்தகைகளும்
சுந்தரமணிவரைத்தோளுமேயல
முந்தியென்னுயிரையம்முறுவலுண்டதே. (ருசு)

படர்ந்தொளிபரந்துயிர்பருகுமாகமும்
தடந்தருதாமரைத்தாளுமேயல
கடந்தருமதங்கலுழ்களிநல்யானைபோல்
நடந்ததுகிடந்ததென்னுள்ளநண்ணியே. (ருஎ)

* இரகுநாயகன் வில்லொடுஞ்சேறலின் வில்லொடு பிழிந்ததோர் மேகமென்னுமென்றார். † பெண்மை கட்புலனாகிய வமைதித்தன்மையாளுந்தன்மையன்பர் நச்சினார்க்கினியர். ‡ மனத்திற் புகக்கண்வழிச் சேறலின்கண்வழிநுழையு மோர்கள்வனென்றார். § தாழ்ந்தகைகளும்-முழந்தாளளவும் நீண்டுதொங்கும் கைகளும்.

உரைசெயிற்றேவர்தம்முலகுளானலன்
விரைசெறிதாமரையிமைக்குமெய்ம்மையான்
வரிசிலைத்தடக்கையன்மார்பினூலினன்
அரசிளங்குமரனேயாகல்வேண்டுமால். (௫௮)

பிறந்துடைநலநிறைபிணித்தவெந்திரம்
கறங்குபுதிரியுமென்கன்னிமாமதில்
எறிந்தவக்குமரனையின்னுங்கண்ணிற்கண்
டறிந்துயிரிழக்கவுமாகுமேகொலாம். (௫௯)

என்றிவையினையனவிளம்பும்வந்தெதிர்
நின்றனனவனெனுநீங்கினானெனும்
கன்றியமனத்துறுகாமவேட்கையால்
ஒன்றலபலநினைந்துருகுங்காலையே. (௬0)

அன்னமென்னடையவட்கமைந்தகாமத்தீ
தன்னையுஞ்சுடுவதுதரிக்கிலானெனா
நன்னெடுங்கரங்களைநடுக்கியோடிப்போய்
முன்னைவெங்கதிரவன்கடலின்மூழ்கினான். (௬௧)

விரிமலர்த்தென்றலாம்வீசுபாசமும்
எரிநிறச்செக்கருமிருளுங்காட்டலால்
அரியவட்கனறருமந்திமாலையாம்
கருநிறச்செம்மயிர்க்காலன்றோன்றினான். (௬௨)

மீதறைபறவையாம்பறையுங்கீழ்விளி
ஓதமென்சிலம்பொடுமுதிரச்செக்கரும்
பாதகவிருள்செய்கஞ்சுகமும்பற்றலாற்
சாதகமென்னவுந்தழைத்தமாலையே. (௬௩)

வேறு.

கயங்களென்னுங்கனல்தோய்ந்துகடிநாண்மலரின்விடம்பூசி
இயங்குதென்றன் * மன்மதவேளெய்தபுண்ணினிடைநுழைய
உயங்குமுணர்வுநன்னலமுமுருகிச்சோர்வாளுயிருண்ண
வயங்குமாலைவாளேக்கியிதுவோகூற்றின்வடிவென்றாள். (௬௪)

கடலோமழையோமுழுநீலக்கல்லோகாயாநறும்போதோ
படர்பூங்குவளைநாண்மலரோநீலோற்பலமோபானலோ
இடர்சேர்மடவாருயிருண்பதியாதோவென்றுதளர்வாண்முன்
மடல்சேர்தாரானிறம்போலுமந்திமாலைவந்ததுவே. (௬௫)

---

* மன்மதவேள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

மைவானிறத்துமீனெயிற்றுவாடையுயிர்ப்பின்வளர்செக்கர்ப்
பைவாயந்திப்படவரவேயென்றுவளைத்துப்பகைத்தியால்
எய்வானொருவன்கையோயானுயிருமொன்றேயினியில்லை
உய்வானுறவிப்பழிபூணவுன்றேனெனக்குப்பகையுண்டோ. (கூகூ)

ஆலமுலகிற்பரந்ததுவோவாழிகிளர்ந்ததோவவர்தம்
நீலநிறத்தையெல்லோருநினைக்கவதுவாய்நிரம்பியதோ
காலனிறத்தையஞ்சனத்திற்கலந்துகுழைத்துக்காயத்தின்
மேலுநிலத்துமெழுகியதோவிளைக்குமிருளாய்விளைந்ததுவே. (கூஎ)

வெளிநின்றவரோபோய்மறைந்தார்விலக்கவொருவர்தமைக்காணேன்
எளியள்பெண்ணென்றிரங்காதேயெல்லியாமத்திருளூடே
* ஒளியம்பெய்யுமன்மதனொருனக்கிம்மாயமுரைத்தாரோ
அளியென்செய்தநீவினையேயன்றிலாகிவந்தாயோ. (கூஅ)

ஆண்டங்களையாளினையகினைந்தமுழங்கும்வேலையகல்வானம்
தீண்டநிமிர்ந்தபெருங்கோயிற்சித்மணியின்வேதிகைவாய்
நீண்டசோதிநெய்விளக்கம்வெய்யவென்றங்கவைநீக்கித்
தூண்டல்செய்யாமணிவிளக்கின்சுடராலிருளைப்பகல்செய்தார். (கூகூ)

பெருந்திண்ணெமொல்வரைநிறுவிப்பிணித்தபாம்பின்மணித்தாம்பின்
விரிந்ததிவலையுதிர்ந்தமணிவிசும்பின்மீனின்மேல்விளங்க
அருந்தவமரர்கலந்கியநாளமுதநிறைந்தபொற்கலசம்
இருந்ததிடைவந்தெழுந்ததெனவெழுந்ததாழிவெண்டிங்கள். (எ0)

வண்டாயயனுன்மறைபாடமலர்ந்ததொருதாமரைப்போது
பண்டாலிலையின்மிசைக்கிடந்து † பாருநீரும்பசித்தான்போல்
உண்டானுந்திக்கடல்பூத்தவோதக்கடலுந்தான்வேறோர்
வெண்டாமரையின்மலர்பூத்ததொத்ததாழிவெண்டிங்கள். (எக)

புள்ளிக்குறியிட்டெனவொண்மீன்பூத்தவானம்பொலிகங்குல்
நள்ளிற்சிறந்தவிருட்பிழம்பைநக்கிநிலாக்கற்றை
கிள்ளைக்கிளவிக்கென்றுங்கொல்கீழ்பாற்றிசையின்மிசைவைத்த
வெள்ளிக்கும்பத்திளங்கமுகின்பாளைபோன்றுவிரிந்துளதால். (எஉ)

விரைசெய்கமலப்பெரும்போதுவிரும்பிப்புகுந்ததிருவினொடும்
குரைசெய்வண்டின்குழாமிரியக்கூம்பிச்சாம்பிக்குவிந்துளதால்
உரைசெய்திகிரிதனையுருட்டியொருகோலோச்சியுலகாண்ட
அரசனொதுங்கத்தலையெடுத்தகுறும்புபோன்றதரக்காம்பல். (எங)

* ஒளி என்றது ஒளித்து எனப் பொருள்படுதலை வரிப்புனைபந்தென் புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

† பாரு நீரும் பசித்தானென்பதற்கு நிலனுங்கடலு முண்டானெனப் பொருள்படல் காண்க.

வண்ணமாலைகைபரப்பியுலகைவளைந்தவிருளெல்லாம்
உண்ணவெண்ணித்தண்மதியத்துதயத்தெழுந்தநிலாக்கற்றை
விண்ணுமண்ணுந்திசையனைத்தும்விழுங்கிக்கொண்டவிரிநன்னீர்ப்
பண்ணைவெண்ணெய்ச்சடையன்றன்புகழ்போலெங்கும்பரந்துளவால். ()

நீத்தமதனின்முளைத்தெழுந்தநெடுவெண்டிங்களெனுந்தச்சன்
மீத்தன்கரங்களவைபரப்பிமிகுவெண்ணிலவாம்வெண்சுதையால்
காத்தகண்ணன்மணியுந்திக்கமலநாளத்திடைப்பண்டு
பூத்தவண்டம்பழையதென்றுபுதுக்குவானும்போன்றுளதால். (எரு)

நீங்காமாயையவர்தமக்குநிறமேதோற்றப்புறமேபோய்
எங்காக்கிடக்குமெறிகடற்குமெனக்குங்கொடியையானாயே
ஓங்காநின்றவிருளாய்வந்துலகைவிழுங்கிமென்மேலும்
வீங்காநின்ற * கருநெருப்பினிடையேயெழுந்தவெண்ணெருப்பே. (எசு)

(வேறு).

கொடியையல்லைநீயாரையுங்கொல்கிலாய்
மடுவிலின்னமுதத்தொடும்வந்தனை
பிடியின்மென்னடைப்பெண்ணொடென்றுமெனைச்
† சுடுதியோகடற்றோன்றியதிங்களே. (எஎ)

மீதுமொய்த்தெழுவெண்ணிலவின்கதிர்
மோதுமத்திகைமென்முலைமேற்பட
ஓதிமப்பெடைவெங்கனலுற்றெனப்
போதுமொய்த்தமளிப்புரண்டாளரோ. (எஅ)

நீக்கமின்றிநிமிர்ந்தநிலாக்கதிர்
தாக்கவெந்துதளர்ந்துசரிந்தனள்
சேக்கையாகிமலர்ந்தசெந்தாமரைப்
‡ பூக்கள்பட்டதப்பூவையும்பட்டனள். (எகூ)

வாசமென்கலவைக்களிவாரிமேல்
பூசப்பூசப்புலர்ந்துபுழுங்கினள்
வீசவீசவெதும்பினள்மென்முலை
§ ஆசைநோய்க்குமருந்துமுண்டாங்கொலோ. (அ0)

தாயரிற்படிசேடியர்தாதகு
வீயரித்தளிர்மெல்லணைமேனியிற்

---

* கருநெருப்பென்றது இருளை, வெண்ணெருப்பென்றது மதியை.

† கடலின்கண் அமுதத்தொடும் பெண்ணொடுந்தோன்றிய நீ என்னைச்சுடுதல் தக்கதன்றென்பார் எனைச் சுடுதியோ என்றனென்க.

‡ பூக்கள் பட்டது பால்வழுவமைதி.

§ 'தன்னோய்க்குத்தானே மருந்து' என்பவாகலின் ஆசைநோய்க்கு மருந்துமுண்டாங்கொலோ என்றார்.

காயெரிக்கரியக்கரியக்கொணர்ந்
தாயிரத்தினிரட்டியடுக்கினார். (அக)

கன்னிநன்னகரிற் * கமழ்சேக்கையுள்
அன்னமின்னணமாயினளாயவள்
மின்னின்மின்னியமேனிகண்டானெனச்
சொன்னவண்ணலுக்குற்றதுசொல்லுவாம். (அஉ)

ஏகிமன்னனைக்கண்டெதிர்கொண்டவன்
ஓகையோடினிதுகொண்டுய்த்திடப்
† போகபூமியிற்பொன்னகரன்னதோர்
மாகமாடத்தனையவர்வைகினார். (அங)

வைகுமவ்வுழிமாதவம்யாவுமோர்
செய்கைகொண்டுநடந்தெனத்தீதறு
மொய்கொள்வீரன்முளரியந்தாளினால்
மெய்கொண்மங்கையருண்முனிமேவினான். (அச)

வந்தெதிர்ந்தமுனிவனைவள்ளலுஞ்
சிந்தையாரவணங்கலுஞ்சென்றெதிர்
அந்தமில்குணத்தானெடிதாசிகள்
தந்துகோசிகன்றன்மருங்கெய்தலும். (அரு)

கோதமன்றருகோமுனிகோசிக
மாதவன்றனைமாமுகநோக்கியிப்
போதுநீயிவட்போதவிப்பூதலம்
ஏதுசெய்ததவமென்றியம்பினான். (அசு)

பூந்தண்சேக்கைப்புனிதனையேபொரு
வேய்ந்தகேண்மைச் ‡ சதானந்தனென்றெனும்
வாய்ந்தமாதவன்மாமுகநோக்கினால்
தோய்ந்தசிந்தைக்கௌசிகன்சொல்லுவான். (அஎ)

வடித்தமாதவகேட்டியிவ்வள்ளறன்
இடித்தவெங்குரற்றாடகையாக்கையும்
அடுத்தென்வேள்வியும்நின்னன்னைசாபமும்
முடித்தென்னெஞ்சத்திடர்முடித்தானென்றான். (அஅ)

என்றுகோசிகன்கூறிடவீறிலா
வன்றபோதனன்மாதவநின்னருள்

* கமழ்சேக்கை-புஷ்பசயனம்.
† போகபூமி-ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், எமவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம்.
‡ சதானந்தன்-அகலிகைபுத்திரன்.

இன்றுதானுளதேலரிதியாதிந்த
வென்றிவீரர்க்கெனவும்விளம்பிமேல். (௮௯)

எள்ளில்பூவையுமிந்திரநீலமும்
அள்ளல்வேலையுமம்புதசாலமும்
விள்ளும்வீயுடைப்பானலு * மேவுமெய்
வள்ளல்தன்னைமதிமுகநோக்கியே. (௯0)

நறுமலர்த்தொடைநாயகநானுனக்
கறிவுறுத்துவென்கேளிவ்வருந்தவன்
இறையெனப்புவிக்கீறில்பல்லாண்டெலாம்
முறையினிற்புரந்தேயருண்முற்றினான். (௯௧)

அரசின்வைகியறனினமைந்துழி
விரசுகானிடைச்சென்றனன்வேட்டைமேல்
உரைசெய்மாதவத்தோங்குவசிட்டனும்
பரசுவானவன்பாலணைந்தானரோ. (௯௨)

வேறு.

அருந்ததிகணவன்வேந்தற்கருங்கடன்முறையினாற்றி
இருந்தருட்டருதியென்னவிருந்துழியினிதுநற்கு
விருந்தினியமைப்பெனென்னாச்சுரபியைவிளித்துநீயே
சுரந்தருளமிர்தமென்னவருண்முறைசுரந்ததன்றே. (௯௩)

† அறுசுவைத்தாயவுண்டியரசனின்னனிகத்தோடும்
பெறுகெனவளித்துவேந்தோடியாவருந்துய்த்தபின்னர்
நறுமலர்த்தாரும்வாசக்கலவையுநல்கலோடும்
‡ உறுதுயர்தணிந்துமன்னனுய்த்துணர்ந்துரைக்கலுற்றான். (௯௪)

மாதவவெழுந்திலாய்நீவயப்புடைப்படைகட்கெல்லாம்
கோதறுமமிர்தமிக்கோவுதவியகொள்கைதன்னால்
தீதறுகுணத்தாண்மிக்கசெழுமறைதெரிந்தநூலோர்
மேதகுபொருள்கள்யாவும்வேந்தருக்கென்னைதன்னால். (௯௫)

நிற்கிதுதகுவதன்றானீட்டருஞ்சுரபிதன்னை
எற்கருளென்றலோடுமியம்பலன்யாதும்பின்னர்
வற்கலையுடையன்யானேவழங்கலென்வருவதாகிற்
கொற்கள்வேலுழவநீயேகொண்டகல்கென்றுகூற. (௯௬)

---

* இவையனைத்தும் இவன் வண்ணம்பெறவேண்டலின் மேவுமெய் வள்ளலென்றார்.

† அறுசுவை-இனிப்பு,கார்ப்பு, கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன.

‡ உறுதுயர்—பசியாலும் நடையாலுமடைந்ததுயர்.

பணித்ததுபுரிவனென்னாப்பார்த்திபனெழுந்துபொங்கிப்
பிணித்தனன்சுரபிதன்னைப்பெயர்வுழிப்பிணியைவீட்டி.
மணித்தடந்தோளினாற்குக்கொடுத்தியோமறைகள்யாவும்
கணித்தவெம்பெருமவென்னக்கலைமறைமுனிவன்சொல்வான். (௯௭)

கொடுத்திலென்யானேமற்றைக்குடைகெழுவேந்தன்றானே
பிடித்தகல்வுற்றதென்னப்பெருஞ்சினங்கதுவுநெஞ்சோ
டடித்தெழுமுரசவேந்தன்சேனையையானேயின்று
முடிக்குவென்காண்டியென்னாமொய்ம்மயிர்சிலிர்த்ததன்றே. (௯௮)

பப்பரரெயினர்சீனகர்சோனகர்முதலபல்லோர்
கைப்படையதனினோடுங்கபிலைமாட்டுதித்துவேந்தன்
துப்புடைச்சேனையாவுந்தொலையுறத்துணித்தலோடும்
வெப்புடைக்கொடியமன்னன்றனையர்கள்வெகுண்டுமிக்கார். (௯௯)

சுரபிதன்வலியிதன்றால்சுருதிநூலுணரவல்ல
வரமுனிவஞ்சமென்னாமற்றவன்சிரத்தையின்னே
அரிகுதுமென்னப்பொங்கியடர்த்தனரடரவன்றான்
எரியெழவிழித்தலோடுமிறந்தனர்குமரரெல்லாம். (௧௦௦)

ஐயிருபதின்மர்மைந்தரவிந்தமையரசன்காணா
நெய்பொழிகனலிற்பொங்கிநெடுங்கொடித்தேர்கடாவிக்
கைதொடர்கணையினோடுங்கார்முகம்வளையவாங்கி
எய்தனன்முனியுந்தன்கைத்தண்டினையெதிர்கவென்றான். (௧௦௧)

கடவுளர்படைகளீறாக்கற்றனபடைகள்யாவும்
விடவிடமுனிவன்றண்டம்விழுங்கிமேல்விளங்கல்காணா
* வடவரைவில்லிதன்னைவணங்கினன்வழுத்தலோடும்
அடறுலுபடையொன்றீயானன்னவனகன்றானன்றே. (௧௦௨)

விட்டனன்படையைவேந்தன்விண்ணுளோருலகையெல்லாம்
சுட்டனவென்னவஞ்சித்துளங்கினர்முனியுந்தோன்றிக்
கிட்டியபடையையுண்டுகிளர்ந்தனன்கிளருமேனி
முட்டவெம்பொறிகள்சிந்தப்பொருபடைமுரணதிற்றே. (௧௦௩)

கண்டனனரசன்காணாக்கலைமறைமுனிவர்க்கல்லால்
திண்டிறல்வலியுந்தேசுமுளவெனல்சீரிதம்மா
மண்டலமுழுதுங்காக்குமொய்ம்பொருவலியன்றென்னா
ஒண்டவம்புரியவெண்ணியும்பர்கோன்றிசையையுற்றான். (௧௦௪)

* வடவரைவில்லி-வடதிசையிலுள்ளனவெல்லாம் வடவரையேயாயினும் வில்லியென்னும் குறிப்பால் மேருவெனப்பட்டது.

மாண்டமாதவத்தோன்செய்தவலனையேமனத்தினெண்ணி
பூண்டமாதவத்தனாகியரசர்கோன்பொலியுநீர்மை
காண்டலுமமரர்வேந்தன் றனக்குறுகருத்தினோடும்
தூண்டினனரம்பைமாருட்டிலோத்தமையெனுஞ்சொன்மானை. (௧௦௫)

அன்னவண்மேனிகாணவனங்கவேள்சரங்கள்பாயத்
தன்னுணர்வழிந்துகாதற்சலதியினழுந்திவேந்தன்
பன்னரும்பகல்தீர்வுற்றப்பரிணதர்தெரிந்த * நூலின்
நன்னயமுணர்ந்தோனாகிநஞ்செனக்கனன்றுநக்கான். (௧௦௬)

விண்முழுதாளிசெய்தவினையெனவெகுண்டுநீபோய்
மண்மகளாதியென்றுமடவாரன்னையேயவிக்
கண்மலர்சிவப்பவுள்ளங்கறுப்புறக்கடிதிலேகி
எண்மரின்வலியனாயமன்றிசைதன்னையுற்றான். (௧௦௭)

தென்றிசையதனைநண்ணிச்செய்தவஞ்செய்யுஞ்செவ்வி
வன்றிறலயோத்திவாழுமன்னவன்றிரிசங்கென்பான்
தன்றுணைக்குருவைநண்ணித்தனுவொடுந்துறக்கமெய்த
இன்றெனக்கருளுகென்னவாண்டிறந்தெய்துகென்றான். (௧௦௮)

நினக்கொலாதாகினையநீணிலத்தியாவரேனும்
மனக்கினியாரைநாடிவகுப்பல்யானென்வேள்வியென்னச்
சினக்கொடுந்திறலோய்முன்னர்த்தேவிகற்பிழைத்துவேறோர்
நினக்கிதனூடிநின்றாய்நீசனாய்விடுதியென்றான். (௧௦௯)

மலருளோன்மைந்தன்மைந்தவழங்கியசாபந்தன்னால்
அலரியோன்றானுநாணும்வடிவிழந்தரசர்கோமான்
புலரியங்கமலம்போலும்பொலிவொரீஇவதனம்பூவிற்
பலருமாங்கிகழ்தற்கொத்தபடிவம்வந்துற்றதன்றே. (௧௧௦)

காசொடுமுடியும்பூணுங்கரியதாங்கனகம்போன்று
தூசொடுமணியுமுந்நூல்தோற்றருந்தோற்றம்போன்று
மாசொடுகருகிமேனிவனப்பழிந்திடவூர்வந்தான்
சீசியென்றியாருமெள்ளத்திகைப்பொடுபழுவஞ்சேர்ந்தான். (௧௧௧)

கானிடைச்சிறிதுவைகல்கழித்தொர்நாட்கௌசிகப்பேர்க்
கோனினிதுறையுஞ்சோலைகுறுகினன்குறுகவன்னோன்
ஈனனீயாவனென்னைநேர்ந்ததிவ்விடையினென்ன
† மேனிகழ்பொருள்களெல்லாம்விளம்பினன்வணங்கிவேந்தன். (௧௧௨)

* நூலின் நன்னயமுணர்தல்-மாதர்பால் மனங்கலங்காதிருத்தல்.

† மேனிகழ் பொருள்களென்றது—தன்னை வசிட்டன் சபித்தன முதலியன.

இற்றதோவெனநக்கனன்யானிருவேள்விமுற்றி
மற்றுலகளிப்பெனென்னுமாதவர்தம்மைக்கூவச்
சுற்றுறுமுனிவர்யாருந்தொக்கனர்வசிட்டன்மைந்தர்
கற்றிலமரசன்வேள்விகணற்றுறைபுலையற்கிவான். (௧௧௩)

என்றுரைத்தியாங்களெல்லோமென்றனரென்னப்பொங்கிப்
புன்றொழிற்கிராதராகிப்போகெனப்புகறலோடும்
அன்றவரெயினராகியடவிகடோறுஞ்சென்றார்
நின்றுவேள்வியையுமுற்றிநிராசனர்வருகவென்றான். (௧௧௪)

அரைசனிப்புலையற்கென்னேயனற்றுறைமுற்றியெம்மை
விரைசுகவல்லையென்பான்விழுமிதென்றிகழ்ந்துநக்கார்
* புரைசைமாகளிற்றுவேந்தைப்போகநீதுறக்கம்யானே
உரைசெய்தேன்றவத்தினென்னவோங்கினவிமானத்தும்பர். (௧௧௫)

ஆங்கவன்றுறக்கமெய்தவமரர்கள்வெகுண்டுநீசன்
ஈங்குவந்திடுவதென்னேயிருநிலத்திழிகவென்னத்
தாங்கலில்கவிழ்வான்மற்றுத்தாபதசரணமென்ன
ஓங்கின † னின்னில்லென்னவுரைத்துருமொக்கநக்கான். (௧௧௬)

பேணலாதிகழ்ந்தவிண்ணோர்பெரும்பதமுதலாமற்றைச
சேண்முழுதமைப்பலென்னாச்செழுங்கதிர்கோணுடிங்கள்
மாணெறிகெடாதுதெற்குவடக்கவாய்வருகவென்று
தாணுவோடூர்வவெல்லாஞ்சமைக்குவெனென்னும்வேலை. (௧௧௭)

நறைத்தருவுடையகோனுநான்முகக்கடவுடானும்
கறைத்தருகளனுமற்றைக்கடவுளர்பிறருந்தொக்குப்
பொறுத்தருண்முனிவநின்னைப்புகல்புகுந்தவனைப்போற்றும்
அறத்திறனன்றுதாரகணத்தொடுமமைகவென்னா. (௧௧௮)

அரசமாதவனீயாதி ‡ யைந்துநாட்டென்பால்வந்துன்
புரைவிளக்கிடுகவென்னாக்கடவுளர்போயபின்னர்
நிரைதவன்விரைவினேகிநெடுங்கடற்கிறைவன்வைகும்
உரவிடமதனைநண்ணியுறுதவமுஞற்றுங்காலை: (௧௧௯)

குதைவரிசிலைவாட்டானைக்கோமகனம்பரீடன்
சுதைதருமொழியன்னையத்துயிர்க்குயிராயதோன்றல்

---

* புரசை-யானைக்கழுத்தணிகயிறு. † நின்னில் லென்றவடுக்கு-விரைவுப்பொருளது. ‡ ஐந்துநாண்மீன்களாவன;—அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பன. இவை படைப்புக்காலந்தொட்டு வடக்கிலிருந்தன தேவர்களால் இவ்விஸ்வாமித்திரர் விஷயமாய்த் தெற்கில் பிரகாசிக்கும்படி நியமிக்கப்பட்டன. ஆதலால் அசுவினிமுதல் விசாகம்வரையிலுள்ள இருபத்திரண்டு நாண்மீன்களே வடக்கிலிப்பொழுது காணப்படுவன,

வதைபுரிபுருடமேதம்வகுப்பவோர்மைந்தற்கொள்வான்
சிதைவிலன்கனகந்தேர்கொண்டடவிகடுருவிச்சென்றான். (கஉ0)

நற்றவரிசிகன்வைகுநனைவரும்பழுவநண்ணிக்
கொற்றவன்வினவலோடுமிசைந்தனர்குமரர்தம்முள்
பெற்றவளிளவலெற்கேயென்றனள்பிதாமுன்னென்றான்
மற்றையமைந்தனக்குமன்னவன்றன்னைநோக்கி. (கஉக)

கொடுத்தருள்வெறுக்கைவேண்டிற்றொற்கமாம்விழுமங்குன்ற
எடுத்தெனைவளர்த்ததாதைக்கென்றவற்றொழுதுவேந்தன்
* தடுப்பருந்தேரினேறித்தடையிலாப்படர்தலோடும்
சுடர்க்கதிர்க்கடவுள்வானத்துச்சியஞ்சூழல்புக்கான். (கஉஉ)

அவ்வையினிழிந்துவேந்தனருங்கடன்முறையினாற்றச்
செவ்வியகுரிசிறானுஞ்சென்றனனியமஞ்செய்வான்
அவ்வியமவித்தசிந்தைமுனிவனையாண்டுக்காணாக்
கவ்வையினோடும்பாதகமலமதுச்சிசேர்த்தான். (கஉ௩)

விறப்பொடுவணக்கஞ்செய்தவிடலையையினிதுநோக்கிச்
சிறப்புடைமுனிவனென்னைத்தெருமரல்செப்புகென்ன
அறப்பொருளுணர்ந்தோயென்றனன்னை நம்முன்னையென்னை
உறப்பொருள்கொண்டுவேந்தற்குதவினனென்றானுற்றோன். (கஉ௪)

மைத்துனனோடுமுன்னாள்வழங்கியமுறைமைகேளாத்
தத்துறவொழிநீயானேதடுப்பெனினுயிரையென்றாப்
புத்திரர்தம்மைநோக்கிப்போகவேந்தோடுமென்ன
அத்தகுமுனிவன்கூறவவர்மறுத்தகறல்காணா. (கஉ௫)

எழுங்கதிரவனுநாணச்சிவந்தனனிருகணெஞ்சம்
புழுங்கினன்வடவைதீயமயிர்ப்புறம்பொறியிற்றுள்ள
அழுங்கலில்சிந்தையீர்நீரடவிகடோறுஞ்சென்றே
ஒழுங்கறுபுளினராகியுறுதுயருறுகவென்றான். (கஉ௬)

மாமுனிவெகுளிதன்னான்மடிகலாமைந்தர்நால்வர்
தாமுறுசவரராகச்சபித்தெதிர்சலித்தசிந்தை
ஏமுறவொழிகவின்னேபெறுகெனவிரண்டுவிஞ்சை
கோமருகனுக்குநல்கிப்பின்னருங்குணிக்கலுற்றான். (கஉ௭)

அரசனோடேகி † யூபத்தணைக்குபிம்மறையயாய்கி
விரசுவர்விண்ணுளோரும்விரிஞ்சனும்விடைவலோனும்
உரைசெறிவேள்விமுற்றுமுனதுயிர்க்கீறுண்டாகா
பிரசமென்றாரோயென்னப்பழிச்சொடும்பெயர்ந்துபோனான். (கஉ௮)

---

* தடையிலா-ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்.

† யூபம்-வேள்வித்தூண்.

மறைமுனியுரைத்தவண்ணமகத்துறைமைந்தனுய
* சிறையுறுகலுழனன்னஞ்சேமுதற்பிறவுமூரும்
இறைவர்தொக்கமரர்சூழவிளவறன்னுயிரும்வேந்தன்
முறைதருமகமுங்காத்தார்வடதிசைமுனியுஞ்சென்ருன். (௧௨௯)

வடாதிசைமுனியுநண்ணிமலர்க்கரநாசிவைத்தாங்
கிடாவுபிங்கலையானையவிதயத்தூடெழுத்தொன்றெண்ணி
விடாதுபற்பருவகிற்பமூலமாமுகடுவிண்டு
தடாதிருட்படலமூடச்சலித்ததெத்தலமுந்தாவி. (௧௩0)

வேறு.

எயிலெரித்தவன்யானையுரித்தநாள்
பயிலுறுத்துரிபோர்த்தநன்பண்பெனப்
புயல்விரித்தெழுந்தாலெனப்பூதலம்
குயிலுறுத்திக்கொழும்புகைவிம்மவே. (௧௩௧)

தமந்திரண்டுலகியாவையுந்தாடற
நிமிர்ந்தவெங்கதிர்க்கற்றையுநீங்குறக்
கமந்தமாதிரக்காவலர்கண்ணொடும்
சுமந்தராகமுஞ் † கண்சும்புளித்தவே. (௧௩௨)

‡ திரிவகிற்பசெகதலத்தியாவையும்
வெருவலுற்றனவெங்கதிர்மீண்டன
கருவியுற்றககனமெலாம்புகை
உருவியுற்றிடவும்பர்துளங்கினர். (௧௩௩)

புண்டரீகனும்புட்டிருப்பாகனும்
குண்டையூர்திருவிசியுமற்றுள
அண்டர்தாமும்வந்தவ்வயினெய்திவே
றெண்டபோதனன்றன்னையெதிர்ந்தனர். (௧௩௪)

பாதிமாமதிசூடியும்பைந்துழாய்ச்
சோதியோனுமத்தூய்மலராளியும்
வேதபாரகர்வேறிலர்நீயலால்
மாதபோதனவென்னவழங்கினர். (௧௩௫)

அன்னவாசகங்கேட்டுணரந்தணன்
சென்னிதாழ்த்திருசெங்கமலங்குவித்

---

* சிறையுறுகலுழனன்னஞ்சே வூருமிறைவர் - மும்மைப்பெருந்தேவர், பிறவுமூருமென்றதனுன் யானையை யூர்தியாகக்கொண்ட இந்திரன் முதலிய இறைவரைக் குறித்தமைகாண்க. † கண்சும்பிளித்தல்-கண்களைச்சுருக்கிப்பார்த்தல், சும்பிளித்தல் கூசுதல். ‡ திரிவகிற்ப-இயங்குதிணை நிலைத்திணையுயிரை, சென்றுநின்று வாழுயிரெலாமென்றதுமிது.

துன்னுநல்வினையுற்றதென்றேங்கினன்
துன்னுதேவர்தஞ்சூழலுட்போயினர். (௧௩௬)

ஈதுமுன்னர்நிகழ்ந்த * திவன்றுணை
மாதவத்துயர்மாண்புடையாரிலை
நீதிவித்தகன்றன்னருணோர்ந்தனிர்
யாதுமக்கரிதென்றனனீறிலான். (௧௩௭)

என்று † கோதமன்காதலன்கூறிட
வென்றிவீரர்வியப்பொடுவந்தெழா
ஒன்றுமாதவன்றாடொழுதோங்கிய
பின்றையேத்திப்பெயர்ந்தனன்றன்னிடம். (௧௩௮)

முனியுந்தம்பியுமொய்ம்பினையாற்றமக்
கினியபள்ளிகளெய்தியபின்னிருட்
கனியும்போல்பவன்கங்குலுந்திங்களும்
தனியுந்தானுமதத்தையலுமாயினன். (௧௩௯)

விண்ணினீங்கியமின்னுருவிம்முறை
பெண்ணினன்னலம்பெற்றதுண்டேகொலோ
எண்ணினீதலதென்றறியேனிரு
கண்ணினுள்ளுங்கருத்துள்ளுங்காண்பெனால். (௧௪௦)

வள்ளற்சேக்கைக்கரியவன்வைகுறும்
வெள்ளப்பாற்கடல்போன்மிளிர்கண்ணினள்
அள்ளற்பூமகளாகுங்கொலோவென
துள்ளத்தாமரையுள்ளுறைகின்றதே. (௧௪௧)

அருளிலாளெனினும்மனத்தாசையால்
வெருளுநோய்விடக்கண்ணின்விழுங்கலால்
தெருளிலாவுலகிற்சென்றுநின்றுவாழ்
பொருளெலாமவள்பொன்னுருவாயவே. (௧௪௨)

பூணுலாவியபொற்கலசங்களென்
ஏணிலாகத்தெழுதலவென்னினும்
வாணிலாமுறுவற்கனிவாய்மதி
காணலாவதோர்காலமுண்டாங்கொலோ. (௧௪௩)

வண்ணமேகலைத்தேரொன்றுவாணெடுங்
கண்ணிரண்டுகதிமுலைதாமிரண்
டெண்ணிவந்தநகையுமுண்டாமெனில்
எண்ணுங்கூற்றினுக்கித்தனைவேண்டுமோ. (௧௪௪)

* இவன்று-இவனிகராக.
† கோதமன்காதலன்-சதாநந்தன்.

கன்னலின்கருப்புச்சிலையான்விரை
பொன்னைமுன்னியபூங்கணைமாரியால்
என்னையெய்துதொலேக்குமென்ருலினி
வன்மையென்னுமிதாரிடைவைகுமே. (௧௪௫)

கொள்ளைகொள்ளக்கொதித்தெழும்பாற்கடற்
பள்ளவெள்ளமெனப்படருந்நிலா
உள்ளவுள்ளவுயிரைத்துருவிட
* வெள்ளேவண்ணவிடமுமுண்டாங்கொலோ. (௧௪௬)

ஏகுநல்வழியல்வழியென்மனம்
ஆகுமோவதற்காகியகாரணம்
பாகுபோன்மொழிப்பைந்தொடிகன்னியே
ஆகும்வேறிதற்கையுறவில்லேயே. (௧௪௭)

கழிந்தகங்குலரசன்கதிர்க்குடை
விழுந்ததென்னவுமேற்றிசையாள்சுடர்க்
கொழுந்துசேர்நுதற்கோதறுசுட்டிபோய்
அழிந்ததென்னவுமாழ்ந்தது திங்களே. (௧௪௮)

வீசுகின்றநிலாச்சுடர்வீந்ததால்
ஈசனுமதியேகலுஞ்சோகத்தால்
பூசுவெண்கலவைப்புனைசாந்தினை
ஆசைமாதரழித்தனவொன்னவே. (௧௪௯)

(வேறு.

தையுமலர்த்தாரண்ணலிவ்வண்ணமயலுழந்துதளருமெல்லை
சிதையுமனத்திடருடையசெங்கமலமுகமலரச்செய்யவெய்யோன்
புதையிருளினெழுகின்றபுகர்முகயானையினுரிவைப்போர்வைபோர்த்த
உதையகிரியெனுங்கடவுணுதல்கிழித்தவிழியேபோலுதயஞ்செய்தான். ()

விசையாடற்பசும்புரவிக்குரமிதிப்பவுதயகிரிவிரிந்ததூளி
பசையாகமறையவர்கைந்நறைமலருநிறைபுனலும்பரந்துபாய [யோன்
அசையாத நெடுவரையின் முகடுதொறு மிளங்கதிர்சென் றளேந்துவெய்
திசையாளுமதகரியைச்சிந்தூரமப்பியபோற்சிவந்தமாதோ. (௧௫௧)

பண்டுவெருங்குறிபகர்ந்துபாசறையிற்பொருள்வயினிற்பரிந்துபோன
வண்டுதொடர்நறுந்தெரியலுயிரனையகொழுநர்வரமணித்தேரோடும்
கண்டுமனங்களிசிறப்பவொளிசிறந்துமெலிவகலுங்கற்பினூர்போல்
புண்டரிகமுகமலரவகமலர்ந்துபொலிந்தனபூம்பொய்கையெல்லாம். ()

* இது சந்திரோபாலம்பனமென்க.

எண்ணரியமறையினெடுகின்னரர்களிசைபாடவுலகமேத்த
விண்ணவருமுனிவர்களும்வேதியருங்கரங்குவிப்பவேலையென்னும்
மண்ணுமணிமுழவதிரவானரங்கினடம்புரிவாளிரவியான
கண்ணுதல்வானவன்கனகச்சடைவிரிந்தாலெனவிரிந்தகதிர்களெல்லாம்.

கொல்லாழிநீத்தங்கோர்குனிவயிரச்சிலைதடக்கைகொண்டகொண்டல்
எல்லாழித்தேரிரவியிளங்கரத்தாலடிவருடியனந்தறீர்ப்ப
அல்லாழிக்கரைகண்டாறுயிரவாய்மணிவிளக்கமழலுஞ்சேக்கைத்
தொல்லாழிதுயிலாதேதுயராழிநெடுங்கடலுட்டுயில்கின்றானே. (௧௫௪)

ஊழிபெயர்ந்தெனக்கங்குலொருவண்ணம்புடைபெயரவுறக்கநீத்த
சூழியானையினெழுந்துதொன்னியமத்துறைமுடித்துச்சுருதியன்ன
வாழிமாதவற்பணிந்துமனக்கினியதம்பியொடும்வம்பின்மாலை
தாழுமாமணிமௌலித்தார்ச்சனகன்பெருவேள்விச்சாலைசார்ந்தான். ()

முடிச்சனகர்பெருமானுமுறையாலேமறைவேள்விமுற்றிச்சுற்றம்
இடிக்குரலின்முரசியம்பவிந்திரன்போற்சந்திரன்றோய்கோயிலெய்தி
எடுத்தமணிமண்டபத்துளெண்டவத்துமுனிவரொடுமிருந்தான்பைந்தார்
வடித்தகுனிவரிசிலைக்கைமைந்தனுந்தம்பியுமருங்கினிருப்பமாதோ. ()

இருந்தகுலக்குமரர்தமையிருகண்ணின்முகந்தருகுபருகநோக்கி
அருந்தவனையடிவணங்கியாரையிவருரைத்திடுமினடிகளென்ன
விருந்தினர்களின்னுடையவேள்விகாணியவந்தார்வில்லுங்காண்பார்
பெருந்தகைமைத்தயரதன்றன்புதல்வரெனவவர்தகைமைபேசலுற்றான்.

௧௦-வது, மிதிலைக்காட்சிப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-எ௨௧.

---

## ௧௧-வது, குலமுறைகிளத்துபடலம்.

சூரியவம்சத்தரசரது வரலாறு கூறுகின்ற படலம்.

ஆதித்தன்குலமுதல்வன்மனுவினையாரறியாதார்
பேதித்தவுயிரனைத்தும்பெரும்பசியால்வருந்தாமற்
சோதித்தன்வரிசிலையாணிலமடந்தைமுலைசுரப்பச்
சாதித்தபெருந்தகையுமிவர்குலத்தோராபதிகாண். (௧)

பிணியரங்கவினையகலப்பெருங்காலந்தவம்பேணி
மணியரங்கநெடுமுடியாய்மலரயனைவழிபட்டுப்
பணியரங்கப்பெரும்பாயற்பரஞ்சுடரையாங்காண
அணியரங்கந்தந்தானையறியாதாரறியாதார். (௨)

தான்றனக்குவெலற்கரியதானவரைத்தலைதுமித்தென்
வான்றரக்கிற்றிகொலென்றாகுறையிரப்பவரங்கொடுத்தாங்
கேன்றெடுத்தசிலையினனாயிகல்புரிந்தவிவர்குலத்தோர்
தோன்றலைப்பண்டிந்திரன்காண்விடையேறாய்ச்சுமந்தானும். (௩)

அரைசனவன்பின்னோரையென்னாலுமளப்பரிதால்
உரைகுறுகநிமிர்கீர்த்தியிவர்குலத்தோனொருவன்காண்
நரைதிரைமூப்பிவைமாற்றியிந்திரனுநந்தாமல்
குரைகடலைநெடுவரையாற்கடைந்தமுதுகொடுத்தானும். (௪)

கருதலரும் * பெருங்குணத்தோரிவர்முதலோர்கணக்கிறந்தோர்
திரிபுவனமுழுதாண்டுசுடர்நேமிசெலநின்றோர்
பொருதுறைசேர்வேலினாய்புலிப்போத்தும்புல்வாயும்
ஒருதுறையினீருண்ணவுலகாண்டோனுளனொருவன். (௫)

மறைமன்னுமணிமுடியுமாரமுந்தோளொடுமின்னப்
பொறைமன்னுவானவருந்தானவரும்பொருமொருநாள்
விறன்மன்னர்தொழுகழலாயிவர்குலத்தோன்விற்பிடித்த
அறமென்னவொருதனியேதிரிந் † தமராபதிகாத்தோன். (௬)

இன்னுயிர்க்குமின்னுயிராயிருநிலங்காத்தாரென்று
பொன்னுயிர்க்குங்கழலவரை யாம்போலும்புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்குநெடுவேலாயிவர்குலத்தோன்மேற்பறவை
மன்னுயிர்க்குத்தன்னுயிரைமாறாகவழங்கினனால். (௭)

இடரோட்டவினைநெடியவரையுருட்டியிவ்வுலகம்
திடரோட்டமெனக்கிடக்கும்வகையிரங்கித்தெய்வவேந்தர்
உடரோட்டநெடுவேலாயிவர்குலத்தோருவரிநீர்க்
கடரோட்டாரெனின்வேறோர்கட்டுரையும்வேண்டுமோ. (௮)

தூநின்றசுடர்வேலோயனந்தனேசொல்லானேல்
யானின்றுபுகழ்ந்தேத்தற்கெளிதேயேடவிழ்கொன்றைப்
பூநின்றமவுலியையும்புக்களைந்துபுனற்கங்கை
வானின்றுகொணர்ந்தானுமிவர்குலத்தோர்மன்னவன்காண். (௯)

கயற்கடல்சூழுலகெல்லாங்கைநெல்லிக்கனியாக்கி
இயற்கைநெறிமுறையாலேயிந்திரற்குமிடரியற்றி
முயற்கறையின்மதிக்குடையாயிவர்குலத்தோன்முன்னொருவன்
செயற்கரியபெருவேள்வியொருநூறுஞ்செய்தமைத்தான். (௧௦)

சந்திரனைவென்றானுமுருத்திரனைச்சாய்த்தானும்
துந்துவெனுந்தானவனைச்சுடுசரத்தாற்றுணித்தானும்

---

* பெருங்குணம். சீவகாருண்ணியம் முதலியன.
† அமராபதி-இந்திரநகரம்.

வந்தகுலத்திடைவர் தரகுவென்பான்வரிசிலையால்
இந்திரனைவென்றுதிசையிருநான்குஞ்செருவென்றான். (கக)

வில்லென்னுநெடுவரையால்வேந்தென்னுங்கடல்கலக்கி
எல்லென்னுமணிமுறுவலிந்துமதியெனுந்திருவை
அல்லென்னுந்திருநிறத்தவரியென்னவயனென்பான்
மல்லென்னுந்திரள்புயத்துக்கணியென்னவைத்தானே. (கஉ)

அயன்புதல்வன்றயரதனையறியாதாரில்லையவன்
பயந்தகுலக்குமாரிவர்தமையுள்ளபரிசெல்லாம்
நயந்துரைத்துங்கரையேறநான்முகற்குமரிதாம்பல்
இயந்துவைத்தகடைத்தலையாயானறிந்தபடிகேளாய். (கங)

துணியின்றியுயிர்செல்லச்சுடராழிப்படைவெய்யோன்
பணிவென்றபடியென்னப்பகைவென்றுபடிகாப்போன்
தனுவன்றித்துணையில்லான்றருமத்தின்கவசத்தான்
மனுவென்றநீதியான்மகவின்றிவருந்துவான். (கச)

சிலைக்கோட்டுநுதற்குதலைச்செங்கனிவாய்க்கருநெடுங்கண்
விலைக்கோட்டும்பேரல்குன்மின்னுடங்குமிடையாரை
முலைக்கோட்டுவிலங்கென்றங்குடனணுகிமுன்னின்ற
கலைக்கோட்டுப்பெயர்முனியாற்றுயர்நீங்கக்கருதினான். (கரு)

தார்காத்தநறுங்குஞ்சித்தநயர்களென்றவமின்மை
வார்காத்தவனமுலையார்மணிவயிறுவாய்த்திலரால்
நீர்காத்தகடல்காத்திலங்காத்தேனென்னிற்பின்
பார்காத்தற்குரியாரைப்பணிநீயென்றடிபணிந்தான். (கசு)

அவ்வுரைகேட்டம்முனியுமருள்சுரந்தவுவகையனாய்
இவ்வுலகமன்றியேயெவ்வுலகும்பணிதனிக்கும்
செவ்வியிளஞ்சிறுவர்களைத்தருகின்றேனினித்தேவர்
வவ்விநுகர்பெருவேள்விக்குரியவெலாம்வருகென்றான். (கஎ)

காதலரைத்தருவேள்விக்குரியவெலாங்கடிதமைப்ப
மாதவரிற்பெரியோனுமற்றதனைமுற்றுவித்தான்
சோதிமணிப்பொற்கலத்துச்சுதையனையவெண்சோறோர்
பூதகணத்தரசேந்தியனலினின்றும் * புறப்பட்ட. (கஅ)

பொன்னின்மணிப்பரிகலத்திற்புறப்பட்டவின்னமுதைப்
பன்னுமறைப்பொருளுணர்ந்தபெரியோன்றன்பணியினால்
தன்னினையநிறைகுணத்துத்தசரதனும்வரன்முறையால்
நன்னுதலார்மூவருக்குநாலுகூறிட்டளித்தான். (ககூ)

* புறப்பட்டது-என்புழி துவ்வீறு தொகுத்தல்பெற்றது.

விரிந்திடுதீவினைசெய்தவெவ்வியதீவினையாலும்
அருங்கடையின்மறையறைந்தவறஞ்செய்தவறத்தாலும்
இருங்கடகக்கரதலத்திவ்வெழுதரியதிருமேனிக்
கருங்கடலைச்செங்கனிவாய்க்கவுசலையென்பாள்பயந்தாள். (௨0)

தள்ளரியபெருநீதித்தனியாறுபுகமண்டும்
பள்ளமெனுந்தகையானைப்பரதனெனும்பெயரானை
எள்ளரியகுணத்தாலுமெழிலாலுமிவ்விருந்த
வள்ளலையேயனையானைக்கேகயர்கோன்மகள்பயந்தாள். (௨௧)

அருவலியதிறலினராயறங்கெடுக்கும்விறலரக்கர்
வெருவருதிண்டிறலார்கள்வில்லேந்துமெனிற் * செம்பொற்
பருவரையு † நெடுவெள்ளிப்பருப்பதமும்போல்வார்கள்
இருவரையுமிவ்விருவர்க்கிளையாளுமீன்றெடுத்தாள். (௨௨)

தலையாயபொருளுணர்விற்கலைமகட்குத்தலைவராய்ச்
சிலையாயுந்தனுவேதந்தெவ்வரைப்போற்பணிசெய்யக்
கலையாழிக்கதிர்த்திங்களுதயத்திற்கலித்தோங்கும்
அலையாழியெனவளர்ந்தார்மறைநான்குமனையார்கள். (௨௩)

திறையோடுமரசிறைஞ்சுஞ்செறிகழற்காற்றசரதனும்
பொறையோடுந்தொடர்மனத்தான்புதல்வரெனும்பெயரேகாண்
‡ உறையோடுநெடுவேலாயுபநயனவிதிமுடித்து
மறையோடுவித்திவரைவளர்த்தானும்வசிட்டன்காண். (௨௪)

ஈங்கிவராலென்வேள்விக்கிடையூறுகடிதியற்றும்
தீங்குடையகொடியோரைக்கொல்விக்குஞ்சிந்தையனாய்ப்
பூங்கழலார்க்கொண்டுபோய்வனம்புக்கேன்புகாமுன்னம்
தாங்கரியபேராற்றற்றாடகையேதலைப்பட்டாள். (௨௫)

அலையுருவக்கடலுருவத்தாண்டகைதன்னீண்டுயர்ந்த
நிலையுருவப்புயவலியைநீயுருவநோக்கையா
உலையுருவக்கனலுமிழ்கட்டாடகைதன்னுரமுருவி
மலையுருவிமாமுருவிமண்ணுருவிற்றொருவாளி. (௨௬)

செக்கர்நிறத்தெரிகுஞ்சிச்சிரக்குவைகள்பொருப்பென்ன
உக்கனவோமுடிவில்லையோரம்பினொடுமரக்கி
§ மக்களிலங்கொருவன்போய்வான்புக்கான் $ மற்றையவன்
புக்கவிடமறிந்திலேன்போந்தனனென்வினைமுடித்தே. (௨௭)

---

* செம்பொற் பருவரை-மேரு. † நெடுவெள்ளிப் பருப்பதம்-கைலாயம். ‡ பகைவரின்மையா லுறைபுகுதலின் உறையோடு நெடுவேலாயென்றார். § மக்களிலங்கொருவன் என்றது-சுவாகு. $ மற்றையவனென்றது-மாரீசனை.

ஆய்ந்தேறவுணரையவயற்கேயுமறிவரிய
காய்ந்தேவிலுலகனைத்துங்கடலோடுமலையோடும்
தீய்ந்தேறச்சுடுகிற்கும்படைக்கலங்கள்செய்தவத்தால்
ஈய்ந்தேனுமனமுட்கவிவற்கேவல்செய்குனவால். (உஅ)

கோதமன்றன்பன்னிக்குமுன்னையுருக்கொடுத்ததிவன்
போதுநின்றதெனப்பொலிந்தபொலன்கழற்காற்பொடிகண்டாய்
காதலென்றனுயிர்மேலுமிக்கரியோன்பாலுண்டால்
ஈதிவன்றன்வரலாறும்புயவலியுமெனவுரைத்தான். (உகூ)

கக-வது குலமுறைகிளத்துபடலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-எ௫௦.

---

## கஉ-வது, கார்முகப்படலம்.

வில்லிறுத்ததைக் குறித்துக்கூறும்படலம்.

மாற்றம்யாதுரைப்பதுமாயவிற்குநான்
தோற்றவாறெனமனந்துளங்குகின்றதால்
நோற்றனணங்கையுநொய்தினையன்வில்
ஏற்றுமேலிடர்க்கடலேற்றுமென்றனன். (க)

என்றனனேன்றுதன்னெதிர்நின்றுரையக்
குன்றுறழ்வரிசிலைகொணர்மினீண்டென
நன்றெனவணங்கினர்நால்வரோடினர்
பொன்றிணிகார்முகச்சாலைபுக்கனர். (உ)

உறுவலியானையையொத்தமேனியர்
செறிமயிர்க்கல்லெனத்திரண்டதோளினர்
* அறுபதினாயிரராளவிலாற்றலர்
தறிமடுத்திடையிடைதண்டிற்றூங்கினர். (ந)

நெடுநிலமகண்முதுகாற்றநின்றுயர்
தடநிமிர்வடவரைதானுநாணுற
இடமிலையுலகெனவந்ததெங்கணும்
கடல்புரைதிருநகரிரைத்துக்காணவே. (ச)

---

* அறுபதினாயிர ரென்றதன்றி அற்றபதினாயிரவரெனக் கொண்டு ஐயாயிரவரெனக் கோடலுமமையும்.

* சங்கொடுசக்கரந்தரித்ததானைய
சிங்கவேறல்லனேலிதனைத்தீண்டுவான்
எங்குளனொருவனின்றேற்றினிச்சிலை
மங்கைதன்றிருமணம்வாழுமாலென்பார். (௫)

கைதவந்தனுவெனல்கனகக்குன்றென்பார்
எய்தவன்யாவனோவேற்றிப்பண்டென்பார்
செய்தவத்திசைமுகன்றீண்டியன்றுதன்
மொய்தவப்பெருமையின்முயற்சியாலென்பார். (௬)

திண்ணெடுமேருவைத்திரட்டிற்றேவென்பார்
வண்ணவான்கடல்பண்டுகடைந்தமத்தென்பார்
அண்ணல்வாளரவினுக்கரசனோவென்பார்
விண்ணிடுநெடியவில்வீழ்ந்ததோவென்பார். (௭)

என்னிதுகொணர்கெனவியம்பினானென்பார்
மன்னவருளர்கொலோமதிகெட்டாரென்பார்
முன்னையூழ்வினையினான்முடிக்கலாமென்பார்
கன்னியுமிச்சிலைகாணுமோவென்பார். (௮)

இச்சிலையுதைத்தகோற்கிலக்கம்யாதென்பார்
நச்சிலை † நங்கைமேனாட்டும்வேந்தென்பார்
நிச்சயமெடுக்குங்கொனேமியானென்பார்
சிற்சிலர்விதிசெய்ததீமைதானென்பார். (௯)

மொய்த்தனரின்னணமொழியமன்னன்முன்
உய்த்தனர்நிலமுதுகுளுக்கிக்கீழுற
வைத்தனர்வாங்குநர்யாவரோவெனக்
கைத்தலம்விதிர்த்தனர்கண்டவேந்தரே. (௧0)

போதகமனையவன்பொலிவுநோக்கியவ்
வேதனைதருகின்றவில்லைநோக்கித்தன்
மாதினைநோக்குவான்மனத்தைநோக்கிய
கோதமன்காதலன்கூறன்மேயினான். (௧௧)

‡ இமையவில்வாங்கியவீசன்பங்குறை
உமையினையிகழ்ந்தனனென்னவோங்கிய
கமையறுசினத்தனிக்கார்முகங்கொளாச்
சமையுறுதக்கனார்வேள்விசாரவே. (௧௨)

---

* சங்கொடு சக்கரந்தரித்த தானையசிங்கவேறென்பதற்குச் சங்கு சக்கரமேந்திய படையாகவுடைய சிங்கம்போல்வானாகிய திருமால் எனப் பொருள் கொள்க.

† நங்கைமேல் என்புழி எழாவது நான்காவதன்பொருளது.

‡ இமையவில்-மேருமலையாகிய வில்.

உக்கனபல்லொடுகரங்களோடினர்
புக்கனர்வானவர்புகாதசூழல்கள்
* தக்கனல்வேள்வியிற்றழலுமாறின
முக்கணெண்டோளவன்முனிவுமாறினான். (கந)

தாளுடைவரிசிலைசம்புவும்பர்தம்
நாளுடைமையினவர்நடுக்கநோக்கியிக்
கோளுடைவிடையவன்குலத்துட்டோன்றிய
† வாளுடையுழவனோர்மன்னன்பால்வைத்தான். (கச)

கார்முகவலியையான்கழறல்வேண்டுமோ
வார்சடையரனிகர் ‡ வரதனீயலால்
யாருளரறிபவரிதற்குத்தோன்றிய
தேர்முகவல்குலாள்செவ்விகேளென. (கரு)

வேறு.

இரும்பனையகருநெடுங்கோட்டிணையேற்றின்பணையேற்ற
பெரும்பியலிற்பளிக்குநகம்பிணைத்ததனோடணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப்பொற்கலப்பைவயிரத்தின்கொழுமடுத்திட்
டிரம்பொருவினிலம்வேள்விக்கலகில்பலசாலுழுதேம். (கசு)

உழுகின்றகொழுமுகத்தினுதிக்கின்றகதிரொளிபோல்
பொழிகின்றபுவிமடந்தைதிருவெளிப்பட்டெனப்புணரி
எழுகின்றதெள்ளமுதோடெழுந்தவளுமிழிந்தொதுங்கத்
தொழுகின்றநன்னலத்துப்பெண்ணரசிதோன்றினாள். (கஎ)

குணங்களையென்கூறுவதுகொம்பினைச்சேர்ந்தவையுய்யப்
பிணங்குவன 0 வழகிவளைத்தவஞ்செய்துபெற்றதுகாண்
கணங்குழையாளெழுந்ததற்பின்கதிர்வாணிற்கங்கையெனும்
அணங்கிழியப்பொலிவிழந்தவாறொத்தார்வேறுற்றார். (கஅ)

சித்திரமிங்கிதுவொப்பதெங்குண்டுசெய்வினையால்
வித்தகமும்விதிவசமும்வெவ்வேறேபுறங்கிடப்ப
அத்திருவையமரர்குலமாதரித்தாலெனவறிஞ
இத்திருவைநிலவேந்தரெல்லாருங்காதலித்தார். (ககூ)

கலித்தானைக்கடலோடுங்கைத்தானைக்களிற்றரசர்
ஒலித்தானையெனவந்துமணமொழிந்தார்க்கெதிருடுத்த
புலித்தானைக்களிற்றுரிவைப்போர்வையான்போர்வில்லை
வலித்தானைமங்கைதிருமணத்தானென்றியாம்வலித்தேம். (உ0)

---

* தக்கன்-பிரமனது மானதபுத்திரருள் ஒருவன். † வாளுடையுழவன்-தேவராதனை. ‡ வரதன்-வரங்கொடுப்போன். 0 அழகுக்கழகு செய்பவளாதலின்-அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதென்றார்.

வல்வில்லுக்காற்றூர்கண்மாரவேள்வளைகருப்பின்
மெல்வில்லுக்காற்றூராய்த்தாமெம்மைவிளிகுற்றூர்
கல்வில்லோவிலங்கிந்தகணங்குழையைக்காதலித்துச்
* சொல்வில்லாலுலகளிப்பாய்போர்செய்யத்தொடங்கினூர். (௨௧)

இம்மன்னர்பெருஞ்சேனை † யீவுதனைமேற்கொண்ட
செம்மன்னர்பொருளேபோற்புகழ்வாய்ப்பச்சிறந்ததால்
பொம்மென்னவண்டலம்பும்புரிகுழலைக்காதலித்த
அம்மன்னர்சேனைதமதாசைபோலாயிற்றூல். (௨௨)

மற்காக்குமணிப்புயத்துமன்னனிவன்மழவிடையோன்
விற்காக்கும்வாளமருண்மெலிகின்றூனெனவிரங்கி
ஏற்காக்குமுடிவிண்ணேர்படையீந்தாரெனவேந்தர்
அற்காக்கைகூகையைக்கண்டஞ்சினவாமெனவகன்றூர். (௨௩)

அன்றுமுதலின்றளவுமாருமிந்தச்சிலையருகு
சென்றுமிலர்போயொளித்தார்தேர்வேந்தர்திரிந்துமிலர்
என்றுமினிமணமுமிலையென்றிருந்தேமிவனேற்றின்
நன்றுமலர்க்குழற்சீதைநலம்பழுதாகாதென்றூன். (௨௪)

நினைந்தமுனிபகர்ந்தவெலாநெறியுன்னியறிவனுந்தன்
புனைந்தசடைமுடிதுளக்கிப்போரேற்றின்முகம்பார்த்தான்
வனைந்தனையதிருமேனிவள்ளலுமம்மாதவத்தோன்
நினைந்தவெலாநினைந்தந்தநெடுஞ்சிலையைநோக்கினூன். (௨௫)

வேறு.

பொழிந்தநெய்யாகுதிவாய்வழிபொங்கி
எழுந்தகொழுங்கனலென்னவெழுந்தான்
அழிந்தது ‡ வில்லெனவிண்ணவரார்த்தார்
மொழிந்தனராசிகண்முப்பகைவென்றூர். (௨௬)

தூயதவங்கடொடங்கியதொல்லோன்
ஏயவன்வல்விலிறுப்பதன்முன்னம்
சேயிழைமங்கையர்சிந்தைதொடெய்யா
ஆயிரம்வில்லையனங்கனிறுத்தான். (௨௭)

காணுநெடுஞ்சிலைகால்வலிதென்பார்
நாணுடைநங்கைநலங்கிளர்செங்கேழ்

* நிறைமொழி மாந்தரென்பதுபற்றி சொல்வில்லாலுலகளிப்பாவென்றூர். † ஈவார்மேனிற்புகழ் என்பனராதலின்-ஈவுதனை மேற்கொண்ட செம்மன்பொருளே போற்புகழ்வாய்ப்ப என்றூர். ‡ அம்பகம்-கண் த்ரியம்பகன்-மூன்று கண்களையுடைய சிவன், அவன் வில்லாதலால் த்ரியம்பகமென் இந்த வில்லுக்குக் காரணக்குறியாயிற்று.

பாணியிவன்படர்செங்கைபடாதேல்
வாணுதல்சீதையும்வாழ்விலளென்பார். (௨௮)

கரங்கள்குவித்திருகண்கள்பனிப்ப
இருங்களிறிச்சிலையேற்றிலனேயின்
நரந்தைநறைக்குழனங்கையுநாமும்
முருங்கெரியிற்புகமூழ்குதுமென்பார். (௨௯)

வள்ளன்மணத்தைமகிழ்ந்தனனென்றால்
கொள்ளெனமுன்புகொடுப்பதையல்லால்
* வெள்ளமணைத்தவன்வில்லையெடுத்திப்
பிள்ளைமுனிட்டதுபேதைமையென்பார். (௩0)

ஞானமுனிக்கொருநாணிலையென்பார்
கோனிவனிற்கொடியாரிலையென்பார்
மானவனிச்சிலைநால்வளையானேற்
பீனதனத்தவள்பேறிலளென்பார். (௩௧)

தோகையரின்னனசொல்லிடநல்லோர்
ஓகைவிளம்பிடவும்பருவப்ப
மாகமடங்கலுமால்விடையும்பொன்
† நாகமுநாகமுநாணநடந்தான். (௩௨)

ஆடகமால்வரையன்னதுதன்னைத்
தேடருமாமணிசீதையெனும்பொற்
சூடகவால்வளைசூட்டிடநீட்டும்
ஏடவிழ்மாலையிதென்னவெடுத்தான். (௩௩)

தடுத்திமையாமலிருந்தவர்தாளின்
மடுத்ததுநாணுதிவைத்ததுநோக்கார்
கடுப்பினில்யாருமறிந்திலர்கையால்
எடுத்ததுகண்டனரிற்றதுகேட்டார். (௩௪)

வேறு.

ஆரிடைப்புகுதுநாமென்றமரர்கள் ‡ கமலத்தோன்றன்
பேருடையண்டகோளம்பிளந்ததென்றேங்கிநைந்தார்
பாரிடையுற்றதன்மைபகர்வதென்பாரைத்தாங்கி
வேரிடைக்கிடந்தநாகம்பிடியெனவெருவிற்றன்றே. (௩௫)

---

* உலகையழிக்கவந்த கங்கையைத் தன்சடை நுனியிற் கரக்குமாற் றலோன்ற 'வெள்ளமணைத்தவ' னென்றும், அவனேந்தும்வில்லை இராம னிடத்தளிப்பது தகாதென்பார் பிள்ளை முன்னிட்டது பேதைமையென் றும் கூறினர்.

† ஆற்றலிற்சிறந்ததாகலின் மாகமடங்கலும், நடையிற்சிறந்த தாக லின் மால்விடையும், சலியாமையின் பொன்னாகமும், கம்பீரமுடைமை யின் நாகமுமென்றின்ன நாணச்சென்றானென்றது. ‡ கமலத்தோன்— கோளம்-பிரமாண்டகோளம்.

பூமழைசொரிந்தார்விண்ணோர்பொன்மழைபொழிந்தமேகம்
பாமமாகடல்களெல்லாம்பன்மணிதூவியார்த்த
கோமுனிக்கணங்களெல்லாங்கூறினவாசிகொற்ற
நாமவேற்சனகற்கின்றுநல்வினைபயந்ததென்று. (௩௬)

மாலையுமிழையுஞ்சாந்துஞ்சுண்ணமும்வாசநெய்யும்
வேலைவெண்முத்தும்பொன்னுங்காசுநுண்டுகிலும்வீசிப்
பால்வளையமிர்தளாயபல்லியந்துவைப்பமுந்நீர்
* ஓல்கிளர்ந்துவாவுற்றென்னவொலிநகர்கிளர்ந்ததன்றே. (௩௭)

நல்லியன்மகரவீணைத்தேனுகநகையுந்தோடும்
வில்லிடவாளும்வீசவேல்கிடந்தனையநாட்டத்
தெல்லியன்மதியமன்னமுகத்தியரெழிலிதோன்றச்
சொல்லியபருவநோக்குந்தோகையினாடினாரே. (௩௮)

உண்ணறவருந்தினாரிற்சிவந்தொளிர்கருங்கண்மாதர்
புண்ணுறுபுலவிநீங்கக்கொழுநரைப்புல்லிக்கொண்டார்
வெண்ணிறமேகமேன்மேல்விரிகடல்பருகுமாபோல்
மண்ணுறுவேந்தன்செல்வம்வறியவர்முகந்துகொண்டார். (௩௯)

வயிரியர்மதுரகீதமங்கையரமுதகீதம்
செயிரியர்மகரயாழின்றேம்பிழிதெய்வகீதம்
பயிரியர்வேயின்கீதமென்றிவைபருகிவிண்ணோர்
உயிருடையுடம்புமெல்லாமோவியமொப்பநின்றார். (௪0)

ஐயன்வில்லிறுத்தவாற்றல்காணியவமரர்நாட்டுத்
தையலாரிழிந்துபாரின்மகளிரைத்தழுவிக்கொண்டார்
செய்கையின்வடிவினூடல்பாடலிற்றெரிதறேற்றார்
மையரிநெடுங்கணோக்காநிமைத்தலுமயங்கிநின்றார். (௪௧)

தயரதன்புதல்வனென்பார்தாமரைக்கண்ணனென்பார்
புயலிவன்மேனியென்பார்பூவையும்பொருவுமென்பார்
மயலுடைத்துலகமென்பார்மானுடனல்லனென்பார்
கயல்பொருகடலுள்வைகுங்கடவுளேகாணுமென்பார். (௪௨)

நம்பியைக்காணநங்கைக்காயிரம்நயனம்வேண்டும்
கொம்பினைக்காணுந்தோறுங்குரிசிற்குமன்னதேயாம்
தம்பியைக்காண்மினென்பார்தவமுடைத்துலகமென்பார்
இம்பரிந்நகரிற்றந்தமுனிவனையிறைஞ்சுமென்பார். (௪௩)

* நிறைமதியங் காண்புழி கடல் ஒல்லெனக்கிளர்ந்து பொங்கலான் ஓல்கிளர்ந்து வாவுற்றென்ன என்றார்.

இற்றிவணின்னதாகமதியொடுமெல்லிநீங்கப்
பெற்றுயிர்பின்னுங்காணுமாசையாற்சிறிதுபெற்ற
சிற்றிடைப்பெரியகொங்கைச்சேயரிக்கரியவாட்கட்
பொற்றொடிமடந்தைக்கப்பாலுற்றதுபுகலலுற்றாம். (சச)

வைசலாடியிரிலோடுமுருகுபூம்பள்ளிநீங்கிப்
பாசிழைமகளிர்சூழப்போயொருபளிக்குமாடக்
காசறுமரையின்பொய்கைச்சந்திரகாந்தமீன்ற
சீதநீர்தெளித்தமென்பூஞ்சேக்கையையரிதிற்சேர்ந்தாள். (சரு)

பெண்ணிவணுற்றதென்னும்பெருமையாலருமையான
* வண்ணமுமிலைகளாலேகாட்டலால்வாட்டந்தீர்ந்தேன்
தண்ணறுங்கமலங்காளென்றனிர்நிறமுண்டகண்ணின்
உண்ணிறங்காட்டிநீரென்னுயிர்தரவுலோவினீரே. (சசு)

வேறு.

நாணுலாவுமேருவோடுநாணுலாவுபாணியும்
தூணுலாவுதோளும்வாளியூடுலாவுதூணியும்
† வாணிலாவினூலுலாவுமாலைமார்புமீளவும்
காணலாகுமாகிலுய்விகாணலாகுமேகொலாம். (சஎ)

விண்டலங்கலந்திலங்குதிங்களோடுமீதுசூழ்
வண்டலம்பலங்கறங்குபங்கியோடும்வார்சிலைக்
கொண்டலொன்றிரண்டுகண்ணின்மொண்டுகொண்டென்னுவியை
உண்டதுண்டெனஞ்சினின்றுமுண்டதென்றுமுண்டரோ. (சஅ)

பஞ்சரங்குதீயினுவிபற்றநீடுகொற்றவில்
வெஞ்சரங்கணைஞ்சரங்கவெய்யகாமனெய்யவே
சஞ்சலங்கலந்தபோதுதையலாரையுய்யவந்
தஞ்சலஞ்சலென்கிலாதவாண்மைமென்னவாண்மையே. (சகூ)

இளைக்கலாதகொங்கைகாளொழுந்துவிம்மி ‡ யென்செய்தீர்
§ முளைக்கலாமதிக்கொழுந்துபோலும்வாண்முகத்தினுன்
வளைக்கலாதவிற்கையாளிவள்ளன்மார்பினுள்ளுறத்
திளைக்கலாகுமாகிலானசெய்தவங்கள்செய்மினே. (ருo)

* இராமன் மரகதமேனியனுதலின் இலைகளாலே வண்ணங்காட்டலாலென்றார். † இராமனைக்கண்ட வழித்தன் வடிவழகிழந்து மாமை நிறங்கோடலான் என்றனிர் நிறமுண்ட கண்ணென்றார். ‡ அவனைக் காணுதவழி யுயிரிழப்பலென்பதுபற்றிக் 'காணலாகுமாகிலுய்விகாணலாகுமேகொலென்றார்' § என்செய்தீர்-ஒன்றுஞ்செய்திலீர் என்பது படநின்றது. $ கலைகள் பிறத்தற்கிடமாகிய மதிக்கொழுந்தென்பார் 'முளைக்கலா மதிக்கொழுந்தென்றார்.'

எங்குநின்றெழுந்ததிங்ஙிந்துவந்ததென்னெஞ்சுலா
அங்கியன்றனங்கனெய்தவம்பின்வந்தசிந்தைநோய்
பொங்குகின்றகொங்கைமேல்விடம்பொழிந்ததென்னினும்
கங்குல்வந்ததிங்களன்றகங்களங்கமில்லையே. (௩௧)

அடர்ந்துவந்தனங்கனெஞ்சழன்றுசிந்துமம்பெனும்
விடங்குடைந்தமெய்யினின்றுவெந்திடாதெழுந்துவெங்
கடந்துதைந்த * காரியானையன்னகாளைகாலடைந்
துடன்றொடர்ந்துபோனவாவிவந்தவாவெனுள்ளமே. (௩௨)

விண்ணுளேயெழுந்தமேகமார்பினூலின்மின்னொடும்
மண்ணுளேயிழிந்ததென்னவந்துபோனமைந்தனார்
எண்ணுளேயிருந்தபோதும்யாவரென்றுதேர்கிலென்
கண்ணுளேயிருந்தபோதுமென்கொல்காண்கிலாதவே. (௩௩)

† பெய்கடற்பிறந்தயல்பிறக்கொணாமருந்துபெற்
றையபொற்கலத்தொடங்கைவிட்டிருந்தவாதர்போல்
மொய்கிடக்குமண்ணலோர்முயங்கிடாதுமுன்னமே
கைகடக்கவிட்டிருந்துகட்டுரைப்பதென்கொலோ. (௩௪)

என்றுகொண்டுணைந்துநைந்திரங்கிவிம்மிவிம்மியே
பொன்றிணிந்தகொங்கைமங்கையிடரின்மூழ்குபோழ்தின்வாய்க்
குன்றமன்னசிலைமுரிந்தகொள்கைகொண்டுளிர்மனத்
தொன்றுமுண்கண்மதிமுகத்தொருத்திசெய்ததுரைசெய்வாம். (௩௫)

வேறு.

வடங்களுங்குழைகளும்வானவில்லிடத்
தொடங்குபுகலைகளுங்குழலுஞ்சோர்தர
நுடங்கியமின்னெனநொய்தினெய்தினள்
நெடுந்தடங்கிடந்தகண் ‡ ணீலமாலையே. (௩௬)

வந்தடிவணங்கிலள்வழங்குமோதையள்
அந்தமிலுவகையளாடிப்பாடினள்
சிந்தையுண்மகிழ்ச்சியும்புகுந்தசெய்கையும்
சுந்தரிசொல்லெனத்தொழுதுசொல்லுவாள். (௩௭)

§ கயரததுரகமாக்கடலன்கல்வியன்
தயரதனெனும்பெயர்த்தனிச்செங்கோலினான்
புயல்பொழிதடக்கையான்புதல்வன்பூங்கணை
மயல்விளைமதனற்கும்வடிவுமேன்மையான். (௩௮)

---

* காரியானை-கரியயானை என்றபடி. † மணிமுதலியனயாவுந் தருதலின் பெய்கடலென்றார். ‡ நீலமாலை-ஒருசேடியின்பெயர். § நால்வகைப்படையுட் சிறந்தமையின் கயத்தைமுறகூறினார்.

மராமரமிவையெனவலியதோளினான்
அராவணையமலனென்றயிர்க்குமாற்றலான்
இராமனென்பதுபெயரிளையகோவொடும்
பராவருமுனியொடும்பதிவந்தெய்தினான். (௪௯)

பூணியன்மொய்ம்பினன்புனிதனெய்தவில்
காணியவந்தனனென்னக்காவலன்
ஆணையினடைந்தவில்லதனையாண்டகை
நாணினிதேற்றினனெங்கிற்றம்பரே. (௫௦)

மாத்திரையளவிற்றாண்மடுத்துமுன்பயில்
சூத்திரமிதுவெனத்தோளின்வாங்கினான்
ஏத்தினரிமையவரிழிந்தபூமழை
வேத்தவையிடுக்குறமுறிந்துவீழ்ந்ததே. (௫௧)

கோமுனியுடன்வருகொண்டலென்றபின்
தாமரைக்கண்ணினனென்றதன்மையால்
ஆமவனேகொலென்றையநீங்கினாள்
* வாமமேகலையினுள்வளர்ந்தவல்குலே. (௫௨)

இல்லையேநுசுப்பென்பாருண்டுண்டென்னவும்
மெல்லியன்முலைகளும்விம்மவிம்முவாள்
சொல்லியகுறியினத்தோன்றலேயவன்
அல்லனேலிறப்பனென்றகத்துணன்னினாள். (௫௩)

ஆசையுற்றயர்பவளன்னளாயினள்
பாசடைக்கமலத்தோன்படைத்தவில்லிறும்
ஓசையிற்பெரியதோருவகையெய்தியக்
கோசிகற்கொருமொழிசனகன்கூறுவான். (௫௪)

உரைசெயெம்பெருமவுன்புதல்வன் † வேள்விதான்
விரைவினின்றொருபகன்முடித்தல்வேட்கையோ
முரைசெறிந்ததிர்கழன்முழுங்குதானையவ
வரைசையுமிவ்வழியழைத்தல்வேட்கையோ. (௫௫)

மல்வலானவ்வுரைபகரமாதவன்
ஒல்லையிலவனும்வந்துறுதனன்றெனா
எல்லையிலுவகையானியைந்தவாறெலாஞ்
சொல்லுகென்றோலையுந்தூதும்போக்கினான். (௫௬)

கஉ-வது, கார்முகப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௮௧௬.

* இலக்கணக்குறைபாடின்றியே வளராநின்றதென்பார் வாமமேகலையினுள் வளர்ந்ததல்குலென்றார்.

† வேள்வி-மணத்தை.

## ௧௫-வது, எழுச்சிப்படலம்.

*தசரதன் றனது படைகளோடு மிதிலைக்குச் செல்வதைக் குறித்துக்கூறுகின்ற படலம்.*

கடுகியதூதருங்காலிற்காலிற்சென்
றிடிகுரன்முரசதிரயோத்தியெய்தினார்
அடியிணைதொழுமிடமன்றிமன்னர்தம்
* முடியொடுமுடிபொருவாயின்முன்னினார். (௧)

முகந்தனர்திருவருண்முறையினெய்தினார்
திகழ்ந்தொளிர்கழலிணைதொழுதுசெல்வனைப்
புகழ்ந்தனரரசன்புதல்வர்போயபின்
நிகழ்ந்ததையிதுவெனநெடிதுகூறினார். (௨)

கூறியதூதருங்கொணர்ந்தவோலையை
ஈறில்வண்புகழினாயிதுவதென்றனர்
வேறொருபுலமகன்விரும்பிவாங்கினான்
மாறதிர்கழலினான்வாசியென்றனன். (௩)

இலைமுகப்படத்தவரெழுதிக்காட்டிய
தலைமகன்சிலைத்தொழில்செவியிற்சார்தலும்
நிலைமுகவலயங்கணிமிர்ந்துநீங்கிட
மலையெனவளர்ந்தனவயிரத்தோள்களே. (௪)

வெற்றிவேன்மன்னவன்றக்கன்வேள்வியில்
கற்றைவார்சடைமுடிக் † கணிச்சிவானவன்
முற்றவேழுலகையும்வென்றமூரிவில்
இற்றபேரொலிகொலன்றிடித்ததிங்கென்றான். (௫)

என்றுரைத்தெதிரெதிரிடைவிடாதுநேர்
துன்றியகனைகழற்றூதர்கொள்கெனப்
பொன்றிணிகலன்களுந்தூசும்போக்கினான்
குன்றெனவுயரியகுவவுத்தோளினான். (௬)

‡ வானவன்குலத்தெமர்வரத்தினல்வரும்
வேனில் § வேளிருந்தவம்மிதிலைநோக்கிநம்

* ஒருவரோடொருவர் நெருங்கி முற்படுவதனான் முடியோடுமுடி பொருவாயிலென்றார். † கணிச்சிவானவன்-மழுப்படை இறைவன் கணிச்சியென்னும் விசேடணத்தாற் சிவனையுணர்த்திற்று. ‡ வானவன்-வானத்தியங்குங் காரணத்தால் சூரியனுக்குத் தலைமைப்பற்றிவந்த பெயர். § வேள்-விருப்பத்தையுண்டாக்குவோன்,

சேனையுமரசருஞ்செல்கமுந்தெனா
ஆனைமேன்மணமுரசறைகென்றேவினான். (௭)

வாம்பரிவிரிதிரைக்கடலைவள்ளுவன்
தேம்பொழிதுழாய்முடிச்செங்கண்மாலவன்
ஆம்பரிசலகெலாமளந்துகொண்டநாள்
சாம்புவன்றிரிந்தெனத்திரிந்துசாற்றினான். (௮)

சாற்றியமுரசொலிசெவியிற்சாருமுன்
கோற்றொடிமகளிருங்கோலமைந்தரும்
வேற்றருகுமாரும்வென்றிவேந்தரும்
காற்றெறிகடலெனக்களிப்பினோங்கினார். (௯)

விடைபொருநடையினான்சேனைவெள்ளமோர்
இடையிலையுலகினிலென்னவீண்டிய
கடையுகமுடிவினிலெவ்வையங்காற்படப்
புடைபெயர்கடலெனவெழுந்துபோயதே. (௧௦)

சில்லிடமுலகெனச்செறிந்ததேர்கடாம்
புல்லிடுசுடரெனப்பொலிந்தவேந்தரால்
எல்லிடுகதிர்மணியெறிக்குமோடையால்
வில்லிடுமுகிலெனப்பொலிந்தவேழமே. (௧௧)

கால்விரிந்தெழுகுடைகணக்கிலாதிமம்
பால்விரிந்ததுவெனப்பறப்பபோன்றன
மேல்விரிந்தெழுகொடிப்படலைவிண்ணெலாம்
தோலுரிந்துகுவனபோன்றுதோன்றுமால். (௧௨)

நுடங்கியதுகிற்கொடிநுழைக்கைம்மலைக்
கடங்கலுழ்சேனையைக்கடலிதாமென
இடம்படவெங்கணுமெழுந்தவெண்முகில்
தடம்புனல்பருகிடத்தாழ்வபோன்றவே. (௧௩)

இழையிடையிளவெயிலெறிக்குமவ்வெயில்
தழையிடைநிழல்கெடத்தவழுமத்தழை
மழையிடையெழில்கெடமலருமம்மழை
குழைவுறமுழங்கிடுங்குழாங்கொள்பேரியே. (௧௪)

மன்னணிப்புரவிகண்மகளிரூர்வன
அன்னமுந்தியதிரையாறுபோன்றன
* பொன்னணிப்புணர்முலைப்புரிமென்கூந்தலார்
மின்னெனமடப்பிடிமேகம்போன்றவே. (௧௫)

* மாதரை மின்னாகவும், மடப்பிடியை மேகமாகவு முருவகஞ்செய்தார்.

இணையெடுத்திடையிடைநெருக்கவேழையர்
துணைமுலைக்குங்குமச்சுவடுமாடவர்
மணிவரைப்புயத்துமென்சாந்துமாழ்கிமெல்
அணையெனப்பொலிந்ததக்கடல்செலாறரோ. (க௬)

முத்தினுன்முழுநிலவெறிக்குமொய்ம்மணிப்
பத்தியாலிளவெயில்பரப்பும்பாகினும்
தித்தியாநின்றசொற்சிவந்தவாய்ச்சியர்
* உத்தராசங்கமிட்டொளிக்குங்கூற்றமே. (கஎ)

வில்லினர்வாளினர்வெறித்தகுஞ்சியர்
கல்வினையழித்துயர்கனகத்தோளினர்
வல்லியின்மருங்கினர்மருங்குமாப்பிடி
புல்லியகளிறெனமைந்தர்போயினர். (கஅ)

மன்றலம்புதுமலர்மழையிற்சூழ்ந்தெனத்
துன்றிருகூந்தலார்முகங்கண்டோன்றலால்
ஒன்றலாமுழுமதியூருமானம்போல்
சென்றனவாலவர்சிவிகையீட்டமே. (க௯)

மொய்திரைக்கடலெனமுழங்கு † மூக்குடைக்
கைகளிற்றிசைநிலைக்களிற்றையாய்வன
மையலுற்றிழிமதமழையருமையால்
தொய்யலைக்கடந்திலசூழியானையே. (உ0)

‡ குருடைநிலையெனத்தோய்ந்துந்தோய்கிலா
வாருடைவனமுலைமகளிர்சிந்தைபோல்
தாரொடுஞ்சதியொடுந்தாவுமாயினும்
பாரிடைமிதிக்கிலபரியின்பந்தியே. (உக)

ஊடியமனத்தினருருதநோக்கினர்
நீடியவுயிர்ப்பினர்நெரிந்தநெற்றியர்
தோடவிழ்கோதையுந்துறந்தகூந்தலர்
ஆடவருயிரெனவருகுபோயினர். (உஉ)

மாறெனத்தடங்களைப்பொருதுமாமரம்
ஊறுபட்டிடவிடையொடித்துச்சாய்த்துராய்
ஆறெனச்சென்றனவருவிபாய்கவுட்
டாறெனக்கனலுமிழ்தறுகண்யானையே. (உ௩)

* உத்தராசங்கம்-மேற்போர்வை.

† மூக்குடைக்கை-புழைக்கை.

‡ குருடைநிலை-பூமியிற்கால்தோயாது செல்லல்.

உழுந்திடவிடமிலேயுலகமெங்கணும்
அழுந்தியவுயிர்க்கெலாமருட்கொம்பாயினன்
எழுந்திலனெழுந்திடைப்படருஞ்சேனையின்
கொழுந்துபோய்க்கொடிமதின்மிதிலேகூடிற்றே. (உ௪)

கண்டவர்மனங்கள்கைகோப்பக்காதலின்
வண்டமர்கோதையர்வதனராசியால்
பண்டிகள்பண்டிகள்பரிசிற்செல்வன
புண்டரீகத்தடம்போவபோன்றவே. (உ௫)

பாண்டிலின்வையத்தவோர்பாவைதன்னொடும்
ஈண்டியவன்பினளோர்குவாளிடை
காண்டலுநோக்கியகண்ணஞ்சனம்
ஆண்டகைக்கினியதோர்முதமாயதே. (உ௬)

பிள்ளைமானோக்கியைப்பிரிந்துபோகின்றான்
அள்ளனீர்மருதவைப்பதனின்னமாம்
புள்ளுமென்றாமரைப்பூவுநோக்கினான்
உள்ளமுந்தானுமின்றாசலாடுவான். (உ௭)

(வேறு).

அங்கண்ஞாலத்தரசரிடைத்தவா
பொங்குவெண்குடைசாமரைபோர்த்தலால்
கங்கையாறுகடுத்ததுகானெனச்
சங்குபேரிமுழங்கியதானையே. (உ௮)

அமரருஞ்சவ்வணங்களையாருயிர்
கவருங்கூர்நுதிக்கண்ணெனுங்காலவேல்
குமரர்நெஞ்சுகுளிப்பவழுங்கலால்
சமரபூமியுமொத்ததுதானையே. (உ௯)

தோண்மிடைந்தனதூணமிடைந்தன
வாண்மிடைந்தனவான்மின்மிடைந்தனத்
தாண்மிடைந்தனதம்மின்மிடைந்தன
ஆண்மிடைந்தனவாளிமிடைந்தன. (௩0)

* வார்குலாமுலைவைத்தகண்வாங்கிடப்
பேர்கிலாதுபிறங்குமுகத்தினன்
தேர்கிலானெறியுந்தரிற்சென்றொரு
மூரிமாமதயானையைமுட்டினன். (௩௧)

* வார்குலாமுலை-கச்சுவிரும்புமுலை.

சுழிகொள்வாம்பரிதுள்ளவோர்தோகையாள்
வழுவிவீழலுற்றாளையோர்வள்ளறான்
எழுவினீள்புயத்தாலெடுத்தேந்தினான்
தழுவிநின்றொழியான்றரைதான்வையான். (௫௨)

துணைத்ததாமரைநோவத்தொடர்ந்தடர்
கணைக்கருங்கணினாளையோர்காளைதான்
பணைத்தவெம்முலைப்பாய்மதயானையை
அணைக்கநங்கைக்ககலிடமில்லென்றான். (௫௩)

சுழியுங்குஞ்சிமிசைச்சுரும்பார்த்திடப்
பொழியுமாமதயானையிற்போகின்றான்
கழியகூரியவென்றொருகாரிகை
விழியைநோக்கித்தன்வேலையுநோக்கினான். (௫௪)

தரங்கவார்குழற்றாமரைச்சீறடிக்
கருங்கண்வாளுடையாளையோர்காளைதான்
நெருங்குபூண்முலைநீள்வளைத்தோளினீர்
மருங்குலெங்குமறந்ததீரென்றான். (௫௫)

கூற்றம்போலுங்கொலைக் * கண்ணினாலன்றி
மாற்றம்பேசகிலாளையோர்வள்ளறான்
ஆற்றுநீரிடையங்கைகளாலெடுத்
தேற்றுவாருமையாவர்கொலோவென்றான். (௫௬)

தள்ளரும்பார்தாங்கியவொட்டகம்
தெள்ளுதேன்கரும்பியாவையுந்தின்கில
உள்ளமென்னத்தம்வாயுமுலர்ந்தன
கள்ளுண்மாந்தரிற்கைப்பனதேடியே. (௫௭)

அரத்தநோக்கினரற்றிரண்மேனியர்
பரித்தகாவினர்பப்பரோகினார்
திருத்துகூடத்திற்றிண் † கணையத்தொடும்
எருத்தினேந்தியமால்களிறென்னவே. (௫௮)

பித்தயானைபிணங்கிப்பிடியிற்சை
வைத்தமேலிருந்தஞ்சியமங்கைமார்
எய்த்திடுக்கணுற்றார்புதைத்தார்க்கிரு
கைத்தலங்களிற்கண்ணடங்காமையே. (௫௯)

* கண்ணினாலன்றி மாற்றம் பேசவென்றது—கண்ணளவானன்றி வாயிற்றோன்றுஞ் சொற்களை.

† கணையம்-மதயானையைத்தடுக்கு மரம்.

வாமமேகலையாரிடைவாலதி
பூமிதோய்பிடிச் * சிந்தரும்போயினர்
காமர்தாமரைநாண்மலர்க்கானத்துள்
ஆமைமேல்வருந்தேரையினையரோ. (௪0)

இம்பர்நாட்டின்றரமல்லளீங்கிவள்
உம்பர்கோமகற்கென்கின்றதொக்குமால்
கம்பமாவரக்கால்கள்வளைத்தொரு
கொம்பனாளைக்கொண்டோடுங்குதிரையே. (௪௧)

சந்தவார்குழல்சோர்பவைதாங்கலார்
சிந்துமேகலைசிந்தையுஞ்செய்கலார்
எந்தைவில்லிறுத்தானனுமின்சொலை
மைந்தர்பேசமனங்களித்தோடுவார். (௪௨)

குடையர்குண்டிகைதூக்கினர்குந்திய
நடையர்நாசிபுதைத்தகைநாற்றலர்
கடைகளிற்றிறையுங்காரிகையாரையும்
அடையவஞ்சியவந்தணர்முந்தினர். (௪௩)

நாறுபூங்குழனங்கையோர்கண்கணீர்
ஊறுசோர்வ † வுருவுவெளிப்பட
மாறுகொண்டனைவர்த்தனையாகில்வர்
தேறுதேறெனக்கைகளிழிச்சுவார். (௪௪)

குறைத்ததேருங்களிறுங்குதிரையும்
நிறைத்தவார்முரசுங்கொடிநெடுங்கணும்
இரைத்தபேரொலியாலிடையாவரும்
உரைத்துணர்ந்திலருமரிமேனகினர். (௪௫)

நுட்சிலம்பியலர்ந்தனநுண்டுகில்
‡ கட்சிலம்புகருங்குழலார்குழு
உட்சிலம்புசிலம்பவொதுங்கலால்
புட்சிலம்பிடுபொய்கையும்போன்றதே. (௪௬)

தெண்டிரைப்பரவைத்திருவன்னவர்
நுண்டிரைப்புரைநோக்கியநோக்கினைக்
கண்டிரைப்பனவாடவர்கண்களி
வண்டிரைப்பனவானைமதங்களே. (௪௭)

---

* சிந்தர்-குறளர். இவர் மெய்காப்பாளர். † உருவுவெளிப்பட என்றார் போர்வயிற்பிரிந்த தலைவன் உருவெளித்தோற்றத்தை. ‡ கள்-மலர்த்தேன்,

* உழைகலித்தனவென்னவுயிர்த்துணை
நுழைகலிக்கருங்கண்ணியர்நூபுர
இழைகலித்தனவின்னியமாவெழு
மழைகலித்தெனவாசிகலித்தவே. (சஅ)

மண்களிப்பநடப்பவர்வாணுதல்
உண்களிக்கமலங்களினுள்ளுறை
திண்களிச்சிறு † தும்பியெனச்சிலர்
கண்களித்தனகாமன்களிக்கவே. (சகூ)

எண்ணமாத்திரமும்மரிதாமிடை
வண்ணமாத்துவர்வாய்க்கனிவாய்ச்சியர்
திண்ணமாத்தொளிர்செவ்விளநீரிழி
சுண்ண ‡ மாத்தனதூளியுமாத்தவே. (ருO)

சித்திரத்தடந்தேர்மைந்தர்மங்கையர்
உய்த்துரைப்பரிணைப்பவுலப்பிலர்
இத்திறத்தினரொத்தணையோபலர்
மொய்த்திரைத்துவழிக்கொண்டுமுன்னினார். (ருக)

வேறு.

குசையுறுபரியுந்தேரும்வீரருங்குழுமியெங்கும்
விசையொடுகடுகப்பொங்கிவீங்கியதூளிவிம்மிப்
பசையுறுதுளியின்றாரைப்பசுந்தொளையடைத்தமேகம்
திசைதொறுநின்றயானைமதத்தொளை § செம்மிற்றன்றே. (ருஉ)

கேடகத்தடக்கையாலேகிளரொளிவாளும்பற்றிச்
சூடகத்தளிர்க்கைமற்றைச்சுடர்மணித்தடக்கைபற்றி
$ ஆடகத்தோடையானையழிமதத்திழுக்கலாற்றிற்
பாடகக்காலினாரைப்பயப்பயக்கொண்டுபோனார். (ருங)

செய்களின்மடுவினன்னீர்ச்சிறைகளினிறையப்பூத்த
நெய்தலுங்குமுதப்பூவுநெகிழ்ந்தசெங்கமலப்போதும்
கைகளுமுகமும்வாயுங்கண்களுங்காட்டக்கண்டு
கொய்தவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றாரும். (ருச)

பந்தியம்புரவிநின்றும்பாரிடையிழிந்தோர்வாசக்
கொந்தளபாரஞ்சோரக்குலமணிக்கலன்கள்சிந்தச்
சந்தநுண்டுகிலும்வீழத்தளிர்க்கையாலணைத்துச்சார
வந்ததுவேழமென்னமயிலெனவிரியல்போவார். (ருரு)

* உழை-எழிசைக்குள். சிரத்திற்பிறக்குமிசை. † தும்பி-வண்டு.
‡ யாத்தனவென்றது மரீஇயது 'ஆறுயில் காலத்தெந்தை' என்புழிப்போல. § செம்மிற்று-அடைத்தது. $ ஆடகம்-நால்வகைப்பொன்னினொன்று.

* குடையொடுகவரிதுங்கொங்கற்குழாங்களுங்கொடியின்காடும்
இடையிடைமயங்கியெங்குமெவ்விகரந்திருளைச்செய்யப்
படைகளுமுடியும்பூணும்படர்வெயில்பரப்பிச்செல்ல
இடையொருகணத்தினுள்ளேயிரவுண்டுபகலுமுண்டே. (௬௬)

முருக்கிதழ்முத்தமூரன்முறுவலார்முகங்களென்னும்
திருக்கிளர்கமலப்போதிற்றீட்டினங்கிடந்தகூர்வாள்
நெருக்கிடையறுக்கு † நீர்கணீங்குதினீங்குமென்றென்
றருக்கனிலொளிருமேனியாடவரகலப்போவார். (௬௭)

நீர்தருநெறியினுற்றநெருக்கினுற்சுருக்குண்டற்றுக்
காந்தினமணியுமுத்துஞ்சிந்தின ‡ கலாபஞ்சூழ்ந்த
பாந்தளினல்குலார்தம்பரிபுரம்புலம்பப்பைம்பொற்
பூந்தளிருறைப்பமாழ்கிப்போக்கரிதென்னநிற்பார். (௬௮)

கொற்றபல்லியங்களெங்குங்கொண்டலிற்றுவைப்பப்பண்டிப்
பெற்றவேறன்னப்புள்ளிற்பேதையர்வெருவிநீங்க
முற்றுறுபரங்களெல்லாமுறைமுறைபாசத்தோடும்
பற்றறவீசியேயோகியிற்பரிந்தீர்ந்த. (௬௯)

§ காற்செறிவேகப்பாகர்கார்முகமுண்மைபாரா
வார்ச்சிறைக்கொங்கையன்னகும்பமுமருப்புங்காணப்
பாற்செறிகடலிற்றோன்றும்பணைக்கைமால்யானையென்ன
நீர்ச்சிறைபற்றியேறுகின்றகுன்றனையவேழம். (௭0)

அறலியற்கூந்தற்கண்வாளமுதுகுமுதச்செவ்வாய்
விறலியரோடுநல்யாழ்ச்செயிரியர்புரவிமேலார்
நறைசெவிப்பெய்வதென்னநவைவளர்மேகப்பாடல்
முறைமுறைநணுகப்போனார்கின்னரமிதுனமொப்பார். (௭௧)

அருவிபெய்வரையிற்பொங்கியங்குசங்கோலவங்கும்
இரியலிற்சனங்கள்சிந்தவிளங்களிச்செருக்கண்யானை
விரிசிறைத்தும்பிவேறோர்வீழ்மதத்தேறாய்த்துமாதர்
சுரிகுழல்படியவேற்றின்பிடியொடுந்தொடர்ந்துசெல்ப. (௭௨)

நிறைமதித்தோற்றங்கண்டநெடுங்கடலிற்றுங்கி
அலைபறைதுவைப்பத்தேருமானையுமாடன்மாவும்

* குடைகவரி முதலாயின இருளைச்செய்தமையானும், படைகளு முடியு முதலாயின பகலைச் செய்தமையாயினும், இடை யொருகணத்தி னுள்ளே யிரவுண்டுபகலுமுண்டே என்றார். † நீர்கள் - முன்னிலைப் பன்மைப்பெயர்; இதனை 'மேவித்தொழு துய்ம்மினீர்கள்' என்றதனு னறிக. ‡ கலாபம் - பதினாறு கோவைமணி, இது மாதரிடையணியு ளொன்று. § காற்செறிவேகம் - வாயுவேகம்.

கறைகெழுவேற்கணாருமைந்தருங்கவினியொல்லை
நெறியிடைப்படரவேந்த * னேயமங்கையர்தாஞ்செல்வார். (௬௩)

பொய்கையங்கமலக்கானிற்பொலிவதோரன்னமென்னக்
கைகயர்வேந்தன்பாவைகணிகையரீட்டம்பொங்கி
ஐயிருநூறுசூழ்ந்தவாய்மணிச்சிவிகைதன்மேல்
தெய்வமங்கையருநாணத்தேனிசைமுரலப்போனாள். (௬௪)

காரணமின்றியேயுங்கனலெழவிழிக்குங்கண்ணார்
வீரவேத்திரத்தார்தாழ்ந்துவிரிந்தகஞ்சுகத்துமெய்யார்
தாரணிபுரவிமேலார்தலத்துளார்தடித்தசொல்லார்
ஆரணங்கனையமாதரடிமுறைகாத்துப்போனார். (௬௫)

விரிமணித்தார்கள்பூண்டவேசரி † வெரிநிற்றோன்றும்
அரிமலர்த்தடங்கணல்லாராயிரத்திரட்டிசூழக்
குருமணிச்சிவிகைதன்மேற்கொண்டலின்மின்னிதென்ன
‡ இருவரைப்பயந்தநங்கையாழிசைமுரலப்போனாள். (௬௬)

செங்கையின்மஞ்ஞையன்னஞ்சிறுகிளிபூவைபாவை
சங்குறைகழித்தவன்னசாமரைமுதலதாங்கி
இங்கலதெண்ணுங்காலிவ்வெழுதிரைவளாகந்தன்னில்
மங்கையரில்லையென்னமடந்தையர்மருங்குபோனார். (௬௭)

வெள்ளெயிற்றிலவச்செவ்வாய்முகத்தைவெண்மதியமென்று
கொள்ளையிற்சுற்றுமீன்கள்குழுமியவனையவூர்தி
தெள்ளரிபாண்டிபாணிச்செயிரியரிசைத்தேன்சிந்த
வள்ளலைப்பயந்தநங்கைவானவர்வணங்கப்போனாள். (௬௮)

கூனொடுகுறளுஞ்சிந்துஞ்சிலதியர்குழாமுங்கொண்ட
பாணிறப்புரவியன்னப்புள்ளெனப்பாரிற்செல்லத்
§ தேனொடுமிஞிறும்வண்டுந்தும்பியுந்தொடர்ந்துசெல்லப்
பூநிறைகூந்தன்மாதர்புடைபிடிநடையிற்போனார். (௬௯)

துப்பினின்மணியிற்பொன்னிற்சுடர்மரகதத்தின்முத்தின்
ஒப்பறவமைத்தபைம்பூணோவியம்புகழவேறி
முப்பதிற்றிரட்டிகொண்டவாயிரமுகிழ்மென்கொங்கைச்
செப்பருந்திருவினல்லார்தேர்மிசைசூழப்போனார். (௭௦)

செவிவயினமிர்தகேள்விதெவிட்டினார்தேவர்நாவின்
அவிகையினளிக்குநீரரைரயிருகோடிசூழக்

---

* நேயமங்கையரென்றது அறுபதினாயிரமாதரை.
† வெரிந்-முதுகு. ‡ இருவரைப்பயந்தநங்கை-சுமத்திரியை.
§ தேன் முதலாயின வென்றது-நால்வகை வண்டினை. ஞிமிறு-பொன்வண்டு.

கவிகையினீழற்கற்பினருந்ததிகணவன்வெள்ளைச்
சிவிகையினன்னமூருந்திசைமுகனென்னச்சென்றான். (எக)

பொருகளிறிவுளிபொற்றேர்பொலங்கழற்குமரர்முந்நீர்
அருவரைசூழ்ந்ததென்னவருகுபின்முன்னுஞ்செல்லத்
திருவளர்மார்பர்தெய்வச்சிலையினர்தேரர்வீரர்
* இருவருமுனிபின்போனவிருவருமென்னப்போனார். (எஉ)

நித்தியநியமமுற்றி † நேமியான்பாதஞ்சென்னி
வைத்தபின்மறையவேலோர்க்குவரப்பறுமணியும்பொன்னும்
பத்தியானிரையும்பாரும்பரிவுடனல்கிப்போனான்
முத்தணிவயிரப்பூணான்மங்கலமுகூர்த்தநன்னாள். (எரு)

இருபிறப்பாளரெண்ணாயிரர்மணிக்கலசமேந்தி
அருமறைவருக்கமோதியறுகுநீரளித்துச்சூழ
வரன்முறைவந்தார்கோடிமங்கலமழலைச்செவ்வாய்ப்
பருமணிக்கலாபத்தார்பல்லாண்டிசைபரவப்போனான். (எச)

கண்டிலனென்னையென்பார்கண்டனனென்னையென்பார்
குண்டலம்வீழ்ந்ததென்பார்குறுகரிதினிச்சென்றென்பார்
உண்டுகொலெழுச்சியென்பாரொலித்ததுசங்கமென்பார்
மண்டலவேந்தர்வந்துநெருங்கினர்மயங்கவென்பார். (எரு)

பொற்றொடிமகளிருரும்பொலன்கொடார்ப்புரவிவெள்ளம்
சுற்றுறுகமலம்பூத்ததொடுகடற்றிரையிற்செல்லக்
கொற்றவேன்மன்னர்செங்கைப்பங்கயக்குழாங்கள்கூப்ப
மற்றொருகதிரோனென்னமணிநெடுந்தேரிற்போனான். (எசு)

ஆர்த்ததுவிசும்பைமுட்டிமீண்டகன்றிசைகளெங்கும்
போர்த்ததங்கொருவர்தம்மையொருவர்கட்புலங்கொளாமை
சேர்த்ததுசெறிந்ததோடித்திரைநெடுங்கடலையெல்லாம்
ஆர்த்ததுசகரரோடுபகைத்தெனத்தூளிவெள்ளம். (எஎ)

சங்கமும்பணையுங்கொம்புந்தாளமுங்காளத்தோடு
மங்கலபேரிசெய்தபேரொலிமழையையோட்டத்
தொங்கலுங்குடையுந்தோகைப்பிச்சமுஞ்சுடரையோட்டத்
திங்கள்வெண்குடைகண்டோடத்தேவருமருளச்சென்றான். (எஅ)

மந்திரகீதவோதைவலம்புரிமுழங்குமோதை
அந்தணராசியோதையார்த்தெழுமுரசிதைதை

* இருவரென்றது–பரதசத்துருக்கரை.
† நேமியான்–ஆயிரமோலியரும்பரஞ்சுடரை.

கந்துகொல்களிற்றிறைதகடிகையர்கவிதையோதை
இந்திரதிருவன்செல்லவெழுந்தனதிசைகளெல்லாம். (எக)

நோக்கியதிசைகளெல்லாந்தன்னையேநோக்கிச்செல்ல
வீக்கியகழற்கால்வேந்தர்விரிந்தகைம்மலர்கள்கூப்பத்
தாக்கியகளிறுந்தேரும்புரவியும்படைஞர்தாளும்
ஆக்கியதூளிவிண்ணுமண்ணுலகாக்கப்போனான். (அ0)

வீரருங்களிறுந்தேரும்புரவியுநிடைந்தசேனை
பேர்விடமில்லைமற்றோருலகில்லைபெயர்க்கலாகா
நீருடையாடையாளுநெளித்தனண்முதுகையென்றால்
பார்பொறைநீக்கினானென்றுரைத்ததெப்பரிசுமன்றே. (அக)

இன்னணமேகிமன்னன்யோசனையிரண்டுசென்றான்
பொன்வரைபோலுமிந்துசயிலத்தின்சாரல்புக்கான்
மன்மதக்களிறுமாதர்கொங்கையுமாரனம்புந்
தென்வரைச்சாந்துநாறுஞ்சேனையுநிறுத்தன்றே. (அஉ)

கடு-வது, எழுச்சிப்படலம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-அகூஅ.

---

## கச-வது, வரைக்காட்சிப்படலம்.

சந்திரசைலத்தைக் கண்டதைக் குறித்துரைக்கும் படலம்.

கோவையார்வடக்கொழுங்கவடொடிதரநிவந்த
ஆவிவேட்டனவரிசிலையனங்கன்மேற்கொண்ட
பூவைவாய்ச்சியர்முலைசிலர்புயத்தொடும்பூட்டத்
தேவதாரத்துஞ்சந்தினும்பூட்டினசிலமா. (க)

நேரொடுங்கலில்பகையினைநீதியால்வெல்லும்
சோர்விடம்பெறாவுணர்வினன்சூழ்ச்சியேபோல
வாரொடுந்தொடர்கவட்டொடுமராமரக்குவட்டை
வேரொடுங்கொடுகிரியெனநடந்ததோர்வேழம். (உ)

திரண்டதாளொடுஞ்செறிபணைமருதிடையொடியப்
புரண்டுபின்வர * வுரலொடுபோனவன்போல
உருண்டுகாறொடர்பிறகிடுதறியொடுமொருங்கே
இரண்டுமாமரமிடையிறநடந்ததோர்யானை. (௩)

---

* உரலொடுபோனவனென்றது-கண்ணபிரானை.

கதங்கொள் * சீற்றத்தையாற்றுவானினியனகழறிப்
பதங்கொள்பாகனுமந்திரியொத்தனன்பன்னூல்
விதங்களாலவன்மெல்லெனமெல்லெனவிளம்பும்
இதங்கள்கொள்கிலாவிறைவனையொத்ததோர்யானை. (௪)

மாறுகாணுமதாய்நின்றுமழையெனமுழங்கும்
தாறுபாய்கரி † வனகரிதண்டத்தைத்தடவிப்
பாறுபின்செலக்காலெனச்செல்வதுபண்டோர்
ஆறுபோகியவாறுபோமாறுபோன்றதுவே. (௫)

பாத்தயானையிற்பதங்கணிற்படுமெதநாறக்
காத்தவங்குசநிமிர்ந்திடக்கால்பிடித்தோடிப்
பூத்தவேழிலைம்பாலையைப்பொடிப்பொடியாகக்
காத்திரங்களாற்றலத்தொடுந்தேய்த்ததோர்களிறு. (௬)

அலகிலானைகளனேகமுமவற்றொடுமிடைந்த
திலகவாணுதற்பிடிகளுங்குருளையுஞ்செறிந்த
உலவைநீள்வனத்தாதமேயொத்தவவ்வூதத்
தலைவனேயொத்துப்பொலிந்ததுசந்திரசயிலம். (௭)

தெருண்டமேலவர்சிறியவர்ச்சேரினுமவர்தம்
மருண்டதன்மையைமாற்றுவரெனுமிதுவழக்கே
உருண்டவாய்தொறும்பொன்னுருளுரைத்துரைத்தோடி
இருண்டகல்லையுந்தன்னிறமாக்கியவிரதம். (௮)

கொவ்வைநோக்கியவாய்களையிந்திரகோபம்
‡ கவ்விநோக்கினவென்றுகொல்காட்டினமயில்கள்
நவ்விநோக்கியர்நலங்கொண்மேகலைபொலஞ்சாயற்
செவ்விநோக்கினதிரிவனபோல்வனதிரிந்த. (௯)

உய்க்கும்வாசிகளிழிந்தனரன்னத்திறைதங்கி
மெய்க்கலாபமுங்குழைகளுமிழைகளும்விளங்கத்
தொக்கமென்மரநிழல்படத்துவன்றியசூழல்
புக்கமங்கையர்பூத்தகொம்பாமெனப்பொலிந்தார். (௧௦)

தளங்கொடாமரையெனத்தளிரடியினுமுகத்தும்
வளங்கொண்மாலைவண்டலமரவழிவருந்தினராய்
விளங்குதம்முருப்பளிங்கிடைவெளிப்படவேறோர்
துளங்குபாறையிற்றோழியரயிர்த்திடத்துயின்றார். (௧௧)

---

* சீற்றம் சிறிதுபொழுதுநிகழுங்கோபம். இதுசீறுஎன்னும் பகுதியடியாகப் பிறந்ததென்றறியாதார் சிறுமை யென்னும் பண்படியாகப் பிறந்ததென்பர்.

† வனகரிதண்டத்தைதடவுதல்—மோப்பம்பிடித்தல்.

‡ கவ்விநோக்கனவென்றுகால் எனற்குக் கவ்விய அழகுடையன வென்றோ எனக்கொள்க.

பிடிபுக் * காவிடைநின்றொடும்பிறங்கியமேகம்
படிபுக்காலெனப்படிதரப்பரிபுரம்புலம்பத்
துடிபுக்காவிடைத்திருமகடாமரைதுறந்து
குடிபுக்காலெனக்குடிபுக்கார்கொடியன்னமடவார். (௧௨)

வேறு.

உண்ணமுதமூட்டியிளையோர்நகர்கொணர்ந்த
துண்ணெனுமுழுக்கினதுருக்கர்தரவந்த
மண்மகடன்மார்பினணிவன்னசரமென்னப்
பண்ணியல்வயப்பரிகள்பந்தியினிரைத்தார். (௧௩)

நீர்திரைநிரைத்தவெனநீடிரைநிரைத்தார்
ஆர்கலிநிரைத்தவெனவாவணநிரைத்தார்
கார்நிரையெனக்களிறுகாவிடைநிரைத்தார்
மாருதநிரைத்தவெனவாசிகணிரைத்தார். (௧௪)

நடிக்குமயிலென்னவருநவ்விவிழியாரும்
வடிக்குமயில்வீரருமயங்கினர்திரிந்தார்
இடிக்குமுரசக்குரலினங்குமுரல்சங்கின்
கொடிக்களினுணர்ந்தரசர்கோநகரடைந்தார். (௧௫)

மிதிக்கநிமிர்தூளியின்விளக்கமருமெய்யைச்
சுதைக்கணுரையைப்பொருவுதூசுகொடுதூய்தா
உதிர்த்தனரிளங்குமரரோவியரிலோவம்
புதுக்கினரெனத்தருணமங்கையர்பொலிந்தார். (௧௬)

தாளுயர்தடக்கிரியிழிந்துதரைசேரும்
கோளரியெனக்கரிகொள்கொற்றவரிழிந்தார்
பாளைவிரியொத்துலவுசாமரைபடப்போய்
வாளெழுநிரைத்த † படமாடமவைபுக்கார். (௧௭)

தூசினொடுவெண்படமுடைக்குடில்கடோறும்
வாசநகைமங்கையர்முகங்கண்மழைவானிற்
காசின்மதியின்கதிர்வழங்குநிழலெங்கும்
வீசுதிரைவெண்புனல்விழுங்கியனபோலும். (௧௮)

மண்ணுறவிழுந்துநெடுவானுறவெழுந்து
கண்ணுதல்பொருந்தவருகண்ணனில்வருங்கார்
உண்ணிறநறும்பொடியைவீசியொருபாகம்
வெண்ணிறநறும்பொடிபுனைந்தமதவேழம். (௧௯)

* ஆயிடை என்புழி அகரச்சுட்டு நீண்டது.

† படமாடம்-ஆடையாணியன்றமனை கூடாரம்என இக்காலவழக்கு.

தீயவரொடொன்றியதிறத்தருநலத்தோர்
ஆயவரையந்நிலையறிந்தனர்துறந்தாங்
கேயவருநுண்பொடிபடிந்துடனெழுந்தொண்
பாய்பரிவிரைந்துதறிநின்றனபரந்தே. (உ0)

மும்மைபுரிவன்கயிறுகொய்துசெயன்மொய்ம்பால்
தம்மையுமுணர்ந்துதரைகண்டுவிரைகின்ற
* அம்மையிமெடிம்மையையறிந்துநெறிசெல்லும்
செம்மையவரென்னநனிசென்றனதுரங்கம். (உக)

விழுந்தபணியன்னதிரைவீசுபுரைதோறும்
† கழுங்குபயின்மங்கையர்கருங்கண்மிளிர்கின்ற
தழுங்குகழிசிந்தியதரம்பயிறயங்கத்
தெழுந்திடைபிறழ்ந்தொளிர்கொழுங்கயல்களென்ன. (உஉ)

வெள்ளநெடுவாரியறவீசியுளவேனும்
கிள்ளவெழுகின்றபுனல்கேளிரின்விரும்பித்
தெள்ளுபுனலாறுசிறிதேயுதவுகின்ற
உள்ளதுமருதுதவும்வள்ளலையுமொத்த. (உங)

துன்றிநெறிபங்கிகளெங்கவழலோடும்
மின்றிரிவவென்னமணியாரமிளிர்மார்பர்
மன்றன்மணநாறுபடமாடநுழைகின்றார்
குன்றின்முழைதோறுநுழைகோளரிகளொத்தார். (உச)

நெருங்கயிலெயிற்றனையசெம்மயிரினேற்றிப்
பொருங்குலிகமப்பியனபோர்மணிகளார்ப்பப்
பெருங்களிறலைப்புனல்கலக்குவனபெட்டுக்
கருங்கடல்கலக்கு ‡ மதுகயிடவரையொத்த. (உரு)

ஒக்கநெறியுய்ப்பவருரைத்தகுறிகொள்ளா
பக்கமினமொய்க்கயலலைக்கநனிபாரா
கைக்கரிமதத்தவிலைமாதர்கலையல்குல்
புக்கவரையொத்தனபுனற்சிறைகளேறு. (உசு)

துகிலிடைமடந்தையரொடாடவர்துவன்றிப்
பகலிடையவட்டிலின்மடுத்தெரிபரப்பும்
அகிலிடுகொழும்புகையழுங்கலின்முழங்கா
முகில்படுநெடுங்கடலையொத்துளதம்மூதூர். (உஎ)

* அம்மை இம்மைப்பயன்களையறிந்து முத்திநெறிப் படர்பவராதலிற் செம்மையவரென்றார்.

† கழுங்கு என்றது-கழுங்காடலை.

‡ நீசைக்கலக்கும் மதயானைகளை மதுகயிடவரோடுவமைகூறினார்.

வேறு.

கமருறுபொருப்பின்வாழும்விஞ்சையர்காணவந்தார்
தமரையுமறியார்நின்றுதிகைப்புறுதகமைசான்ற
குமரருமங்கைமாருங்குழுவலால்வழுவிவிண்ணின்
றமரர்நாடிழிந்ததென்னப்பொலிந்ததவ்வனீகவெள்ளம். (உஅ)

வெயினிறங்குறையச்சோதிமின்னிழல்பரப்பமுன்னாள்
துயிலுணர்செவ்வியோரும் * துனியுறுமுனிவினோரும்
குயிலொடுமினிதுபேசிச்சிலம்பொடுமினிதுகூவி
மயிலினந்திரிவதென்னத்திரிந்தனர்மகளிரெல்லாம். (உ௯)

தாளிணைகழல்களார்ப்பத்தாரிடையளிகளார்ப்ப
வாள்புடையிலங்கச்செங்கேழ்மணியணிவலயமின்னத்
தோளெனவுயர்ந்தகுன்றின்சூழல்களினிதுநோக்கி
வாளரிதிரிவதென்னத்திரிந்தனர்மைந்தரெல்லாம். (௩0)

சுற்றியகடல்களெல்லாஞ்சுடர்மணிக்கனகக்குன்றைப்
பற்றியவளைந்ததென்னப்பரந்துவந்திறுத்தசேனை
கொற்றவர்தேவிமார்கண்மைந்தர்கள்கொம்பனாரவந்
துற்றவர்காணலுற்றமலைநிலையுரைத்துமன்றே. (௩௧)

பம்புதேன்மிஞிறுதும்பிபரந்திசைபாடியாட
உம்பர்வானகத்துநின்றவொளிவளர்தருவினோங்கும்
கொம்புகள்பணைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோட்டுத்
தும்பிகளுயிரேயன்னதுணைமடப்பிடிக்குநல்கும். (௩௨)

பண்மலர்பவளச்செவ்வாய்ப்பனிமலர்குவளையன்ன
கண்மலர்க்கொடிச்சிமார்க்குக்கணித்தொழில்புரியும் † வேங்கை
உண்மலர்வெறுத்ததும்பிபுதியதேனுதவுநாகத்
தண்மலரென்றுவானத்தாரகைதாவுமன்றே. (௩௩)

மீனெனும்பிடிகளோடும்விளங்கும்வெண்மதிநல்வேழம்
கூனல்வான்கோடுநீட்டிக்குத்திடக்குமுறிப்பாயும்
தேனுகுமடையைமாற்றிச்செந்தினைக்குறவர்முந்தி
வானநீராறுபாய்ச்சியைவனம்வளர்ப்பர்மாதோ. (௩௪)

குப்புறற்கருமையாலக்குலவரைச்சாரல்வைகி
ஒப்புறத்துளங்குகின்றவுடுபதியாடியின்கண்
இப்புறத்தேயுங்காண்பார்குறத்தியரியைந்தகோலம்
அப்புறத்தேயுங்காண்பாரரம்பையரழகுமாதோ. (௩௫)

---

* துனி-கலவிக்காலத்து ஆடவர்பாற்குற்றங்காரணமாக மாதவரிடத்துண்டாவதோர் சிறுபிணக்கு. † தினைக்குரல்கொய்தற்கு வேங்கை மலர்தல் காலமாதலின் கணித்தொழில்புரியும் வேங்கை என்றார்.

உதியுறுதுருத்தியூதுமுலையுறுசீயும்வாயின்
அதிவிடநீறுசெய்யுமுண்கிலாதாவியுண்ணும்
கொதிநுனைவேற்கண்மாதர்குறத்தியர்நுதலினோடு
மதியினைவாங்கியொப்புக்காண்குவர்குறவர்மன்னோ. (௩௬)

பேணுதற்கரியசீயக்குருளையம்பிடிகளீன்ற
காணுதற்கினியவேழக்கன்றொடுகளிக்குமுன்றில்
கோணுதற்குரியதிங்கட்குழவியுங்குறவர்தங்கள்
வாணுதற்கொடிச்சிமாதர்மகவொடுதவழுமாதோ. (௩௭)

அஞ்சனக்கிரியினன்னவழிகவுள்யானைகொன்ற
வெஞ்சினத்தரியின்றிண்காற்சுவட்டொடுவிஞ்சைவேந்தர்
குஞ்சியந்தலத்துநீலக்குலமணித்தலத்துமாதர்
பஞ்சியங்கமலம்பூத்தபசுஞ்சுவடுடைத்துமன்னோ. (௩௮)

செங்கயலனையநாட்டஞ்செவியுறமுறுவறோன்ற
பொங்கிருங்கூந்தல்சோராபுருவங்கணெரியாபூவின்
அங்கையுமிடறுங்கூட்டிநரம்பளைந்தமிழ்தமூறும்
மங்கையர்பாடல்கேட்டுக்கின்னரமயங்குமாதோ. (௩௯)

கள்ளவிழ்கோதைமாதர்காதொடுமுறவுசெய்யும்
கொள்ளைவாட்கண்ணினார்தங்குங்குமக்குழம்புதங்கும்
தெள்ளியபளிக்குப்பாறைத்தெளிசுனைமணியிற்றேய்த்த
வள்ளமுநறவுமென்னவரம்பிலபொலியுமன்னோ. (௪௦)

ஆடவராவிசோரவஞ்சனவாரிசோர
ஊடலிற்சிவந்தநாட்டத்தும்பர்தம்மரம்பைமாதர்
தோடலர்கோதைநின்றுந்துறந்த * மந்தாரமாலை
வாடலநறவறாதவயின்வயின்வயங்குமாதோ. (௪௧)

மாந்தளிரனையமேனிக்குறத்தியர்மாலைசூட்டிக்
கூந்தலின்கமுகின்பாளைகுழலினோடொப்புக்காண்பார்
ஏந்திழையரம்பைமாதரெரிமணிக்கடகம்வாங்கிக்
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார். (௪௨)

சரம்பயில்சாபமென்னப்புருவங்கடம்மினோட
நரம்பினோடினிதுபாடிநாடகமயிலோடாடி
அரம்பையர்வெறுத்துநீத்தவவிர்மணிக்கோவையாரம்
மரம்பயில்கடுவன்பூணமந்திகண்டுவக்குமாதோ. (௪௩)

சாந்துசாய்தடங்கடோறுந் † தாதுராகத்திற்சார்ந்த
கூந்தலம்பிடிகளெல்லாங்குங்குமமணிந்தபோலும்

---

* மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று.
† தாதுராகம்-காவிக்கல்.

காந்தினமணியின்சோதிக்கதிரொடுங்கலந்துமூசச்
சேர்ந்துவானகமெப்போதுஞ்செக்கரையொக்குமாதோ. (சச)

நிலமகட்கணிகளென்னநிரைகதிர்முத்தஞ்சிந்தி
மலைமகள்கொழுநன்சென்னிவந்துவீழ்கங்கைமான
அலகில்பொன்னலம்பியாரஞ்சார்ந்துவீழருவிமாலை
உலகளந்தவன்றன்மார்பினுத்தரீயத்தையொத்த. (சரு)

கோடிலாநாகப்போதோடிலவங்கமலருங்கூட்டிச்
சூடுவார்களிவண்டோச்சித்தூநறுந்தேறலுண்பார்
கேடிலாமகரயாழிற்கின்னரமிதுனம்பாடும்
பாடலாலூடனீங்கும்பரிமுகமாக்கள்கண்டார். (சசு)

பெருங்களிறேயுமைந்தர்பேரெழிலாகத்தோடு
பொருந்துணைக்கொங்கையன்னபொருவில்கோங்கரும்பின்மாடே
மருங்கெனக்குழையுங்கொம்பின்மடப்பெடைவண்டுந்தங்கள்
கருங்குழற்களிக்கும்வண்டுங்கடிமணம்புணரக்கண்டார். (சஎ)

படிகத்தின்றலமென்றெண்ணிப்படர்சுனைமுழுகிப்புக்க
சுடிகைப்பூங்கமலமன்னசுடர்மதிமுகத்தினார்தம்
* வடகத்தோடுடுத்ததூசைமாசினீர்நனைப்பநோக்கிக்
கடகத்தையெறிந்துதம்மிற்கருங்கழல்வீரர்நக்கார். (சஅ)

பூவணைபலவுங்கண்டார்பொன்னரிமாலைகண்டார்
மேவருங்கோபமன்னவெள்ளிலைத்தம்பல்கண்டார்
ஆவியினினியகொண்கர்ப்பிறிந்தறிவழிந்துவிஞ்சைப்
பாவையர்வைகத்தீய்ந்தபல்லவசயனங்கண்டார். (சகூ)

† பானலங்கண்களாடப்பவளவாய்முறுவலாடப்
பீனவெம்முலையினிட்டபெருவிலையாரமாடத்
தேன்முரன்றளகத்தாடத்திருமணிக்குழைகளாட
வானவர்மகளிராடும்வாசநாறூசல்கண்டார். (நு0)

சுந்தரவானமாதர்துவரிதழ்ப்பவளவாயும்
அந்தமில்சுரும்புந்தேனுமிமிழ்றமுண்டல்குல்விற்கும்
பைந்தொடிமகளிர்கைத்தோர்பசையில்லையென்னவிட்ட
மைந்தரினீத்ததீந்தேன்வள்ளங்கள்பலவுங்கண்டார். (நுக)

அற்பகலாக்குஞ்சோதிப்பளிக்கறையமளிபாங்கர்
மற்பகமலர்ந்ததிண்டோள்வானவர்மணந்தகோலம்
விற்பகைஞுதலினார்தங்கலவியின்வெறுத்துநீத்த
கற்பகமீன்றமாலைகலனொடுங்கிடப்பக்கண்டார். (நுஉ)

---

* வடகம்-மேற்போர்வை.

† பானல்-நீலோர்பலம்.

கையெனமலரவேண்டியரும்பியகாந்தளைக்கிப்
பையரவிவையென்றஞ்சிப்படைக்கண்கள்புதைக்கின்ருரும்
செய்தவழ்வயிரப்பாறைநிழலிடைத்தோன்றும்போதைக்
கொய்திவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்ருரும். (௫௩)

பின்னங்களுகிரிற்செய்துபிண்டியந்தளிர்க்கைக்கொண்ட
சின்னங்கண்முலையினப்பித்தேமலர்கொய்கின்ருரும்
வன்னங்கள்பலவுந்தோன்ற * மணியொளிர்மலையினில்லா
அன்னங்கள்புகுந்தவென்னவகன்சுனைகுடைகின்ருரும். (௫௪)

(வே று.)

ஈனுமாமழையிளந்தளிரேயொளி
ஈனுமாமழையிளந்தளிரேயிடை
மானும்வேழமுநாகமுமாதர்தோள்
மானும்வேழமுநாகமுமாடெலாம். (௫௫)

திமிரமாவுடற்குங்குமச்சேதகம்
திமிரமாவொடுஞ்சந்தொடுந்தேய்க்குமால்
அமரமாதரையொத்தொளிரஞ்சொலார்
அமரமாதரையொத்ததவ்வானமே. (௫௬)

பேரவாவொடுமாசுணம்பேரவே
பேரவாவொடுமாசுணம்பேரவே
ஆரவாரத்திரேடுமருவியே
ஆரவாரத்திரேடுமருவியே (௫௭)

புகலும்வாளரிக்கண்ணியர்பொற்புயம்
புகலும்வாளரிக்கண்ணியர்பூண்முலை
அகிலுமாரமுமாரவங்கோங்குமே
அகிலுமாரமுமாரவங்கோங்குமே. (௫௮)

துன்னரம்பைநிரம்பியதொல்வரை
துன்னரம்பையருருவிற்றேன்றுமால்
கின்னரம்பயில்கீதங்களென்னலாம்
கின்னரம்பயில்கின்றனரேழைமார். (௫௯)

ஊறுமாகடமாவுறவூங்கெலாம்
ஊறுமாகடமாமதமோடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே. (௬0)

---

* மணி-நவமணிகளையுங்கொள்க.

கல்லியங்குகருங்குறமங்கையர்
கல்லியங்ககழ்காமர்கிழங்கெடா
வல்லியங்கணெருங்குமருங்கெலாம்
வல்லியங்கணெருங்கிமயங்குமே. (சுக)

கோளிபங்கயமூழ்கக்குளிர்கயம்
கோளிபங்கயமூழ்கக்குலைந்தவால்
* ஆளிபொங்குமருவரையூடிழிந்
† தாளிபொங்குமரம்பையரோதியே. (சுஉ)

ஆகமாலயமாகவுளாள்பொலி
வாகமாலெனலாகியதம்மலை
மேகமாலைமிடைந்தனமேலெலாம்
மேகமாலைமிடைந்தனகீழெலாம். (சுங)

பொங்குதேனுகர்பூந்திருமென
எங்குமாதருமைந்தருமீண்டியத்
துங்கமால்வரைச்சூழல்கள்யாவையும்
தங்கிநீங்கலர்தாமினிதாடுவார். (சுச)

இறக்கமென்பதையெண்ணிலெண்ணுங்கால்
பிறக்குமென்பதோர்பிழையதாதலால்
துறக்கமெய்தியதூயவரோயென
மறக்கிற்றிலரன்னதன்மாண்பெலாம். (சுரு)

வேறு.

‡ மஞ்சார்மலைவாரணமொத்ததுவானிலேறும்
வெஞ்சாயையுடைக்கதிரங்கதன்மீதுபாயும்
§ பஞ்சானனமொத்ததுமற்றதுபாயவேறும்
செஞ்சோரியெனப்பொலிவுற்றதுசெக்கர்வானம். (சுசு)

திணியார்சினைமாமரம்யாவையுஞ்செக்கர்பாயத்
தணியாதநறுந்தளிர்தந்தனபோன்றுதாழ
அணியாரொளிவந்துதிரம்பலினங்கமெங்கும்
மணியாலியன்றம்மலையொத்ததம்மையிற்குன்றம். (சுஎ)

கண்ணுக்கினிதாகிவிளங்கியகாட்சியாலும்
எண்ணற்கரிதாகியிலங்குசிரங்களாலும்

---

* ஆளி-வண்டுகள்.

† ஆளி-சிங்கம்.

‡ செக்கர்வானமுதலியன கூறிப்போந்தமையானும், வருவதுமாலைப்போதாகலானும் மஞ்சார்மலை என்பதற்கு அத்தகிரியெனப் பொருளுரைத்துக்கொள்க.

§ பஞ்சானனம்-விரிந்தமுகமுள்ளது.

வண்ணக்கொழுஞ் * சந்தனச்சேதகமார்பணிந்த
அண்ணற்கரியோன்றனையொத்ததவ்வாசில்குன்றம். (௬௮)

ஊனும்முயிரும்மனையாரொருவர்க்கொருவர்
தேனும்மிஞிறுஞ்சிறுதும்பியும்பம்பியார்ப்ப
† ஆனையினமும்பிடியும் மிகலாளியேறும்
மானுங்கலையும்மெனமால்வரைவந்திழிந்தார். (௬௯)

‡ கால்வானகத்தேருடைவெய்யவன்காய்கடுங்கட்
கோல்மாய்கதிர்ப்புல்லுளைக்கொல்சினக்கோளரிம்மா
மேல்பான்மலையிற்புகவீங்கிருள்வேறிருந்த
மால்யானையீட்டமெனவந்துபரந்ததன்றே. (௭௦)

மந்தாரமுந்துமகரந்தமணங்குலாவும்
அந்தாரரசர்க்கரசன்றனைநீக்கவெள்ளம்
நந்தாதொலிக்குந்நரலைப்பெருவேலையெல்லாம்
செந்தாமரைபூத்தெனத்தீபமெடுத்ததன்றே. (௭௧)

தண்ணக்கடலிற்றனிசிந்துதரங்கநீங்கி
விண்ணிற்சுடர்வெண்மதிவந்ததுமீன்கள்சூழ
வண்ணக்கதிர்வெண்ணிலவின்றிரள்வாலுகத்தோ
டொண்ணித்திலமின்னொளிர்வால்வளைபூர்வதொத்தே. (௭௨)

மீனேறுவேலையொருவெண்மதியீனும்வேலை
§ நோனாததனைநுவலற்கருஞ்சோதிவெள்ளம்
வானுடியரிற்பொலிமாதர்முகங்களென்னும்
ஆனாமதியங்கண்மலர்ந்ததனிகவெள்ளம். (௭௩)

மண்ணும்முழவின்னொலிமங்கையர்பாடலோதை
பண்ணுந்நரம்பிற்பகையாழியற் $ பாணியோதை
கண்ணும்முடைவேயிசை ¶ கண்ணுளராடலோதையும்
விண்ணும்மருளும்படிவிம்மியெழுந்தவன்றே. (௭௪)

மணியின்னணிக்கிவயங்கொளிமுத்தம்வாங்கி
அணியும்முலையாரகிலாவிபுலர்த்துநல்லார்
தணியும்மதுமல்லிகைத்தாமம்வெறுத்துவாசம்
திணியும்மிதழ்ப் || பித்திகைக்கத்திகைசேர்த்துவாரும். (௭௫)

---

* சந்தனச்சேதகம்-சந்தனக்குழம்பு.

† ஆனையினமென்றது - பிடியெனப் பிற்கூறலாற் றினமெனக் கூறுக.

‡ கால்ஈண்டு-ஒற்றையுருளை.

§ நோனா-பொறாது.

$ பாணியோதை-தாளவோசை.

¶ கண்ணுளர்-நாடகர். || பித்திகைக்கத்திகை-கருமுகைமாலை.

துக்கொண்டவேழம்பிணிப்போர் * புணைபாடலோதை
மதுக்கொண்டமாந்தர்மடவாரின்மிழற்றுமோதை
பொதுப்பெண்டிரல்குற்புனைமேகலைப்பூசலோதை
தக்கொண்டயானைகளியாற்களிக்கின்றவோதை. (எசு)

ண்ணுவமுதன்ன † கலைப்பொருளுள்ளதுண்டும்
பெண்ணாரமுதம்மனையார்மனத்தூடல்போர்த்தும்
ண்ணுனபாடல்செவிமாந்திப்பயன்கொளாடல்
ண்ணுலினிதுய்க்கவுங்கங்குல்கழிந்ததன்றே. (எஎ)

கச-வது வரைக்காட்சிப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கூ0கு.

---

## கரு-வது, பூக்கொய்படலம்.

மலர்பறிப்பதைக் குறித்துக்கூறும் படலம்.

னுடையெயிற்றுக்கங்குற் ‡ கனகனைவெகுண்டுவெய்ய
ானுடைக்கதிர்களென்னுமாயிரங்கரங்களோச்சித்
ானுடையுதயமென்னுந்தமனியத்தறியுணின்ற
§ மானுடைமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். (க)

றையெலாமுடித்தபின்னர்மன்னனுமூரித்தேர்மேல்
றையெலாம்வணங்கப்போனனெழுந்துடன்சேனைவெள்ளம்
றையெலாஞ்சோலையாகிக்குழியெலாங்கழுநீராகித்
றையெலாங்கமலமானசோணையாறடைந்ததன்றே. (உ)

டைந்தவணிறுத்தபின்னரருக்கனுமும்பர்ச்சேர்ந்தான்
டந்தையர்குழாங்களோடுமன்னருமைந்தர்தாமும்
டைந்துவண்டுறையுமென்பூக்கொய்துநீராடமைதீர்
டங்களுமடுவுஞ்சூழ்ந்ததண்ணறுஞ்சோலைசார்ந்தார். (ங)

ண்சிலைபுருவமாகச்சேயரிக்கருங்கணம்பால்
ண்சிலசெய்வரென்றுபோவனபோன்றமஞ்ஞை
ண்சிலம்பணிவாயார்ப்பநாணிறுற்பறந்தகிள்ளை
ண்சிலம்பார்ப்பமாதரொதுங்குதோறொதுங்குமன்னம். (ச)

---

* புணைபாடல்-யானைகளைத்தளைக்குங்காற் பாடும்பாட்டு. † கலைப்பொருளுள்ள துண்டுமென்றது - கலையின்றணிந்தபொருளைச் செவியாகிய வாயால் நுகர்ந்துமெனக் கொள்க. கலைப்பொருள்-சாதியொருமை.
‡ கனகனென்றது-இரணியனை. § மானுடைமடங்கல்-நரமடங்கல்

செம்பொன்செய்சுருளுந்தெய்வக்குழைகளுஞ்சேர்ந்துமின்னப்
பம்புதேனலம்பவொல்கிப்பண்ணையிளுடனேக்கிக்
கொம்பொடுங்கொடியனுரைக்குறிப்பறிந்துணர்தறேற்ருர்
வம்பவிழலங்கன்மாலைமைந்தருமயங்கினின்ருர். (௫)

பாசிழைப்பரவையல்குற்பண்டருகிளவித்தண்டேன்
மூசியகூர்தன்மாதர்மொய்த்தபேரமலைகேட்டுக்
கூசினவல்லபேசநாணினகுயில்களெல்லாம்
* வாசகம்வல்லார்முன்னின்றியாவர்வாய்திறக்கவல்லார். (௬)

நஞ்சினுங்கொடியநாட்டமமுதினுநயர்துநோக்கிச்
செஞ்செவேகமலக்கையாற்றீண்டலு † நீண்டகொம்பர்
தஞ்சிலம்படியின்மென்பூச்சொரிந்துடன்ருழ்ந்தவென்ருல்
வஞ்சிபோன்மருங்குலார்மாட்டியாவரேவணங்கிலாதார். (௭)

அம்புயத்தணங்கினன்னாம்மலர்க்கைகண்ட
வம்பியலலங்கற்பங்கி ‡ வாளரிமருளுங்கோளார்
தம்புயவரைகள்வந்துதாழ்வனதளிர்த்தமென்பூங்
கொம்புகடாமுமென்றல்கூறலார்தகமைத்தொன்றே. (௮)

§ நதியினுங்குளத்தும்பூவானளினங்கள்குவளையோடு
திருநுதல்வல்லிபூப்பநோக்கியமாலைத்தும்பி
அதிசயமெய்திப்புக்குவீழ்ந்தனவலைக்கப்போகா
நதியனகண்டபோழ்துவிடுவரோபுதுமைபார்ப்பார். (௯)

உலந்தருவயிரத்திண்டோளொழுகிலாரொளிகொண்மேனி
மலர்ந்தபூந்தொடையன்மாலைமைந்தர்பான்மயிலினன்னார்
லந்தவர்போலவொல்கியொசிந்தனசிலகைவாராப்
லந்தவர்போலநின்றவுளசிலபூத்தகொம்பர். (௧௦)

வெலாங்கொய்துகொள்ளப்பொலிவிலதுவளநோக்கி
மாலையாங்கணவர்கண்ணுக்கழகிலவிவையென்றெண்ணிக்
காலையும்வடமுநாணுங்குழைகளுங்குழையப்பூட்டிப்
மாலையர்பனிமென்கொம்பைநோக்கினர்பரிந்துநிற்பார். (௧௧)

வேறு.

றம்போதினிற்றேன்றுவைத்துண்டுழறும்பிபீட்டம்
றுங்கோதையோடுநேனைசின்னமுநீத்தநல்லார்
வறுங்கூந்தன்மொய்க்கின்றனவேண்டலவேண்டுபோதும்
றும்போகமெல்லாநலனுள்வழியுண்பரன்றே. (௧௨)

---

* வாசகம்வல்லார் - வாய்வன்மையுடையார் † ஓரறிவுயிரேதாழின் றறிவுயிர்தாழ்வது கூறுமேதயமைந்ததென்க. ‡ வாளரிமருளுங்கோள்- ம்பீரநடை, உடல்வலி, சமர்க்கஞ்சாத் தறுகண்மை யின்னோரன்ன ற்றை. § நதியினுங்குலத்தும் பூவாநளினங்கள் - முகத்தாமரைகள். உலம்-திரண்டகல்.

மெய்ப்போதினங்கைக்கணியன்னவண்மென்பளிங்கில்
பொய்ப்போதுதாங்கிப்பொலிகின்றதன்மேனிநோக்கி
இப்பாவையெங்கோற்குயிரன்னவளென்னவுன்னிக்
கைப்போதினோடுநெடுங்கண்பனிகாரநின்றாள். (௧௩)

* கோளுண்டதிங்கண்முகத்தாளொருகொம்பொர்மன்னன்
தோளுண்டமாலையொருதோகையைச்சூட்டநோக்கித்
தாளுண்டகச்சாற்றகையுண்டமுலைக்கணாலி
வாளுண்டகண்ணின்மழையுண்டெனவாரநின்றாள். (௧௪)

மயில்போல்வருவாண்மனங்காணியகாதன்மன்னன்
செயிர்தீர்மலர்க்காவினோர் † மாதவிச்சூழல்சேரப்
பயில்வாளிறைபண்டுபிறிந்தறியாள்பதைத்தாள்
உயிர்நாடியொல்கும்முடல்போலலமந்துழன்றாள். (௧௫)

மைதாழ்கருங்கண்கள்சிவப்புறவந்துதோன்ற
நெய்தாழும்வேலானொடுநெஞ்சுபுலந்துநின்றாள்
எய்தாதுநின்றமலர்நோக்கியெனக்கிதீண்டக்
கொய்தீதியென்றோர்குயிலைக்கரங்கூப்புகின்றாள். (௧௬)

செம்மாந்ததெங்கின்னிளநீரையொர்செம்மனோக்கி
அம்மாவிவைமங்கையர்கொங்கைகளாகுமென்ன
எம்மாதர்கொங்கைக்கிவையொப்பனவென்றோரேழை
விம்மாவெதும்பாவெயராமுகம்வெய்துயிர்த்தாள். (௧௭)

போரென்னவீங்கும்பொருப்பன்னபொலங்கொடிண்டோள்
மாரன்னனையான்மலர்கொய்திருந்தானைவந்தோர்
காரன்னகூந்தற்குயிலன்னவள்கண்புதைப்ப
‡ ஆரென்னலோடும்மனமென்னவயிர்த்துயிர்த்தாள். (௧௮)

ஊற்றூர்நறைநாண்மலர் § மாதரொருங்குவாசச்
சேற்றால்விளையாதசெந்தாமரைக்கைக்கணிட்டு
எற்றார்க்குதவானிடையேந்தினனின்றெழுந்தான்
மாற்றானுதவான்கடு $ வச்சையன்போலொர்மன்னன். (௧௯)

தைக்கின்றவேனோக்கினடன்னுயிரன்னமன்னன்
மைக்கொண்டகண்ணாளெதிர்மாற்றவள்பேர்விளம்ப

---

* கோளுண்ட திங்கள்—இராகுவினாற் பீடிக்கப்பட்ட சந்திரன். † மாதவிச்சூழல்-வசந்தமல்லிகைக்கொடியீடு. இதனை வடநூலார் லதாக்ருஹம் என்பர். ‡ ஆரென்றவன் வினவலான் நம்மைப் போலியவன் மாட்டுவிளையாட்டு: மகளிர்பலருளரென்பது-கருதினாளென்பது. § பன் மாதரென்றது-மாதரென்றது இருவரை. $ வச்சையன்-லோபி.

மெய்க்கொண்டநாணந்தலைக்கொண்டிடவிம்மிமென்பூக்
கைக்கொண்டுமோந்தாளுயிர்ப்புண்டுகரிந்தவன்றே. (உ0)

திண்டேரரசன்னொருவன்குலத்தேவிமார்தம்
ஒண்டாமரைவாண்முகத்துண்மலி * ருண்கணெல்லாம்
கண்டாதரிக்கத்திரிவான்மதங்கௌவியுண்ண
வண்டாதரிக்கத்திரிமாமதவாரணமொத்தான். (உக)

சந்திக்கலாவெண்மதி † வாணுதலாடனக்கும்
வந்திக்கலாகுமடவாட்கும்வகுத்தகல்கி
நிந்திக்கலாகாவுருவத்தினளின்றபோதும்
சிந்திக்கலாபமயிற்கண்கள்சிவந்துபோனார். (உஉ)

வேறு.

வந்தெங்குந்தம்மன்னுயிரேயொப்பற்றிதொன்றே
கந்தந்துன்றுஞ்சோர்குழல்காணார்கலைபேணார்
‡ அந்தந்தோறுமற்றகுழைத்தாமரைபாரார்
சிந்துஞ்சந்தத்தேமலர்காணத்திரிவாரும். (உங)

யாவெழாக்குஞ்சொற் § பொன்னனையாளோரிகன்மன்னன்
தாழத்தாழாடாழ்ந்தமனத்தாடனக்கின்றன்
ஆழத்துள்ளுதங்கள்வினைப்பாவைவினின்ற
சூழற்கேதன்கிள்ளையையேவித்தொடர்வாரும். (உச)

அந்தாராகத் § தைங்கணைநாறுமியாகச்
சிந்தாகின்றசிக்கையுயிரன்செய்தவந்தாரான்
மந்தாரங்கொண்டகுறியோமாதவியென்றோர்
சந்தார்கொங்கைத்தார்குழலார்பார்த்தனர்வாறும். (உரு)

காடிக்கொண்டாள்குற்றமயந்தாண்முனிவாற்றன்
றைடிக்காணக்காட்டுசெலத்தாளுடனில்லாள்
தேடித்தேடிச்செய்தசெழும்பூமரமாலை
சூடிச்சூடிக்கண்ணடிநோக்கித்துவள்வாரும். (உசு)

¶ மறலிக்கூறும்வன்கதிர்வேலானிடையேவந்
துறவிக்கோலம்பெற்றிலனென்றாலுடன்வாழ்விப்

* உண்கண்-மையுண்டகண். இதனை 'இருநோக்கிவளுண்கண்' என்பதனாலறிக. † சந்திக்கலாவெண்மதி-மாலைப்பொழுதிற்றோன்றுங்கலைகளோடு தோன்றுமதி.

‡ அந்தமென்றது கடைப்பூட்டுகளை. § பொன்னனையாள்-திருமகளொப்பாள்.

¶ ஐங்கணை மா, தாமரை, நெய்தல், அசோகு, முல்லை.

$ எவ்வகைவினையையேனும் தன் கைப்படையேயல்லது வேறு துணைவேண்டாது முட்டின்றி முடிக்கு மாற்றலுடையானென்பார் 'மறலிக்கூறும் வன்கதிர்வேலா' னென்றதென்க.

பிறவிக்கொல்லேனென்செய்வதிப்பேரணியென்றோர்
விறலிக்கீவாளொத்திழையெல்லாம்விடுவாளும். (௨௭)

* வம்பிற்பொங்குங்கொங்கைசுமக்கும்வலியின்றிக்
கம்பிக்குந்தந்நுண்ணிடைநோவக்கசிவாரும்
பைம்பொற்கிண்ணம்மெல்விரலூங்கிப்பயில்கின்ற
கொம்பிற்பிள்ளைக்கிள்ளையொளிக்கக்குழைவாரும். (௨௮)

தன்னைக்கண்டாண்மென்னடைகண்டாடமர்போலத்
துன்னக்கண்டாடோழமைகண்டாடுணையென்றாள்
உன்னைக்கண்டாரெள்ளுவர்பொல்லாதுடுநீயென்
றன்னக்கன்னிக்காடையளிப்பானமைவாரும். (௨௯)

பாகொக்குஞ்சொன்னுண்கலையாடன்படரல்குல்
ஆகக்கண்டோராடரவாமென்றயனண்ணும்
தோகைக்கஞ்சிக்கொம்பினொதுங்கித்துணைநீன்ற
சாகைத்தங்கைக்கண்கள் † புதைத்தேதளர்வாரும். (௩0)

பொன்னேதேனேபூமகளேகாணிணையென்னுந்
தன்னேரில்லாளங்கொருகொய்யற்றழைமூழ்கி
இன்னேயென்னைக்காணுதிநீயென்றிகலித்தன்
னன் ‡ னீலக்கண்கையின்மறைத்துநகுவாரும். (௩௧)

வில்லிற்கோதைநாணுறமிக்கோரிலவங்கம்
புல்லிக்கொண்டதாமரைமென்பூமலர்தாங்கி
அல்லிற்கோதைமாதர்முகப்போரவிர்தச்
செல்வக்காணிற்செங்கதிரென்னத்திரிவாரும். (௩௨)

செய்யிற்கொய்யுஞ்செங்குமுதஞ்செஞ்சிலையொன்றும்
கய்யிற்பெய்யுங்காமனுநாணுங்கவினார்தம்
மையற்பேதைமாதர்மிழற்றும்மழலைச்சொல்
தெய்வப்பாடல்சொற்கலையென்னத்தெரிவாரும். (௩௩)

சோலைத்தும்பிமென்குழலாகத்தொடைமேவும்
கோலக்கொண்டமன்மதவாயன்குறியுய்ப்ப
நீலத்துண்கண்மங்கையர்சூழ்கிளையாகின்
மாலைப்போதின்மால்விடையென்னவருவாரும். (௩௪)

வேறு.

§ ஊக்கமுள்ளத்துடையமுனிவரால்
காக்கலாவதுகாமன்கைவில்லெனும்

---

* சச்சினின்று மடங்காதுபுறத்தே தோன்றுவதாகலின் வம்பிற்பொங்குங் கொங்கையென்றார். † புதைத்துத்தளர்வாரென்றதை முன்பின்னாகநிறுத்தி விகுதிபிரித்துக்கூட்டியுரைக்க. ‡ நீலமென்றது-ஆகுபெயர். § ஊக்கமென்றது-தாம்விடுத்த காமநுகர்ச்சியிற்றளராதிருக்குநிலைமையை,

வாக்குமாத்திரமல்லதுவல்லியிற்
பூக்கொய்வாள்புருவக்கடைபோதுமே. (௯௫)

நாறுபூங்குழ * னன்னுதல்புன்னைமேல்
ஏறினான்மனத்தும்பர்சென்றேறினாள்
ஊறுஞானத்துயர்ந்தவராயினும்
வீறுசேர்முலைமாதரைவெல்வரோ. (௯௬)

சினையின்மேலிருந்தானுருத்தேவரால்
வினையவும்மரியாள்வனப்பின்றலை
நினைவுநோக்கமுந்தங்கலன்கைகளால்
நனையுநாண்முறியுங்கொய்துநல்கினான். (௯௭)

வண்டுவாழ்குழலாண்முகநோக்கியோர்
† தண்டுபோற்புயத்தான்றடுமாறினான்
உண்டுகோபமென்றுளத்துணர்ந்தவள்
தொண்டைவாயிற்றுடிப்பொன்றுசொல்லவே. (௯௮)

ஏயுந்தன்மையிவ்வகையாலெலாம்
ஆயதண்ணளிநற்சோலைத்தடமலர்
வேயுஞ்செய்கைவெறுத்தனர்வெண்டிரை
பாயுந்தீம்புனற்பண்ணைசென்றெய்தினார். (௯௯)

௧௫-வது, பூக்கொய்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧0௪௪.

---

## ௧௬-வது, நீர்விளையாட்டுப்படலம்.

நீர்விளையாட்டைக் குறித்துச்சொல்லும் படலம்.

புனைமலர்த்தடங்களைநோக்கிப்பூசல்வண்டார்த்துப்பொங்க
‡ வினையறுதுறக்கநாட்டுவிண்ணவர்க்கணைமுரணா
அனகருமணங்களருமம்மலர்ச்சோலைநின்று
வனகரிபிடிகளோடும்வருவனபோலவந்தார். (௧)

அங்கவர்பண்ணைநன்னீராடுவானமைந்தோர்தம்
§ கங்கைவார்சடையோனன்னமாமுனிகனலமேனாள்

---

* நன்னுதன்மனத்தும்பர் சென்றேறுதலென்றது தலைவிபால்வைத்த வேட்கைப்பெருங்கடங்காது அவ்வளவேயோடிநிற்றலை. † தண்டுபோற்புயத்தானென்பதனன் வழியதோளானெனப்போதராலான் தன்றோண் மாலையையொருத்திக்குச்சூட்டிவந்தானென்றாடினளென்க. ‡ தீவினையிழந்தா ரெய்துதற்கிடனாகலின்வினையறுதுறக்கநாடென்றார். § கங்கைவார் சடையோனன்ன மாமுனியென்றது துர்வாசனை.

மங்கையர்கூட்டத்தோடும்வானவர்க்கிறைவன்செல்வம்
பொங்குபாற்கடலிற்செல்லுந்தோற்றமேபோன்றதன்றே. (உ)

மையவாங்குவளையெல்லாமாதர்கண்மலர்கள்பூத்த
* கையவாமுருவத்தார்தங்கண்மலர்குவளைபூத்த
செய்யதாமரைகளெல்லாந்தெரிவையர்முகங்கள்பூத்த
தையலார்முகங்கள்செய்யதாமரைபூத்தவன்றே. (௩)

தாளையேய்கமலத்தாளின்மார்புறத்தழுவுவாரும்
† தோளையேபற்றிவெற்றித்திருவெனத்தோன்றுவாரும்
பாளையேவிரிந்ததென்னப்பரந்துநீருந்துவாரும்
வாளைமீனுகளவஞ்சிமைந்தரைத்தழுவுவாரும். (௪)

வண்டுணக்கமழுஞ்சுண்ணம்வாசநெய்சானத்தோடும்
கொண்டெதிர்வீசுவாருங்கோதைகொண்டோச்சுவாரும்
தொண்டைவாய்ப்பெய்து நீர்கொழுநர்மேற்றூகின்றாரும்
புண்டரீகக்கைகூப்பிப்புனன்முகத்திறைக்கின்றாரும். (௫)

‡ மின்னொத்தவிடையினாருமேவியாத்ததோளினாரும்
சின்னத்தினளகபந்திதிருமுகமறைப்பநீக்கி
அன்னத்தைவருதியென்றேயோடவென்றறைகின்றாரும்
பொன்னொத்தமுலையின்வந்துபூவொத்தளைகின்றாரும். (௬)

பண்ணுளபவளத்தொண்டைபங்கயம்பூத்ததன்ன
வண்ணவாய்க்குவளைவாட்கண்மருங்கிலார்கரும்பினன்னார்
உண்ணிறைகயலைநோக்கியோடுநீர்த்தடங்கட்கெல்லாம்
கண்ணுளவாங்கொலென்றுகணவரைவினவுவாரும். (௭)

தேனகுநறவமாலைச்செறிகுழற்றெய்வமன்னார்
தானுடைக்கோலமேனிதடத்திடைத்தோன்றநோக்கி
நானகநகுகின்றாளிங்கண்ணுதறோழியாமென்
றானாதில்விலையினாரமுளங்குளிர்ந்துதவுவாரும். (௮)

குண்டலந்திருவில்வீசக்குலமணியாரமின்ன
விண்டொடர்வரையின்வைகுமென்மயிற்கணங்கள்போல
வண்டுளர்கோதைமாதர்மைந்தர்தம்வயிரத்திண்டோட்
டண்டுகள்தழுவுமாசைபுனற்கரைசார்கின்றாரும். (௯)

---

* சாமுத்திரிகைநூலிலெழுங்கென்பது படக்கையென்றார். †வெறித்திருவென்றமையான் தோளொன்றது-ஆடவர்தோளை விளக்கின்றது. ‡ அம்மாதராருடைய உறுப்பிடை யொவ்வொன்றுமே காண்பாருடைய மனங்கண்களை யொருசேரக்கவரும் வனப்பிற்றாகலின் அவ்வாறு தம்மை அவர்பாற்செல்லக் கணவர் அவ்வவ்வமையத்து அவ்வவ் வுறுப்பேகாரணமாக அவர்க்கிட்டு மின்னொத்தவிடையினாள் வேயொத்த தோளினாள் என கூறுங்கூற்றினைத் தாம்கொண்டு கூறினாரல்லது இடையொன்றுமே சிறந்தார் தோளொன்றுமே சிறந்தாரென இருவகையராகக் கூறினாரல்லர்.

அங்கிடையுற்றகுற்றம்யாவதென் றறிதரேற்றும்
செங்கயலனையநாட்டஞ்சிவப்புறச்சீறிப்போன
மங்கையோர்கமலச்சூழன் மறைந்தனண் மறையமைந்தன்
பங்கயமுகமென்றோராதையுற்றுப்பார்க்கின்றானால். (கO)

பொற்றொடிதளிர்க்கைச்சங்கம்வண்டொடுபுலம்பியார்ப்ப
வற்றுநீர்குடையுந்தோறுமேந்தபோல்குனின்றும்
கற்றைமேகலைகணீங்கிச்சீறடிகௌவக்காலில்
சுற்றியநாகமென்றதுணுக்கத்தாற்றுடிக்கின்றாரும். (கக)

குடைந்துநீராடுமாதர்குழாம்புடைசூழவாழித்
தடம்புயம்பொலியவாண்டோர்தார்கெழுவேந்தனின்றான்
கடைந்தநாள் [illegible]ற்றிறேறுங்கடலிடைவந்துதோன்றும்
மடந்தையர்சூழநின்றமரர்தம்போலுமாதோ. (கஉ)

தொடியுலாங்கமலச்செங்கைத் [illegible]கரைத்துவர்த்தசெவ்வாய்க்
கொடியுலாமருங்குலல்லார்குழாத்தொருகுருசினின்றான்
கடியுலாங்கமலவேலிக்கண்ணகன்கானியாற்றுப்
பிடியெலாஞ்சூழநின்றவெய்யமாயானையொத்தான். (கங)

கானமாமயில்களெல்லாங்களிகெடக்கலக்குஞ்சாயல்
* சோனைவார்குழலினார்தங்குழாத்தொருதோன்றனின்றான்
வானயாறதனைக்கண்ணிவயின்வயின்வயங்கித்தோன்றும்
மீனெலாஞ்சூழநின்றவிரிகதிர்த்திங்களொத்தான். (கச)

மேவலாந்தகைமைத்தல்லால் † வேழவிற்றடக்கைவீரற்
கேவலாங்காட்டுகின்றவிணைநெடுங்கண்ணோரேழை
பாவைமார்பயந்தகோலப்பண்ணையிற்பொலிவாள்வண்ணப்
பூவெலாமலர்த்துபொய்கைத்தாமரைபொலிவொத்தான். (கரு)

நீடலுடைக்கொடியவேலேலையென்னவாண் [illegible] வெண்ணகை
சுடர்முகத்துல [illegible] கண்ணோடோளையர்சூழநின்றான்
மடலுடைப்போதுகாட்டுங் [illegible]
கடலிடைத்தோன்றுமின்னன் ‡ கற்பகவல்லியொத்தான். (கசா)

தேரிடைக்கொண்டவல்குற்றெரிந்திடைக்கொண்டகொங்கை
ஆரிடைச்சென்றுங்கொள்ளலொண்ணிலாவழகுகொண்டாள்
வாரிடைத்தனநீராடமூழ்கினான்வழுவனைத்தீர்
நீரிடைத்தோன்றுங்கிரணிலவைப்பொலிந்தன்றே. (கஎ)

---

* சோனைமழைபோலிடையறாது வார்ந்துதொங்குதலான் சோனைவார்குழலினாரென்றார்.

† வேழவிற்றடக்கைவீரன்-கரும்புவில்லையுடைய மன்மதன்.

‡ கற்பகவல்லி-கற்பகத்தின்மேற்படரும் காமவல்லி.

வேறு.

மலைகடந்தபுயங்கண்மடந்தைமார்
கலைகடந்தகலல்குல்கடாம்பட
முலைகடந்தமின்முந்திநெருங்கலால்
நிலைகடந்துபரந்ததுநீத்தமே. (௧௮)

* செய்யவாய்வெளுப்பக்கண்சிவப்புற
நெய்யராகமழியத்துகிலெனத்
தொய்யின்மாமுலைமங்கையர்தோய்தலால்
பொய்கைகாதற்கொழுநரும்போன்றதே. (௧௯)

ஆனதூயவரோடுடனாடினர்
ஞானநீரவராகுதனன்றரோ
தேனுநாவியுந்தேக்கிலாவியும்
மீனுநாறினவேறினிவேண்டுமோ. (௨௦)

மிக்கவேந்தர்தம்மெய்யழிசாந்தொடும்
புக்கமங்கையர்குங்குமம்போர்த்தலால்
ஒக்கநீலமுகிற்றலையோடிய
செக்கர்வானகமொத்ததத்தீம்புனல். (௨௧)

காகதுண்டநறுங்கலவைக்கனி
ஆகமுண்டதடங்களுநீங்கலால்
பாகடர்ந்தபனிக்கனிவாய்ச்சியர்
† வேகடஞ்செய்மணியெனமின்னினார். (௨௨)

பாயரித்திறலான் ‡ பசுஞ்சாந்தினல்
ஆயபொற்புயத்துப்பொதிதூக்குறி
மீயரித்துவெளுக்கவொர்மெல்லியல்
சேயரிக்கருங்கண்கள்சிவந்தவே. (௨௩)

§ கதம்பநாள்விரைகள்ளவிழ்தாதொடும்
ததும்புபூந்திரைத்தண்புனல்சுட்டதால்
நிதம்பபாரத்தொர்பேரிளைக்காமத்தால்
வெதும்புவாளுடல்வெப்பம்வெதுப்பவே. (௨௪)

தையலாளையொர்தாரணிதோளினன்
நெய்கொளோதியினீர்முகந்தேற்றினன்

---

* வாய்வெளுத்தலுங் கண்சிவத்தலு மாதரைத் தோய்வதனா லுண்டாவது.

† வேகடஞ்செயல்-சாணைபிடித்தல். அன்றி அழுக்ககற்றுதல் எனினுமமையும்.

‡ பசுமை வெண்மையென்னும் பண்புகள் வண்ணப்பண்பினை யுணர்த்தாது முறையே ஈரமுமின்மையு முணர்த்திநின்றன.

§ கதம்பம்-பரிமளப்பொடி.

* செய்யதாமரைச்செல்வியைத்தீம்புனல்
கையினாட்டுங்களிற்றரசென்னவே. (உ௫)

சுளியுமென்னடைதோற்கநடந்தவர்
அளிகொள்சீறடியொத்தனவாமென
விளிவுதோன்றமிதிப்பனபோன்றன
நளினமேறியநாகிளவன்னமே. (உ௬)

எரிந்தசிந்தையரெத்துணையென்கொனோ
அரிந்தகூருகிராலழிசார்ந்துபோய்த்
தெரிந்தகொங்கைகள்செவ்வியநூல்புடை
வரிந்தவங்கலசங்களைமானவே. (உ௭)

தாழுகின்றதைமலர்க்கையினால்
ஆழிமன்னொருவனுரைத்தானது
வீழியின்கனிவாயொருமெல்லியல்
தோழிகண்ணிற் † கடைக்கணிற்சொல்லினாள். (உ௮)

தள்ளியோடியலைதருமாறலால்
தெள்ளுநீரின்முழுகுசெந்தாமரை
புள்ளிமானனையார்முகம்போல்கிலா
துள்ளினாணியொளிப்பனபோன்றவே. (உ௯)

இனையவெய்தியிரும்புனலாடிய
வினைகருங்கழன்மைந்தருமாதரும்
அனையநீர்வறிதாகவந்தேறினார்
புனைநறுந்துகில்பூணொடுந் ‡ தாங்கினார். (௩0)

மேவினார்பிரிந்தார்க்கந்தயங்குநீர்
தாவுதண்மதிதன்னொடுந்தாரகை
ஓவுவானமுமுண்ணிறைதாமரைப்
பூவெலாங்குடிபோனதும்போன்றதே. (௩௧)

மானினோக்கியர்மைந்தரோடாடிய
ஆனநீர்விளையாடலைநோக்கினான்
தானுமன்னதுகாதலித்தானென
§ மீனவேலையைவெய்யவனெய்தினான். (௩௨)

ஆற்றலின்மையினாலழிந்தேயுந்தம்
வேற்றுமன்னர்தம்மேல்வரும்வேந்தர்போல்
ஏற்றுமாதர்முகங்களொடெங்கணும்
தோற்றசந்திரன்மீளவுந்தோற்றினான். (௩௩)

௧௬-வது, நீர்விளையாட்டுப்படலம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௧0௪௭.

---

* தாமரைச்செல்வியைக் கையினாட்டுங்களிற்றரசென்ன என்றமையான் கஜலக்குமியையுணர்த்தியது. † கண்ணிற்கடைக்கணிற்சொல்லல் என்றது-நயனபாடையை. ‡ தாங்கினாரென்றமையான் ஆடையணியிவற்றாலல்லது இயற்கையழகினையுடையரென்பதும், பூவின் மெல்லியரென்பதும் பெறப்பட்டன. § மீனவேலையைவெய்யவனெய்தினானென்றது பொழுதுபட்டதென்பதுணர்த்திற்று,

# கஎ-வது, உண்டாட்டுப்படலம்.

உண்டாடலைக்குறித்துச் சொல்லும் படலம்.

வெண்ணிறநறைநிறைவெள்ளமென்னவும்
பண்ணிறஞ்செறிந்திடைபரந்ததென்னவும்
உண்ணிறைநறாமலிக்கொழுகிற்றென்னவும்
தண்ணிறைநெடுநிலாத்தழைத்ததெங்குமே. (க)

கலந்தவர்க்கினியதோர்களனுமாய்ப்பிரிந்
துலந்தவர்க்குயிர்சுடுவிடமுமாயுடன்
புலந்தவர்க்குதவிசெய்புதியதூதுமாய்
மலர்ந்ததுநெடுநிலாமதனன்வேண்டவே. (உ)

ஆறெலாங்கங்கையேயாயவாழிதாம்
கூறுபாற்கடலையேயொத்தகுன்றெலாம்
* ஈறிலான்கயிலையையிணைந்தவெண்ணிணி
வேறியாம்புகல்வதுநிலவின்வீக்கமே. (ங)

எள்ளருந்திசைகளோடி † யாரும்யாவையும்
கொள்ளைவெண்ணிலவினுற்கோலங்கோடலால்
வள்ளுறைவயிரவாண் ‡ மகரகேதனன்
வெள்ளணியொத்ததுவேலைஞாலமே. (ச)

தயங்குதாரகைபுரைதரளநீழலும்
இயங்குதார்மிடைந்தகாரெழினிச்சூழலும்
கயங்கள்போன்றொளிர் § பளிங்கடுத்தகானமும்
வயங்குபூம்பர்தருமகளிரெய்தினர். (ரு)

பூக்கமழோதியர்போதுபோக்கிய
சேக்கை $ யின்பச்செருச்செருக்குஞ்சிந்தையார்
ஆக்கியவமிழ்தெனவம்பொன்வள்ளத்து
வாக்கியபசுநறுமாந்தன்மேயினார். (சு)

மீனுடைவானுடைவிஞ்சைநாட்டவர்
ஊனுடையுடம்பினுருவமொப்பிலார்
மானுடைநோக்கினார்வாயின்மாந்தினார்
தேனுடைமலரிடைத்தேன்பெய்தென்னவே. (எ)

---

* ஈறிலான் - சங்காரகாரணனாகியசிவன், இதற்குவேறுகூறுவாருமுளர். † யாரும்யாவையும் என்றது-இயங்குதிணைநிலைத்திணைகளை. ‡ மகரகேதனன் - கயற்கொடியையுடைய மன்மதன். § பளிங்கடுத்த கானமென்றது - பளிங்குப்பாறையை. $ இன்பச்செருநர்-கலவிப்போர்.

உக்கபாலபுரைநிலாவுண்டவள்ளமும்
கைக்கொள்வாளொளிபடச்சிவந்துகாட்டத்தன்
மைக்கணுஞ்சிவந்ததோர்மடந்தைவாய்வழி
புக்கதேனமிர்தமாய்ப்பொலிந்தபோன்றவே. (௮)

தாமமுநானமுந்தைந்ததண்ணகிற்
றாமமுண்குழலியருண்டதூநறை
ஓமவெங்குழியுகுநெய்யினுள்ளுறை
காமவெங்கனலினைக்கனற்றிக்காட்டிற்றே. (௯)

வேறு.

* விடனெக்குநெடியநோக்கினமிழ்தொக்குமின்சொலார்தம்
மடனெக்குமடனுமுண்டேவாணுதலொருத்திகாணத்
தடனெக்குநிழலைப்பொன்செய்தண்ணறுந்தேறல்வள்ளத்
துடனெக்கவுவந்துநீயேயுண்ணுதிதோழியென்றாள். (௧௦)

அச்சநுண்மருங்குலாளோரணங்கனாளளகபந்தி
நச்சுவேற்கருங்கட்செவ்வாய்நளிர்முகமதுவுட்டோன்றப்
பிச்சிநீயென்செய்தாயிப்பெருநறவிருக்கவாளா
வெச்சிலைநுகர்தியோவென்றெயிற்றரும்பிலங்கநக்காள். (௧௧)

புறமெலாநகைசெய்தேசப்பொருவருமேனிவேறோர்
மறமுலாங்கொலைவேற்கண்ணுண்மணியின்வள்ளத்துவெள்ளை
நிறநிலாக்கற்றைபாயநிறைந்ததுபோன்றுதோன்ற
நறவெனவதனைவாயின்வைத்தனளுணுட்கொண்டாள். (௧௨)

யாழ்க்குமின்குழற்குமின்பமளித்தனவிவையாமென்னக்
கேட்டுமென்மழலைச்சொல்லோர்கிஞ்சுகங்கிடந்தவாயாள்
† தாட்கருங்குவளைதோய்ந்ததண்ணறைச்சாடியுட்டன்
வாட்கணினிழலைக்கண்டாள்வண்டெனவோச்சுகின்றாள். (௧௩)

களித்தகண்மதர்ப்பவாங்கோர்கனங்குழைகள்ளினுள்ளால்
வெளிப்படுகின்றகாட்சிவெண்மதிநிழலைநோக்கி
அளித்தனெனபயம்வானத்தரவினையஞ்சிநீவந்
தொளித்தனையஞ்சலென்றாங்கினியன ‡ வுணர்த்துகின்றாள். (௧௪)

அழிகின்றவறிவினாலோபேதைமையாலோவாற்றிற்
சுழியொன்றிநின்றதன்னவுந்தியாடியசெந்தேன்

---

* நோய்நோக்கென்பது படவிடனெக்குநெடியநோக்கென்றார்.

† தாட்கருங்குவளை தோய்ந்த தண்ணறைச்சாடியென்றது மொய்க்கும் வண்டுகட்கஞ்சி அத்தண்டின் சிறுதொளையினறவை யுரிஞ்சுதற்கென்க.

‡ உரையாநின்றாளென்னாது உணர்த்துகின்றாளென்றதனான் இனியன என்ற துறுதிமொழியென்ப துணர்த்திற்று.

பொழிகின்றபூவின்வேய்ந்தபந்தரைப்புரைத்துக்கீழ்வந்
திழிகின்றகொழுநிலாவைநறவெனவள்ளத்தேற்றாள். (௧௫)

மின்னெனநுடங்குகின்றமருங்குலாளொருத்திவெள்ளை
இன்னமிழ்தனையதீஞ்சொலிடைதடுமாறியென்ன
வன்னமேகலையைநீக்கிமலர்த்தொடை * யல்குல்சூழ்ந்தாள்
பொன்னரிமாலைகொண்டுபுரிகுழல்புனையலுற்றாள். (௧௬)

கண்மணிவள்ளத்துள்ளேகளிக்குந்தன்முகத்தைநோக்கி
விண்மதிமதுவினாசையீழ்ந்ததென்றொருத்தியுன்னி
உண்மகிழ்துணைவனோடுமூடுநாள்வெம்மைநீக்கித்
தண்மதியாகில்யானுந்தருவெனிந்நறவையென்றாள். (௧௭)

எள்ளொத்தகோலமூக்கினேந்திழையொருத்திமுன்கை
தள்ளத்தண்ணறவையெல்லாந்தவிசிடையுகுத்துந்தேறாள்
உள்ளத்தின்மயக்கந்தன்னாலுட்புறத்துண்டென்றெண்ணி
வள்ளத்தைமறித்துவாங்கிமணிநிறவிதழின்வைத்தாள். (௧௮)

வான்றனைப்பிரிதலாற்றாவண்டினம் † வச்சைமாக்கள்
என்றவர்நிதியம்வேட்டவிரவலரென்னவார்ப்பத்
தேன்றருகமலச்செவ்வாய்திறந்தனணுகரநாணி
ஊன்றியகழுநீர்நாளத்தாலினொருத்தியுண்டாள். (௧௯)

புள்ளுறைகமலவாவிப்பொருகயல்வெருவியோட
வள்ளுறைகழித்தவாள்போல்வரியுறவயங்குகண்ணாள்
கள்ளுறைமலர்மென்கூந்தற்களியிளமஞ்ஞையன்னாள்
‡ உள்ளுறையன்பனுண்ணாவென்னநறவுண்ணலெண்ணாள். (௨0)

வேறு.

கூற்றுறழ்நயனங்கள்சிவப்பக்கூனுதல்
ஏற்றிவாளெயிறுகளதுக்கியின்றளிர்
மாற்றருங்கரதலமறிக்குமாதொரு
§ சீற்றமாமபிநயந்தெரிக்கின்றாரினே. (௨௧)

துடித்தவான்றுவரிதழ்த்தொண்டைத்தூநிலா
கடித்தவாலெயிறுகளதுக்கிக்கண்களால்
வடித்தவெங்குருதிவேல்விழிக்குமாதர்மெய்
பொடித்தவேர்புறத்துகுநறவம்போன்றவே. (௨௨)

---

* அல்குல் சூழ்ந்தாள் எனப்பின்வருதலான் மேகலை என்ற தானையினை. † வச்சைமாக்கள்-உலோபிகள்.

‡ தன்னுள்ளத்து நீங்காதுறைதலின் உள்ளுறையன்பனென்றார்.

§ சீற்றமாமபிநயமெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

* கனித்திரளிதழ்பொழிசெம்மைகண்புக
நினைப்பதொன்றுரைப்பதொன்றுமோர்நேரிழை
தனிச்சுடர்தாமரைமுகத்துச்சாபமும்
குனித்ததுபனித்ததுகுழவித்திங்களே. (௨௫)

இலவிதழ்த்துவர்விடவெயிறுதேனுக
முலைமிசைக்கச்சொடுகலையுமூட்டற
அலைகுழல்சோர்தரவசதியாட்டலாற்
கலவிசெய்கொழுநருங்கள்ளுமொத்தவே. (௨௬)

† கனைகடற்கள்வனாற்கலக்கமுற்றதை
‡ அனகனுக்கறிவியென்றறியப்போக்குமோர்
இனமணிக்கலையினாடோழிநீயுமென்
மன்மனத்தாழ்தியோவருதியோவென்றாள். (௨௫)

மானமர்நோக்கியோர்மதனைவேந்தன்பால்
ஆனதன்பாங்கியராயினாரெலாம்
§ போனவர்போனவர்தொடரப்போக்கினாள்
தானுமங்கவர்பினேதமியளேகினாள். (௨௬)

விரைசெய்பூஞ்சேக்கையினடுத்த $ மீமிசைக்
கரைசெயாவாசையங்கடலுளாளொரு
பிரைசமென்குதலையாள்கொழுநன்பேரெலாம்
உரைசெயுங்கிள்ளையையுவந்துபுல்லினாள். (௨௭)

மன்றனாறொருசிறையிருந்தொர்வாணுதல்
தன்றுணைக்கிள்ளையைத்தழீஇயென்னாவியை
இன்றுபோய்க்கொணர்கிலையென்செய்வாயெனக்
கன்றிலோடொத்தியென்றழுதுசீறினாள். (௨௮)

வளைபயின்முன்கையோர்மயிலனாடனக்
கிளையவள்பெயரினைக்கொழுநனீதலும்
முளையெயிறிலங்கிடமுறுவல்வந்தது
களகளவதிர்ந்ததுகயற்கணாலியே. (௨௯)

செற்றமுன்புரிந்ததோர்செம்மல்வெம்மையாற்
பற்றலுமல்குலிற்பரந்தமேகலை
அற்றுகுமுத்தின்முன்னவணிசேர்ந்தன
பொற்றொடியொருத்திகண்பொருதமுத்தமே. (௩0)

---

* கனிபொழி என்புழி வினைப்பகுதியே வினையெச்சப்பொருடந்தது. வரிப்புனைபந்தென்புழிப்போல். † கனைகடல்-ஒலிகடல். ‡ யான்றீயே னென்பாள் எதிர்மறைமுகத்தான் அவனை அனகனென்றாள். § போனவர்போனவர்-முற்போனவரையும் பிற்போனவரையு முணர்த்திற்று.

$ மீமிசை ஒருபொருட்பன்மொழி.

தோடவிழ்கூந்தலாளொருத்திதோன்றலோ
டூடுகென்றேயுயிருருகுநோய்கெடக்
கூடுகென்றேயவன்குணங்கள்வீணையிற்
பாடுகென்றேயெனப்பலவும்பன்னினாள். (௩௧)

மாடகம்பற்றினண்மகரவீணைதன்
தோடவிழ்மலர்க்கரஞ்சிவப்பத்தொட்டனள்
பாடினளொருத்திதன்பாங்குளார்களோ
டாடினதுரைசெயாளுள்ளத்துள்ளதே. (௩௨)

குழைத்தபூங்கொம்பனாளொருத்திகூடலை
இழைத்தனளவ்வழியிட்டபோதெலாம்
பிழைத்தலுமனங்கவேள்பிழைப்பிலம்பொடும்
உழைத்தனளுயிர்த்தனளுயிருண்டென்னவே. (௩௩)

பந்தணிவிரலினாளொருத்திபையுளாள்
சுந்தரனொருவன்பாற்றூதுபோக்கினாள்
வந்தனனெனக்கடையடைத்துமாற்றினாள்
சிந்தனைதெரிந்திலஞ்சிவந்தாட்டமே. (௩௪)

உய்த்தபூம்பள்ளியினூடனீங்குவான்
சித்தமுண்டொருத்திக்கதன்பன்றேர்கிலான்
பொய்த்தமேதார் * மூரியானிமிர்ந்துபோக்குவான்
எத்தனைபிறந்தனகடிகையீண்டென்றாள். (௩௫)

விதைத்தமென்காதலின்வித்துமெய்ந்நிறை
இதைப்புனனேத்திடமுளைத்தவேயெனப்
பதைத்தனளொருத்தன்மேலொருத்தி † பஞ்சடி
உதைத்தலும்பொடித்தனவுரோமராசியே. (௩௬)

பொலிந்தவாண்முகத்தினன்பொங்கித்தன்னையும்
மலிந்தபேருவகையான்மாற்றுவேந்தரை
நலிந்தவாளுழவனோர்நங்கைகொங்கைபோய்
மெலிந்தவாநோக்கித்தன்புயங்கள்வீங்கினான். (௩௭)

எய்ந்தபேரெழிலினனொருவனெய்தினான்
வேய்ந்தபோமெலங்கணுமனங்கன்வெங்கணை
பாய்ந்தபூம்பள்ளியிற்படுத்தபல்லவந்
தீய்ந்தனநோக்கினன்றிசைக்குஞ்சிந்தையான். (௩௮)

ஊட்டியசாந்துவெந்துலரும்வெம்மையான்
நாட்டினையளித்திநீயென்றுநல்லவர்

---

* மூரி-உறக்கம்.

† பஞ்சடி-செம்பஞ்சூட்டியதாள்.

ஆட்டுநீர்க்கலசமேயென்னலானவோர்
வாட்டொழின்மைந்தற்கோர்மங்கைகொங்கையே. (௩௯)

பயிருறுகிண்கிணிபரந்தமேகலை
வயிரவான்பூணணிவாங்கிநீக்கினாள்
உயிருறுதலைவன்பாற்போகவுன்னினாள்
* செயிருறுதிங்களைத்தீயநோக்கினாள். (௪௰)

ஏனுமிவ்வன்மையையென்னென்றுன்னுதும்
† ஆலைமென்கரும்பனாளொருவற்காங்கொரு
சோலைமென்குயிலனாள்சுற்றிவீக்கிய
மாலையைநிமிர்ந்திலவயிரத்தோள்களே. (௪௧)

சோர்குழலொருத்திதன்வருத்தஞ்சொல்லுவான்
மாரனைநோக்கியோர்மாதைநோக்கினாள்
காரிகையிவளவள்கருத்தைநோக்கியோர்
வேரியந்தெரியலான்வீடுநோக்கினாள். (௪௨)

சினங்கெழுவாட்கையோர்செம்மல்பாலொரு
கனங்குழைமயிலனாள்கடிதுபோயினாள்
மனங்குழைநறவமோமாலைதான்கொலோ
அனங்கனோயார்கொலோவழைத்ததூதரே. (௪௩)

தொகுதருகாதற்குத் ‡ தோற்றசீற்றத்தோர்
வகிர்மதிநெற்றியாண்மறைக்கனாளிவந்
துகுதலுமுற்றதென்னென்றுகொற்றவன்
நகுதலுநக்கனனாணுநீங்கினாள். (௪௪)

பொய்த்தலைமருங்குலாளொருத்திபுல்லிய
கைத்தலநீக்கினள்கருத்தினீக்கலள்
சித்திரம்போன்றவச்செயலோர்தோன்றற்குச்
சத்திரமார்பிடைத்தைத்ததொத்ததே. (௪௫)

மெல்லியலொருத்திதான்விரும்புஞ்சேடியைப்
புல்லியகையினள்போதிதூதெனச்
சொல்லுவானுறுமுறநாணுஞ்சொல்லலள்
§ எல்லையில்பொழுதெலாமிருந்துவிம்மினாள். (௪௬)

---

* நீதோன்றித் தலைவன்பாற் காமவேட்கையுண்டாக்கப் பிறரறியா வண்ணம் செல்வேனை நிலாவெறித்துத்தடுத்தி, இதுநிற்குத்தகதென்பாள் செயிருறுதிங்களைத்தீயநோக்கினாளென்றார். † பிரிந்துநின்று காமவெப்பத்தானொந்தமையின் ஆலைமென்கரும்பனாளென்றும், அவன்பட்ட காமவிடாயை யொருவண்ணந் தணியப்பெற்றது இவள்சொல்லேயென்றதுகருதிச் சோலைமென் குயிலனாளென்றுங் கூறினார்.

‡ ஆற்றகுப்பைக ளென்றாற்போலத்தோற்ற சீற்றமென்புழிக் காலங்காட்டு மின்னிடைநிலை புணர்ந்துகெட்டது.

§ பன்முறையாற்றிய செய்கையி னெல்லையில்லாமையை அச்செய்கைநிகழ்ந்த பொழுதின்மேலேற்றி எல்லையில் பொழுதெலாமென்றார்.

ஊறுபேரன்பினுளொருத்திதன்னுயிர்
மாறிலாக்காதலன்செலவைமற்றொரு
நாறுபூங்கோதைபானவிலநாணுவாள்
வேறுவேறுறச்சிலமொழிவிளம்பினாள். (சஎ)

உருத்தெரிதன்மையவுயிருமொன்றுதாம்
அருத்தியுமத்துணையாயநீரினார்
ஒருத்தியுமொருத்தனுமுடம்புமொன்றெனப்
பொருத்துவராமெனப்புல்லினாரரோ. (சஅ)

வெதிர்பொருதோளினாளொருத்திவேந்தன்வந்
தெதிர்தலுந்தன்மனமெழுந்துமுன்செல
மதிமுகங்கதுமெனவணங்கினாளது
புதுமையாதலினவற்கச்சம்பூத்ததே. (சகூ)

துணிவருநலத்தொடுசோர்கின்றாளொரு
குனிவருநுதலிக்குக்கொழுநனின்றியே
தனிவருந்தோழியுந்தாயையொத்தனள்
இனிவருதென்றலுமிரவுமென்னவே. (ரு0)

ஆக்கியகாதலளொருத்தியந்தியில்
தாக்கியதெய்வமுண்டென்னுந்தன்மையள்
நோக்கினனின்றனனவன்றதோர்கிலள்
போக்கினதுகிலோடுணர்வும்போக்கினள். (ருக)

மறப்பிலள்கொழுநனைவரவுநோக்குவாள்
பிறப்பினொடிறப்பெனப்பெயருஞ்சிந்தையால்
* துறப்பருமுகிலிடைத்தோன்றுமின்னெனப்
புறப்படும்புகுமொருபூத்தகொம்பனாள். (ருஉ)

எழுதருங் † கொங்கைமேலனங்கனெய்தவம்
புழுதவெம்புண்களில்வளைக்கையொற்றினாள்
அழுதனள்சிரித்தனளற்றஞ்சொல்லினாள்
தொழுதனளொருத்தியைத்தூதுவேண்டுவாள். (ருங)

ஆர்த்தியுமுற்றதுமறிஞர்க்கற்றந்தான்
வார்த்தையினுணர்த்துதலரிதன்றேமனம்
வேர்த்தனள்வெதும்பினண்மெலிந்துசாய்ந்தனள்
பார்த்தனளொருத்திதன்பாங்கனையே. (ருச)

* படமாடத்தைத் துறப்பருமுகிலென்றார்.
† கொங்கையினருமைநோக்கி எழுதருங்கொங்கையென்றார்.

தனங்களினிளையவர்தம்மின்மும்மடி
கனங்கனமிடையிடைகளிக்குங்கள்வனாய்
மனங்களினுழைந்தவர்மாந்துதேறலை
அனங்கனுமருந்தினனாதல்வேண்டுமால். (ருரு)

வேறு.

நறைகமழலங்கன்மாலைநளிர்நறுங்குஞ்சிமைந்தர்
துறையறிகலவிச்செவ்வித்தோகையர்தூசுவீசி
நிறையகலல்குல்புல்குங்கலன்கழித்தகலநீத்தார்
அறைபறையனையநீராருமறைக்காவரோதான். (ருசா)

பொன்னருங்கலனுந்தூசும்புறத்துளதுறத்தல்வம்பே
நன்னுதலொருத்திதன்பாலகத்துளநாணுநீத்தாள்
உன்னருந்துறவுபூண்டவுணர்வுடையொருவனேபோல்
தன்னையுந்துறக்குந்தன்மைகாமத்தேதங்கிற்றன்றே. (ருஎ)

பொருவருமதனன்போல்வானொருவனும்பூவின்மேலத்
திருவினுக்குவமைசால்வாளொருத்தியுஞ்சேக்கைப்போரில்
* ஒருவருக்கொருவர்தோலாரொத்தனருயிருமொன்றே
இருவரதுணர்வுமொன்றேயென்றபோதியாவர்வெல்வார். (ருஅ)

கொள்ளைப்போர்வாட்கணாளங்கொருத்தியோர்குமரனன்னான்
† வள்ளத்தாரகலந்தன்னைமலர்க்கையாற்புதைப்பநோக்கி
உள்ளத்தாருயிரனானுண்மேலுறைபடுமென்றுநீநின்
கள்ளத்தாற்புதைத்தியென்னாமுன்னையிற்கனன்றமிக்காள். (ருகூ)

பாலுளபவளச்செவ்வாய்ப்பணைமுலைநிகர்த்தமென்றோள்
வேலுளநோக்கினாளோர்மெல்லியல்வேலையன்ன
மாலுளசிந்தையாங்கோர் ‡ மழையுளதடக்கையாற்கு
மேலுளவரம்பைமாதரென்பதோர்விருப்பையீந்தாள். (சா0)

வேறு.

புனத்துறைமயிலனாள்கொழுநன்பொய்யுரை
நினைத்தனள்சீறுவாளொருத்திநீடிய
சினத்தொடுகாதலன்சேக்கைப்போரிடை
மனத்துறைகாதலே § வாகைகொண்டதே. (சாக)

கொலையுருவமைந்தெனக்கொடியநாட்டத்தோர்
கலை $ யுருவல்குலாள்கணவற்புல்குவாள்

---

* ஒத்தகிழவனும் கிழத்தியுமொத்தவின்பந்துய்த்தலின் ஒருவருக்கொருவர் தோலாரொத்தனரென்றார். † வளமென்றது வள்ளமெனவிரிக்கும், வழிவிரித்தல்பெற்றது. ‡ மழையுளதடக்கை என்றது-கொடையின் சிறப்புத்தோன்ற நின்றது.

§ வெற்றியை வாகையென்றார். உருவுதலாகிய இயைபில்லாதிருப்ப அவ்வியல்புபட முலையுருவினவெனக்கூறினார்,

சிலையுருவழிதரச்செறிந்தமார்பிற்றன்
முலையுருவினவெனமுதுகைநோக்கினாள். (௬௨)

குங்குமமுதிர்ந்தனகோதைசோர்ந்தன
சங்கினமுரன்றனகலையுஞ்சாறின
பொங்கினசிலம்புகள்பூசலிட்டன
மங்கையரிளநலமைந்தருண்ணவே. (௬௩)

துனியுறுபுலவியைக்காதல்சூழ்சுடர்
பனியெனத்துடைத்தலும்பதைக்குஞ்சிந்தையாள்
புனையிழையொருமயில்பொய்யுறங்குவாள்
* கனவெனுநலத்தினாற்கணவற்புல்லினாள். (௬௪)

வட்டவாண்முகத்தொருமயிலுமன்னனும்
† கிட்டியபோதுடல்கிடக்கப்புல்லினார்
விட்டிலர்கங்குலின்விடியுங்கண்டிலர்
ஒட்டியவுடல்பிரிப்புணர்கிலாமையால். (௬௫)

அருங்கனிமால்களிறனையவீரர்க்கும்
கருங்குழன்மகளிர்க்குங்கலவிப்பூசலால்
நெருங்கியவனமுலைசுமக்கநேர்கலா
மருங்குல்போற்றேய்ந்ததம்மாலைக்கங்குலே. (௬௬)

கடையுறநன்னெறிகாண்கிலாதவர்க்
கிடையுறுதிருவெனவிந்துநீந்தினான்
படர்திரைக்கருங்கடற்பரமன்மார்பிடைச்
‡ சுடர்மணிக்கரசெனவிரவிதோன்றினான். (௬௭)

கஎ-வது, உண்டாட்டுப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-ககக௪.

---

* கனவிடைப்பயந்ததுபோற் கணவனைப் புல்லுதற்கேதுவாதல் பற்றி கனவெனுநலமென்றார். † பிரிவாலுளதாம் வருத்தத்தினருமை தோன்றக் கிட்டியபோதென்றார். ‡ சுடர்மணிக்கரசென்றது பீதகவாடைப்பிரானார் மார்பிடை மணியாகிய கவுத்துவத்தை.

# ௧௮-வது, எதிர்கோட்படலம்.

எதிர்கொள்வதைக் குறித்துக்கூறும் படலம்.

வேறு.

அடாநெறியறைதல்செல்லாவருமறையறைந்தநீதி
விடாநெறிப்புலமைச்செங்கோல்வெண்குடைவேந்தர்வேந்தன்
* படாமுகமுகிலிற்றோன்றும்பருவமொத்தருவிபல்கும்
கடாநிறையாறுபாயுங்கடலொடுங்கங்கைசேர்ந்தான். (௧)

கப்புடைநாவினாகருலகமுங்கண்ணிற்றோன்றத்
துப்புடைமணலிற்றூகிக்கங்கைநீர்சுருங்கிக்காட்ட
† அப்புடையனீகவேலையகன்புனன்முகந்துமாந்த
உப்புடைக்கடலுந்தெண்ணீருண்ணசையுற்றதன்றே. (௨)

ஆண்டுநின்றெழுந்துபோகியகன்பணைமிதிலையென்னும்
ஈண்டுநீர்நகரின்பாங்க ‡ ரிருநிலக்கிழவனெய்தத்
தூண்டுமாப்புரவித்தானைத்தண்ணளிச்சனகனென்னும்
தூண்டருவயிரத்தோளான்செய்ததுசொல்லலுற்றாம். (௩)

வந்தனனரசனென்னமனத்தெழுமுவகைபொங்கக்
கந்தடுகளிறுந்தேருங்கலினமாக்கடலுஞ்சூழச்
சந்திரனிரவிதன்னைச்சார்வதோர்தன்மைதோன்ற
§ இந்திரதிருவன்றன்னையெதிர்கொள்வானெழுந்துவந்தான். (௪)

கங்கைநீர்நாடன்சேனைமற்றுளகடல்களெல்லாம்
சங்கினமார்ப்பவந்துசார்வனபோலச்சாரப்
பங்கயத்தணங்கைத்தந்தபாற்கடலெதிர்வதேபோன்
மங்கையைப்பயந்தமன்னன்வளநகர்வந்ததன்றே. (௫)

வேறு.

இலைகுலாவலியினனீகமேமெனவுலா
நிலைகுலாமகரநீர்நெடியமாகடலெலாம்
அலகின்மாகளிறுதேர்புரவியாளெனவிராய்
உலகெலாநிமிர்வதேபொருவுமோருவமையே. (௬)

தொங்கல்வெண்குடைதொகைப்பிச்சமுட்படவிராய்
எங்கும்விண்புதைதரப்பகன்மறைந்திருளெழப்
பங்கயஞ்செய்யவும்வெளியவும்பலபடத்
தங்குதாமரையுடைத்தானமேபோலுமே. (௭)

* படாமுகமென்றது-யானையை. † படைகளின்மிகுதிநோக்கி அப்புடையனீகமென்றார்.

‡ இருநிலக்கிழவனென்றது-தயரதனை.

§ இந்திரதிருவனென்றது மது.

கொடியுளாளோதனிக்குடையுளாளோகுலப்
படியுளாளோகடற்படையுளாளோபகர்
மடியிலாவரசினான்மார்புளாளோவளர்
முடியுளாளோதெரிந்துணர்கிலா * முளரியாள். (௮)

வார்முகங்கெழுவுகொங்கையர்கருங்குழலின்வண்
டேர்முழங்கரவமேழிசைமுழங்கரவமே
தேர்முழங்கரவம்வெண்டிரைமுழங்கரவமே
கார்முழங்கரவம்வெங்கரிமுழங்கரவமே. (௯)

சூழுமாகடல்களுந்திடர்படத்துகடவழ்ந்
தேழுபாரகமுமுற்றுளதெனற்கெளிதரோ
ஆழியானுலகளந்தன்றுதாள்சென்றவப்
பூழையூடேபொடித்தப்புறம்போயதே. (௧௰)

மன்னெடுங்குடைமிடைந்துடையவான்மறைதரத்
துன்னிடுந்[illegible]ல்வழுங்கிருடுரப்பெளிதரோ
பொன்னிடும்புவியிடும்புனைமணிக்கலனெலாம்
மின்னிடும்வில்லிடும்வெயிலிடுந்நிலவிடும். (௧௧)

தாவின்மன்னவர்பிரான்வரமுரட்சனகனும்
எவருஞ்சிலையினானெதிர்வருந்நெறியெலாம்
தூவுதண்சுண்ணமுங்கனகநுண்டூளியும்
பூவின்மென்றாதுகும்பொடியுமேபொடியெலாம். (௧௨)

நறுவிரைத்தேனுநானமுநறுங்குங்குமச்
செறியகிற்றேய்வையுமான்மதத்தேக்கரும்
வெறியுடைக்கலவையும்விரவுசெஞ்சாந்தமும்
செறிமதக்களுழிபாய்சேறுமேசேறெலாம். (௧௩)

மன்றலங்கோதையார்மணியினும்பொன்னினும்
சென்றுவந்துலவுமச்சிதைவிலாதுழலினோர்
வென்றிதிண்கொடியொடுங்கொடிவிதானமும்விராய்
நின்றவெண்குடைகளினிழல்களேநிழலெலாம். (௧௪)

மாறிலாமதுகையான்மகிழ்பெருந்தானைமேல்
ஊறுபேருவகையானணிகம்வந்துற்றபோ
தீறிலோதையினொடுமெறிதிரைப்பரவைமேல்
ஆறுபாய்கின்றதோரமலைபோலானதே. (௧௫)

கந்தையேபொருகரிச்சனகனுங்காதலோ
டுந்தவோதரியதோர்தன்மையோடுலகுளோர்

* முளரியாள்-சயமகள்.

* தந்தையேயனையவத்தகவினுன்முன்புதன்
சிந்தையேபொருநெடுந்தேரின்வந்தெய்தினன். (கசு)

எய்தவத்திருநெடுந்தேரிழிந்திளையதன்
மொய்கொடிண்சேனைபின்னிற்கமுன்சேறலும்
கய்யின்வந்தேறெனக்கடிதின்வந்தேறினேன்
அய்யனும்முகமலர்ந்தகமுறத்தழுவினன். (கஎ)

தழுவிநின்றவனிருங்கிளையையுந்தமரையும்
வழுவில்சிந்தையினன்வரிசையின்னளவளாய்
எழுகமுந்துறவெனவினிதுவந்தெய்தினன்
உழுவைமுந்தரியனெனவரினும்முயரினன். (கஅ)

இன்னவாறிருவரும்மினியவாறேகவத்
துன்னுமாககரினின்றெதிர்வரத்துன்னினன்
தன்னையேயனையவன்றழலேயனையவன்
† பொன்னின்வார்சிலையிறப்புயமிர்த்தருளினன். (ககூ)

தம்பியுந்தானுமத்தானைமன்னவனகர்ப்
பம்புதிண்புரவியும்படைஞருந்புடைவரச்
செம்பொனின்பசுமணித்தேரின்வந்தெய்தினன்
‡ உம்பரும்மிம்பரும்முகருந்தொழுவுளான். (உ0)

யானையோவிரதமோவிவுளியோபிடிகளோ
ஆனபே § ருறையிலாநிறைவையாரறிருவார்
தானையோர்சனகனேவலினெடுந்தாதைமுன்
போனபேரிருவர்தம்புடைவரும்படையினே. (உக)

காவியுங்குவளையுங்கடிகொள் $ காயாவுமொத்
தோவியஞ்சுவைகெடப்பொலிவதோருருவொடே
தேவருந்தொழுகபூற்சிறுவன்முன்பிரிவதோர்
ஆவிவந்தென்னவந்தரசன்மாடணுகினன். (உஉ)

அணிகம்வந்தடிதொழக்கடிதுசென்றரசர்கோன்
இணியபைங்கழல்பணிந்தெழுதலுந்தழுவினன்
மனுவெனுந்தகையன்மார்பிடைமறைந்தன ¶ மலைத்
தணிநெடுஞ்சிலையிறத்தவழ்தடங்கிரிகளே. (உ௩)

---

* அனைவோர்க்குந்தெய்வமிலை முகப்பைம்பூணிறையென்பது பற்றித் தந்தையே யனையவத்தகவினுனென்றார்.

† பொன்னின்வார்சிலை-ஈசன்வில்.

‡ உம்பர்முதலினர் தொழவுளானென்றது-இராமனை.

§ உறை என்றது-மிகப்பெரியதோரெண்.

$ கரியகோலப் பெருந்தகையாதலின் காவியுங்குவளையுங்கடியகாயாவுமென்றார்.

¶ மலையென்றது-மேருவை, அதுமலைகளுட்சிறந்தமைபற்றி.

இளையபைங்குரிசில்வந்தடிபணிந்தெழுதலும்
தளைவருந்தொடையன்மார்புறவுறத்தழுவினான்
களைவருந்துயரறக்ககனமெண்டிசையெலாம்
* விளைதரும்புகழினானெவரினும்மிகுதியான். (௨௪)

கற்றைவார்சடையினான்கைக்கொளுந்தனுவிறக்
கொற்றநீள்புயநிமிர்த்தருளுமக்குரிசில்பின்
பெற்றதாயரையுமப்பெற்றியிற்றொழுதெழுந்
துற்றபோதவர்மனத்துவகை † யாருரைசெய்வார். (௨௫)

உன்னுபேரன்புமிக்கொழுகியொத்தொண்கணீர்
பன்னுதாரைகடாத்தொழுதெழும்பரதனைப்
பொன்னின்மார்புறவணைத்துயிருறப்புல்லினான்
தன்னையத்தாதைமுன்றழுவினானென்னவே. (௨௬)

கரியவன்பின்புசென்றவனருங்காதலிற்
பெரியவன்றம்பியென்றினையதோர்பெருமையப்
பொருவருங்குமரர்தம்புனைநறுங்குஞ்சியால்
இருவர்பைங்கழலும்வந்திருவரும்வருடினார். (௨௭)

கோல்வருஞ்செம்மையுங்குடைவருந்தண்மையும்
சால்வருஞ்செல்வமென்றுணர்பெருந்தாதைதன்
மேல்வருந்தன்மையான்மிகவிளங்கினர்கடாம்
‡ நால்வரும்பொருவினான்மறையெனுநடையினார். (௨௮)

சான்றெனத்தகையசெங்கோலினானுயிர்கடாம்
ஈன்றநற்றாயெனக்கருதுபேரருளினான்
ஆன்றவிச்செல்வவித்துணையுமொய்த்தருகுறத்
தோன்றலைக்கொண்டுமுற்செல்கெனச்சொல்லினான். (௨௯)

காதலோவறிகிலங்கரிகளைப்பொருவினார்
§ தீதிலாவுவகையுஞ்சிறிதரோபெரிதரோ
கோதைசூழ்குஞ்சியக்குமரர்வந்தெய்தலும்
தாதை $ யாதொத்ததத்தானையின்றன்மையே. (௩0)

தொழுதிரண்டருகுமன்புடையதம்பியர்தொடர்ந்
தழிவில்சிந்தையினுகந்தாடன்மாமிசைவரத்

---

* துயரறக் கனமெண்டிசையெலாம் விளைதரும் புகழினானென்றார் சம்பரன்முதலானோரைக் குலத்தோடுங்களைந்தசிறப்புநோக்கி. † யாரென்னும் வினாவினைக்குறிப்பு ஈண்டின்மைகுறித்து நின்றது 'யாஅருலகத்தோர்சொல்லில்லா' ரென்புழிப்போல. ‡ நால்வருநடையான் நான்மறை பொருவலினவற்றையே உவமைகூறினார்.

§ ஏனையுவகைபோலாது உயிர்க்குறுதி பயத்தலான் தீதிலாவுவகையென்றார்.

$ ஆதலொத்தது என்றது-ஆதொத்ததெனநின்றது.

தழுவுசங்குடனெடும்பணை தழங்கிடவெழுந்
தெழுதருந்தகையதோர்தேரின்மேலேகினான். (௫௧)

பஞ்சிசூழ்மெல்லடிப்பாவைமார்பண்ணை * சூழ்
மஞ்சுசூழ்நெடியமாளிகையின்வந்திடைவிராய்
நஞ்சுசூழ்விழிகள்பூமழையின்மேல்விழநடந்
திஞ்சிசூழ்மதிலைமாவீதிசென்றெய்தினான். (௫௨)

சூடகந்துயல்வரக்கோதைசோர்தரமலர்ப்
பாடகம்பரதநூல்பகரவெங்கடகரிக்
கோடரங்கிடவெழுங்குவிதடங்கொங்கையார்
ஆடரங்கல்லவேயணியரங்கமெலலாம். (௫௩)

† பேதைமார்முதல்கடைப்பேரிளம்பெண்கடாம்
ஏதியார்மாரவேளேவவந்தெய்தினார்
ஆதிவானவர்பிரானனுகலாவணிகொள்கார்
ஓதியார்வீதிவாயுற்றவாறுரைசெய்வாம். (௫௪)

௧௮-வது எதிர்கோட்படலம்-முற்றிற்று

௫௪ திருவிருத்தம்-௧௧௪௮.

---

## ௧௯-வது உலாவியற்படலம்.

உலாவியலைக்குறித்துக்கூறும் படலம்.

‡ மானினம்வருவபோன்றுமயிலினந்திரிவபோன்றும்
மீனினமிளிர்வபோன்றுமின்னினமிடைவபோன்றும்
தேனினஞ்சிலம்பியார்ப்பச்சிலம்பினம்புலம்பவெங்கும்
பூநனைகூந்தன்மாதர்பொம்மெனப்புகுந்துமொய்த்தார். (௧)

விரிந்துவீழ்கூந்தல்பாரார்மேகலையற்றசோக்கார்
சரிந்தபூந்துகில்கடாங்காரிடைதடுமாறத்தாழார்
நெருங்கினர்நெருங்கிப்புகுங்குமின்னிங்குமின்னென்
றருங்கலமனையமாதர்தேனுகரளியின்மொய்த்தார். (௨)

---

* சூழ் என்னுமுதனிலைத்தனி வினைப்பெயர் சூழ்ந்தென்னும் வினையெச்சப்பொருளது.

† பேதைமார்முதல் கடைப்பேரிளம் பெண்களென்றது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண்ணென்னு மெழுவரை.

‡ கண்ணான் மானினத்தையும், சாயலான் மயிலினத்தையும், அணிகலனான் மீனினத்தையும், இடையான் மின்னினத்தையுங்கூறினார்.

கண்ணினாற் * காதலென்னும்பொருளையேகாண்கின்றோமிப்
பெண்ணினீர்மையினாலெய்தும்பயனின்றுபெறுதுமென்பார்
மண்ணினீருலர்ந்துவானமழையறவறந்தகாலத்
துண்ணுநீர்கண்டுவீழுமுழைக்குலம்பலவுமொத்தார். (௩)

பள்ளத்துப்பாயுநன்னீரனையவர்பானல்பூத்த
வெள்ளத்துப்பெரியகண்ணார்மென்சிலம்பலம்பமென்பூத்
தள்ளத்தம்மிடைகணோவத்தமைவலித்தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப்பிடித்துநாமென்றோடுகின்றாருமொத்தார். (௪)

அரத்தமுண்டனையமேனியகலிகைகளித்ததாளும்
விரைக்கருங்குழலிக்காகவில்லிறநிமிர்ந்துவீங்கும்
வரைத்தடந்தோளுங்காணமறுகினின்வீழுமாதர்
இரைத்துவண்டமிழ்தின்மொய்க்குமீயினமென்னலானார். (௫)

வீதிவாய்ச்செல்கின்றான்போல்விழித்திமையாதுநின்ற
மாதரார்கண்களூடேவாவுமான்றேரிற்செல்வான்
யாதினுமுயர்ந்தோர்தன்னையாவர்க்குங் † கண்ணனென்றே
ஓதியபெயர்க்குத்தானேயுறுபொருளுணர்த்திவிட்டான். (௬)

எண்கடந்தலகிலாதின்றேருறாமிவன்றேறென்று
பெண்கடந்தம்பினோர்துபேதுறுகின்றகாலை
‡ மண்கடந்தமரர்வைகும்வான்கடந்தானைத்தான்றன்
கண்கடவாதுகாத்தகாரிகைபெரியளேகாண். (௭)

பயிரொன்றுகலையுஞ்சங்கும்பழிப்பருகலனும்பண்பும்
செயிரின்றியலர்ந்தபொற்புஞ்சிந்தையுமுணர்வுந்தேசும்
வயிரஞ்செய்பூணுநாணுமடனுங் § தன்னிறையுமற்றும்
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதெரிவைநின்றாள். (௮)

குழையுறுவிளிருங் $ கெண்டைகொண்டவிறாலிசிந்தத்
தழையுறக்கரும்பின்சாபத்தனங்கவேள்சரங்கள்பாய
இழையுறுப்புண்ணுறாதவிளமுலையொருத்திசோர்ந்து
மழையுறாமின்னினன்னமருங்குல்போனுடங்கிநின்றாள். (௯)

---

* காதலைப்பொருளென்றார் வைசேடிகர்பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப்பொருளென்றதனானென்க. † யாவர் கண்ணிடைச்செல்வனென்றதுபற்றிக் கண்ணனென்றதென்க. ‡ கடவுள் என்னும் பெயர்பற்றி மண்கடந் தமரர்வைகும் வான்கடந்தானென்றார். § உகுத்தெனக் கலைமுதலியன தன்னினீங்கினமை யுணராமை இலக்கணையாற் கூறினார். $ இவனையடையத்தவமுடையேனல்லேனெனத் தன்னைநோக்கிக் கவன்றமையான் கெண்டையாலிசிந்தவென்றார்.

பஞ்சணிவிரலினார்தம்படைநெடுங்கண்களெல்லாம்
செஞ்செவேயயன்மெய்யிற்கருமையைச்சேர்ந்தவோதாம்
மஞ்சனமேனியான்றன்மணிநிறமாதரார்தம்
அஞ்சனநோக்கம்பார்க்கவிருண்டதோவறிகிலேமால். (௧௦)

மாந்தளிர்மேனியாளோர்வாணுதன்மதனனெங்கும்
பூந்துணர்வாளிமாரிபொழிகின்றபூசனோக்கி
* வேந்தர்கோனனைநோக்கான்வீரன்வில்லாண்மைபாரான்
எந்திழையாரையெய்வான்யாவனோவொருவனென்றாள். (௧௧)

† சொன்னலங்கடந்தகாமச்சுவையையோருருவமாக்கி
இன்னலந்தெரியவல்லாரெழுதியதென்னநின்றாள்
பொன்னையும்பொருவுநீராள்புனைந்தனவெல்லாம்போகத்
தன்னையுந்தாங்கலாதாடுகிலொன்றுந்தாங்கிநின்றாள். (௧௨)

விற்றங்குபுருவநெற்றிவெயர்வரப்பசலைவிம்மச்
சுற்றெங்குமெறிப்பவுள்ளஞ்சோரவோர்தோகைநின்றாள்
கொற்றஞ்செய்கொலைவேலென்னக்கூற்றெனக்கொடியகண்ணாள்
மற்றொன்றுங்காண்கிலாதாடமியனோ ‡ வள்ளலென்றாள். (௧௩)

மைக்கருங்கூந்தற்செவ்வாய்வாணுதலொருத்தியுள்ளம்
நெக்கனளுருகுகின்றாணெஞ்சிடை § வஞ்சன்வந்து
புக்கனன்போகாவண்ணங்கண்ணெனும்புலங்கொள்வாயும்
சிக்கெனவடைத்தேன்றோழிசேருதுமமளியென்றாள். (௧௪)

தாக்கணங்கனையமேனிதைத்தவேள்சரங்கள்பாராள்
நீக்கியகலனுந்தூசும்வேறுவேறனதோராள்
ஆக்கியபாவையன்றனொருத்தியாண்டமலன்மேனி
$ நோக்குறுவாரையெல்லாமெரியெழநோக்குகின்றாள். (௧௫)

களிப்பனமதர்ப்பநீண்டுகதுப்பினையளப்பகள்ளம்
ஒளிப்பனவெளிப்பட்டோடப்பார்ப்பனசிவப்புள்ளூற

---

* வேந்தர்கோனனைக் கச்சமும் வீரன் வில்லாண்மைக்குநாணமுமில்லாது எந்திழையாரையெய்வதனன் யாவனோ என்றதென்க. † உளத்துநிகழுங் காமச்சுவைபிறர்க்குப்புலப்பட இற்றென்றுவாயாற்கூறுவதரிதும், ஏனையுலகங்களினும் சிறந்ததுமாகலின் சொன்னலங்கடந்த காமச்சுவை என்றார். ‡ வள்ளலென்றார் யாவருங்காண வீதியாயவந்துதவுதனோக்கி. § தானடைந்து நமக்குவேட்கையைப்பெருக்கி அதுபயன்படத்தழுவுதலும் உள்ளத்தேவருதல் பெயர்த்தும் சேர்தலென்னு மொருநிலைநிற்றலு மில்லாமையின் வஞ்சனென்றும், தன்போற்றோழியும்வேட்கையுடையாளாகலானும் தான்கண்ணெனும் புலன்கொள்வாயைச் சிக்கெனவடைத்தலின் அவனையுமுடன்கொண்டு போகவேண்டுமாகலானுமவளையுமுளப்படுத்திச் சேருதுமமளியென்றுங்கூறினார் $ யாவருமொருங்குநோக்கலின் திருமேனிக்குக் கண்ணெச்சில் படுமென்றதனாலும், தன்னை இறைவற்குரியளாகக்கருதி ஏனையோர் நோக்கப்பெறாது அது நுமக்கின்றென்னுங் கருத்தானுமென்க.

வெளுப்பனகறுப்பவானவேற்கணாளொருத்தியுள்ளம்
குளிர்ப்பொடுகாணவந்தாள்வெதுப்பொடுகோயில்புக்காள். (கசு)

கருங்குழற்பாரம்வார்கொள்கனமுலைகலைசூழல்குல்
நெருங்கினமறைப்பவாண்டோர்நீக்கிடம்பெறாதுவிம்மும்
பெருந்தடங்கண்ணிகாணும்பேரெழிலாசைதூண்ட
மருங்குலின்வெளிகளூடேவள்ளலைநோக்குகின்றாள். (கஎ)

வரிந்தவாளனங்கன்வாளிமனங்கழன்றனவுமாதர்
எரிந்தபூணினமுங்கொங்கைவெயர்த்தபோதிழிந்தசாந்தும்
சரிந்தமேகலையுமுத்துஞ்சங்கமுந்தாழ்ந்தகூந்தல்
விரிந்தபூந்தொடையுமன்றிவெள்ளிடையரிதவ்வீதி. (கஅ)

தோள்கண்டார்தோளேகண்டார்தொடுகழற்கமலமன்ன
தாள்கண்டார்தாளேகண்டார்தடக்கைகண்டாருமஃதே
வாள்கொண்டகண்ணார்யாரேவடிவினைமுடியக்கண்டார்
ஊழ்கொண்டசமயத்தன்னானுருவுகண்டாரையொத்தார். (ககூ)

வேறு.

நையல்சிற்றிடையாளொருதாழ்குழல்
உய்யமற்றவளுள்ளத்தொடுங்கினான்
வையமுற்றும்வயிற்றினடக்கிய
அய்யனிற்பெரியாரினியாவரே. (உ0)

அலம்புபாரக்குழலியொராயிழை
சிலம்புமேகலையும்மொலிசெய்திட
நலம்பெய்கொம்பினடந்துவந்தெய்தினாள்
† புலம்புசேடியர்கைமிசைப்போயினாள். (உக)

அருப்புமென்முலையாளங்கொராயிழை
இருப்புநெஞ்சினையேனுமொரேழைக்காப்
பொருப்புவில்லைப்பொடிசெய்தபுண்ணியா
கருப்புவில்லிறுத்தாட்கொண்டுகொவென்றாள். (உஉ)

மைதவழ்ந்தகருங்கணார்வாணுதல்
‡ செய்தவன்றனித்தேர்மிசைச்சேறல்விட்
டெய்தவந்தெதிர்நின்றமைதானிது
கய்தவங்கொல்கனவுகொலாமென்றாள். (உங)

---

* தாடகையைவென்ற தோளாண்மை நோக்கித் தோள்கண்டார் தோளேகண்டாரென்றும், அகலிகை சாபமொழித்த தாளின்பெருமை நோக்கிக் கமலமன்னதாள்கண்டார் தாளேகண்டாரென்றும், ஈசன்வில் விறுத்த ஆற்றலென்றத் தடக்கைகண்டாருமஃதே என்றுங்கூறினார்.

† புலம்புசேடியரென்றார் இவனைப்பிரியுமாறு வந்ததென்று கவன்றமையானென்க.

‡ செய்துமுடித்த தவத்தானாகலின் செய்தவனென்றார்.

மாதொருத்திமனத்தினையல்லதோர்
* தூதுபெற்றிலளின்னுயிர்சோர்கின்றாள்
போதரிக்கட்பொலன்குழைப்பூண்முலைச்
சீதையெத்தவஞ்செய்தனளோவென்றாள். (உச)

பழுதிலாவொருபாவையன்னாள்பதைத்
தழுதுவெய்துயிர்த்தன்புடைத்தோழியைத்
தொழுதுசோர்ந்தயர்வாளிந்தத்தோன்றலை
எழுதலாங்கொலிம்மன்மதனாலென்றாள். (உரு)

வண்ணவாயொருவாணுதன்மானுடற்
கெண்ணுங்காலிங்கிலக்கணமெய்திட
† ஒண்ணுமோவிதுணர்த்துகின்றேனிவன்
கண்ணனேயிதுகண்டிரும்பின்னென்றாள். (உசு)

கனகநூபுரங்கைவளையோடுக
மனநெகும்படிவாடியொர்வாணுதல்
அனகனிந்நகரெய்தியதாகியிற்
சனகர்செய்ததவப்பயனாலென்றாள். (உஎ)

நனிவருந்திநலங்குடிபோயிடப்
பனிவருங்கணொர் ‡ பாசிழையல்குலாள்
முனிவருங்குலமன்னருமொய்ப்பறத்
தனிவருங்கொல்கனவினிலையென்றாள். (உஅ)

புனங்கொள்கார்மயில்போலியொர்பொற்கொடி
மனங்கொள்காதன்மறைத்தலையெண்ணினாள்
§ அனங்கவேளதறிந்தனனற்றந்தான்
மனங்கள்போலமுகமுமறைக்குமே. (உகூ)

இணைநெடுங்கணிரேந்திழையேந்துபூ
அணையணைந்திடியுண்டவராவெனப்
புணர்நலங்கிளர்கொங்கைபுழுங்கிட
உணர்வழுங்கவுயிர்த்தனளாவியே. (௩0)

ஆம்பலொத்தமுதூறுசெவ்வாய்ச்சியர்
தாம்பதைத்துயிருட்டுமொறுவார்
தேம்புசிற்றிடைச்சீதையைப்போற்சிறி
தேம்பல்பெற்றிலரெங்கணமுய்வரே. (௩க)

---

* கிள்ளை நாரைமுதலிய தூதினின்று நீக்குதற்கு மனத்தினையல்லதோர் தூதென்றார். † ஒன்றுமோ என்றது-ஒண்ணுமோ என மரீஇயது.
‡ பசும்பொன்னணியன்ற அணியைப்பாசிழை என்றது-மரபுவழுவமைதி. § உருவிலியாதலான் அநங்கவே ளென்றார்.

வேர்த்துமேனிதளர்ந்துயிர்விம்மலோ
டார்த்தியுற்றமடந்தையராரையும்
* தீர்த்தனித்தனைசிந்தையிற்செங்கணிற்
பார்த்திலனுட்பரிவிலனோவென்றாள். (௩௨)

வய்யம்பற்றியமங்கையரெண்ணிலர்
அய்யன்பொற்புக்களவிலையாதலால்
எய்யும்பொற்சிலைமாரனுமென்செய்வான்
† கய்யம்பற்றுடைவாளினுங்கைவைத்தான். (௩௩)

நாணவார்குழனாரியரோடலால்
வேனில்வேளொடுமேலுறைவார்களோ
டானபூசலறிந்திலமம்புபோய்
வானநாடியர்மார்பினுந்தைத்தவே. (௩௪)

மருண்மயங்குமடந்தையர்மாட்டொரு
பொருணயந்திலன்போகின்றதேயிவன்
கருணையென்பதுகண்டறியான்பெரும்
பரிணதன்கொல் ‡ படுகொலையானென்றாள். (௩௫)

தொய்யில்வெய்யமுலைத்துடிபோலிடை
நய்யும்நொய்யமருங்குலொர்நங்கைதான்
கய்யுமெய்யுமறிந்திலள்கண்டவர்
உய்யுமுய்யுமெனத்தளர்ந்தோய்வுற்றாள். (௩௬)

பூகவூசல்புரிபவர்போலொரு
பாகின்மென்மொழிதன்மலர்ப்பாதங்கள்
சேகுசேர்தரச்சேவகன்றேரின்பின்
எகுநீளுமிதென்செய்தவாறரோ. (௩௭)

பெருத்தகாதலிற்பேதுறுமாதரின்
ஒருத்திமற்றங்கொருத்தியைநோக்கியென்
கருத்துமவ்வழிகண்டதுண்டோவென்றாள்
அருத்தியுற்றபின்னாணமுண்டாகுமோ. (௩௮)

நங்கையங்கொருபொன்னயந்தாருய்யத்
தங்கனின்னுயிருங்கொடுத்தார்தமர்

---

* தீர்த்தனென்றதிராமனை. † கையம்பற்றுடைவாளினுங் கைவைத்தானென்றார் கைஅம்புகளொழிந் துடைவாளினுங் கைவைத்தானென்க. இனி உடைவாளினுங் கைவைத்தான் என்றது-கையம்புமலரம்பாதலின் தேன்சொரிவதனன் நழுவுகின்றமைபற்றி அங்ஙனமாகாவண்ணம் கேதகையின் பராகத்தா னழுவாவண்ணஞ் செய்தானென்றது.

‡ படுகொலையான்-கழிபெருங்கொலையாளி,

எங்களின்னுயிரெங்களுக்கிலா
வெங்கணெங்கண்விளைந்ததிவற்கென்றாள். (ருக)

நாமத்தாலழிவாளொருநன்னுதல்
* சேமத்தார்வில்லிறுத்ததுதேருங்கால்
தாமத்தாற்குழற்றாமொழித்தோகைபால்
காமத்தாலன்றகல்வியினுலென்றாள். (சு0)

ஆரமுந்துகிலுங்கலனியாவையும்
சோரவின்னுயிர்சோருமொர்சோர்குழல்
† கோரவில்லிமுன்னேயெனைக்கொல்கின்ற
மாரவேளின்வலியவர்யாரென்றாள். (சுக)

மாதரின்னணமெய்திடவள்ளல்போய்க்
கோதில்சிந்தைதவசிட்டனுங்கோசிக
‡ வேதபாரனுமேவியமண்டபம்
ஏதின்மன்னர்குழாத்தொடுமெய்தினான். (சுஉ)

திருவினாயகன்பின்றிரிந்தாலெனத்
§ தருவின்மாமணியாரந்துயல்வரப்
பருவமேகம்படிந்ததுபோற்படிந்
திருவர்தாளுமுறையினிறைஞ்சினான். (சுரு)

இறைஞ்சவன்னவரேத்தினரேவவோர்
நிறைஞ்சபூந்தவிசேறினிமற்கள்போல்
புறஞ்செய்தம்பியருட்பொலிந்தானரோ
$ அறஞ்செய்காவற்கயோத்தியிற்றோன்றினான். (சுசு)

ஆனமாமணிமண்டபமன்னது
தானைமன்னன்றமரொடுஞ்சார்ந்தனன்
மீனெலாந்தனபின்வரவெண்மதி
வானிலாவுறவந்ததுமானவே. (சுடு)

வந்துமாதவர்பாதம்வணங்கிமேற்
சிந்துதேமலர்மாரிசிறந்திட
அந்தணாளர்களாசியொடாசனம்
இந்திரன்முகநாணுறவேறினான். (சுசு)

* சேமித்துவைத்த வில்லாதலின் சேமத்தார் வில்லென்றார்.

† பிறர்க்கச்சம் விளைத்தவில்லை வளைத்தவனாகலின் கோரவில்லி என்றார்.

‡ வேதபாரகன்-வேதபாரனென இடைக்குறைந்தது.

§ தோளாமணி என்றதுபற்றித் தருவின்மாமணி என்றார்.

$ பாப்பனை துறந்தமை அறத்தை நிறுத்தற் பொருட்டாகலின் அறஞ்செய்காவற்றயோத்தியிற்றோன்றினனென்றார்.

கங்கர்கொங்கர்கலிங்கர்குலிங்கர்கள்
சிங்களாதிபர்சேரலர்தென்னவர்
அங்கராசர்குலிந்தரவந்திகர்
வங்கர்மாளவர்சோளர்மராடரே. (௪௭)

மானமாகதர்மச்சர்மிலேச்சர்கள்
ஏனைவீரவிலாடர்விராடர்கள்
சீனர்தெங்கணர்செஞ்சகர்சோமகர்
சோனகேசர்துருக்கர்குருக்களே. (௪௮)

எதியாதவரேழ்திறற்கொங்கணர்
சேதிராசர்தெலுங்கர்கருநடர்
ஆதிவானங்கவித்தவவனிவாய்
சோதிநீண்முடிமன்னருந்துன்னினார். (௪௯)

நீங்கரும்பினுந்தித்திக்குமின்சொலார்
தாங்குசாமரைமாடுதயங்குவ
ஓங்கியோங்கிவளர்ந்துயர் * கீர்த்தியின்
பூங்கொழுந்துபொலிவனபோன்றவே. (௫௦)

சுழலும்வண்டுமிழற்றுஞ்சுரும்புஞ்சூழ்ந்
துழலும்வாசமதுமலரோதியர்
குழலிமேனெடிறக்கூறுபல்லாண்டொலி
மழலையாழிசையோடுமலிந்தவே. (௫௧)

வெங்கணானையினான்றனிவெண்குடை
திங்கடங்கள்குலக்கொடிசீதையாம்
மங்கைமாமணங்காணியவந்தருள்
பொங்கியோங்கித்தழைப்பதுபோன்றதே. (௫௨)

ஊடுபேர்விடமின்றியொன்றும்வகை
நீடுமாகடற்றானைநெருங்கலால்
ஆடன்மாமதவானைச்சனகர்கோன்
நாடெலாமொருநன்னகராயதே. (௫௩)

ஒழிந்தவெள்ளினியொண்ணுதற்றாதைதன்
பொழிந்தகாதறொடரப்பொருளெலாம்
அழிந்துவந்துகொண்டாடலினன்புதான்
இழிந்துளார்க்குமிராமற்குமொத்ததே. (௫௪)

௧௧-வது, உலாவியற்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௨௦௨.

* கீர்த்தியை வெண்மையாகக்கூறலின் சாமரைமாடு தயங்குவது கீர்த்தியின் பூங்கொழுந்தென் றுவமித்தார்.

# உ0-வது, கோலங்காண்படலம்.

கோலங்காண்டலைக் குறித்துக்கூறும் படலம்.

தேவியர்மருங்குசூழ * விந்திராணிருக்கைசேர்ந்த
தூவியமுயிர்பெற்றென்னவுவந்தரசிருந்தகாலை
தாவில்வெண்கவிகைச்செங்கோற்சனகனையினிதுநோக்கி
மாவியனோக்கினளைக்கொணர்கெனவசிட்டன்சொன்னான். (க)

உரைசெயத்தொழுதையனுவந்துவுள்ளத்தன்பெண்ணாக்
கரசியைத்தருதிரீண்டென்றாயிழையவரையேவக்
கரைசெயற்கரியகாதல்கடாவிடக்கடிதுசென்றார்
பிரைசமொத்தினியசொல்லார்பேதைதாதியரிற்சொன்னார். (உ)

அமிழிமைத்துணைகள்கண்ணுக்கணியெனவமைக்குமாபோல்
உமிழ்சுடர்க்கலன்கணங்கையுருவினைமறைப்பதோரார்
அமிழ்தினைச்சுவைசெய்தென்னவழகினுக்கழகுசெய்தார்
இமிழ்திரைப்பரவைஞாலமேழைமையுடைத்துமாதோ. (ங)

கண்ணன்றன்னிறந்தன்னுள்ளக்கருத்தினைநிறைத்துமீதிட்
டெண்ணின்றுங்கொடிகளோடியுலகெங்கும்பரந்ததன்ன
வண்ணஞ்செய்கூந்தற்பாரவலயத்துமழையிற்றோன்றும்
விண்ணின்றமதியின்மென்பூஞ்சிகழிகைக் ‡ கோதைவேய்ந்தார். (ச)

விதியதுவகையால்வானமீனினம்பிறையைவந்து
கதுவுறுகின்றதென்னக்கொழுந்தொளிகளாலத்தூக்கி
மதியினைத்தந்தமேகமருங்குநாவளைப்பதென்னப்
பொதியிருளளகபந்திபூட்டியபூட்டுமிட்டார். (ரு)

வெள்ளத்தின்சடிலத்தான்றன்வெஞ்சிலையிறுத்தவீரன்
தள்ளத்தன்னாவிசோரத்தனிப்பெரும் § பெண்மைதன்னை
அள்ளிக்கொண்டகன்றகாளையல்லன்கொலாங்கொலென்பாள்
உள்ளத்தினூசலாடுங்குழைநிழலுமிழவிட்டார். (சு)

$ கோனணிசங்கம்வந்துகுடியிருந்தனையகண்டத்
தீனமில்கலன்கடம்மினியைவனவணிதல்செய்தார்

---

* இந்திராணிருக்கை-அரசனிருக்கை இவ்வாறே வடநூலாரும் இந்திரஸ்தானமென்பர். † மாவியனோக்கினளென்றது-சனகியை.

‡ சிகழிகைக்கோதை வேய்தலென்றது-மயிர்முடியிற் பூமாலை முடித்தலை. § பெண்மை என்றது-கட்கினிமையாமமைதித்தன்மை.

$ கோனென்றது அயர்வருமமரர்கட்கிறையை, இதனைத் ‘தேவிற்றிருமா’ லென்பதனானறிக. சங்கமென்றது பாஞ்சசன்னியத்தை.

மானணிநோக்கினார் தம்மங்கலக்கழுத்துக்கெல்லாம்
* தானணியானபோது தனக்கணியாதுமாதோ. (எ)

கோணிலாவாளநீன்கவரியையவணகோத்ததென்கோ
வாணிலாவயங்குசெவ்விவளர்பிறைவகிர்ந்ததென்கோ
நாணிலாநகையினின்றநகைநிலாத்தவழ்ந்ததென்கோ
பூணிலாமுலைமேலாரமுத்தையான்புகல்வதென்னோ. (அ)

மொய்கொள்சீறடியைச்சேர்ந்தமுளரிக்குஞ்செம்மைமீந்த
தையலாளமிழ்ந்தமேனிதயங்கொளிதழுவிக்கொள்ள
வெய்யபூண்முலையிற்சேர்ந்தவெண்முத்தஞ்சிவந்தவென்றால்
செய்யரைச்சேர்ந்துளாருஞ்செய்யராய்த்திகழ்வரன்றே. (௯)

† கொமையுறவீங்குகின்றகுவிகச்செப்பனையகொங்கைச்
சுமையுறநுடங்குகின்றநுசுப்பினாள்பூண்செய்தோளுக்
கிமையுறவிமைக்குஞ்செங்கேழினமணிமுத்தினோடும்
அமையுறவமைவதுண்டாமாகினொப்பாகுமன்றே. (க0)

தளையவிழ்கோதையோர்ச்சானகிதளிர்க்கையென்னும்
முளரிகளிராமன்செங்கைமுறைமையிற்றீண்டநோற்ற
அளியனகங்குற்போதுங்குவியலவாகுமென்றுங்
கிளவெயில்சுற்றியன்னவெரிமணிக்கடகமிட்டார். (கக)

சில்லியலோதிகொங்கைத்திரண்மணிக்கனகச்செப்பில்
வல்லியுமணங்கன்வில்லுமான்மதச்சாந்திற்றீட்டிப்
பல்லியனெறியிற்பார்க்கும் ‡ பரம்பொருளென்னையார்க்கும்
இல்லையுண்டென்னநின்றவிடையினுக்கிடுக்கண்செய்தார். (கஉ)

நிறஞ்செய்கோசிகநுண்டூசுகீவிநீவாதவல்குற்
புறஞ்செய்மேகலையுந்தாழத்தாரகைச்சும்மைபூட்டித்
திறஞ்செய்காசின்றசோதிபேதைசேயொளியிற்றீர்ந்து
கறங்குபுதிரியயாருங்கண்விளக்குற்றுநின்றார். (கரு)

அய்யவாமணிச்சப்போதினைதிகழுநொய்யவாடற்
பய்யரவல்குலாடன்பஞ்சின்றிப்பழுத்தபாதம்
செய்யபூங்கமலமென்னச்சேர்த்தியசிலம்புசால
நொய்யவேநொய்யதன்றேபலபடநுவல்வதம்மா. (கச)

நஞ்சிடையமிழ்தங்கூட்டிநாட்டங்களானவென்னச்
செஞ்செவேநீண்டுமீண்டுசேயரிசிதறித்தீய

---

* தானென்றது திருமாமகளை.
† கொம்மை என்றது-கொமை எனக்குறைந்துநின்றது.
‡ பரம்பொருணிலை இல்லையுண்டென நின்றது போன்றிடையுமன்னதாகலிதனையேயுவமித்தார்.

வஞ்சமுங்களவுமின்றிமழையெனமதர்த்தகண்கள்
அஞ்சனநிறமோவண்ணல்வண்ணமோவறிதறேற்றும். (கரு)

மொய்வளர்குவளைபூத்தமுளரியின்முளைத்த * முந்நாள்
மெய்வளர்மதியிளுப்பண்மீனுண்டேலனையதேய்ப்ப
வய்யகமடந்தைமார்க்குநாகர்கோதையர்க்கும்வானத்
தெய்வமங்கையர்க்குமெல்லாந்திலகத்தைத்திலகஞ்செய்தார். (கசு)

சின்னப்பூச்செருகுமென்பூச்சேகரப்போதுகோதில்
கன்னப்பூக்களுலாீதுகற்பகக்கொழுந்துமான
மின்னப்பூஞ் † சுரும்புவண்டுமிஞிறுந்தும்பிகளும்பம்பும்
புன்னைப்பூந்தாதுமாணும்பொற்பொடியப்பிவிட்டார். (கஎ)

செய்வளர்விளக்கமாட்டிநெய்ரபூவுந்தூவித்
தெய்வமும்பராவிவேதபாரகர்க்கீந்துசெம்பொன்
அய்யவிருதலிற்சேர்த்தியாய்நிறவயினிசுற்றிக்
கய்வளர்மயிலனுளைவலஞ்செய்து ‡ காப்புமிட்டார். (கஅ)

கஞ்சத்துக்களிக்கும்விண்டேறன்கவர்ந்துணும்வண்டுபோல
அஞ்சொற்கள்கிள்ளைக்கெல்லாமருளினுளமுகைமாந்தித்
தஞ்சொற்கள்குழறித்தத்தத்தகைதமொழிநின்றார்
§ மஞ்சர்க்குமாதரார்க்குமனமென்பதொன்றேயன்றே. (கக)

இழைகுலாமுலையினுளையிடையுவாமதியிளேக்கி
மழைகுலாவோதிநல்லார்களிமயக்குற்றுநின்றார்
உழைகுலாநயனத்தார்மாட்டொன்றென்றேவிரும்பற்கொத்த
தழைகெலாமொருங்கேகண்டால்யாவரேயாற்றவல்லார். (உ0)

$ சங்கங்கையுடைமையாலுந்தாமரைக்கோயிலாலும்
எங்கெங்கும்பரந்துவெவ்வேறுள்ளத்தினெழுதிற்றென்ன
அங்கங்கேதோன்றலாலுமருந்ததியனையகற்பின்
நங்கையுநம்பியொத்தாளுமினிப்புகல்வதென்னே. (உக)

பரந்தமேகலையுங்கோத்தபாதசாலகமுநாகச்
சிரஞ்செய்நூபுரமும்வண்டுஞ்சிலம்பொடுசிலம்பியார்ப்பப்
புரந்தரன்கோற்கீழாளுரரம்பையர்புடைசூழ்ந்தென்ன
வரம்பறுசும்மைத்தீஞ்சொன்மடந்தையர்தொடர்ந்துசூழ்ந்தார். (உஉ)

---

* முந்நாள் ஈண்டு-மூன்றாம்பிறையை. † சுரும்புமுதலியன நால்வகைவண்டென்க. ‡ காப்பு சூர்முதலிய தாக்காமைபொருட்டு இடுவதோர்பொட்டு. § மஞ்சரென்றதாடவரை. $ சங்கு அங்கையுடைமை சங்கமேந்தியிருத்தல், வளையணிந்திருத்தல்.

சிந்தொடுகுறளுங்கூனுஞ்சிலதியர்குழாமுந்தெற்றி
வந்தடிவணங்கிச்சுற்றமணியணிவிதானநீழல்
இந்துவின்கொழுந்துவிண்மீனினத்தொடும்வருவதென்ன
நந்தலில்விளக்கமன்னநங்கையுநடக்கலுற்ருள். (உஙு)

வேறு.

வல்லியையுயிர்த்தநிலமங்கையிவள்பாதம்
மெல்லியவுறைக்குமெனவஞ்சிவெளியெங்கும்
பல்லவமலர்த்தொகைபரப்பினவெனத்தன்
நல்லணிமணிச்சுடர்தவழ்ந்திடநடந்தாள். (உ௪)

தொழுந்தகையமென்னடைதொலைந்துகளியன்னம்
எழுந்திடைவிழுந்தயர்வதென்னவயலெங்கும்
கொழுந்துடையசாமரைகுலாவவொர்கலாபம்
வழங்கிமுன்மின்னவருமஞ்ஞையெனவந்தாள். (உரு)

மண்முதலனைத்துலகின்மங்கையருளெல்லாம்
கண்மணியெனத்தகையகன்னியெழில்காண
அண்ணன்மரபிற்சுடருத்தியொடுதானவ்
விண்ணிழிவதொப்பதொர்விதானநிழல்வந்தாள். (உசு)

கற்றைவிரிபொற்கடைமயிர்த்துறுகலாபம்
சுற்றுமணிபுக்கவிழைமிக்கிடைதுவன்றி
விற்றவழவாணிநிரமெய்யணிகண்மின்னச்
சிற்றிடைநுடங்கவொளிர்சீறடிபெயர்த்தாள். (உஎ)

பொன்னினொளிபூவின்வெறிசாந்துபொதிசீதம்
மின்னினிழலன்னவடன்மேனியொளிமான
அன்னமு * மரம்பையருமாரமிழ்துநாண
மன்னவையிருந்தமணிமண்டபமடைந்தாள். (உஅ)

சமைத்தவரையின்மைமறைதானுமெனலாமச்
சுமைத்திரண்முலைத்தெரிவைதூய்வடிவுகண்டார்
அமைத்திரள்கொடோளியருமாடவருமெல்லாம்
இமைத்திலருயிர்த்திலர்கள்சித்திரமெனத்தாம். (உகூ)

அன்னவளையல்லளெனவாமெனவயிர்ப்பான்
கன்னியமிழ்தத்தையெதிர்கண்டகடல்வண்ணன்
உன்னுயிர்நிலைப்பதொருத்தியொடுழைத்தாண்
டின்னமிழ்தெழக்களிகொளிந்திரனையொத்தான். (௩0)

* நடையினன்னமும், அழகினரம்பையரும், சொல்லினமிழ்துமொப்பாகாமையினுணவென்ருர்.

நறத்துறைமுதிர்ச்சியுறுநல்லமிழ்துபில்குற்
றறத்தின்விளைவொத்துமுகடுந்தியருகுய்க்கும்
திறத்துவரிதழ்க்குயினிளைப்பிணிடையல்லாற்
புறத்துமுளதோவெனமனத்தொடுபுகன்றான். (௫௧)

எங்கள்செய்தவத்தினிலிராமனெனவந்தோன்
சங்கினொடுசக்கரமுடைத்தனிமுதற்பேர்
அங்கணரசாதலினவ்வல்லிமலர்புல்லும்
மங்கையிவளாமெனவசிட்டன்மகிழ்வுற்றான். (௫௨)

துன்றுபுரிகோதையெழில்கண்டுலகுசூழ்வந்
தொன்றுபுரிகோலொடுதனித்திகிரியுய்ப்பான்
என்றுமுலகேழுமரசெய்தியுளனேனும்
இன்றுதிருவெய்தியதிதென்னவயமென்றான். (௫௩)

நய்வளநவிற்றுமொழிநண்ணவரலோடும்
* வையநுகர்கொற்றவனுமாதவருமல்லார்
கைகடலைபுக்கனகருத்துளதுமெல்லாம்
தெய்வமெனவுற்றவுடல்சிந்தைவசமன்றே. (௫௪)

மாதவரைமுற்கொளவணங்கிநெடுமன்னன்
பாதமலரைத்தொழுதுகண்கள்பனிசோரும்
தாதையருகிட்டதவிசிற்றனியிருந்தாள்
போதினைவெறுத்தரசர்பொன்மனைபுகுந்தாள். (௫௫)

அச்செனநினைத்தமுதலந்தணனிருந்தான்
பச்சைமலையொத்தபடிவத்தடலிராமன்
நச்சுடைவடிக்கண்மலர்நங்கையிவளென்றால்
இச்சிலைகிடக்கமலையேழையுமிறாதே. (௫௬)

எய்யவில்வளைத்ததுமிறுத்ததுமுரைத்தும்
மெய்விளைவிடத்துமுதலையம்விடலுற்றாள்
அய்யனையகத்துவடிவேயலபுறத்தும்
கய்வளைதிருத்துபுகடைக்கணினுணர்ந்தாள். (௫௭)

கருங்கடைநெடுங்கணொளியாறுநிறைகண்ணப்
பெருங்கடலின்மண்டவுயிர்பெற்றினிதுயிர்க்கும்
அருங்கலனணங்கரசியாரமிழ்தனைத்தும்
ஒருங்குடனருந்தினரையொத்துடறடித்தாள். (௫௮)

கணங்குழைகருத்தினுறைகள்வனெனலானான்
வணங்குவிலிறுத்தவனெனத்துயர்மறந்தாள்

---

* வையநுகர்கொற்றவனென்ற திராமனை.

அணங்குறு * மவிஞ்சைகெடவிஞ்சையினகம்பா
ணொர்ந்தறிவுமுற்றபயனுற்றவரையொத்தாள். (௩௯)

கொல்லுயர்களிற்றரசர்கோமகனிருந்தான்
கல்விகரையுற்றமுனிகௌசிகனைமேலாய்
வல்லிபொருசிற்றிடைமடந்தைமணநாளாம்
எல்லையினலத்தபகலென்றுரைசெய்கென்றான். (௪0)

வாளையுகளக்கயல்கள்வாவுமதின்மேதி
மூளைமுதுகைக்கிழியமூரியவரால்பின்
பாளைவிரியக்குதிகொள்பண்ணைவளநாடா
நாளையெனவுற்றபகனற்றவனுரைத்தான். (௪௧)

சொற்றபொழுதத்தரசர்கைதொழுதெழுத்தன்
ஒற்றைவயிரச்சுரிகொள்சங்கினொலிபொங்கப்
பொற்றடமுடிப்புதுவெயிற்பொழிதரப்போய்
நற்றபனனுச்சிதொடுநன்மனைபுகுந்தான். (௪௨)

அன்னமரிதிற்பிரியவண்ணலுமகன்றப்
பொன்னின்னெடுமாடவரைபுக்கனன்மணிப்பூண்
மன்னவர்பிரிந்தனர்கண்மாதவர்கள்போனார்
† மின்னுசுடர்நாயகனுமேருவின்மறைந்தான். (௪௩)

உ0-வது, கோலங்காண்படலம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-கஉ௪௫.



## உக-வது, கடிமணப்படலம்.

விவாகத்தைக்குறித்துக்கூறும் படலம்.

இடம்படுபுகழ்ச்சனகர்கோனினிதுபேணக்
கடம்படுகளிற்றரசராதியிடைகண்டோர்
தடம்படுபுயத்தசிறுதம்பியர்களாறும்
உடம்பொடுதுறக்கநகருற்றவரையொத்தார். (க)

தேடருநலத்தபுனலாசைதெறலுற்றார்
மாடொர்தடமுற்றதனையெய்துவகைகாணார்
ஈடழியுறத்தளர்வொடேமுறுவரன்றே
ஆடகவளைக்குயிலுமந்நிலையளானாள். (உ)

* அவிஞ்சையென்ற தவித்தையை, அது பிறவித்துயர்க்கேதுவாக லின் அணங்குறுமென விசேடித்தார்.
† மின்னுசுடர்நாயகன்-ஞாயிறு.

வேறு.

உரவேதுயிலாருயிர்தீர்துமெனக்
கரவேபுரிவாருளரோகதிரோன்
வரவேயெனையாளுடையான்வருமே
இரவேகொடியாய்விடியாயெனுமால். (௩)

கருநாயிறுபோல்பவர்காலொடுபோய்
வருநாளயலேவருவாய்மனனே
பெருநாளுடனேபிரியாதுழல்வாய்
ஒருநாடரியாதொழிவாருளரோ. (௪)

கனையேழ்கடல்போல் * கருநாழிகைதான்
வினையேன்வினையால்விடியாவிடினீ
தனியேபறவாய்தகவேதுயிலாய்
பனிமேலுறைவாய்பழிபூணுதியோ. (௫)

அயில்வேலனல்கால்வனவாநிழலாய்
வெயிலேயெனநீவிரிவாய்நிலவே
செயிரேதுயிலாருடறேய்வுறுவார்
உயிர்கோளுறுவாருளரோவுரையாய். (௬)

மன்றற்குளிர்வாசம்வயங்கனல்வாய்
மின்றொத்துநிலாநகைவீழ்மலயக்
குன்றிற்குலமாமுழையிற்குடிவாழ்
தென்றற்புலியேயிரைதேடுதியோ. (௭)

தெருவேதிரிவாரொருசேவகனார்
இருபோதும்விடாரிதுவென்னைகொலாம்
கருமாமுகில்போல்பவர்கன்னியர்பால்
வருவாருளரோகுலமன்னவரே. (௮)

தெருளாவினைதீயவர்சேரலர்தோள்
அருளாநெறியோடுமேவாவதுவோ
கருளார்கடலோகரைகாணரிதால்
இருளானதுதானெனையூழிகொலாம். (௯)

பண்ணோவொழியாபகலோபுகுதா
தெண்ணோதவிராவிரவோவிடியா
துண்ணோவொழியாவுயிரோவகலா
கண்ணோதுயிலாவிதுவோகடனே. (௧௦)

---

* கருநாழிகை-இரவு.

இடையேவளைசோரவெழுந்துவிழுந்
தடலேய்மதனன்சரமஞ்சினையோ
உடலோய்வுறநாளுமுறங்கலையால்
கடலேயுரைநீயுமொர்கன்னிசொலாம். (கக)

எனவின்னனபன்னியிருந்துளைவாள்
துனியுன்னிநலங்கொடுசோர்வுறுகால்
மனைதன்னின்வயங்குறும்வைகிருள்வாய்
அனகன்னினைகின்றனயாமறைவாம். (கஉ)

* முன்கண்டுமுடிப்பருவேட்கையினால்
என்கண்டுணைகொண்டிதயத்தெழுதிப்
பின்கண்டுமொர்பெண்களைகண்டிலெனால்
பின்கண்டவரெங்கறிவார்வினையே. (கந)

திருவேயனையாண்முகமேதெரியின்
கருவேகனியேவிளைகாமவிதைக்
கெருவேமதியேயிதுவென்செய்தவா
ஒருவேனொடுநீயுறவாகலையோ. (கச)

கழியாவுயிருந்தியகாரிகைதன்
விழிபோலவளர்ந்ததுவிங்கிலதால்
அழிபோரிறைவன்படவஞ்சியவன்
பழிபோலவளர்ந்ததுபாயிருளே. (கரு)

நினையாவொருநாணெடிதோநெறிதான்
வினவாதவர்பால்விடைகொண்டிலையோ
புனமானனையாரொடுபோயினவென்
மனனேயெனைநீயுமறந்தனையோ. (கசு)

தன்னேர்க்கெரிகாறகைவாளரவின்
பன்னேர்க்கினதென்பதுபண்டுகொலாம்
என்னேர்க்கினுநெஞ்சினுமென்றுமுளார்
மென்னேர்க்கினதேகடுவல்விடமே. (கஎ)

கல்லார்மலர்சூழ்கழிவார்பொழிலோ
டெல்லாமுளவாயினுமென்மனமோ

---

* முன்கண்டென்றது-கன்னிமாடத்துக்காண்டலை, என்கண்டுணை கொண்டென்றது என்கண்ணாகிய ஓவியக்கோல்கொண்டென்றதை, இதயத்தெழுதி என்றது உள்ளமாகிய எட்டிலெழுதி என்றதை. வினை என்றது-காண்டற்றொழிலை பின்கண்டென்ற து ராசவையிற்கண்டதை. பின் கண்டவரெங்கறிவார் வினை என்றார் மின்னலைக்கண்டார் வேறு பொருளைக் காணாதவாறுபோற் சனகியைக்கண்ட தான் வேறொருபொருளைக் கண்டிலரென்பதனானென்க.

சொல்லாரமுதின்சுவையோடினிதாம்
எல்லோதியர்தாம்விளையாடிடமே. (கஅ)

வேறு.

* வானவர்பெருமானும்மனநினைவினனுகத்
தேனகுகுழலாடன்றிருமணவினைநாளை
பூநகுமணிவாசம்புனைநகரணிவீரென்
றானையின்மிசையாணரணிமுரசறைகென்றான். (க௯)

முரசறைதலுமானமுதியருமிளையோரும்
விரைசெறிகுழலாரும்விரவினர்விரைகின்றார்
உரைசெறிகிளையோடுமுவகையினுயர்கின்றார்
கரைசெறிவரிதாகுமிரவொருகரைகண்டார். (௨0)

அஞ்சனவொளியானுமலர்மிசையுறைவாளும்
எஞ்சலின்மணநாளைப்புணர்குவரெனலோடும்
செஞ்சுடரிருள்கீறித்தினகரனொருதேர்மேல்
மஞ்சனையணிகோலங்காணியவெனவந்தான். (௨௧)

தோரணநடுவாருந்தூணுறைபொதிவாரும்
பூரணகுடமெங்கும்புனைதுகில்புனைவாரும்
காரணிநெடுமாடங்கதிர்மணியணிவாரும்
ஆரணமறைவாணர்க்கமுதினிதடுவாரும். (௨௨)

அன்னமென்னடையாரும்மழவிடையனையாருங்
கன்னிநன்னகர்வாழைகமுகொடுநடுவாரும்
பன்னருநிரைமுத்தம்பரியனதெரிவாரும்
பொன்னணியணிவாரும்மணியணிபுனைவாரும். (௨௩)

சந்தனமகிழுறுஞ்சாந்தொடுதெருவெங்குஞ்
சிந்தினர்திரிவாருஞ்செழுமலர்சொரிவாரும்
இந்திரதனுநாணுமெரிமணிநிரைமாடத்
தந்தமில்விலையாரக்கோவைகளணிவாரும். (௨௪)

தளங்கிளர்மணிகாலத்தவழ்சுடரிமிழ்தீபம்
இளங்குளிர்முளையார்நற்பாலிகையினமெங்கும்
விளிம்புபொன்விரைநாறவெயிலொடுநிலவீனும்
பளிங்குடையுயர்திண்ணைப்பத்தியின்வைப்பாரும். (௨௫)

மந்தரமணிமாடமுன்றிலின்வயினெங்கும்
அந்தமிலொளிர்முத்தினகனிரையொளிவீச

* வானவர் பெருமானென்ற தயர்வருமமரர்கட்கிறையை.

இந்திரனெடுவானம்மீனலர்குவதென்னப்
பந்தரினிழல்வீசப்படர்வெயில்கடிவாரும். (உசு)

வயிரமிழொளியினும்மரகதமணிவேதிச்
செயிரறுமொளிர்தீபஞ்சிலதியர்கொணர்வாரும்
வெயில்விரவியபொன்னின்மிடைகொடிமதிதோயும்
எயிலினின்டுவாருமகிலெரியிடுவாரும். (உஎ)

பண்டியினிறைவாசப்பனிமலர்கொணர்வாரும்
தண்டலையிலையோடுகனிபலதருவாரும்
குண்டலம்வெயில்வீசக்குரவைகள்புரிவாரும்
உண்டைகொண்மதவேழத்தோடைகளணிவாரும். (உஅ)

கலவைகள்புனைவாருங்கலைநலதெரிவாரும்
மலர்குழன்மலைவாரும்மதிமுகமணியாடித்
திலகமுனிடுவாருஞ்சிகழிகையணிவாரும்
இலவிதழ்பொலிகோலமெழில்பெறவிடுவாரும். (உகூ)

தப்பினமணிகாசுஞ்சங்கமுமயிலன்னார்
ஒப்பனைபுரிபோதுமுடலினுகுபோதும்
துப்புறழிளவாசச்சுண்ணமுமுதிர்தாதும்
குப்பைகளெனவாரிக்கொண்டனர்களைவாரும். (௩0)

மன்னவர்வருவாரும்மறையவர்நிறைவாரும்
இன்னிசைமணியாழினிசைமதுநுகர்வாரும்
சென்னியர்திரிவாருஞ்சிலதியர்செறிவாரும்
கன்னவின்மணவேலைக்கடிகைகடெரிவாரும். (௩க)

கணிகையர்தொகுவாருங்கலைபலபயில்வாரும்
பணியணியினமுத்தம்பலவிதநிலமன்னர்
அணிநெடுமுடியொன்றொன்றறைதலினுகுமம்பொன்
மணிமலைதொகுமன்னன்வாயிலின்மிடைவாரும். (௩உ)

கேடகம்வெயில்வீசக்கிளரயினிலவீனக்
கோடுயர்நெடுவிஞ்சைக்குஞ்சரமதுபோல
ஆடவர்திரிவாருமரிவையர்களிகூரும்
நாடகநவில்வாரும்நகையுயிர்கவர்வாரும். (௩௩)

கதிர்மணியொளிகாலக்கவர்பொருடெரியாவா
றெதிர்சுடர்தரநின்றுற்றெழுதலினிமையோரும்
மதுவிரிகுழலாரும்மதிலுடைநெடுவானம்
அதுவிதுவெனவோராதலமாலுறுவாரும். (௩ச)

தேர்மிசைவருவாருஞ்சிவிகையில்வருவாரும்
ஊர்தியில்வருவாருமொளிமணிநிரையோடைக்
கார்மிசைவருவாருங்கரிணியில்வருவாரும்
பார்மிசைவருவாரும்பண்டியில்வருவாரும். (௩௫)

முத்தணியணிவாரும்மணியணிமுணிவாரும்
பத்தியினிமிர்செம்பொற்பலகலன்மகிழ்வாருந்
தொத்துறுதொழின்மாலைசுரிகுழலணிவாருஞ்
சித்திரநிரைதோயுஞ்செந்துகில்புனைவாரும். (௩௬)

விடநிகர்விழியாருமமுதெனுமொழியாருங்
கிடைபுரையிதழாருங்கிளர்நகைவெளியாருந்
தடமுலைபெரியாருந்தனியிடைசிறியாரும்
பெடையனநடையாரும்பிடியெனவருவாரும். (௩௭)

உண்ணிறைநிமிர்செல்வமொருதுறைசெலவென்றும்
கண்ணுறலரிதென்றுங்கருதுதலரிதம்மா
எண்ணுறுசுடர்வானத்திந்திரன்முடிசூடும்
மண்ணுறுதிருநாளையொத்ததுமணநாளே. (௩௮)

வேறு.

கரைதெரிவரியதுகனகம்வேய்ந்தது
வரையெனவுயர்ந்ததுமணியிற்செய்தது
நிரைவளைமணவினைநாப்புமண்டபம்
அரசர்தமரசனுமணுகன்மேயினான். (௩௯)

வெண்குடையினநிலாவிரிக்கமின்னெனக்
கண்குடையினமணிவெயிலுங்கான்றிடப்
பண்குடைவண்டினம்பாடவாடன்மா
மண்குடைதூளிவிண்மறைப்பவேகினான். (௪௦)

மங்கலமுரசினமழையினார்த்தன
சங்குகண்முரன்றனதாரைபோரெனப்
பொங்கினமறையவர்புகலுநான்மறை
கங்குலினொலிக்குமாகடலும்போன்றவே. (௪௧)

பரந்ததேர்களிறுபாய்புரவிபண்ணையில்
தரந்தரநடந்தனதானைவேந்தனை
நிரந்தரந்தொழுதெழுநேமிமன்னவர்
புரந்தரன்புடைவருமமரர்போன்றனர். (௪௨)

அனையவன்மண்டபமணுகியம்பொனின்
புனைமணியாதனம்பொலியத்தோன்றினான்

முனைவருமன்னருமுறையினேறினார்
சனகனுந்தன்கிளைதழுவவேறினான். (சங)

மன்னருமுனிவரும்வானுளோர்களும்
அன்னமென்னடையணங்கனையமாதரும்
துன்னினார்துவன்றினர்சுடர்கள்சூழ்வரும்
பொன்மலையொத்ததப்பொருவில்கூடமே. (சச)

புயலுளமின்னுளபொருவின்மீனுள
இயன்மணியினமுளசுடரிரண்டுள
மயன்முதற்றிருத்தியமணிசெய்மண்டபம்
அயன்முதற்றிருத்தியவண்டமொத்ததே. (சரு)

எண்டவமுனிவருமிறைவர்யாவரும்
அண்டரும்பிறரும்புக்கடங்கிற்றாதலால்
மண்டபம்வையமும்வானும்வாய்மடுத்
துண்டவன்மணியணியுதரமொத்ததே. (சசு)

தாரதலமுதலுலகனைத்துந்தள்ளுற
விராவினகுவிந்தனவிளம்பவேண்டுமோ
அராவணைதுறந்துபோந்தயோத்தியெய்திய
இராகவன்செய்கையையியம்புவாமரோ. (சஎ)

சங்கினந்தவழ்கடலேழிற்றந்தன
சிங்கலிலருமறைதெரிந்ததீர்த்தங்கள்
கங்கையேமுதலியகலந்தநீரினால்
மங்கலமஞ்சனமரபினாடியே. (சஅ)

என்றுநான்முகன்முதல்யாரும்யாவையும்
நின்றபேரிருளினைநீக்கிநீணெறி
சென்றுமீளாக்குறிசேரச்சேர்த்திடு
* தன்றிருநாமத்தைத்தானுஞ்சாத்தியே. (சகூ)

கோதறுதவத்துத் † தங்குலத்துளோர்தொழும்
ஆதியஞ்சோதியையடிவணங்கினான்
காதியல்கயல்விழிக்கன்னிமார்களை
வேதியர்க்கருமறைவிதியினல்கியே. (ரு0)

* தன்றிருநாமத்தைத் தானுஞ் சாத்தி யென்றது—தன்றிருநாமத்தைத் தானுங்கூறிப் புண்டரமிட்டென்பதை.

† தங்குலத்துளோர் தொழும் ஆதியஞ்சோதி என்றது—ஆயிரமோலி யரும்பரஞ்சுடரை.

அழிவருதவத்தினோடறத்தையாக்குவான்
ஒழிவருங்கருணையோருருவுகொண்டென
எழுதருவடிவுகொண்டிருண்டமேகத்தைத்
தழுவியநிலவெனக்கலவைசாத்தியே. (௫௧)

மங்கலமுழுநிலாமலர்ந்ததிங்களைப்
பொங்கிருங்கருங்கடல்பூத்ததாமெனச்
செங்கிடைச்சிகழிகைச்செம்பொன்மாலையும்
தொங்கலுந்துயல்வரச்சுழியஞ்சூடியே. (௫௨)

எதமிலிருகுழையிரவுநன்பகல்
காதல்கண்டுணர்ந்தனகதிருந்திங்களும்
சீதைதன்கருத்தினைச்செவியினுள்ளுறத்
தூதுசென்றுரைப்பனபோன்றுதோன்றவே. (௫௩)

கார்விடக்கறையுடைக்கணிச்சிவானவன்
வார்சடைப்புடையினோர்மதிமிலைச்சித்தான்
சூர்சுடர்க்குலமெலாஞ்சூடினானென
வீரபட்டத்தொடுதிலகமின்னவே. (௫௪)

சக்கரத்தயல்வருஞ்சங்கமாமென
மிக்கணிகழுத்தணிதரளவெண்கொடி
மொய்க்குமென்குழலினுண்முறுவலுள்ளுறப்
புக்கனநிறைத்துமெய்பொடித்தபோன்றவே. (௫௫)

பந்திசெய்வயிரங்கள்பொறியிற்பாடுற
அந்தமில்சுடர்மணியழலிற்றோன்றலால்
சுந்தரத்தோளணிவலயந்தொல்லைநாள்
மந்தரஞ்சுற்றியவரவைமானுமே. (௫௬)

கோவையின்பெருவடமுத்தங்கோத்தன
காவல்செய்தடக்கையினடுவெட்காந்துவ
மூவகையுலகிற்குமுதல்வனுமென
ஏவரும்பெருங்குறியிட்டபோன்றவே. (௫௭)

மாண்டபொன்மணியணிவலயம்வந்தெதிர்
வேண்டினர்க்குதவுவான்விரும்பிக்கற்பகம்
ஈண்டுதன்கொம்பிடையீன்றதாமெனக்
காண்டகுதடக்கையிற்கடகமின்னவே. (௫௮)

தேனுடைமலர்மகடிளைக்குமார்பினில்
தானிடைவிளங்கியதகையினாரந்தான்

மீனொடுசுடர்விடவிளங்குமேகத்து
வானிடுவில்லெனவயங்கிக்காட்டவே. (௫௯)

நணுகவுயிர்பிரவுருடக்குஞானத்தர்
உணர்வினிலொளிதிகழுந்தரீயந்தான்
தணிவருயகருணைதன்கழுத்திற்சாத்திய
மணியுமிழ்கதிரெனமார்பிற்றோன்றவே. (௬௰)

மேவருஞ்சுடரெனவிளங்குமார்பினால்
ஏவருந்தெரிந்தினிதுணர்மினீண்டெனத்
தேவருமுனிவருந்தெரிக்கலா * முதன்
மூவருந்தானெனமுடிந்தவோத்தே. (௬௧)

சுற்றுநீடணிமணிச்சோதிபொங்கமேல்
ஒற்றைமாமணியுமிழுதரபந்தனம்
மற்றுமோரண்டமுமயனும்வாழ்தரப்
பொற்றடந்தாமரைபூத்தபோன்றதே. (௬௨)

மண்ணுறுசுடர்மணிவயங்கித்தோன்றிய
கண்ணுறுகருங்கடலதனைக்கைவளர்
தண்ணிறப்பாற்கடறழீஇயதாமென
வெண்ணிறப்பட்டொளிவிளங்கச்சாத்தியே. (௬௩)

சலம்வருதரளமுந்தயங்குநீலமும்
அலம்வருநிழலுமிழம்பொற்கச்சினால்
குலம்வருகனகவான்குன்றைநின்றுடன்
வலம்வருகதிரெனவாளும்வீக்கியே. (௬௪)

முனைவிரிசுடரொளிமுழுந்தின்பத்திவான்
தொகைவிரிபட்டிகைச்சுடருஞ்சுற்றிடத்
தகையுடைவாளொளுந்தயங்குமெய்யவன்
நகையிளவெயிலெனத்தொங்கலுற்றியே. (௬௫)

காசொடுகண்ணிபுல்கலைக்கைவினை
ஏசறுகிம்புரியெயிறுவெண்ணிலா
வீசலின்மகரவாய்விளங்குமின்னென
ஆசையையொளிகளாலளந்துகாட்டவே. (௬௬)

இனிப்பரந்துலகினையளப்பதெங்கெனத்
தனித்தனித்தடுப்பனபோலுஞ்சால்பின
நுனிப்பருநுண்வினைச்சிலம்புநோன்கழல்
பணிப்பருந்தாமரைப்பாதம்பற்றவே. (௬௭)

---

* முதன்மூவரென்றது-மும்மைப்பெருந்தேவரை.

இன்னணமொளிர்தரவிமையவர்க்கெலாம்
தன்னையேயனையதோர்கோலந்தாங்கினான்
பன்னகமணிவிளக்கழலும்பாயலுள்
அன்னவர்தவத்தினாலனந்தனீங்கினான். (௬௮)
* முப்பரம்பொருளிற்குண்முதலைமூலத்தை
இப்பரந்துடைத்தவரெய்துமின்பத்தை
அப்பனையப்பினுளமிர்தந்தன்னையே
ஒப்பனையொப்பனையுரைக்கவொண்ணுமோ. (௬௯)
பல்பதினாயிரம்பசுவும்பைம்பொனும்
எல்லையினிலவொண்மணிகள்யாவையும்
நல்லவர்க்குதவினானவிலுநான்மறைச்
செல்வர்கள்வழுத்துறத்தேர்வந்தேறினான். (௭௰)
பொற்றிரளச்சதுவெள்ளிச்சில்விபுக்
குற்றதுவயிரத்தினுற்றகட்டது
சுற்றுறுநவமணிசுடருந்தோற்றத்த
தொற்றையாழிக்கதிர்த்தேரொடொத்ததே. (௭௧)
நால்வருந்தன்மையைநுணிக்குநோன்மைய
சால்பெருஞ்செவ்விய † தருமமாதிய
நாலையுமனையனபுரவிநான்கொரு
பாலமையுணர்ந்தவன்பக்கம்பூண்டவே. (௭௨)
அனையதோர்தேரினிலருணனின்றெனப்
பனிவருமலர்க்கணைப்பரதன்கோல்கொளக்
குனிசிலைத்தம்பிபின்கூடவேனையன்
இனியபொற்கவரிகாலியக்கவேகினான். (௭௩)
அமைவருமேனியானமுகினையதோ
கமையுறுமனத்தினாற்கருதவந்ததோ
சமைவுறவறிந்திலந்தக்கதாருக
‡ இமையவராயினாரிங்குளாருமே. (௭௪)

---

* முப்பரம்பொருளென்றது சங்கருஷணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்பாரை. முதலை என்றது பாற்கடற்பரமனை. மூலத்தையென்றது வாசுதேவனை இப்பரந்துடைத்தவரெய்து மின்பத்தையென்றது பரமபதநாதனை. அப்பனையென்றது திருவேங்கடமுடையானை. அப்பினுளமிர்தமென்றது ஆவிக்காலியாய்நின்ற பரஞ்சுடரை. அதிமானுடசேட்டிதத்தையுணர்த்தத் தன்னையேயொப்பனையென்றார். இவ்வாறிச்சமயத்தவர்கூறும் பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சாவதாரமறிவித்தமை காண்க.

† தருமமாதியநாலையும் அறம், பொருள், இன்பம், வீடு.

‡ கண்ணிமைத்தலின்றி நோக்கலின் இமையவராயினா ரிங்குளாருமென்றார்.

வரம்பறுமுலகினைவலிந்துமாய்வின்றித்
திரம்பயிலரக்கர்தம்வருக்கந்தேய்வின்று
நிரம்பியதெனக்கொடுநிறைந்ததேவரும்
அரம்பையர்குழாத்தொடுமொடன்மேயினார்.

சொரிந்தனர்பூமழைசுண்ணந்தூவினர்
விரிந்தொளிர்காசுபொன்றூசுவீசினர்
பரிந்தனரழகினைப்பருகினார்கொலாம்
தெரிந்திலந்திருநகர்மகளிர்செய்கையே. (

* வள்ளலைநோக்கியமகளிர்மேனியின்
எள்ளரும்பூணெலாம்பிரியநிற்கின்றார்
உள்ளனயாவையுமுதவிப்பூண்டவும்
கொள்ளையிற்கொள்கெனக்கொடுக்கின்றாரினே. (

வேறு.

எஞ்சலிலுலகத்துள்ளவெறிபடையரசவெள்ளம்
குஞ்சரக்குழாத்திற்சுற்றக்கொற்றவனிருந்தகூடம்
வெஞ்சிலைத்தனுவலானுமேருமால்வரையிற்சேரும்
செஞ்சுடர்க்கடவுளென்னத்தேரிடைசென்றுசேர்ந்தான். (௬

இரதமாண்டிழிந்தபின்னரிருமருங்கிரண்டுகையும்
பரதனுமிளையகோவும்பரிந்தனரேந்தப்பைந்தார்
வரதனுமெய்திமைதீர்மாதவர்த்தொழுதுநீதி
விரதமெய்த்தாதைபாதம்வணங்கிமாடிருந்தவேலை. (௭

சிலையுடைக்கயல்வாட்டிங்களேந்தியோர்செம்பொற்கொம்பர்
முலையிடைமுகிழ்ப்பத்தேர்மேன்முன்றிசைமுளைத்ததன்னாள்
அலைகடற்பிறந்துபின்னையவனியிற்றோன்றிமீள
மலையிடையுதிக்கின்றாள்போன்மண்டபமதனில்வந்தாள். (௮

வேறு.

நன்றிவானவரெலாமிருந்தநம்பியைத்
துன்றிருங்கருங்கடறுவைப்பத்தோன்றிய
மன்றலங்கோதையாண்மாலைசூட்டிய
அன்றினுமின்றுடைத்தழகென்றாரரோ. (௮

ஒலிகடலுலகினிலும்பர்நாகரில்
பொலிவதுமற்றிவள்பொற்பென்றாலிவள்
மலிதருமணம்படுதிருவைவாயினால்
மெலிதருமுணர்வினென்விளம்புகேனரோ. (௮௨

* தன் திருநாமத்தை ஒருகாற்கூறியமாத்திரையின், அன்னோர்க் வீடுபேறு முதலியவற்றை எண்ணியாங்கு வரையாது பயத்தலின் வ ளல் என்றார்.

இந்திரன்சசியொடுமெய்தினானிளஞ்
சந்திரமௌலியுந்தையலாளொடும்
வந்தனன்மலரயன்வாக்கினாளுடன்
அந்தரம்புகுந்தனனழகுகாணவே. (௮௩

நீந்தருங்கடலெனநிறைந்தவேதியர்
தோய்ந்தநூன்மார்பினர்சுற்றத்தொன்னெறி
வாய்ந்தநல்வேள்விக்குவசிட்டன்மையற
ஏய்ந்த * நற்றருப்பையோடணிதினெய்தினான். (௮௪

தண்டுலம்விரித்துநற்றருப்பைசாத்தியே
மண்டலம்விதிமுறைவகுத்துமென்மலர்
கொண்டவைசொரிந்தெரிகுழூமமூட்டினன்
பண்டுளமறைநெறிபரவிச்செய்தனன். (௮௫

வேறு.

மன்றலின்வந்துமணத்தவிசேறி
வென்றிநெடுந்தகைவீரனுமார்வந்
நின்றணையன்னமுமெய்தியிருந்தார்
ஒன்றியபோகமும்யோகமுமொத்தார். (௮௬

கோமகன்முன்சனகன்குளிர்நன்னீர்
பூமகளும்பொருளும்மெனநீயென்
மாமகடன்னொடுமன்னுதியென்றுத்
தாமரையன்னதடக்கையினீந்தான். (௮௭)

அந்தணராசியருங்கலமன்னோர்
தந்தபல்லாண்டிசைதார்முடிமன்னர்
வந்தனைவானவர்வாழ்த்தொலிபோல
முந்தியசங்கமுழங்கினமாதோ. (௮௮)

வானவர்பூமழைமன்னவர்பொற்பூ
ஏனையர்தூவுமிலங்கொளிமுத்தம்
தானகுநாண்மலரென்றிவைதம்மால்
மீனகுவானின்விளங்கியதிப்பார். (௮௯)

வெய்யகனற்றலைவீரனுமந்நாள்
மய்யறுமந்திரமுற்றும்வழங்கா
நெய்யமையாகுதியாவையுநேர்ந்தான்
தய்யறளிர்க்கை † தடக்கைபிடித்தான். (௯௰)

---

* நற்றருப்பை-நுனித்தருப்பை.

† தடக்கைபிடித்தான்-பாணிக்கிரகணம்செய்தான்.

இடம்படுதோளவனோடியையேவள்வி
தொடங்கியவெங்கனல்சூழ்வருபோதின்
மடம்படுசிந்தையண்மாறுபிறப்பின்
உடம்புயிரைத்தொடர்கின்றதையொத்தாள். (௧௧)

வலங்கொடுதீயைவணங்கினர்வந்து
பொலம்பொரிசெய்வனசெய்பொருண்முற்றி
இலங்கொளி * யம்மிமிதித்தெதிர்நின்ற
கலங்கலில்கற்பினருந்ததிகண்டார். (௧௨)

மற்றுளசெய்வனசெய்துமகிழ்ந்தார்
முற்றியமாதவர்தாண்முறைசூடிக்
கொற்றவனைக்கழல்கும்பிடலோடும்
பொற்றொடிகைக்கொடுநன்மனைபுக்கான். (௧௩)

ஆர்த்தனபேரிகளார்த்தனசங்கம்
ஆர்த்தனநான்மறையார்த்தனர்வானோர்
ஆர்த்தனபல்கலையார்த்தனபல்லாண்
டார்த்தனவண்டினமார்த்தனவேலை. (௧௪)

கேகயன்மாமகள்கேழ்கிளர்பாதம்
தாயினுமன்பொடுதாழ்ந்துவணங்கா
ஆயதனன்னையடித்துணைசூடித்
தூயசுமித்திரைதாடொழலோடும். (௧௫)

அன்னமுமன்னவரம்பொன்மலர்த்தாள்
சென்னிபுனைந்தனள்சிந்தையுவந்தாள்
கன்னியருந்ததிகாரிகைகாண
நன்மகனுக்கிவணல்லணியென்றார். (௧௬)

சங்கவளைக்குயிலைத் † தழிநின்றார்
அங்கணனுக்குரியாருளராவார்
பெண்களினிப்பிறரெங்குளரென்றார்
கண்கள்களிப்பமனங்கள்களிப்பார். (௧௭)

எண்ணிலகோடிபொன்னெல்லையில்கோடி
வண்ணவருங்கலமங்கையர்வெள்ளம்
கண்ணகனாடொடுகோசுயர்தூசும்
பெண்ணினணங்கனையாள்பெறுகென்றார். (௧௮)

* அம்மிமிதித்தலைச் சத்தபதி என்பர் வடநூலார்.
† தழீஇஎன்றது தழியெனக்குறுக்கும் வழிகுறுக்கல்பெற்றது.

நூற்கடலன்னவர்சொற்கடனேக்கி
மாற்கடலன்னமனத்தவளோடும்
* காற்கடல்போற்கருணைக்கடல்பண்டைப்
பாற்கடலன்னதொர்பாயலணைந்தான். (கக)

பங்குனியுத்தரமானபகற்போ
தங்கணிருக்கினிலாயிரநாமச்
சிங்கமணத்தொழில்செய்ததிறத்தால்
மங்கலவங்கிவதிட்டன்வகுத்தான். (க00)

† வள்ளறனக்கிளையோர்கடமக்கும்
எள்ளவில்கொற்றவன்யான்பினளித்த
அள்ளன்மலர்த்திருவன்னவர்தம்மைக்
கொள்ளுமெனத்தமரோடுகுறித்தான். (க0க)

கொய்ந்நறைதாரன் ‡ குசத்துவசப்பேர்
நெய்ந்நிறைவேலவன்மங்கையர்நேர்ந்தார்
மைந்நிறைகண்ணியர்வாணுறைநீரார்
மெய்ந்நிறைமூவரைமூவரும்வேட்டார். (க0உ)

வேட்டவர்வேட்டபின்வேந்தனுமேனாள்
கூட்டியசீர்த்திகொடுத்திலனல்லால்
ஈட்டியமெய்ப்பொருள்யாவுளவெல்லாம்
வேட்டவர்வேட்டவைவேண்டளவீந்தான். (க0ங)

ஈந்தளவில்லதொரின்ப நுகர்ந்தே
ஆய்ந்துணர்கேள்வியருந்தவரோடும்
வேந்தனுமந்நகர்வைகினன்மெள்ளத்
தேய்ந்தனநாள்சிலசெய்ததுரைப்பாம். (க0சு)

உக-வது, கடிமணப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉசுக.

---

* காற்கடல்-காலைவீசுங்கடல்.

† வள்ளறனக்கிளையோரென்பது பரதன்முதன் மூவரை என்க.

‡ குசத்துவன் என்றது சனகற்கிளையானை, அவன் மக்களாகிய மாளவி, ஊர்மிளை, சுதகீர்த்தி என்பாரைப் பரதன்முதலிய மூவரும் வேட்டனரென்க. ஊர்மிளையைச் சனகன்மகளென்பர் வான்மீகரும்.

# ௨௨-வது, பரசுராமப்படலம்.

திருவயோத்திக்கு வரும்வழியில் பரசுராமனைக்கண்டு அவனை வெற்றிகொண்டதைக் குறித்துக்கூறும் படலம்.

தானாவதொர்வகையேநனிசனகன்றருதயலும்
நானாவிதமுறுபோகமுநுகர்கின்றவந்நாள்வாய்
* ஆனாமறைநெறிமாதவமுனிகோசிகனருளிப்
போனான்வடதிசைவாயுயர்பொன்மால்வரைபுக்கான். (௧)

அப்போதினின்முடிமன்னவனணிமாநகர்செலவே
இப்போதுநமணிகந்துணையெழுகென்றினிதிசையாக்
கைப்போதகநிகர்காவலர்குழுவந்துடிகதுவ
ஒப்போதருதேர்மீதினிலினிதேறினனுரவோன். (௨)

தன்மக்களுமருமக்களுநனிதன்கபுறமுவ
மன்மக்களுமயன்மக்களும்வயின்மொய்த்திடமிதிலைத்
தொன்மக்களுமனமுக்குயிர்பிரிவென்பதொர்துயரின்
வன்மைக்கடல்புகவுய்ப்பதொர்வழிபுக்கனன்மறவோன். (௩)

முன்னேநெடுமுடிமன்னவன்முறையிற்செலமிதிலை
நன்மாநகருறைவார்மனநனிபின்செலநடுவே
தன்னேர்புரைதருதம்பியர்தழுவிச்செலமழைவாழ்
மின்னேபுரையிடையாளொடுமினிதேகினன்வீரன். (௪)

ஏகும்மளவையின்வந்தனவலமும்மயிலிடமும்
காகம்முதலியமுந்தியதடைசெய்வனகண்டான்
நாகம்மனனிடையிங்குளதிடையூறெனநடவான்
மாகம்மணியணிதேரொடுநின்றானெறிவந்தான். (௫)

நின்றேநெறியுணர்வானொருநினைவாளனையழையா
நன்றோபழுதுளதோநடுவுரைநீயமென்னக்
குன்றேபுரைதோளானெதிர் † புள்ளின்குறிகொள்வான்
இன்றேவருமிடையூறதுநன்றாய்விடுமென்றான். (௬)

என்னும்மளவினில்வானகமிருள்கீறிடவொளியாய்
மின்னும்படிபுடைவீசியசடையான்மழுவுடையான்
பொன்னின்மலைவருகின்றதுபோல்வானனல்கால்வான்
உன்னுந்தழல்விழியானுருமதிர்கின்றதொருரையான். (௭)

---

* ஆனாமறைநெறி என்பது துவாதசாக்கரமனுவை.
† புள்ளின்குறி-சகுனம்.

கம்பித்தலையெறிநீருறுகலமொத்துலகுலையத்
தம்பித்துயர்திசையானைகடளரக்கடல்சலியா
வெம்பித்திரிதரவானவர்வெருவுற்றிரிதரவோர்
செம்பொற்சிலைதரியாவயின்முகவாளிகடெரிவான். (அ)

விண்கீழுறவென்றோபடிமேல்கீழுறவென்றோ
எண்கீறியவுயிர்யாவையும்யமன்வாயிடவென்றோ
புண்கீறியகுருதிப்புனல்பொழிகின்றனபுரையக்
கண்கீறியகனலான்முனிவியாதென்றயல்கருதோம். (௯)

போரின்மிசையெழுகின்றதொர்மழுவின்சிகைபுகையத்
தேரின்மிசைமலைசூழ்வருகதிருந்திசைதிரிய
நீரின்மிசைவடவைக்கனலெனவோனுறமுடுகிப்
பாரின்மிசைவருகின்றதொர்படிவெஞ்சுடர்படர. (௧௦)

பாழிப்புயமுயர்திக்கிடையடையப்புடைபடரும்
சூழிச்சடைமுடிவிண்டொடவயல்வெண்மதிதோற்ற
ஆழிப்புனலெரிகானிலமாகாயமுமழியும்
ஊழிக்கடைமுடிவிற்றனியுமைகேள்வனையொப்ப. (௧௧)

* அயிர்சுற்றியகடன்மாநிலமடையத்தனிபடரும்
செயிர்சுற்றியபடையானடன்மறமன்னவர்திலகன்
உயிருற்றதொர்மரமாமெனவோராயிரமுயர்தோள்
வயிரப்பணைதுணியத்தொடுவடிவாய்மழுவுடையான். (௧௨)

நிருபர்க்கொருபழிபற்றிடநிலமன்னவர்குலமும்
கருவற்றிடமழுவாள்கொடுகளைகட்டுயிர்கவரா
இருபத்தொருபடிகாலெழுகடலொத்தலையெறியும்
குருதிக்குரைபுனலிற்புகமுழுகித்தனிகுடைவான். (௧௩)

கமையொப்பதொர்தவமுஞ்சுடுகனலொப்பதொர்சினமும்
சமையப்பெரிதுடையானெதிர்தளர்வுற்றிடைதவிரும்
அமையத்துயர்பறவைக்கிளிதாரும்வகைசீறச்
சிமையக்கிரியுருவத்தனிவடிவாளிகடெரிவான். (௧௪)

சய்யம்புகநிமிரக்கடறழும்படிசமைவான்
மய்யின்னுயர்மலைநூறிய † மழுவாளவன்வந்தான்
அய்யன்றனையரிதிற்றருமரசன்னதுகண்டான்
வெய்யன்வர ‡ நிபமென்னைகொலெனவெய்துறுமெல்லை. (௧௫)

---

* அயிர்-நுண்மணல். நீர் என்பாருமுளர்.
† மழுவாளவனென்றது-பரசுராமனை.
‡ நிபமென்றது-எதுவை.

பொங்கும்படையிரியக்கிளர்புருவங்கடைநெரிய
வெங்கண்பொறிசிதறக்கடிதுருமேறெனவிடையாச்
சிங்கம்மெனவுயர்தேர்வருகுமரன்னெதிர்சென்றான்
அங்கண்ணரசவனும்மிவனாரோவெனுமளவில். (கசு)

அரைசன்னவனிடைவந்தினிதாராதனைபுரிவான்
விரைசெய்முடிபடிமேலுறவடிமேலுறவிழலும்
கரைசென்றிலனையானெடுமுடிவின்கனல்கால்வான்
முரைசின்குரல்படவீரனெதிர்நின்றிவைமொழிவான். (கஎ)

இற்றோடியசிலையின்றிறமறிவென்னினியானுன்
பொற்றோள்வலிநிலைசோதனைபுரிவானசையுடையேன்
செற்றோடியதிறலோடொருநினைவுஞ்சிறிதுடையேன்
மற்றோர்பொருளிலையிங்கிதென்வரவென்றனனுரவோன். (கஅ)

அவனன்னதுபகரும்மளவையின்மன்னவனயர்வான்
புவனம்முழுவதும்வென்றொருமுனிவற்கருள்புரிவாய்
சிவனும்மய * னரியும்மலர்சிறுமானிடர்பொருளோ
இவனும்மெனதுயிரும்முனதபயம்மினியென்றான். (ககூ)

விளிவார்விளிவதுதீவினைவிழைவாருழையன்றே
களியாலிவனயர்கின்றனவுளவோகனலுமிழும்
ஒளிவாய்மழுவுடையாய்பொரவுரியாரிடையல்லால்
எளியாரிடைவலியார்வலியென்னாகுவதென்றான். (உ0)

நளிமாதவமுடையாயிதுபிடிநீயெனநல்கும்
தனிநாயகமுலகேழையுமுடையாயிதுதவிராய்
பனிவார்கடல்புடைசூழ்படிபரபாலரையருளா
முனிவாறினைமுனிகின்றதுமுறையோவெனமொழிவான். (உக)

புறனின்றவரிகழும்படிநடுவின்றலைபுணராத்
திறனின்றுயர்வலியென்னதொரறனின்றருசெயலோ
அறனின்றதனிலைநின்றுயர்புகழோன்றுவதன்றே
மறனென்பதுமறவோயிதுவலியென்பதுவலியோ. (உஉ)

சலத்தோடியைவிலனென்மகனையானுயிர்தபுமேல்
உலத்தோடெதிர்தோளாயெனதுறவோடுயிருகுவேன்
நிலத்தோடுயர்கதிர்வானுறநெடியாயுனதடியேன்
குலத்தோடறமுடியேலிதுகுறைகொண்டனெனென்றான். (உங)

* அரி-இந்திரன், திருமாலென்பாருமுளர், ஸ்ரீராமபிரானே யவனாதலால் அது பொருந்தாதென்றொழிக்க.

என்னவடிவிழுவானேயுமிகழாவெரிவிழியா
பொன்னூர்கலேயணிவாளெதிர்புகுவாணிலேயுணராத்
தன்னலொருசெயலின்மையைநினையாவுயிர்தளரா
மின்னலயர்வுறும்வாளரவெனவெய்துறலுற்றான். (உச)

மானம்முடைமுடிமன்னவன்மதிசோர்வுறன்மதியான்
தானந்நிலேயுறுவானுறுவினேயுண்டதுதவிரான்
* ஆனம்முடையுமையண்ணலேயந்நாளுறுசிலேதான்
ஊனம்முளதன்மேனிலேசேணியெனவுரைப்பான். (உரு)

ஒருகால்வருகதிராமெனவொளிகால்வளைவுலேயா
வருகார்தவழ்வடமேருவின்வலிசால்வளைவையும்
அருகாவினைபுரிவானுளனவனலமைவனதாம்
இருகார்முகமுளயாவையுமேலாதனமேனாள். (உசு)

வேறு.

ஒன்றினையுமையாள்கேள்வனுவந்தனன்மற்றையொன்றை
நின்றுலகளந்தநேமிநெடியமாலெறியிற்கொண்டான்
என்றிதுவுணர்ந்தவிண்ணோரிரண்டினும்வன்மையெய்தும்
வென்றியதியாவதென்றுவிரிஞ்சனைவினவநாள். (உஎ)

சீரிதுதேவர்தங்கள்சிந்தனையென்பதுன்னி
வேரியங்கமலத்தோனுமியையவேதோர்விநயந்தன்னல்
யாரினுமுயர்ந்த † மூலத்தொருவராமிருவர்தம்மை
மூரிவெஞ்சிலேமேவிட்டுமொய்யமர்மூட்டிவிட்டான். (உஅ)

இருவருமிரண்டுவில்லுமேற்றினருலகமேழும்
வெருவரத்திசைகள்பேரவெங்கனல்பொங்கமென்மேல்
செருமலேகின்றபோழ்திற்றிரிபுரமெரித்ததேவன்
வரிசிலேயிற்றதாகமற்றவன்முனிந்துமன்றே. (உகூ)

மீட்டும்போர்தொடங்கும்வேலேவிண்ணவர்விலக்கவல்வில்
நீட்டினனன்றேவர்கோன்கைநெற்றியிற்கண்ணனன்வெற்றி
காட்டியகரியமாலுங்கார்முகந்தன்னேப்பாரில்
ஈட்டியதவத்தின்மிக்கவிரிசிகற்கீந்துபோனான். (ஙo)

இரிசிகனெந்தைக்கீய ‡ வெந்தையுமெனக்குத்தந்த
வரிசிலேயிதுநீநொய்தின்வாங்குதியாயின்மன்ன
குரிசில்கணின்னொடொப்பாரில்லேயான்குறித்தபோரும்
புரிகிலெனின்னேடின்னம்புகல்வதுகேட்டியென்றான். (ஙக)

* ஆனம் என்றது ஒரு வாச்சியவிசேடம்.

† மூலத்தொருவராமிருவரென்றதுமும்மைப்பெருந்தேவரிருவரை.

‡ எந்தை என்றது சமதக்கினியை.

ஊனவில்லிறுத்தமொய்ம்பைநோக்குவதாக்கமன்றால்
* மானவமற்றுங்கேளாய்வழிப்பகையுடையதும்பால்
ஈனமிலெந்தைசீற்றநீக்கினனென்னமுன்னோர்
† தானவனனையமன்னன்கொல்லயான்சலித்துமன்னே. (௩௨.)

மூவெழுமுறைமைபாரின்முடியுடைவேந்தையெல்லாம்
மேவெழுமழுவின்வாயால்வேரறக்களைகட்டன்னோர்
‡ ஊறெழுகுருதிவெள்ளத்துறையிடைமுறையினெந்தைக்
காவனகடன்கணேர்ந்தேனருஞ்சினமடக்கிப்போந்தேன். (௩௩)

உலகெலா § முனிவற்கீந்தேனுறுபகையொடுக்கிப்போந்தேன்
அலகின்மாதவங்கள்செய்தென்னருவரையிருந்தேனண்டைச்
சிலையைநீயிறுத்தவோசைசெவியுறச்சீறிவந்தேன்
மலைகுவென்வல்லையாகில்வாங்கிடித்தனுவையென்றான். (௩௪)

என்றனனென்னநின்றவிராமனுமுறுவலெய்தி
நன்றொளிர்முகத்தனாகிநாரணன்வலியினாண்ட
வென்றிவிற்றருகவென்னக்கொடுத்தனன்வீரன்கொண்டத்
துன்றிருஞ்சடையோனஞ்சத்தோளுறவாங்கிச்சொல்லும். (௩௫)

பூதலத்தரசையெல்லாம்பொன்றுவித்தனையென்றாலும்
வேதவித்தாயமேலோன்மைந்தனீவிரதம்பூண்டாய்
ஆதலிற்கொல்லலாகாதம்பிதுபிழைப்பதன்றால்
யாதிதற்கிலக்கமாவதியம்புதிவிரைவினென்றான். (௩௬)

வேறு.

நீதியாய்முனிந்திடேனீயிங்கியாவர்க்கும்
ஆதியானறிந்தனெனலங்கனேமியாய்
வேதியாவிறுவதேயன்றி $ வெண்மதிப்
பாதியான்பிடித்தவில்பற்றப்போதுமோ. (௩௭)

பொன்னுடைவனைகழற்பொலங்கொடாளினாய்
மின்னுடைநேமியானதன்மெய்ம்மையால்
என்னுளதுலகினுக்கிடுக்கண்யான்றந்த
உன்னுடைவில்லுமுன்னுரத்துக்கீடன்றால். (௩௮)

எய்தவம்பிடைபழுதெய்திடாமலென்
செய்தவம்யாவையுஞ்சிதைக்கவேயெனக்
கய்யவனெகிழ்தலுங்கணையுஞ்சென்றவன்
மய்யறுதவமெலாம்வாரிமீண்டதே. (௩௯)

---

* மானவனென்பது மனுவின்வழி வந்தானென்பதனை. † தானவனனையமன்னன்-கார்த்தவீரியன். ‡ ஊறு-ஊனே. § முனிவற்கென்றது காசிபனை. $ வெண்மதிப்பாதியானென்றது ஒற்றைக்கலைபுனைந்தசிவனை.

எண்ணியபொருளெலாமினிதுமுற்றுக
மண்ணியமணிநிறவண்ணவண்டுழாய்க்
கண்ணியயாவர்க்குங்களைகணாகிய
புண்ணியவிடையெனத்தொழுதுபோயினான். (சo)

அழிந்தவன்போனபினமல * னையுணர்
வொழிந்தனனுயிருலைந்துருகுதாதையைப்
பொழிந்தபேரன்பினாற்றொழுதுமுன்புபுக்
கிழிந்தவான்றுயர்க்கடற்கரைநின்றேற்றினான். (சக)

வெளிப்படுமுணர்வினன்விழுமநீங்கியே
தளிர்ப்புறுமதகரித்தானையாளிடை
குளிர்ப்பருந்துயர்க்கடற் † கோடுகண்டவன்
களிப்பெனுங்கரையிலாக்கடலுளாழ்ந்தனன். (சஉ)

பரிவறுசிந்தையப்பரசுராமன்கை
வரிசிலைவாங்கியோர்வசையைநல்கிய
ஒருவனைத்தழுவிநின்றுச்சிமோந்துதன்
அருவியங்கண்ணெனுங்கலசமாட்டினான். (சங)

பொய்ம்மையிற்சிறுமையிற்புரிந்தவாண்டொழில்
மும்மையினுலகினான்முடிக்கலாவதோ
மெய்ம்மையிச்சிறுவனே ‡ வினைசெய்தோர்களுக்
கிம்மையுமறுமையுமீயுமென்றனன். (சச)

பூமழைபொழிந்தனர்புகுந்ததேவருள்
வாமவேல்வருணனைமானவெஞ்சிலை
சேமியென்றுதவித்தன்சேனையார்த்தெழ
நாமநீரயோத்திமாநகரநண்ணினான். (சரு)

நண்ணினரின்பத்துவைகுநாளிடை
மண்ணுறுமுரசினம்வயங்குதானையவ்
அண்ணலப்பரதனைநோக்கி § யாண்டகை
எண்ணருந்தகையதோர்பொருளியம்புவான். (சசு)

ஆணைநின்றன்முதுதாதையையநிற்
காணியவிழைவதோர்கருத்தனாதலாற்
கேணியில்வளைமுரல்கேகயம்புகப்
பூணொளிர்மார்பநீபோதியென்றனன். (சஎ)

---

* ஐயுணர்வென்றது மெய்வாய்கண் மூக்குச்செவி என்பனவற்றை.
† கோடென்றது கரையை. ‡ வினையீண்டு சற்கருமத்தை.
§ ஆண்டகை என்றது தயரதனை.

ஏவலுமிறைஞ்சிப்போ * யிராமன்சேவடிப்
பூவினைச்சென்னியிற்புனைந்துபோயினான்
ஆவியங்கவனலதில்லையாதலான்
ஓவலிலுயிர்பிரிந்துடல்சென்றென்னவே. (சஅ)

உளைவிரிபுரவித்தேருதாசித்தென்றெனும்
வளைமுரசனையான்மருங்குபோதப்போய்
இளையவன்றன்னொடுமேழுநாளிடை
நளிர்புனற்கேகயநாடுநண்ணினான். (சகூ)

ஆனவன்போனபின்னரசர்கோமகன்
ஊனமில்பேரரசுய்க்குநாளிடை
வானவர்செய்தமாதவமுண்டாதலான்
மேனனிநிகழ்ந்தனவிளம்புவாமரோ. (ரு0)

உஉ-வது, பரசுராமப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கசஉ0.

---

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

பாலகாண்டம்-முற்றிற்று.

---

* இராமன்வனத்திற் புகற்கிடமாதல் வானவர்செய்தமாதவமாதலா லிங்ஙனங்கூறினார்.

# பாலகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத் கம்பராமாயணம்

இரண்டாவது

# அயோத்தியாகாண்டம்.

இது

காரப்பங்காடு வித்வான்

கோபாலாசாரியர் மாணுக்கராகிய

தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்கார்

பரிசோதித்தது

---


அ. இரங்கசாமி முதலியார் சன்ஸ்

அவர்களது

சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1928

# அயோத்தியாகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

## இரண்டாவது

# அயோத்தியாகாண்டம்.

## முதலாவது மந்திரப்படலம்.

காப்பு.

வானின்றிழிந்துவரம்பிகந்தமாபூதத்தின்வைப்பெங்கும்
ஊனுமுயிருமுணர்வும்போலுள்ளும்புறத்துமுளனென்ப
* கூனுஞ்சிறியகோத்தாயுங்கொடுமையிழைப்பக்கோற்றுறந்து
கானுங்கடலுங்கடந்திமையோரிடுக்கண்காத்தகழல்வேந்தை. (௧)

நூல்.

மண்ணுறுமுரசினமழையினார்ப்புறப்
பண்ணுறுபடர்சினப்பருமயானையான்
கண்ணுறுகவரியின்கற்றைசுற்றுற
எண்ணுறுசூழ்ச்சியினிருக்கையெய்தினான். (௨)

புக்கபின்னிருபரும்பொருவில்சுற்றமும்
பக்கமும்பெயர்கெனப்பரிவினீக்கினான்
ஒக்கநின்றுலகளித்தியோகினெய்திய
சக்கரத்தவனெனத்தமியனாயினான். (௩)

சந்திரற்குவமைசெய்தரளவெண்குடை
அந்தரத்தளவுநின்றளிக்குமாணையான்
இந்திரற்கிமையவர்குருவையேய்ந்ததன்
மந்திரக்கிழவரைவருகென்றேவினான். (௪)

பூவருபொலன்கழற்பொருவின்மன்னவன்
காவலிலாணையின்கடவுளாமெனத்
தேவருமுனிவருமுணருந்தேவர்கள்
மூவரினல்வராமுனிவனெய்தினான். (௫)

---

* கூன் என்றது மந்தரையை ஆகுபெயர், சிறியகோத்தா என்றது கைகேசியை, கழல்வேந்தை என்றது சீராமனை.

குலமுதற்றொன்மையுங்கலையின்குப்பையும்
பலமுதற்கேள்வியும்பயனுமெய்தினார்
நலமுதனலியினுநடுவுநோக்குவார்
சலமுதலறுத்தருந்தருமந்தாங்கினார். (௬)

வேறு.

உற்றதுகொண்டுமேல்வந்துறுபொருளுணருங்கோளார்
மற்றதுவினையின்வந்ததாயினுமாற்றலாற்றும்
பெற்றியர்பிறப்பின்மேன்மைப்பெரியவராரியநூலும்
* கற்றவர்மானநோக்கிற்கவரிமாவனையநீரார். (௭)

காலமுமிடனுமேற்றகருவியுந்தெரியக்கற்ற
நூலுறநோக்கித்தெய்வநுணித்தறங்குணித்தமேலோர்
சீலமும்புகழ்க்குவேண்டுஞ்செய்கையுந்தெரிந்துகொண்டு
† பால்வருமுறுதியாவுந்தலைவற்குப்பயக்குநீரார். (௮)

தம்முயிர்க்குறுதியெண்ணார்தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத்தாங்கிநீதிவிடாதுநின்றுரைக்கும்வீரர்
செம்மையிற்றிறம்பல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்காலம்
மும்மையுமுணரவல்லாரொருமையேமொழியுநீரார். (௯)

வேறு.

நல்லவுந்தீயவுநாடிநாயகற்
கெல்லையின்மருத்துவனியல்பினெண்ணுவார்
ஒல்லைவந்துறுவனவுற்றபெற்றியின்
றொல்லைநல்வினையெனவுதவுஞ்சூழ்ச்சியார். (௧௦)

அறுபதினாயிரரென்னுமாண்டகைக்
குறுதியிலான்றிவற்குணர்வென்றுன்னலாம்
பெறலருஞ்சூழ்ச்சியர்திருவின்பெட்பினர்
மறிதிரைக்கடலெனவந்துசுற்றினார். (௧௧)

முறைமையினெய்தினர் ‡ முந்தியந்தமிழ்
அறிவனைவணங்கித்தம்மரசைக்கைதொழு
திறையிடைவரன்முறையேறியேற்றசொல்
துறையறிபெருமையானருளுஞ்சூடினார். (௧௨)

அன்னவரருளைந்திருந்தவாண்டையில்
மன்னனுமவர்முகமரபினோக்கினான்

* மானத்திற்கவரிமாவொடுவமைகூறினார் "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா" என்றது மிப்பெற்றி நோக்கி.

† பால் என்றது ஊழை.

‡ அந்தமிலறிவனென்றது வசிட்டமுனிவனை.

உன்னியதரும்பெறலுறுதியொன்றுள
தென்னுணர்வனையநீரினிதுகேட்கென. (கங)

* வெய்யவன்குலமுதல்வேந்தர்மேலவர்
செய்கையினொருமுறைதிறம்பலின்றியே
வையம்யானுண்டவாண்டுங்கண்மாட்சியால்
அய்யமிலறுபதினாயிரம்மரோ. (கச)

கன்னியர்க்கமைவருங்கற்பின்மாநிலம்
தன்னையித்தகைதரத்தருமங்கைதர
மன்னுயிர்க்குறுவதேசெய்துவைகினேன்
என்னுயிர்க்குறுவதுஞ்செய்யவெண்ணினேன். (கரு)

விரும்பியமூப்பெனும்வீடுகண்டயான்
இரும்பியலனந்தனுமிசைந்தயானையும்
† பெரும்பெயர்க்கிரிகளும்பெயரத்தாங்கிய
அரும்பொறையினிச்சிறிதாற்றவாற்றலேன். (கசு)

‡ நங்குலக்குரவர்கணவையினீங்கினார்
தங்குலப்புதல்வரேதரணிதாங்கப்போய்
வெங்குலப்புலன்கெடவீடுநண்ணினார்
எங்குலப்புறவரென்றெண்ணிநோக்குகேன். (கஎ)

வெள்ளநீருலகினில்விண்ணினாகரில்
தள்ளரும்பகையெலாந்தவிர்த்துநின்றயான்
கள்ளரிற்கரந்துறை § காமமாதியா
உள்ளுறைபகைஞருக்கொதுங்கிவாழ்வெனோ. (கஅ)

$ பஞ்சிமென்றளிரடிப்பாவைகோல்கொள
வெஞ்சினத்தவுணர்தேர்பத்தும்வென்றவேற்
கெஞ்சலின்மனமெனுமிழுதையேறிய
அஞ்சுதேர்வெல்லுமீதருமையாவதோ. (ககூ)

ஒட்டியபகைஞர்வந்துருத்தபோரிடைப்
பட்டவரல்லரேற்பரமஞானம்போய்த்
தெட்டவரல்லரேற்செல்வமீண்டென
விட்டவரல்லரேல்யாவர்வீடுளார். (உ0)

---

* வெய்யவன் குலமுதல் வேந்தரென்றது மனுத்தொடக்கமான வரசரை. † பெரும்பெயர்க்கிரிகளென்றது குலாசலங்களெட்டினை.

‡ குலக்குரவரென்றது மனுத்தொடக்கமானவரை.

§ காமமாதியாவென்றது காமம் வெகுளிமயக்கங்களை.

$ பஞ்சின்மென்றளிரடிப்பாவையென்றது கைகேசியை.

* இறப்பெனுமெய்ம்மையையிம்மையாவர்க்கும்
மறப்பெனுமதனின்மேற்கேடுமற்றுண்டோ
துறப்பெனுந்தெப்பமேதுணைசெயாவிடில்
பிறப்பெனும்பெருங்கடல்பிழைக்கலாகுமோ. (௨௧)

அருஞ்சிறப்பமைவருந்துறவுமவ்வழி
தெரிஞ்சுறவெனமிகுந்தெளிவுமாய்வரும்
பெருஞ்சிறகுளவெனிற்பிறவியென்னுமிவ்
விருஞ்சிறைகடத்தலினினியதியாவதே. (௨௨)

இனியதுபோலுமிவ்வரசையெண்ணுமோ
துனிவருநலனெனத்தொடர்ந்துதோற்கலா
நனிவரும்பெரும்பகைநவையினீங்கியத்
தனியரசாட்சியிற்றாழுமுள்ளமே. (௨௩)

உம்மையானுடைமையினுலகம்யாவையும்
செம்மையினோம்பிநல்லறமுஞ்செய்தனென்
இம்மையினுதவிநல்லிசைநடாயினீர்
அம்மையுமுதவுதற்கமையவேண்டுமால். (௨௪)

† இழைத்ததீவினையையுங்கடக்கவெண்ணுதல்
தழைத்தபேரருளுடைத்தவத்தினுக்குமேல்
குழைத்ததோரமுதுடைக்கோரநீக்கிவே
றழைத்ததீவிடத்தினையருந்தலாகுமோ. (௨௫)

கச்சையங்கடகரிக்கழுத்தின்கண்ணுறப்
பிச்சமுங்கவிகையும்பெய்யுமின்னிழல்
நிச்சயமன்றெனினெடிதுநாளுண்ட
எச்சிலைநுகருவதின்பமாகுமோ. (௨௬)

மைந்தரையின்மையில்வரம்பில்காலமும்
நொந்தனனிராமனென்னோவைநீக்குவான்
வந்தனனினியவன்வருந்தயான்பிழைத்
துய்ந்தனன்போவதோருறுதியெண்ணினேன். (௨௭)

இறந்திலன்செருக்களத்திராமன்றாதைதான்
அறந்தலைநிரம்பமூப்படைந்தபின்னரும்
துறந்திலனென்பதோர்சொல்லுண்டானபின்
பிறந்திலனென்பதிற்பிறிதுண்டாகுமோ. (௨௮)

---

* இறப்பெனு மெய்ம்மையை மறப்பெனுமதனின்மேல் இம்மை யாவர்க்குங் கேடு மற்றுண்டோ எனக்கூட்டுக.

† தவத்திற்கு அருள் சிறந்த வுறுப்பாகலின் "பேரருளுடைத்தவ" மென்றார்.

பெருமகனென்வயிற்பிறக்கச்சிதையாம்
திருமகண்மணவினைதெரியக்கண்டயான்
அருமகனிறைகுணத்தவனிமாதெனும்
ஒருமகண்மணமுங்கண்டுவப்பதாயினேன். (உக)

நிவப்புறுநிலனெனுநிரம்புநங்கையும்
சிவப்புறுமலர்மிசைச்சிறந்தசெல்வியும்
உவப்புறுகணவனையுயிரினெய்திய
தவப்பயன்றுய்ப்பதுதருமமன்றரோ. (௩0)

ஆதலாலிராமனுக்கரசைநல்கியிப்
பேதைமைதாய்வரும்பிறப்பைநீக்குவான்
மாதவந்தொடங்கியவனத்தைநண்ணுவேற்
கியாதுநுங்கருத்தெனவினையகூறினான். (௩க)

வேறு.

திரண்டதோளினனிப்படிச்செப்பலுஞ்சிந்தை
புரண்டுமீதிடப்பொங்கியவுவகையராங்கே
வெருண்டுமன்னவன்பிரிவெனும்விம்முறுநிலையால்
* இரண்டுகன்றினுக்கிரங்குமோராவெனவிருந்தார். (௩உ)

அன்னராயினுமரசனுக்கதுவலதுறுதி
பின்னரில்லெனக்கருதியும்பெருநிலவரைப்பில்
மன்னுமன்னுயிர்க்கிராமனின்மன்னவரில்லை
என்னவுன்னியும்விதியதுவலியினுமிசைந்தார். (௩௩)

இருந்தமந்திரக்கிழவரதெண்ணமுந்தன்பால்
பரிந்தசிந்தையம்மன்னவன்கருதியபயனும்
பொருந்துமன்னுயிர்க்குறுதியும்பொதுவுறநோக்கித்
தெரிந்துநான்மறைத் † திசைமுகன்றிருமகன்செப்பும். (௩௪)

திருபதின்குலமன்னவர்நேமிபண்டுருட்டிப்
பெருமையெய்தினர்யாவரேயிராமனைப்பெற்றார்
கருமமேயிதுகற்றுணர்ந்தோய்க்கினிக்கடவ
தருமமும்மிதுதக்கதேதினைத்தனைதகவோய். (௩௫)

‡ புண்ணியந்தொடர்வேள்விகள்யாவையும்புரிந்த
அண்ணலேயினியருந்தவமியற்றவுமடுக்கும்

---

* சீராமனரசெய்தலானுவகையும், அரசன்பிரிவான் வருந்துதலு முண்மையின் "இரண்டுகன்றினுக்கிரங்குமோரா" வென்றமைச்சர்க்கு வமை கூறினார்.

† திசைமுகன் றிருமகனென்றது வசிட்டமுனிவனை.

‡ வேள்விபுண்ணியம் பயத்தலின் "புண்ணியந்தொடர்வேள்வி" என்றார்.

வண்ணமேகலைநிலமகண்மற்றுனைப்பிரிந்து
கண்ணிழந்திலளெனச்செயுநீதந்தகழலோன். (௩௬)

புறத்துநாமொருபொருளினிப்புகல்கின்றதெவனோ
அறத்தின்மூர்த்திவந்தவதரித்தானென்பதல்லால்
* பிறத்தியாவையுங்காத்தவைபின்னுறத்துடைக்கும்
திறத்துமூவருந்திருத்தியதிருத்துமத்திறலோன். (௩௭)

பொன்னுயிர்த்தபூமடந்தையும்புவியெனுந்திருவும்
இன்னுயிர்த்துணையிவனெனநினைக்கின்றவிராமன்
தன்னுயிர்க்கென்கைபுல்லிதுதற்பயந்தெடுத்த
உன்னுயிர்க்கெனநல்லன்மன்னுயிர்க்கெலாமுரவோய். (௩௮)

வாரமென்னினிப்பகர்வதுவைகலு † மனையான்
பேரினால்வருமிடையுறுபெயர்கின்றபயத்தால்
வீரநின்குலமைந்தனைவேதியர்முதலோர்
யாரும்யாஞ்செய்தநல்லறப்பயனெனவிருப்பார். (௩௯)

மண்ணினுநல்லண்மலர்மகள்கலைமகள்கலையூர்
பெண்ணினுநல்லள்பெரும்புகழ்ச்சனகியோநல்லள்
கண்ணினுநல்லன்கற்றவர்கற்றிலாதவரும்
‡ உண்ணுநீரினுமுயிரினுமவனையேயுவப்பார். (௪0)

மனிதர்வானவர்மற்றுளாரறங்கள்காத்தளிப்பார்
இனியிம்மன்னுயிர்க்கிராமனிற்சிறந்தவரில்லை
அனையதாதலினரசநிற்குறுபொருளறியில்
புனிதமாதவமல்லதொன்றில்லெனப்புகன்றான். (௪௧)

மற்றவன்சொன்னவாசகங்கேட்டலுமகனைப்
பெற்றவன்றினும் § பிஞ்ஞகன்பிடித்தவப்பெருவில்
இற்றவன்றினுமெறிமழுவாளவனிழுக்கம்
உற்றவன்றினும்பெரியதோருவகையனானான். (௪௨)

அனையதாகியவுவகையன்கண்கணீரரும்ப
முனிவன்மாமலர்ப்பாதங்கண்முறைமையினிறைஞ்சி
இனிய $ சொல்லினையெம்பெருமானருள்விழியின்
தனியனானிலந்தாங்கியதவற்கிதுதகாதோ. (௪௩)

---

* பிறப்பித்து என்றது பிறத்தென விவ்விகுதிதொகுத்தல் பெற்றது.

† தாரகமந்திரமாதலின் "அனையான்பேரினால் வருமிடையுறு பெயர்கின்ற பயத்தால்" என்றார். இடையூறு என்பது குறுக்கும் வழி குறுக்கல் பெற்றது.

‡ உண்ணுநீரென்றது நீரோடுகூடிய சோற்றினை உயிரினும் என்றது பிராணாயாமத்தை.

§ பிஞ்ஞகனென்றது சிவனை, மழுவாளவன் என்றது பரசுராமனை.

$ பாலைக்கு நிலமின்மையின் நானிலமென்றார்.

எந்தைநீயுவந்திதஞ்சொலவெங்குலத்தரசர்
அந்தமில்லரும்பெரும்புகழவனியினிறவி
முந்துவேள்வியுமுடித்துத்தம் * மிருவினைமுடித்தார்
வந்ததவ்வருளெனக்குமென்றுரைசெய்துமகிழ்ந்தான். (சச)

பழுதின்மாதவன்பின்னென்றும்பணித்திலனிருந்தான்
முழுதுமெண்ணுறுமந்திரக்கிழவர்தம்முகத்தால்
எழுதிநீட்டிய † விங்கிதமிறைமகற்கேற
தொழுதகையினன்சுமந்திரன்முன்னின்றுசொல்லும். (சரு)

உறத்தகும்மரசிராமற்கென்றுவக்கின்றமனத்தைத்
துறத்திநீயெனுஞ்சொற்சுடுநின்குலத்தொல்லோர்
மறத்தல்செய்கிலாத்தருமத்தைமறப்பதும்வழக்கன்
றறத்திணூடங்கினிக்கொடியெனலாவதொன்றியாதே. (சசு)

புரைசைமாக்கரிநிருபர்க்கும்புரத்துறைவோர்க்கும்
உரைசெய்மந்திரக்கிழவர்க்குமுனிவர்க்குமுன்னாம்
முறைசமார்ப்பநின்முதன்மணிப்புதல்வனைமுறையால்
அரைசனாக்கிப்பின் ‡ னப்புறத்தடுத்ததுபுரிவாய். (சஎ)

என்றவாசகஞ்சுமந்திரனியம்பலுமிறைவன்
நன்றுசொல்லினைநம்பியைநாளைநீர்முடிசூட்டி
நின்றுநின்றதுசெய்வதுவிரைவினின்மேய
சென்றுகொண்டணைதிருமகள்கொழுநனையென்றான். (சஅ)

அலங்கன்மன்னனையடிதொழுதவன்மனமனையான்
விலங்கன்மாளிகைவீதியில்விரைவொடுசென்றான்
தலங்கள்யாவையும்பெற்றனன்றனனத்தரிப்பான்
பொலன்கொடேரொடுமிராகவன்றிருமனைபுக்கான். (சகூ)

பெண்ணினின்னமுதன்னவடன்னொடும்பிரியா
வண்ணவெஞ்சிலைக்குரிசிலுமருங்கினிதிருப்ப
அண்ணலாண்டிருந்தா § னழகருநறவெனத்தன்
கண்ணுமுள்ளமும்வண்டெனக்களிப்புறக்கண்டான். (ருO)

கண்டுகைதொழுதையவிக்கடலிடைக்கிழவோன்
உண்டொர்காரியம்வருகெனவுடைத்தனனெனலும்
$ புண்டரீகக்கட்புரவலன்பொருக்கெனவெழுந்தோர்
கொண்டல்போலவன்கொடிநெடுந்தேர்மிசைக்கொண்டான். (ருக)

* இருவினை-நல்வினை தீவினைகளை. † இங்கிதம்-குறிப்புமொழி.
‡ அப்புறத்தடுத்ததுபுரிதல்-துறவறநிலையை மேற்கோடலை. § அழகினை நறவென்றமையான் அழகினை "அருநற" வென்றார். $ புண்டரீகக்கட்புரவலன்-செந்தாமரைக் கண்ணையுடையனாகிய சீராமன்,

முறையின்மொய்ம்முகிலெனமுரசார்த்திடமடவார்
இறைகழன்றசங்கார்த்திட * விமையவரெங்கள்
குறைமுடிந்ததென்றார்த்திடக்குஞ்சியைச்சூழ்ந்த
நறையலங்கல்வண்டார்த்திடத்தேர்மிசைநடந்தான். (௫௨)

பணைநிரைந்தனபாட்டொலிநிரைந்தனவனங்கள்
கணைநிரைந்தனநாணொலிகறங்கின † நிறைப்பேர்
அணைநிரைந்தனவறிவெனும்பெரும்புனலனையார்
பிணைநிரைந்தெனப்பரந்தனர்நாணமும்பிரிந்தார். (௫௩)

நீளெழுத்தொடர்வாயினுங்குழையொடுநெகிழ்ந்த
‡ ஆளகத்தினோடாமியத்தலத்தினுமலர்ந்த
வாளரத்தவேல்வண்டொடுகெண்டைகண்மயங்கச்
சாளரத்தினும்பூத்தனதாமரைமலர்கள். (௫௪)

மண்டலந்தருமதிகெழுமழைமுகிலனைய
§ அண்டர்நாயகன்வரைபுரையகலத்துளலங்கல்
தொண்டைவாய்ச்சியர்நிறையொடுநாணொடுந்தொடர்ந்த
$ கெண்டையும்முளகிளைபயில்வண்டொடுங்கிடந்த. (௫௫)

சரிந்தபூவுளமழையொடுகலையுறத்தாழ்வ
பரிந்தபூவுளபணிக்கடைமுத்தினம்படைப்ப
எரிந்தபூவுளவிளமுலையிழையிடைநுழைய
விரிந்தபூவுளமீனுடைவானின்றும்வீழ்வ. (௫௬)

வள்ளுறைகழித்தொளிர்வனவாணிமிர்மதியம்
தள்ளுறச்சுமந்தெழுதருந்தமணியக்கொம்பில்
புள்ளிநுண்பனிபொடிப்பனபொன்னிடைப்பொதிந்த
எள்ளுடைப்பொரிவிரவினவுள ¶ சிலவிளநீர். (௫௭)

ஆயதவ்வழிநிகழ்தரவாடவரெல்லாம்
தாயைமுன்னியகன்றெனநின்றுயிர்துயிர்ப்பத்
தூயதம்பியுந்தானுமச்சுமந்திரன்றேர்மேல்
போயகங்குளிர்புரவலனிருந்துழிப்புக்கான். (௫௮)

---

* இமையாநாட்டமுடையாரை இமையவரென்றது மரூஉவழுவமைதி.

† நிறைப்பேரணை நிரைந்தன வறிவெனும்பெரும்புனல் - கற்பாகிய பெரியதோரணையினின்றும் அறிவெனப்படும் பெரும்புனல்.

‡ அளகமென்றது ஆளகமெனநீட்டும் வழிநீட்டல் பெற்றது.

§ 'அண்டர்நாயகனென்றார்' அயர்வருமமரர்கட்கிறைவனாகலின்.

$ கெண்டை-கண்ணினை உவமித்தது.

¶ சில-இரண்டினை, இதனைச் 'சில்காழல்குல்' என்புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

மாதவன்றனைவரன்முறைறவணங்கி * வாளுழவன்
பாதபங்கயம்பணிந்தனன்பணிதலுமனையான்
காதல்பொங்கிடக்கண்பனியுகுத்திடக்கனிவாய்ச்
சீதைகொண்கனைத்திருவுறைமார்பகஞ்சேர்த்தான். (௫௯)

நலங்கொண்மைந்தனைத்தழுவினனென்பதென்னனிநீர்
நிலங்கடாங்குறுநிலையினைநிலையிடநினைந்தான்
விலங்கலன்னதிண்டோளையுமெய்த்திருவிருக்கும்
அலங்கன்மார்பையுந்தனதுதோண்மார்புகொண்டளந்தான். (௬௦)

ஆண்டுதன்மருங்கிரீஇயுவந்தன்புறநோக்கிப்
பூண்டபோர் † மழுவுடையவனெடும்புகழ்குறுக
நீண்டதோளையநிற்பயந்தெடுத்தயானின்னை
வேண்டியெய்திடவிரைவதொன்றுளதெனவிளம்பும். (௬௧)

ஐயசாலவுமலசினனரும்பெருமூப்பும்
வெய்யதாயதுவியலிடப்பெரும்பரம்விசித்து
தொய்யன்மாநிலச்சுமையுறுசிறைதுறந்தினியான்
உய்யலாவதோர்நெறிபுகவுதவிடவேண்டும். (௬௨)

‡ உருமைமைந்தரைப்பெறுகின்றதுறுதுயர்நீங்கி
§ இருமையும்பெறற்கென்பதுபெரியவரியற்கை
தருமமன்னநிற்றந்தயான்றளர்வதுதகவோ
கருமமென்வயிற்செய்யிலென்கட்டுரைகோடி. (௬௩)

மைந்தநங்குலமாபினின்மணிமுடிவேந்தர்
தந்தமக்களேகடைமுறைநெடுநிலந்தாங்க
$ ஐந்தொடாகிய ¶ முப்பகைமருங்கறவகற்றி
உய்ந்துபோயினரூழிநின்றெண்ணினுமுலவார். (௬௪)

முன்னையூழ்வினைப்பயத்தினுமுற்றியவேள்விப்
பின்னையெய்தியநலத்தினுமரிதினிற்பெற்றேன்
இன்னம்யானிந்தவரசியலிடும்பையனென்றால்
நின்னையீன்றுளபயத்தினினிரம்புவதியாதோ. (௬௫)

ஒருத்தலைப்பரத்தொருத்தலைப்பங்குவினூர்தி
எருத்தினீங்குநின்றியல்வரக்குழைந்திடருழக்கும்
வருத்தநீங்கியவ்வரம்பறுதிருவினைமருவும்
அருத்தியுண்டெனக்கையநீதருளிடவேண்டும். (௬௬)

* வாளுழவன்-ஈண்டு-தயரதனை. † மழுவுடையவன்-பரசுராமனை.
‡ உருமை-உருமைக்கடனை.
§ இருமை-இம்மை, மறுமைகளை.
$ ஐந்தென்னுந் தொகைக்குறிப்பு, இந்திரியமைந்தனையுமென்க.
¶ முப்பகை-காமம், வெகுளி, மயக்கங்களை.

ஆளுநன்னெறிக்கமைவருமமைவினனாகி
நாளு * நங்குலநாயக † னறைவிரிகமலத்
தாளினல்கியகங்கையைத்தந்துதந்தையரை
மீள்வில்லின்னுலகேற்றிருனெருமகன்மேனாள். (சுஎ)

மன்னரானவரல்லர்மேல்வானவர்க்கரசாம்
பொன்னின்வார்கழற்புரந்தரன்போலியரல்லர்
பின்னுமாதவர்தொடங்கினோன்பிழைத்தவர்பிற ‡ ரார்
சொன்மருமகற்பெற்றவரருந்துயர் துறந்தார். (சுஅ)

அனையதாதலினருந்துயர்ப்பெரும்பரமாசன்
வினையினென்வயினவைத்தனனெனக்கொளவேண்டாம்
புனையுமாமுடிபுனைந் § திந்நல்லறம்புரக்க
நினையல்வேண்டும்யானின்வயிற்பெறுவதீதென்றான். (சுகூ)

தாதையப்பரிசுரைசெயத் $ தாமரைக்கண்ணன்
காதலுற்றிலனிகழ்ந்திலன்கடனிதென்றுணர்ந்தும்
யாதுகொற்றவனேவியததுசெயலன்றோ
நீதியெற்கெனநினைந்துமப்பணிதலைநின்றான். (எ0)

குரிசில்சிந்தையைமனக்கொண்டகொற்றவெண்குடையான்
தருதியிவ்வரமெனச்சொலியுயிருறத்தழுவிச
சுருதியன்னதன்மந்திரசுற்றமுஞ்சுற்றப்
பொருவின்மேருவும்பொருவருங்கோயில்போய்ப்புக்கான். (எக)

நிவந்த ¶ வந்தணர்நெடுந்தகைமன்னவர்நகரத்
துவந்தமைந்தர்கண்மடந்தையருழையர்பின்றொடரச
சுமந்திரன்றடந்தேர்மிசைச்சுந்த ... திரடோள்
அமைந்தமைந்தனுந்தன்னெடுங்கோயில்சென்றடைந்தான். (எஉ)

வென்றிவேர்தரையருகவென்றுவணம்மீற்றிருந்து
பொன்றிணிந்ததோட்டரும்பெற || லிலச்சினைபோக்கி

* நங்குலநாயகன்-ஆயிரமோலியரும்பரஞ்சுடர்.

† நறைவிரி கமலத்தாளினல்கியகங்கையென்றார் புண்டரீகமென் பதத்திடைப்பிறந்தென, முற்காண்டத்துக் கூறுதல்நோக்கி.

‡ யாரென்றது ஆரெனமரீஇயது, அது ஈண்டின்மைப் பொருள் குறித்து நின்றது. § இந்தநல்லறம்-துறவறவொழுக்கினை.

$ தாமரைக்கண்ணன்-செங்கண்மாலை இதனைத் 'தாமரைக்கண்ணா னுலகு' என்புழிப் பரிமேலழகர் கூறலானுமறிக.

¶ அந்தணர்-அழகியதட்பமாகிய குணமுடையார். இவ்வாறே 'அந் தணரென்போரறவோ, ரென்புழிப் பரிமேலழகருரைப்பர், வேதாந்த த்தி னணவுவாரென நச்சினார்க்கினியர் கூறுவர்.

|| இலச்சினை-முடங்கல்.

நன்றுசித்திரநளிர்முடிகவித்தற்குநல்லீர்
சென்றுவேண்டுவவரன்முறையமைக்கெனச்செப்ப. (௭௩)

உரியமாதவனுள்ளிதென்றமைந்தனன்விரைந்தோர்
பொருவிறேர்மிசையந்தணர்குழாத்தொடும்போக
திருபர்கேண்மின்களிராமற்குநெறிமுறைமையினால்
* திருவும்பூமியுஞ்சிந்தையிற்சிறந்தனவென்றான். (௭௪)

இறைவன்சொல்லெனு மின்னறவருந்தினர்யாரும்
முறையினின்றிலர்முகந்துறுகளியிடைமூழ்கி
நிறையுநெஞ்சிடையுவகைபோய்மயிர்வழிநிமிர
† உறையும்விண்ணகமுடலொடுமெய்தினரொத்தார். (௭௫)

ஒத்தசிந்தையருவகையரொருவர்க்கங்கொருவர்
தத்தமக்குற்றவரசெனத்தழைக்கின்றமனத்தர்
முத்தவெண்குடைமன்னனைமுறைமுறைதொழுதார்
அத்தநன்றெனவன்பினோடறிவிப்பதானார். (௭௬)

வேறு.

மூவெழுமுறைமையெங்குலங்கண்முற்றறப்
‡ பூவெழுமழுவினாற்பொருதுபோக்கிய
சேவகன்சேவகஞ்செகுத்தசேவகற்
காவலிவ்வுலகமீதறனென்றாரரோ. (௭௭)

வேறெலாமன்னரும்விரும்பியின்னது
கூறினாரதுமனங்கொண்டகொற்றவன்
ஊறினுவகையையொளிக்குஞ்சிந்தையான்
மாறுமோரளவைசால்வாய்மைகூறினான். (௭௮)

மகவையினன்பினான்மயங்கியாணிது
புகலநீர்புகன்றவிப்பொம்மல்வாசகம்
உகவையின்மொழிந்ததோவுள்ளநோக்கியோ
தகவெனநினைந்ததோதன்மையென்னென்றான். (௭௯)

இவ்வகையுரைசெயவிருந்தவேந்தவை
செவ்வியநின்றிருமகற்குத்தேர்ந்துளோர்
அவ்வவர்க்கவ்வவராற்றவாற்றறும்
§ எவ்வமிலன்பினையினிதுகேளெனா. (௮0)

* திருவும்பூமியுஞ் சிந்தையிற்சிறந்தனவென்றான் செல்வமும் அரசுமென் சிந்தைபோலுஞ் சிறந்தனவென்றான் என்பதன்றி கைகேசி கருத்தின்வண்ணம் அன்னவைசிறந்தன அவள் மகனுக்கென்பதுமொன்று.

† உவகைமிகுதியான் உறையும் விண்ணகமுடலொடு மெய்தினர்க்குவமைகூறினார். ‡ பூ-கூர்மை. § எவ்வமிலன்பினை-மிகவுஞ் செய்யுங் குற்றமில்லாத எழுமையுந்தொடர்ந்தவன்பு.

தானமுந்தருமமுந்தகவுந்தன்மைசேர்
ஞானமுநல்லவர்ப்பேணுநன்மையும்
மானவவையநின்மகற்குவைகலும்
ஈனமில்செல்வம்வந்தியைகவென்னவே. (அக)

ஊனருணிநிறையவுமுதவுமாடியர்
பார்கெழுபழுமரம்பழுத்தற்றாகவும்
கார்மழைபொழியவுங்கழனிபாய்நதி
வார்புனல்பெருகவுமறக்கின்றோர்கள்யார். (அஉ)

பனையவாநெடுங்கரப் * பருமயானையாய்
நினையவாந்தன்மையைநினைந்தமன்னுயிர்க்
கெனையவாறன்பினனிராமனீண்டவற்
கனையவாறன்பினவவையுமென்றனர். (அங)

மொழிந்ததுகேட்டலுமொய்த்துநெஞ்சினைப்
பொழிந்தபேருவகையான்பொங்குகாதலான்
கழிந்ததோர்பிடரினன்களிக்குஞ்சிந்தையான்
வழிந்தகண்ணீரினன்மன்னன்கூறுவான். (அச)

செம்மையிற்றருமத்திற்செயலிற்றீங்கின்பால்
வெம்மையினொழுக்கத்தின்மெய்ம்மைமேவினிர்
என்மகனென்பதென்னெறியினீங்கிவன்
† நும்மகன்கையடைநோக்குமென்றான். (அரு)

அவைசவையிருந்தபின் ‡ ஆணைமன்னவன்
புரைதபுராளொடுபொழுதுபோக்குவான்
உரைதெரிகணிதரையொருங்குகொண்டொரு
வரைபொருமண்டபமருங்குபோயினான். (அசு)

வேறு.

ஆண்டவன்னிலையாகவறிந்தவர்
பூண்டகாதலர்பூட்டவிழ்கொங்கையர்
நீண்டகூந்தலர்நீள்கலைதாங்கலர்
ஈண்டவோடினரிட்டிடையிற்றிலர். (அஎ)

ஆடுகின்றனர்பண்ணடையின்றியே
பாடுகின்றனர்பார்த்தவர்க்கேகரம்
சூடுகின்றனர்சொல்லுவதோர்கிலர்
மாடுசென்றனர்மங்கையர்நால்வரே. (அஅ)

* பருமம்-மேற்றவிசு.
† கையடை-கையிலடையடைக்கலப்பொருளை.
‡ ஆணை-பாதுகச்சிறைதவு, இவ்வாறே கண்ணன்வட்டம் எனவருதல் காண்க.

கண்டமாதரைக்காதலிநோக்கினாள்
கொண்டல்வண்ணனைநல்கியகோசலை
உண்டுபேருவகைப்பொருளன்னது
தொண்டைவாயினிற்சொல்லுமினீண்டென்றாள். (அகூ)

மன்னெடுங்கழல்வந்துவணங்கிடப்
பன்னெடும்பகல்பாரளிப்பாயென
நின்னெடும்புதல்வன்றனை * நேமியான்
தொன்னெடும்முடிசூட்டுகின்றானென்றார். (கூO)

சிறக்குஞ்செல்வமகற்கெனச்சிந்தையில்
பிறக்கும்பேருவகைக்கடல்பெட்பற
வறக்குமாவடவைக்கனலானதால்
துறக்குமன்னவனென்னுந்துணுக்கமே. (கூக)

அன்னளாயுமரும்பெறலாரமும்
நன்னிதிக்குவையுங்கனிநல்கித்தன்
துன்னுகாதற்சுமித்திரையோடும்போய்
மின்னுநேமியன்மேவிடமேவினாள். (கூஉ)

மேவிமென் † மலராணிலமாதெனும்
தேவிமாரொடுந்தேவர்கள்யாவர்க்கும்
ஆவியும்மறிவும்முதலாயவன்
‡ வாவிமாமலர்ப்பாதம்வணங்கினாள். (கூங)

என்வயிற்றருமைந்தற்கினியருள்
உன்வயிற்றதென்றாளுலகியாவையும்
மன்வயிற்றினடக்கியமாயனைத்
§ தன்வயிற்றினடக்குந்தவத்தினாள். (கூச)

என்றிறைஞ்சியவ் $ விந்திரைகேள்வனுக்
கொன்றுநான்மறையோதியபூசனை
நன்றிழைத்தவணல்லதவர்க்கெலாம்
கன்றுடைப்பசுவின்கடனல்கினாள். (கூரு)

பொன்னுமாமணியும்புனைசாந்தமும்
கன்னிமாரொடுகாசினிபீட்டமும்
இன்னயாவையுமீயந்தனளந்தணர்க்
கன்னதானமுமாடையுநல்கினாள். (கூசா)

* நேமியான்-பூமியாளும்தயரதன். † மலராணிலமாதெனும்தேவிமார்-பூதேவி, ஸ்ரீதேவி. ‡ வாவி-வணங்கினாள் அடியாரிதமாகிய தடாகத்தில் மலர்ந்த தாமரைமலரையொத்த திருவடியைவணங்கினாள். § அவனைச் சிற்றுதரத்தின்கண் வைத்திருந்தது முன்னைப் பிறவியிற் செய்த முதுதவமாதலின் தன்வயிற்றினடக்குந் தவத்தினாளென்றார். $ இந்திரை-திருமாமகள்.

நல்கிநாயகனுண்மலர்ப்பாதத்தைப்
புல்லிப்போற்றிவணங்கிப்புரையிலா
மல்லன்மாளிகைக்கோயில்வலங்கொளாத்
* தொல்லைநோன்புகள்யாவுந்தொடங்கினாள். (கஎ)

க-வது, மந்திரப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-கஎ.

---

## உ-வது, † மந்தரைசூழ்ச்சிப்படலம்.

கடிகமழ்தாரினன்கணிதமாக்களை
முடிவுறநோக்கியோர்முழுதன்மைகூறிப்பின்
வடிமழுவாளவற்கடந்தமைந்தற்கு
‡ முடிபுனைகடிகைநாண்மொழிமினென்றனன். (க)

பொருந்துநாளினைநின்புதல்வற்கென்றனர்
திருந்தினானன்னசொற்கேட்டசெய்தமுதல்
பெருந்திண்மால்யானையான்பிறைப்பிற்செய்தவம்
வருந்தினான்வருகெனவசிட்டனெய்தினான். (உ)

நல்லியன்மங்கலநாளுநாளையவ
வில்லியரேறவற்கீண்டுவேண்டுவ
ஒல்லையினியற்றிநல்லுறுதிவாய்மையும்
சொல்லுதிபெரிதெனத்தொழுதுசொல்லினான். (௩)

முனிவனுமுவகையுந்தானுமுந்துவான்
§ மனுகுலநாயகன்வாயன்முன்னினான்
அனையவன்வரவுகேட்டலங்கல்வீரனும்
இனிதெதிர்கொண்டுதன்னிருக்கையெய்தினான். (௪)

வேறு.

ஒல்கலிற்றவத்துத்தமனேதுநால்
மல்குகேள்வியவள்ளலைநோக்கினான்
புல்குநாதற்புரவலன்போர்வலாய்
நல்குநானிலநாளைநினக்கென்றான். (௫)

என்றபின்னுமிராமனைநோக்கினான்
ஒன்றுகூறுவதுண்டுறுதிப்பொருள்

---

* தொல்லை-தொடங்கினாள் - தொன்று தொட்டுள்ள விரதங்களெல்லாவற்றையும் செய்யத்தொடங்கினாள். † மந்தரை-கூனி. ‡ முடிபுனை கடிகைநாள்-முடிபுனையுஞ் சுபவோரையென்றதன்றி முடிபுனை தலைக் கடியுமோரை யென்றிருபொருள்படக் கூறியதாமெனவுங் கொள்க.
§ மனுகுலநாயகன்-சீராமன்.

நன்றுகேட்டுக்கடைப்பிடிநன்றெனத்
துன்றுதாரவற்சொல்லுதன்மேயினான். (௬)

முனிவர்களை வழிபட் டொழுகுதல்.

கரியமாலினுங்கண்ணுதலானினும்
உரியதாமரைமேலுறைவானினும்
விரியும்பூதமொரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர்பேணுதியுள்ளத்தால். (௭)

அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரில்
நொந்துளாரையுநொய்துயர்ந்தாரையும்
மைந்தவெண்ணவரம்புமுண்டாங்கொலோ. (௮)

அனையராதலினையவிஃதெய்யத்
வினையினீங்கியமேலவர்தாளினைப்
புனையுஞ்சென்னியையாய்ப்புகழ்ந்தேத்துதி
இனியகூறியின்றேயினசெய்தியால். (௯)

ஆவதற்குமழிவதற்குமவர்
ஏவலிற்கும்விதியென்றாலினி
யாவதெப்பொருளிம்மையுமம்மையுந்
தேவரைப்பரவுந்துணைசீர்த்ததே. (௧௦)

இதுமுதல் கக-செய்யுள்காறும் அரசிலக்கணங் கூறுகின்றார்.

* உருளுநேமியுமொண்கவரெஃகமும்
மருளில்வாணியும்வல்லவர்மூவர்க்கும்
தெருளுநல்லறமும்மனச்செம்மையும்
அருளுநீத்தபின்னாவதுண்டாகுமோ. (௧௧)

சூதுமுந்துறச்சொல்லியமாத்துயர்
நீதிமைந்தநினைக்கிலையாயினும்
ஏதமென்பனயாவையுமெய்துதற்
கோதுமூலமவையெனவோர்தியே. (௧௨)

யாரொடும்பகைகொள்ளிலனென்றபின்
போரொடுங்கும்புகழொடுங்காதுதன்
தாரொடுங்கல்செல்லாததுதந்தபின்
வேரொடுங்கெடல்வேண்டலுண்டாகுமோ. (௧௩)

* உருளுநேமியு— மூவர்க்கும் சக்ராயுதம் சூலம், வாக்குமுள்ள மும்மைப் பெருந்தேவர் அதாவது பிரமன் முதலிய மூவர்.

கோளுமைம்பொறியுங்குறையப்பொருள்
நாளுங்கண்டுநெடுக்குறுநோன்மையின்
ஆளுமவ்வரசேயரசன்னது
வாளின்மேல்வருமாதவமைந்தனே. (கச)

* உமைக்குநாதற்குமோங்கு † புள்ளூர்திக்கும்
இமைப்பி ‡ னாட்டமோரெட்டுடையானுக்கும்
சமைத்ததோள்வலிதாங்கினராயினும்
அமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே. (கரு)

என்புதோலுடையார்க்குமிலார்க்குந்தம்
வன்பகைப்புலன்மாசறமாய்ப்பதென்
முன்புபின்பின்றிமூவுலகத்தினும்
அன்பினல்லதோராக்கமுண்டாகுமோ. (கசு)

வையமன்னுயிராகவம்மன்னுயிர்
உய்யத்தாங்குமுடலன்னமன்னனுக்
கய்யமன்றியறங்கடவாதருள்
§ மெய்யினின்றபின்வேள்வியும்வேண்டுமோ. (கஎ)

இனியசொல்லினனீகையனெண்ணினன்
வினையன்றூயன்விழுமியன்வென்றியன்
நினையுநீதிநெறிகடவானெனில்
அனையமன்னற்கழிவுமுண்டாங்கொலோ. (கஅ)

சீலமல்லனநீக்கிச்செம்பொற் $ றுலைத்
தாலமன்னதனிநிலைதாங்கிய
ஞாலமன்னற்குநல்லவர்நோக்கிய
காலமல்லதுகண்ணுமுண்டாகுமோ. (ககூ)

ஓர்வினல்வினையூற்றத்திருநரை
பேர்விறல்விதிபெற்றுளதென்றரோ
தீர்விலன்புசெலுத்தலிற்செவ்வியோர்
ஆர்வமன்னவற்காயுதமாவதே. (உ0)

¶ தூமகேதுபுவிக்கெனத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வரும்

---

* உமைக்குநாதன்-உருத்திரன்.
† புள்ளூர்தி-திருமால்.
‡ நாட்டமோரெட்டுடையான்-பிரமன்.
§ வாய்மையினும் வேள்விபெரிதன்றென்பார், "மெய்யினின்றபின் வேள்வியும் வேண்டுமோ" என்றார்.
$ துலைத்தால்-துலைநா.
¶ தூமகேது-உலகிற்குப் பின்வரும் தீங்கை முன்னறிவிக்கும் காலக்கோளாகிய உற்பாதக்குறி.

காமமில்லையெனிற்கடுங்கேடெனும்
நாமமில்லைநரகமுமில்லையே. (உக)

ஏனைநீதியினியன * வையகப்
போனகற்குவிளம்பிப்புலன்கொளீஇ
ஆனவன்றொடுமாயிரமௌலியான்
தானநண்ணினன்றத்துவநண்ணினான். (உஉ)

நண்ணி † நாகணைவள்ளலைநான்மறைப்
புண்ணியப்புனலாட்டிப்புலமையோர்
எண்ணுநல்வினைமுற்றுவித்தேற்றினான்
வெண்ணிறத்ததருப்பைவிரித்தரோ. (உ௩)

வேறு.

ஏற்றிடவாண்டகையினிதிருந்துழி
நூற்றடமார்பனுநொய்தினெய்தப்போய
ஆற்றல்சாலரசனுக்கறிவித்தானவன்
சாற்றுகநகரணிசமைக்கவென்றனன். (உச)

ஏவினவள்ளுவரிராமனாளையே
‡ பூமகள்கொழுநனைப்புனையுமௌலிக்
§ கோநகரணிகெனக்கொட்டும்பேரியத்
தேவருங்களிகொளத்திரிந்துசாற்றினார். (உ௫)

$ கவியமைகீர்த்தியக்காளைநாளையே
புவியமைமணிமுடிபுனையுமென்றசொல்
செவியமைநுகர்ச்சியவெனினுந்தேவர்தம்
அவியமுதன்னவந்நகருளார்க்கெலாம். (உ௬)

ஆர்த்தனர்களித்தனராடிப்பாடினர்
வேர்த்தனர்தடித்தனர்சிலிர்த்துமெய்ம்மயிர்
போர்த்தனர்மன்னனைப்புகழ்ந்துவாழ்த்தினர்
தூர்த்தனர்நீணிதிசொல்லினார்க்கெலாம். (உ௭)

திணிசுடரிரவியைத்திருத்துமாறமைப்
பணியிடைப்பள்ளியான்பார்த்தமார்பிடை
மணியினைவேடகம்வருக்குமாறுபோல்
அணிநகரணிந்தனரருத்திமாக்களே. (உ௮)

---

* வையகப்போனகன்-உலகமுண்டபெருவாயனாகியவிஷ்ணு.
† நாகணைவள்ளல்-சர்ப்பசயனத்தையுடைய இராமமூர்த்தி.
‡ பூமகள் கொழுநன்-நிலமடந்தைக் கிறையாகிய விஷ்ணு.
§ கோநகரென்றார் முத்திநகரமேழினுஞ் சிறந்தமைநோக்கி.
$ புகழ்என்றது உரை பாட்டென்றிருவகைப்படுதலின் கவியமைகீர்த்தி என்றார்.

வெள்ளியகரியனசெய்யவேறுள
கொள்ளைவான்கொடிநிரைக்குழாங்கடோன்றுவ
கள்ளவிழ்கோதையான்செல்வங்காணிய
புள்ளெலாந்திருநகர்புகுந்தபோன்றவே. (௨௯)

மங்கையர்குறங்கெனவகுத்தவாழைகள்
அங்கவர்கழுத்தெனக்கமுகமார்ந்தன
தங்கொளிமுறுவலிற்றாமநான்றன
கொங்கையைநிகர்த்தனகனககும்பமே. (௩௰)

முதிரொளியுயிர்த்தனமுடுகிக்காலையில்
கதிரவன்வேறொருகவின்கொண்டானென
மதிதொடநிவந்தனமகரதோரணம்
புதியனவலர்ந்தன * புதவராசியே. (௩௧)

துனியுறுசெம்மணித்தூணநீறுதோய்
வனிதையோர்கூறினன்வடிவுகாட்டின
புனைதுகிலுறைதொறும்பொதிந்துதோன்றின
பனிபொதிகதிரெனப்பவளத்தூண்களே. (௩௨)

முத்தினின்முழுநிலவெறிப்பமொய்ம்மணிப்
பத்தியினிளவெயில்பரப்பநீலத்தின்
தொத்தினமிருள்வரத்தூண்டச் † சோதிட
வித்தகர்விரித்தநாளொத்தவீதியே. (௩௩)

ஆடன்மான்றேர்க்குழாமவனிகாணிய
வீடெனுமுலகின்வீழ்விமானம்போன்றன
ஓடைமாக்கடகளிறுதயமால்வரை
தேடருங்கதிரொடுந்திரிவபோன்றவே. (௩௪)

வளங்கெழுதிருநகர்வைகும்வைகலும்
பளிங்குடைநெடுஞ்சுவரடுத்தபத்தியில்
கிளர்ந்தெரிசுடர்மணியிருளைக்கீறலால்
வளர்ந்திலபிறந்திலசெக்கர்வானமே. (௩௫)

பூமழைபுனன்மழைபுதுமென்சுண்ணத்தின்
தூமழைதரளத்தின்றோமில்வெண்மழை
தாமிழைநெரிதலிற்றகர்ந்தபொன்மழை
மாமழைநிகர்த்தனமாடவீதியே. (௩௬)

* புதவராசி-கதவின்கூட்டங்கள்.

† சந்திரன், சுக்கிரன், வெண்ணிறமுடைமையாலும், சூரியன், செவ்வாய், குரு, கேது செந்நிறமுடைமையாலும், புதன், சனி, இராகு கருநிறமுடைமையாலும் "சோதிடவித்தகர் விரித்தநாளொத்த" என்றார்.

காரொடுதொடர்மதக்களிறுசென்றன
வாரொடுதொடர்கழன்மைந்தராமெனத்
தாரொடுநடந்தனபிடிகடாம் * கலைத்
தேரொடுநடக்குமத்தெரிவைமாரினே. (௩௭)

ஏய்ந்தெழுசெல்வமுமழகுமின்பமும்
தேய்ந்திலவனையதுதெரிகிலாமையால்
ஆய்ந்தனர்பெருகவுமமரரிம்பரில்
போந்தவர்போந்திலமென்னும்புந்தியால். (௩௮)

அந்நகரணிவுறுமமலைவானவர்
பொன்னகரியல்பெனப்பொலியுமெல்லையில்
இன்னல்செயிராவணனிழைத்ததீமைபோல்
துன்னருங்கொடுமனக்கூனிதோன்றினாள். (௩௯)

தோன்றியகூனியுந்துடிக்குநெஞ்சினாள்
ஊன்றியவெகுளியாளுலைக்குமுள்ளத்தாள்
கான்றெரிநயனத்தாள்கதிக்குஞ்சொல்லினாள்
மூன்றுலகினுக்குமோரிடுக்கண்மூட்டுவாள். (௪0)

தொண்டைவாய்க்கேகயன்றோகைகோயின்மேல்
மண்டினாள்வெகுளியின்மடித்தவாயினாள்
பண்டைநாளி † ராகவன்பாணிவில்லுமிழ்
உண்டையுண்டதனைத்தன்னுள்ளத்துள்ளுவாள். (௪௧)

நாற்கடற்படுமணிநளினம்பூத்ததோர்
பாற்கடற்படுதிரைப்பவளவல்லியே
போற்கடைக்கண்ணளிபொழியப்பொங்கணை
மேற்கிடந்தாடனைவிரைவினெய்தினாள். (௪௨)

எய்தியக்கேகயன்மடந்தையேடவிழ்
நொய்தலர்தாமரைநோற்றநோன்பினால்
செய்தபேருவமைசால்செம்பொற்சீறடி
கய்களிற்றீண்டினாள் ‡ காலக்கோளனாள். (௪௩)

தீண்டலுமுணர்ந்தவத்தெய்வக்கற்பினாள்
நீண்டகணனந்தருநீங்குகிற்றிலள்
மூண்டெழுபெரும்பழிமுடிக்கும்வெவ்வினை
தூண்டிடக்கட்டுரைசொல்லன்மேயினாள். (௪௪)

---

* கலை என்றது மேகலையை, அதுமுதற்குறைபெற்றது.
† ராகவன்-ரகுமரபிற்பிறந்தவன்.
‡ காலக்கோளனாள்-காலக்கோள் பின்னடக்குந் தீமையை முன்னுணர்த்தும் ஒரு தீக்கோளுக் கொப்பான கூனி.

அணங்குவாள்விடவராவணுகுமெல்லையும்
குணங்கெடாதொளிவிரிகுளிர்வெண்டிங்கள்போல்
பிணங்குவான்பேரிடர்பிணிக்கநண்ணவும்
உணங்குவாயல்லைநீயுறங்குவாயென்றாள். (௪௫)

வெவ்விடமனையவள்விளம்பவேற்கணாள்
தெவ்வடுசிலைக்கையென்சிறுவர்செவ்வியர்
அவ்வவர்துறைதொறுமறந்திறம்பலர்
எவ்விடரெனக்குவந்தடுப்பதீண்டென்றாள். (௪௬)

பராவரும்புதல்வரைப்பயக்கயாவரும்
உராவருந்துயரைவிட்டுறுதிகாண்பரால்
விராவரும்புவிக்கெலாம்வேதமேயன
இராமனைப்பயந்தவெற்கிடருண்டோவென்றாள். (௪௭)

ஆழ்ந்தபேரன்பினாளனையகூறலும்
சூழ்ந்ததீவினைநிகர்கூனிசொல்லுவாள்
வீழ்ந்ததுநின்னலந்திருவும்வீய்ந்தது
வாழ்ந்தனள்கோசலைமதியினாலென்றாள். (௪௮)

அன்னவளவ்வுரையுரைப்பவாயிழை
மன்னவர்மன்னனேற்கணவன்மைந்தனேல்
பன்னரும்பெரும்புகழ்ப்பரதன்பார்தனில்
என்னிதன்மேலவட்கெய்தும்வாழ்வென்றாள். (௪௯)

ஆடவர்நகையுறவாண்மைமாசறத்
தாடகையெனும்பெயர்த்தையலாள்படக்
கோடியவரிசிலையிராமன்கோமுடி
சூடுவனாளைவாழ்விதெனச்சொல்லினாள். (௫0)

மாற்றமஃதுரைசெயமங்கையுள்ளமும்
ஆற்றல்சால்கோசலையறிவுமொத்தவால்
வேற்றுமையுற்றிலள்வீரன்றாதைபுக்
கேற்றவளிருதயத்திருக்கவேகொலாம். (௫௧)

ஆயபேரன்பெனுமளக்கரார்த்தெழுந்
தேய்விலாமுகமதிவிளங்கித்தேசுறத்
தூயவளுவகைபோய்மிகச் † சுடர்க்கெலாம்
நாயகமனையதோர்மாலைநல்கினாள். (௫௨)

தெழித்தனளுரப்பினள்சிறுக்கண்டீயுக
விழித்தனள்வைதனள்வெய்துயிர்த்தனள்

---

† சுடர்க்கெலா நாயகம்-ஞாயிறு.

அழித்தனளழுதனளம்பொன்மாலையால்
குழித்தனணிலத்தையக்கொடியகூனியே. (௫௩)

வேதனைக்கூனிபின்வெகுண்டுநோக்கியப்
பேதையைப்பித்திநிற்பிறந்தசேயொடும்
நீதுயர்படுகெனாவெடிதுன்மாற்றவள்
தாதியர்க்காட்செயத்தரிக்கிலேனென்றாள். (௫௪)

சிவந்தவாய்ச்சீதையுங் * கரியசெம்மலும்
நிவந்தவாசனத்தினி திருப்பநின்மகன்
அவந்தனைய்வெறுநிலத்திருக்கலானபோ
துவந்தவாறென்னிதற்குறுதியாதென்றாள். (௫௫)

மறந்திலள்கோசலையுறுதிமைந்தனும்
சிறந்தநற்றிருவினிற்றிருவுமெய்திஞன்
இறந்திலனிருந்தனனென்செய்தாற்றுவான்
பிறந்திலன்பரதனீபெற்றதாலென்றாள். (௫௬)

சாதமிப்புவியெலாந்தம்பியோடுநிவ்
வாதனேகாக்குமேல்வரம்பில்காலமும்
பரதனும்பிளவலும்பதியினீங்கிப்போய்
விரதமாதவஞ்செயவிடுதனன்றென்றாள். (௫௭)

பண்ணுறுகடகரிப்பரதன்பார்மகள்
கண்ணுறுகவினராயினிதுகாத்தவம்
மண்ணுறுமுரசுடைமன்னர்மாலையில்
எண்ணுறப்பிறந்திலனிறந்தனன்றென்றாள். (௫௮)

† பாக்கியம்புரிந்திலாப்பரதன்றன்னைப்பண்
டாக்கியபொலன்கழலரசனுணையால்
தேக்குயர்கல்லதர்கடிதுசேணிடைப்
போக்கியபொருளெனக்கின்றுபோந்ததால். (௫௯)

மந்தரைபின்னரும்வகைந்துகூறுவாள்
அந்தரந்தீர்ந்துலகளிக்குநீரிஞல்
தந்தையுங்கொடியனற்றாயுந்தீயளால்
எந்தையேபரதனேயென்செய்வாயென்றாள். (௬௦)

அரைசரிற்பிறந்துபின்னரசரில்வளர்ந்
தரைசரிற்புகுந்துபேரரசியானநீ

* கரியசெம்மல்-ஸ்ரீராமன்.

† அரசர்மாலையிற் பிறவாமையாற்பாக்கியம் புரிந்திலாப் பரதனென்றார்.

கரைசெயற்கருந்துயர்க்கடலில்வீழ்கின்றாய்
உரைசெயக்கேட்கிலையுணர்தியோவென்றாள் (சுக)

கல்வியுமிளமையுங்கணக்கிலாற்றலும்
வில்வினையுரிமையுமழகும்வீரமும்
எல்லையில்குணங்களும்பரதற்கேயது
புல்லிடையுகுத்தமுதேயும்போலென்றாள். (சுஉ)

வேறு.

வாய்கயப்புறமந்தரைவழங்கியவெஞ்சொல்
காய்கனற்றலைநெய்சொரிந்தெனக்கதங்கனற்ற
கேகையர்க்கிறைதிருமகள்கிளரிளவரிகள்
தோய்கயற்கண்கள் * சிவப்புறநோக்கினள்சொல்லும். (சுங)

வெயின்முறைக்குலக்கதிரவன்முதலியமேலோர்
உயிர்முதற்பொருடிறம்பினுமுறைதிறம்பாதோர்
† மயின்முறைக்குலத்துரிமையைமனுமுதன்மரபைச்
செயிருறப்புலச்சிந்தையாலென்சொனாய்தீயோய். (சுச)

எனக்குநல்லையுமல்லைநீயென்மகன்பரதன்
தனக்குநல்லையுமல்லையத்தருமமேநோக்கில்
உனக்குநல்லையுமல்லைவந்தூழ்வினைதூண்ட
மனக்குநல்லனசொல்லினைமதியிலாமனத்தோய். (சுரு)

பிறந்திறந்துபோய்ப்பெறுவதுமிழப்பதும்புகழேல்
சிறந்திறம்பினுநியாயமேதிறம்பினுநெறியின்
திறந்திறம்பினுஞ்செய்தவந்திறம்பினுஞ்செயிர்தீர்
மறந்திறம்பினும்வரன்முறைதிறம்புதல்வழக்கோ. (சுசு)

போதியென்னெதிர்நின்றுநின்புன்பொறிநாவைச்
சேதியாதிதுபொறுத்தனென்புறஞ்சிலரறியின்
நீதியல்லவுநெறிமுறையல்லவுநினைந்தாய்
ஆதியாதலினறிவிலியடங்குதியென்றாள். (சுஎ)

அஞ்சிமந்தரையகன்றிலளம்மொழிகேட்டும்
நஞ்சுதீர்க்கினுந்தீர்கிலாததுநலிந்தென்னத்
தஞ்சமேயுனக்குறுபொருளுணர்த்துகைதவிரேன்
வஞ்சிபோலியென்றடிமிசைவீழ்ந்துரைவழங்கும். (சுஅ)

---

* கண்சிவப்புறல்-சினக்குறிப்பு.

† மயில் முறைகுலத்துரிமையாவது - மயில்தான் முதற்பொரித்த குஞ்சுக்குச்சிறைமுளைத்தபின் இரண்டாவதற்குச்சிறைமுளைப்பது, அது போல இராமனுக்குப் பட்டங்கட்டியபின் பரதனுக்குப் பட்டங்கட்டுதல் முறைமை யென்பதாம்.

மூத்தவற்குரித்தரசெனுமுறைமையினுலகம்
காத்தமன்னனிலிளையனன்றேகடல்வண்ணன்
* எத்துநீண்முடிபுனைவதற்கிசைந்தனனென்றால்
† மீத்தருஞ்செல்வம்பரதனைவிலக்குமாறெவனோ. (சுகூ)

அறனிரம்பியவருளுடையருந்தவர்க்கேனும்
பெறலருந்திருப்பெற்றபின்சிந்தனைபிறிதாம்
மறநினைந்துமைவலிகிலராயினுமனத்தால்
இறலுறும்படியியற்றுவரிடையறவின்னல். (எ0)

புரியுந் ‡ தன்மகனரசெனிற்பூதலமெல்லாம்
விரியுஞ்சிந்தனைக்கோசலைக்குடைமையாமென்றால்
பரியு § நின்குலப்புதல்வற்குமுனக்குமிப்பார்மேல்
உரியதென்னவளுதவியவொருபொருளல்லால். (எக)

ஆண்டுமின்னலும்வறுமையுந்தொடர்தரத்துயரால்
ஈண்டுவந்துனையிரந்தவர்க்கிருநிதியவளை
வேண்டியீதியோவெள்குதியோவிம்மனையால்
மாண்டுபோதியோமறுத்தியோவெங்ஙனம்வாழ்தி. (எஉ)

சிந்தைசெய்கையிற்றிகைத்தனையினிச்சிலநாளில்
தந்தமின்மையுமெளிமையுநிற்கொண்டுதவிர்க்க
உந்தையுன்னையுங்கிளைஞர்மற்றுன்குலத்துள்ளோர்
வந்துகாண்பதுன்மாற்றவள்செல்வமோமதியாய். (எங)

காதலுன்பெருங்கணவனையஞ்சியக்கனிவாய்ச்
சீதைதந்தையுன்றந்தையைத்தெறுகில $ னிராமன்
மாதுலனவனுந்தைக்குவாழ்வினியுண்டோ
பேதையுன்றுணையாருளர்பழிபடப்பிறந்தார். (எச)

மற்றுமுந்தைக்குவான்பகைபெரிதுளமறத்தார்
செற்றபோதிவர்சென்றுதவாரெனிற்செருவில்
கொற்றமென்பதொன்றெவ்வழியுண்டதுகூறாய்
சுற்றமுங்கெடச்சுடுதுயர்க்கடல்விழுத்துணிந்தாய். (எரு)

கெடுத்தொழிந்தனையுனக்கரும்புதல்வனைக்கிளர்நீர்
உடுத்தபாரகமுடையவனொருமகற்கெனவே
கொடுத்தபேரரசவன்குலக்கோமைந்தர்தமக்கும்
அடுத்ததம்பிக்குமாம்பிறர்க்காகுமோவென்றாள். (எசு)

* எத்துநீண்முடியென்றார் - மனுத்தொடக்கமானவர் புனைந்தமுடியாகலின்.

† மீத்தருஞ்செல்வம்-பெருமிதந்தருஞ்செல்வம். ‡ தன்மகன்-சீராமன். § நின்குலப்புதல்வன்-பரதன். $ இராமன் மாதுலன் சனகன்.

தீயமந்தரையிவ்வுரைசெப்பலுந்தேவி
தூயசிந்தையுந்திரிந்ததுசூழ்ச்சியினிமையோர்
மாயையும்மவர்பெற்றநல்வரவுண்மையாலும்
ஆயவந்தணரியற்றியவருந்தவத்தாலும். (எஎ)

அரக்கர்பாவமுமல்லவரியற்றியவறமும்
துரக்கநல்லருடுறந்தனடூமொழிமடமான்
இரக்கமின்மையன்றோவின்றிவ்வுலகங்களிராமன்
பரக்குந்தொல்புகழமுதினைப்பருகுகின்றதுவே. (எஅ)

அனையதன்மையளாகியகைகயனன்னம்
வினைநிரம்பியகூனியைவிரும்பினணோக்கி
எனையுவந்தனையினியையென்மகனுக்குமனையான்
புனையுநீண்முடிபெறும்படிபுகலுதியென்றாள். (எகூ)

மாழை * யுண்கணியுரைசெயக்கேட்டமந்தரையென்
தோழிவல்லலென்றனைவல்லனென்றடிதொழுதாள்
தாழுமன்னிலையென்றுரைதலைநிற்பினுலகம்
ஏழுமேழுமுன்னொருமகற்காக்குவெனென்றாள். (அ0)

நாடியொன்றுனக்குரைசெய்வெனளிர்மணிநகையாய்
தோடிவர்ந்ததார்ச்சம்பரன்றொலைவுற்றவேலை
ஆடல்வென்றியானருளியவரமவையிரண்டும்
கோடியென்றனளுள்ளமுங்கோடியகொடியாள். (அக)

இருவரத்தினிலொன்றினாலரசுகொண்டிராமன்
பெருவனத்திடை † யேழிருபருவங்கள்பெயர்ந்து
திரிதரச்செய்தியொன்றினாற்செழுநிலமெல்லாம்
ஒருவழிப்படுமுன்மகற்குபாயமீதென்றாள். (அஉ)

உரைத்தகூனியையுவந்தனளுயிருறத்தழுவி
நிரைத்தமாமணியாரமுநிதியமுநீட்டி
இரைத்தவேலைசூழுலகமென்னொருமகற்கீந்தாய்
தரைக்குநாயகன்றாயினிநீயெனத்தணியா. (அங)

நன்றுசொல்லினைநம்பியைநளிர்முடிசூட்டல்
ஒன்றுகானத்திலிராமனைத்துரத்தலிவ்விரண்டும்
அன்றதாமெனிலரசன்முன்னாருயிர்துறந்து
பொன்றிநீங்குதல்புரிவென்யான்போதிநீயென்றாள். (அச)

---

* உண்கண்-மையுண்டகண், இதனை "இருநோக்கிவளுண்கண்" என்புழிப் பரிமேலழகர் கூறலானுமறிக.

† ஏழிருபருவங்கள்-பதினான்காண்டு.

கூனிபோனபின்குலமலர்க்குப்பைநின்றிழிந்தாள்
சோனைவார்குழற்கற்றையிற்சொருகியமாலை
வானவார்மழைநுழைதருமதிபிதிர்ப்பாள்போல்
தேனவாவுறுவண்டினமலமரச்சிதைத்தாள். (அ௫)

விளையுந்தன்புகழ்வல்லியைவேரறுத்தென்னக்
கிளைகொண்மேகலைசிந்தினள்கிண்கிணியோடும்
வளைதுறந்தனண்மதியினின்மறுத்துடைப்பாள்போல்
அளகவாணுதலரும்பெறற்றிலதமுமழித்தாள். (அ௬)

தாவின்மாமணிக்கலன்மற்றுந்தனித்தனிச்சிதறி
நாவிநன்குழனிலந்தைவரப்பரப்பிக்
காவியுண்கண்களஞ்சனங்கான்றிடக்கலுழாப்
பூவுதிர்ந்ததோர்கொம்பெனப்புவிமிசைப்புரண்டாள். (அ௭)

நவ்விவீழ்ந்தெனநாடகமயிறுயின்றென்னக்
கவ்வைகூர்தரச் * சனகியாங்கடிகமழ்கமலத்
தவ்வைநீங்குமென்றயோத்திவந்தடைந்தவம்மடந்தை
தவ்வையாமெனக்கிடந்தனள்கேகயன்றனையை. (அ௮)

மந்தரைசூழ்ச்சிப்படலம்-முற்றிற்று.
ஆ. திருவிருத்தம்-கஅ௫.

---

## ௫-வது, கைகேசிசூழ்வினைப்படலம்.

நாழிகைகங்குலினள்ளடைந்தபின்றை
யாழிசையஞ்சியவஞ்சொலேழைகோயில்
வாழியவென்றயின்மன்னர்துன்னவந்தான்
ஆழிநெடுங்கைமடங்கலாளியன்னான். (௧)

வாயிலின்மன்னர்வணங்கிநிற்பவந்தாங்
கேயினசெய்யுமடந்தைமாரொடேகிப்
பாயறுறந்தபடைத்தடங்கண்மென்றோள்
ஆயிழைதன்னையடைந்தவாழிமன்னன். (௨)

அடைந்தவனோக்கியரந்தையென்கொல்வந்து
தொடர்ந்ததெனத்துயர்கொண்டுசோருநெஞ்சன்
மடந்தையைமானையெடுக்குமானையேபோல்
தடங்கைகள்கொண்டுதழீஇயெடுக்கலுற்றான். (௩)

* சனகி-சனகன் புத்திரி சானகி இது தத்திதாந்தபதம்.

நின்றுதொடர்ந்தநெடுங்கைதம்மைநீக்கி
மின்றுவள்கின்றதுபோலமண்ணில்வீழ்ந்தாள்
ஒன்றுமியம்பலணீடுயிர்க்கலுற்றாள்
மன்றலருந்தொடைமன்னனாவியன்னாள். (௪)

அன்னதுகண்டவலங்கன்மன்னனஞ்சி
என்னைநிகழ்ந்ததிஞ்ஞாலமேழில்வாழ்வார்
உன்னையிகழ்ந்தவர்மாள்வருற்றதெல்லாம்
சொன்னபினென்செயல்காண்டிசொல்லிடென்றான். (௫)

வண்டுளர்தாரவன்வாய்மைகேட்டமங்கை
கொண்டநெடுங்கணினாலிகொங்கைகோப்ப
உண்டுகொலாமருளென்கணுன்கணோக்கில்
* பண்டையவின்றுபரிந்தளித்தியென்றாள். (௬)

கள்ளவிழ்கோதைகருத்துணர்ந்தமன்னன்
வெள்ளநெடுஞ்சுடர்மின்னின்மின்னநக்கான்
உள்ளமுவந்துளசெய்வனொன்றும்லோபேன்
† வள்ளலிராமனுன்மைந்தனாணையென்றான். (௭)

‡ ஆன்றவனவ்வுரைகூறவையமில்லாள்
தோன்றியபேரவலந்துடைத்ததுண்டேல்
சான்றிமையோர்குலமாகமன்னநீயென்
றேன்றவரங்களிரண்டுமீதியென்றாள். (௮)

வரங்கொளவித்துணைமன்னுமல்லலெய்தி
இரங்கிடவேண்டுவதீவனேகொளென்பால்
பரங்கெடவிப்பொழுதேபகர்ந்திடென்றான்
§ உரங்கொண்மனத்தவள்வஞ்சமோர்கிலாதான். (௯)

ஏயவரங்களிரண்டினொன்றினாலென்
சேயரசாள்வதுசீதைகேள்வனொன்றால்
போய்வனமாள்வதெனப்புகன்றுநின்றாள்
தீயவையாவையினுஞ்சிறந்ததீயாள். (௧௦)

$ நாகமெனுங்கொடியாடனாவினீந்த
சோகவிடந்தொடரத்துணுக்கமெய்தா

---

* பண்டையவின்று பரிந்தளித்தி யென்றாள்-சம்பரனைத்தடிந்த ஞான்றுபெற்றவரங்களை யிப்போது அன்புகூர்ந்தளிப்பாயென்றாள்.

† வள்ளல்-வரையாதுகொடுப்பவன்.

‡ ஆன்றவனென்றது அகன்றவனென்பதன் மரூஉ.

§ உரங்கொண்மனத்தவள்-பிடிவாதமுடையவள்.

$ நாகமெனுங் கொடியாளென்றார் தன்னைப்பாலூட்டி வளர்த்தானையே தீண்டலின்.

ஆகமடங்கலும்வெந்தழிந்தராவின்
வேகமடங்கியவேழமென்னவீழ்ந்தான். (௧௧)

பூதலமுற்றதனிற்புரண்டமன்னன்
மாதுயரத்தினையாவர்சொல்லவல்லார்
வேதனைமுற்றிடவெந்துவெந்துகொல்லன்
ஊதுலையிற்கனலென்னவெய்துயிர்த்தான். (௧௨)

உலர்ந்ததுநாவுயிரோடலுற்றதுள்ளம்
புலர்ந்ததுகண்கள்பொடித்தபொங்குசோரி
சலந்தலைமிக்கதுதக்கதென்கொலென்றென்
றலந்தலையுற்றவரும்புலன்களைந்தும். (௧௩)

மேவிநிலத்திலிருக்குநிற்கும்வீழும்
ஓவியமொப்பவுயிர்ப்படங்கியோயும்
பாவியையுற்றெதிர்பற்றியெற்றவெண்ணும்
ஆவிபதைப்பவலக்கணெய்துகின்றான். (௧௪)

பெண்ணெனவுற்றபெரும்பழிக்குநாணும்
உண்ணிறைவெப்பொடுயிர்த்துயிர்த்துலாவும்
கண்ணினிறேக்குமயர்க்குமிக்கைவேல்
புண்ணுழைதைக்கவுழைக்குமானைபோல்வான். (௧௫)

கம்பநெடுங்களியானையன்னமன்னன்
வெம்பிவிழுந்தெழும்விம்மல்கண்டுவெய்துற்
றும்பர்நடுங்கினரூழிபேர்வதொத்த
தம்பனகண்ணவருள்ளமன்னதேயால். (௧௬)

அஞ்சலளையனதல்லல்கண்டுமுள்ளம்
நஞ்சிலணாணிலளென்னநாணமாமால்
வஞ்சனைபண்டுமடந்தைவேடமென்றே
தஞ்செனமாதரையுள்ளலார்கடக்கோர். (௧௭)

இந்நிலைநின்றவடன்னையெய்தநோக்கி
நெய்ந்நிலைவேலவனீதிசைத்ததுண்டோ
பொய்ந்நிலையோர்கள்புணர்த்தவஞ்சமுண்டோ
அந்நிலைசொல்லெனதாணையுண்மையென்றான். (௧௮)

திசைத்ததுமில்லையெனக்குவந்துதீயோர்
இசைத்ததுமில்லைமுனிந்தவிவ்வரங்கள்
குசைப்பரியோய்தரினின்றுகொள்வெனன்றேல்
வசைத்திறநின்வயின்வைத்துமாள்வெனென்றாள். (௧௯)

இந்தநெடுஞ்சொலவ்வேலைகூறுமுன்னே
வெந்தகொடும்புணில்வேனுழைந்ததொப்பச்
சிந்தைதிரிந்துதிகைத்தயர்ந்துவீழ்ந்தான்
* மைந்தனலாதுயிர்வேறிலாதமன்னன். (௨0)

ஆகொடியாயெனுமாவிகாலுமந்தோ
ஓகொடிதேயறமென்னுமுண்மையொன்றும்
சாகவெனாவெழுமெய்தளாடிவீழும்
† மாகமுநாகமுமண்ணும்வென்றவாளான். (௨௧)

நாரியரில்லையிஞ்ஞாலமேழுமென்னக்
கூரியவாள்கொடுகொன்றுநீக்கியானும்
பூரியரெண்ணிடைவீழ்வனென்றுபொங்கும்
‡ வீரியர்வீரம்விழுங்கிநின்றவேலான். (௨௨)

கய்யொடுகையைப்புடைக்கும்வாய்கடிக்கும்
பொய்யுரைகுற்றமெனப்புழுங்கிவாடும்
நெய்யெரியுற்றெனநெஞ்சழிந்துசோரும்
§ வய்யகமுற்றுநடந்தவாய்மைமன்னன். (௨௩)

ஒறுப்பினுமந்தரமுண்மையொன்றுமோவா
மறுப்பினுமந்தரமென்றுவாய்மைமன்னன்
பொறுப்பினுமிக்கிலைபோகிலாளைவாளால்
இறுப்பினுமாவதிரப்பதென்றெழுந்தான். (௨௪)

(வேறு.)

கோன்மேற்கொண்டிங்குற்றமகற்றிக்குறிகொண்டார்
போன்மேலுற்றதுண்டெனினன்றும்பொறையென்னாக்
கான்மேல்வீழ்ந்தான்கந்துகொல்யானைக்களிமன்னர்
மேன்மேல்வந்துமுந்திவணங்கிமிடைதாளான். (௨௫)

கொள்ளாளின்சேயிவ்வரசன்றன்கொண்டாலும்
நள்ளாதிந்தநானிலஞாலந்தனிலென்றும்
உள்ளாரெல்லாமோதவுவக்கும்புகழ்கொள்ளாய்
எள்ளாநிற்கும்வன்பழிகொண்டென்பயனென்றான். (௨௬)

* சீராமனைத் தன்னுயிராகக் கருதுபவனாதலின் "மைந்தனலாதுயிர் வேறிலாதமன்னன்" என்றார்.

† மண்ணுலகமும் விண்ணுலகமும் பாதலமும் வாளால்வெற்றிகொண்டவனாதலின் தயரதனை "மாகமுநாகமு மண்ணும் வென்றவாளான்" என்றார். ‡ "வீரியர் வீரம்விழுங்குகின்ற வேலான்" வீரர்களுடைய வீரத்தைவிழுங்கி மேம்பட்டுநின்ற வேலையேந்திய அரசன்.

§ வையகமுற்று நடந்தவாய்மை மன்னன் நிலவுலகமுழுதும்சென்று பரந்த உண்மையைப்பூண்ட வரசன்.

வானோர்கொள்ளார்மண்ணவருய்யாரினிமற்றென்
ஏனோர்செய்கையாரொடுநீயிவ்வரசாள்வாய்
யானேசொல்லக்கொள்ளவிசைந்தான்முறையாலே
தானேநல்குமுன்மகனுக்குந்தரையென்றான். (௨௭)

கண்ணேவேண்டுமென்னினுமீயக்கடவேனென்
உண்ணேராவிவேண்டினுமின்றேயுனதன்றோ
பெண்ணேவண்மைக்கேகயன்மானேபெறுவாயேல்
மண்ணேகொண்ணீமற்றையதொன்றுமறவென்றான். (௨௮)

வாய்தந்தேனென்றேனினியானேவதுமாற்றேன்
நோய்தந்தென்னைநோவனசெய்துநுவலாதே
* தாய்தந்தென்னத்தன்னையிரந்தாற்றழல்வெங்கட்
பேய்தந்தீயுநீயிதுதந்தாற்பிழையாமோ. (௨௯)

இன்னேயின்னேபன்னியிரந்தானிகல்வேந்தன்
தன்னேரில்லாத்தீயவளுள்ளந்தடுமாறாள்
முன்னேதந்தாயிவ்வரநல்காய்முனிவாயேல்
என்னேமன்னோயாருளர்வாய்மைக்கினியென்றாள். (௩௦)

அச்சொற்கேளாவாவிபுழுங்காவயர்கின்றான்
பொய்ச்சொற்கேளாவாய்மொழிமன்னன்பொறைகூர
நச்சுத்தீயேபெண்ணுருவன்றோவெனநாணு
† முச்சத்தார்போற்பின்னுமிரந்தேமொழிகின்றான். (௩௧)

நின்மகனாள்வானீயினிதாள்வாய்நிலமெல்லாம்
உன்வயமாமேயாளுதிதந்தேனுரைகுன்றேன்
என்மகனென்கண்ணென்னுயிரெல்லாவுயிர்கட்கும்
நன்மகனிந்தநாடிறவாமைநயவென்றான். (௩௨)

மெய்யேயென்றன்வேரறநாறும்வினைநோக்கி
நய்யாநின்றேனுவுமுலர்ந்தேனயினம்போல்
கய்யாணின்றென்கண்ணெதிர்நின்றுங்கழிவாயேல்
உய்யேனங்காயுன்னபயமென்னுயிரென்றான். (௩௩)

இரந்தான்சொல்லுமின்னுரைகொள்ளாண்முனிவெஞ்சாள்
மரந்தானென்னுநெஞ்சினளஞ்சாள்வசைபாராள்
§ சரந்தாவில்லாய்தந்தவரத்தைத்தவிரென்றல்
உரந்தானல்லானல்லறமாமோவுரையென்றாள். (௩௪)

---

* தந்தையென்றது தந்தென்ன நின்றது தொகுத்தல்விகாரம்.
† முச்சத்தார்போல்-மனமடங்கிய பெரியோரைப்போல.
‡ வாளிகளைவிடுகின்ற வில்லையுடையாயென்பார். சரந்தாவில்லாய்-அம்புதாவும் வில்லையேந்திய அரசனே.

கொடியாளின்னகூறினள்கூறக்குலவேந்தன்
முடிசூடாமற்காத்தலுமொய்கானிடைமெய்யே
நெடியானீங்கநீங்குமென்னுவியினியென்று
இடியேறுண்டமால்வரைபோன்மண்ணிடைவீழ்ந்தான். (௩௫)

வீழ்ந்தான்வீழாவெந்துயரத்தின்கடல்வெள்ளத்
தாழ்ந்தானுமாவக்கடலுக்கோர்கரைகாணுன்
சூழ்ந்தாடுன்பஞ்சொற்கொடியாள்சொற்கொடுநெஞ்சம்
போழ்ந்தாளுள்ளப்புன்மையைநோக்கிப்புலர்கின்றான். (௩௬)

ஒன்றாகின்றவாருயிரோடுமுயிர்கேள்வர்
பொன்றாமுன்னம்பொன்றினரென்னும்புகழல்லால்
* இன்றோர்காறுமெல்வளையார்தம்மிறையோரைக்
கொன்றாரில்லைக்கொல்லுதியோநீகொடியாளே. (௩௭)

ஏவம்பாராயினமுறைநோக்காயறமெண்ணாய்
ஆவென்பாயோவல்லைமனத்தாலருள்கொன்றாய்
நாவம்பாலென்னாருயிருண்டாயினிஞாலம்
பாவம்பாராதின்னுயிர்கொள்ளப்படுகின்றாய். (௩௮)

எண்பாலோவாநாண்மடமச்சம்மிவையேதம்
பூண்பாலாகக்காண்பவர்நல்லார்புகழ்பேணி
நாண்பாலோராநங்கையர்தம்பாலனுகாரே
ஆண்பாலாரேபெண்பாலாரோடடைவம்மா. (௩௯)

மண்ணாள்கின்றாராகிவலத்தான்மதியால்வைத்
தெண்ணாகின்றார்யாரையுமெல்லாவிகலாலும்
விண்ணோர்காறும்வென்றவெனக்கென்மனைவாழும்
பெண்ணால்வந்ததந்தரமென்னப்பெறுவேனோ. (௪0)

என்றென்றுன்னும்பன்னியிரக்குமிடர்தோயும்
ஒன்றொன்றொவ்வாவின்னலுழக்குமுயிருண்டோ
இன்றின்றென்னும்வண்ணமயங்குமிடியும்பொன்
குன்றொன்றொன்றோடொன்றியதென்னக்குவிதோளான். (௪௧)

ஆழிப்பொற்றேர்மன்னவனிவ்வாறயர்வெய்திப்
பூழிப்பொற்றோண்மூற்றுமடங்கப்புரள்போழ்தில்
ஊழிற்பொய்த்தாலென்னுரையின்றேயுயிர்மாய்வென்
பாழிப்பொற்றார்மன்னவவென்றாள்பசையற்றாள். (௪௨)

* இன்றோர்காறும்-இற்றைவரையும்.

* அரிந்தான்முன்னோர்மன்னவனன்றேயருமேனி
வரிந்தார்வில்லாய்வாய்மைவளர்ப்பான்வரநல்கிப்
பரிந்தாலென்னாமென்றனள்பாயுங்கனலேபோல்
எரிந்தாறாதேயின்னுயிருண்ணுமெரியன்னாள். (௪௩)

வீய்ந்தாளேயிவ்வெய்யவளென்னாவிடல்வேந்தன்
ஈய்ந்தேனீய்ந்தேனிவ்வரமென்சேய்வனமாள
மாய்ந்தேநான்போய்வானுலகாள்வென்வசைவெள்ளம்
நீய்ந்தாய்நீய்ந்தாய்நின்மகனோடுநெடிதென்றான். (௪௪)

கூறாமுன்னங்கூறுபடுக்குங்கொலைவாளின்
ஏறாமென்னும்வன்றுயராகத்திடையழுந்தத்
தேறானாகிச்செய்கைமறந்தான்செயன்முற்றி
ஊறாநின்றசிந்தையினாளுந்துயில்வுற்றாள். (௪௫)

(வேறு.)

† சேணுலாவியநாளெலாமுயிரொன்றுபோல்வனசெய்துபின்
ஏணுலாவியதோளினானிடரெய்தவொன்றுமிரங்கிலா
வாணிலாநகைமாதராள்செயல்கண்டுமைந்தர்முனிற்கவும்
நாணினாலெனவேகினாளிர்கங்குலாகியநங்கையே. (௪௬)

‡ எண்டருங்கடைசென்றயாமமியம்புகின்றனவேழையால்
வண்டுதங்கியதொங்கன்மார்பன்மயங்கிவிம்மியவாறெலாம்
கண்டுநெஞ்சுகலங்கியஞ்சிறையானகாமர்துணைக்கரம்
கொண்டுதம்வயிறெற்றியெற்றிவிளிப்பபோன்றனகோழியே. (௪௭)

தோய்கயத்துமரத்துமென்சிறைதுள்ளிநீர்தெழுபுள்ளெலாம்
தேய்கையொத்தமருங்குன்மாதர்சிலம்பினின்றுசிலம்புவ
§ கேகயத்தரசன்பயந்தவிடத்தையின்னதொர்கேடுசூழ்
மாகயத்தியையுட்கொதித்துமனத்துவைவனபோன்றவே. (௪௮)

சேமமென்பனபற்றியன்புசிறந்தவின்றுயில்செய்தபின்
வாமமேகலைமங்கையோடுவனத்துள்யாருமறக்கிலா
நாமநம்பிநடக்குமென்றுநடுங்குகின்றமனத்தவாய்
யாமுமிம்மணிநத்துமென்பனபோலெழுந்தனயானையே. (௪௯)

* அரிந்தான்முன்னோர் மன்னவன். சிபியரசன்; 'இதனை பறவைக்கு மாறாகவழங்கினனால்' என இவ்வாசிரியர் முற்கூறலானும் என்புமுரியர் பிறர்க்கு, என்புழிப்பரிமேலழகர் கூறலானுமுணர்க. † சேணுலாவிய நாளெலா முயிரொன்றுபோல்வனசெய்து-கடந்த பலநாளெல்லாம் இருவருக்கும் உயிரொன்று என்னவொத்த காரியங்களைச் செய்து. ‡ பகலுமிரவுமாமெண் யாமத்துக்கடையாகலின் எண்டருங்கடை சென்றயாமமென்றார். § அரசனுக்குயிரைநீக்க வரங்கோடலின் கேகயத்தரசன் பயந்தவிடத்தை என்றார்.

* சிரித்தபங்கயமொத்தசெங்கணிராமனைத்திருமாலையக்
கரிக்கரம்பொருகைத்தலத்துயர்காப்புநாணணிதற்குமுன்
வரித்ததண்கதிர்முத்ததாகியிம்மண்ணைத்துநிழற்றமேல்
விரித்தபந்தர்பிரித்ததாமெனமீனொளித்தனவானமே. (௫௦)

† நாமவிற்கையிராமனைத்தொழுநாளடைந்தநமக்கெலாம்
காமவிற்குடைகங்குன்மாலைகழிந்ததென்பதுகற்பியாத்
தாமொலித்தனபேரியவ்வொலிசாரன்மாரிதழுங்கலா
மாமயிற்குலமென்னமுன்னமலர்ந்தெழுந்தனர்மாதரே. (௫௧)

இனமலர்க்குலம்வாய்விரித்திளவாசமாருதம்வீசமுன்
புனைதுகிற்கலைசோரநெஞ்சுபுழுங்கினார்சிலபூவைமார்
மனமனுக்கம்விடத்தணித்தனிவள்ளலைப்புணர்கள்ளவன்
கனவினுக்கிடையூறடுக்கமயங்கினார்சிலகன்னிமார். (௫௨)

‡ சாயடங்கநலங்கலந்துதயங்குதன்குலநன்மையும்
போயடங்கநெடுங்கொடும்பழிகொண்டரும்புகழ்சிந்துமத்
தீயடங்கியசிந்தையாள்செயல்கண்டுசீரியநங்கைமார்
வாயடங்கினவென்னவந்துகுவிந்தவண்குமுதங்களே. (௫௩)

மொய்யராகநிரம்பவாசைமுருங்குதீயின்முழுங்கமேல்
வய்யராவியமாரன்வாளியும்வாணிலாநெடுவாடையும்
மெய்யராவிடவாவிசோரவெதும்பு § மாதர்தமின்செவிப்
பய்யராநுழைகின்றபோன்றனபண்கனிந்தெழுபாடலே. (௫௪)

ஆழியான்முடிசூடுநாளிடையானபாவியிதோவிரா
வூழியாயினவாறெனா $ வுயர்போதின்மேலுறைபேதையும்
ஏழுலோகமுமெண்டவஞ்செய்தகண்ணுமெங்கண்மனங்களும்
வாழுநாளிதெனாவெழுந்தனர்மஞ்சுதோய்புய ¶ மஞ்சரே. (௫௫)

ஐயுறுஞ்சுடர்மேனியானெழில்காணமூளுமவாவினால்
கொய்யுறுங்குலமாமலர்க்குவைநின்றெழுந்தனர்கூர்மைகூர்
நெய்யுறுஞ்சுடர்வேனெடுங்கண்முகிழ்த்துநெஞ்சினினைப்பொடும்
பொய்யுறங்குமடந்தைமார்குழல்வண்டுபொம்மெனவிம்மவே. (௫௬)

ஆடகந்தருபூண்முயங்கிடவஞ்சியஞ்சியநந்தரால்
எடகம்பொதிதார்பொருந்திடயாமபேரியிசைத்தலால்

---

* மலர்ந்ததாமரை மலரையொத்தமையின் செங்கணிராமனென்றார்.

† யாவருக்குமச்சம் விளைக்கும் வில்லாகலின் 'நாமவில்' என்றார். அது கோதண்டத்தை. ‡ சாயனமேன்மை என்புழிச்சாயல் கடைக்குறைந்தது. § மாதர்மயலாற் பண்கனிந்தெழுபாடல் இன்செவிப்பையராநுழைகின்றபோன்றன என்றுவமைகூறினார். $ உயர்போதின் மேலுறைபேதை-மணமிக்கதாமரைமேல் வசிக்கு மிலக்குமி.

¶ மைந்தர்-மஞ்சர் மரூஉ.

சேடகம்புனைகோதைமங்கையர்சிந்தையிற்செறிதிண்மையால்
ஊடல்கண்டவர்கூடல்கண்டிலர்நையுமைந்தர்களுய்யவே. (௫௭)

தழையொலித்தனவண்டொலித்தனதாரொலித்தனபேரியாம்
முழவொலித்தனதேரொலித்தனமுத்தொலித்தெழுமல்குலார்
இழையொலித்தனபுள்ளொலித்தனயாழொலித்தனவெங்கணும்
மழையொலித்தனபோல்கலித்துமனத்தின்முந்துறுவாசியே. (௫௮)

வையமேழுமொரேழுமாருயிரோடுகூடவழுங்குமம்
மெய்யன்வீரருள்வீரன்மாமகன்மேல்விளைந்ததொர்காதலால்
நையநையநலம்புலன்களவிந்தடங்கிநடுங்குவான்
தெய்வமேனிபடைத்தசேயொளிபோன்மழுங்கினதீபமே. (௫௯)

வங்கியம்பலதேன்விளம்பினவாணிமுத்தினபாணியின்
பங்கியம்பரமெங்கும்விம்மினபம்பைபம்மினபல்வகைப்
பொங்கியம்பலவுங்கறங்கினநூபுரங்கள்புலம்பவெண்
சங்கியம்பினகொம்பலம்பினசாமகீதநிரம்பவே. (௬0)

தூபமுற்றியகாரிருட்பகைதுள்ளியோடிடவுள்ளெழும்
தீபமுற்றவுநீர்த்ததன்றெனசேயதாருயிர்தேய்தலால்
பாபமுற்றியபேதைசெய்தபகைத்திறத்தினில்வெய்யவன்
கோபமுற்றிமிகச்சிவந்தனனொத்தனன்குணக்குன்றிலே. (௬௧)

மூவராய்முதலாகிமூலமதாகிஞாலமுமாகியத்
* தேவதேவர்பிடித்தபோர்விலொடித்தசேவகர்சேணிலங்
காவன்மாமுடிசூடுபேரெழில்காணலாமெனுமாசைகூர்
பாவைமார்முகமென்னமுன்னமலர்ந்தபங்கயராசியே. (௬௨)

இன்னவேலையினேழுவேலையுமொத்தபோலவிரைத்தெழுந்
தன்னமாநகர்மைந்தன்மாமுடிசூடும்வைகலிதாமெனாத்
துன்னுகாதலுரப்பவந்தவைசொல்லலாம்வகையெம்மனோர்க்
குன்னலாவனவல்லவென்னினுமுற்றபெற்றியுணர்த்துவாம். (௬௩)

வேறு.

குஞ்சரமனையார்சிந்தைகொளினையார்
பஞ்சினையணிவார்பால்வளைதெரிவார்
அஞ்சனமெனவாளம்புகளிடையே
நஞ்சினையிடுவார்நாண்மலர்புனைவார். (௬௪)

வேறு.

பொங்கியவுவகைவெள்ளம்பொழிதரக்கமலம்பூத்த
சங்கையின்முகத்தார்நம்பிதம்பியரனையரானார்

---

* தேவதேவர்-தேவர்களுக்குத் தேவனாயுள்ள உருத்திரமூர்த்தி.

செங்கயனறவமாந்திக்களிப்பெனச்சிவக்குங்கண்ணோர்
குங்குமச்சுவடுநீங்காக்குவவுத்தோட்குமரரெல்லாம். (௬௫)

மாதர்கள்கற்பின்மிக்கார்கோசலைமனத்தையொத்தார்
வேதியர்வசிட்டனொத்தார்வேறுளமகளீரெல்லாம்
சீதையையொத்தாரன்னடிருவினையொத்தாளவ்வூர்
சாதுகைமாந்தரெல்லாந்தயரதன்றன்னையொத்தார். (௬௬)

இமிழ்திரைப்பரவைஞாலமெங்கணும்வறுமைகூர
உமிழ்வதொத்துதவுகாதலுங்கிடவந்ததன்றே
குமிழ்முலைச்சீதைகொண்கன்கோமுடிபுனைதல்காண்பான்
அமிழ்துணக்குழுவுகின்றவமரினரச * வெள்ளம். (௬௭)

பாகியல்பவளச்செவ்வாய்ப்பணைமுலைப்பரவையல்குல்
தோகையர்குழாமுமைந்தர்சும்மையுந்துவன்றியெங்கும்
ஏகுமினேகுமென்றென்றிடையிடைநிற்றலல்லால்
போகிலர்மீள்கில்லாபொன்னகர்வீதியெல்லாம். (௬௮)

வேந்தரேபெரிதென்பாரும்வீரரேபெரிதென்பாரும்
மாந்தரேபெரிதென்பாருமகளிரேபெரிதென்பாரும்
போந்ததேபெரிதென்பாரும்புகுவதேபெரிதென்பாரும்
தேர்ந்ததேதேரினல்லால்யாவரேதெரியக்கண்டார். (௬௯)

குவளையின்எழிலும்வேலின்கொடுமையுங்குழைத்துக்கூட்டித்
திவளுமஞ்சனமென்றேய்ந்தநஞ்சினைத்தெரியத்தீட்டித்
தவளவொண்மதியுள்வைத்ததன்மைசாறடங்கணல்லார்
துவளுநுண்ணிடையாராடுந்தோகையங்குழாத்திற்றொக்கார். (௭0)

நலங்கிளர்பூமியென்னுநங்கையைநறுந்துழாயின்
அலங்கலான்புணருஞ்செல்வங்காணவந்தடைந்திலாதார்
இலங்கையினிருதரேயிவ்வேழுலகத்துவாழும்
விலங்கலுமாசைநின்றவிடாமதவிலங்கலேயால். (௭௧)

சந்திரர்கோடியென்னத்தரளவெண்கவிகையோங்க
அந்தரத்தன்னமெல்லாமார்ந்தெனக்கவரிதுன்ன
இந்திரற்குவமைசாலுமிருநிலக்கிழவரெல்லாம்
வந்தனர்மௌலிசூட்டுமண்டபமரபிற்புக்கார். (௭௨)

முற்பயந்தெடுத்தகாதற்புதல்வனைமுறையினோடும்
இற்பயன்சிறப்பிப்பாரினீண்டியவுவகைதூண்ட

* பொருளாற் பன்மையாயினும் வெள்ளம் என்னுஞ்சொல் ஒருமையாதலால் வந்தது என ஒருமை முடிபுதந்து கூறினார்.

அற்புதன்றிருவைச்சேருமருமணங்காணப்புக்கார்
நற்பயன்றவத்தினுய்க்குநான்மறைக்கிழவரெல்லாம். (௭௩)

விண்ணவர்விசும்புதூர்த்தார்விரிதிரையுடுத்தகோல
மண்ணவர்திசைகடூர்த்தார்மங்கலவிசைக்குஞ்சங்கம்
கண்ணகன்முரசினோதை * கண்டவர்செவிகடூர்த்த
எண்ணருங்கனகமாரியெழுதிரைக்கடல்கடூர்த்த. (௭௪)

விளக்கொளிமறைத்தமன்னர்மின்னொளிமகுடகோடி
துளக்கொளிவிசும்பினூருஞ்சுடரையுமறைத்தசூழ்ந்த
அளக்கர்வாய்முத்தமுரன்முறுவலாரணியின்சோதி
வளைக்கலாமென்றவ்வானோர்கண்ணையுமறைத்தவன்றே. (௭௫)

ஆயதோரமைதியின்கணையனைமகுடஞ்சூட்டற்
கேயமங்கலங்களானயாவையுமியையக்கொண்டு
தூயநான்மறைகள் † வேதபாரகர்சொல்லத்தொல்லை
வாயில்கணெருக்கநீங்கமாதவக்கிழவன்வந்தான். (௭௬)

கங்கையேமுதலவாயகன்னதிப்புனறீர்த்த
மங்கலப்புனலு ‡ நாலுவாரியினீரும்பூரித்
தங்கியின்வினையிற்கேற்றயாவையுமமைத்துவீரச்
சிங்கவாதனமும்வைத்துச்செய்வனபிறவுஞ்செய்தான். (௭௭)

கணிதநூலுணர்ந்தமாந்தர்காலம்வந்தடுத்ததென்னப்
பிணியறநோற்றுநின்றபெரியவன்விரைவினேகி
மணிமுடிவேந்தன்றன்னைவல்லையிற்கொணர்தியென்னப்
பணிதலைநின்றகாதற்சுமந்திரன்பரிவிற்சென்றான். (௭௮)

விண்டொடநிவந்தகோயில்வேந்தர்தம்வேந்தன்றன்னைக்
கண்டிலன்வினவக்கேட்டான்கைகயள்கோயினண்ணி
தொண்டைவாய்மடந்தைமாரிற்சொல்லமற்றவருஞ்சொல்லப்
§ பெண்டிரிற்கூற்றமன்னாள்பிள்ளையைக்கொணர்கவென்றாள். (௭௯)

என்றனளென்னக்கேட்டானெழுந்தபேருவகைபொங்கப்
பொன்றிணிமாடவீதிபொருக்கெனநீங்கிப்புக்கான்
தன்றிருவுள்ளத்துள்ளேதன்னையேநினையுமற்றக்
குன்றிவர்தோளினானைத்தொழுதுவாய்புதைத்துக்கூறும். (௮0)

கொற்றவர்முனிவர்மற்றுங்குவலயத்துள்ளாருன்னைப்
பெற்றவன்றன்னைப்போலப்பெரும்பரிவியற்றிநின்றார்

---

* கேட்டவரைக் கண்டவரென்றது உருபு மயக்கம்.
† வேதபாரகர்-வேதபாராயணஞ்செய்பவர்.
‡ நாலுவாரி-நாற்றிசைக்கடல்.
§ தன்கணவனை உயிர்கொல்லச்சமைந்தவளாகலிற் 'பெண்டிரிற்கூற்றமன்னாள்' ளென்றார்.

சிற்றவைதானுமாங்கேகொணர்கெனச்செப்பினளப்
பொற்றடமகுடஞ்சூடப்போதுதிவிரைவினென்றான். (அக)

ஐயனுமச்சொற்கேளாவாயிரமௌலியானைக்
கைதொழுதரசவெள்ளங்கடலெனத்தொடர்ந்துசுற்றத்
தெய்வகீதங்கள்பாடத்தேவருமகிழ்ந்துவாழ்த்தத்
தையலாரிரைத்துநோக்கத் * தாரணிதேரிற்சென்றான். (அஉ)

திருமணிமகுடஞ்சூடச்சேவகன்செல்கின்றானென்
றொருவரினொருவர்முந்தக்காதலோடுவகையுந்த
இருகையுமிரைத்துமொய்த்தாரினுயிர்யார்க்குமொன்றாய்ப்
பொருவருந்தேரிற்செல்லப்புறத்திடைக்கண்டார்போல்வார். (அங)

துண்ணெனுஞ்சொல்லாள்சொல்லச்சுடர்முடிதுறந்துதூய
மண்ணெனுந்திருவைநீங்கிவழிக்கொளாமுன்னம்வள்ளல்
பண்ணெனுஞ்சொல்லினார்தந்தோளெனும்பணைத்தவேயும்
கண்ணெனுங்காலவேலுமிடைநெடுங்கானம்புக்கான். (அச)

சுண்ணமுமலருஞ்சாந்துங்கனகமுந்தூவவந்து
வண்ணமேகலையுநாணும்வளைகளுநந்துவாரும்
புண்ணுறவணங்கன்வாளிபுழைத்ததம்புணர்மென்கொங்கை
கண்ணுறப்பொழிந்தகாமவெம்புனல்கழுவுவாரும். (அரு)

அங்கணனவனிகாத்தற்காமிவனென்னலாமோ
நங்கணன்பிலனென்றுள்ளந்தள்ளுறநடுங்கிநைவார்
செங்கணுங்கரியகோலமேனியுந்தேருமாகி
எங்கணுந்தோன்றுகின்றானொருவனோவிராமனென்பார். (அசா)

இனையராமகளிரெல்லாமிரைத்தனர்நிரைத்துமொய்த்தார்
‡ முனைவருநகரமூதார்முதியருமிளைஞர்தாமும்
அனையவன்மேனிகண்டாரன்பினுக்கெல்லைகாணார்
நினைவினர்மனத்தால்வாயானிகழ்ந்ததுநிகழ்த்தலுற்றார். (அஎ)

உய்ந்ததிவ்வுலகமென்பாரூழிகாண்கிற்பாயென்பார்
மைந்தநீகோடியெங்கள்வாழ்க்கைநாளியாவுமென்பார்
ஐந்தவித்தாரிற்செய்ததவமுனக்காகவென்பார்
பைந்துழாய்த்தெரியலாய்க்கேநல்வினைபயக்கவென்பார். (அஅ)

‡ உயாருளொண்கணுக்குந்தாமரைநிறத்தையொக்கும்
புயல்பொழிமேகமென்னபுண்ணியஞ்செய்தவென்பார்

---

* தாரணிதேர்-பொன்னரிமாலையாலலங்கரித்ததேர்.

† முனைவர்-முற்றத்துறந்த முனிவர்.

‡ உயாருளொண்கணுக்கும். (க) எல்லாநற்குணங்களிலுமுயர்ந்த கருணையானது இவனது ஒள்ளிய திருநோக்கத்தை யொத்துத்தோன்றும். (உ) தாமரை நிறத்தையொக்கும்.

செயலருந்தவங்கள்செய்திச்செம்மலைத்தந்தசெல்வத்
தயரதற்கென்னகைம்மாறுடையம்யாந்தக்கதென்பார். (௮௯)

வாரணமரற்றவந்துகராவுயிர்மாற்றுநேமி
நாரணனொக்குமிந்தநம்பிதன்கருணையென்பார்
ஆரணமறிதறேற்றாவையனையணுகிநோக்கிக்
காரணமின்றியேயுங்கண்கணீர்கலுழ்கிற்பார். (௯௰)

நீலமாமுகிலனான்ற * னிறையினோடறியுநிற்க
சீலமார்க்குண்டுகெட்டேன்றவரினடங்குவானோ
காலமாக்கணிக்குநுண்மைக்கணக்கையுங்கடந்துநின்ற
மூலமாய்முடிவிலாதமூர்த்தியிம்முன்பனென்பார். (௯௧)

† ஆர்கலியகழ்ந்தோர் ‡ கங்கையவனியிற்கொணர்ந்தோர்முந்தைப்
போர்கெழுபுலவர்க்காகி § யசுரரைப்பொருதுவென்றோர்
பேர்கெழுசிறப்பின்வந்தபெரும்புகழ்நிற்பதையன்
றார்கெழுதிர $ டோடந்தபுகழினைத்தழுவியென்பார். (௯௨)

வேறு.

சந்தமிவைதாவின்மணியானவிவையாவும்
சிந்துரமுமிங்கிவைசெறிந்தமதவேழப்
பந்திகள்வயப்பரிபசும்பொனின்வெறுக்கை
மைந்தவறியோர்கொளவழங்கெனநினைப்பார். (௯௩)

மின்பொருவுதேரின்மிசைவீரன்வருபோழ்தில்
தன்பொருவில்கன்றுதனிதாவிவரல்கண்டாங்
கன்புருகுசிந்தையொடுமாவுருகுமாபோல்
என்புருகிநெஞ்சுருகிநஞ்சுருகிநிற்பார். (௯௪)

சத்திரநிழற்றநிமிர்தானையொடுநானோ
அத்திரநிழற்றவருளோடவனியாள்வார்
புத்திரரினிப்பெறுதல்புல்லிதெனநல்லோர்
சித்திரமெனத்தனிதிகைத்துருகிநிற்பார். (௯௫)

கார்மினொடுலாயதெனநூல்கஞலுமார்பன்
தேர்மிசைநம்வாயில்கடிதேகுதல்செய்வானோ
கூர்கனகராசியொடுகோடிமணியாலும்
தூர்மி ¶ னெடுவீதியினையென்றுசொரிவாரும். (௯௬)

---

* நிறை-விதிவழிநிற்றல். † ஆர்கலியகழ்ந்தோர்-அறுபதினாயிரஞ் சகரர்கள். ‡ கங்கையை யவனியிற்கொணர்ந்தோன்-பகீரதன். § அசுரரைப்பொருதுவென்றோர்-மாந்தாதா முதலியோர். $ தோள்தந்தபுகழ்-இராமர், தாடகை, பரசுராமர் முதலியோரையும் வென்றதனால் வந்த புகழ். ¶ நெடுவீதி-அரசவீதி.

தாய்கையில்வளர்ந்திலன்வளர்த்ததுதவத்தால்
கேகயன்மடந்தைகிளர்ஞாலமிவனாள
ஈகையிலுவந்தவவ்வியற்கையிதுவென்றால்
தோகையிவள்பேருவகைசொல்லலரிதென்பார். (கஎ)

பாவமுமருந்துயருரும்வேர்பறியுமென்பார்
* பூவலயமின்றுதனியன்றுபொதுவென்பார்
தேவர்பகையுள்ளனவிவ்வள்ளறெறுமென்பார்
ஏவல்செயுமன்னர்தவம்யாவதுகொலென்பார். (கஅ)

ஆண்டிணையராயிணையகூறவடல்வீரன்
தூண்டுபுரவிப்பொருவில்சுந்தரமணித்தேர்
நீண்டகொடிமாடநிரைவீதிநிறையப்போய்ப்
பூண்டபுகழ்மன்னனுறைகோயில்புகலோடும். (கக)

வேறு.

ஆங்குவந்தடைந்தவண்ணலாசையின்கவரிவீசப்
பூங்குழன்மகளிருள்ளம்புதுக்களியாடநோக்கி
வீங்கிருங்காதல்காட்டிவிரிமுகக்கமலமீடத்
தோங்கியமகுடஞ்சூடியுவகையீற்றிருப்பக்காணான். (க00)

வேத்தவைமுனிவரோடிருப்பொடுசுடிக்குமெய்மை
ஏத்தவையிசைக்குஞ்செம்பொன்மண்டபமினிதினெய்தான்
ஒத்தவையுலகத்தெங்குமுள்ளவையுணர்ந்தாருள்ளம்
பூத்த † வைவடிவைவொப்பான்சிற்றவைகோயில்புக்கான். (க0க)

புக்கவன்றன்னைநோக்கிப்புரவலர்முனிவர்யாரும்
தக்கதேதின்னேர்தான்றாதைதாமரைச்சரணஞ்சூடித்
திக்கினைமிர்த்தகோலச்செல்வனேசெம்பொற்சோதி
மிக்குயர்மகுடஞ்சூட்டச்சூடுதல்விழுமிதென்றார். (க0உ)

ஆயனநிகழும்வேலேயண்ணலுமயர்ந்துதேறுத்
தூயவனிருந்தசூழறுருவினன்வருதனோக்கி
நாயகனுரையான்வாயாஞனிதுபகர்வெனென்றுத்
தாயெனநினைவான்முன்னேகூற்றெனத்தமியள்வந்தாள். (க0௩)

* பூவலயமின்று தனியன்று பொதுவென்பதற்கு வட்டமாகிய நிலவுலகம் இன்று தனிமை அவன் பிறவாதமுன்பொது வென்பதன்றி இற்றைநாள் சீராமனுக்கே நிலவலயமுரித்து பலர்க்கு முரித்தன்றெனக் கொள்ளலுமாம்.

† ஐவடிவு-பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அச்சாவதாரம் பரத்துவம்:—ஸ்ரீவைகுந்தத்தில் எழுந்தருளியிருத்தல். வியூகம்:—திருப்பாற்கடலி லறிதுயிலமர்ந்திருத்தல். விபவம்:—இராமாவதாரமுதலிய திருவவதாரங்கள். அந்தரியாமித்துவம்:—அடியவர் மனங்களிலிருத்தல். அச்சாவதாரம்:—திருக்கோயிலிலெழுந்தருளி யிருத்தல்.

வந்தவடன்னைச்சென்னிமண்ணுறவணங்கிவாய்த்த
சிந்தூரப்பவளச்செவ்வாய்செங்கையிற்புதைத்துமற்றைச்
சுந்தரத்தடக்கைதானைமடக்குறத்துவண்டுநின்றான்
அந்திவந்தடைந்ததாயைக்கண்டவான்கன்றினன்னான். (௧௦௪)

நின்றவன்றன்னைநோக்கியிரும்பினைலியைந்தநெஞ்சிற்
கொன்றுழல்கூற்றமென்னும்பெயரின்றிக்கொடுமைபூண்டாள்
இன்றெனக்குணர்த்தலாவதேயதேயென்னினுைகும்
ன்றுனக்குந்தைமைந்தவுரைப்பதோருரையுண்டென்றாள். (௧௦௫)

ந்தையேயேவநீரேயுரைசெயவியைவதுண்டேல்
ய்ந்தனனடியேனென்னிற்பிறந்தவருளரோவாழி
ந்ததென்றவத்தினையவருபயன்மற்றொன்றுண்டோ
ைதயுந்தாயுநீரேதலைநின்றேன்பணிமினென்றான். (௧௦௬)

ழிசூழுலகமெல்லாம்பரதனேயாளநீபோய்த்
ழிருஞ்சடைகடாங்கித்தாங்கருந்தவமேற்கொண்டு
ழிவெங்கானநண்ணிப்புண்ணியத்துறைகளாடி
ழிரண்டாண்டின்வாவென்றியம்பினனரசனென்றாள். (௧௦௭)

ப்பொழுதெம்மனோராலியம்புதற்கெளிதேயாரும்
சப்பருங்குணத்திராமன்றிருமுகச்செவ்விநோக்கில்
ப்பதேமுன்புபின்பவ்வாசகமுணரக்கேட்ட
ப்பொழுதலர்ந்தசெந்தாமரையினைவென்றதம்மா. (௧௦௮)

தருளுடைமனத்துமன்னனேவலிற்றிறம்பவஞ்சி
ருளுடையுலகந்தாங்குமின்னலுக்கியைந்துநின்றான்
ருளுடைச்சகடம்பூண்டவுடையவனுய்த்தகாரே
நுளுடையொருவனீக்கவப்பிணியவிழ்ந்ததொத்தான். (௧௦௯)

ன்னவன்பணியன்றாகினும்பணிமறுப்பனோவென்
ன்னவன்பெற்றசெல்வமடியனேன்பெற்றதன்றோ
ன்னினியுறுதியப்பாலிப்பணிதலைமேற்கொண்டேன்
ன்னெளிர்கானமின்றேபோகின்றேன்விடையுங்கொண்டேன். (௧௧௦)

௩-வது; கைகேசிசூழ்வினைப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௬௫.

---

## ச-வது, நகர்நீங்குபடலம்.

என்றுகொண்டினையகூறியடியிணையிறைஞ்சிமீட்டுந்
தன்றுணைத்தாதைபாதமத்திசைநோக்கித்தாழ்ந்து
பொன்றிணிபோதினாளும்பூமியும்புலம்பினையக்
குன்றினுமுயர்ந்ததோளான்கோசலைகோயில்புக்கான். (க)

குழைக்கின்றகவரியின்றிக்கொற்றவெண்குடையுமின்றி
* இழைக்கின்றவிதிமுன்செல்லத்தருமம்பின்னிரங்கியேக
மழைக்குன்றமனையான்மௌலிகவித்தனன்வருமென்றென்று
தழைக்கின்றவுள்ளத்தன்னாண்முன்னொருதமியன்சென்றான். (உ)

புனைந்திலன்மௌலிகுஞ்சிமஞ்சனப்புனிதநீரால்
நனைந்திலனென்கொலென்னுமையத்தாணளினபாதம்
வனைந்தபொற்கழற்கால்வீரன்வணங்கலுங்குழைந்துவாழ்த்தி
நினைந்ததென்னிடையூறுண்டோநெடுமுடிபுனைதற்கென்றாள். (ங)

வேறு.

மங்கையம்மொழிகூறலு † மானவன்
செங்கைகூப்பிநின்காதற்றிருமகன்
பங்கமில்குணத்தெம்பிபரதனே
துங்கமாமுடிசூடுகின்றானென்றான். (ச)

முறைமையன்றென்பதொன்றுண்டுமும்மையின்
நிறைகுணத்தவனின்னினுநல்லனால்
குறைவிலனெனக்கூறினணால்வர்க்கும்
மறுவிலன்பினில்வேற்றுமைமாற்றினாள். (ரு)

என்றுபின்னருமன்னவனேவிய
தன்றெனாமைமகனேயுனக்கறன்
நன்றுநும்பிக்குநானிலநீகொடுத்
தொன்றிவாழுதியூழிபலவென்றாள். (சு)

தாயுரைத்தசொற்கேட்டுத்தழைக்கின்ற
தூயசிந்தையத்தோமில்குணத்தினான்
நாயகன்னெனைநன்னெறியுய்ப்பதற்
கேயதுண்டோர்பணியென்றியம்பினான். (எ)

ஈண்டுரைத்தபணியென்னையென்றவட்
காண்டொரேழிரண்டேழகன்கானிடை

* இழைக்கின்றவிதி-நிகழும் ஆதிசங்கற்பம்.

† மானவன் மனுகுலத்திற்றோன்றினான்-சீராமன்; இது தத்திதாந்த பதம்.

* மாண்டமாதவரோடுடன்வைகிப்பின்
மீண்டுநீவரல்வேண்டுமென்றுனென்றான். (அ)

ஆங்கவ்வாசகமென்னுமனல்குழை
தூங்குதன்செவியிற்றொடாமுனம்
ஏங்கினாளிளைத்தாடிகைத்தாண்மனம்
வீங்கினாள்விம்மினாள்விழுந்தாளரோ. (கூ)

வஞ்சமோமகனேயுனைமாநிலம்
தஞ்சமாகநீதாங்கென்றவாசகம்
† நஞ்சமோவினிநானுயிர்வாழ்வெனோ
அஞ்சுமஞ்சுமென்னாருயிரஞ்சுமால். (க0)

கையைக்கையினெரிக்குந்தன்காதலன்
வைகுமாலிலையன்னவயிற்றினைப்
பெய்வளைத்தளிராற்பிசையும்புகை
வெய்துயிர்க்கும்விழுங்கும்புழுங்குமால். (கக)

நன்றுமன்னன்கருணையெனநகும்
நின்றமைந்தனைநோக்கிநெடுஞ்சுரத்
தென்றுபோவதெனவெழுமின்னுயிர்
பொன்றும்போதுற்றதுற்றதுபோலுமே. (கஉ)

அன்பிழைத்தமனத்தரசற்கு
என்பிழைத்தனையென்றுநின்றோதுமால்
முன்பிழைத்தவறுமையின்முற்றினோர்
‡ பொன்பிழைக்கப்பொதிந்தனர்போலவே. (கங)

அறமெனக்கிலையோவெனுமாவிநைந்
திறவடுத்ததென்றெய்வதங்காளெனும்
பிறவுரைப்பதென்கன்றுபிரிந்துழிக்
கறவையொப்பக்கரைந்துகலங்கினாள். (கச)

இத்திறத்தினிடருறுவாடனைக்
கைத்தலத்தினெடுத் § தருங்கற்பினோய்
பொய்த்திறத்தினனுக்குதியோபுகல்
மெய்த்திறத்துநம்வேந்தனைநீயென்றான். (கரு)

---

* மாண்டமாதவர்-தவத்தால் மனந்தூய்மையானவர்.

† காடுசெல்லச் செய்ததாகலின் 'நஞ்சமோ' என்றார்.

‡ பொன்பிழைக்கப் பொதிந்தனர்போல, நடவையிற் செல்வங் கிடைப்பவதனையிழந்தவர்போல.

§ அருங்கற்பினோய்-கோசலையை.

* பொற்புறுத்தனமெய்ம்மைபொதிந்தன
† சொற்புறுத்தற்குரியனசொல்லினான்
‡ கற்புறுத்தியகற்புடையாடனை
வற்புறுத்திமனங்கொளத்தேற்றுவான். (௧௬)

நம்பிதிருவுறவெந்தையை
மறந்தும்பொய்யிலனாக்கிவனத்திடை
உறைந்துதீருமுறுதிபெற்றேனினிற்
பிறந்துயான்பெறும்பேறென்பதியாவதோ. (௧௭)

விண்ணுமண்ணுமிவ்வேலையுமற்றும்வே
றெண்ணும்பூதமெலாமிறந்தேகினும்
அண்ணலேவன்மறுக்கவடியனேற்
§ கொண்ணுமோவிதற்குள்ளழியேலென்றான். (௧௮)

ஆகினையவரசன்றனாணையால்
ஏகலென்பதியானுமுரைக்கிலென்
சாகலாவுயிர்தாங்கவல்லேனையும்
போகினின்னொடுங்கொண்டனைபோகென்றாள். (௧௯)

என்னைநீங்கியிடர்க்கடல்வைகுறும்
மன்னர்மன்னனைவற்புறுத்தாதுடன்
துன்னுகானந்தொடரத்துணிவதோ
அன்னையேயறம்பார்க்கிலையாமென்றான். (௨௦)

வரிவில்லெம்பியிம்மண்ணரசாயவற்
குரிமைமாநிலமுற்றபின்கொற்றவன்
திருவினீங்கித்தவஞ்செயுநாளுடன்
அருமைநோன்புகளாற்றுதியாமன்றே. (௨௧)

சித்தநீதிகைக்கின்றதென் $ றேவரும்
ஒத்தமாதவஞ்செய்துயர்ந்தாரன்றே
எத்தனைக்குளவாண்டுகளீண்டவை
¶ பத்துநாலும்பகலலவோவென்றான். (௨௨)

முன்னர்க்கோசிகனென்னுமுனிவரன்
தன்னருட்டலைதாங்கிய || விஞ்சையும்

---

* பொற்பு-அழகு. † சொற்பு-சொற்றன்மை. ‡ கற்பு-கணவன் வழிநிற்றல்.

§ ஒன்றுமோ-ஒண்ணுமோ என மரீஇயது.

$ தேவருந்தவஞ்செய்தே யுயர்ந்தாராகலின் 'தேவருமொத்த மாதவஞ்செய்துயர்ந்தார்' என்றார்.

¶ 'பத்துநாலுபகலலவோ'தேவமானத்தால்பதினான்குநாளல்லவா.

|| விஞ்சை-மந்திரம், விற்றொழில்.

பின்னரெய்தியபேறும்பிழைத்தவோ
இன்னநன்றவர்க்கேயினசெய்தலே. (உ௩)

மாதவர்க்குவழிபாடிழைத்தரும்
போதமுற்றிப்பொருவருவிஞ்சைகள்
ஏதமற்றனதாங்கியிமையவர்
காதல்பெற்றுநன்காவரக்காண்டியால். (உ௪)

மகரவேலைமண்டொட்டவண்டாடுதார்ச்
சகரர்தாதைபணிதலைநின்றுதம்
புகரில்யாக்கையினின்னுயிர்போக்கிய
நிகரின்மாப்புகழ்நின்றதன்றோவெனு. (உ௫)

மான்மறிக்கரத்தான்மழுவேந்துவான்
தான்மறுத்திலன்றந்தைசொற்றனையே
ஊனறக்குறைத்தானுரவோனருள்
யான்மறுப்பதென்றெண்ணுவதோவென்றான். (உ௬)

இத்திறத்தவெனைப்பலவாசகம்
உய்த்துரைத்தமகனுரையுட்கொளா
எத்திறத்துமிறக்குமிந்நாடென
மெய்த்திறத்துவிளங்கிழையுன்னுவாள். (உ௭)

அவனிகாவல்பரதனதாகுக
இவனிஞ்ஞாலமிறந்திருங்கானிடைத்
தவனிலாவகைகாப்பென்றகைவிலாப்
புவனிநாதற்றொழுதென்றுபோயினள். (உ௮)

போகின்றாளைத்தொழுதுபுரவலன்
ஆகமற்றவடன்னையுமாற்றியிச்
சோகந்தீர்ப்பவளென்றுசுமித்திரை
மேகந்தோய்தனிக்கோயிலைமேயினன். (உ௯)

நடந்தகோசலைகேகயநாட்டிறை
மடந்தைகோயிலையெய்தினண்மன்னவன்
கிடந்தபார்மிசைவீழ்ந்தனள்கெட்டுயிர்
உடைந்தபோழ்தினுடல்விழுந்தென்னவே. (௩0)

வேறு.

பிறியாற்பிறிவேதென்னும்பெரியோய்தகவோவென்னும்
நெறியோவடியேனிலைநினையாநினைவேதென்னும்
வறியோர்தனமேயென்னுந்தமியேன்வலியேயென்னும்
அறிவோவினையோவென்னுமரசேயரசேயென்னும். (௩௧)

இருளற்றிடவுற்றொளிருமிரவிக்கெதிருந்திகிரி
உருளத்தனியுய்த்தொருகோனடையிற்கடைகாணுலகம்
பொருளற்றிடமுற்றுறுமப்பகலிற்புகுதற்கென்றோ
அருளக்கருதிற்றிதுவோவரசர்க்கரசேயென்னும். (௫௨)

திரையார்கடல்சூழுலகின்றவமேதிருவின்றிருவே
நிரையார்கலையின்கடலேநெறியார்மறையின்னிலையே
கரையாவயர்வேனெனைநீகருணாலயனேயெனினென்
றுரையாவிதுதானழகோவுலகேழுடையாயென்னும். (௫௩)

* மின்னின்றனையமேனிவெறிதாய்விடநின்றதுபோல்
உன்னுந்தகைமைக்கடையாவுறுநோயுறநின்றுணரான்
இன்னென்றுரையானென்னேயிதுதான்யாதென்றறியேன்
மன்னன்றகைமைகாணவாராய்மகனேயென்னும். (௫௪)

இவ்வாறழுவாளிரியற்குரல்சென்றிசையாமுன்னம்
ஒவ்வாதொல்லாதென்றேவொளிவாணிருபர்முனிவர்
அவ்வாறறிவாயென்னவர்தான்முனிவன்னவனும்
வெவ்வாளரசன்னிலைகண்டென்னும்வினைவென்றானா. (௫௫)

இறந்தானல்லன்னரசனிறவாதொழிவானல்லன்
மறந்தானுணர்வென்றானவன்கேகயர்கோன்மங்கை
துறந்தாயறந்தன்னைத்துறவாதொழிவாளிவளே
பிறந்தார்பெயருந்தன்மைபிறராலறிதற்கெளிதோ. (௫௬)

என்னாவுன்னாமுனிவனிடராலழுவாதுயரம்
சொன்னாளாகாளெனமுன்றொழுகேகயர்கோன்மகளை
அன்னாயுரையாயரசனயர்வானிலையென்னென்னத்
தன்னாணிகழ்ந்ததன்மைதானேதெரியச்சொன்னாள். (௫௭)

சொற்றாள்சொற்றாமுன்னஞ்சுடர்வாளரசர்க்கரசைப்
பொற்றாமரைபோற்கையாற்பொடிசூழ்படிநின்றெழுவிக்
கற்றாயவரேலவளேதருநின்காதற்கரசன்
றெற்றேசெயலின்றொழிநீயென்றென்றிரவாநின்றான். (௫௮)

சீதப்பனிநீரளவித்திண்காலுதவுந்தண்கால்
போதத்தளவேதவழ்வித்தின்சொற்புகலாநின்றான்
ஓதக்கடனஞ்சனையாளுரைக்கொருவாறவியக்
காதற்புதல்வன்பெயரேபுகல்வானுயிருங்கண்டான். (௫௯)

* மின்தோன்றியவழிநிற்றல் கண்கூடாகமாட்டாமையின் 'மின்னின்றனையமேனி' என்றார்.

காணாவையாவினிநீயொழிவாய்கழிபேரவலம்
* ஆணாயகனேயினிநாடாள்வானிடையூறுளதோ
மாணாவுரையாடானேதருமாமறையேயனையான்
பூணாதொழிலானெனில்யாமுளமோபொன்றேலென்றான். (சo)

என்றம்முனிவன்றன்னைநினையாவினையேனினியான்
பொன்றும்மளவில்லவனைப்புனைமாமகுடம்புனைவித்
தொன்றும்வனமென்றுன்றாவண்ணஞ்செய்தென்னனையும்
குன்றும்பழிபூணாமற்காவாய்கோவேயென்றான். (சக)

முனியும்முனியுஞ்செய்கைக்கொடியாண்முகமேமுன்னி
இனியுன்புதல்வற்கரசுமேனையோர்க்கின்னுயிரும்
மனுவின்வழிநின்கணவற்குயிரும்முதவிவசைதீர்
புனிதம்மருவும்புகழேபுனையாய்பொன்னேயென்றான். (சஉ)

மொய்ம்மாண்வினைவேறவென்றொழிவான்மொழியாமுன்னம்
விம்மாவழுவாளரசன்மெய்யிற்றிரிவானென்னில்
இம்மாவுலகத்துயிரோடினிவாழ்புகவேனென்சொல்
பொய்ம்மாணாமற்கின்றேபொன்றாதொழியேனென்றாள். (சங)

கொழுநன்றுஞ்சும்மெனவுங்கொள்ளாதுலகம்மெனவும்
பழிநின்றுயரும்மெனவும்பாவம்முளதாமெனவும்
ஒழிகின்றிலையன்றியுமொன்றணர்கின்றிலையானினிமேல்
மொழிகின்றனவென்னென்றாமுனியும்முறையன்றென்பான். (சச)

கண்ணோடாதேகணவனுயிரோடிடர்காணாதே
புண்ணோடோடுங்கனலோவிடமோவென்னப்புகல்வாய்
பெண்ணோநீயோமாயாப்பேயோகொடியாய்நீயிம்
மண்ணோடின்னோடென்னாம்வசையோவலிதேயென்றான். (சரு)

வாயான்மன்னன்மகனைவனமேகென்றாமுன்னம்
நீயோசொன்னாயவனோநீடிர்கானிடைவெந்நெறியில்
போயோபுகலோதவிரான்புகழோ † டுயிரைச்சுடுவெந்
தீயோய்நின்போற்றீயாருளரோசெயலென்னென்றான். (சசா)

தாவின்முனிவன்புகலத்தளராநின்றமன்னன்
‡ நாவினஞ்சம்முடையநங்கைதன்னைநோக்கிப்
பாவிநீயேவெங்கான்படர்வாயென்றென்னுயிரை
எவினாயோவவனுமேகினானேயென்றான். (சஎ)

---

* ஆணாயகன்-புருடோத்தமனென்னும்பெயர்பற்றி வந்தது.

† புறத்தேசுடுந் தீயைப்போலாதுயிரைச் சென்றுவெதுப்புந் தீயாகலின் 'உயிரைச்சுடுவெந்தீ' என்றார்.

‡ விடத்தைப்பாலின்கணுடைய நாகத்தினின்றும் வேறுபடுத்ததற்கு 'நாவினஞ்சமுடைய' என்றார்.

கண்டேனெஞ்சங்கனிவாய்க்கனிவாய்விடாநெடுநாள்
உண்டேனதனானீயென்னுயிரைமுதலோடுண்டாய்
பண்டேயெரிமுன்னுன்னைப்பாவிதேவியாகக்
கொண்டேனல்லேன்வேறோர்கூற்றந்தேடிக்கொண்டேன். (௪௮)

விழிக்குங்கண்வேறில்லாவெங்கானென்கான்முளையைச்
* சுழிக்கும்வினையாலேகச்சூழ்வாயென்னைப்போழ்வாய்
பழிக்குந்நாணாய்மாணாப்பாவியினியென்பலவுன்
கழுத்தினாணுன்மகற்குக்காப்பின்றாமென்றான். (௪௯)

இன்னேபலவும்பகர்வானிரங்காதாளைநோக்கிச்
சொன்னேனின்றேயிவளென்றாரமல்லடுறந்தேன்
மன்னேயாவான்வருமப்பரதன்றனையும்மகனென்
றுன்னேன்முனிவாவவனுமாகானுரிமைக்கென்றான். (௫௦)

என்னைக்கண்டும்மேகவண்ணம்மிடையூறுடையான்
உன்னைக்கண்டும்மிலனோவென்றானுயர்கோசலையைப்
பின்னைக்கண்டானனையான்பிரியக்கண்டதுயரம்
தன்னைக்கண்டேதவிர்வாடளர்வாணிலையிற்றளர்வான். (௫௧)

மாற்றாள்செயலாமென்றுங்கணவன்வரமீந்துள்ளம்
ஆற்றாதயர்ந்தானென்றுமறிந்தாளவளும்மவனைத்
தேற்றாநின்றாண்மகனைத்திரிவானென்றாளரசன்
தோற்றான்மெய்யென்றுலகஞ்சொல்லும்பழிக்குஞ்சோர்வாள். (௫௨)

தள்ளாநிலைசான்மெய்ம்மைதழுவாவழுவாவகைநின்
றெள்ளாநிலைகூர்பெருமைக்கிழிவாமென்றா † னுரவோய்
விள்ளாநிலைசேரன்பான்மகன்மேன்மெலியின்னுலகம்
கொள்ளாதன்றோவென்றாள்கணவன்குறையக்குறைவாள். (௫௩)

போவாதொழியானென்றாள்புதல்வன்றன்னைக்கணவன்
சாவாதொழியானென்றென்றுள்ளந்தள்ளுற்றயர்வாள்
காவாயென்றாண்மகனைக்கணவன்புகழுக்கழிவாள்
ஆவாவுயர்கோசலையாமன்னம்மென்னுற்றனளே. (௫௪)

உணர்வானனையாளுரையாலுயர்ந்தானுரைசால்குமரன்
புணராநிலமேவனமேபோவானேயாமென்னா
இணரார்தருதாரரசனிடராலயர்வான்வினையேன்
துணைவாதுணைவாவென்றான்றோன்றாறோன்றாயென்றான். (௫௫)

---

* சுழிக்கும்வினை முன்னைவினை என்பதன்றி வரங்கொடுத்தமையாகிய கொடுந்தொழிலுமாம்.

† அறிவுடையா னெனப்பட்டு நன்றன் றென்பாள் 'உரவோய்' என்றார்.

கண்ணுந்நீராயுயிரும்மொழுகக்கழியாநின்றேன்
எண்ணுந்நீர்நான்மறையோரெரிமுன்னின்மேற்சொரிய
மண்ணுந்நீராய்வந்தபுனலைமகனேவினையேற்
குண்ணுந்நீராயுதவியுயர்கானடைவாயென்றான். (ருசா)

படைமாணரசைப்பலகாற்பழுவாய்மழுவாலெறிவான்
மிடைமாவலிதானனையான்வில்லாலடுமாவல்லாய்
உடைமாமகுடம்புனையென்றுரையாவுடனேகொடியேன்
சடைமாமகுடம்புனையத்தந்தேனந்தோவென்றான். (ருஎ)

* கறுத்தாயுருவம்மனமுங்கண்ணுங்கையுஞ்செய்ய
பொறுத்தாய்பொறையேயிறைவன்புரமூன்றெரித்தபோர்வில்
இறுத்தாய்தமியேனென்னாதென்னையிம்மூப்பிடையே
வெறுத்தாயினிநான்வாணாள்வேண்டேன்வேண்டேனென்றான். (ருஅ)

பொன்னின்முன்னம்மொளிரும்பொன்னேபுகழின்புகழே
மின்னின்மின்னும்வரிவிற்குமாரமெய்யின்மெய்யே
என்னின்முன்னம்வனநீயடைதற்கெளியேனல்லேன்
உன்னின்முன்னம்புகுவேனுயர்வானகம்யானென்றான். (ருகூ)

நெகுதற்கொத்தநெஞ்சுநேயத்தாலேயாவி
உகுதற்கொத்தவுடலுமுடையேனும்போலல்லேன்
† தகுதற்கொத்தசனகன்றையல்கையைப்பற்றிப்
புகுதற்கண்டகண்ணாற்போகக்காணேனென்றான். (சாய)

எற்றேபகர்வேனினியானென்னையுன்னிற்பிரிய
வற்றேயுலகம்மெனினும்வானேவருந்தாதெனினும்
பொற்றேரரசேதமியேன்புகழேயுயிரேயுன்னைப்
பெற்றேனருமையறிவேன்பிழையேன்பிழையேனென்றான். (சாக)

அள்ளற்பள்ளப்புனல்சூழகன்மாநிலமும்பாரும்
கொள்ளக்குறையாநிதியின்குவையும்முதலாமெவையும்
‡ கள்ளக்கைகேசிக்கேயுதவிப்புகழ்கைக்கொண்ட
வள்ளற்றனமென்னுயிரைமாய்க்கும்மாய்க்குமென்றான். (சாஉ)

ஒலியார்கடல்சூழுலகத்துயர்வானிடைநாகரினும்
பொலியாநின்றாருன்னைப்போல்வாருளரோபொன்னே

---

* கரியகோவே என்பவராகலின் கறுத்தாயுருவமென்றும், கண் கை கால் முதலியன செந்தாமரையொப்பவாகலின் மனமுங்கண்ணுங் கையுஞ் செய்ய பொறுத்தாயென்றுங் கூறினார்.

† தவவொழுக்கநனி நிரம்பியோனாகலின் சனகனைத் 'தகுதற்கொத்த' வெனவிசேடித்தார்.

‡ நல்லவள்போற்காட்டிவஞ்சித்தலின் 'கள்ளக்கைகேசி' யென்றார்.

வலியாருடையாரென்றான் * மழுவாளுடையான்வரவும்
சலியாநிலையாயென்றாற்றவிர்வாருளரோவென்றான். (௬௩)

கேட்டேயிருந்தேனெனினுங்கிளர்வானின்றேயடைய
மாட்டேனாகில்லன்றோவன்கண்ணென்கண்மைந்தா
காட்டேயுறைவாய்நீயிக்கைகேசியையுங்கண்டிந்
நாட்டேயுறைவேனென்றானன்றென்றன்மையென்றான். (௬௪)

மெய்யார்தவமேசெய்துன்னிடன்மார்பரிதிற்பெற்ற
† செய்யாளென்னும்பொன்னுநிலமாதென்னுந்திருவும்
உய்யாருய்யார்கெடுவேனுன்னைப்பிரியின்வினையேன்
அயயாகைகேசியைநேராகேனோநானென்றான். (௬௫)

பூணாரணியும்முடியும்பொன்னாசனமுங்குடையுஞ்
சேணார்மார்புந்திருவுந்தெரியக்காணத்திரிவேன்
மாணாமாவற்கலையுமானின்றோலுமவைநான்
காணாதொழிந்தேனென்றானன்றாய்தன்றோகருமம். (௬௬)

என்றாவொன்றொன்றொவவாவிசைதந்தரசன்னுயிரும்
சென்றானின்றோடென்னுந்தன்மையெய்தித்தேய்ந்தான்
‡ மென்றோன்மார்பின்முனிவன்வேர்த்தேயயலோவனை
இன்றேகாதவண்ணந்தகைவென்னுலகோடென்னா. (௬௭)

முனிவன்செல்லும்மளவின்முடியுங்கொல்லென்றரசன்
தனிநின்றுழறன்னுயிரைச்சிறிதேதகைவானிர்தப்
புனிதன்போனாலியனாற்போகாதொழிவானென்னா
மனிதன்வடிவங்கொண்டமனுவுந்தன்னைமறந்தான். (௬௮)

மறந்தானினைவும்முயிரும்மன்னனென்னாமறுகா
இறந்தான்கொல்லோவரசவென்னாவிடருற்றழிவாள்
துறந்தாய்மகனையுலகோடுடைமையுமென்னத்துணையாம்
அறந்தானிதுவோவையாவரசர்க்கரசேயென்றாள். (௬௯)

மெய்யின்மெய்யேயுலகின்வேந்தர்க்கெல்லாம்வேந்தே
உய்யும்வகைநின்னுயிரையோம்பாதின்னுன்றேம்பின்
வய்யம்முழுதுந்துயரான்மறுகும்முனிவன்னுடனம்
அய்யன்வரினும்வருமாலயரேலரசேயென்றாள். (௭0)

என்றென்றரசன்மெய்யுமிருதாளிணையும்முகமும்
தன்றன்செய்யகையாற்றைவந்திடுகோசலையை

---

* மழுவாளுடையான்-பரசுராமன்.

† பொன்னுக்கதி தெய்வமாகலின் செய்யாளென்னுந் திருவுமென்றார்.

‡ மென்றோல் ஈண்டு மான்றோல்.

ஒன்றுந்தெரியாமம்மலுள்ளத்தரசன்மெள்ள
* வன்றிண்சிலைநங்குரிசில்வருமேவருமேயென்றான். (எக)

வன்மாயக்கைகேசிவாக்காலென்றன்னுயிரை
முன்மாய்விப்பத்துணிந்தாளேனுங் † கூனிமொழியால்
தன்மாமகனுந்தானுந்தரணிபெறுமாறன்றி
என்மாமகனைக்கானேகென்றாளென்றாளென்றான். (எஉ)

பொன்னார்தோளான்காளைபுகுதப்புகுதறவிரான்
என்னாருயிரோவகலாதொழியாதிதுகோசலைகேள்
முன்னாளொருமாமுனிவன்மொழியுஞ்சாபமுளதென்
றந்நாளுற்றதெல்லாமவளுக்கரசன்னறைவான். (எங)

வெய்யகானத்திடையேவேட்டைவேட்கைமிகவே
அய்யசென்றகரியோடரிகடுருவித்திரியேன்
கய்யார்சிலையுங்கணையுங்கொடு ‡ கார்மிருகம்வருமோர்
செய்யநதியின்கரைவாய்ச்சென்றேறமைந்திருந்தேன். (எச)

ஒருமாமுனிவன்மனையோடொருவிழியொன்றிலவாய்ப்பரம்
திருமாமகனேதுணையாய்த்தவமேபுரிபோதினின்வாய்
அருமாமகனேபுனல்கொண்டகல்வான்வருமாறறியேன்
பொருமாகணைவிட்டிடலும்புவிமீதலறிப்புரள. (எரு)

புக்குப்பெருநீர்நுகரும்பொரு § போதகமென்றெலிமேல்
கைக்கட்கணைசென்றதலாற்கண்ணீர்சொரியக்காணேன்
அக்கைக்கரியின்குரலேயன்றீதென்னவெருவா
மக்கட்குரலென்றயர்வேனம்மனனொந்தவண்வந்தனனால். (எசு)

கய்யுங்கடனுநெகிழக்கணையோடுருள்வோற்காணு
மெய்யுந்தனுவும்மனனும்வெறிதேகிடமேல்வீழ்ந்தா
அய்யன்னீதான்யாவனந்தோவருள்கென்றயரப்
பொய்யொன்றறியாமைந்தன்கேணீயென்னப்புகல்வான். (எஎ)

$ சேலாகியமாமுதல்வன்றிருவுந்தியினீண்மலரின்
மேலாகியநான்முகனால்வேதங்களின்மாமுறையின்
பாலாகியயோனிகளின்பலவாம்வருணந்தருவான்
நாலாகியதாம்வருணந்தனின்முன்னனைமையல்கினனால். (எஅ)

அந்நான்மறையோன்வழியிலருள்காசிபனன்மைந்தன்
மின்னார்புரிநூன்மார்பன்விருத்தேதசனன்மெய்ப்புதல்வன்

---

* பரசுராமனையென்றவாற்றோன்ற 'வன்றிண்சிலைநங்குரிசி' லென்றார். † கூனி-மந்தரை.
‡ கார்மிருகமென்றது யானையை.
§ போதகம்-யானை.
$ சேலாகியமாமுதல்வன்-மச்சவடிவங்கொண்டதிருமால்.

நன்றான்மறைநூற்றெரியுநாவான்சலபோசனெனச்
சொன்னான்முனிவன்றருசுரோசனன்யானென்றான். (௭௧)

இருகண்களுமின்றியதாய்தந்தைக்குமீங்கவர்கள்
* பருகும்புனல்கொண்டகல்வான்படர்ந்தேன்பழுதாயினதால்
இருகுன்றனையபுயத்தாயிபமென்றுணராதெய்தாய்
உருகுந்துயரந்தவிர்நீயூழின்செயலீதென்றே. (௮0)

உண்ணீர்வேட்கைமிகவேயுயங்குமெந்தைக்கொருநீ
தண்ணீர்கொடுபோயளித்தென்சாவும்முரைத்தும்புதல்வன்
விண்மீதடைவான்றொழுதானெனவும்மவர்பால்விளம்பென்
றெண்ணீர்மையினான் † விண்ணோரெதிர்கொண்டிடவேகினனால். (௮௧)

மைந்தன்வரவேநோக்கும்வளமாதவன்பான்மகவோ
டந்தண்புனல்கொண்டணுகாவையவாவிதுபோதளவாய்
வந்திங்கணுகாதென்னோவந்ததென்றேநொந்தேம்
சந்தங்கமழுந்தோளாய்தழுவிக்கொளவாவெனவே. (௮௨)

அய்யாயானோரரசனயோத்திநகரத்துள்ளேன்
மய்யார் ‡ களபந்துருவிமறைந்தேவதிந்தேனிருள்வாய்
பொய்யாவாய்மைப்புதல்வன்புனன்மொண்டிடுமோதையின்மேல்
கய்யார்கணைசென்றதுலாற்கண்ணிற்றெரியக்காணேன். (௮௩)

வீட்டுண்டலறுங்குரலால்வேழக்குரலன்றெனவே
ஓட்டந்தெதிராநீயாரெனவுற்றவெலாமுரையா
வாட்டந்தருநெஞ்சினனாய்நின்றான்வணங்காவானோர்
ஈட்டம்மெதிர்வந்திடவேயிறந்தேகினன்விண்ணிடையே. (௮௪)

அறுத்தாய்கணையாலெனவேயடியேன்றன்னையையா
§ கறுத்தேயருளாயானோகண்ணிற்கண்டேனல்லேன்
மறுத்தானில்லான்வனமொண்டிடுமோதையினெய்ததலால்
பொறுத்தேயருள்வாயென்னாவிருதாள்சென்னிபுனைந்தேன். (௮௫)

வீழ்ந்தாரயர்ந்தார்புரண்டார்விழிபோயிற்றின்றென்றார்
ஆழ்ந்தார்துன்பக்கடலுள்ளையாவையாவென்றார்
போழ்ந்தாய்நெஞ்சையென்றார்பொன்னாடதனிற்போய்நீ
வாழ்ந்தேயிருப்பத்தரியேம்வந்தேம்வந்தேமினியே. (௮௬)

என்றென்றயருந்தவரையிருதாள்வணங்கியானே
இன்றும்புதல்வன்னினிநீரேவும்பணிசெய்திடுவேன்

---

* பருகும்புனல்-உண்ணீர்.

† துன்மரணமாகா ஊழினடந்தமையான் 'விண்ணோரெதிர்கொண்டிடவேகின' னென்றார்.

‡ களபம்-யானை. § கறுத்தல்-கோபித்தல்.

ஒன்றுந்தளர்வுற்றயரீரொழிமின்னிடரென்றிடலும்
வன்றிண்சிலையாய்கேண்மோவெனவேயொருசொல்வகுத்தான். (அஎ)

* கண்ணுண்மணிபோன்மகவையிழந்தும்முயிர்காதலியா
உண்ணாவெண்ணியிருந்தாலுலகோரென்னென்றுரையார்
விண்ணின்றலைசேருதும்யாமெம்போல்விடலைபிரியப்
பண்ணும்பரிமாவுடையாயடைவாய்படர்வாயென்னா. (அஅ)

தாவாதொளிருங்குடையாய்தவறிங்கிதுநின்சரணம்
காவாயென்றாயதனாற்கடியசாபங்கருதேம்
† ஏவாமகவைப்பிரிந்தின்றெம்போலிடருற்றனைநீ
போவாயகல்வானென்னாப்பொன்னாட்டிடைபோயினரால். (அகூ)

சிந்தைதளர்வுற்றயர்தல்சிறிதும்மிலனாயின்சொல்
மைந்தனுளனென்றதனான்மகிழ்வோடிவண்வந்தனனால்
அந்தமுனிசொற்றமையுமண்ணல்வனமேகுதலும்
என்றனுயிர்வீகுதலுமிறையுந்தவறாவென்றான். (கூ0)

இம்மாமொழிதந்தரசன்னிடருற்றிடுபோழ்தினிலச்
‡ செம்மாமயில்கோசலையுந்திகையாவுணர்வோய்வினளாய்
விம்மாநெறியின்விதியின்விளைவுந்தளர்வின்றொடர்வும்
அம்மாதவனும்விரைவோடவலந்தருநெஞ்சினனாய் (கூக)

வேறு.

உரைசெய்பெருமையுயர்தவத்தோரோங்கல்
புரைசெய்மதகளிற்றான்பொற்கோயின்முன்னர்
முரைசமுழங்கமுடிசூட்டமொய்த்தாண்
டரைசரினிதிருந்தநல்லவையினானான். (கூஉ)

வந்தமுனியைமுகநோக்கிவாள்வேந்தர்
எந்தைபுகுதற்கிடையூறுண்டாயதோ
அந்தமில்சோகத்தழுதகுரற்றானென்ன
சிந்தைதெளிந்தோய்தெரியமொழிகவென்றுரைத்தார். (கூங)

கொண்டாள்வரமிரண்டுகைகயர்கோன்கொம்பவட்குத்
தண்டாதசெங்கோற்றயரதனுந்தானளித்தான்
ஒண்டார்முகிலைவனம்போகென் § றொருப்படுத்தாள்
எண்டானும்வேறில்லையீதடுத்தவாறென்றான். (கூச)

---

* கண்ணிற்குண் மணியறிவிப்பதுபோன்று சீராமனறிவித்தலின் 'கண்ணுண்மணிபோன் மகவை' என்றார்.

† குறிப்பறிந்து செய்யுமகன் ஏவாமகன்.

‡ சாயலைநோக்கிச் 'செம்மாமயி' லென்றதென்க.

§ ஒருப்படுத்தல்-உடன்படுத்தல்.

வேந்தன்பணியினாற்கைகேசிமெய்ப்புதல்வன்
பாந்தண்டிசைக்கிடந்தபாரளிப்பானாயினான்
ஏந்துதடந்தோளிராமன்றிருமடந்தை
காந்தனொருமுறையேகாடுறைவானாயினான். (௯௫)

வாரார்முலையாருமற்றுள்ளமாந்தர்களும்
ஆராதகாதலரசர்களுமந்தணரும்
* போராதவாய்மைப்பெரியோனுரைசெவியிற்
சாராதமுன்னந்துயரதனைப்போல்வீழ்ந்தார். (௯௬)

புண்ணுற்றதீயிற்புகையுற்றுயிர்பதைப்ப
மண்ணுற்றயர்ந்துமறுகுற்றுடம்பெல்லாம்
கண்ணுற்றவாரிகடலுற்றதந்நிலையே
விண்ணுற்றதெம்மருங்கும்விட்டழுதபேரோசை. (௯௭)

மாதருங்கலமுமங்கலமுஞ்சிந்தித்தம்
கோதைபுடைபெயரக் † கூற்றனையகண்சிவப்பப்
பாதமலர்சிவப்பத்தாம்பதைத்துப்பார்சேர்ந்தார்
ஊதையெறியவொசிபூங்கொடியொப்பார். (௯௮)

ஆவாவரசனருளிலனேயாமென்பார்
காவாவறத்தையினிக்கைவிடுவேம்யாமென்பார்
தாவாதமன்னர்தலைத்தலைவீழ்ந்தேங்கினார்
‡ மாவாதஞ்சாய்த்தமராமரமேபோல்கின்றார். (௯௯)

கிள்ளையொடுபூவையழுதகிளர்மாடத்
துள்ளுறையும்பூசையழுதவுருவறியாப்
பிள்ளையழுதபெரியோரையென்சொல்ல
வள்ளல்வனம்புகுவானென்றுரைத்தமாற்றத்தால். (௧00)

சேதாம்பற்போதனையசெங்கனிவாய்வெண்டளவப்
போதாம்பற்றேன்றப்புணர்முலைமேற்பூந்தரள
§ மாதாம்பற்றென்னமழைக்கண்ணீராலியுக
நாதாம்பற்றாமழலைநங்கைமாரேங்கினார். (௧0௧)

ஆவுமழுதவதன்கன்றழுதவன்றலர்ந்த
பூவுமழுதபுனற்புள்ளழுதகள்ளொழுகும்
காவுமழுதகளிறழுத $ கால்வயப்போர்
மாவுமழுதனவம்மன்னவனைமானவே. (௧0௨)

* போராதவாய்மைப்பெரியோன்-வசிட்டமுனிவன்.
† கூற்றனையகண்-கண்ணின்கொடுமைவிளக்கிற்று.
‡ மாவாதம்-பெருங்காற்று.
§ மாதாம்பு-அற்றுஎன்ன எனப்பிரிக்க.
$ மடல்பெரியதாழை என்றாற்போலக் கால்வயம் எனவந்தது.

* ஞானியுமுய்கலானென்றேநாயகனைக்
கானியுமென்றுரைத்தகைகேசியுங்கொடிய
கூனியுமல்லாற்கொடியார்பிறருளரோ
மேனியுமின்றிவெறுமேயாயினார். (௧0௩)

தேரூதறிவழிந்தாரெங்குலப்பார்தேரோட
நீறுகிச்சுண்ணநிறைந்ததெருவெல்லாம்
ஆறுகியோடினகண்ணீருநெஞ்சம்
கூறுகியோடாதவித்துணையேகுற்றமே. (௧0௪)

மண்செய்தபாவமுளதென்பார்மாமலர்மேற்
பெண்செய்தபாவமதனிற்பெரிதென்பார்
புண்செய்தநெஞ்சைவிதியென்பார்பூதலத்தோர்
கண்செய்தபாவங்கடலிற்பெரிதென்பார். (௧0௫)

ஆளான்பரதனரசென்பாரையனினி
மீளானமக்குவிதிகொடிதுகாணென்பார்
† கோளாகிவந்தவாகொற்றமுடிதானென்பார்
மாளாதநம்மின்மனம்வலியாராரென்பார். (௧0௬)

ஆதியரசனருங்கேகயன்மகண்மேற்
காதன்முதிரக்கருத்தழிந்தானென்பார்
சீதைமணவாளன்றன்னோடுநீக்கானம்
போதுமதுவன்றேற்புகுதுமெரியென்பார். (௧0௭)

கய்யானிலந்தடவிக்கண்ணீர்மெழுகுவார்
உய்யாள்போற்கோசலையென்றோவாதுவெய்துயிர்ப்பார்
அய்யா ‡ விளங்கோவேயாற்றுதியோநீயென்பார்
நெய்யாரழலுற்றதுற்றாரந்நீணகரார். (௧0௮)

தன்னேறுவேறில்லைத்தன்மகற்குப்பார்கொள்வான்
என்னேறியகருமநேர்ந்தாளிவளென்னக்
கன்னேறுசெவ்வாய்க்கணிகைகாண்கைகேசி
உள்ளேறுகாதலிலள்போலென்றுள்ளழிந்தார். (௧0௯)

நின்றுதவமியற்றித்தான்றீரநேர்ந்ததோ
அன்றிவ்வுலகத்துளாருயிராய்வாழ்வானைக்
கொன்றுகளையக்குறித்தபொருளன்றோ
நன்றுவரங்கொடுத்தநாயகற்குநன்றென்பார். (௧௧0)

---

* ஞானி, கானி, கூனி, மேனி இவற்றினீற்றிகரம் நீட்டல்விகாரம்.

† இராமமூர்த்திக்கு முடிசூட்டத்தொடங்கியது காட்டிற்குச்செல்ல நேர்ந்ததால் 'கோளாகிவந்தவா கொற்றமுடி தாள்' என்பார்.

‡ இளங்கோ-இளையபெருமாள்.

பெற்றுடையமண்ணவனுக்கீந்து * பிறந்துலகம்
முற்றுடையகோவைப்பிரியாதுமொய்த்தீண்டி
உற்றுறைதும்யாருமுறையவேசின்னுளில்
புற்றுடையகாடெல்லாநாடாகிப்போமென்பார். (கககக)

என்னை † நிருபரியற்கையிருந்தவா
தன்னேரிலாததலைமகற்குத்தாரணியை
முன்னேகொடுத்துமுறைதிறம்பத்தம்பிக்குப்
பின்னேகொடுத்தாற்பிழையாதோமெய்யென்பார். (ககஉ)

கோதைவரிவிற்குமரற்கொடுத்தநில
மாதையொருவர்புணர்வரா ‡ வஞ்சித்த
பேதைசிறுவனைப்பின்பார்த்துநிற்குமா
சீதைபிரியினுந்தீராத்திருவென்பார். (ககங)

உந்தாதுநெய்வார்த்துதவாதுகாலெறிய
நந்தாவிளக்கினடுங்குகின்றநங்கைமார்
§ செந்தாமரைத்தடங்கட்செவ்வியருளேக்கம்
அந்தோபிரிதுமோவாவிநியேயோவென்பார். (கக௪)

வேறு.

கேட்டானிளையோன்கிளர்ஞாலம்வரத்தினலே
நீட்டாளளித்தாள்வனந்தம்முனின்வெம்மைமுற்றித்
தீட்டாதவேற்கட்சிறுதாயெனயாவராலும்
$ மூட்டாதகாலக்கடைத்தீயெனமூண்டெழுந்தான். (கக௫)

கண்ணிற்கடைத்தீயுகநெற்றியிற்கற்றைநாற
விண்ணிற்சுடருஞ்சுடர்தோன்றமெய்ந்நீர்விரிப்ப
உண்ணிற்குமுயிர்ப்பெனுமூதைபிறக்கநின்ற
அண்ணற்பெரியோன் ¶ றனதாதியின்மூர்த்தியொத்தான். (கக௬)

சிங்கக்குருளைக்கிடுதீஞ்சுவையூனைநாயின்
வெங்கட்கடுங்குட்டியையூட்டவிரும்பினளே
நங்கைக்கறிவின்றிறநன்றிதுநன்றிதென்னுக்
கங்கைக்கிறைவன்கடகக்கைபுடைத்துநக்கான். (கக௭)

---

* தான்பரம்பரையாகவந்தமையின் 'பிறந்துலகமுற்றுமுடையகோ' வென்றார். † நிருபரென வெகுளிபற்றிப் பன்மைப்பாலாற் கூறினார்.

‡ வஞ்சித்தபேதை சிறுவன்-பரதன்.

§ 'செந்தாமரைத் தடங்கண் செவ்வியருளேக்கம்' இராமமூர்த்தியின் கருணைபொழியும் பார்வை.

$ ஊழித்தீயோடிவன் சினத்திற்கு வேற்றுமைதோன்ற 'மூட்டாத காலக்கடைத்தீ' என்றார். ¶ தனதாதியின்மூர்த்தி-திருவனந்தாழ்வானை.

சுற்றார்மணியார்வடிவாள்புடைதோன்றவார்த்து
விற்றாங்கிவாளிப்பெரும்புட்டில்புறத்துவீக்கிப்
பற்றார்ந்தசெம்பொற்கவசம்பனிமேருவாங்கோர்
புற்றாமெனவோங்கியதோளொடுமார்புபோர்க்க. (௧௧௮)

அடியிற்சுடர்பொற்கழலார்கலிநாணவார்ப்பப்
பொடியிற்றடவுஞ்சிறுநாண்பெரும்பூசலோசை
இடியிற்றொடரக்கடலேழுமடுத்திஞ்ஞாலம்
முடியிற்குமுறும்மழைமும்மையின்மேன்முழங்க. (௧௧௯)

வானுந்நிலனும்முதலீறில்வரம்பில்பூதம்
மேனின்றுகீழ்காறும்விரிந்தனவீழ்வபோலத்
தானுந்தனதம்முனுமல்லதும்மைஞாலத்
தூனும்முயிரும்முடையார்களுடைந்தொதுங்க. (௧௨௦)

புவிப்பாவைபரங்கெடப்போருவந்தோரையெல்லாம்
அவிப்பானுமவித்தவராக்கையையண்டமுற்றக்
குவிப்பானுமெனக்கொருகோவினைக்கொற்றமௌலி
கவிப்பானுநின்றேனிதுகாக்குநர்காமினென்றான். (௧௨௧)

விண்ணாட்டவர்மண்ணவர்விஞ்சையர்நாகர்மற்றும்
எண்ணாட்டவர்யாவருநிற்கவோர்மூவராகி
* மண்ணாட்டுநர்காட்டுநர்வீட்டுநர்வந்தபோதும்
பெண்ணாட்டமொட்டேனினிப்பேருலகத்துளென்று. (௧௨௨)

காலைக்கதிரோனடுவுற்றதொர்வெம்மைகாட்டி
ஞாலத்தவர்கோமகனந்நகரத்துநாப்பண்
மாலைச்சிகரத்தனிமந்தரமேருமுந்தை
வேலைத்திரிகின்றதுபோற்றிரிகின்றவேலை. (௧௨௩)

வேற்றுக்கொடியாள்விளைவித்தவினைக்குவிம்மித்
தேற்றத்தெளியாதயர் † சிற்றவைபாலிருந்தான்
ஆற்றற்றுணைத்தம்பிதன்விற்புயலண்டகோளம்
கீற்றொத்துடையப்படுநாணுருமேறுகேட்டான். (௧௨௪)

வீறாக்கியபொற்கலன்வில்லிடவாரமின்ன
மாறாத்தனிச்சொற்றுளிமாரிவழங்கிவந்தான்
காறாக்கநிமிர்ந்துபுகைந்துகனன்றுபொங்கும்
ஆறாக்கனலாற்றுமொ ‡ ரஞ்சனமேகமென்ன. (௧௨௫)

---

* மண்ணாட்டுநர் காட்டுநர் வீட்டுநர்-பிரமன் மாலரன்.

† சிற்றவை-சுமத்திரை.

‡ தம்பி சீற்றந்தணிப்பான்பொருட்டு வருகின்றமையின் அஞ்சன மேகமென்ன என்றார்.

மின்ஞெத்தசீற்றக்கனல்விட்டுவிளங்குகின்ற
பொன்ஞெத்தமேனிப்புயலொத்ததடக்கையானை
என்னத்தவென்னீ * யிமையோரைமுனிந்திலாதாய்
சன்னத்தஞகித்தனுவேந்துதற்கேதுவென்ருன். (கஉ௬)

மெய்யைச்சிதைவித்துநின்மெய்ம்முறைநீத்தநெஞ்சம்
மையிற்கரியாளொதிர்நின்னைநன்மௌலிசூட்டல்
செய்யக்கருதித்தடைசெய்குநர்தேவரேனும்
† துய்யைச்சுடுவெங்கனலிற்சுடுவான்றுணிந்தேன். (கஉ௭)

வலக் ‡ கார்முகமென்கையதாகவவ்வானுளோரும்
விலக்காரவர்வந்துவிலக்கினுமென்கைவாளிக்
கிலக்காவெரிவித்துலகேழினொடேழுமன்னர்
குலக்காவலுநின்றனக்கியான்றரக்கோடியென்ருன். (கஉ௮)

இளையானிதுகூறவிராமனியைந்தநீதி
வளையாவருநன்னெறிநின்னறிவாகுமன்றே
உளையாவறம்வற்றிடவூழ்வழுவுற்றசீற்றம்
விளையாதநிலத்துனக்கெங்கண்விளைந்ததென்ருன். (கஉ௯)

§ நீண்டானதுரைத்தலுநித்திலந்தோற்கநக்குச்
சேண்டான்ஞெடர்மாநிலநின்னதென்றுந்தைசெப்பப்
பூண்டாய்பகையாலிழந்தேவனம்போதியென்ருல்
யாண்டோவடியேற்கினிச்சீற்றமடுப்பதென்ருன். (கஙo)

நின்கட்பரிவில்லவர்நீள்வனத்துன்னைநீக்கப்
புன்கட்பொறியாக்கைபொறுத்துயிர்போற்றுகேஞே
என்கட்புலமுன்னுனக்கீந்துவைத்தில்லையென்ற
வன்கட்புலந்தாங்கியமன்னவன்காண்கொலென்ருன். (கஙக)

பின்குற்றமன்னும்பயக்கும்மரசென்றல்பேணேன்
முன்கொற்றமன்னன்முடிகொள்கெனக்கொள்ளமூண்ட
தென்குற்றமன்ருேவிகன்மன்னவன்குற்றம்யாதோ
மின்குற்ஞெளிரும்வெயிற்கொடைமைந்தவேலோய். (கஙஉ)

நதியின்பிழையன்றுநறும்புனலின்மையற்றே
பதியின்பிழையன்றுபயந்துநமைப்புரந்தாள்
மதியின்பிழையன்றுமகன்பிழையன்றுமைந்த
விதியின்பிழைநீயிதற்கென்னைவெகுண்டதென்ருன். (கஙங)

* இமையோரை முனிந்திலாதாய் (க) தேவர்களை கோபியாதவன் (உ) இமைப்பொழுதாயினுங் கோபமில்லாதிருப்பவன்.

† துய்-பஞ்சினுனி. ‡ கார்முகம்-வில். § நீண்டான்-திரிவிக்கிரமன்.

* உதிக்கும்முலையுள்ளுறுதீயெனவூதைபொங்கக்
கொதிக்கும்மனமெங்கணமாற்றுவென்கோளிழைத்தாள்
மதிக்கும்மதியாய்முதல்வானவர்க்கும்வலீ இதாம்
விதிக்கும்விதியாகுமென்விற்றொழில்காண்டியென்றான். (௧௫௪)

ஆய்தந்தவனவ்வுரைகூறலுமையனின்றன்
வாய்தந்தனகூறுதியோமறைதந்தநாவால்
நீய்தந்ததன்றேநெறியோர்கணிலாதநின்ற
தாய்தந்தையென்றுலவர்மேற்சலிக்கின்றதென்றே. (௧௫௫)

† நற்றாதையுநீதனிநாயகனீவயிற்றிற்
பெற்றாயுநீயேபிறரில்லைப்பிறர்க்குநல்கக்
கற்றாயிதுகாணுதியின்றெனக் ‡ கைமறித்தான்
முற்றாமதியம்மிலைந்தான்முனிந்தானையன்றான். (௧௫௬)

வரதன்பகர்வான்வரம்பெற்றவடானிவ்வையம்
சரதம்முடையாளவளென்றனித்தாதைசெப்பப்
பரதன்பெறுவானினியான்படைக்கின்றசெல்வம்
விரதம் § மிதினல்லதுவேறினியாவதென்றான். (௧௫௭)

$ ஆன்றான்பகர்வான்பினுமையவிவ்வையமையல்
தோன்றாநெறிவாழ்துணைத்தம்பியைப்போர்தொலைத்தோ
சான்றோர்புகழுந்தவத்தாதையைவாதைகொண்டோ
ஈன்றாளைவென்றோவினியிக்கதந்தீர்வதென்றான். (௧௫௮)

செல்லுஞ்சொல்வல்லானெதிர்தம்பியுந் ¶ தெவ்வர்சொல்லும்
சொல்லுஞ்சுமந்தேனிருதோளெனச்சோம்பியோங்கும்
கல்லுஞ்சுமந்தேன் || கணைப்புட்டிலுங்கட்டமைந்த
வில்லுஞ்சுமக்கப்பிறந்தேன்வெகுண்டென்னையென்றான். (௧௫௯)

நன்சொற்கடந்தாண்டனைநாளும்வளர்த்ததாதை
தன்சொற்கடந்தேற்கரசாள்வதுதக்கதன்றால்
என்சொற்கடந்தாலுனக்கியாதுளதீனமென்றான்
தென்சொற்கடந்தான்வடசொற்கலைக்கெல்லைதேர்ந்தான். (௧௬0)

சீற்றந்துறந்தானெதிர்நின்றுதெரிந்துசெப்பும்
மாற்றந்துறந்தான்மறைநான்கெனவாங்கல்செல்லா

---

* மனத்துயரை உலையுள்ளுறுதீயோடுவமைகூறினார். † அன்பின் மிகுதியான் நற்றாதையுநீ தனிநாயகனீயென்றான். ‡ கைமறித்தல்-இதுசெய்யற்க வெனத்தடுத்தல்.

§ இதின் நல்லது என்பதன்றி இதின் அல்லது எனப்பிரிக்க.

$ ஆன்றான் ஈண்டு சீராமன். ¶ தெவ்வர் என்றது கைகேசி முதலாயினோரை.

|| கணைப்புட்டில்-அம்பறாத்தூணி.

நாற்றெண்டிரைவேலையினம்பிதனாணையாலே
ஏற்றந்தொடங்காக்கடலிற்றணிவெய்திநின்றான். (கசக)

அன்னான்றனையையனுமாதியொடந்தமென்று
தன்னாலுமளப்பருந்தானுந்தன்பாங்கர்நின்ற
* பொன்மானுரியானுந்தழீஇயெனப்புல்லிப்பின்னைச்
சொன்மாண்புடையன்னைசுமித்திரைகோயில்புக்கான். (கசஉ.)

கண்டாண்மகனும்மகனுந்தனகண்கள்போல்வார்
† தண்டாவனஞ்செல்வதற்கேசமைந்தார்கடம்மைப்
புண்டாங்குநெஞ்சத்தனளாய்ப்படிமேற்புரண்டாள்
உண்டாயதுன்பக்கடற்கெல்லையுணர்ந்திலாதாள். (கசங)

சோர்வாளையோடித்தொழுதேந்தினன்றுன்பமென்னும்
ஈர்வாளைவாங்கமனந்தேற்றுதற்கேற்றசெய்வான்
போர்வாளரசர்க்கிறைபொய்த்தனனாக்ககில்லேன்
கார்வானெடுங்கானிறைகண்டியான்மீள்வனென்றான். (கசச)

கான்புக்கிடினுங்கடல்புக்கிடினுங்கலிப்பேர்
வான்புக்கிடினுமெனக்கன்னவைமாணயோத்தி
யான்புக்கதொக்குமெனையார்நலிகிற்குமீட்டார்
ஊன்புக்குயிர்புக்குணர்புக்குலையற்கவென்றான். (கசரு)

தாயாற்றுகிலாடனையாற்றுகின்றார்கடம்பால்
தீயாற்றுகிலார்தணிச்சிந்தையினின்றுசெற்ற
நோயாற்றுகில்லாவுயிர்போலநுடங்கிடையார்
மாயாப்பழியாடரவற்கலையேந்திவந்தார். (கசசா)

கார்வானமொப்பான்றனைக்காண்டொறுங்காண்டொறும்போய்
நீராயுகக்கண்ணினுநெஞ்சழிகின்றநீரார்
பேராவிடர்ப்பட்டயலாருறுபீழைகண்டும்
தீராமனத்தாடரவந்தனசீரமென்றார். (கசஎ)

வாணித்திலவெண்ணகையார்தரவள்ளறம்பி
யாணர்த்திருநாடிழப்பித்தவரீந்தவெல்லாம்
பூணப்பிறந்தானுநின்றானவைபோர்விலோடும்
காணப்பிறந்தேனுநின்றேனவைகாட்டுமென்றான். (கசஅ)

அன்னானவர்தந்தன ‡ வாதரத்தோடுமேந்தி
இன்னாவிடர்தீர்ந்துடனேகெனவெம்பிராட்டி

---

* பொன்மானுரியான்-பொன்னிறமமைந்த மான்றோலையுடைய உருத்திரமூர்த்தி.

† தண்டகவனமென்றது தண்டாவனமென மரீஇயது.

‡ ஆதரத்தோடுமேந்தி-விருப்பத்தோடுங் கையிலேந்தி.

சொன்னாலதுவே துணையாமெனத் தூயநங்கை
பொன்னாரடிமேற்பணிந்தானவளும்புகன்றாள். (கசகூ)

ஆகாததன்றாலுனக்கவ்வனமிவ்வயோத்தி
* மாகாதலிராமனம்மன்னவன்வையமீந்தும்
போகாவுயிர்த்தாயர்நம்பூங்குழற்சீதையென்றே
ஏகாயினியிவ்வயினிற்றலுமேதமென்றாள். (கருo)

பின்னும்பகர்வாண்மகனேயிவன்பின்செறம்பி
என்னும்படியன்றடியாரினிலேவல்செய்தி
மன்னுந்நகர்க்கேயிவன்வந்திடின்வாவதன்றேல்
முன்னம்முடியென்றனள் † பான்முலைசோரநின்றாள். (கருக)

வேறு.

இருவருந்தொழுதனரிரண்டுகன்றொரீஇ
வெருவருமாவினிற்றாயும்விம்மினாள்
‡ பொருவருங்குமரரும்போயினார்புறம்
திருவரைத்துகிலொரீஇச்சீரைசாத்தியே. (கருஉ)

தான்புனைசீரையைத்தம்பிசாத்திடத்
தேன்புனைதெரியலான்செய்கைநோக்கினான்
§ வான்புனையிசையினாய்மறக்கிலாதுநீ
யான்புகல்வனையதோருறுதிகேளென. (கருங)

அன்னையரனைவருமாழிவேந்தனும்
முன்னையரல்லர்வெந்துயரின்மூழ்கினார்
என்னையும்பிரிந்தனரிடருறாவகை
உன்னைநீயென்பொருட்டுதவுவாயென்றான். (கருச)

ஆண்டகையம்மொழிபகரவன்பனும்
தூண்டகுதிரள்புயந்துளங்கத்துண்ணென
மீண்டதோருயிரிடைவிம்மவிம்முவான்
ஈண்டெனக்கடியனேன்பிழைத்ததியாதென்றான். (கருரு)

நீருளவெனினுளமீனுநீலமும்
பாருளவெனினுளயாவும்பார்ப்புறின்
நாருளதனுவுளாய்நானுஞ்சீதையும்
ஆருளரெனினுளமருளுவாயென்றான். (கருசா)

* மாகதலிராமன் (க) பெருங்காதலையுடைய சீராமன் (உ) திருமாமகள் விழைதலையுடைய சீராமன்.

† பான்முலைசோரல்-மக்கண்மாட்டுத்தாயர்வைத்த காதன்மிகுதி.

‡ பொருவருங்குமரர்-ஈடுமெடுப்புமில்லவர்.

§ வான்புனையிசையினாய்-விண்ணுலகுமட்டும் பரந்தபுகழுடையாய்

பைந்தொடியொருத்திசொற்கொண்டுபார்மகள்
நைந்துயிர்நடுங்கவுநடத்திகானெனா
உய்ந்தனனிருந்தனனுண்மைகாவலன்
மைந்தனென்றினையசொல்வழங்கினாயெனா. (௧௫௭)

மாறினியென்னைநீவணங்கொள்வாயென
ஏறினவெகுளியையாதுமுற்றுற
ஆறினைதவிர்கெனவையவாணையிற்
கூறியமொழியினுங்கொடியதாமென்றான். (௧௫௮)

செய்துடைச்செல்வமோயாதுந்தீர்ந்தெமை
* கைதுடைத்தேகவுங்கடவையோவையா
நெய்துடைத்தடையலர்நேயமாதர்கண்
மைதுடைத்துறைபுகும்வயங்கொள்வேலினாய். (௧௫௯)

உரைத்தபின்னிராமனொன்றுரைக்கநேர்ந்திலன்
வரைத்தடந்தோளினான்வதனநோக்கினான்
விரைத்தடந்தாமரைக்கண்ணின்மிக்கநீர்
நிரைத்திடையிடைவிழநெடிதுநிற்கின்றான். (௧௬௦)

அவ்வயினரசவைநின்றமன்பினன்
எவ்வயிலிருந்தவமுனிவனெய்தினான்
† செவ்வியகுமரருஞ்சென்னிதாழ்ந்தனர்
கவ்வையம்பெருங்கடன்முனியுங்கால்வைத்தான். (௧௬௧)

அன்னவர்முகத்தினோடகத்தைநோக்கினான்
பொன்னரைச்சீரையின்பொலிவுநோக்கினான்
என்னினியுணர்த்துவதெடுத்ததுன்பத்தால்
தன்னையுமுணர்ந்தில ‡ னுணருந்தன்மையான். (௧௬௨)

வாழ்வினைநுதலியமங்கலத்துநாள்
தாழ்வினையதுவரச்சீரைசாத்தினான்
சூழ்வினைநான்முகத்தொருவர்ச்சூழினும்
ஊழ்வினையொருவராலொழிக்கற்பாலதோ. (௧௬௩)

வெவ்வினையவடரவிளைந்ததேயுமன்
றிவ்வினையிவன்வயினெய்தற்பாற்றுமன்
றெவ்வினைநிகழ்ந்ததோவேவரெண்ணமோ
செவ்விதினொருமுறைதெரியும்பின்னென்றான். (௧௬௪)

* கய்துடைத்தல்-விட்டொழிதல்.
† செவ்வியகுமரர்-உலகவர் விழையும் பேரழகினர்.
‡ உணருந்தன்மையான் ஈண்டு வசிட்டமுனிவன்.

* விற்றடந்தாமரைச்செங்கண்வீரனை
உற்றடைந்தையநீயொருவியோங்கிய
† கற்றடங்கானுதியென்னிற்கண்ணகன்
மற்றடந்தானையான்வாழ்கிலானென்றான். (கசுரு)

அன்னவன்பணிதலையேந்தியாற்றுதல்
என்னதுகடனவனிடரைநீக்குதல்
நின்னதுகடனிதுநெறியுமென்றனன்
‡ பன்னகப்பாயலுட்பள்ளிநீங்கினான். (கசுசு)

§ வெவ்வரம்பையில்சுரம்விரவென்றனலன்
வெவ்வரம்பனையசொற்றீட்டினாடனைக்
கவ்வரம்பொருதவேலரசனாய்கிலா
திவ்வரந்தருவனென்றேன்றதுண்டென்றான். (கசுஎ)

ஏன்றனனெந்தையிவ்வரங்களேவினாள்
ஈன்றவள்யானதுசென்னியேந்தினேன்
சான்றெனநின்றதீதுடைத்தியோவென்றான்
$ தோன்றியநல்லறநிறுத்தத்தோன்றினான். (கசுஅ)

என்றபின்முனிவனொன்றியம்பநேர்ந்திலன்
நின்றனனெடுங்கணீர்நிலத்துநீர்த்துகக்
குன்றனதோளவன்றொழுதுகொற்றவன்
பொன்றிணிநெடுமதில்வாயில்போயினான். (கசுகூ)

சுற்றியசீரையன்றொடர்ந்ததம்பியன்
முற்றியவுவகையன்முளரிப்போதினும்
குற்றமின்முகத்தினன்கொள்கைகண்டவர்
உற்றதையொருவகையுணர்த்துவாமரோ. (கஎ0)

அந்தணருந்தவரவனிகாவலர்
நந்தலி ¶ னகருளார் || நாட்டுளார்கடம்
சிந்தையென்புகல்வதுதேவருள்ளமும்
வெந்தனர் ○ மேல்வருமுறுதிவேண்டலார். (கஎக)

ஐயனைக்காண்டலுமணங்கனார்கடாம்
மொய்யிளந்துளிர்களான்முளரிமேல்விழும்

---

* வில்-கோதண்டம். † கற்றடம் காலையுங் காடலையுமென்க.

‡ தேவகாரியமாகப் பாற்கடற்பரமன் பாப்பணை துறந்தவனாகிய இராமமூர்த்தி பன்னகப்பாயலுட் பள்ளிநீங்கினான்.

§ வெவ்வரம்பையில் என்புழி ஐசாரியை.

$ அறத்தை நிறுத்தற்பொருட்டே யவதரித்தலின் தோன்றிய நல்லற நிறுத்தத்தோன்றினானென்றார்.

¶ நகருளார்-நகரமாந்தர். || நாட்டுளார்-நாட்டவர்.

○ மேல்வருமுறுதி-இறைவன் இராவணவேட்டையாடித் தம் பதந் தருதல்.

மையலின்மதுகரங்கடியுமாறெனக்
கைகளின்மதர்நெடுங்கண்களெற்றினார். (௧௭௨)

தம்மையுமுணர்ந்திலர்தணிப்பிலன்பினால்
அம்மையினிருவினையகற்றவோவன்றேல்
விம்மியபேருயிர்மீண்டிலாமைகொல்
செம்மறன்றுறையிற் * சிலவர்முந்தினார். (௧௭௩)

விழுந்தனர்சிலர்சிலர்விம்மிவிம்மிமேல்
எழுந்தனர்சிலர்முகத்திழிகண்ணீரிடை
அழுந்தினர்சிலர்பதைத்தளகவல்லியின்
கொழுந்தெரியுற்றெனத்துயரங்கூர்கின்றார். (௧௭௪)

கரும்பனமொழியினர்கண்பனிக்கிலர்
வரம்பறுதுயரினான்மயங்கியேகொலாம்
இரும்பனமனத்தினரென்னநின்றனர்
† பெரும்பொருளிழந்தவர்போலும்பெற்றியார். (௧௭௫)

நெக்கனவுடலுயிர்நிலையினின்றில
இக்கணமிக்கணமென்னுந்தன்மையும்
புக்கனபுறத்தனபுண்ணிற்கண்மலர்
உக்கனநீர்வறந்துதிரவாரியே. (௧௭௬)

இருகையிற்கரிநிகரொண்ணிறந்தவர்
பெருகையிற்பெயர்த்தனர்தலையைப்பேணலர்
ஒருகையிற்கொண்டனருருட்டுகின்றனர்
சுரிகையிற்கண்மலர்சூன்றுநீக்கினார். (௧௭௭)

சிந்தினவணிமணிசிதறிவீழ்ந்தன
பைந்துணர்மாலையிற்பரிந்தமேகலை
நந்தினர்நகையொளிவிளக்கநங்கைமார்
‡ சுந்தரவதனமுமதிக்குத்தோற்றவே. (௧௭௮)

அறுபதினாயிர § ரரசன்றேவியர்
மறுவறுகற்பினர்மழைக்கண்ணீரினர்
சிறுவனைத்தொடர்ந்தனர்திறந்தவாயினர்
எறிதிரைக்கடலெனவிரங்கியேங்கினார். (௧௭௯)

---

* சிலவரென்றது நகரமாந்தரை.

† பெரும்பொரு ளிழந்தவர்போலும் பெற்றியார், பெரியபொருளை யிழந்தவரையொத்த அளவில்லாத துன்பத்தன்மையுடையவராய்.

‡ இதுகாறு மதியம் முகத்துக்குத் தோல்வியெய்த இற்றைஞான்று அது இறைவனீக்கத் தான் வருந்துதலின் சுந்தரவதனமு மதிக்குத்தோற்ற என்றார். $ அரசன் தேவியர் பலராதலின் அவரேங்கினமையை மறிதிரைக்கடற்குவமை கூறினார்.

கன்னிநன்மயில்களுங்குயிற்கணங்களும்
அன்னமுஞ்சிறையிழந்தவனிசேர்ந்தன
என்னவீழ்ந்தழுந்தன * ரிராமனல்லது
மன்னுயிர்ப்புதல்வரைமற்றும்பெற்றிலார். (கஅ0)

இளையினுநரம்பினுநிரம்புங்கேழன
அளவிறந்துயிர்க்கவிட்டாற்றுந்தன்மையால்
தொளைபடுகுழலினோடியாழ்க்குத்தோற்றன
† இளையவரமுதினுமினியசொற்களே. (கஅக)

புகலிடங்கொடுவனம்போலுமென்றுதம்
மகன்வயினிரங்குறுமகளிர்வாய்களால்
அகன்மதினெடுமனையரத்தவாம்பல்கள்
பகலிடைமலர்ந்ததோர்பழனம்போன்றவே. (கஅஉ)

திடருடைக்குங்குமச்சேறுஞ்சாந்தமும்
இடையிடைவண்டலிட்டாரமீர்த்தன
மிடைமுலைக்குவடொரீஇமேகலைத்தடங்
கடலிடைப்புகுந்தகட்கலுழியாறரோ. (கஅங)

தண்டலைக்கோசலைத்தலைவன்மாதரைக்
கண்டனனிரவியுங்கமலவாண்முகம்
‡ விண்டலத்துறையுநல்வேந்தற்காயினும்
உண்டிடருற்றபோதென்னுற்றதன. (கஅச)

தாயருங்கிளைஞருஞ்சார்ந்துளார்களும்
சேயருமணியருஞ்சிறந்தமாதரும்
காயெரியுற்றனரனையகௌவையர்
வாயிலுமுன்றிலுமறையமொய்த்தனர். (கஅரு)

இரைத்தனரிரைத்தெழுந்தேங்கியெங்கணும்
திரைப்பெருங்கடலெனத்தொடர்ந்துபின்செல
உரைப்பதையுணர்கிலனொழிப்பதோர்கிலன்
§ வரைப்புயத்தண்ணறன்மனையைநோக்கினான். (கஅசு)

நன்னெடுநளிர்முடிசூடநன்மணிப்
பொன்னெடுந்தேரொடும்பவனிபோனவன்

---

* அரசன் சீராமனையல்லது காதற்புதல்வனை வேறு பெற்றிலாமை யான வற்குடலன்னவராகலின் இராமனல்லது மன்னுயிர்ப்புதல்வரை மற்றும் பெற்றிலா ரென்றார்.

† யாழ்சொற்குத் தோற்றவேனும் சீராமனீக்கத்தான் அமுதினுமி னியசொற்கள் யாழ்க்குத் தோற்ற என்றார்.

‡ விண்டலத்துறையுநல்வேந்த னென்பதால் இந்திரனைக் குறிக்கி ன்றது. § வரைப்புயத்தண்ணல்-சீராமன்.

துன்னெடுஞ்சிரையுஞ்சுற்றிமீண்டுமப்
பொன்னெடுந்தெருவிடைப்போதன்மேயினான். (௧௮௭)

அஞ்சனமேனியிவ்வழகற்கெய்திய
வஞ்சனைகண்டபின்வகிர்ந்துநீங்கலா
நெஞ்சினும்வலிதுயிர்நினைப்பதென்சில
நஞ்சினும்வலியநந்நலமென்றார்சிலர். (௧௮௮)

மண்கொடுவருமெனவழியிருந்தியாம்
எண்கொடுசுடர்வனத்தெய்தல்காணவோ
* பெண்கொடுவினைசெயப்பெற்றநாட்டினிற்
† கண்கொடுபிறத்தலுங்கடையென்றார்சிலர். (௧௮௯)

‡ முழுவதேபிறந்துலகுடையமொய்ம்பினான்
உழுவைசேர்கானகத்துறைவன்யானென
எழுவதேயெழுதல்கண்டிருப்பதேயிருந்
தழுவதேயழகிதிவ்வன்பென்றார்சிலர். (௧௯௦)

வலங்கடிந்தேழையராயமன்னரை
நலங்கடிந்தறங்கெட § நயக்கலிர்களும்
குலங்கடிந்தான்வலிகொண்டகொண்டலை
நிலங்கடிந்தாளொடுநிகரென்றார்சிலர். (௧௯௧)

திருவரைசுற்றியசீரையாடையன்
பொருவருந்துயரினன்றொடர்ந்துபோகின்றான்
$ இருவரைப்பயந்தவளீன்றகான்முளை
ஒருவனேயிவற்கிவ்வூருறவென்றார்சிலர். (௧௯௨)

முழுக்கலின்வலியநம்மூரிநெஞ்சினை
மழுக்களிற்பிளத்துமென்றோடுவார்வழி
ஒழுக்கியகண்ணினீர்கலுழியூற்றிடை
இழுக்கலில்வழுக்கிவீழ்ந்திடருற்றார்சிலர். (௧௯௩)

பொன்னணிமணியணிமெய்யிற்போக்கினர்
மின்னெனமின்னெனவிளங்குமெய்விலைப்
பன்னிறத்துகிலினைப்பறித்துநீக்கினர்
சின்னநுண்டுகிலினைப்புனைகின்றார்சிலர். (௧௯௪)

---

* கைகேசிசூழ்வினையாற் பெற்றநாடாகலின் பெண்கொடுவினை செயப் பெற்றநாடென்றார். † அந்தகராய்ப்பிறக்கிலிக் கோலத்தைக் கண்டு வருந்துதலில்லையேயென்பார் கண்கொடுபிறத்தலுங் கடையென்றார் என்றனர். ‡ அரசபரம்பரையின் முற்றோன்றலாகலின் முழுவதே பிறந்துலகுடைய மொய்ம்பினானென்றார். § நயக்கலீர்கள்கள்விகுதி மேல்விகுதி. $ இலக்குவ சத்துருக்கர்களைப்பெற்றமையால் சுமத்திராதேவிக்கு இருவரைப்பயந்தவள் என்றது காரணப்பெயராய் நின்றது.

நிறைமகவுடையவர்நெறிசெ * லைம்பொறி
குறைமகக்குறையினுங்கொடுப்பராருயிர்
முறைமகன்வனம்புகமொழியைக்காக்கின்ற
இறைமகன்றிருமனமிரும்பென்றார்சிலர். (௧௯௫)

வாங்கியமருங்குலார்வைத்தகொங்கையர்
பூங்கொடியொதுங்குவபோலொதுங்கினர்
ஏங்கியகுரலினரிணைந்தகாந்தளில்
தாங்கியசெங்கைதந்தலைகண்மேலுளார். (௧௯௬)

தலைக்குவட்டயன்மதிதவழுமாளிகை
நிலைக்குவட்டிடையிடைநின்றநங்கைமார்
முலைக்குவட்டிழிகணீராலிமொய்த்துக
மலைக்குவட்டகவுறுமயிலின்மாழ்கினார். (௧௯௭)

மஞ்செனவகிற்புகைவழங்குமாளிகை
எஞ்சலில்சாளரத்திரங்குமின்சொலார்
அஞ்சனக்கண்ணினீரருவிசோர்தரப்
பஞ்சரத்திருந்தழுங்கிளியிற்பண்ணினார். (௧௯௮)

நன்னெடுங்கண்களினான்றநீர்த்துளி
தன்னெடுந்தாரைகடளத்தின்வீழ்தலால்
மன்னெடுங்குமரன்மாட்டழுங்கிமாடமும்
பொன்னெடுங்கண்குழித்தழுவபோன்றவே. (௧௯௯)

மக்களைமறந்தனர்மாதர்தாயரைப்
புக்கிடமறிந்திலர்புதல்வர்பூசலிட்
டுக்கனருயங்கினருருகிச்சோர்ந்தனர்
துக்கநின்றறிவினைச்சூறையாடவே. (௨00)

காமரங்கனிந்தெனக்கனிந்தமென்மொழி
† மாமடந்தையரெலாமறுகுசேர்தலால்
தேமருநறுங்குழற்றிருவினீங்கிய
தாமரையொத்தனதவளமாடமே. (௨0௧)

மழைக்குலம்புரைகுழல்விரிந்துமண்ணுற
குழைக்குலமுகத்தியர்குழாங்கொண்டேகினர்
இழைக்குலஞ்சிதறிடவேவுண்டோய்வுறும்
உழைக்குலமுழைப்பனவொத்தொர்பாலெலாம். (௨0௨)

---

* ஐம்பொறிகுறை-கண்முதலிய வறிவின்மையை.

† மனையினின்றும் வீதியாய் மாதர்வந்தமையான் மாடங்களை திரு நீங்கிய தாமரைக்குவமை கூறினார்.

கொடியடங்கின * மனைக்குன்றங்கோமுர
சிடியடங்கினமுழக்கிழந்தபல்லியம்
படியடங்கலுநிமிர்பசுநகண்மாரியால்
பொடியடங்கினமதிற்புறத்துவீதியே. (௨0௩)

அட்டிலுமிழ்ந்தனபுகையகிற்புகை
நெட்டிலுமிழ்ந்தனநிறைந்தபால்கிளி
வட்டிலுமிழ்ந்தனமகளிர்காண்மணித்
தொட்டிலுமிழ்ந்தனமகவுஞ்சோரவே. (௨0௪)

ஒளிதுறந்தனமுகமுயிர்துறந்தென
துளிதுறந்தனமுகிற்றொகையுந்தூயநீர்த்
தளிதுறந்தனபரிதானயானையும்
களிதுறந்தனமலர்க்கள்ளுண்வண்டினே. (௨0௫)

நிழல்பிரிந்தனகுடைநெடுங்கணைமையர்
குழல்பிரிந்தனமலர்குமரர்தாரினை
கழல்பிரிந்தனசினக்காமன்வாளியும்
அழல்பிரிந்தன துணைபிரிந்தவன்றிலே. (௨0௬)

தாரொலிநீத்தனபுரவிதண்ணுமை
வாரொலிநீத்தனமழையின்விம்முறும்
தேரொலிநீத்தனதெருவுந்தெண்டிரை
நீரொலிநீத்தனநீத்தம்போலவே. (௨0௭)

மூழவெழுமொலியிலமுறையின்யாழ்நரம்
பெழவெழுமொலியிலவிமைப்பில்கண்ணினர்
விழவெழுமொலியிலவேறுமொன்றில
அழவெழுமொலியிலவரசவீதியே. (௨0௮)

தெள்ளொலிச்சிலம்புகள்சிலம்புபொன்மனை
நள்ளொலித்திலநளிர்கலையுமன்னவே
புள்ளொலித்திலபுனல்பொழிலுமன்னவே
கள்ளொலித்திலமலர்களிறுமன்னவே. (௨0௯)

† செய்ம்மறந்தனபுனல்சிவந்தவாய்சசியா
கைம்மறந்தனபசுங்குழவிகாந்தெரி
நெய்ம்மறந்தனநெறியறிஞர்யாவரும்
மெய்ம்மறந்தனரொலிமறந்தவேதமே. (௨௧0)

---

* மனைக்குன்றம்-வீடுகளாகிய மலைகள், மலையையொத்த வீடுகளெனினுமமையும்.

† ஒலி-உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம். செய்மறந்தன, கைமறந்தன, வேதமறந்தன என உடையவர் தொழிலை யுடைமைமேலேற்றிக் கூறினர்.

ஆடினரழுதனரழுதவேழிசை
பாடினரழுதனர்பரிந்தகோதையர்
ஊடினரழுதனருயிரினன்பரைக்
கூடினரழுதனர்குழாங்குழாங்கொடே. (உ௧௧)

நீட்டிலகளிறுகைக்நீரின்வாயபுதல்
பூட்டிலபுரவிகள்புள்ளும்பார்ப்பினுக்
கீட்டிலவிரைபுனிற்றீன்றகன்றையும்
ஊட்டிலகறவைகன்றுருகிசசோர்ந்தவே. (உ௧உ)

மாந்தர்தம்மொய்ம்பினின்மகளிர்கொங்கையாம்
* ஏந்திளநீர்களும்வறுமையெய்தின
சாந்தமம்மகிணர்தம்முடியிற்றையலார்
கூந்தலின்வறுமையம்மலரின்கூலமே. (உ௧௩)

வேறு.

ஓடைநல்லணிமுனிந்தனவுயர்களிறசசி
† சூடைநல்லணிமுனிந்தனதொடர்மனைநொடியின்
ஆடைநல்லணிமுனிந்தனவம்பொன்செயிஞ்சி
பேடைநல்லணிமுனிந்தனமென்னடைப்பிறவம். (உ௧௪)

‡ திக்குநோக்கியதீவினைப்பயனெனச்சிந்தை
நெக்குநோக்குவோர்நல்வினைப்பயனெனநேர்வோர்
பக்கநோக்கலென் § பருவரலின்பமென்றிரண்டும்
ஒக்கநோக்கியயோகருமருந்துயருழந்தார். (உ௧௫)

ஓவிநல்லுயிருயிர்ப்பிறேடுடல்பதைத்துலைய
மேவிநல்லழகெழில்கெடவிம்மனேய்விம்மத்
தாவிலம்பொறிமறுகுறத்தயரதனென்ன
ஆவிநீக்கின்றதொத்ததவ்வயோத்திமாநகரம். (உ௧௬)

உயங்கியந்நகருலைவுறவொருங்குழைசுற்ற
மயங்கியேங்கினர்வயின்வயின்வரம்பிலர்தொடர
$ இயங்குபல்லுயிர்க்கோருயிரெனநின்றவிராமன்
தயங்குபூண்முலைச்சானகியிருந்துழிச்சார்ந்தான். (உ௧௭)

அழுதுதாயரோடருந்தவரந்தணரரசர்
புழுதியாடியமெய்யினர்புடைவந்துபொருமப்

---

* ஏந்திளநீர்களும் சாந்தம் வறுமையெய்தினவென வினைமுடிக்க.
† சூடை-உச்சியிலணியு மொருவகையாபரணம்.
‡ திக்கு-இடம்.
§ பருவரலின்பமென துன்பவின்பக் கூறுபாடுகளை.
$ இயங்கு பல்லுயிர்க்கோருயிரென நின்றவிராமன்-உலகிற் சஞ்சரிக்கும் எல்லாவுயிர்களிடத்து மந்தரியாமியாயிருக்கு மிராமமூர்த்தி.

பழுதுசீரையினுடையினன்வரும்படிபாரா
எழுதுபாவையன்னாண்மனத்துணுக்கமொடெழுந்தாள். (௨௧௮)

எழுந்தநங்கையைமாமியர்தழுவினரேங்கிப்
பொழிந்தவுண்கணீர்ப்புதுப்புனலாட்டினர்புலம்ப
அழிந்தசிந்தையளன்னமிதின்னதென்றறியாள்
வழிந்தநீர்நெடுங்கண்ணினள்வள்ளலைநோக்கி. (௨௧௯)

வேறு.

பொன்னையுற்றபொலன்கழலோய்புகழ்
மன்னையுற்றதுண்டோமற்றிவ்வன்றுயர்
என்னையுற்றதியம்பென்றியம்பினாள்
மின்னையுற்றநுடக்கத்துமேனியாள். (௨௨௦)

பொருவிலெம்பிபுவிபுரப்பான்புகல்
* இருவராணையுமேந்தினெனின்றுபோய்க்
† கருவிமாமழைகற்கடங்கண்டுநான்
வருவெனீண்டுவருந்தலைநீயென்றான். (௨௨௧)

நாயகன்வனநண்ணலுற்றானென்றும்
மேயமண்ணிழந்தானென்றும்விம்மலள்
நீய்வருந்தலைநீங்குவென்யானென்ற
தீயவெஞ்சொல்செவிசுடத்தேம்புவாள். (௨௨௨)

துறந்துபோமெனச்சொற்றசொற்றேறுமோ
உறைந்தபாற்கடற்சேக்கையுடனொரீஇ
‡ அறந்திறம்புமென்றையனயோத்தியில்
பிறந்தபின்பும்பிரிவிலளாயினாள். (௨௨௩)

அன்னதன்மையளையனுமன்னையும்
சொன்னசெய்யத்துணிந்ததுதூயதே
என்னையென்னையிருத்தியென்றானென
உன்னவுன்னவுயிருமிழாநின்றாள். (௨௨௪)

வல்லரக்கரின்மால்வரைபோய்வீழ்ந்
தல்லரக்கினுருக்கழல்காட்டயற்
கல்லரக்குங்கடுமையவல்லநின்
சில்லரக்குண்டசேவடிப்போதென்றான். (௨௨௫)

---

* இருவர் ஈண்டு தந்தைதாயரை. கருவியென்றது மின்னுமுழ
குமுதலியவற்றின் றொகுதியை. ‡ சீராமனாகத்திருவவதரித்தது பாற்
டற் பரமனாகலானும், அறத்தை நிறுத்தற்பொருட்டுத் தானுமுடன்
ன்றினாளாகலானும், ஐயனயோத்தியிற் பிறந்தபின்பும் பிரிவிலளெ
றதென்க.

பரிவிகந்தமனத்தொடுபற்றிலா
தொருவுகின்றனையூழியருக்கனும்
எரியுமென்பதியாண்டையதீண்டுகின்
பிரிவினுஞ்சுடுமோபெருங்காடென்றாள். (உஉகு)

அண்ணலன்னசொற்கேட்டனனன்றியும்
உண்ணிவாந்தகருத்துமுணர்ந்தனன்
கண்ணினீர்க்கடல்கைவிடநேர்கிலன்
எண்ணுகின்றனனென்செயற்பாற்றென்று. (உஉஎ)

அனையவேலையகன்மனையெய்தினள்
புனையுஞ்சீரந்துணிந்துபுனைந்தனள்
* நினைவில்வள்ளல்பின்வந்தயனின்றனள்
† பனையினீள்கரம்பற்றியகையினாள். (உஉஅ)

எழைதன்செயல்கண்டவர்யாவரும்
வீழுமண்ணிடைவீழ்ந்தனர்வீந்திலர்
வாழுநாளுளவென்றபின்மாள்வரோ
ஊழிபேரினுமுய்குநருய்வரோ. (உஉகூ)

தாயர்தவ்வையர்தன்றுணைச்சேடியர்
ஆயமன்னியவன்பினரொன்றிவர்
தீயின்மூழ்கினரொத்தனர்செங்கணான்
தூயதையலைநோக்கினன்சொல்லுவான். (உ௩0)

முல்லையுங்கடன்முத்துமெதிர்ப்பினும்
வெல்லும்வெண்ணகையாய்விளைவுன்னுவாய்
அல்லலபோதவமைந்தனையாதலின்
‡ எல்லையற்றவிடர்தருவாயென்றான். (உ௩க)

கொற்றவன்னதுகூறலுங்கோகிலம்
செற்றதன்னகுதலையள்சீறுவாள்
உற்றுநின்றதுயரமிதொன்றுமே
எற்றுறந்தபினின்பங்கொலாமென்றாள். (உ௩உ)

பிறிதொர்மாற்றம்பெருந்தகைபேசலன்
மறுகிவீழ்ந்தமழைமந்தருமாதரும்
செறுவில்வீழ்ந்தநெடுந்தெருச்சென்றனன்
நெறிபெருமையரிதினினீங்குவான். (உ௩௩)

---

* நினைவில்-நினைக்குமளவினை.

† பனையினீள் கரம்பற்றிலாக்கையினாள்-தன்னைப்பாணிக்கிரகணஞ் செய்தமை யுணர்த்துதற்கு.

‡ சனகியை இலங்கையர்கோன் சிறைவைக்குமென்ப துணர்ந்த எல்லையற்ற படர்தருவாயென்ற தென்க.

சீரைசுற்றித்திருமகள்பின்செல
மூரிவிற்கையிளையவன்முன்செலக்
காரையொத்தவன்போம்படிகண்டவவ்
* வூரையுற்றதுணர்த்தவொண்ணுமோ. (உருச)

ஆரும்பின்னரழுதவலித்திலர்
சோருஞ்சிந்தையர்யாவருஞ்சூழ்ந்தனர்
வீரன்முன்வனமேவுதும்யாமெனப்
போரென்றொல்லொலிகைம்மிகப்போயினர். (உருரு)

தாதைவாயிற்குறுகினன்சார்தலும்
கோதைவேலவன்றாயரைக்கும்பிடா
ஆதிமன்னனையாற்றுமினீரென்றான்
மாதராரும்விழுந்துமயங்கினர். (உருசு)

ஏத்தினர்தம்மகனைமருகியை
வாழ்த்தினரிளையோனைவழுத்தினர்
காத்துநல்குமின்றெய்வதங்காளென்றார்
நாத்தழும்பவாற்றிடங்குவார். (உருஎ)

அன்னதாயரிதிற்பிரிந்தபின்
முன்னர்நின்றமுனிவனைக்கைதொழாத்
தன்னதாருயிர்த்தம்பியுந்தாமரைப்
பொன்னுந்தானுமொர்தேர்மிசைப்போயினன். (உருஅ)

ச-வது, நகர்நீங்குபடலம்-முற்றிற்று.
ஆகதிருவிருத்தம்-இருரு.

## ரு-வது, தைலமாட்டுபடலம்.



கலிவிருத்தம்.

ஏவியகுரிசில்பின்யாவரேகிலார்
மாவியுறனையம்மன்னைநீங்கலாத்
தேவியரொழிந்தனர்தெய்வமாநகர்
ஓவியமொழிந்தனவுயிரிலாமையால். (க)

கய்கணீர்பரந்துகாறொடரக்கண்ணுகும்
வெய்யநீர்வெள்ளத்துமெள்ளச்சேறலால்

* ஊரையுற்றதுணர்த்தவு மொண்ணுமோ - உலகமுழுதாண்டவர
ன் இறந்துபடுதலை யுணர்த்துவது தன்றெலுரைப்பரிதென்றார்.

* உய்யவேழுலகுமொன்றானநீருழல்
தெய்வமீனொத்ததச்செம்பொற்றேரரோ. (௨)
மீன்புகழ்பெறவெயிலொதுங்க † மேதியோ
டான்புகக்கதிரவனத்தம்புக்கனன்
கான்புகக்காண்கிலேனென்றகல்லதர்
தான்புகமுடுகினனென்னுந்தன்மையான். (௩)
‡ பகுத்தவான்மதிகொடுபதுமத்தண்ணலே
வகுத்தவாணுதலியர்வதனராசிபோல்
உகுத்தகண்ணீரினிலொளியுநீங்கின
முகிழ்த்தமுகிழ்ந்தனமுளரிபீட்டமே. (௪)
அந்தியில்வெயிலொளியழியவானகம்
நந்தலில்கைகயன்பயந்தநங்கைதன்
மந்தரையுரையெனுங்கடுவின்மட்கிய
சிந்தையினிருண்டதுசெம்மைநீங்கியே. (௫)
பரந்துமீனரும்பியபசலைவானகம்
§ அரந்தையின்முனிவரனறைந்தசாபத்தால்
நிரந்தரமிமைப்பிலாநெடுங்கண்ணீடிய
$ புரந்தரனுருவெனப்பொலிந்ததெங்குமே. (௬)
திருநகர்க்கியோசனையிரண்டுசென்றொரு
விரைசெறிசோலையைவிரைவினெய்தினான்
இரதநின்றிழிந்தபினிராமனின்றுணை
உரைசெறிமுனிவரோடுறையுங்காலையே. (௭)
வட்டமோரோசனைவளைவிற்றாய்நடு
எட்டனையிடவுமோரிடமிலாவகைப்
புட்டகுசோலையின்புறத்துப்போர்த்தென
விட்டது ¶ குரிசிலைவிடாதசேனையே. (௮)
குயின்றியகுலமணிநதியின்கூலத்தில்
பயின்றுயர்வாலுகப்பரப்பில்பைம்புலில்
வயின்றொறும்வைகினரொன்றும்வாய்மடுத்
தயின்றிலர்துயின்றிலரழுதுவிம்மினார். (௯)

---

* சோமுகாசுரனென்பவன் வேதங்களைக் கவர்ந்து கடலிலொளித்தபோது அவ்வேதத்தை மீட்டுக்கொண்டுவர மச்சாவதாரங்கொண்டு அவனுயிர்வாங்கினமையால் உய்யவே ழுலகுமொன்றான் நீருழல் தெய்வமீனொத்தது என்றார்.

† மாலைக்காலத்தில் ஆவினமுதலியன மனையின்மீடலுண்மையாக லின் மேதியோடான் புகவென்றார். ‡ பகுத்தவான்மதி-அட்டமச்சந்திரன். § அரந்தையில் முனிவரன்-தூருவாசன். $ புரந்தரன்-இந்திரன் ¶ குரிசில்-சீராமன்.

வேறு.

* வாவிவிரிதாமரையின்மாமலரின்வாசக்
காவிவிரிநாண்மலர்முகிழ்த்தனையகண்ணார்
ஆவிவிரிபானுரையினுடையணையாக
நாவிவிரிகூழையிளநவ்வியர்துயின்றார். (க0)

பெரும்பகல்வருந்தினர்பிறங்குமுலைதெங்கின்
குரும்பைகள்பொருஞ்செவிலிமங்கையர்குறங்கில்
அரும்பனையகொங்கையயிலம்பனையவுண்கண்
கரும்பனையசெஞ்சொனவில்கன்னியர்துயின்றார். (கக)

பூவகநிறைந்தபுளினத்திரள்கடோறும்
மாவகிரினுண்கணர்மடப்பிடியின்வைகச்
† சேவகமமைந்தசிறுகட்கரிகளென்னத்
‡ தூவகலில்குந்தமறமைந்தர்கடுயின்றார். (கஉ)

தகவுமிகுதவமுமிவைதழுவவுயர்கொழுநர்
முகமுமவரருளுநுகர்சிலர்கடுயர்முடுக
அகவுமிளமயில்களுயிரலசியனவனையார்
மகவுமுலைவருடவிளமகளிர்கடுயின்றார். (கங)

§ மாகமணிவேதிகையின்மாதவிசெய்பந்தல்
கேகயநெடுங்குலமெனச்சிலர்கிடந்தார்
பூகவனமூடுபடுகர்ப்புளினமுன்றில்
தோகையிளவன்னநிரையிற்சிலர்துயின்றார். (கச)

சம்பகநறும்பொழில்களிற்றருணவஞ்சிக்
கொம்பமுதொசிந்தனவெனச்சிலர்குழைந்தார்
வம்பளவுகொங்கையொடுவாலுகம்வளர்க்கும்
அம்பவளவல்லிகளெனச்சிலரசைந்தார். (கரு)

குங்குமமலைக்குளிர்பனிக்குழுமியென்னத்
துங்கமுலையிற்றுகளுறச்சிலர்துயின்றார்
அங்கையணையிற்பொலிவழுங்கமுகமெல்லாம்
பங்கயமுகிழ்த்தனவெனச்சிலர்படிந்தார். (கசு)

தொடுத்தகலிடைச்சிலர்துவண்டனர்துயின்றார்
அடுத்தவடையிற்சிலரழிந்தனரயர்ந்தார்
உடுத்ததுகில்சுற்றொருதலைச்சிலருறைந்தார்
படுத்ததளிரிற்சிலர்பசந்தனரசந்தார். (கஎ)

---

* வாவிவிரிதாமரை-நாண்மலர்.
† சேவகம்-விலங்கின் படுக்கையிடம்.
‡ தூ – (பகைவர்) ஊன்.
§ மாகம்-விண்ணுலகு.

எனையருமின்னணமிறங்கினருறங்கா
* மானவனுமந்திரிசுமந்திரனைவாவென்
றூனமில்பெருங்குணமொருங்குடையவுனால்
மேனிகழ்வதுண்டவுரைகேளெனவிளம்பும். (௧௮)

வேறு.

பூண்டபோன்பிணைப்போக்குவதரிதுபோக்கா
நீண்டுநின்றேகல்பொல்லாதெந்தைநீயிரதமின்னே
தூண்டினைமீளநோக்கிச்சுவட்டையோர்ந்தென்னையங்கே
மீண்டனனென்னமீள்வரிதுநின்னைவேண்டிற்றென்றான். (௧௯)
செவ்வியகுரிசில்கூறத்தேர்வலான்செப்புவானவ்
வெவ்வியதாயிரீயவிதியினின்மேலென்போலாம்
இவ்வயினின்னைநீக்கியின்னுயிர்தீர்ந்தின்றேகி
அவ்வயினனையகாண்டற்கமைதலாலரியனென்றான். (௨௦)

வேறு.

தேவியுமிளவலுந்தொடரச்செல்வனைப்
பூவியல்கானகம்புகவுய்த்தே † னென்கோ
கோவினையுடன்கொடுகுறுகினேனென்கோ
யாவதுகூறுகேனிரும்பினெஞ்சினேன். (௨௧)
‡ தாருடைமலரினுமொதுங்கத்தக்கிலா
§ வாருடைமுலையொடுமெதுகைமைந்தரைப்
பாரிடைச்செலுத்தினேன்பழையநண்பினேன்
தேரிடைவந்தனென்றீதிலேனென்கோ. (௨௨)
வன்புலக்கன்மனமதியில்வஞ்சனேன்
என்புலப்புறவுடைந்திரங்குமன்னன்பால்
உன்புலக்குரியசொல்லுணர்த்தச்செல்கேனோ
தென்புலக்கோமகன்றூதிற்செல்கேனோ. (௨௩)
நாற்றிசைமாந்தருநகரமாக்களும்
தேற்றினர்கொணர்வருன்சிறுவன்றன்னையென்
றூற்றினவரசனையய்யவெய்யவென்
கூற்றுறழ்சொல்லினாற்கொலைசெய்வேன்கொலோ. (௨௪)

---

* மானவன் - மனுமரபிற்றோன்றினவன் என்னும் பொருள்மேல் நிற்றலால் தத்திதாந்தபதம். † என்கு எதிர்காலத்தில்வந்த தன்மையொருமைமுற்று.

‡ ஆய்ந்துமாலையாகத் தொடுத்த மலரு மிறைவிநடக்கப்பாதங்களை வருத்துதலின் 'தாருடையமலரினு மொதுங்கத்தக்கிலா' என்றார்.

§ வாருடைமுலை-கச்சணிந்தமுலை யென்பதனறி வாருடைகின்ற முலையெனினுமமையும்.

* அங்கிமேல்வேள்விசெய்தரிதிற்பெற்றநின்
சிங்கவேறகன்றதென்றுணர்த்தச்செல்கெனோ
எங்கள்கோமகற்கினியென்னிற்கேகயன்
நங்கையேகடைமுறைநல்லள்போலுமால். (உரு)

முடிவுறவின்னனமொழிந்தபின்னரும்
அடியுறத்தழுவினனழுங்குபேரரா
இடியுறத்துவளுவதென்னுமின்னலன்
படியுறப்புரண்டனன்பலவும்பன்னினான். (உசு)

தடக்கையாலெடுத்தவற்றழுவிக்கண்ணநீர்
துடைத்தவேறிருத்திமற்றினையசொல்லினான்
† அடக்குமைம்பொறியொடுகரணத்தப்புறம்
கடக்கும்வாலுணர்வினுக்கணுகுங்காட்சியான். (உஎ)

பிறத்தலென்றுற்றபின்பெறுவயாவையும்
திறத் ‡ துளியுணர்வதோர்செம்மையுள்ளத்தாய்
புறத்துறுபெரும்பழிபொதுவின்றெய்தலும்
அறத்திறமறத்தியோவவலமுண்டெனா. (உஅ)

முன்புநின்றிசைநிறீஇமுடிவுமுற்றிய
பின்பு § நின்றுறுதியைப்பயக்கும்பேரறம்
இன்பம்வந்துறுமெனினினியதாயிடைத்
துன்பம்வந்துறுமெனிற்றுறக்கலாகுமோ. (உகூ)

நிறப்பெரும்படைக்கலநிறத்தினேருற
மறப்பயன்விளைக்குறும்வன்மையன்றரோ
இறப்பினுந்திருவெலாமிழப்பவெய்தினும்
துறப்பிலரறமெனல்சூரராவதே. (ஙூ0)

கான்புறஞ்சேறலிலருமைகாண்டலால்
வான்பிறங்கியபுகழ்மன்னர்தொல்குலம்
யான்பிறந்தறத்தினின்றிழுக்கிற்றென்னவோ
வூன்றுறந்துயிர்குடித்துழலும்வேலினாய். (ஙூக)

வினைக்கருமெய்ம்மையன்வனத்துள்விட்டனன்
மனைக்கரும்புதல்வனையென்றன்மன்னவன்

---

* அங்கிமேல் வேள்விசெய்து – யாகாக்கினிமேல் அவிப்பாகஞ்செய்து மகவருவேள்வி.

† அடக்குமைம்பொறியொடு கரணத்தப்புறங் கடக்கும் வாலுணர் வினுக்கணுகுங் காட்சியானென்றார். ஐம்பொறியுங் கரணநான்குங்கடந்தமெய்யுணர்ச்சியுடையார் வாலறிவினுக் கண்மையனைஇராமமூர்த்தி.

‡ உளி மூன்றுவதன் பொருள்படுவதோ ரிடைச்சொல். § ஆன்மாவோடுகூடக் கலந்துளது என்பது தோன்றநின்று என்றார்.

தனக்கருந்தவமதுதலைக்கொண்டேகுதல்
எனக்கருந்தவமிதற்கிரங்கலெந்தைநீ. (௫௨)

முந்தினைமுனிவனையிறைஞ்சிமுற்றுமென்
வந்தனைமுதலியமாற்றங்கூறினை
எந்தையையவனொடுமெய்தியீண்டெனை
சிந்தனையுணர்த்துதியென்றுசெப்புவாய். (௫௩)

முனிவனையெம்பியைமுறையினின்றரும்
புனிதவேதியர்க்குமேலுறைபுத்தேளிர்க்கும்
இனியனவிழைத்தியென்றியம்பியெற்பிரி
தனிமையுந்தீர்த்தியென்றுரைத்திதன்மையால். (௫௪)

வெவ்வியதன்னையால்விளைந்ததீண்டொரு
கவ்வையென்றிறையுந்தன்கருத்தினோக்கலன்
எவ்வருளென்வயின்வைத்ததின்சொலால்
அவ்வருளவன்வயினருளுகென்றியால். (௫௫)

வேண்டினனிவ்வரமென்றுமேலவன்
ஈண்டருளெம்பிபானிறுவியேகினை
பூண்டமாதவனொடுங்கோயில்புக்கென
தாண்டகைவேந்தனையவலமாற்றிப்பின். (௫௬)

ஏழிரண்டாண்டுநீத்தீண்டவந்துனைத்
தாழ்குவன்றிருவடிதளரலீண்டெனச்
சூழிவெங்கடகளிற்றரசற்சொல்லிப்பின்
வாழிமாதவன்சொலான்மனந்தெருட்டுவாய். (௫௭)

முறைமையாலெற்பயந்தெடுத்தமூவர்க்கும்
* குறைவிலாவென்னெடுவணக்கங்கூறிப்பின்
இறைமகன்றுயர்துடைத்திருத்திமாடென்றான்
† மறைகளைமறைந்துபோய்வனத்துள்வைகுவான். (௫௮)

ஆள்வினையாண்மையிற்றிறம்பலன்றெனாத்
தாள்முதல்வணங்கியதனித்திண்டேர்வலான்
ஊழ்வினைவசத்துயிர்நிலையென்றன்னுவான்
‡ வாழ்வினைநோக்கியைவணங்கிநோக்கினான். (௫௯)

---

* குறைவிலாவென்னெடுவணக்கம் — தீர்க்கதெண்டம். † மறையினந்தங் கடந்தானாயினும் தாய்மொழி யான்கான் போந்திருத்தலின் 'மறைகளை மறைந்துபோய் வனத்துள்வைகுவா' னென்றார். ‡ வாழ்வினைநோக்கி — இல்வாழ்க்கையின் வழியைநோக்கிய சீதாபிராட்டியை அல்லது தன்னை வழிபடுவோர்க்கு வாழ்வினை யருள்பவ னெனினு மமையும்.

அன்னவள்கூறுவாளரசர்க்கத்தையர்க்
கென்னுடைவணக்கமுன்னியம்பியானுடைப்
பொன்னிறப்பூவையுங்கிளியும்போற்றுகென்
றன்னுமென்றங்கையர்க்குணர்த்துவாயென்றாள். (௪௰)

தேர்வலானவ்வுரைகேட்டுத்தீங்குறின்
யார்வலாருயிர்துறப்பெளிதன்றேயெனாப்
போர்வலான்றடுக்கவும்பொருமிவிம்மினான்
சோர்விலாவறிவிலாத்துயர்க்குச்சோர்கின்றான். (௪௧)

ஆறினன்போற்சிறிதவலமவ்வழி
வேறிலாவன்பினெய்விடைதாதீகென
* ஏறுசேவகற்கொருமொழியிளையமைந்தனைக்
கூறுவதியாதெனவினையகூறினான். (௪௨)

உரைசெய்தெங்கோமகற்குறுதியாக்கிய
தரைகெழுசெல்வந்தைத்தவிர்மற்றொரு
விரைசெறிகுழலிமாட்டளித்தமெய்யனை
அரசனென்றின்னமொன்றறையற்பாலதோ. (௪௩)

கானகம்பற்றிநற்புதல்வன்காயுணப்
போனகம்பற்றியபொய்யின்மன்னர்க்கிங்
கூனகம்பற்றியவுயிர்கொடின்னும்போய்
† வானகம்பற்றிலாவலிமைகூறென்றான். (௪௪)

மின்னுடன்பிறந்தவாட்பரதவேந்தற்கு
மன்னுடன்பிறந்திலென்மண்கொண்டாள்கின்ற
தன்னுடன்பிறந்திலென்றம்பிமுன்னலென்
என்னுடன்பிறந்தயான்வலியனென்றியால். (௪௫)

ஆரியனிளவலைநோக்கியையவிச
சீரியவல்லனசெப்பலென்றபின்
பாரிடைவணங்கினன்பதைக்குநெஞ்சினன்
தேரிடைவித்தகன்சேறன்மேயினான். (௪௬)

கூட்டினன்றேர்ப் ‡ பொறிகூட்டிக்கோன்முறை
பூட்டினன்புரவியப்புரவிபோனெறி
காட்டினன்காட்டித்தன்கல்விமாட்சியால்
ஓட்டினனொருவருமுணர்வுறாமலே. (௪௭)

* ஏறுசேவகனீண்டு-சீராமன்.
† வானகம்பற்றிலாவலிமை-துறக்கமடையாதிருப்பது.
‡ பொறி-எந்திரம்.

தையறன்கற்புந்தன் றகவுந்தம்பியும்
மையறுகருணையுமுணர்வும்வாய்மையும்
செய்யதன்வில்லுமேசேமமாகக்கொண்
டையனும்போயினானல்லினாப்பனே. (௪௮)

வேறு.

பொய்வினைக்குதவும்வாழ்க்கையரக்கரைப்பொருநரியன்னார்
செய்வினைக்குதவுநட்பாற்செல்பவர்தடுப்பதேய்க்கும்
மைவிளக்கியதேயன்னவயங்கிருடுரக்கவானம்
கைவிளக்கெடுத்ததென்னவந்ததுகடவுட்டிங்கள். (௪௯)

மருமத்துத்தன்னையூன்றுமறக்கொடும்பாவந்தீர்க்கும்
உருமொத்தசிலையினோரையொருப்படுத்துதவிநின்ற
கருமத்தின்விளைவையெண்ணிக்களிப்பொடுகாணவந்த
தருமத்தின்வதனமென்னப்பொலிந்ததுதனிவெண்டிங்கள். (௫௦)

காம்புயர்கானஞ்செல்லுங் * கரியவன்வறுமைநோக்கித்
தேம்பினகுவிந்தபோலுஞ்செங்கழுநீருஞ்சேரைப்
பாம்பினதலையவாகிப்பரிந்தனகுவிந்துசாய்ந்த
ஆம்பலுமென்றபோதுநின்றபோதலர்வதுண்டோ. (௫௧)

அஞ்சனக்குன்றமன்னவழகனுமழகன்றன்மேல்
எஞ்சலில்பொன்போர்த்தன்னவிளவலுமிருந்துவெண்பான்
வெஞ்சிலைப்புருவத்தாடன்மெல்லடிக்கேற்பவெண்ணூற்
பஞ்சிடைப்படுத்தாலென்னவெண்ணிலாப்பரப்பப்போனார். (௫௨)

சிறுநிலைமருங்குல்கொங்கையேந்தியசெல்வமென்னும்
நெறியிருங்கூந்தனங்கைசீறடிநீர்க்கொப்பூழின்
நறியனதொடர்ந்துசென்றாநடந்தெளினவையினீங்கும்
உறுவலியன்பினுங்கொன்றுண்டெனவுணர்வதுண்டோ. (௫௩)

பரிதிவானவனுங்கீழ்பாற்பருவரைபற்றாமுன்னம்
திருவினாயகனுந்தென்பால்யோசனையிரண்டுசென்றான்
அருவிபாய்கண்ணும்புண்ணாயழிகின்றமனமுந்தானும்
துரிதமான்றேரிற்போனான்செய்ததுசொல்லலுற்றாம். (௫௪)

கடிகையோரிரண்டுமூன்றிற்கடிமதிலயோத்திகண்டான்
அடியிணைதொழுதானாதிமுனிவனையவனுமுற்ற
படியெலாங்கேட்டுநெஞ்சிற்பருவரலுழந்தான்முன்னே
முடிவெலாமுணர்ந்தானந்தோமுடிந்தனன்மன்னனென்றான். (௫௫)

* கரியவன்-ஸ்ரீராமன்.

நின்றுயர்பழியையஞ்சிநேர்ந்திலன்றடுக்கவள்ளல்
ஒன்றுநானுரைத்தனோக்கான்றருமத்திற்குறுதிபார்ப்பான்
வென்றவருளரேமேலைவிதியினையென்றுவிம்மிப்
பொன்றிணிமன்னன்கோயில்சுமந்திரனோடும்போனான். (ருசு)

தேர்கொண்டுவள்ளல்வந்தானென்றுதஞ்சிந்தையுந்த
* ஊர்கொண்டதிங்களென்னமன்னனையுழையர்சுற்றக்
கார்கொண்டமேனியானைக்கண்டிலர்கண்ணனில்வற்றா
நீர்கொண்டநெடுந்தேர்ப்பாகனிலைகண்டேநிலையிற்றீர்ந்தார். (ருஎ)

இரதம்வந்துற்றதென்றாங்கியாவருமியம்பலோடும்
வரதன்வந்துற்றானென்னாமன்னனுமயக்கந்தீர்ந்தான்
புரைதபுகமலநாட்டம்பொருக்கெனவிழித்துநோக்கி
விரதமாதவனைக்கண்டான்வீரன்வந்தனனோவென்றான். (ருஅ)

இல்லையென்றுரைக்கலாற்றானேங்கினன்முனிவனின்றான்
நல்லவன்முகமேநம்பிநடந்திலனென்னுமாற்றம்
சொல்லலுமரசன்சோர்ந்தான்றுயருறுமுனிவனானிவ்
அல்லல்காண்கில்லேனென்னாவாங்குநின்றகலப்போனான். (ருகூ)

நாயகன்பின்னுந்தன்றேர்ப்பாகனைநோக்கிநம்பி
சேயனோவணியனோவென்றுரைத்தலுமனையான்செய்ய
வேயுயர்கானந்தானுந்தம்பியுமிதிலைப்பொன்னும்
போயினனென்றானென்றபோழ்தத்தேயாவிபோனான். (சு0)

இந்திரன்முதல்வராயகடவுளர்யாருமீண்டிச்
சந்திரனனையதாங்கோர்மானத்தின்றலையிற்றாங்கி
வந்தனனெந்தைதந்தையெனமனங்களித்துவள்ளல்
உந்தியானுலகினும்பர் † மீள்கிலாவுலகத்துய்த்தார். (சுக)

உயிர்ப்பிலன்றுடிப்புமில்லனென்றுணர்ந்துருவந்தீண்டி
அயிர்த்தனனோக்கிமன்னற்காருயிரின்மைதேறி
மயிற்குலமனையநங்கைகோசலைமறுகிவீழ்ந்தாள்
வெயிற்சுடுகோடைதன்னிலென்பிலாவுயிரின்வேவாள். (சுஉ)

‡ இருந்தவந்தணனோடெல்லாமீன்றவன்றன்னையீனப்
பெருந்தவஞ்செய்தநங்கைகணவனிற்பிரிந்துதெய்வ
மருந்திழந்தவரின்விம்மிமணிபிரியரவின்மாந்தி
அருந்துணைபிரிந்தவன்றிற்பெடையெனவரற்றலுற்றாள். (சுங)

---

* ஊர்-ஊர்கோள்.
† மீள்கிலாப்பதமென்றது ஒளிசூழ்பரமபதம்.
‡ இருந்தவந்தணன்.-அயன்.

வேறு.

தானேதானேதஞ்சமிலாதான்றகைவில்லான்
போனான்போனானெங்களைநீத்திப்பொழுதென்னா
வானீர்சுண்டிமண்ணறவற்றிமறுகுற்ற
மீனேயென்னமெய்தடுமாறிவிழுகின்றாள். (௬௪)

ஒன்றோநன்னாட்டெய்க்குவரிந்நாட்டுயிர்காப்பார்
அன்றேமக்கட்பெற்றுயிர்வாழ்வார்க்கவமுண்டே
இன்றேவந்தீண்டஞ்சலெனாதெம்மகனென்பான்
கொன்றானன்றோதந்தையையென்றாள்குலைகின்றாள். (௬௫)

நோயும்மின்றிநோன்கதிர்வாள்வேலிவையின்றி
மாயுஞ்செல்வமக்களினாலோமறமன்னன்
* காயும்புள்ளிக்கர்க்கடநாகங்கனிவாழை
வேயும்போன்றானென்றுமயங்காவிழுகின்றாள் (௬௬)

வடித்தாழ்கூந்தற்கேகயன்மாதேமதியாலே
பிடித்தாய்வையம்பெற்றனைபோராவரமின்னே
முடித்தாயன்றேமந்திரமென்றாண்முகில்வாய்மின்
துடித்தாலென்னமன்னவன்மார்பிற்றுவஃகின்றாள். (௬௭)

அருந்தேரானைச்சம்பரனைப்பண்டமர்வென்றாய்
இருந்தார்வானோருன்னருளாலேயினிதிந்நாள்
விருந்தாகின்றாயென்றனள்வேழத்தரசொன்றைப்
பெருந்தாளன்பிற்சூழ்பிடியென்னப்பிரிவுற்றாள். (௬௮)

வேள்விச்செல்வந்துய்த்திகொன்மெய்மைத்துணையின்மை
சூழிச்செல்வந்துய்த்திகொறோலாமனுநூலின்
வாழிச்செல்வந்துய்த்திகொன்முன்னென்றனள்வானோர்
கேள்விச்செல்வந்துய்க்கவயிற்றோர்கிளைதந்தாள். (௬௯)

வேறு.

ஆழிவேந்தன்பெருந்தேவியன்னபன்னியழுதரற்றத்
தோழியன்னசுமித்திரையுந்துளங்கியேங்கியுயிர்சோர
ஊழிதிரிவதெனக்கோயிலுலையும்வேலைமற்றொழிந்த
மாழையுண்கட்டேவியருமயிலின்குழாத்தின்வந்திரைத்தார். (௭0)

துஞ்சினானைத்தம்முயிரின்றுணையைக்கண்டார்துணுக்கத்தான்
நஞ்சுகவர்ந்தாலெனவுடலுநடுங்காநின்றாரென்றாலும்

* ஞெண்டு, பாம்பு, வாழை, வேய் இவை கேடுறுங்காலத்தவற்றின் கருவே நாசமெய்துவித்தலின், காயும் புள்ளிக்கர்க்கடநாகங் கனிவாழை வேயும் போன்றானென்றார். “நண்டுசிப்பிவேய்கதலி நாசமுறுங்காலத்திற்-கொண்டகருவழிக்குங் கொள்கைபோல்” என்றார் பிறரும்.

அஞ்சியழுங்கிவிழுந்திலராலன்பிற்றறுகண்பிறிதுண்டோ
வஞ்சமில்லாமனத்தானைவானிற்றொடர்வான்மனம்வலித்தார். (௭௧)

அளங்கொளளக்கரிரும்பரப்பிலண்டருலகிலப்புறத்தில்
விளங்குமாதர்கற்பினாரிவரின்யாவரெனநின்றார்
களங்கநீத்தமதிமுகத்தார்கானவெள்ளங்கால்கோப்பத்
துளங்கலில்லாத்தணிக்குன்றிற்றொக்கமயிலிற்சூழ்ந்திருந்தார். (௭௨)

கைத்தசொல்லானுயிரிழந்தும்புதல்வற்பிரிந்துங்கடையோட
மெய்த்தவேந்தன்றிருவுடம்பைப்பிரியாதரற்றிவிட்டிலரால்
பித்தமயக்காஞ்சுறவெறியும்பிறவிப்பெரியகடல்கடக்க
உய்த்துமீண்டநாவாயிற்றாமும்போவாரொக்கின்றார். (௭௩)

மாதரார்களறுபதினாயிரருமுள்ளம்வலித்திருப்பக்
கோதில்குணத்துக்கோசலையுமிளையமாதுங்குழைந்தேங்கச்
சோதிமணித்தேர்ச்சுமந்திரன்சென்றரசன்றன்மைசொலவந்த
* வேதமுனிவன்விதிசெய்தவினையைநோக்கிவிம்முவான். (௭௪)

செய்யக்கடவசெயற்குரியசிறுவரீண்டையாரல்லர்
எய்தக்கடவபொருளெய்தாதிகவாவென்னவியல்பென்ன
மையற்கொடியாண்மகனீண்டுவந்தான்முடித்துமற்றென்ன
தையற்கடனின்றெடுத்தவனைத்தயிலக்கடலின்றலையுய்த்தான். (௭௫)

தேவிமாரையிவற்குரிமைசெய்யுநாளிற் † செந்தீயின்
ஆவிநீத்திரெனநீக்கியரிவைமார்களிருவரையும்
தாவில்கோயிற்றலையிருத்தித்தண்டார்ப்பரதற்கொண்டணைகென்
றேவினான்மன்னவனாணையெழுதிமுடங்கல்கொடுத்தவரை. (௭௬)

போனாரவருங்கேகயர்கோன்பொன்மாநகரம்புகவெய்த
ஆனாவறிவினருந்தவனுமறமார்பள்ளியதுசேர்ந்தான்
சேனாபதியிற்சுமந்திரனைச்செயற்பாற்குரியசெய்கென்னா
மேனாஞ்சொன்னமாந்தர்க்குவிளைந்ததினிநாம்விளம்புவாம். (௭௭)

மீனீர்வேலைமுரசியம்பவிண்ணோரேத்தமண்ணிறைஞ்சத்
தூநீரொளிவாள்புடையிலங்கச்சுடர்த்தேரேறித்தோன்றினான்
வானேபுக்கானரும்புதல்வன்மக்களகன்றார்வருமளவும்
யானேகாப்பனிவ்வுலகையென்பான்போலவெறிகதிரோன். (௭௮)

வருந்தாவண்ணம்வருந்தினார்மறந்தார்தம்மைவள்ளலுமங்
கிருந்தானென்றேயிருந்தார்களெல்லாமெழுந்தாரருளிருக்கும்

---

* வேதமுனிவன்-வசிட்டமுனிவன்.
† செந்தீயினாவி நீத்திரென்றது சககமனத்தை.

பெருந்தாமரைக்கட்கருமுகிலைப்பெயர்ந்தார்காணார்பேதுற்றார்
பொருந்தாநயனம்பொருந்திநமைப்பொன்றச்சூழ்ந்தவெனப்புரண்டார்.

எட்டுத்திசையுமோடுவாரெழுவார்விழுவாரிடர்க்கடலுள்
விட்டுநீத்தானமையென்பார்வெய்யவையன்வினையென்பார்
ஒட்டிப்படர்ந்ததண்டகமிவ்வுலகத்துளதன்றேவுணர்வைச்
சுட்டிச்சேர்தலாற்றுதுமோதொடர்துந்தேரின்சுவடென்பார். (அ0)

தேரின்சுவடுநோக்குவார்திருமாநகரின்மிசைதிரிய
வொருந்திகிரிக்குறியொற்றியுணர்ந்தாரெல்லாமுயிர்வந்தார்
ஆருமஞ்சலையன்போயயோத்தியடைந்தானெனவசனிக்
காருங்கடலுமொருவழிக்கொண்டார்த்தவெனக்கடிதார்த்தார். (அக)

மானவரவின்வாய்த்தீயவலைவான்றலைவாளெயிற்றின்வழி
ஆனகடுவுக்கருமருந்தாவருந்துமமுதம்பெற்றுயர்ந்து
போனபொழுதிற்புகுந்தவுயிர்பொறுத்தாரொத்தார்பொருவரிய
* வேனின்மதனைமதனழித்தான்மீண்டானென்னவாண்டையியார். ()

ஆறுசெல்லச்செல்லத்தேராழிகண்டாரயலப்பால்
வேறுசென்றநெறிகாணார்விம்மாநின்றவுவகையராய்
மாறியுலகம்வகுத்தநாள்வரம்புகடந்துமண்முழுதும்
எறியொடுங்குமெறிகடல்போலெயின்மாநகரமெய்தினார். (அ௩)

புக்காரரசன் † பொன்னுலகம்போனானென்னும்பொருள்கேட்டார்
உக்கார்நெஞ்சமுயிருகுத்தாருற்றதெம்மாலுரைப்பரிதால்
தக்கான்போனான்வனமென்னுந்தகையுமுணர்ந்தார்மிகையாவி
அக்காலத்தேயகலுமோவவதியென்றன்றுளதானால். (அச)

மன்னற்கல்லார்வனம்போனமைந்தற்கல்லார்வாங்கரிய
இன்னற்சிறையினிடைப்பட்டாரிருந்தார்நின்றவருந்தவனும்
உன்னற்கரியபழிக்கஞ்சியன்றேவொழிந்ததியானென்று
பன்னற்கரியபலநெறியும்பகர்ந்துபதைப்பைநீக்கினான். (அரு)

வெள்ளத்திடைவாழ்வடவனலையஞ்சிவேலைகடவாத
பள்ளக்கடலின்முனிபணியாற்பையுணகரம்வைகிடமேல்
வள்ளற்றாதைபணியென்னும் ‡ வானோர்தவத்தால்வயங்கிருளின்
நள்ளிற்போனவரிசிலைக்கைநம்பிசெய்கைநடத்துவாம். (அசா)

ரு-வது, தைலமாட்டுபடலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சாகக.

---

* வேனின்மதனை மதனழித்தான்-சிவனையொப்பானாகிய சீராமன்.

† பொன்னுலகம்போனான்-துறக்கமடைந்தனன். ‡ வானோர்செய் தவமே அரசன்பணியாற்கானேகச்செய்தலின், வள்ளற்றாதை பணியென்னும் வானோர் தவமென்றார்.

# ௬-வது, கங்கைப்படலம்.



வெய்யோனொளிதன்மேனியின்விரிசோதியின்மறையப்
பொய்யோவெனுமிடையாளொடுமிளையானொடும்போனான்
மய்யோமரகதமோமறிகடலோமழைமுகிலோ
அய்யோவிவன்வடிவென்பதொரழியாவழகுடையான். (௧)

அளியன்னதொரறறுன்னியகுழலாள்கடலமிர்தின்
தெளிவன்னதொர்மொழியாணிறைதவமன்னதொர்செயலாள்
வெளியன்னதொரிடையாளொடும்விடையன்னதொர்நடையான்
களியன்னமுமடவன்னமுநடமாடுவகண்டான். (௨)

* அஞ்சம்பையுமையன்றனதலகம்பையுமளவா
நஞ்சங்களைவெலவாகியநயனங்களையுடையாள்
துஞ்சுங்களிவரிவண்டுகள்குழலின்படிசுழலும்
கஞ்சங்களைமஞ்சன்கழனகுகின்றதுகண்டாள். (௩)

மாகந்தமுமகரந்தமுமளகந்தருமதியின்
பாகந்தருநுதலாளொடுபவளந்தருமிதழான்
மேகந்தனிவருகின்றதுமின்னோடெனமிளிர்பூண்
நாகந்தனிவருகின்றதுபிடியோடெனநடவா. (௪)

தொளைகட்டியகிளைமுட்டிய † சுருதிச்சுவையமுதின்
கிளைகட்டியகருவிக்கிளரிசையிற்பசைநறவின்
விளைகட்டியின்மதுரித்தெழுகிளவிக்கிளர்விழிபோல்
களைகட்டவர்தளைவிட்டெறிகுவளைத்தொகைகண்டான். (௫)

அருப்பேந்தியகலசத்துணையமுதேந்தியமதமா
மருப்பேந்தியவெனலாமுலைமழையேந்தியகுழலாள்
கருப்பேந்திரமுதலாயினகண்டாளிடர்காணாள்
பொருப்பேந்தியதோளானொடுவிளையாடினள்போனாள். (௬)

பன்னந்துகடாளந்தொகுபடர்பந்திகள்படுநீர்
அன்னந்துயில்வதிதண்டலையயனந்துறைபுளினம்
சின்னந்தருமலர்தந்தனசெறிநந்தனவனநன்
பொன்னந்தியநதிகண்டுளமகிழ்ந்தனர்போனார். (௭)

கால்பாய்வனமுதுமேதிகள்கதிர்மேய்வனகடைவாய்
பால்பாய்வனநறைபாய்வனமலர்வாயளிபடரச்

---

* அஞ்சம்பு-மன்மதன் பூவாளியைந்தையும், அவை மா, அசோகு, முல்லை, தாமரை, நெய்தல் என்பன.

† சுருதிச்சுவை-இசைச்சுவை.

சேல்பாய்வனகயல்பாய்வனசெங்கான்மடவன்னம்
போல்பாய்புனன்மடவார்படிநெடுநாடவைபோனார். (௮)

வேறு.

பரிதிபற்றியபல்கலன்முற்றினர்
மருதவைப்பின்வளங்கெழுநாடொரீஇச்
சுருதிகற்றுயர்தோமிலர்சுற்றுறும்
விரிதிரைப்புனற்கங்கையைமேவினார். (௯)

கங்கையென்னுங்கடவுட்டிருநதி
தங்கிவைகுந்தபோனர்யாவரும்
எங்கள் * செல்கதிவந்ததென்றேமுரு
† அங்கணாயகற்காணவந்தண்மினார். (௧௦)

பெண்ணினோக்குஞ்சுவையிற் † பிறர்பிறர்க்
கெண்ணினோக்கியயம்பருகின்பத்தைப்
பண்ணினோக்கும்பராவருமறைப்பசுங்
கண்ணினோக்கினருள்ளங்களிக்கின்றார். (௧௧)

எதிர்கொடேத்தினரின்னிசைபாடினர்
§ வெதிர்கொள்கோலினராடினர்வீரனைக்
கதிர்கொடாமரைக்கண்ணனைக்கண்ணினால்
மதுரவாரியமுதெனமாந்துவார். (௧௨)

மனையினீங்கியமக்களைவைகலும்
நினையுநெஞ்சினர்கண்டிலர்நேடுவார்
அனையர்வந்துறவாண்டெதிர்ந்தார்களில்
இனியமாதவப்பள்ளிகொண்டெய்தினார். (௧௩)

பொழியுங்கண்ணிற்புதுப்புனலாட்டினர்
மொழியுமின்சொலின்மொய்ம்மலர்சூட்டினர்
அழிவிலன்பெனுமாரமிர்தூட்டினர்
வழியில்வந்தவருத்தத்தைவாட்டினர். (௧௪)

காயுங்காணிற்கிழங்குங்கனிகளும்
தூயதேடிக்கொணர்ந்தனர்தோன்றனீ
ஆயகங்கையரும்புனலாடினை
$ தீயையோம்பினைசெய்யமுதென்றனர். (௧௫)

---

* செல்கதியென்றார் சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாகிய வந்தமிலின்பத்தழிவில்வீட்டினை. † (௧) அங்கண்நாயகன்-அவ்விடத்து இராமமூர்த்தி (௨) அழகிய திருக்கண்களையுடையான். ‡ பிறரென்புழி முன்னையது இல்வாழ்வாரை பின்னையது துறவறவொழுக்கமுடையாரை. § வெதிர்கொள்கோலினர்-முக்கோற்பகவர்.

$ தீயையோம்-பல்வேள்விசெய்தல்.

மங்கையர்க்குவிளக்கன்னமானையும்
செங்கைபற்றினன்றேவருந்துன்பறப்
* பங்கையத்தயன்பண்டுதன்பாதத்தின்
அங்கையிற்றருங்கங்கையினாடினான். (கசு)

கன்னிநீக்கருங்கங்கையுங்கைதொழாப்
பன்னிநீக்கரும்பாதகம்பாருளோர்
என்னினீக்குவர்யானுமின்றெற்றந்த
உன்னினீக்கினெனுய்ந்தனென்யானென்றாள். (கஎ)

வெங்க † ணாகக்கரத்தினன்வெண்ணிறக்
கங்கைவார்சடைக்கற்றையன் ‡ கற்புடை
மங்கைகாணநின்றாடுகின்றான்வகிர்த்
திங்கள்சூடியசெல்வனிற்றோன்றினான். (கஅ)

தள்ளுநீர்ப்பெருங்கங்கைத்தரங்கத்தால்
வள்ளிநுண்ணிடைமாமலராளொடும்
§ வெள்ளிவெண்ணிறப்பாற்கடன்மேலநாள்
பள்ளிநீங்கியபான்மையிற்றோன்றினான். (கக)

வஞ்சிநாணவிடைக்குமடநடைக்
கஞ்சியன்னமொதுங்கவடியன்ன
கஞ்சநீரிலொளிப்பக்கயலுகப்
பஞ்சிமெல்லடிப்பாவையுமாடினாள். (உ0)

$ தேவர்தேவன்செறிசடைக்கற்றையுள்
கோவைமாலையெருக்கொடுகொன்றையின்
பூவுநாறலள்பூங்குழற்கூந்தலின்
¶ நாவிநாண்மலர்கங்கையுநாறினாள். (உக)

நுரைக்கொழுந்தெழுந்தோங்கிநுடங்கலால்
நரைத்தகூந்தலினங்கை || மந்தாகினி

* பங்கயத்தயன் பண்டுதன்பாதத்தினங்கையிற்றரும் கங்கை — திருவிக்கிரம வடிவங்கொண்டருளியகாலத்தில் உலகினையளக்க மேலே நீட்டிய திருவடிக்கு பிரமன்ஆட்டிய இறைவன்பாதோதகம். † நாகக்கரத்தினன்-யானைபோலு நீண்டகையினன் அல்லது பாம்பணிந்த கையினன். ‡ கற்புடைமங்கைகாண நின்றாடுகின்றான் - கற்பினையுடைய சனகிகாண நீராடுகின்றான், அல்லது மலைமங்கைகாணச் சிற்சபையிலாடுகின்றான் எனவுஞ் சிலேடையாகப்பொருள்கொள்க. அல்லதுசடாமுடியையுடைய இராமமூர்த்தி கங்கையினீராடுதலால் கங்கையைச்சூடிய சிவபெருமானைப்போலத் தோன்றினானென்றும் பொருள்கொள்ளலாம். § பாற்கடற் பரமனே சீராமனாகலின், வெண்ணிறப்பாற்கடன் மேலநாள் பள்ளிநீங்கிய பான்மையிற் றோன்றினானென்றார். $ தேவர்தேவன் - சிவபெருமான். ¶ நாவிநாண்மலர் கங்கையுநாறினாளெனத் திணைவிரவிச் சிறப்பாலுயர்திணை முடிபேற்றது. || மந்தாகினி-கங்கை.

உரைத்தசீதைத்தனிமையையுன்னுவாள்
திரைக்கைநீட்டிச்செவிலியினூட்டினாள். (௨௨)

மங்கைவார் * குழற்கற்றைமழைக்குலம்
தங்குநீரிடைத்தாழ்ந்துகுழைப்பன
கங்கையாற்றொடுங்காளிந்திதன்னொடும்
பொங்குநீர்ச்சுழிபோவனபோன்றவே. (௨௩)

சுழிபட்டோங்கியதூங்கொலியாற்றுத்தன்
† விழியிற்சேலுகள்வாளிறவெள்ளத்து
முழுகித்தோன்றுகின்றாண்முதற்பாற்கடல்
அழுவத்தன்றெழுவாளெனவாயினாள். (௨௪)

செய்யதாமரைத்தாள்பண்டுதீண்டலால்
வெய்யபாதகந்தீர்த்துவிளங்குவாள்
அய்யன்மேனியெலாமளைந்தாலினி
வய்யமாநரகத்திடைவைகுமே. (௨௫)

துறைநறும்புனலாடிச்சுருதியோர்
உறையுளெய்தியுணர்வுடையோருணர்
இறைவற்கைதொழுதேந்தெரியோம்பிப்பின்
அறிஞர்காதற்கமைவிருந்தாகினான். (௨௬)

வருந்தித்தான்றரவந்தவமுதையும்
‡ அருந்துநீரென்றமரரையூட்டினான்
விருந்துமெல்லடகுண்டுவிளங்கினான்
திருந்தினார்வயிற்செய்தனதேயுமோ. (௨௭)

ஆயகாலையினாயிரமம்பிக்கு
நாயகன்போர்க்குகனெனுநாமத்தான்
தூயகங்கைத்துறைவிடுந்தொன்மையான்
காயும்வில்லினன்கற்றிரடோளினான். (௨௮)

துடியனாயினன்றோற்செருப்பார்த்தபேர்
அடியனற்சிறந்தன்னநிறத்தினான்
நெடியதானைநெருங்கலினீர்முகில்
இடியினோடெழுந்தாலன்ன § வீட்டினான். (௨௯)

---

* குழற்கற்றை நீரிடைக்குழைப்பன கங்கையாற்றொடுங் காளிந்தியொடு நீர்ச்சுழிபோவன போன்றனவென்றுவமைகூறினார்.

† விழியிற்சேலென்றது விரோதவுவமை.

‡ அருந்துநீரென்றது நீரருந்துமினென்பதன்றி அருந்துகின்ற நீர்போலெனினுமாம்.

§ ஈடு-பெருமை.

கொம்புதுத்தரிகொட்டுமுறைமையன்
பம்பைபம்புபடையினன் * பல்லவத்
தம்பனம்பிக்குநாதனழிகவுள்
தும்பியீட்டம்புரைகிளைசுற்றத்தான். (௫௦)

காழமிட்டகுறங்கினன்கங்கையின்
ஆழமிட்டநெடுமையினானரை
தாழவிட்டசெந்தோலன்றயங்குறச்
சூழவிட்டதொடுபுலிவாலினான். (௫௧)

பற்றொடுத்தன்னபல்சூற்கவடியன்
கற்றொடுத்தன்னபோலுங்கழலினான்
அற்றொடுத்தன்னகுஞ்சியனாளியின்
நெற்றொடுத்துநெரிந்தபுருவத்தான். (௫௨)

பெண்ணைவன் † செறும்பிற்பிறங்கிச்செறி
வண்ணவன்மயிர்வார்ந்துயர்முன்கையன்
கண்ணகன்றடமார்பெனுங்கல்லினன்
எண்ணெயுண்டவிருள்புரைமேனியான். (௫௩)

கச்சொடார்த்தகறைக்கதிர்வாளினன்
நச்சராவினடுக்குறுநோக்கினன்
பிச்சராமன்னபேச்சினனிந்திரன்
வச்சிராயுதம்போலுமருங்கினான். (௫௪)

ஊற்றுமெய்ந்நறவூனொடுமீனுகர்
நாற்றமேயநகையின்முகத்தினான்
சீற்றமின்றியுந்தீயெழநோக்குவான்
கூற்றமஞ்சக்குமுறுங்குரலினான். (௫௫)

‡ சிருங்கிபேரமெனத்திரைக்கங்கையின்
மருங்குதோன்றுநகருடைவாழ்க்கையான்
ஒருங்குதேனொடுமீனுபகாரத்தன்
இருந்தவள்ளலைக்காணவந்தெய்தினான். (௫௬)

சுற்றமப்புறநிற்கச்சுடுகணை
விற்றுறந்தரைவீக்கியவாளொழித்
தற்றநீத்தமனத்தினனன்பினன்
நற்றவப்பள்ளிவாயிலைநண்ணினான். (௫௭)

---

* பல்லம்-ஓரெண். வப்பிரத்தியன்பெற்றுப் பல்லவமெனநின்றது.
† செறும்புபனைமரத்தின்மேலுள்ளபொருக்கு அது இக்காலத்தில் செதும்பெனவழங்கும்.
‡ சிருங்கிபேரம்-குகப்பெருமாள் வாழுமூர்.

கூவாமுன்னமிளையோன்குறுகிநீ
ஆவான்யாரெனவன்பினிறைஞ்சினன்
தேவாநின்கழல்சேவிக்கவந்தனென்
நாவாய்வேட்டுவனாயடியேனென்றான். (௩௮)

வேறு.

நிற்றியீண்டென்றுபுக்குநெடியவற்றொழுதுதம்பி
கொற்றவநின்னைக்காணக்குறுகினனிமிர்ந்தகூட்டச்
சுற்றமுந்தானுமுள்ளந்தூயவன்றாயினல்லான்
எற்றுநீர்க்கங்கைநாவாய்க்கிறைகுகனொருவனென்றான். (௩௯)

அண்ணலும்விரும்பியென்பாலழைத்திநீயவனையென்றான்
பண்ணவன்வருகவென்னப்பரிவினன்விரைவிற்புக்கான்
* கண்ணனைக்கண்ணினோக்கிக்கனிந்தனனிருண்டகுஞ்சி
மண்ணுறப்பணிந்துமேனிவளைத்துவாய்புதைத்துநின்றான். (௪0)

இருத்தியீண்டென்னலோடுமிருந்திலனெல்லைநீத்த
அருத்தியன்றேனுமீனுமமுதினுக்கமைவதாகத்
திருத்தினென்கொணர்ந்தேனென்கொறிருவுளமென்னவீரன்
விருத்தமாதவரைநோக்கிமுறுவலன்விளம்பலுற்றான். (௪௧)

அரியதாமுவப்பவுள்ளத்தன்பினாலமைந்தகாதல்
தெரிதரக்கொணர்ந்தவென்றாலமிழ்தினுஞ்சீர்த்தவன்றே
பரிவினிற்றழீஇயவென்னிற்பவித்திரமெம்மனோர்க்கும்
உரியனவினிதினாமுமுண்டனெமன்றேவென்றான். (௪௨)

சிங்கவேறனையவீரன்பின்னருஞ்செப்புவான்யாம்
இங்குறைந்தெறிநீர்க்கங்கையேறுதுநாளையாணர்ப்
பொங்குநின்சுற்றத்தோடும்போயுவந்தினிதுனூரில்
தங்கிநீநாவாயோடுஞ்சாருதிவிடியவென்றான். (௪௩)

கார்குலாநிறத்தான்கூறக்காதலனுணர்த்துவானிப்
பார்குலாஞ்செல்வநின்னையிங்ஙனம்பார்த்தகண்ணை
ஈர்கிலாக்கள்வனேன்யானின்னலினிருக்கைநோக்கித்
தீர்கிலேனானதையசெய்குவெனடிமையென்றான். (௪௪)

கோதைவிற்குரிசிலன்னான்கூறியகொள்கைகேட்டான்
சீதையைநோக்கித்தம்பிதிருமுகநோக்கித்தீராக்
காதலனாகுமென்றுகருணையின்மலர்ந்தகண்ணன்
யாதினுமினியநண்பவிருத்தியீண்டெம்மொடென்றான். (௪௫)

---

* கண்ணன் — சீராமன், கிருஷ்ணன் என்றது கண்ணன் என வந்தது பிராகிருதச் சிதைவு.

திருநகர்தீர்ந்தவண்ண * மானவதெரித்தியென்னப்
பருவரற்றம்பிகூறப்பரிந்தவன்பையுளெய்தி
இருகணீரருவிசோரக்குகனுமாண்டிருந்தானென்னே
பெருநிலக்கிழத்திநோற்றும்பெற்றிலள்போலுமென்னா. (௬௬)

விரியிருட்பகையையோட்டித்திசைகளைவென்றுமேனின்
றொருதனித்திகிரியுந்தியுயர்புகழ்நிறுவிநாளும்
இருநிலத்தேவர்க்குமுள்ளத்திருந்தனனென்னவீந்த
செருவலிவீரனென்னச்செங்கதிர்ச்செல்வன்சென்றான். (௬௭)

மாலைவாய்நியமஞ்செய்துமரபுளியியற்றிவைகல்
வேலைவாயமிர்தன்னாளும்வீரனும்விரித்தநாணல்
மாலைவாய்ப்பாரின்பாயல்வைகினன்வரிவிலேந்திக்
காலைவாயளவுந்தம்பியிமைப்பிலன்காத்துநின்றான். (௬௮)

தும்பியின்குழாத்திற்சுற்றுஞ்சுற்றத்தன்றொடுத்தவில்லன்
வெம்பிவெந்தழியாநின்றநெஞ்சினன்விழித்தகண்ணன்
தம்பிநின்றானைநோக்கித்தலைமகன்றன்மைநோக்கி
அம்பியின்றலைவன்கண்ணீரருவிசோர்குன்றினின்றான். (௬௯)

துறக்கமேமுதலவாயதூயனயாவையேனும்
மறக்குமாநினையலம்மாவரம்பிலதோற்றுமாக்கள்
இறக்குமாறிதுவென்பான்போன்முன்னைநாளிறந்தான்பின்னாள்
பிறக்குமாறிதுவென்பான்போற்பிறந்தனன் † பிறவாவெய்யோன். (௭0)

செஞ்செவேசேற்றிற்றோன்றுந்தாமரைதேரிற்றோன்றும்
வெஞ்சுடர்ச்செல்வன்மேனிநோக்கினவிரிந்தவேறோர்
அஞ்சனநாயிறன்னவையனைநோக்கிச்செய்ய
வஞ்சிவாழ்வதனமென்னுந்தாமரைமலர்ந்ததன்றே. (௭௧)

நாண்முதற்கமைந்தயாவுநயந்தனனியற்றிநாமத்
தோண்முதற்கமைந்தவில்லான்மறையவர்தொடரப்போனான்
ஆண்முதற்கமைந்தகேண்மையன்பனைநோக்கியைய
கேநண்முதற்கமைந்தநாவாய்கொணருதிவிரைவினென்றான். (௭௨)

வேறு.

எவியமொழிகேளாவிழிபுனல்பொழிகண்ணான்
ஆவியுமுலைகின்றானடியிணைபிரிகில்லான்
காவியின்மலர்காயாக்கடன்மழையனையானைத்
தேவியொடடிதாழாச்சிந்தனையுரைசெய்வான். (௭௩)

---

* மானவன் - ஈண்டு இளையபெருமாள்.

† பிறவாவெய்யோன் — (எனைத்தேவர்போலப்) பிறவாத சூரியன்.

பொய்ம்முறையிலரேமெம்புகலிடம்வனமேயால்
கொய்ம்முறையுறுதாராய்குறைவிலெம்வலியேமால்
செய்ம்முறைகுற்றேவல்செய்குதுமடியோமை
இம்முறையுறவென்னவினிதிருநெடிதெம்மூர். (௫௪)

தேனுளதினையுண்டாற் * றேவருநுகர்தற்காம்
ஊனுளதுணைநாயேமுயிருளவிளையாடக்
கானுளபுனலாடக்கங்கையுமுளதன்றே
நானுளதனையுந்நீயினிதிருநடவெம்பால். (௫௫)

தோலுளதுகில்போலுஞ்சுவையுளதொடர்மஞ்சம்
போலுளபறண்வைகும்புரையுளகடிதோடும்
காலுளசிலைபூணுங்கையுளகலிவானின்
மேலுளபொருளேனும்விரைவொடுகொணர்வேமால். (௫௬)

ஐயிருபத்தோடைந்தாயிரருளராணை
செய்குனர்சிலைவேடர்தேவரின்வலியாரால்
உய்குதுமடியேமெங்குடிவிடையொருநாணீ
வைகுதியெனின்மேலோர்வாழ்விலைபிறிதென்றான். (௫௭)

அண்ணலுமதுகேளாவகநிறையருண்மிக்கான்
வெண்ணிறநகைசெய்தான்வீரநின்னுழையாமப்
புண்ணியநதியாடிப்புனிதரைவழிபாடுற்
றெண்ணியசிலநாளிற்குறுகுதுமினிதென்றான். (௫௮)

சிந்தனையுணர்கிற்பான்சென்றனன்விரைவோடும்
தந்தனனெடுநாவாய் † தாமரைநயனத்தான்
அந்தணர்தமையெல்லாமருளுதிர்விடையென்று
இந்துவினுதலாளோடிளவலொடினிதேறு. (௫௯)

விடுநதிகடிதென்றான்மெய்யுயிரனையானும்
முடுகினனெடுநாவாய்முரிதிரைநெடுநீர்வாய்க்
கடிதினின்மட ‡ வன்னக்கதியதுசெலநின்றார்
இடருறமறையோருமெரியுறுமெழுகானார். (௬0)

§ பாலுடைமொழியாளும்பகலவனனையானும்
சேலுடைநெடுநன்னீர்சிந்தினர்விளையாடத்

---

* வேடராதலின் உளனைத்தேவருநுகர்தற்காமூனுள வென்றார்.

† புண்டரீகாட்சனென்னும் பெயர்பற்றித் தாமரை நயனத்தானென்றார். ‡ அன்னக்கதி என்றது அன்னம்விரைந்து நடக்கும் கதியை.

§ பாலுடை மொழியாளென்பதற்கு பால்போலுஞ் சுவையுடைய மொழியாளென்பதன்றிப் பாலுந் தோல்வியெய்து மொழியா ளெனினுமாம்.

தோலுடைநிமிர்கோலிற்றுழவிடவெழுநாவாய்
காலுடைநெடுநெஞ்சிற்சென்றதுகடிதம்மா. (௯௧)

சாந்தணிபுளினத்தின்றடமுலையுயர்கங்கை
காந்தினமணிமின்னக்கடிகமழ்கமலத்தில்
சேந்தொளிவிரியுந்தெண்டிரையெனுநிமிர்கையால்
ஏந்தினளொருதானேயேற்றினளினிதப்பால். (௯௨)

அத்திசையுற்றையனன்பனைமுகநோக்கிச்
சித்திரகூடத்திற்சென்னெறிபகரென்னப்
பத்தியினுயிரீயும்பரிவினனடிதாழா
* உத்தமவடியாயேனோதுவதுளதென்றான். (௯௩)

நெறியிடுநெறிவல்லேனேடினென்வழுவாமல்
நறியனகனிகாயூறவிவைதரவல்லேன்
உறைவிடமமைவிப்பேனொருநொடிவரையும்மைப்
பிறிகிலெனுடனேகப்பெறுகுவெனெனினாயேன். (௯௪)

தீயனவகையாவுந்திசைதிசைசெலநூறித்
தூயனவுறைகானந்தருவினென்வரவல்லேன்
மேயினபொருணாடித்தருகுவென்வினைமுற்றும்
ஏயினசெயவல்லேனிருளினுநெறிசெல்வேன். (௯௫)

கல்லுவென்மலைமேலுங்கவலையின் † முதல்யாவும்
செல்லுவெனெறிதூரஞ்செறிபுனறரவல்லேன்
வில்லினமுளனென்றும்வெருவலெனிருபோதும்
மல்லினுமுயர்தோளாய்மலரடிபிரியாதேன். (௯௬)

‡ திருவுளமெனின்மற்றென்சேனையுமுடனேகொண்
டொருவலெனிருபோதுமுறைகுவெனுளரானார்
மருவலரெனின்முன்னேமாள்குவென்வசையில்லேன்
பொருவருமணிமார்பாபோதுவெனுடனென்றான். (௯௭)

அன்னவனுரைகேளாவமலனுமுரைநேர்வான்
என்னுயிரனையாய்நீயிளவலுனிளையானிந்
நன்னுதலவணின்கேணளிர்கடனிலமெல்லாம்
உன்னுடையதுநானுன்றொழிலுரிமையினுள்ளேன். (௯௮)

துன்புளதெனினன்றோசுகமுளததுவன்றிப்
பின்புளதிடைமன்னும்பிரிவுளதெனவுன்னேல்

* உத்தமவென்பது யாதினுஞ் சிறந்தானே யென்பதன்றி இருளிற் கப்பாற்பட்டவனே யெனினுமாம்.

† முதல் – கிழங்கு. வேர்.

‡ திருவுளம் – கருத்து.

முன்புளெமொருநால்வேமுடிவுளதெனவுன்னு
அன்புளவினிநாமோரைவர்களுளரானேம். (௬௯)

படருறவுளனும்பிகானுறைபகலெல்லாம்
இடருறுபகையாபோயாதெனவுரியாய்நீ
சுடருறுவடிவேலாய்சொன்முறைகடவேல்யான்
வடதிசைவருமந்நாணின்னுழைவருகின்றேன். (௭0)

அங்குளகிளைகாவற்கமைதியினுளனும்பி
இங்குளகிளைகாவற்கியாருளருரைசெய்யாய்
உன்கிளையெனதன்றோவுறுதுயருறலாமோ
என்கிளையிதுகாவென்னேவலினிதென்றான். (௭௧)

* பணிமொழிகடவாதான்பருவரலிகவாதான்
பிணியுடையவனென்னும்பிரிவினன்விடைகொண்டான்
அணியிழைமயிலோடுமையனுமிளையோனும்
திணிமரநிறைகானிற்சேணுறநெறிசென்றார். (௭௨)

௬-வது, கங்கைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௬௯௧.

## ௭-வது, வனம்புகுபடலம்.



பூரியர்புணர்மாதர்பொதுமனமெனமன்னும்
ஈரமுமுளதில்லென்றறிவருமிளவேனில்
ஆரியன்வரலோடுமெழுதளவியசீதக்
காருறுகுறிமானக்காட்டியதவனெங்கும். (௧)

வெயிலிளநிலவேபோல்விரிகதிரிடையீசப்
பயின்மரநிழலினைப்பனிபுரைதுளிமேகப்
புயறரவிளமென்கால்பூவளவியதெய்த
மயிலினநடமாடும்வழியினியனபோனார். (௨)

மன்றலின்மலிகோதைமயிலியன்மடமானே
இன்றுயில்வதிகோபத்தினம்விரிவனவெங்கும்
கொன்றைகள்சொரிபோதின்குப்பைகொள்குலமாலை
பொன்றிணிமணிமானப்பொலிவனபலகாணாய். (௩)

யாணிளமிழற்றிருகப்படுமழைபணையாக
நாணினதொகுபீலிகோலினநடமாடல்

* பணிமொழி-பணிவைப்புலப்படுத்திய மொழி.

பூணியநினசாயற்பொலிவதுபலகண்ணில்
காணியவெனலாகுங்களிமயிலவைகாணாய். (ச)

சேந்தொளிவிரிசெவ்வாய்ப்பைங்கிளிசெங்கோலக்
காந்தளின்மலரேறிக்கோதுவகவினாரும்
மாந்தளிர்நறுமேனிமங்கைநின்மடமுன்கை
ஏந்தினவெனலாகுமியல்பினவிவைகாணாய். (ரு)

நெய்ஞ்ஞிறைநெடுவேலினிறமுறுதிறமுற்றிக்
கைஞ்ஞிறைநிமிர்கண்ணாய்கருதினவினமென்றே
மெய்ஞ்ஞிறைவிரிசாயல்கண்டுநின்விழிகண்டும்
மைஞ்ஞிறையுமடமானும்வருவனபலகாணாய். (சு)

பூவலர்குராவோடும்புடைதவழ்பிடவீனும்
மாவலர்சொரிசூழற்றுயிலெழுமயிலொன்றின்
தூவியின்மணநாறத்துணைபிரிபெடைதானச்
சேவலொடுறவூடித்திரிவதனியல்காணாய். (எ)

* அருந்ததியனையாளேயமிர்தினுமினியாளே
செருந்தியின்மலர்தாங்குஞ்செறியிதழ்வனசோகம்
பொருந்தினகளிவண்டிற்பொதிவனபொன்னூதும்
இருந்தையினெழுதீயொத்தெழுவனவியல்காணாய். (அ)

ஏந்திளமுலையாளேயெழுதருமெழிலாளே
காந்தளின்முகைகண்ணிற்கண்டொருகளிமஞ்ஞை
† பாந்தளிதெனவுன்னிக்கவ்வியபடிபாராய்
தீந்தளவுகள்செய்யுஞ்சிறுகுறுநகைகாணாய். (கூ)

குன்றுறைவயமாவின்குருளையுமிருள்சிந்திப்
பின்றினதெனலாகும்பிடிதருசிறுமாவும்
அன்றலபிறிவொல்லா ‡ வண்டர்தமனையாவின்
கன்றொடுவிளையாடுங்களியனபலகாணாய். (க0)

அகில்புனைகுழன்மாதேயணியிழையெனலாகும்
நகுமலர்நிறைமாலைக்கொம்பர்கணதிதோறும்
§ துகில்புரைநறுநீரிற்றோய்வனதுறையாடும்
முகிழிளமுலையாரின்மூழ்குவபலகாணாய். (கக)

* கற்பிற் சிறப்புடையவளாகலின் அருந்ததியொடுவமை கூறினார்.

† கோம்பிக்கொதுங்கி மேயாமஞ்ஞை குஞ்சரங்கோளிழைக்கும்பாம்பெனப் பிறர்கூறலின் களிமஞ்ஞை பாந்தளிதெனவுன்னியென்றார்.

‡ அண்டர் – முல்லைநிலமாக்கள்.

§ நீரின்றூய்மைநோக்கித் துகில்புரைநறுநீரென்றார்.

முற்றுறுமுகைகிண்டிமுயல்கிலசிலதும்பி
விற்றிருநுதன்மாதேயம்மலர்விரிகோங்கின்
சுற்றுறுமலரேறித்துயில்வன * சுடர்மின்னும்
பொற்றகடுறுநீலம்புரைவனபலகாணாய். (௧௨)

கூடியநறைவாயிற்கொண்டனவிழிகொள்ளா
மூடியகளிமன்னமுடுகினநெறிகாணா
ஆடியசிறை † மாவண்டந்தரினிசைமுன்னாப்
பாடியபெடைகண்ணாவருவனபலகாணாய். (௧௩)

கன்னியரணிகோலங்கற்றறிகுநரென்னப்
பொன்னணிநிறவேங்கைக்கொம்பர்கள்புதுமென்பூ
அன்னமென்னடையாய்நின்னளகநன்னுதலப்பும்
‡ சின்னமென்மலர்மானச்சிந்துவபலகாணாய். (௧௪)

மணங்கிளர்மலர்வாசமாருதம்வரவீசக்
கணங்கிளர்தருசுண்ணங்கல்லுடையனகானத்
தணங்கினுமினியாயுன்னணிவடமுலைமுன்றிற்
சுணங்கினமலைமானத்துறுவனபலகாணாய். (௧௫)

§ அடியிணைபொறைகல்லாவென்றுகொலதரெங்கும்
இடையிடைமலர்சிந்துமினமரமிவைகாணாய்
கொடியினொடிளவாசக்கொம்பர்கள்குயிலாயுன்
துடிபுரையிடைநாணித்துவள்வனவவைகாணாய். (௧௬)

வாள்புரைவிழியாயுன்மலர்புரையடிமானத்
தாள்புரைதளிர்வைகுந்தகைமிமிறிவைகாணாய்
கோள்புரையிருள்வாசக்குழல்புரைமழைகாணாய்
தோள்புரையிளவேயின்றொகுதிகளவைகாணாய். (௧௭)

பூநனைசினைதுன்றிப்புள்ளிடையிடைபம்பி
$ நாணிறநளிர்வல்லிக்கொடியளவிலமல்கி
மானினமயின்மாலைக்குயிலினம்வருகானந்
தீநிகர்தொழிலாடைத்திரைபொருவனபாராய். (௧௮)

என்றனன்மடவாளோடினிதினில்விளையாடிப்
பொன்றிணிதிரடோளான்போயினனெறி ¶ போதும்

---

* வண்டுகோங்கிற்றுயில்வதனை சுடர்மின்னும் பொற்றகடுறுநீலம் புரைவன என்றார். † மாவண்டு என்புழிமாகருமை. ‡ சின்னமென்மலர்-சின்னப்பூ. § அடியிணைபொறுக்கமாட்டா கொல் என்பார் அடியிணை பொறைகல்லாவென்றார். $ நாணிறம்-நாணுவிதம். ¶ போது என்பது ஆகுபெயராய் சூரியனுக்காகியது, போதுகாலம். பொழுது என்பதன் முதனிலை நீண்டு இடைநிலைகெட்டு போதென்றாகியது என்பாருமுளர், மருஉ.

சென்றதுகுடபாலத் * திருமலையிதுவன்றே
என்றனன்வினைவென்றோர்மேவிடமெனவோடும். (௧௯)

அருத்தியினகம்விம்முமன்பினினெடுநாளில்
திருத்தியவினைமுற்றிற்றென்றனன்றெறிகின்றான்
பரத்துவனெனுநாமப்பரமுனி † பவநோயின்
மருத்துவனனையானைவரவெதிர்கொளவந்தான். (௨0)

குடையினனிமிர்கோலன்குண்டிகையினன்மூரிச்
சடையினனுரிமானின்சருமனன்மரநாரின்
உடையினன்மயிர்நாலுமுருவின ‡ னெறிபேணும்
நடையினன்மறைநாலுநடநவிறருநாவான். (௨௧)

செந்தழல்புரிசெல்வன் § றிசைமுகமுனிசெவ்வே
தந்தனவுயிரெல்லாந்தன்னுயிரெனநல்கும்
அந்தணனுலகேழுமமையெனி $ னமரேசன்
உந்தியினுதவாமேயுதவிடுதொழில்வல்லான். (௨௨)

அம்முனிவரலோடுமநகனுமலர்தூவி
மும்முறைதொழுதானம்முதல்வனுமெதிர்புல்லி
இம்முறையுருவோ ¶ நானெய்துவதெனவுள்ளம்
விம்மினனிழிகண்ணீர்விழிவழியுகநின்றான். (௨௩)

அகலிடநெடிதாளுமமைதியையதுநீரப்
புகலிடமெமதாகும்புரையிடையிதுநாளில்
தகவிலதவவேடந்தழுவினைவருவானேன்
|| இகலடுசிலைவீரவிளையவனொடுமென்றான். (௨௪)

() உற்றுளபொருளெல்லாமுணர்வுறவுரைசெய்தான்
நற்றவமுனியந்தோவிதிதருநவையென்பான்
இற்றதுசெயலுண்டோவினியெனவிடர்கொண்டான்
பெற்றிலடவமந்தோபெருநிலமகளென்றான். (௨௫)

துப்புறழ்துவர்வாயின்றூய்மொழிமயிலோடும்
அப்புறுகடன்ஞாலமாளுதிகடிதென்று
ஒப்பருமரசுன்னையுயர்வனமுறவேகென்
றெப்பரிசுயிருய்ந்தானென்றுனையவனென்றான். (௨௬)

* திருமலை-சித்திரகூடம். † பிறவிநோய்க்கு மருத்துவன்றானுக
வின் பவநோயின்மருத்துவனென்றார். ‡ நெறி - (துறவற) வொழுக்கத்
தை. § திசைமுகமுனி-பிரமன். $ அமரேசன்-அயர்வருமமரர்கட்கி
றை. ¶ நானென்னு முளப்பாட்டுத்தன்மை யுயர்த்தற்கண் முன்னிலை
யிடத்துவந்தது. || இகலடுசிலை - பகைவரைவெல்லுஞ்சிலை. () உற்றுள
பொருள்-நடந்தசெய்தி.

அல்லலுமுளவின்பமணுகலுமுளவன்றே
நல்லவுமுளசெய்யுநவைகளுமுளவந்தோ
இல்லையொர்பயனுனின்றிடருறுமிதினென்னாப்
புல்லினனுடனேகொண்டினிதுறைபுரைபுக்கான். (உ௭)

புக்குறைவிடநல்கிப் * பூசனைமுறைபேணித்
தக்கனகனிகாயுந்தந்துவைதருமன்பால்
தொக்கநன்முறைகூறித்தூயவனுயிர்போலும்
மக்களினருளுற்றான்மைந்தருமகிழ்வுற்றார். (உ௮)

வைகினர் † கதிர்நாறுமளவையின்மறையோனும்
‡ உய்குவமிவனோடியாமுடனுறைதலினென்பான்
செய்தனனினிதெல்லாஞ்செல்வனைமுகமுன்னாக்
கொய்குலமலர்மார்பகூறுவதுளதென்றான். (உ௯)

வேறு.

நிறையுநீர்மலர்நெடுங்கனிகிழங்குகாய்நேர்ந்த
குறையுந்தீயவைதூயவைகுறைவிலவெம்மோ
டுறையுமிவ்வழியொருங்கினிலுயர்தவமுயல்வார்க்
கிறையுமீதலானினியதோரிடமரிதின்னும். (௩0)

§ கங்கையாளொடுகரியவளுமகள்கலந்த
சங்கமாதலிற்பிரியலென்றாமரைச்செங்கண்
அங்கநாயகவயனுக்குமரும்பெறற்றீர்த்தம்
எங்கள்போலியர்தரத்ததன்றிருத்திரீண்டென்றான். (௩௧)

பூண்டமாதவனவ்வழிவிரும்பினன்புகல
நீண்டதன்றிதுநிறைபுனனாட்டுக்குநடுவாம்
மாண்டசிந்தையவிவ்வழிவைகுவெனென்றால்
ஈண்டயாவருநெருங்குவரென்றனனிராமன். (௩௨)

ஆவதுள்ளதேயையகேளாயிரண்டமைந்த
காவதப் $ பொழிற்கப்புறங்கழிந்தபின்காண்டி
மேவுகாதலின்வைகுதிவிண்ணினுமினிதால்
தேவர்கைதொழுஞ்சித்திரகூடமென்றுளதால். (௩௩)

என்றுகாதலினையனடிதொழுதேத்திக்
கொன்றைவேய்ங்குழற்கோவலர்முல்லையங்குடுமி

---

* பூசனைமுறைபேணல்-அதிதிகளையுபசரிக்கும் முறையிலுபசரித்தல்.
† கதிர்நாறுமளவை – ஞாயிற்றினுதயபரியந்தம்.
‡ உய்தல் – நிரதிசய இன்பவீடடைதல்.
§ கங்கையாளொடு கரியவளுமகள் கலந்தசங்கம்-கங்காநதியுடன் யமுனையும் சரசுவதியும் சேர்ந்த சங்கமுகம்.
$ பொழில்-பூமி, வனம், சோலையென்று உரைக்கினும் பொருந்தும்.

சென்றுசெங்கதிர்ச்செல்வனுநடுவுறச்சிறுமான்
கன்றுநீர்நுகர் * காளிந்தியெனுநதிகண்டார். (௫௪)

ஆறுகண்டனரகமகிழ்ந்திறைஞ்சினரறிந்து
நீறுதோய்மணிமேனியர்நெடும்புனல்படிந்தார்
ஊறுமென்கனிகிழங்கிறேனுண்டுநீருண்டார்
எறியேகுவதெங்கணமென்றலுமிளையோன். (௫௫)

வாங்கு † வேய்ங்கழைதுணித்தனன் ‡ மாணையின்கொடியால்
ஓங்குதெப்பமொன்றமைத்ததினும்பரினுலம்போல்
வீங்குதோளண்ணறேவியோடினிதுவீற்றிருப்ப
நீங்கினானந்தநெடுநதியிருகையானீந்தி. (௫௬)

ஆலைபாய்வயலயோத்தியராண்டகைக்கிளையான்
மாலைமால்வரைத்தோளனுமந்தரந்திரியக்
காலைவேலையைக்கடந்ததுகழிந்தநீர்கடிதின்
மேலைவேலையிற்பாய்ந்ததுமீண்டநீர்வெள்ளம். (௫௭)

அனையரப்புனலேறினரக்கரையணைந்தார்
புனையும்வற்கலைபொற்பினர்நெடுநெறிபோனார்
சினையுமூலமும்வேரும்வெந்திருநிலந்தீய்ந்து
நினையுநெஞ்சமுஞ் § சுடுவதோர்நெடுஞ்சுரநேர்ந்தார். (௫௮)

நீங்கலாற்றலள்சனகியென்றன்னவர்நினையா
ஓங்குவெய்யவனுடுபதியெனக்கதிருகுத்தான்
தாங்கு $ வேங்கடத்துலவைகடழைகொண்டுதழைத்த
பாங்குவெங்கனல்பங்கயவனங்களாய்ப்பரந்த. (௫௯)

வறுத்துவித்தியவனையனவல்லயிற்பரல்கள்
பறித்துவித்தியமலரெனக்குளிர்ந்தனபசைந்த
இறுத்தெரிந்தனவல்லிகளிளந்தளிரீன்ற
¶ கறுத்தவாளரவெயிற்றினுளமுதுகக்களித்த. (௬0)

குழுமிமேகங்கள்குமுறினகுளிர்துளிகொணர்ந்த
முழுவில்வேடருமுனிவரின்முனிகிலருயிரைத்
தழுவினின்றனபசியிலபகையிலதணிந்த
உழுவையின்முலைமானிளங்கன்றுகளுண்ட. (௬௧)

---

* காளிந்தியெனினும் கரியவளெனினும் யமுனை எனினுமமையும்.

† வேய்ங்கழை — ஒருசாதிமூங்கில்விசேடம்.

‡ மாணை — ஒருசாதிக்கொடிவிசேடம்.

§ சுடுவதன் கடுமையுணர்த்த நினையுநெஞ்சமுஞ் சுடுவதோர்நெடுஞ்சுரமென்றார்.

$ வேங்கடம் — வேகுங்காடு.

¶ கிருட்டினசருப்பமென்னும் வடமொழிப் பெயர்பற்றிக் கறுத்தவாளரவென்றார்.

கல்லளைக்கிடந்தகடுவெந்தயர்கின்றகதழ்பாம்
பல்லலூற்றிலவலைபுனற்கிடந்தனவனைய
வல்லியுற்றவேய்புற்றொடுமெரிவனமணிவாழ்
புல்லெயிற்றிளங்கன்னியர்தோளெனப்பொலிந்த. (௪௨)

படர்ந்தெழுந்தபுல்பசுநிறக்கம்பளம்பரப்பிக்
கிடந்தபோன்றன * கேகையந்தோகைகள்கிளர
மடந்தைமாரெனநாடகம்வயின்றொறுநவின்ற
தொடர்ந்தபாணரிற்பாங்கிசைமுரன்றன தும்பி. (௪௩)

காலமின்றியுங்கனிந்தனகனிநெடுங்கந்தம்
மூலமின்றியுமுகிழ்த்தனநிலனுறமுழுதும்
கோலமங்கையரொத்தனகொம்பர்க † ளின்பச
சீலமன்றியுஞ்செய்தவம்வேறுமொன்றுளதோ. (௪௪)

எயினர்தங்கிடமிருடிகளிருப்பிடமேய்ந்த
வயின்வயின்றொறுமணிநிறக்கோபங்கண்மலர்ந்து
பயின்மரந்தொறும்பரிந்தனபேடையைப்பயிலும்
குயிலிரங்கினகுருந்தநின்றரும்பினமுருந்தம். (௪௫)

பந்தருட்புரைபாசறைப்பொருள்வயிற்பருவம்
தந்தகேள்வரையுயிருறத்தழுவினர்பிரிந்த
‡ கந்தவோதியர்சிந்தையிற்கொதிப்பதக்கழலோர்
வந்தபோதவர்மனமெனக்குளிர்ந்ததவ்வனமே. (௪௬)

வெளிறுநீங்கியபாலையைமெல்லெனப்போனார்
குளிறுவான்மதிக்குழவிதன்சூல்வயிற்றெளிப்பப்
§ பிளிறுமேகத்தைப்பிடியெனப்பெரும்பனைத்தடக்கைக்
களிறுநீட்டுமெச்சித்திரகூடத்தைக்கண்டார். (௪௭)

௭-வது, வனம்புகுபடலம்-முற்றிற்று.

ஆ௳ திருவிருத்தம்-௭௩௮.

---

* கேகயம் – மயில். † இன்பம்பயக்குமொழுக்க நெறியினுஞ்செய் தவமின்றென்பார் இன்பச்சீலமன்றியுஞ்செய்தவம்வேறுமொன்றுளதோ என்றார்.

‡ இயற்கைமணங்கமழுங் கூந்தலாகலிற் கந்தவோதியரென்றார்.

§ யானைமேகத்தைப் பிடியெனக்கருதினமைகூறலான் மயக்கவணி.

# அ௯வது, சித்திரகூடப்படலம்

* நினையுந்தேவர்க்குநமக்குமொத்தொருநெறிநின்ற
அனகனங்கணாயிரம்பெயருடையமலன்
சனகன்மாமடமயிற்கந்தச்சந்தனஞ்செறிந்த
கனகமால்வரையியல்பெலாந்தெரிவுறக்காட்டும். (௧)

வாளும்வேலும்விட்டளாயினவனையகண்மயிலே
தாளினேலமுமாலமுந்தொடர்தருசாரல்
நீளமாமலைதுயில்வனநீருண்டகமஞ்சூற்
காளமேகமுநாகமுந்தெரிகிலகாணாய். (௨)

† குருதிவாளெனச்செவ்வரிபரந்தகட்குயிலே
மருவிமால்வரையும்பரிற்குதிக்கின்றவருடை
சுருதிபோற்றெளிமரகதக்கொழுஞ்சுடர்சுற்றப்
பருதிவானவன்பசும்பரிபுரைவனபாராய். (௩)

வடங்கொள்பூண்முலைமடமயிலேமதக்கதமா
அடங்குபேழ்வயிற்றரயுரியமைதொறுந்தொடக்கித்
‡ தடங்கடோறுநின்றுடுவதண்டலையயோத்தி
நுடங்குமாளிகைத்துகிற்கொடிநிகர்ப்பனநோக்காய். (௪)

உவரிவாயன்றிப் § பாற்கடலுதவியவமுதே
துவரினீண்மணித்தடந்தொறுமிடந்தொறுந்துவன்றிக்
கவரிபாணிறவால்புடைபெயர்வனகடிதில்
பவளமால்வரையருவியைப்பொருவியபாராய். (௫)

சலந்தலைக்கொண்டசீயத்தாற்றணிமதக்கதமா
உலந்துவீழ்தலிற்சிந்தினவுதிரத்தின்மடவார்
புலந்தகாலையற்றுக்கனகுங்குமப்பொதியில்
கலந்தமுத்தென $ வேழமுத்திமைப்பனகாணாய். (௬)

நீண்டமால்வரைமதியுறநெடுமுடிநிவந்த
ஆண்டுமாமணிச்சுடர்தன்கற்றையிற்சொருக
மாண்டவாணிறவருவியம் ¶ மழவிடைப்பாகன்
காண்டகுஞ்சடைக்கங்கையைநிகர்ப்பனகாணாய். (௭)

* தேவரையுமன்றி நம்மையுமொப்பக் கருதிவீற்றிருத்தலின் நினையுந் தேவர்க்கு நமக்கு மொத்தொரு நெறிநின்ற என்றார்.

† குருதிவாளுண்டல் செவ்வரிபரந்த கண்ணொடொக்குமென்றார்.

‡ தடங்கள்-ஈண்டுகோடுகள்.

§ பாற்கடலுதவியவமுது-திருமாமகள்.

$ முத்துகடோன்றுமிட மிருபதாகலின் வேழமுத்தென்றார்.

¶ மழவிடைப்பாகன்-சிவன்.

தொட்டமாசுணஞ்சுடரொளிமணியொடுந்தூவி
விட்டசென்றனவிடாமதமழையனவேழம்
வட்டவேங்கையின்மலரொடுந்ததைந்தனவயங்கும்
பட்டநெற்றியிற்சுற்றியபோல்வனபாராய். (அ)

இழைந்தநூலிணைமணிக்குடஞ்சுமக்கின்றதென்ன
குழைந்தநுண்ணிடைக்குவியிளவனமுலைக்கொம்பே
தழைந்தசந்தனச்சோலைதன்செலவினைத்தடுப்ப
நுழைந்துபோகின்றதொக்கின்றமதியினைநோக்காய். (கூ)

உருகுகாதலிற்றழைகொண்டுமழலைவண்டோச்சி
முருகுநாறுசெந்தேனினைமுழைநின்றும்வாங்கிப்
பெருகுசூலிளம்பிடிக்கொருபிறைமருப்பியானை
பருகவாயினிற்கையினின்றளிப்பதுபாராய். (க0)

* அளிக்குநாயகன்மாயைபுக்கடங்கினனெனினும்
களிப்பிலிந்தியத்தியோகியைக்கரக்கிலனதுபோல்
ஒளித்துநின்றுளராயினுமுருத்தெரிகின்ற
பளிக்கறைச்சிலபரிமுகமாக்களைப்பாராய். (கக)

ஆடுகின்றமாமயிலினுமழகியகுயிலே
கூடுகின்றிலர்கொடிச்சியர்தம்மனங்கொதிப்ப
ஊடுகின்றனர்கொழுநரையுருகினர்நோக்கப்
பாடுகின்றன † கின்னரமிதுனங்கள்பாராய். (கஉ)

வில்லிவாங்கியசிலையெனப்பொலிநுதல்விளக்கே
வல்லிதாங்கழைதாக்கலில்வழிந்திழிபிரசம்
கொல்லிவாங்கியகுன்றவர்கொடிநெடுங் ‡ கவலை
கல்லிவாங்கியகுழிகளைநிறைப்பனகாணாய். (கங)

ஒருவில்பெண்மையென்றுரைக்கின்றவுடலினுக்குயிரே
மருவுகாதலினினிதுடனாடியமந்தி
அருவிநீர்கொடுவீசத்தானப்புறத்தேறிக்
கருவிமாமழையுதிர்ப்பதோர்கடுவனைக்காணாய். (கச)

வீறுபஞ்சின்றியமுதநெய்மாட்டிய § விளக்கே
சீறுவெங்கதிர்செறிந்தனபோர்கலதிரியா
மாறின்மண்டிலநிரப்பியமாணிக்கமணிக்கற்
பாறைமற்றொருபரிதியிற்பொலிவனபாராய். (கரு)

---

* அளிக்குநாயகன் — திருமால்.
† கின்னரமிதுனங்களென்ற தொருவகைப்பறவைவிசேடம்.
‡ கவலை — ஒருகிழங்கின் விசேடம். § புக்ககத்தையும் பிறந்தகத்தையும் விளக்குபவளாகலின் விளக்கே யென்றார்.

* சீலமின்னதென் றருந்ததிக்கருளியதிருவே
நீலவண்டினம்படிந்தெழவளைந்துடனிமிர்வ
சோலைவேங்கையின்கொம்பர்கள்பொன்மலர்தூவிக்
காலினிற்றொழுதெழுவனநிகர்ப்பனகாணாய். (௧௬)

விற்கொள்வாணுதல்விளங்கிழையிளந்தளிர்க்கொழுந்தே
எற்கொண்மால்வரையும்பரினிரும்புனங்காக்கும்
கொற்கொள்வேற்கணார்குரீஇயினத்தெறிகுருவிந்தக்
கற்கள்வானிடைமீனெனவீழ்வனகாணாய். (௧௭)

வரிகொளொண்சிலைவயவர்தங் † கணிச்சியின்மறிந்த
பரியகாரகில்சுடரிமிர்பசும்புகைப்படலம்
அரியவேதியராகுதிப்புகையொடுமளாவிக்
கரியமால்வரைக்கொழுந்தெனப்படர்வனகாணாய். (௧௮)

நானநாண்மலர்நறையகிலாவிதேனூறும்
‡ சோனைவார்குழற்சுமைபெறு நிடுகிடைத்தோகாய்
வானயாற்றுமீன்மலர்த்தனவெனப்புனல்வறந்த
கானயாறுகள்கணமணியிமைப்பனகாணாய். (௧௯)

§ மஞ்சளாவியமாணிக்கப்பாறையின்மறைவ
செஞ்செவேநெடுமரகதப்பாறையிற்றெரிவ
விஞ்சைநாடியர்கொழுநரோடேடினர்விமலப்
பஞ்சளாவியசீறடிச்சுவடுகள்பாராய். (௨0)

சுழித்தசெம்பொனின்றொளைபுரையுந்தியின்றுணையே
கொழித்தமாமணியருவியோடிழிவனகோலம்
அழித்துமேவியவரம்பையரறல்புரைகூந்தல்
கழித்துநீக்கியகற்பகநறுமலர்காணாய். (௨௧)

அறைகழற்சிலைக் $ குன்றவர்கன்புனங்காவற்
பறையெடுத்தொருகடுவனின்றடிப்பதுபாராய்
பிறையையெட்டினன்பிடித்திதற்கிதுபிழையென்றுக்
கறைதுடைக்குறுபேதையோர்கொடிச்சியைக்காணாய். (௨௨)

அடுத்தபல்பகலன்பரிற்பிரிந்தவரென்ப
தெடுத்துநாந்தமக்கியம்புவவெனக்கரிந்திருண்ட

* ஒழுக்கத்தையார்க்கு முரைப்பவளாகலின் சீலமின்னதென் றருந்ததிக்கருளியதிருவே என்றார். † கணிச்சி-மழுப்படை.

‡ சோனை-விடாமழை. § விஞ்சைநாடியர் பஞ்சளாவிய சீறடி மஞ்சளாவிய மாணிக்கப்பாறையாகலின் மறைவவென்றும் மரகதப்பாறையாகலிற் றெரிவவென்றுங் கூறினர்.

$ குன்றவர்-குறிஞ்சிநிலமாக்கள்.

தொடுத்தமாதவிச்சூழலிற்சூரரமகளிர்
படுத்துவைகிய * பல்லவசயனங்கள்பாராய். (௨௩)

நினைந்தபோதினுமயிர்தொக்குநேரிழைநிறைதேன்
வனைந்தவேங்கையிற்கோங்கினில்வயின்றொறுந்தொடுத்துக்
குனிந்தவூசலிற்கொடிச்சியரெடுத்தவின்குறிஞ்சிக்
கனிந்தபாடல்கேட் † டசுணமாவருவனகாணாய். (௨௪)

இலவுமிந்திரகோபமும்புரையிதழினியோய்
அலவுநுண்டுளியருவிநீரரம்பையராடக்
கலவைசாந்துசெங்குங்குமங்கற்பகங்கொடுத்த
பலவுந்தோய்தலிற்பரிமளங்கமழ்வனபாராய். (௨௫)

செம்பொனாற்செய்துகுலிகமிட்டெழுதியசெப்போர்
கொம்பர்தாங்கியதெனப்பொலிவனமுலைக்கொடியே
அம்பொன்மால்வரையலர்கதிருச்சிசென்றணுகப்
பைம்பொன்மாமுடியிலைச்சியதொப்பதுபாராய். (௨௬)

மடந்தைமார்களிற்றிலதமேமணிசிறந்திணிகல்
தொடர்ந்தபாறையில்வேயினஞ்சொரிகதிர்முத்தம்
இடந்தொறுங்கிடந்திமைப்பனவெக்கிளஞ்செக்கர்
படர்ந்தவானிடைத்தாரகைநிகர்ப்பனபாராய். (௨௭)

குழுவுநுண்டொளைவேயினுங்குறிநரம்பெறிவுற்
றெழுவுதண்டமிழ்யாழினுமினியசொற்கிளியே
முழுவதும்மலர்விரியநாண்முருக்கிடைமிடைந்த
பழுவம்வெங்கனல்கதுவியதொப்பனபாராய். (௨௮)

வளைகள்காந்தளிற்பெய்தனவனையகைம்மயிலே
† தொளைகொடாழ்தடக்கைநெடுந்துருத்தியிற்றாங்கி
அளவின்மூப்பினராருந்தவர்க்கருவிநீர்கொணர்ந்து
களபமால்கரிகுண்டிகைசொரிவனகாணாய். (௨௯)

வடுவின்மாவகிரினையெனப்பொலிந்தகண்மயிலே
இடுகுகண்ணினரிடருறுமூப்பினரேக
நெடுகுகூனல்வானீட்டினவுருகுறுநெஞ்சக்
கடுவன்மாதவர்க் § கருநெறிகாட்டுவகாணாய். (௩0)

பாந்தடேரினைபழிபடப்பரந்த $ பேரல்குல்
ஏந்துநூன்மணிமார்பினராகுதிக்கியைந்த

---

* பல்லவசயனம்-தளிர்ப்படுக்கை.
† அசுணமா-கேகயப்புள்.
‡ புழைக்கை என்றது பற்றித்தொளைகொடாழ்தடக்கை என்றார்.
§ அருநெறி-செல்லற்கரியவழி.
$ பேரல்குல்-அன்மொழித்தொகை.

கூந்தன்மென்மயிற்குறுகினநெடுஞ்சிறைகோலிக்
* காந்துகுண்டத்தின்வயங்கெரியெழுப்புவகாணாய். (௩௧)

அலம்புவார்குழலாய்மயிற்பெண்ணருங்கலமே
நலம்பெய்வேதியர்மார்பினுக்கியைவுறநாடிச்
சிலம்பிபஞ்சினிற்சிக்கறத்தெரிந்தநூ † றேமாம்
பலம்பெய்மந்திகளுடன்வந்துகொடுப்பனபாராய். (௩௨)

தெரிவைமார்க்கொரு ‡ கட்டளையெனச்செய்ததிருவே
பெரியமாக்கனிற்பலாக்கனிற்பிறங்கியவாழை
அரியமாக்கனிகடுவன்களன்புகொண்டளிப்பக்
கரியமாகிழங்ககழ்ந்தனகொணர்வனகாணாய் (௩௩)

ஐவனக்குரறினைக்கதிரிறுங்கவையவரை
மெய்வணக்குறுவேயினமீன்றமெல்லரிசி
பொய்வணக்கியமாதவர்புரைதொறும்புகுந்துன்
கைவணத்தவாய்க்கிள்ளைதந்தளிப்பனகாணாய். (௩௪)

§ இடிகொள்வேழத்தையெயிற்றொடுமெடுத்துடன்விழுங்கும்
கடியமாசுணங்கற்றறிந்தவரெனவடங்கிச்
சடைகொள்சென்னியர்தாழ்விலர்தாமிதித்தேறப்
படிகடாமெனத்தாழ்வரைகிடப்பனபாராய். (௩௫)

அசும்புபாய்வரையருந்தவமுடித்தவர் $ துணைக்கட்
டசும்புவேய்ந்தவரொத்தவர்தமக்குவிண்டருவான்
விசும்புதூர்ப்பனவாமெனவெயிலெனவிளங்கும்
பசும்பொன்மானங்கள்போவனவருவனபாராய். (௩௬)

நெய்கொணீருண்டுநெருப்புண்டுநீண்டமைநிறைந்த
வய்கொள்வேலெனக்காலனுமறுகுறுங்கண்ணாய்
மெய்கணோக்கின்றபிடிகளைவிரும்பியவேழம்
¶ கய்கணோக்கிலதாங்கினநிற்பனகாணாய். (௩௭)

விடங்கொ || ணோக்கிநின்னிடையினைமின்னெனவெருவிப்
படங்கொணாகங்கண்முழைபுகப்பதைப்பனபாராய்
மடங்கலாளிகளெனக்கொடுமழையினமுழங்கக்
கடங்கொள்கார்மதக்கைம்மலையிரிவனகாணாய். (௩௮)

---

* காந்துகுண்டம்-கனல்கின்றகுண்டம்.
† தேமாம்பலம்-இனியமாங்கனி.
‡ கட்டளை-உரையாணி.
§ இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்து விழுங்குமாசுண மென்றார் குருசரங்கோளிழைக்கும் பாம்பெனப் பிறரும் கூறலின்.
$ துணைக்கட்டசும்பு-சடைமுடி.
¶ கைகளென்றது புழைக்கையை.
|| நோக்கியென்றது வினைப்பெயர்.

இனையயாவையுமேந்திழைக்கியம்பினன்காட்டி
அனையமால்வரையருந்தவரெதிர்வரவணங்கி
வினையினீங்கியவேதியர்விருந்தினனானான்
* மனையின்மெய்யெனுமாதவம்புரிந்தவன்மைந்தன். (௩௯)

வேறு.

மாவியலுதயமாந் † துளபவானவன்
மேவியபகையிருளவுணர்வீந்துகக்
காவியல்குடவரைக்காலநேமிமேல்
ஏவியதிகிரிபோலிரவியேகினான். (௪௰)

சக்கரந் ‡ தானவனுடலிற்றாக்குற
எக்கியசோரியிற்பரந்தவெங்கணும்
செக்கரத்தீயவன்வாயிற்றீர்ந்துவே
றாக்கவான்றனியெயிறொத்ததிந்துவே. (௪௧)

ஆனனமகளிருக்களித்ததாமரைப்
பூநனிமுகிழ்த்தன்புலரிபோனபின்
மீனெனவிளங்கியவெள்ளியாம்பல்வீ
வானெனமணித்தடமலர்ந்தவென்றுமே. (௪௨)

மந்தியுங்கடுவனுமரங்கணோக்கின
தந்தியும்பிடிகளுந்தடங்கணோக்கின
சிந்தையில்சகுந்தங்கணீளநோக்கின
அந்தியைநோக்கினானறிவைநோக்கினான். (௪௩)

மொய்யுறுநறுமலர்முகிழ்த்தவாஞ்சில
மய்யறுநறுமலர்மலர்ந்தவாஞ்சில
அய்யனோடிளவற்குமமிழ்தனாளுக்கும்
§ கய்களுங்கண்களுங்கமலம்போன்றவே. (௪௪)

மாலைவந்தகன்றபின் $ மருங்கிலாளொடும்
வேலைவந்துறைவிடமேயதாமெனக்
கோலைவந்துமிழ்சிலைத்தம்பிகோலிய
சாலைவந்தெய்தினான்றவத்தினெய்தினான். (௪௫)

நெடுங்கழைக்குறுந்துணிசிறுவிமேனிரைத்
தொடுங்கலினெடுமுகடொழுக்கியூழுற

---

* புகழுடம்பு நிறீஇப் பூதவுடம்பை நீத்தமையான் மனையின் மெய்யெனு மாதவம் என்றார். † துளபவானவன் – திருமால். ‡ தானவன்-காலநேமி. § மாலைக்கடன் முடிப்பக் கண்முகிழ்த்துத் தியானித்தலின் கைகளுங் கண்களுங் கமலம்போன்றவென்றார். $ மருங்கிலாள் – சனகியை, தவத்தானல்லது வேறொன்றானெய்தப் படுபவனன்மையின் தவத்தினெய்தினானென்றார்.

இடுங்கலில்கைவிசித்தேற்றியெங்கணும்
முடங்கலில்வரிச்சுமேல்விரிச்சுமூட்டியே. (௪௬)

தேக்கடைப்படலையிற்செறிவுசெய்துபின்
பூக்கிளர்கானலின்புல்லுவேய்ந்துகீழ்
தூக்கியவேய்களிற்சுவருஞ்சுற்றறப்
போக்கிமண்ணெறிந்தவைபுனலிற்றீற்றியே. (௪௭)

வேறிடமியற்றினன் * மிதிலைநாடிக்கும்
கூறினநெறிமுறைகுயிற்றிக்குங்குமச்
சேறுகொண்டழகுறத்திருத்தித்திண்சுவர்
ஆறிடுமணியொடுங்கனகமப்பியே. (௪௮)

மயிலுடைப்பீலியின்விதானமேல்வகுத்
தயிலுடைச்சுரிகையாலருகுதூக்கறுத்
தெயிலிளங்கமுகளாலியற்றியாறிடு
செயலுடைப்புதுமலர்பொற்பச்சிந்தியே. (௪௯)

இன்னணமிளையவனிழைத்தசாலையில்
பொன்னிறத்திருவொடும்புக்கண்ணலோ
நன்னெடுந்திசைமுகனைத்தருநம்பனோர்க்
குன்னருமுயிருளுமொக்கவைகுவான். (௫0)

வேறு.

மாயநீங்கியசிந்தனைமாமறை
தூயபாற்கடல்வைகுந்தஞ்சொல்லலாம்
ஆய † சாலையரும்பெறலன்பினன்
நேயநெஞ்சின்விரும்பியிருப்பினான். (௫௧)

மேவுகானமிதிலையர்கோன்மகள்
பூவின்மெல்லியபாதமும்போந்தன
தாவிலெம்பிகைசாலைசமைத்தன
யாவையாதுமிலார்க்கியையாதவே. (௫௨)

என்றுசிந்தித்திளையவற்பார்த்திரு
குன்றுபோலக்குவலியதோளினாய்
என்றுகற்றனைநீயிதுபோலென்றான்
துன்றுதாமரைக்கண்பனிசோர்கின்றான். (௫௩)

அடருஞ்செல்வமளித்தவனாணையால்
படருநல்லறம்பாலித்திரவியில்

---

* மிதிலைநாடி-சனகி.

† சாலையை மாயைநீங்கிய சிந்தனையோடும் மாமறையோடும் பாற்கடலோடும் வைகுந்தத்தோடு முவமைகூறினர்.

சுடருமெய்ப்புகழ்சூடினெனென்பதென்
இடருனக்கிழைத்தேனெனுநாளென்றான். (ருச)

அந்தவாய்மொழியையனியம்பலும்
நொந்தசிந்தையிளையவனேக்கிறல்
எந்தைகாண்டியிடரினுக்கங்குராம்
முந்திவந்துமுளைத்ததன்றேயென்றான். (ருரு)

ஆகசெய்தக்கதில்லையறத்தினின்
றேகலென்பதரிதென்றுமெண்ணினேன்
ஓகைகொண்டவனுள்ளிடர்நோக்கினேன்
சோகபங்கந்துடைப்பரிதாலரோ. (ருசு)

பின்னுந்தம்பியைநோக்கிப்பெரியவன்
மன்னுஞ்செல்வத்திற்குண்டோநம்பிதற்
கென்னகேடிண் * டிவ்வெல்லையிலின்பத்தை
உன்னுமேல்வருமூழியத்தோடென்றான். (ருஎ)

தேற்றித்தம்பியைத்தேவருங்கைதொழு
நோற்றிருந்தனனேன்சிலையோனிப்பால்
ஆற்றன்மாதவனணையிற்போனவர்
கூற்றினுற்றதுகூறலுற்றாமரோ. (ருஅ)

அ-வது, சித்திரகூடப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-எகசு.

## கூ-வது, பள்ளியடைப்படலம்.



பொருவிறாதுவர்போயினர்பொய்யிலார்
இரவுநன்பகலுங்கடிதேகினார்
பரதன்கோயிலுற்றார் † படிகாரிரோம்
வரவுசொல்லுதிர்மன்னவற்கேயென்றார். (க)

தூதர்வந்தனருந்தைசொல்லொடெனக்
காதன்முந்திக்களிக்கின்றசிந்தையான்
போதுகென்னனப்புக்கவர்கைதொழுத்
தீதிலன்கொ ‡ திருமுடியோனென்றான். (உ)

* இவ்வெல்லையிலின்பம்-துறவறவொழுக்கினை.

† படிகாரிர்-காவலாளர்.

‡ திருமுடியோன்-தயரதன்.

வலியனென்றவர்கூறமகிழ்ந்தனன்
இலைகொள்பூணிளங்கோனெம்பிரானொடும்
உலைவில்செல்வத்தனேனெனவுண்டெனத்
தலையினேந்தினன்றாழ்தடக்கைகளே. (௩)

மற்றுஞ்சுற்றத்துளார்க்கும்வரன்முறை
உற்றதன்மைவினவியுவந்தபின்
இற்றதாருமெழுதருமேனியாய்
கொற்றவன்றன் * திருமுகங்கொள்கென்றார். (௪)

என்றுகூறலுமேத்தியிறைஞ்சினான்
பொன்றிணிந்தபொருவிறடக்கையால்
நின்றுவாங்கியுருகியநெஞ்சினான்
துன்றுநாண்மலர்ச்சென்னியிற்சூடினான். (௫)

சூடிச்சந்தனந்தோய்த்துடைசுற்றுமண்
மூடுதோட்டின்முடங்கணிமிர்த்தனன்
ஈடுநோக்கிவர்தெய்தியதூதர்க்குக்
கோடிமேலுநிதியங்கொடுத்தனன். (௬)

வாணிலாநகைதோன்றமயிர்ப்புறம்
பூணவானுயர்காதலிற்பொங்கினான்
† தாணிலாமலர்தூவினன்றம்முனைக்
காணலாமெனுமாசைகடாவவே. (௭)

எழுகசேனையென்றேவினனெய்தினன்
தொழுதுகேகயர்கோமகன்சொல்லொடும்
தழுவுதேரிடைத்தம்பியொடேறினான்
பொழுதுநாளுங்குறித்திலன்போயினான். (௮)

யானைசுற்றினதேரிரைத்தீண்டின
மானவேந்தர்குழுவினர்வாளுடைத்
தானைசூழ்ந்தனசங்கமுரன்றன
மீனவேலையின்விம்மினபேரியே. (௯)

கொடிநெருங்கினதொங்கல்குழுமின
வடிநெடுங்கண்மடந்தையரூர்மடப்
பிடிதுவன்றினபூணொளிபோர்ந்தன
இடிதுவன்றினமின்னெனவெங்குமே. (௧௦)

பண்டியங்கள்பரந்தனபல்லியம்
கொண்டியம்பினகொண்டலிற்கோதையில்

---

* திருமுகம்-முடங்கல். மங்கலவழக்கு.
† தாணிலா-தாளில்பொருந்தும்படி.

வண்டியம்பினவாளியின்வாவுறுஞ்
* செண்டியங்குபரியுஞ்செறிந்தவே. (கக)

தொளைமுகத்திற்சுருதிவிளம்பின
இளைமுகத்தினனும்பரிநேகிட
விளைமுகத்தனல் † வேலையின்மீதுசெல்
வளைமுகத்தனவாசியும்வந்தவே. (க௨)

‡ வில்லின்வேதியர்வாள்செறிவித்தகர்
மல்லின்மல்லர்சுரிகையின்வல்லவர்
கொல்லும்வேல்குந்தங்கற்றுயர்கொற்றவர்
தொல்லைவாரணப்பாகருஞ்சுற்றினர். (க௩)

எறிபகட்டினமாடுகளேற்றைமா
குறிகொள்கோழிசிவல்குறும்பூழ்நெடும்
பொறிமயிர்க்கவுதாரிகள்போற்றுறும்
நெறியின்மாக்களுமுந்திநெருங்கினர். (க௪)

நிறைந்தமாந்தர்நெருங்கினர்நெஞ்சினில்
பறந்துபோதுங்கொலென்றுபதைக்கின்றார்
பிறந்துதேவருணர்ந்துபெயர்ந்துமுன்
உறைந்தவானுறுவார்களையொக்கின்றார். (க௫)

ஊனளைந்தவுடற்குயிராமெனத்
தானளைந்துதழுவினதண்ணுமை
தேனளைந்துசெவியுறவார்த்தென
§ வானளைந்ததுமாகதர்பாடலே. (க௬)

ஊறுகொண்டமுரசுமிழோதையை
வீறுகொண்டனவேதியர்வாழ்த்தொலி
ஏறுகொண்டெழுமல்லரிடிப்பினை
மாறுகொண்டனவந்திகரேத்தரோ. (க௭)

ஆறுங்கானுமகன்மலையுங்கடந்
தேறியேழ்பகனீந்திப்பின்னெந்திரத்
தூறுபாகுமடையுடைத்தொண்முளை
நாறுபாய்வயற்கோசலநண்ணினன். (க௮)

---

* செண்டியங்குபரி-வையாளியாகச்செல்கின்ற குதிரை.

† வேலையின்மீதுசெல்-கடலின்மேற் செல்லுகின்ற, அல்லது கடலினு மதிகமாகச்செல்கின்ற எனினுமமையும்.

‡ வில்லின்வேதியர்-தனுர்வேதம் வல்லார்.

§ வானளைந்தது-சுவர்க்கபரியந்தம் எட்டியது.

ஏர்துறந்தவயலிளமைந்தர்தோள்
தார்துறந்தனதண்டலைநெல்லினும்
நீர்துறந்தனதாமரைநீத்தெனப்
பார்துறந்தனள் * பங்கயச்செல்வியே. (௧௯)

பிதிர்ந்துசாறுபெருந்துறைமண்டிடச்
சிதிர்ந்துசிந்தியழிந்தனதேங்கனி
முதிர்ந்துகொய்யுநரின்மையின்மூக்குமிழ்த்
துதிர்ந்துலர்ந்தனவொண்மலரீட்டமே. (௨0)

ஏய்ந்தகாலமிதுவிதற்காமெனை
ஆய்ந்துமள்ளரரிகுநரின்மையால்
பாய்ந்தசூதப்பசுநறுந்தேறலரிற்
சாய்ந்தொசிந்துமுளைத்தனசாலியே. (௨௧)

எட்குலாமலரேசியகாசியர்
புட்குலாவயற்பூசற்கடைசியர்
கட்கிலார்களைகாதற்கொழுநரோ
டெட்கலாமுடையாரினுயங்கினார். (௨௨)

ஓதுகின்றிலகிள்ளையுமோதியர்
ஊதுசென்றிலவைந்திலதோடர்பால்
மோதுகின்றிலபேரிமுழாவிழா
போதுகின்றிலபொன்னணிவீதியே. (௨௩)

பாடனீத்தனபண்டொடர்பண்குழல்
ஆடனீத்தவரங்கொடகன்புனல்
சூடனீத்தனசூடிகைசூளிகை
மாடநீத்தன † மங்கலவள்ளையே. (௨௪)

நகையிழந்தனவாண்முகநாறகிற்
புகையிழந்தனமாளிகைபொங்கழற்
சிகையிழந்தன ‡ தீவிகைதேமலர்த்
தொகையிழந்தனசோகையரோதியே. (௨௫)

அலர்ந்தபைங்கூழகன்குளக்கீழன
மலர்ந்தவாயிற்புனல்வழங்காமையால்
உலர்ந்தவன்கணுலோபர்கடைத்தலை
புலர்ந்துநிற்கும் § பரிசிலர்போலவே. (௨௬)

---

* பங்கயச்செல்வி-திருமாமகள்.

† மங்கலவள்ளை-மங்கலகரமான வள்ளைப்பாட்டு, மங்கலமும் வள்ளைப்பாட்டு என்றுங்கூறுவர். வள்ளை-உலக்கைப்பாட்டு.

‡ தீவிகை—விளக்குகள்.

§ பரிசிலர்-உலோபர்கடைத்தலைநின்றிரப்போர்.

நாவிநீத்தருநல்வளந்துன்னிய
பூவிநீத்தெனநாடுபொலிவொரீஇத்
தேவிநீத்தருஞ்சேணெறிதாவிட
ஆவிநீத்தவுடலெனலாயதே. (உஎ)

என்றநாட்டினைநோக்கியிடருழந்
தொன்றுமுற்றதுணர்ந்திலனுன்னுவான்
சென்றகேட்பதொர்தீங்குளதாமெனு
நின்றுநின்றுநெடிதுயிர்த்தானரோ. (உஅ)

மீண்டுமெய்தியம் * மெய்யெனுநல்லணி
பூண்டவேந்தன்றிருமகன்புந்திதான்
தூண்டுதேரினுமுந்துறத்தூங்குவான்
நீண்டவாயினெடுநகர்நோக்கினன். (உகூ)

அண்டமுற்றுந்திரிந்தயர்ந்தாயமு
துண்டுபோதியென்றொண்கதிர்ச்செல்வனை
விண்டொடர்ந்துவிலக்குவபோல்வன
கண்டிலன்கொடியின்னெடுங்கானமே. (ந0)

ஈட்டுநன்புகழ்க்கீட்டியயானையும்
வேட்டவேட்டவர்கொண்மினின்விரைந்தெனக்
கோட்டிமாக்களைக்கூவுவபோல்வன
கேட்டிலன்முரசின்கிளரோதையே. (நக)

கள்ளைமாக்கவர்கண்ணியன்கண்டிலன்
பிள்ளைமாக்களிறும்பிடியீட்டமும்
† வள்ளைமாக்கணிதியும்வயிரியர்
கொள்ளைமாக்களிற்கொண்டனரேகவே. (நஉ)

காவன்மன்னவன்கான்முளைகண்டிலன்
ஆவுமாவுமழிகவுள்வேழமும்
மேவுகாதணிதியும்வெறுக்கையும்
‡ பூவின்வானவர்கொண்டனர்போகவே. (நந)

குழமைந்தசுரும்புநரம்புந்தம்
§ ஏழமைந்தவிசையிசையாமையால்
மாழையுண்கண்மயிலெனுஞ்சாயலார்
கூழைபோன்றபொருனர்குழாங்களே. (நச)

---

* தன்னுயிர்நீத்தும் தன்சொற்கடவாமையின் மெய்யெனு நல்லணி பூண்ட வேந்தனென்றார்.
† வள்ளைமாக்கள்-மங்கலபாடகர்கள்.
‡ பூசுரரென்னும் பெயர்பற்றிப் பூவின்வானவரென்றார்.
§ ஏழமைந்தவிசை-ஏழாகப்பொருந்திய இசை.

தேருமாவுங்களிறுஞ்சிவிகையும்
ஊரும்பண்டியுமூருனரின்மையால்
யாருமின்றியெழிலழிவீதிகள்
வாரியின்றிய * வாலுகவாற்றினே. (௩௫)

அன்னதன்மையநகர்நோக்கினன்
பின்னையப்பெரியோர்தம்பெருந்தகை
மன்னன்வைகும்வளநகர்போலுமீ
தென்னதன்மையிளையவனேயென்றான். (௩௬)

வேற்றடங்கலாவிண்ணுறவென்றிடும்
கூற்றடங்கப்பொருநெடுங்கோளினாய்
சேற்றடங்கட்டிருவொடுநீங்கிய
பாற்றடங்கடலொத்ததுபாரென்றான். (௩௭)

குருமணிப்பூணரசிளங்கோளரி
இருகைகூப்பியிறைஞ்சினனெய்திய
வொருவனைத்தன்றுறுதுய † ரூழிவாழ்
திருநகர்த்திருநீர்நகனாமென்றான். (௩௮)

அனையவேலையிலக்கடைத்தோரணை
மனையினீணெடுமங்கலவீதிகள்
‡ நினையுமாத்திரத்தேகியநேமியான்
தனையனுந்தந்தைசார்விடமேவினான். (௩௯)

விருப்பினெய்தினன்வெந்திறல்வேந்தனை
இருப்புநல்லிடமெங்கணுங்கண்டிலன்
அருப்பமன்றியெந்தையுறவெய்தினான்
பொருப்புநாணவுயர்ந்தபுயத்தினான். (௪0)

ஆயகாலையிலையனைநாடித்தன்
தாயகையிற்றொழுதுவான்றனை
ஏயளன்னைகுறுகுதிரீண்டெனா
வேய்கொடோளியொருத்திவிளம்பினாள். (௪௧)

வந்துதாயையடியில்வணங்கலும்
சிந்தையாரத்தழுவினடிலர்
எந்தையென்னையரெங்கையரென்றனள்
§ அந்தமில்குணத்தானுடதாமென்றான். (௪௨)

* வாலுகம்-மணற்குன்று.
† எழுநகரத்துஞ்சிறந்தமையின்-ஊழிவாழ்திருநகரென்றார்.
‡ நினையுமாத்திரம்-நுண்ணியதாகிய காலவளவு.
§ அந்தமில்குணத்தன் — (க) அழிவற்ற குணத்தினையுடைய பரதாழ்வான். (௩) பிதாவினைக்காணுமையால் அழுகழிந்துள்ள எண்ணத்தினையுடைய பரதன் எனினுமமையும்.

வேறு.

மூண்டெழுகாதலான்முளரித்தாடொழு
வேண்டினனெய்தினனுள்ளம்விம்முமால்
ஆண்டகைநெடுமுடியரசர்கோமகன்
யாண்டையான்பணித்திரென்றிருகைகூப்பினான். (௪௩)

ஆனவனுரைசெயவழிவில்சிந்தையாள்
தானவர்வலிதவத்திமிர்ந்ததானையத்
தேனமர்தெரியலான்றேவர்கைதொழ
* வானகமெய்தினன்வருந்தனீயென்றாள். (௪௪)

எறிந்தனகடியசொற்செவியுளெய்தலும்
நெறிந்தலர்குஞ்சியானெடிதுவீழ்ந்தனன்
அறிந்திலனுயிர்த்திலனசனியேற்றினால்
மறிந்துயர்மராமரமண்ணுற்றென்னவே. (௪௫)

வாயொளிமழுங்கத்தன்மலர்ந்ததாமரை
ஆயலர்நயனங்களருவிசோர்தரத்
தீயெரிசெவியில்வைத்தனையதீயசொல்
நீயலதுரைசெயாநினைப்பரோவென்றான். (௪௬)

எழுந்தனனேங்கினனிரங்கிப்பின்னரும்
விழுந்தனன்விம்மினன்வெய்துயிர்த்தனன்
அழிந்தனனரற்றினனரற்றியின்னன
மொழிந்தனன்பின்னரு † முருகிற்செவ்வியான். (௪௭)

அறந்தனைவேரறுத்தருளைக்கொன்றனை
சிறந்தநின்றண்ணளித்திருவைத்தேசழித்
திறந்தனையாமெனிலிறைவநீதியை
மறந்தனையுனக்கிதின்மாசுமேலுண்டோ. (௪௮)

சினக்குறும்பெறிந்தெழுகாமத்தீயவித்
தினக்குறும்பியாவையுமெற்றியாவர்க்கும்
மனக்குறுநெறிசெலும்வள்ளியோய்மறந்
துனக்குறுநெறிசெலவொழுக்கின்பாலதோ. (௪௯)

‡ முதலவன்முதலியமுந்தையோர்பழங்
கதையையும்புதுக்கியதலைவன் § கண்ணுடை
நுதலவன் $ சிலைவிலினோன்மைநூறிய
புதல்வனையெங்கணம்பிரிந்துபோயினாய். (௫௰)

* வானகமெய்தினன் — துறக்கமடைந்தான். இது மங்கலவழக்கு.
† முருகிற்செவ்வியான்-பரதன். ‡ முதலவன்-இட்சுவாகு.
§ கண்ணுடைநுதலவன்-சிவன்.
$ சிலைவில்-மலைபோன்றவில்.

செவ்வழியுருட்டிய திகிரிமன்னவ
எவ்வழிமரபினுமிரவலாளர்தாம்
இவ்வழியுலகினிலின்மைகண்பினேர்
அவ்வழியுலகினுமுளர்கொலோவையா. (௫க)

பற்பகனிழற்றுநின் கவிகைபாய்நிழல்
நிற்பனபல்லுயிருணங்கநீநெடுங்
கற்பகாறுநிழல்காதலித்தியோ
மற்பகமலர்ந்ததோண்மன்னர்மன்னனே. (௫௨)

இம்பர்நின்றேகினையிருக்குஞ்சார்பிழந்
தும்பர்வந்துன்கழலொதுங்கினர்கொலாம்
சம்பரனனையவத்தானைத்தானவர்
* அம்பரத்தின்னமுமுளர்கொலாமையா. (௫௩)

இயங்கெழுதானையரிறுத்தமாத்திறை
உயங்கலின்மறையவர்க்குதவியும்பரின்
† அயங்கெழுவேள்வியோடமரர்க்காக்கிய
வயங்கெரிவளர்த்தனைவைகவல்லையோ. (௫௪)

ஏழுயர்மதகளிற்றிறைவவேகினை
வாழியகரியவன்வறியன்கையெனப்
பாழியம்புயத்துநின்பணியினீங்கிலா
ஆழியையினியவற்களிக்கவெண்ணியோ. (௫௫)

பற்றிலைதவத்தினிற்பயந்தமைந்தற்கு
முற்றுலகளித்ததுமுறையினெய்திய
கொற்றவன்முடிமணக்கோலங்காணவும்
பெற்றிலைபோலுநின் ‡ பெரியகண்களால். (௫௬)

ஆற்றலனின்னனபன்னியாவலித்
தூற்றுறுகண்ணினனுருகுவான்றனைத்
தேற்றினனொருவகைசிறிதுதேறிய
கூற்றுறழ்வரிசிலைக்குரிசில்கூறுவான். (௫௭)

எந்தையும்யாயுமெம்பிரானுமெம்முனும்
அந்தமில்பெருங்குணத்திராமனாதலால்
வந்தனையவன்கழல்வைத்தபோதலால்
சிந்தைவெங்கொடுந்துயர்தீர்கலாதென்றான். (௫௮)

* அம்பரம்-துறக்கம்.
† அயங்கெழுவேள்வி-பரிமேதம்.
‡ பெரியகண்ணென்றார்-முடிமணக்கோலங்காணுங்கண்ணாகலின்.

அவ்வுரைகேட்டலுமசனியேறென
* வெவ்வுரைவல்லவள்மீட்டுங்கூறுவாள்
தெவ்வடுசிலையினாய்தேவிதம்பியென்
றிவ்விருவோரொடுங்கானத்தானென்றாள். (௪௯)

வனத்தினனென்றவளிசைத்தமாற்றத்தை
நினைத்தனனிருந்தனனெருப்புண்டானென
வினைத்திறம்யாதினிவிளைவதின்னமும்
† எனைத்துளகேட்பனதுன்பம்யானென்றான். (௫௦)

எங்கினன்விம்மலோடிருந்தவேந்தலப்
பூங்கழற்காலவன்வனத்துப்போயது
தீங்கிழைத்ததனினோதெய்வஞ்சீறியோ
ஓங்கியவிதியினோயாதினோவென. (௫௧)

தீயனவிராமனேசெய்யுமேலவை
தாய்செயலல்லவோதலத்துளோர்க்கெலாம்
போயதுதாதைவிண்புக்கபின்னரோ
ஆயதன்முன்னரோவருளுவீரென்றான். (௫௨)

குருக்களையிகழ்தலினன்றகூறிய
செருக்கினாலன்றொருதெய்வத்தாலுமன்
றருக்கனேயனையவவ்வரசர்கோமகன்
இருக்கவேவனத்தவனேகினானென்றாள். (௫௩)

குற்றமொன்றில்லையேற்கொதித்துவேறுளோர்
செற்றதுமில்லையேற்றெய்வத்தாலன்றேல்
பெற்றவனிருக்கவே ‡ பிள்ளைகான்புக
உற்றதென்பின்னவனுலந்ததென்னென்றான். (௫௪)

வாக்கினால்வரந்தரக்கொண்டுமைந்தனைப்
போக்கினேன்வனத்திடைபோக்கிப்பாருனக்
காக்கினேனவனதுபொறுக்கலாமையால்
நீக்கினான்றன்னுயிர் § நேமிவேந்தென்றாள். (௫௫)

சூடினமலர்க்கரஞ்சொல்லின்முன்செவி
கூடினபுருவங்கள்குதித்துக்கூத்துநின்
றாடினவுயிர்ப்பினோடழற்கொழுந்துகள்
ஓடினவுமிழ்ந்தனவுதிரங்கண்களே. (௫௬)

---

* வெவ்வுரைவல்லவள்-கைகேசி.
† எனைத்து-எத்தனைத்தென்பதன் மரூஉ.
‡ பிள்ளை — ஈண்டுசீராமனை.
§ நேமிவேந்து-சக்கிரவர்த்தி.

துடித்தனகபோலங்கள்சுற்றுந்தீச்சுடர்
பொடித்தனமயிர்த்தொளைபுகையும்போர்த்தது
மடித்ததுவாய்நெடுமழைக்கைம்மண்பக
அடித்தனவொன்றொடொன்றசனியஞ்சவே. (௬எ)

பாதங்கள்பெயர்தொறும்பாருமேருவும்
போதங்கொணெடுந்தனிப்பொருவில் * கூம்பொடு
மாதங்கம்வருகலமறிக்கால்பொர
ஓதங்கொள்கடலினின்றுலைவபோன்றவே. (௬அ)

அஞ்சினர்வானவரவுணரச்சத்தால்
துஞ்சினரெனைப்பலசொரிமதத்தொளை
எஞ்சினதிசைக்கரியிரவிமீண்டனன்
வெஞ்சினக்கூற்றுந்தன்விழிபுதைத்ததே. (௬௯)

கொடியவெங்கோபத்தாற்கொதித்தகோளரி
கடியவடாயெனக்கருதுகின்றிலன்
† நெடியவன்முனியுமென்றஞ்சிநின்றனன்
இடியுருமனையவெம்மொழியியம்புவான். (எ0)

மாண்டனனெந்தையென்றம்முன்மாதவம்
பூண்டனனின்கொடும்புணர்ப்பினாலென்றால்
ஈண்டிலென்வாயதுகேட்டுநின்றயான்
ஆண்டனனேயன்றேவரசையாசையால். (எக)

நீயினமிருந்தனையானுநின்றனென்
ஏயெனுமாத்திரத்தெற்றுகிற்றிலென்
‡ ஆயகன்முனியுமென்றஞ்சினேனலால்
தாயெனும்பெயரெனைத்தடுக்கற்பாலதோ. (எஉ)

மாளவுமுளனொருமன்னன்வன்சொலால்
மீளவுமுளனொருவீரன்மெய்யபார்
ஆளவுமுளனொருபரதனுகினால்
கோளலதறநெறிகுறையுண்டாகுமோ. (எ௩)

சுழியுடைத்தாயுடைக்கொடியசூழ்ச்சியால்
வழியுடைத்தாய்வருமரபைமாய்த்தொரு
பழியுடைத்தாக்கினன்பரதன்பண்டெனும்
மொழியுடைத்தாக்கலின்முறைமைவேறுண்டோ. (எச)

* கூம்பு-பாய்மரம்.
† நெடியவன்-சீராமன்.
‡ ஆயகன்-தாய்போலுமிரங்குநெஞ்சுடையான்.

வேறு.

நோயீரல்லீர் நுங்கணவன்றன் னுயிருண்டீர்
பேயீரேநீரின்னமிருக்கப்பெறுவீரே
மாயீர்மாயாவன்பழிதந்தீர்முலைதந்தீர்
தாயீரேநீரின்னுமெனக்கென்றருள்வீரே. (௭௫)

ஒன்றும்பொய்யாமன்னனைவாயாலுயிரோடும்
தின்றுந்தீராவன்பழிகொண்டுந்திருவெய்தி
என்றுந்நீரேவாழ்வுவந்தீரவனைக்
கன்றுந்தாயும்போவனகண்டுங்கழியீரே. (௭௬)

இறந்தான்றந்தையீந்தவரத்தாக்கிழிவென்றே
அறந்தானீதென்றன்னவன்மைந்தனரசெல்லாம்
துறந்தான்றாயின்சூழ்ச்சியின்ஞாலமவனேதேடும்
பிறந்தானுண்டாமென்னுமிதென்றேற்பெறலாமே. (௭௭)

மாளும்மென்றேதந்தையையுன்னாசைகொண்டாள்
கோளும்மென்றேலையனல்கொண்டானதுவன்றேல்
மீளும்மன்றேயென்னையுமெய்யேயுலகெல்லாம்
ஆளும்மென்றேபோயினனன்றோ * வரசாள்வான். (௭௮)

ஓதாநின்றதொல்குலமன்னனுணர்வப்பால்
யாதானுந்தானாகவெனக்கேபணிசெய்வான்
தீதாநின்றசிந்தனைசெய்தானவனென்னப்
போதாதோவென்றாயிவள்கொண்டபுகழம்மா. (௭௯)

உய்யாநின்றேனின்னமுமென்முன்னுடன்வந்தான்
கய்யார்கல்லைப்புல்லடகுண்ணக்கலமேந்தி
வெய்யோனுனின்சாலியின்வெண்சோறமுதென்ன
நெய்யோடுண்ணாநின்றதுநின்றார்நினையாரோ. (௮0)

வில்லார்தோளான்மேவினன்வெங்கானகமென்ன
† நல்லானன்றேதுஞ்சினனஞ்சேயனையானைக்
கொல்லேன்மாயேன்வன்பழியாலேகுறைவற்றேன்
அல்லேனேயானன்புடையார்போலழுகின்றேன். (௮௧)

பாரோர்கொள்ளார்யானுயிர்பேணிப்பழிபூணேன்
தீராதொன்றேதுன்புமில்லூரிற்றிருவில்லாள்
ஆரோடெண்ணிற்றாருரைதந்தாயறமெல்லாம்
வேரோடுங்கேடாகமுடித்தென்விளைவித்தாய். (௮௨)

---

* அரசாள்வான் என்றது-சீராமனை.
† நல்லான் தயரதன்.

கொன்றேனென்றந்தையைமற்றுன்கொலைவாயால்
ஒன்றேகானத்தண்ணலையுய்த்தேனுலகாள்வான்
நின்றேனென்றானின்பிழையுண்டோபழியுண்டோ
என்றேனுந்தானென்புகழ்மாயுமிடமுண்டோ. (௮௩)

கண்ணாலேயென்செய்வினையின்னுஞ்சிலகாண்பார்
மண்ணோர்பாராதெள்ளுவர்வாளாபழிபூண்டாய்
* உண்ணாநஞ்சங்கொல்கிலதென்னுமுறையுண்டென்
றெண்ணாநின்றேனன்றியிரேனென்னுயிரோடே. (௮௪)

என்றுன்பாவிக்கும்பிவயிற்றினிடைவைகித்
தோன்றுந்தீராப்பாதகமற்றென்றுயர்தீரச்
சான்றுந்தானேநல்லறமாகத்தகைஞாலம்
மூன்றுங்காணமாதவம்யானேமுயல்கின்றேன். (௮௫)

சிறந்தார்சொல்லுநல்லுரைசொன்னேன்செயலெல்லாம்
மறந்தாய்செய்தாயாகுதி † மாயாவுயிர்தன்னைத்
துறந்தாயாகிற்றாயையுமாதியுலகத்தே
பிறந்தாயாதிநீதலதில்லைபிறிதென்றான். (௮௬)

வேறு.

இன்னணம்வினையனவியம்பியானுமிப்
பன்னருங்கொடுமனப்பாவிபாடிரேன்
துன்னருந்துயர்கெடத்தூயகோசலை
பொன்னடிதொழுவனென்றெழுந்துபோயினான். (௮௭)

‡ ஆண்டகைகோசலையருகரெய்தினன்
மீண்டுமண்கிழிதரவீழ்ந்துகேழ்கிளர்
காண்டகுதடக்கையிற்கமலச்சீறடி
பூண்டனன்கிடந்தனன்புலம்பினானரோ. (௮௮)

எந்தையெவ்வுலகுளானெம்முன்யாண்டையான்
வந்ததுதமியெனிம்மறுக்கங்காணவோ
சிந்தையினுறுதுயர்தீர்த்திராலெனும்
அந்தரத்தமராருமழுதுசோரவே. (௮௯)

அடித்தலங்கண்டிலென்யானென்னையனைப்
படித்தலங்காவலன்பெயரற்பாலனோ
பிடித்திலிர்போலுநீர்பிழைத்திராலெனும்
பொடித்தலந்தோளுறப்புரண்டுசோர்கின்றான். (௯0)

---

* உண்ணா-ஈறுகெட்டவெதிர்மறை வினையெச்சம்.
† உயிர்நித்தமென்பார் மதம்பற்றி மாயாவுயிரென்றார்.
‡ ஆண்டகை-பரதன்.

கொடியவர்யாவருங்குலங்கள்வேரற
றொடிகுவென்யானது நுவல்வதெங்கணம்
கடியவள்வயிற்றினிற்பிறந்தகள்வனேன்
முடிகுவெனருந்துயர்முடியவென்னுமால். (௧௧)

இரதமொன்றூர்ந்துபாரிருளைநீக்குமவ்
* வரதனிலொளிபெறவளர்ந்ததொல்குலம்
† பரதனென்றொருபழிபடைத்ததென்னுமால்
மரதகமலையெனவளர்ந்ததோளினான். (௧௨)

வாடொடுதானையான்வானில்வைகிடக்
காடொருதலைமகனெய்தக்கண்ணிலா
நாடொருதுயரிடைநைவதேயெனும்
தாடொடுதடக்கையத்தருமமேயனான். (௧௩)

புலம்புறுகுரிசிறன்புலர்வுநோக்கினள்
குலம்பொறைகற்பிவைசுமந்தகோசலை
நிலம்பொறையாற்றலனெஞ்சத்தாய்தெருச
சலம்பிறிதுறமனத்தளர்ந்துகூறுவாள். (௧௪)

மய்யறுமனத்தொருமாசுளானலன்
செய்யனேயென்பதுதேருஞ்சிந்தையாள்
கய்கயர்கோமகளிழைத்தகைதவம்
அய்யநீயறிந்திலைபோலுமாலென்றாள். (௧௫)

தாளுறுகுரிசிலத்தாய்சொற்கேட்டலும்
‡ கோளுறுமடங்கலிற்குமுறிவிம்முவான்
நாளுறுநல்லறநடுங்கநாவினால்
சூளுறுகட்டுரைசொல்லன்மேயினான். (௧௬)

அறங்கெடமுயன்றவனருளினெஞ்சினன்
பிறன்கடைநின்றவன்பிறரைச்சீறினான்
மறங்கொடுமன்னுயிர்கொன்றுவாழ்ந்தவன்
துறந்தமாதவர்க்கருந்துயரஞ்சூழ்ந்துளோன். (௧௭)

குரவரைமகளிரைவாளிற்கொன்றுளோன்
புரவலனுறுபொருள்புனைவில்வாரினான்
விரவலர்வெரிநிடைவிழிக்கநீண்டுளோன்
§ இரவலரருநிதியெறிந்துவெளவினான். (௧௮)

---

* வரதன்-சூரியன்.

† பரதனைத் தருமமேயனானென்றுவமைமுகத்தாற்கூறினார்.

‡ கோளுறுமடங்கல்-வன்மைபொருந்திய சிங்கம். அல்லது தடையுண்டசிங்கம் என்றும் கூறுவர்.

§ இரவலர் அருநிதி-ஏழைகள் வெகு கஷ்டப்பட்டு பற்பலரிடத்து நின்றுஞ் சேகரிக்கின்ற பொருள்.

தழைத்ததண்டளவினேன் றலைவனல்லனென்
றழைத்தவனறநெறியந்தணாளரில்
பிழைத்தவன்பிழைப்பிலாமறையைப்பேணலா
திழைத்தவன்பொய்யெனுமிழுதைநெஞ்சினேன். (௯௯)

தாய்பசியுழந்துயிர்தளரத்தான்றனிப்
பாய்பெரும்பாழ்வயிறளிக்கும்பாவியும்
நாயகன்படநடந்தவனுநண்ணுமத்
தீயெரிநரகத்துக்கடிதுசெல்கயான். (௧௦௦)

தாளினிலடைந்தவர்தம்மைத்தற்கொரு
கோளுறவஞ்சினன்கொடுத்தபேதையும்
நாளினுமறமறந்தவனுநண்ணுறும்
மீளருநரகிடைக்கடிதுவீழ்கயான். (௧௦௧)

பொய்க் * கரிகூறினேன்போருக்கஞ்சினேன்
கைக்கொளுமடைக்கலங்கரந்துவவ்வினேன்
எய்த்திடத்திடர்செய்தோனென்றின்னோர்புகும்
மெய்க்கொடுநரகிடைவிரைவின்வீழ்கயான். (௧௦௨)

† அந்தணருறையுளையனலியூட்டினேன்
மைந்தரைக்கொன்றுளோன்வழக்கிற்பொய்த்துளோன்
நிந்தனைதேவரைநிகழ்த்தினேன்புகும்
வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே. (௧௦௩)

கன்றுயிரோய்ந்துகக்கறந்துபாலுண்டோன்
மன்றிடைப்பிறர்பொருண்மறைத்துவவ்வினேன்
நன்றியைமறந்திடுநயமிலாவினேன்
என்றிவருறுநரகென்னதாகவே. (௧௦௪)

ஆறுதன்னுடன்வருமஞ்சொன்மாதரை
ஊறுகொண்டலைக்கத்தன்னுயிர்கொண்டேகினேன்
சோறுதன்னயலுளோர்பசிக்கத்துய்த்துளோன்
ஏறுமக்கதியிடையானுமேறவே. (௧௦௫)

எஃகெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்
‡ கொஃகினனுயிர்வளர்த்துண்ணுமாசையான்
அஃகலிலறநெறியாக்கியோன்பொருள்
வெஃகியமன்னன்வீழ்நரகின்வீழ்கயான். (௧௦௬)

---

* கரி-சாக்ஷி.
† அந்தணருறையுளை யனலியூட்டினே-பிரமத்தோஷி.
‡ ஒஃகினன்-அஞ்சினவ,

அழிவருமரசியலெய்தியாகுமென்
றிழிவருசிறுதொழிலியற்றியாண்டதின்
வழிவருதருமத்தைமறந்துமற்றொரு
பழிவருநெறிபடர்பதகனாகயான். (௧0௭)

தஞ்செனவொதுங்கினர்தனதுபாருளோர்
எஞ்சலின்மறுக்கினோடிரியல்போயுற
* வஞ்சிசென்றிறுத்தவன் † வாகைமீக்கொள
அஞ்சினமன்னவனாகயானுமே. (௧0௮)

கன்னியையழிசெயக்கருதினேன்குருப்
பன்னியைநோக்கினேன்பருகினேனறை
பொன்னிகழ்களவினிற்பொருந்தினேனென
இன்னவருறுகதியென்னதாகவே. (௧0௯)

ஊணலவுண்வழிநாயினுண்டவன்
ஆணலன்பெண்ணலனார்கொலாமென
நாணலனரகமுண்டென்னுநல்லுரை
பேணலன்பிறர்பழிபிதற்றியாகயான். (௧௧0)

மறுவிறொல்குலங்களைமாசிட்டேற்றினேன்
சிறுவிலையெளியவருணவுசிந்தினேன்
நறியனவயலவர்நாவினீர்வர
‡ உறுபதநுங்கியவொருவனாகயான். (௧௧௧)

வில்லினும்வாளினும்விரிந்தவாண்டொழில்
புல்லிடையுகுத்தனென்பொய்ம்மையாக்கையைச்
சில்பகலோம்புவான்செறுனர்சீறிய
இல்லிடையிடுபதமேற்கவென்கையால். (௧௧௨)

ஏற்றவற்கொருபொருளுள்ளதின்றென்று
மாற்றலனுதவலன்வரம்பில்பல்பகல்
ஆற்றினனுழற்றுமோ § ராதனெய்துமக்
கூற்றுறுநரகினோர்கூறுகொள்கயான். (௧௧௩)

பிணிக்குறுமுடையுடல்பேணிப்பேணலார்த்
துணிக்குறவயிரவாட்டக்கைதூக்கிப்போய்
மணிக்குறுநகையிளமங்கைமார்கண்முன்
தணிக்குறுபகைஞரைத்தாழ்கவென்றலை. (௧௧௪)

---

* வஞ்சி — வட்கார் மேற்செல்வார்புனையுமாலை.

† வாகை — வெற்றிகொண்டார் புனையுமாலை. ‡ உறுபதம்-உண்ணுமுணவு. இடுபதம் — மது. § ஆதன் — அறிவிலி.

கரும்பலர்செந்நெலங்கமுனிக்கானநா
டரும்பகைகவர்ந்துணவாவிபேணினென்
இரும்பலர்நெடுந்தளேயீர்த்தகாலொடும்
* விரும்பலர்முகத்தெதிர்விழித்துநிற்கயான். (ககூ)

† தீயனகொடியவள்செய்தசெய்கையை
நாயினேனுணரினன்னெறியினீங்கலாத்
தூயவர்க்கிடரிழைத்துழலுந்தோமுடை
ஆயவர்வீழ்கதியதனின்வீழ்கயான். (ககசு)

வேறு.

தூயவாசகஞ்சொன்ன ‡ தோன்றலைத்
தீயகானகந்திருவினீங்கிமுன்
போயினான்வரக்கண்டபொம்மலாள்
ஆயகாதலாலழுதுபுல்லினாள். (ககஎ)

செம்மைநன்மனத்தண்ணல்செய்கையும்
அம்மைதீமையுமறிததேற்றினாள்
கொம்மைவெம்முலைகுமுறுபாலுக
விம்மல்விம்மினின்றழுதுயங்கினாள். (ககஅ)

முன்னை § நுங்குலமுதலுளோர்கடாம்
நின்னையாவரேநிகர்க்குநீர்மையார்
மன்னர்மன்னவாவென்றுவாழ்த்தினாள்
உன்னவுன்னநைந்துருகிவிம்முவாள். (ககக)

உன்னவுன்னநைந்துருகுமன்புகூர்
அன்னைதாளில்வீழ்ந்திளையவண்ணலும்
சொன்னநீர்மையாற்றொழுதுமாழ்கினான்
இன்னவேலைவாய்முனிவனெய்தினான். (கஉ0)

வந்தமாதவன்தாளில்வள்ளல்வீழ்ந்
தெந்தையாண்டையானியம்புவீரெனு
நொந்துமாழ்கினானுவல்வதோர்கிலா
அந்தமாதவனழுதுபுல்லினான். (கஉக)

மறுவின்மைந்தனேவள்ளலுந்தையார்
இறுதியெய்தினாளேழிரண்டின
சிறுவர்செய்கடன்செய்துதீர்த்தியென்
றுறுவன்மேயினானுரையின்மேயினான். (கஉஉ)

* விரும்பலர் — பகைவர். † வெள்ளிப்பாட்டு.
‡ தோன்றல்ஈண்டு பரதன்.
§ நுங்குலமுதலுளோர் — மனுத்தொடக்கமானவரை.

அன்னையேவினாளடியிறைஞ்சினான்
பொன்னின்வார்சடைப்புனிதனோடும்போய்த்
* தன்னைநல்கியத்தருமநல்கினான்
பன்னுதொல்லறப்படிவநோக்கினான். (௧௨௩)

மண்ணின்மேல்விழுந்தலறிமாழ்குவான்
அண்ண † லாழியானவனிகாவலான்
எண்ணெயுண்டபொன்னெழில்கொண்மேனியைக்
கண்ணனீரினாற்கழுவியாட்டினான். (௧௨௪)

பற்றியவ்வயின்பரிவின்வாங்கினார்
சுற்றுநான்மறைத்துறைசெய்கேள்வியார்
கொற்றமண்கணைகுமுறமன்னனை
மற்றோர்பொன்னின் ‡ மாமானமேற்றினார். (௧௨௫)

கரைசெய்வேலைபோனகரிகையெடுத்
துரைசெய்பூசலிட்டுயிர்துளங்குற
அரைசவேலைசூழ்ந்தழுதுகைதொழப்
புரைசயானையிற்கொண்டுபோயினார். (௧௨௬)

§ உந்துபொற்றடந்தேர்வலானொடும்
மந்திரப்பெருந்தலைவர்மற்றுளோர்
தந்திரத்தனித்தலைவர்நண்பினோர்
வந்துசுற்றமுற்றழுதுமாழ்கினார். (௧௨௭)

சங்குபேரிபுந்தழுவுசின்னமும்
எங்குமெங்குநின்றிரங்கியேங்குவ
மங்குறோய்நகர்மகளிராமெனப்
பொங்குகண்புடைத்தழுவபோன்றவே. (௧௨௮)

மாவும்யானையும்வயங்குதேர்களும்
கோவுநான்மறைக்குழுவுமுன்செலத்
$ தேவிமாரொடுங்கொண்டுதெண்டிரை
தாவுவார்புனற்சரயுவெய்தினார். (௧௨௯)

எய்திநூலுளோர்மொழிந்தயாவையும்
செய்துதீக்கலந்திருத்திச்செல்வனை
வெய்தினேற்றினார்வீரநுந்தைபால்
பொய்யின்மாக் ¶ கடன்கழித்திபோந்தென்றார். (௧௩௦)

---

* தன்னையிழந்து வாய்மைகாத்தமையின் 'தன்னைநல்கியத்தருமநல்கினா' னென்றார்.

† ஆழியான்-தெய்வீகமான சக்கரத்தினையுடையவன்.

‡ மாமானம்-பெரியவிமானம். § வெள்ளிப்பாட்டு.

$ தேவிமார்-அறுபதினாயிரவரை. ¶ கடன்-உரிமைச்சடங்கு.

என்னும்வேலையிலெழுந்தவீரனை
அன்னைதீமையாலரசனின்னையும்
துன்னுதுன்பத்தாற்றுறந்துபோயினன்
முன்னரேயெனமுனிவன்கூறினான். (கருக)

துறந்துபோயினனெனவேதோன்றனி
பிறந்துபோரறம்பிழைத்ததென்றல்போல்
இறந்துபோயினனிருந்ததாண்டது
மறந்துவேறொருமைந்தனுங்கொலாம். (கருஉ)

இடிக்கண்வாளராவிடைவதாமெனப்
படிக்கண்வீழ்ந்தகம்பனைக்குநெஞ்சினன்
தடுக்கலாகலாத்துயரந்தன்னுளே
துடிக்கவிம்மிநின்றழுதுசொல்லுவான். (கருரு)

உரைசெய்மன்னன்மற்றுன்னிலென்னில்யார்
இரவிதன்குலத்தெந்தைமுந்தையோர்
* பிரதபூசனைக்குரியபேறிலேன்
அரைசுசெய்யவோவாவதாயினேன். (கரு௪)

பூவினான்முகன்புதல்வனாதியாம்
தாவின்மன்னர்தந்தருமநீதியால்
தேவராயினர்சிறுவனாகியே
† ஆவநான்பிறந்தவத்தனைவா. (கருரு)

துன்னுதாள்வளஞ்சுமந்த ‡ தாழையில்
பன்னுவான்குலைப்பதடியாயினேன்
என்னையென்னையேயீன்றகாத்தவென்
அன்னையாரெனக்கழுகுசெய்தவா. (கருசு)

என்றுகூறிநொந்திடரின்மூழ்குமத்
துன்றுதாரவற்கிளையதோன்றலால்
அன்றுநேர்கடனமைவதாக்கினான்
நின்றுநான்மறைநெறிசெய்நீர்மையான். (கருஎ)

இழையுமாரமுமிடையுமின்னிடக்
குழையுமாமலர்க்கொம்பனார்கடாம்
தழையின்மூண்டகந்தழுவுகானிடை
மழையின்மஞ்ஞைபோலெரியின்மூழ்கினார். (கருஅ)

* பிரதபூசனை-பிரேதசம்ஸ்காரத்தை.
† ஆவவென்றது இரக்கத்தின்கட்குறிப்பு.
‡ தாழை-தெங்கு.

அங்கிநீரினுங்குளிரவம்புயத்
திங்கள்வாண்முகந்திருவிளங்குறச்
சங்கைதீர்ந்து * தங்கணவர்பின்செலும்
நங்கைமார்புகுமுலகநண்ணினார். (௧௩௯)

அனையசெய்கையாலரசர்கோமகற்
கினையதன்மையாலியைவசெய்துபின்
மனையினெய்தினான்மரபின்வாழ்வினை
வினையினெய்துமோர்பிணியின்வேலையான். (௧௪௦)

† ஐந்துமைந்துநாளூழியாமென
மைந்தன்வெந்துயர்க்கடலின்வைகினான்
தந்தைதன்வயிற்றருமம்யாவையும்
முந்துநூலுளோர்முறையின்முற்றினான். (௧௪௧)

முற்றுமுற்றுவித்துதவிமும்மைநூல்
சுற்றம்யாவையுந்தொடரத்தோன்றினான்
வெற்றிமாதவன்வினைமுடித்தவன்
கொற்றவேனெடுங்குமரற்கூடினான். (௧௪௨)

மன்னரின்றியேவையம்வைகரூன்
தொன்மையன்றெனத்துணியுநெஞ்சினார்
அன்னமாநிலத்தறிஞர்தம்மொடும்
முன்னைமந்திரக்கிழவர்முந்தினார். (௧௪௩)

௯-வது, பள்ளியடைப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௯௩௯.

---

## ௧௦ - வது. ஆற்றுப்படலம்.

வான்முறைதெரிந்துணர்மறையின்மாதவத்
தருமறைமுனிவனுமாண்டையானென
விரைவின்வந்தீண்டினர்விரகினெய்தினர்
பரதனைவணங்கினர்பரியுநெஞ்சினர். (௧)

மந்திரக்கிழவருநகரமாந்தரும்
தந்திரத்தலைவருந்தரணிபாலரும்
அந்தரமுனிவரோடறிஞர்யாவரும்
சுந்தரக்குரிசிலைமரபிற்சுற்றினார். (௨)

* தங்கணவர்பின்செலு நங்கைமார்புகுமுலகம் – சககமனமடைந்த மாதரடையும் புண்ணிய உலகம்.

† ஐந்துமைந்துநாள் – தசராத்திரி.

சுற்றினரிருந்துழிச்சுமந்திரப்பெயர்
பொற்றடந்தேர்வலான்புலமையுள்ளத்தான்
கொற்றவற்குறுபொருள்குறித்தகொள்கையான்
முற்றுணர்முனிவனைமுகத்துநோக்கினன். (௫)

* நோக்கினற்சுமந்திரனுவலலுற்றதை
வாக்கினலன்றியேயுணர்ந்தமாதவன்
காக்குதியுலகுநின்கடனதாமெனக்
கோக்குமாரனுக்கதுதெரியக்கூறுவான். (௬)

வேதியருந்தவர்விருத்தர்வேந்தர்கள்
ஆதியர்நின்வயினடைந்தகாரியம்
நீதியுந்தருமமுநிறுவநீயிது
கோதறுகுணத்திறைமனத்துட்கோடியால். (௭)

தருமமென்றொருபொருடந்துநாட்டுதல்
அருமையென்பதுபெரிதறிதியையநீ
† இருமையுந்தருவதற்கியைவதீண்டிது
தெருண்மனத்தார்செயுஞ்செயலிதாகுமால். (௮)

வள்ளுறுவயிரவாளரசில்வையகம்
நள்ளுறுகதிரிலாப்பகலுநாளொடும்
தெள்ளுறுமதியிலாவிரவுந்தேவுடன்
உள்ளுறையுயிரிலாவுடலுமொக்குமே. (௯)

தேவர்தம்முலகினுந்தீமைசெய்துழல்
மாவலியவுணர்கள்வைகுநாட்டினும்
ஏவவையுலகமென்றிசைக்குமன்னவை
காவல்செய்தலைவரையின்மைகண்டிலம். (௧௦)

முறைதெரிந்தொருவகைமுடியநோக்குநின்
மறையவன்வகுத்தனமண்ணில்வானிடை
நிறைபெருந்தன்மையினிற்பசெல்வன
இறைகளையில்லனயாவைகாண்கிலம். (௧௧)

பூத்தநாண்மலரயனுதிப்புண்ணியர்
ஏத்துவான்புகழினரின்றுகாறுங்கூ
காத்தனர்பின்னொருகளைகணின்மையால்
‡ நீத்தநீருடைகலநீரதாகுமால். (௧௨)

---

* நோக்கினல்-குறிப்புப்பார்வையால்.

† இருமை-இம்மைமறுமை.

‡ நீத்தநீருடைகல நீரதென்றது கடலிற்கவிழ்ந்த மரக்கலத் தன்மையை.

உந்தையோவிறந்தனனும்முனீத்தனன்
வந்ததுமன்னைதன்வரத்தின்மைந்தநீ
அந்தமில்பேரரசளித்தியன்னது
சிந்தனையெமக்கெனத்தெரிந்துகூறினான். (கக)

தஞ்சமிவ்வுலகநீதாங்குவாயெனச்
செஞ்சவேமுனிவரன்செப்பக்கேட்டலும்
நஞ்சினை நுகரெனநடுங்குவாரினும்
அஞ்சினனயர்ந்தனனருவிக்கண்ணினான். (கஉ)

நடுங்கினானத்தடுமாறிநாட்டமும்
இடுங்கினன்மகளிரினிரங்குநெஞ்சினன்
ஒடுங்கியவுயிரினனுணர்வுகைதரத்
தொடங்கினனரசவைக்குள்ளஞ்சொல்லுவான். (கங)

மூன்றுலகினுக்குமோர்முதல்வனாய்முதல்
தோன்றினனிருக்கயான்மகுடஞ்சூடுதல்
சான்றவருரைசெயத்தருமமாதலால்
ஈன்றவள்செய்கையினிழுக்குண்டாகுமோ. (கச)

அடைவருங்கொடுமையென்னன்னைசெய்கையை
நடைவருந்தன்மைநீர்நன்றியென்றிரேல்
இடைவருங்காலமீண்டிரண்டுநீத்தது
கடைவருந்நெறிக்கலியினாட்சியோ. (கரு)

வேத்தவையிருந்தநீர்விமலனுந்தியில்
பூத்தவன் * முதலியபுவியுட்டோன்றினார்
மூத்தவரிருக்கவேமுறைமையாணிலம்
காத்தவருளரெனிற்காட்டிக்காண்டிரால். (கசு)

நன்னெறியென்னினுநாணிநானில
இன்னுயிர்ப்பொறைசுமந்திருந்துவாழ்கிலேன்
அன்னவன்றனைக்கொணர்ந்தலங்கன்மாமுடி
தொன்னெறிமுறைமையிற்சூட்டிக்காண்டிரால். (கஎ)

அன்றெனிலவனெடுமரியகானிடை
நின்றினிதிருந்தவநெறியினாற்றுவென்
ஒன்றினியுரைப்பினென்னுயிரைநீக்குவென்
என்றனனென்றபோதிருந்தபேரவை. (கஅ)

ஆன்றபேரரசனுமிருப்பவையனும்
என்றனன்மணிமுடியேந்தல்வேந்தநீ

* முதலுதல்-சிருஷ்டியில் முற்பட்டுநிற்றல்.

வான்றொடர்திருவினைமறுத்திமன்னிளந்
தோன்றல்கள்யாருளர்நின்னிற்றோன்றினார். (௧௯)

ஆழியையுருட்டியுமறங்கள்போற்றியும்
வேள்வியையியற்றியும்வளர்க்கவேண்டுமோ
எழினோடேழெனுமுலகுமெஞ்சினும்
வாழியநின்புகழென்றுவாழ்த்தினார். (௨௦)

குரிசிலுந்தம்பியைக்கூவிக்கொண்டவின்
முரசறைந்திந்நகர்முறைமைவேந்தனைத்
தருதுமீண்டென்பதுசாற்றித்தானையை
விரைவினிலெழுகெனவிளம்புவாயென்றான். (௨௧)

நல்லவனுரைசெய * நம்பிகூறலும்
அல்லலிலழுங்கியவன்பின்மாநகர்
ஒல்லெனவிரைத்ததாலுயிரிலயாக்கையைச
சொல்லெனுமமிர்தினாற் † றுளிர்ந்ததென்னவே. (௨௨)

அவிந்தவைம்புலத்தவராதியாயுளப்
புவித்தலையுயிரெலாமிராமன்பொன்முடி
கவிக்குமென்றுரைக்கவேகளித்ததாலது
செவிப்புலநுகர்வதோர்தெய்வத்தேன்கொலாம். (௨௩)

படுமுரசறைந்தனர்பரதன்றம்முனைக்
கொடிநகர்தருமவற்கொணரசேனையை
முடுகுகவென்றசொன்மூரிமாநகர்
உடுபதிவேலையினுதயம்போன்றதே. (௨௪)

எழுந்ததுபெரும்படையேழுவேலையின்
மொழிந்தபேரூழியின்முழங்கிமுந் ‡ தெழ
அழிந்ததுகேகயன்மடந்தையாசைபோய்க்
கழிந்ததுதுயர்நெடுங்காதறாண்டவே. (௨௫)

பண்ணினபகடுதேர்புரவிபண்டியும்
மண்ணினைமறைத்தனவளர்ந்தமாக்கொடி
விண்ணினைமறைத்தனவிரிந்தமாத்துகள்
கண்ணினைமறைத்தனகமலத்தோனையே. (௨௬)

ஈசனிவ்வுலகினையழிக்குநாளெழும்
ஓசையினிமிர்ந்துளதொல்லென்பேரொலி

---

* நம்பி ஈண்டு-சத்துருக்கனை.

† துளித்தல் ஈண்டு உயிர்பெற்றுக் கண்ணீர்வார்தல்-துளிர்த்ததென்னும் கிராம்மியமொழி துளித்ததெனநின்றது. துளிர்த்தல் — உயிர்பெறுதல்.

காசையில்கரியவற்காணமூண்டெழும்
ஆசையினிமிர்ந்த * தவ்வனிகராசியே. (௨௭)

படியொடுதிருநகர்துறந்துபன்மரம்
செடியொடுகொடுவனநோக்கிச்சீதையாம்
கொடியொடுநடந்தவக்கொண்டலாமெனப்
பிடியொடுநடந்தனபெருங்கைவேழமே. (௨௮)

சேற்றிளமரைமலர்சிறந்தவாமெனக்
காற்றளம்பொலிதருகன்னிமாரொடும்
ஏற்றிளம்பிடிக்குலமிகலிலின்னடை
தோற்றிளமகளிரைச்சுமப்பபோன்றவே. (௨௯)

வேதனைவெயிற்கதிர்தணிக்கமென்மழைச்
சீதநீர்கொடுநெடுங்கொடியுஞ்சென்றன
கோதைவெஞ்சிலையவன்கோலங்காண்கிலா
மாதரினுடங்குவவரம்பில்கோடியே. (௩0)

வெண்மதிநீச்செலமேகமூர்ந்தென
அண்ணல்வெங்கதிரவனளவின்மூர்த்தியாய்
மண்ணிடையிழிந்தொருவழிக்கொண்டாலென
எண்ணருமன்னவர்களிற்றினேகினார். (௩௧)

தேர்மிசைச்சென்றதோர்சிந்துசெம்முகக்
கார்மிசைக்கழிந்ததார்கலியொர்கார்க்கடல்
ஏர்மிசையிவுளிமேலேகிற்றெங்கணும்
பார்மிசைப்படர்ந்ததுபதாதிப்பௌவமே. (௩௨)

தாரையுஞ்சங்கமுந்தாளங்கொம்பொடு
வார்மிசைப்பம்பையுந்துடியுமற்றவும்
பேரியுமியம்பலசென்றபேதைமைப்
பூரியர்குழாத்திடையறிஞர்போலவே. (௩௩)

தாவருநாண்முதலணியலாற்றகை
மேவருகலங்களைவெறுத்தமேனியர்
தேவருமருள்கொளத்தெரியுங்காட்சியர்
பூவுதிர்கொம்பெனமகளிர்போயினார். (௩௪)

அதிர்கடல்வையகமனைத்துங்காத்தவன்
† விதிவருந்தனிக்குடைபீதிலாப்படை

---

* அவ்வனிகராசி — அந்தச்சேனையின் பிரிவுகள். அவையாவன,— இரதம், கசம், துரகம் பதாதி என்பனவாகிய இவைகள். † விதிவரும் தனிக்குடை — சூரியவங்கிசத்து முதலரசன் காலந்தொட்டு பட்டாபிஷேகவரசர் தலைமீது பிடிக்கப்பட்டுவருகிற ஒப்பற்றகுடை அது வேதமந்திரவழியாய் புனிதப்படுத்தப்பட்ட இயல்பினை யுடையதாகலின் அதற்கு விதிவருமென்ற சிறப்படை கொடுத்தனர்.

பொதிபலகவிகைமீன்பூத்ததாகிலும்
கதிர்மதிநீங்கியகங்குல்போன்றதே. (௩௫)

செல்லியசெலவினாற்சிறியதிக்கெனச்
சொல்லியசேனையைச்சுமந்ததேயெனில்
* ஒல்லியல்வேலைநீருடுத்தபாரையோர்
மெல்லியலென்றவர்மெலியரேகொலாம். (௩௬)

தங்குசெஞ்சாந்தகில்கலவைசார்கில
குங்குமங்கொட்டிலகோவைமுத்தில
பொங்கிளங்கொங்கைகள்புதுமைவேறில
தெங்கிளநீரெனத்தெரிந்தகாட்சியே. (௩௭)

இன்றுணையவர்முலையெழுதுசாந்தினம்
மன்றலந்தாரினுமறைந்திலாமையால்
துன்றிளங்கொடிமுகிற்றூசுநீங்கிய
குன்றெனப்பொலிந்தனகுவவுத்தோள்களே. (௩௮)

நறையறுகோதையர்நாட்செய்கோலத்தின்
துறையறவஞ்சனத்துறந்தநாட்டங்கள்
குறையறநிகர்த்தனகொற்றமுற்றவான்
கறையறக்கழுவிய † காலவேலையே. (௩௯)

விரிமணிமேகலைவிரவியார்க்கில
தெரிவையரல்குருரொலியிறேறெனப்
பரிபுரமார்க்கிலாப்பவளச்சீறடி
அரியினமார்க்கிலாக்கமலமன்னவே. (௪0)

மல்கியகேகயன்மடந்தைவாசகம்
நல்கியதரிவையர்நடுவிற்கேகொலாம்
புல்கியமலர்வடம்பூண்கிலாமையால்
ஒல்கியவொருவகைபொறையுயிர்க்கவே. (௪௧)

கோமகன்பிரிதலிற்கோலநீத்துள
தாமரைச்செல்வியுந்தவத்தைமேவினள்
காமனுமருந்துயர்க்கடலின்மூழ்கினன்
ஆமெனநிகழ்ந்ததவ்வளவில்சேனையே. (௪௨)

மண்ணையும்வானையும்வயங்குதிக்கையும்
உண்ணியவிமிர்கடலொக்குமென்பதென்

* ஒல்லியல்வேலைநீர் — ஒலியையியல்பாகவுடைய கடல்.
† காலவேலை — காலன்போன்ற வேலினை.

கண்ணினுமனத்தினுங்கமலத்தண்ணறன்
எண்ணினுநெடிதவணெழுந்தசேனையே. (௪௩)

அலைநெடும்புனலறக்குடித்தலாலகம்
நிலைபெறநிலைநெறிநிறுத்தலானெடு
மலைகளைமண்ணுறவழுத்தலாற் * றமிழ்த்
தலைவனைநிகர்த்ததத்தயங்குதானையே. (௪௪)

அருநருஞ்சிறிஞருமாதியந்தமாச்
செறிபெருந்தானையுந்திருவுங்கலால்
† குறியவன்புனலெலாம்வயிற்றிற்கொண்டநாள்
மறிகடலொத்ததவ்வயோத்திமாநகர். (௪௫)

பெருந்திரைநதிகளும்வயலும்பெட்புறு
மரங்களுமலைகளுமண்ணுங்கண்ணுறத்
திருந்தலிலயோத்தியாந்தெய்வமாநகர்
அருந்தெருவொத்ததப்படைசெல்லாறரோ. (௪௬)

தார்கடாங்கோதைதாந்தாயந்தாந்தகை
ஏர்கடாங்கலவைதாங்கமழ்ந்தின்றென்பரால்
கார்கடாமெனமிகக்கடுத்தகைம்மலை
வார்கடாமல்லதம்மன்னன்சேனையே. (௪௭)

ஆளுலாங்கடலினுமகன்றவக்கடல்
தோளுலாங்குண்டலமுதலதொல்லணி
கேளுலாமின்னொளிகிளர்ந்ததில்லையால்
வாளுலாநுதலியர்மருங்குல்போலவே. (௪௮)

மத்தளமுதலியவயங்குபல்லியம்
ஒத்தனசேறலினுரையிலாமையில்
சித்திரச்சுவர்நெடுஞ்சேனைநீட்டிய
பத்தியைநிகர்த்ததப்படையினீட்டமே. (௪௯)

ஏடறுகோதையர்விழியினெய்தகோல்
ஊடுறவுரந்தொளைத்துயிருணவகை
ஆடவர்க்கரும்பெருங்கவசமாயது
காடுறைவாழ்க்கையக்கண்ணனண்ணவே. (௫௰)

கனங்குழைக்கைகயன்மகளிற்கண்ணிய
சினங்கிடந்தெரிதலிற்றீய்ந்தவேகொலாம்
அனங்கனைங்கொடுங்கணைகடந்தவாடவர்
மனங்கிடந்துண்கிலமகளிர்கொங்கையே. (௫௧)

---

* தமிழ்த்தலைவன் - அகத்தியமுனிவன்.
† குறியவன் - குறுமுனியென்னுந்துணையாய்நின்றது.

இன்னணநெடும்படையேகவேந்தனும்
தன்னுடைத்திருவரைச்சீரைசாத்தினன்
பின்னிளையவனொடும்பிறந்ததுன்பொடும்
நன்னெடுந்தேர்மிசைநடத்தன்மேயினன். (௫௨)

தாயருமருந்தவத்தவருந்தந்தையின்
ஆயமந்திரியருமளவில்சுற்றமும்
தூயவந்தணர்களுந்தொடர்ந்துசூழ்வரப்
போயினன்றிருநகர்ப்புரிசைவாயிலே. (௫௩)

மந்தரைக்கூற்றமும்வழிச்செல்வாரொடும்
உந்தியேபோதல்கண்டிளவலோடியார்த்
தந்தரத்தெற்றுவானமூன்றுபற்றலும்
சுந்தரத்தோளவன்விலக்கிச்சொல்லுவான். (௫௪)

முன்னையர்முறைகெடமுடித்தபாவியைச்
சின்னபின்னஞ்செய்தென்சினத்தைத்தீர்வெனேல்
என்னையின்றன்னையென்றுரைக்குமென்றலால்
அன்னையென்றுணர்ந்திலெனையநானென்றான். (௫௫)

ஆதலான்முனியுமென்றையனந்தமில்
வேதனைக்கூனியை * வெகுண்டுமென்னினும்
கோதிலாவருமறைகுலவுநூல்வலாய்
போதுநாமென்றுகொண்டரிதிற்போயினன். (௫௬)

மொய்பெருஞ்சேனையுமூரிஞாலமும்
கய்கலந்தயலொருகடலிற்சுற்றிட
அய்யனுந்தேவியுமிளையவாளியும்
வய்கியசோலையிற்றானும்வைகினன். (௫௭)

அல்லணைநெடுங்கணீரருவியாடினன்
கல்லணைகிழங்கொடுகனியுமுண்டிலன்
வில்லணைத்துயர்ந்ததோள்வீரன்வைகிய
புல்லணைமருங்கிற்றன்பொடியின்வைகினன். (௫௮)

ஆண்டுநின் † றண்டகையடியினேகினன்
ஈண்டியநெறியெனத்தானுமேகினன்
தூண்டிடுதேர்களுந்துரகராசியும்
காண்டகுகரிகளுந்தொடரக்காலினே. (௫௯)

௧௦ - வது, ஆற்றுப்படலம் - முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௬௬௮.

---

* வெகுண்டும் — டும்மீற்றுத்தன்மைப்பன்மை.
† புருடோத்தமனென்னும் பெயர்பற்றி ஆண்டகையென்றார்.

# ௧௧-வது, குகப்படலம்.



பூவிரிபொலன்கழற்புனைவிறானையான்
காவிரிநாடன்னகழனிநாடொரீஇத்
தாவரசங்கமமென்னுந்தன்மைய
யாவையுமிரங்கிடக்கங்கையெய்தினான். (௧)

எண்ணருஞ்சுரும்புதம்மினத்துக்கல்லது
கண்ணகன்பெரும்புனற்கங்கையெங்கணும்
அண்ணல்வெங்கரிமதத்தருவிபாய்தலால்
* உண்ணவுங்குடையவுமுரித்தன்றாயதே. (௨)

அடிமிசைத்தூளிபுக்கடைந்ததேவர்தம்
முடியுறப்புலர்ந்ததோர்முறைமைதேர்ந்திலன்
நெடிதுயிர்த்துண்டவுநீந்துகின்றவும்
பொடிமிசைப்புரண்டவும்புரவியீட்டமே. (௩)

பாலையேய்நிறத்தொடுபண்டுதான்படர்
† ஓலையேய்நெடுங்கடலோடிற்றில்லையால்
மாலையேய்நெடுமுடிமன்னன்சேனையாம்
வேலையேமடுத்ததக்கங்கைவெள்ளமே. (௪)

கான்றலைநண்ணியகாளைபின்படர்
தோன்றலையவ்வழிதொடர்ந்துசென்றன
ஆன்றவருணர்த்தியவக்குரோணிகள்
மூன்றுபத்தாயிரத்திரட்டிமுற்றுமே. (௫)

அப்படைகங்கையையடைந்தவாயிடைத்
துப்புடைக்கடலினீர்சுமந்தமேகத்தை
ஒப்புடையண்ணலோடுடற்றவேகொலாம்
இப்படையெடுத்ததென்றெடுத்தசீற்றத்தான். (௬)

குகனெனப்பெயரியகூற்றினாற்றலான்
தொகைமுரட்சேனையைத்துகளினாக்குவான்
நகைமிகக்கண்கடீநாறநாசியில்
புகையுறக்குனிப்புறும்புருவப்போர்விலான். (௭)

மையுறவுயிரெலாமிறுதிவாங்குவான்
கையுறுகவரயில்பிடித்தகாலன்றான்

---

* யானையின்மதத்தை வண்டுகளல்லாமல் மற்றையுயிர்கள் பருகுதலில்லாமையால் உண்ணவுங்குடையவு முரித்தன்றாயது என்றார்.

† ஓலையேய் — ஒலிமிகுந்த.

ஐயைநூறாயிரமுருவமாயின
மெய்யுறுதானையான்வில்லின்கல்வியான். (௮)

கட்டியசுரிகையன்கடித்தவாயினன்
வெட்டியமொழியினன்விழிக்கட்டீயினன்
கொட்டியதுடியினன்குறிக்கும்கொம்பினன்
கிட்டியதமரெனக்கிளர்ந்ததோளினான். (௯)

எலியெலாமிப்படையரவம்யாமென
ஒலியுலாஞ்சேனையையுவந்துகூயினான்
வலியுலாமுலகினில்வாழும்வள்ளுகிர்ப்
புலியெலாமொருவழிபுகுந்தபோலவே. (௧௦)

மருங்கடைதென்கரைவந்துதோன்றினான்
ஒருங்கடைநெடும்படையொல்லெனார்ப்பினோ
டருங்கடையுகந்தனிலசனிமாமழை
கருங்கடல்கிளர்ந்தெனக்கலந்துசூழவே. (௧௧)

தோன்றினபுளிஞரைநோக்கிச்சூழ்ச்சியின்
ஊன்றியசேனையையும்பரேற்றுதற்
கேன்றனெனென்னுயிர்த்துணைவற்கீகுவான்
ஆன்றபேரரசுநீரமைதிராமென்றான். (௧௨)

துடியெறிநெறிகளுந்துறையுஞ்சுற்றுற
ஒடியெறியம்பிகள்யாதுமோட்டலிர்
கடியெறிகங்கையின்கரைவந்தோர்களைப்
பிடியெறிபடவெனுப்பெயர்த்துங்கூறுவான். (௧௩)

வேறு.

அஞ்சனவண்ணனென்னாருயிர்நாயகனாளாமே
வஞ்சனையாலரசெய்திய * மன்னரும்வந்தாரே
செஞ்சரமென்பனதீயுமிழ்கின்றனசெல்லாவோ
உஞ்சிவர்போய்விடினாய்க்குகனென்றெனையோதாரோ. (௧௪)

ஆழநெடுந்திரையாறுகடந்திவர்போவாரோ
வேழநெடும்படைகண்டுவிலங்கிடும்வில்லாளோ
தோழமையென்றவர்சொல்லியசொல்லொருசொல்லன்றோ
ஏழமைவேடனிறந்திலனென்றெனையேசாரோ. (௧௫)

முன்னவனென்றுநினைந்திலன்மொய்புலியன்னானோர்
† பின்னவனின்றனனென்றிலனன்னவைபேசானேல்

* மன்னருமென இழித்தலாற்பன்மையிற்கூறினார்.
† பின்னவன் — பரதன்.

என்னிவனென்னையிகழ்ந்ததிவ்வெல்லைகடந்தன்றோ
மன்னவர்நெஞ்சினில்வேடர்விடுஞ்சரம்வாயாவோ. (௧௬)

பாவமுநின்றபெரும்பழியும்பகைநண்போடும்
ஏவமுமென்பவைமண்ணுலகாள்பவரெண்ணாரோ
ஆவதுபோகவென்னாருயிர்த்தோழமைதந்தான்மேல்
போவதுசேனையுமாருயிருங்கொடுபோயன்றோ. (௧௭)

அருந்தவமென் * றுணையாளவிவன்புவியாள்வானோ
மருந்தெனினன்றுயிர்வண்புகழ்கொண்டுபின்மாயேனோ
பொருந்தியகேண்மையுகந்தவர்தம்மொடுபோகாதே
இருந்ததுநன்றுகழிக்குவெனென்கடனின்றோடே. (௧௮)

தும்பியுமாவுமிடைந்தபெரும்படைசூழ்வாரும்
வம்பியராரிவர்வாள்வலிகங்கைகடந்தன்றோ
வெம்பியவேடருளீர்துறையோடம் † விலக்கீரோ
நம்பிமுன்னேயினிநம்முயிர்மாய்வதுநன்றன்றோ. (௧௯)

போனபடைத்தலைவீரர்தமக்கிரைபோதாவிச்
சேனை ‡ கிடக்கிடுதேவர்வரிற்றிலைமாமேகம்
$ சோனைபடக்குடர்சூறைபடச்சுடர்வாளோடும்
தானைபடத்தனியானைபடத்திரள்சாயேனோ. (௨௦)

நின்றகொடைக்கையென்னன்பனுடுக்கநெடுஞ்சீரம்
அன்றுகொடுத்தவண்மைத்தர்பலத்தையென்னம்பாலே
கொன்றுகுவித்தபிணங்கொள்பிணக்குவைகொண்டோடித்
துன்றுதிரைக்கடல்கங்கைமடுத்திடைதூராதோ. (௨௧)

ஆடுகொடிப்படைசாடியறத்தவரேயாள
¶ வேடுகொடுத்ததுபாரெனுமிப்புகழ்மேவீரோ
நாடுகொடுத்தவென்னாயகனுக்கிவர்நாமாளும்
காடுகொடுக்கிலராகியெடுத்ததுகாணீரோ. (௨௨)

மாமுனிவர்க்குறவாகிவனத்திடையேவாழும்
§ கோமுனியத்தகுமென்றுமனத்திறைகொள்ளாதே
ஏமுனையுற்றிடலேழுகடற்படையென்றாலும்
ஆமுனையிற்சிறுகூழனவிப்பொழுதாகாதோ. (௨௩)

என்பனசொல்லியிரும்பனமேனியரேனோர்முன்
வன்பணைவில்லினன்மல்லுயர்தோளினன்வாள்வீரற்

---

* துணை-ஸ்ரீராமன். † விலக்கீர்-முன்னிலைப் பன்மையுடன் பாட்டேவல் வினைமுற்று. ‡ இடக்கிடு என்றது திசைச்சொல். $ சோனை-விடாமற்சிந்து மழைத்துளி.

¶ வேடு — சொல்லானஃறிணை. § கோ — இறைவன்.

கன்பனுநின் றனனின் றதுகண் டரியே றன்னா
முன்பனில்வந் துமொழிந்தனன் சூரியதேர்வல்லான். (உ௪)

வே று.

* கங்கையிருகரையுடையான் கணக்கிறந்தநாவாயான்
உங்கள்குலத்தனிநாதற்குயிர்த்துணைவனுயர்தோளான்
வெங்கரியினேறனையான் விற்பிடித்தவேலையினான்
கொங்கலருநறுந்தண்டார்க்குகனென்னுங்குறியுடையான். (உ௫)

கற்காணுந்திண்மையான் கரைகாணக்காதலான்
அற்காணிற்கண்டனையவழகமைந்தமேனியான்
மற்காணுந்திருநெடுந்தோண்மழைகாணுமணிநிறத்தாய்
நிற்காணுமுள்ளத்தானெறியெதிர்நின்றனனென்றான். (உ௬)

தன்முன்னேயவன்றன்மைதன்றுணைவன்மூந்துரைத்த
சொன்முன்னேயுவக்கின்றதுருசிலாத்திருமனத்தான்
மன்முன்னேதழீஇக்கொண்டமனக்கினியதுணைவனேல்
என்முன்னேயவற்காண்பென்யானேசென்றெனவெழுந்தான். (உ௭)

என்றெழுந்ததம்பியொடுமெழுகின்றகாதலொடும்
குன்றெழுந்துசென்றதெனக்குளிர்கங்கைக்கரைகுறுகி
நின்றவனைநோக்கினான் திருமேனிநிலையுணர்ந்தான்
துன்றுகருநறுங்குஞ்சியெயினர்கோன்றுண்ணென்றான். (உ௮)

வற்கலையினுடையானைமாசடைந்தமெய்யானை
நற்கலையின்மதியென்னநகையிழந்தமுகத்தானைக்
கற்கனியக்கனிகின்றதுயரானைக்கண்ணுற்றான்
விற்கையினின்றிடைவீழவிம்முற்றுநின்றொழிந்தான். (உ௯)

நம்பியுமென்னாயகனையொக்கின்றானயனின்றான்
தம்பியையுமொக்கின்றான்றவவேடந்தலைநின்றான்
துன்பமொருமுடிவில்லைத்திசைநோக்கித்தொழுகின்றான்
எம்பெருமான்பின்பிறந்தாரிழைப்பரோபிழைப்பென்றான். (௩0)

உண்டிடுக்கணொன்றுடையானுலையாதவன்புடையான்
கொண்டதவவேடமேகொண்டிருந்தான்குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்துபெயர்கின்றேன்காமின்கணெறியென்னாத்
தண்டுறையோர்நாவாயிலொருதனியேதான்வந்தான். (௩௧)

வந்தெதிரே † தொழுதானைவணங்கினான்மலரிருந்த
அந்தணனுந்தனைவணங்குமவனுமவனடிவீழ்ந்தான்

* ஏற்றுதலும் இறக்குதலும் — உடைமைப்பற்றிக் கங்கையிருகரை யுடையான் என்றார்.

† தொழுதானை — வணங்கிய குகனை.

தந்தையினுங்களிகூரத்தழுவினன்றகவுடையோர்
சிந்தையினுஞ்சென்னியினும்வீற்றிருக்குஞ் * சீர்த்தியான். (௩௨)

வேறு.

தழுவினபுளினர்வேந்தன்றாமரைச்செங்கணானை
எழுவினுமுயர்ந்ததோளாயெய்தியதென்னையென்ன
முழுதுலகளித்ததந்தைமுந்தையோர்முறையினின்றும்
வழுவினனதனைநீக்கமன்னனைக்கொணர்வானென்றான். (௩௩)

கேட்டனன்கிராதர்வேந்தன்கிளர்ந்தெழுமுயிர்ப்பனாகி
மீட்டுமண்ணதனில்வீழ்ந்தான்விம்மினனுவகைவீங்கத்
தீட்டருமேனிமைந்தன்சேவடிக்கமலப்பூவில்
பூட்டியகையன்பொய்யில்லுள்ளத்தன்புகலலுற்றான். (௩௪)

தாயுரைகொண்டுதாதையுதவியதரணிதன்னைத்
தீய்வினையென்னநீத்துச்சிந்தனைமுகத்திற்றேக்கிப்
போயினையென்றபோழ்துபுகழினோய்தன்மைகண்டால்
ஆயிரமிராமர்நின்கேளாவரோதெரியினம்மா. (௩௫)

என்புகழ்கின்றதேழைமையெயினனேனிரவியென்பான்
தன்புகழ்க்கற்றை † மற்றையொளிகளைத்தவிர்க்குமாபோல்
மன்புகழ்பெருமைநுங்கண்மரபினோர்புகழ்களெல்லாம்
உன்புகழாக்கிக்கொண்டாயுயர்குணத்துரவுத்தோளாய். (௩௬)

எனவிவையின்னமாற்றமியைவனபலவுங்கூறிப்
புனைகழற்புலவுவேற்கைப்புளிஞர்கோன்பொருவில்காதல்
அனையவற்கமைவிற்செய்தானாவற்கன்பிலாதார்
நினைவருங்குணங்கொடன்றோவிராமன்மேனிமிர்ந்தகாதல். (௩௭)

அவ்வழியவனைநோக்கியருடருவாரியன்ன
செவ்வழியுள்ளத்தண்ணறென்றிசைச்செங்கைகூப்பி
எவ்வழியுறைந்தானம்முன்னென்றலுமெயினர்வேந்தன்
இவ்வழிவீரயானேகாட்டுவலெழுகவென்றான். (௩௮)

காரெனக்கடிதுசென்றான்கல்லிடைப்படுத்தபுல்லின்
வார்சிலைத்தடக்கைவள்ளல்வைகியபள்ளிகண்டான்
பார்மிசைப்பதைத்துவீழ்ந்தான்பருவரற்பரவைபுக்கான்
வார் ‡ மணிப்புனலான்மண்ணைமண்ணுநீராட்டுங்கண்ணான். (௩௯)

இயன்றதென்பொருட்டினாலிவ்விடருனக்கென்றபோழ்தும்
அயின்றனைகிழங்குங்காயுமமிர்தெனவரியபுல்லில்

---

* சீர்த்தியான்-பரதன்.

† மற்றையொளிகள் — திங்கண்முதலியவற்றை.

‡ மணிப்புனல் — வற்றாதநீர் எனப் பரிமேலழகர் உரையிற்காண்க.

துயின்றனையெனவுமாவிதுறந்திலென்சுடருங்காசு
குயின்றுயர்மகுடஞ்சூடுஞ்செல்வமுங்கொள்வென்யானே. (௪௦)

ஆண்டாரிவந்ததோளான்பின்னருஞ்சொல்லுவானந்
நீண்டவன்றுயின்றசூழலிதுவெனினிமிர்ந்தநேயம்
பூண்டவன்றொடர்ந்துபின்னேபோந்தவன்பொழுதுநீத்த
தியாண்டெனவினிதுகேட்டானெயினர்கோனிதனைச்சொன்னான். (௪௧)

அல்லையாண்டமைந்தமேனியழகனுமவளுந்துஞ்ச
வில்லையூன்றியகையோடும்வெய்துயிர்ப்போடும்வீரன்
கல்லையாண்டுயர்ந்ததோளாய்கண்கணீர்சொரியக்கங்குல்
எல்லைகாண்பளவுநின்றானிமைப்பிலனயனமென்றான். (௪௨)

என்பதைக்கேட்டமைந்தனிராமனுக்கிளையாரென்று
முன்பொத்ததோற்றத்தேமில்யானென்றுமுடிவிலாத
துன்பத்துக்கேதுவானேனவனதுதுடைக்கின்றான்
அன்பத்துக்கெல்லையுண்டேயழகிதென்னடிமையென்றான். (௪௩)

அவ்விடையண்ணறானுமன்றரும்பொடியின்வைகித்
தெவ்விடைதரகின்றார்க்குஞ்செறிகழற்புளிஞர்கோமான்
இவ்விடைக்கங்கையாற்றினேற்றினையாயினெம்மை
வெவ்விடர்க்கடனின்றேற்றிவேந்தன்பால்விடுத்துதென்றான். (௪௪)

நன்றெனப்புளிஞர்வேந்தனண்ணினன்றமரைநாவாய்
சென்றினித்தருதிரென்னவந்தனசிவன்சேர் * வெள்ளிக்
குன்றெனக்குனிக்கு † மம்பொற்குவடெனக் § குபேரன்மானம்
ஒன்றெனநாணிப்பல்வேறுருவுகொண்டனையவான. (௪௫)

நங்கையர்நடையினன்னநாணுறுசெலவினவாய்
கங்கையுமிடமிலாமைமிடைந்தனகலந்தவெங்கும்
அங்கொடிங்கிழித்தியேற்றுமமைதியினமரர்வையத்
திங்கொடங்கிழித்தியேற்றுமிருவினையென்னலான. (௪௬)

வந்தனவரம்பினாவாய்வரிசிலைக்குரிசின்மைந்த
சிந்தனையாவதென்றுசிருங்கிபேரியர்கோன்செப்பச்
சுந்தரவரிவிலானுஞ்சுமந்திரன்றன்னைநோக்கி
எந்தையித்தானைதன்னையேற்றுதிவிரைவினென்றான். (௪௭)

குரிசிலதேவலாலக்குரகதத்தேர்வலானும்
வரிசையின்வழாமைநோக்கிமரபுளிவகையினேற்றக்

---

* வெள்ளிக்குன்றம் — கயிலை.

† அம்பொற்குவடு — சுவணமேரு.

§ குபேரன்மானம் — குபேரனது புட்பகவிமானம்.

கரிபரியிரதங்காலாள்கணக்கறுகரையில்வேலை
எரிமணிதிரையின்வீசுங்கங்கையாறேறிற்றன்றே. (சஅ)

இடிபடுமுழக்கம்பொங்கவினமழை * மகரநீரை
முடிவுறமுகப்பவூழியிறுதியின்மொய்ப்பபோலக்
கொடியொடுவங்கம்வேலைகூடும்பொடுபடர்வபோல
வொடியகையெடுத்துநீட்டிநீந்தினநெடுங்கைவேழம். (சகூ)

சங்கமுமகரமீனுந்தரளமுமணியுந்தள்ளி
வங்கநீர்க்கடலும்வந்துதன்வழிப்படரமாணப்
பொங்குவெங்களிறுநூக்கக்கரையொரீஇப்போயிற்றம்மா
கங்கையுமிராமற்காணுங்காதலதென்னமாதோ. (ருo)

கொடிஞ்சொடுதட்டுமச்சுமாழியுங்கோத்தமொட்டும்
நெடுஞ்சுவர்கொடியும்யாவுநெறிவருமுறையினீக்கி
விடுஞ்சுவற்புரவியோடும்வேறுவேறேற்றிச்சென்ற
மடிஞ்சபினுடம்புகூட்டும்வினையெனவயிரத்தேர்கள். (ருக)

நாலிரண்டாயகோடிநவையிறுவாய்கண்மீதா
சேறிரண்டனையவாய † கதியொடுநதியிற்சென்ற
பாறிரண்டனையமெய்யபயந்திரண்டனையநெஞ்ச
காறிரண்டனையகாலகடுநடைக்கலினப்பாய்மா. (ருஉ)

ஊடுறநெருக்கியோடத்தொருவர்முன்னொருவர்கிட்டிச்
‡ சூடகத்தளிர்க்கைமாதர்குழுமினர்துவன்றித்தோன்றப்
பாடியல்களிநல்யானைப்பந்தியங்கடையிற்குத்தக்
கோடுகண்டிடைந்தவென்னமிடைந்தனகுவவுக்கொங்கை. (ருங)

பாங்கினுத்தரியமானப்படர்திரைதவழப்பாரின்
வீங்குநீரழுவந்தன்னுள்விழுமதக்கலுழிவெள்ளத்
தோங்கல்கடலைகடோன்றவொளித்தவணுயர்ந்தகும்பம்
பூங்குழற்கங்கைநங்கைமுலையெனப்பொலிந்தமாதோ. (ருச)

பொலன்குழைமகளிர்நாவாய்ப்போக்கினென்றொன்றுதாக்க
மலங்கினரிரண்டுபாலுமறுகினர்வெருவிநோக்க
அலங்குநீர்வெள்ளந்தள்ளியழிதரவங்குமிங்கும்
கலங்கலின்வெருவிப்பாயுங்கயற்குலநிகர்த்தகண்கள். (ருரு)

இயல்வுறுசெலவினாவாயிருகையுமெயினர்தூண்டத்
துயல்வனதுடுப்புவீசுந்துவலைகண்மகளிர்மென்று

---

* மகரநீர் — கடல்.

† கதி — மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி இயல்பாயுள்ளன.

‡ சூடகம் — வளையலில் ஒருவகை.

சயல்வுறுபரவையல்குலொளிப்புறத்தளிர்ப்பவுள்ளத்
தயர்வுறுமதுகைமைந்தர்க்கயர்வுயிர்ப்பளித்ததம்மா. (௫௬)

இக்கரையிரைத்தசேனையெறிகடன்முகந்துவெஃகி
அக்கரையடையவீசிவறியனவணுகுநாவாய்
புக்கலையாழிநன்னீர்பொறுத்தனபோக்கிப்போக்கி
அக்கணத்துவரிமீளுமகன்மழைநிகர்த்தவம்மா. (௫௭)

அகிலிடுதூபமன்னவாய்மயிற்பீலியார்த்த
முகுளிடுமுரண்மாத்தண்டுகூம்பெனமுகிலின்வண்ணத்
துகிலொடுதொடுத்தசெம்பொற்றகட்டிடைத்தொடுத்தமுத்தம்
நகுகொடிநெடியபாயி * னவ்வெனச்சென்றநாவாய். (௫௮)

ஆனனங்கமலத்தன்னமின்னன்னவமிர்தச்செவ்வாய்த்
தேனனைகுழலாரேறுமம்பிகள்சிந்துமுத்தம்
மீனெனவிரிந்தகங்கைவிண்ணெனப்பண்ணைமுற்றி
வானவர்மகளிருருமானமேநிகர்த்தமாதோ (௫௯)

துளிபடத்துழாவுதிண்கோற்றுடுப்பிருகாலிற்றோன்ற
நளிர்புனற்கங்கையாற்றிடந்தெனச்செல்லுநாவாய்
களியுடைமஞ்ஞையன்னகனங்குழைகயற்கண்மாதர்
ஒளிரடிக்கமலந்தீண்டவுயிர்படைத்தனவேயொத்த. (௬௦)

மய்யறவிசும்பின்மண்ணின் † மற்றுமோருலகின்முற்றும்
மெய்வினைதவமேயன்றிமேலுமொன்றுளதோகேழோர்
செய்வினைநாவாயேறித்தீண்டலர்மனத்திற்செல்லும்
‡ மொய்விசும்போடமாகத்தேவரின்முனிவர்போனார். (௬௧)

வேறு.

அறுபதினாயிரமக்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமெல்லைதீர்நகர்
மறுவறுமாக்களுமகளிர்வெள்ளமும்
செறிதிரைக்கங்கைபின்கிடக்கச்சென்றவே. (௬௨)

சுழித்துநீர்வருதுறையாற்றைச்சூழ்படை
கழித்துநீங்கியதெனக்கள்ளவாசையை
அழித்துவேறவனி § பண்டாண்டவேந்தரை
இழித்துமேலேறினன்றனுமேறினன். (௬௩)

* நவ் – மரக்கலம். இதுவடசொல் – நாவாய் வடசொற்றிரிபு.

† மற்றுமோருலகு சுண்டுபோதலத்தை.

‡ நினைத்தமாத்திரையிற் சேறலின் மனத்திற்செல்லு மொய்விசும் போடமாக என்றார்.

§ தன்புகழான் யாவரையும் வென்றவனாகலின் பண்டாண்ட வேந் தரையிழித்து மேலேறினனென்றார்.

தன்னனை தம்பியுந்தாயர்மூவரும்
சொன்னதேர்வலவனுந்தூயதோழனும்
துன்னினரேறலுந்துழாதுடுப்பெனும்
நன்னயக்காலினுனடத்தன்மேயினன். (௬௭)

வேறு.

சுற்றத்தார்தேவரொடுந்தொழநின்றகோசலையைத்தொழுதுநோக்கிக்
கொற்றத்தார்க்குரிசிலிவராரென்றுகுகன்வினவக்கோக்கள்வைகும்
முற்றத்தான்முதற்றேவி * மூன்றுலகுமீன்றானை முன்னீன்றானைப் [ன்.
பெற்றத்தாற்பெருஞ்செல்வம்யான்பிறத்தலாற்றுறந்தபெரியாளென்று

என்றலுமேயடியின்மிசைநெடிதுவீழ்ந்தழுவானையியன்யாரென்று
கன்றுபிரிகாராவின்றுயருடையகொடிவினவக்கழற்கான்மைந்தன்
இன்றுணைவனிராகவனுக்கிலக்குவற்குமிளையவற்குமெனக்குமூத்தான்
குன்றனையதிருநெடுந்தோட்குகனென்பானிந்நின்றகுரிசிலென்றான். ()

கைவீரலீர்மைந்தீரினித்துயராறுடிறந்துகாடுநோக்கி
† மெய்வீரர்பெயர்ந்ததுவுநலமாயிற்றுமன்றேவிலங்கற்றிண்டோள்
கைவீரக்களிறனையகாளையிவன்றன்னேடுங்கலந்து ‡ நீர்கள்
ஐவீருமொருவீராயகலிடத்தைநெடுங்காலமளித்திரென்றாள். (௬௯)

அறந்தானேயென்கின்றவயனின்றடானைநோக்கியையவன்பின்
சிறந்தாளையுரையென்னநெறிதிறம்பாத்தன்மெய்யைநிற்பதாக்கி
இறந்தான்றன்னிளந்தேவியாவர்க்குந்தொழுகுலமாமிராமன்பின்பு
பிறந்தானுமுளனென்னப்பிரியாதான்றனைப்பயந்தபெரியாளென்றான்.()

சுடுமையானத்திடைதன்றுணையேகத்தோன்றறுயர்க்கடலினேகக்
கடுமையார்கானகத்துக்கருணையார்கலியேகக்கழற்கான்மாயன்
நெடுமையாலன்றளந்தவுலகெல்லாம் § தன்மனத்தேநினைந்துசெய்யும்
கொடுமையாலளந்தாளையாரிவரென்றுரையென்னக்குரிசில்கூறும். (௬௯)

படரெலாம்படைத்தாளைப் $ பழிவளர்க்குஞ்செவிலியைத்தன்பாழ்த்த
குடரிலேநெடுங்காலங்கிடந்தேற்குமுயிர்ப்பாரங்குறைந்துதேய [பாவிக்
உடரெலாமுயிரிலாவெனத்தோன்றுமுலகத்தேயொருத்தியன்றே
இடரிலாமுகத்தாளையறிந்திலையே $ லிந்நின்றாளென்னையீன்றாள். (௭௦)

* மூன்றுலகுமீன்றான் — மூன்றுலகையுஞ் சிருஷ்டித்த பிரமன்.

† மெய்வீரர் — ஸ்ரீராமலக்ஷ்மணர்.

‡ நீர்கள் — முன்னிலைப்பன்மைப்பெயர்.

§ தான்பெற்றவரத்தான் — அரசைப்பெற்றமையான் தன்மனத்தே நினைந்துசெய்யுங் கொடுமையாலளந்தாளை என்றார்.

$ பழிவளர்க்குஞ்செவிலி என்றது ஏகதேசவுருவகம்.

¶ இந்நின்றாளொருத்தியென்னை ஈன்றாளெனமுடிக்க.

வேறு.

என்னக்கேட்டவ்விரக்கமிலாளையும்
தன்னற்கையின்வணங்கினன்றூயென
அன்னப்பேடைசிறையிலதாய்க்கரை.
துன்னிற்றென்னவும்வந்ததுதோணியே. (எக)

இழிந்ததாயர்சிவிகையினேறத்தான்
பொழிந்தகண்ணிற்புதுப்புனற்போயினான்
ஒழிந்திலன்குகனும்முட * னேகினான்
கழிந்தனன்பலகாவதங்காலினே. (எஉ)

பரத்தினீங்கும்பரத்துவனென்னும்பேர்
வரத்தின்மிக்குயர்மாதவன்வைகிடம்
அருத்திகூரவணுகினனண்டவன்
விருத்திவேதியரோடெதிர்மேவினான். (எங)

கக-வது, குகப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-க௦எக.

## கஉ-வது, கிளைகண்டுநீங்குபடலம்.



வந்தமாதவத்தோனையம்மைந்தனும்
தந்தையாமெனத்தாழ்ந்துவணங்கினான்
இந்துமோலியன்னானுமிரங்கினான்
அந்தமில்குணத்தாசிகள்கூறினான். (க)

எடுத்தமாமுடிசூடிநின்பாலியைந்
தடுத்தபேரரசாண்டிலையைநீ
முடித்தவார்சடைக்கற்றையைமூசுதா
சுடுத்துநண்ணுதற்குற்றுளதியாதென்றான். (உ)

† சினக்கொடுந்திறற்சீற்றவெந்தீயினான்
மனக்கடுப்பினன்மாதவத்தோங்கலை
எனக்கடுத்ததியம்பிலைநீயென்றான்
உனக்கடுத்ததுமன்றுரவோயென்றான். (ங)

‡ மறையின்கேள்வற்குமன்னிளந்தோன்றல்பின்
முறையினீங்கிமுழுநிலங்கொள்கிலேன்

---

* ஓகினான் — திசைச்சொல்.
† சினம் — சீற்றம். ஒருபொருட் பன்மொழி.
‡ மறையின்கேள்வன் — ஈண்டு பரத்துவாசனை.

இறைவன்காக்கிலனுமெனில்யாண்டெலாம்
உறைவென்கானத்தொருங்குடனேயென்றான். (௪)

உரைத்தவாசகங்கேட்டலுமுள்ளெழுந்
திரைத்தகாதலிருந்தவத்தோர்க்கெலாம்
குரைத்தமேனியொடுள்ளங்குளிர்ந்ததால்
அரைத்தசாந்துகொடப்பியதென்னவே. (௫)

ஆயகாதலொடையனைக்கொண்டுதன்
தூயசாலையுறைவிடந்துன்னினான்
மேயசேனைக்கமைப்பென்விருந்தெனத்
தீயி * னாவுதிசெங்கையினீக்கினான். (௬)

துறந்தசெல்வனினையத்துறக்கந்தான்
பறந்துவந்துபடிந்ததுபல்சனர்
பிறந்து † வேறொருலகுபெற்றாரென
மறந்துவைகினர்முன்னைத்தம்வாழ்வெலாம். (௭)

நந்தலில்லறநந்தினராமென
அந்தரத்தினரம்பையரன்பினர்
வந்துவந்தெதிரேத்தினர்மைந்தரை
இந்துவிற்சுடர்கோயில்கொண்டேகினார். (௮)

நானநன்குரைத்தார்நளிர்வாளிடை
ஆனகங்கையரும்புனலாட்டினார்
தானமாமணிக்கற்பகந்தாங்கிய
ஊனமின்மலராடையுடுத்தினார். (௯)

கொம்பினின்றுநுடங்குறுகொள்கையார்
செம்பொனின் ‡ கலராசிதிருத்தினார்
அம்பரத்தினரம்பையரன்பொடும்
உம்பர்கோனுகரின்னமிர்தூட்டினார். (௧௦)

§ அஞ்சடுத்தவமளியலத்தகப்
பஞ்சடுத்தபரிபுரப்பல்லவ
நஞ்சடுத்தநயனியர்நவ்வியில்
துஞ்சவத்தனைமைந்தருந்துஞ்சினார். (௧௧)

ஏந்துசெல்வத்திமையவராமெனக்
கூர்ந்ததெய்வமகளிர்கொண்டாடினார்

---

* ஆவுதி — வடசொற்சிதைவு.
† வேறொருலகு — துறக்கம்.
‡ கலராசி -- கலத்தின்கூட்டம்.
§ அஞ்சடுத்தவமளி — பஞ்சசயனம், அதாவது-இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி.

வேந்தராதிசிவிகையின்வீங்குதோள்
மாந்தர்காறும்வரிசைவழாமலே. (௧௨)

மாதர்யாவரும்வானவர்தேவியர்
கோதில்செல்வத்துவைகினர்கொவ்வைவாய்த்
தீதில்செல்வமடந்தையர்சேடியர்
தாதிமாரெனத்தம்பணிகேட்பவே. (௧௩)

நந்தநந்தவனங்களினுண்மலர்
கந்தமுந்தியகற்பகக்காவினின்
* றந்தர்வந்தெனவந்திதன்கைதர
மந்தமந்தமணந்ததுவாடையே. (௧௪)

மான்றவிக்குலநன்மதம்வந்துணத்
தேன்றளிர்த்தகவளமுஞ்செங்கதிர்
கான்றநெற்றழைக்கற்றையுங்கற்பகம்
ஈன்றளிக்கநுகர்ந்தனயானையே. (௧௫)

நரகதர்க்கறநல்குநலத்தநீர்
கரகதுக்கரிகானிமிர்த்துண்டன
மரகதத்தின்கொழுந்தெனவார்ந்தபுல்
குரகதத்தின்குழாங்களுங்கொண்டவே. (௧௬)

இன்னரின்னணம்யாவருமிந்திரன்
துன்னுபோகங்கடெய்த்தனர்தோன்றலுன்
அன்னகாயுங்கிழங்குமுண்டப்பகல்
பொன்னின்மேனிபொடியுறப்போக்கினன். (௧௭)

நீலவல்லிருணீங்கலுநீங்குமம்
மூலமில்கனவிற்றிருமுற்றுற
ஏலுநல்வினைதுய்ப்பவர்க் † கீறுசெல்
காலமென்னக்கதிரவன்றோன்றினன். (௧௮)

ஆறினின்றறமாற்றலர்வாழ்வெனப்
பாறிவீய்ந்ததுசெல்வம்பரிந்திலர்
தேறிமுந்தைத்தஞ்சிந்தையராயினர்
‡ மாறிவந்துபிறந்தன்னமாட்சியார். (௧௯)

---

* அந்தர் — குறைந்துநின்றது.

† ஈறுசெல்காலம் — கடைபோகுங்காலம்.

‡ மாறிவந்து பிறந்தன்ன மாட்சியா ரென்றது பரதன் சேனையை.

வே று.

காலையென்றெழுந்ததுகண்டுவானவர்
வேலையன்றனிகமேயென்றுவிம்மறச்
சோலையுங்கிரிகளுஞ்சுண்ணமாயெழப்
பாலைசென்றடைந்ததுபரதன்சேனையே. (உ0)

எழுந்ததுதுகளதினெரியும்வெய்யவன்
அழுந்தினனவிப்பரும்வெம்மையாறினன்
பொழிந்தனகரிமதம்பொடிவெங்கானகம்
இழிந்தனவடிநடந்தேறுஞ்ணமையே. (உக)

வடியுடையயிற்படைமன்னர்வெண்குடை
செடியுடைநெடுநிழல்செய்ததீப்பொதி
படியுடைப்பாலுறைப்பாலைமேலுயர்
கொடியுடைப்பந்தரிற்குளிர்ந்ததெங்குமே. (உஉ)

பெருகியசெல்வநீபிடியென்றாள்வயின்
திருகியசீற்றத்தாற்செம்மையாய் * நிறம்
கருகியவண்ணலைக்கண்டுகாதலின்
உருகியதளிர்த்தனவுலவையீட்டமே. (உங)

வன்றெறுபாலையைமருதமாமெனச்
சென்றதுசித்திரகூடஞ்சேர்ந்ததால்
ஒன்றுரைத்துயிரினு † மொழுக்கநன்றெனப்
பொன்றியபுரவலன்பொருவில்சேனையே. (உச)

தூளியின்படலையுந்துரகந்தேரொடு
மூளிருஞ்சினக்கரிமுழங்குமோதையும்
ஆளிருங்குழுவினாரரவாரமும்
கோளிரும்படையிதென்றுணரக்கூறவே. (உரு)

எழுந்தனனிளையவனேறினிலம்
கொழுந்துயர்ந்தனையதோர்நெடியகுன்றின்மேல்
செழுந்திரைப்பரவையைச்சிறுமைபேசிய
கழுந்துடைவரிசிலைக்கடலைநோக்கினான். (உசு)

பரதனிப்படைகொடுபோர்கொண்டாண்மரம்
கருதியுள்கிடந்ததோர்கறுவுகாதலால்
விரதமுற்றிருந்தவன்மேல்வந்தானிது
சரதமற்றிலதெனத்தழங்குசீற்றத்தான். (உஎ)

---

* நிறங்கருகிய வண்ணலென்றது பரதனை.

† "ஒழுக்க முயிரினு மோம்பப்படும்" என்பவாகலின் உயிரினு மொழுக்க நன்றென்றார்.

குதித்தனன்பாரிடைக்குவலயநீரெழ
மிதித்தனனிராமனைவிரைவினெய்தினன்
மதித்திலன்பரதனின்மேல்வந்தான்மதிள்
பதிப்பெருஞ்சேனையின்பரப்பினனென்றான். (உ௯)

கட்டினன்சுரிகையுங்கழலும்பல்கணைப்
புட்டிலும்பொறுத்தனன்கவசம்பூட்டமைத்
திட்டனனெடுத்தனன்வரிவில்லேந்தலைத்
தொட்டடிவணங்கினின்றினையசொல்லினன். (௩௧)

இருமையுமிழந்தவப்பரதனேந்துதோள்
பருமையுமன்னவன்படைத்தசேனையின்
பெருமையுநின்னொருபின்புவந்தவென்
ஒருமையுங்கண்டினியுவத்தியுள்ளநீ. (௩0)

படரெலாம்படப்படும்பருமயானையின்
திடரெலாமுருட்டினதேருமீர்த்தன
* குடரெலாந்திரைத்தனகுருதியாறுகள்
† கடரெலாமடுப்பனபலவுங்காண்டியால். (௩௧)

கருவியுங்கைகளுங்கவசமார்பமும்
உருவினவுயிரினோடுதிரந்தோய்வில
திரிவனசுடர்க்கணைதிசைக்கையானைகள்
வெருவரச்செய்வனகாண்டிவீரநீ. (௩௨)

கோடகத்தேர்படுகுதிரைதாவிய
‡ ஆடகத்தட்டிடையலகையற்றுகு
கேடகத்தடக்கைகள்கவ்விக்கீதத்தின்
நாடகநடிப்பனகாண்டிநாதநீ. (௩௩)

பண்முதிர்களிற்றொடுபரதன்சேனையின்
எண்முதலறுத்துநானிமைப்பினீக்கலால்
விண்முதுகுளுக்கவும்வேலையாடையின்
மண்முதுகாற்றவுங்காண்டி § வள்ளனீ. (௩௪)

நிவந்தவான்குருதியினீத்தநீந்திமெய்
சிவந்தசாதகரொடுசிறுகட்கூளியும்
கவந்தமுமுலகநின்கையதாயதென்
றுவந்தனகுனிப்பனகாண்டியும்பர்போல். (௩௫)

---

* குடல்-குடர். † கடல் கடர் இறுதிநிலைப்போலி.

‡ ஆடகம் — நால்வகைப் பொன்னில் ஒன்று; ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம். § வள்ளல் — வரையாது கொடுப்போன்.

சூழிவெங்கடகரிதுரகராசிகள்
பாழிவன்புயத்திகல்வயவர்பட்டற
வீழிவெங்குருதியாலலைந்தவேலைகள்
ஏழுமொன்றாகிநின்றிரைப்பக்காண்டியால். (௩௬)

ஆளறவலங்குதேரழியவாடவர்
வாளறவரிசிலைதுணியமாக்கரி
தாளறத்தலையறப்புரவிதாளொடும்
தோளறவடிக்கணைதொடுப்பக்காண்டியால். (௩௭)

தழைத்தவான்சிறையனதசையுங்கவ்வின
அழைத்தவான்பறவைகளலங்குபொன்வடிம்
பிழைத்தவான்பகழிபுக்கிருவர்மார்பிடைப்
புழைத்தவான்பெருவழிபோவக்காண்டியால். (௩௮)

ஒருமகள்காதலினுலகைநோய்செய்த
பெருமகனேவலிற்பரதன்றான்பெறும்
இருநிலமாள்கைவிட்டின்றெனேவலால்
அருநரகாள்வதுகாண்டியாழியாய். (௩௯)

வையகந்துறந்துவந்தடவிவைகுதல்
எய்தியதுனக்கெனநின்னையீன்றவள்
நைதல்கண்டுவந்தவணவையினோங்கிய
கைகயன்மகள்விழுந்தரற்றக்காண்டியால். (௪௦)

அரஞ்சுடவழனிமிரலங்கல்வேலினாய்
* விரஞ்சொருநொடியிலிவ்வணிகவேலையை
உரஞ்சுடுவடிக்கணையொன்றில்வென்று † மூப்
புரஞ்சுடுமொருவனிற்பொலிவென்யானென்றான். (௪௧)

இலக்குவவுலகமோரேழுமேழுநீ
கலக்குவனென்பதுகருதினாலது
விலக்குவதரிதுவிளம்பல்வேண்டுமோ
‡ புலக்குரித்தொருபொருள்புகலக்கேட்டியால். (௪௨)

நங்குலத்துதித்தவர்நவையுணீங்கினர்
எங்குலப்புறுவர்களெண்ணில்யாவரே
தங்குலத்தொருவருந்தருமநீங்கினர்
பொங்குலத்திரளொடும்பொருததோளினாய். (௪௩)

---

* விரைந்து விரைஞ்சு இடைநிலைப்போலி.
† முப்புரஞ்சுடுமொருவன் — சிவன்.
‡ புலக்குரித்தென்றது மாடக்குச் சித்திரமென்றார்போல.

எனைத்துளமறையவையியம்பற்பாலன
பனைத்திரள்கரக்கரிப்பரதன்செய்கையே
அனைத்திறமல்லனவல்லவன்னது
நினைத்திலையென்வயினேயநெஞ்சினால். (௪௪)

பெருமகனென்வயிற்பிறந்தகாதலின்
வருமெனநினைகையுமண்ணையென்வயின்
தருமெனநினைகையுந்தவிரத்தானையால்
பொருமெனநினைகையும்புலமைப்பாலதோ. (௪௫)

பொன்னெனும்பொருகழற்பரதன்போந்தனன்
நன்னெடும்பெரும்படைநல்கலன்றியே
என்னெனும்பொருமெனவியம்பற்பாலதோ
மின்னெனும்பொருவுறவிளங்கும்வேலினாய். (௪௬)

சேனையர்தருமத்தின்றேவைச்செம்மையின்
ஆணியையன்னதுநினைக்கலாகுமே
பூணியன்மொய்ம்பினாய்போந்ததீண்டெனைக்
காணியநீயிதுபின்னுங்காண்டியால். (௪௭)

என்றனனிளவலைநோக்கியேந்தலும்
நின்றனன்பரதனுநிமிர்ந்தசேனையைப்
பின்றருகென்றுதன்பிரிவில்காதலில்
தன்றுணைத்தம்பியுந்தானுமுந்தினான். (௪௮)

தொழுதுயர்கையினன்றுவண்டமேனியன்
அழுதழிகண்ணினனவலமீதென
எழுதியபடிவமொத்தெய்துவான்றனை
முழுதுணர்சிந்தையான்முடியநோக்கினான். (௪௯)

கார்ப்பொருமேனியக்கண்ணன்காட்டினான்
ஆர்ப்புறுவரிசிலையிளையவையநீ
தேர்ப்பெருந்தானையால்பரதன்சீறிய
போர்ப்பெருங்கோலத்தைப்பொருந்தநோக்கென. (௫0)

எல்லொடுங்கியமுகத்திளவனின்றனன்
மல்லொடுங்கியபுயத்தவனைவைதெழும்
சொல்லொடுஞ்சினத்தொடுமுணர்வுசோர்தர
வில்லொடுங்கண்ணநீர்நிலத்துவீழவே. (௫௧)

கோதறத்தவஞ்செய்துகுறிப்பினெய்திய
நாதனைப்பிரிந்தனனலத்துநீங்கினான்

வேதனைத்திருமகன்மெலிகின்றான்விடு
தூதெனப்பரதனுந்தொழுதுதோன்றினான். (௫௨)

அறந்தனைநினைந்திலையருளைநீத்தனை
துறந்தனைமுறைமையையென்னுஞ்சொல்லினான்
மறந்தனன்மலரடிவந்துவீழ்ந்தனன்
* இறந்தனன்றாதையையெதிர்கண்டென்னவே. (௫௩)

உண்டுகொலுயிரெனவொடுங்கினானுருக்
கண்டனனின்றனன்கண்ணன்கண்ணெனும்
புண்டரீகம்பொழிபுனலவன்சடா
மண்டலநிறைந்துபோய்வழிந்துசோரவே. (௫௪)

அயாவுயிர்த்தழுகணீரருவிமார்பிடை
உயாவுறத்திருவுளமுருகப்புல்லினான்
நியாயமத்தனைக்குமோர்நிலயமாகினான்
† தயாமுதலறத்தினைத்தழுவியென்னவே. (௫௫)

புல்லினனின்றவன்புனைந்தவேடத்தைப்
பன்முறைநோக்கினான்பலவுமுன்னினான்
அல்லலினுழந்தனையையவாளுடை
‡ மல்லுயர்தோளினான்வலியனோவென்றான். (௫௬)

அரியவனுரைசெயப்பரதனையநின்
பிரிவெனும்பிணியினாலென்னைப்பெற்றவக்
கரியவன்வரமெனுங்காலனாறனக்
குரிய § மெய்ந்நிறுவிப்போயும்பரானென்றான். (௫௭)

விண்ணிடையடைந்தனனென்றவெய்யசொல்
புண்ணிடையயிலெனச்செவிபுகாமுனம்
கண்ணொடுமனஞ்சுழல்கறங்குபோலவாய்
மண்ணிடைவிழுந்தனன் $ வானினும்பரான். (௫௮)

இருநிலஞ்சேர்ந்தனனிறையுயிர்த்திலன்
உருமினையாவென ¶ வுணர்வினீங்கினான்
அருமையினுயிர்வரவயர்வுயிர்த்தகம்
பொருமினன்பன்முறைபுலம்பினானரோ. (௫௯)

---

* இறந்தனன்றாதை யென்றது பெயரெச்சமுற்று, உண்டான் சாத்தனூர்க்குப்போயினா னென்புழிப்போல.

† தயா இராமமூர்த்தியும் அறம்பரதாழ்வானுமாகக் கூறினமையால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி.

‡ அரசர்க்குத் தோள் சிறந்தமையின் மல்லுயர்தோளென்றார்.

§ மெய் – உருவுடம்பினை.

$ வானினும் பரானென்றது நிரதிசய இன்பவீட்டுலகமுடையா னென்பதனை. ¶ உணர்வினீங்கலை உருமினையாவினோடுவமைகூறினார்.

வேறு.

நந்தாவிளக்கனையநாயகனேநானிலத்தோர்
தந்தாய்தனியறத்தின்றாயேதயாநிலையே
எந்தாயிகல்வேந்தரேறேயிறந்தனையே
அந்தோவினிவாய்மைக்காருளரேமற்றென்றான். (௬0)

சொற்பெற்றநோன்பின் றுறையோனருள்வேண்டி
நற்பெற்றவேள்விநவைநீங்கநீயியற்றி
எற்பெற்றுநீபெற்றநின் னுயிர்போய்நீங்கலோ
* கொற்பெற்றவெற்றிக்கொலைபெற்றகூர்வேலோய். (௬௧)

மன் னுயிர்க்குநல்குரிமைமண்பாரநான்சுமக்கப்
பொன் னுயிர்க்குந்தாரோய்பொறையுயிர்த்தவாறிதுவோ
உன் னுயிர்க்குங்கூற்றாயுலகாளவுற்றேனோ
மின் னுயிர்க்குந்தீவாய்வெயிலுயிர்க்கும்வெள்வேலோய். (௬௨)

என்பரத்ததாக்கியரசுரிமையிந்தியங்கள்
வெம்பவத்தின்வீயத்தவம்விளைத்தவாறிதுவோ
சம்பரப்பேர்த்தானவனைத்தள்ளிச † சதமகன்றன்
‡ அம்பரத்தினீங்காவரசளித்தவாழியாய். (௬௩)

வேண்டுதிறத்தாரும்வேண்டாவரசாட்சி
பூண்டிவ்வுலகுக்கிடர்கொடுத்தபுல்லனேன்
மாண்டுமுடிவதல்லான்மாயாவுடம்பிதுகொண்
டாண்டுவருவதினியார்முகத்தேநோக்கவோ. (௬௪)

தேனடைந்தசோலைத்திருநாடுகைவிட்டுக்
கானடைந்தேனென்னத்தரியாதுகாவலநீ
வானடைந்தாயின்னமிருந்தேனான்வாழ்வுகந்தே
ஊனடைந்ததெவ்வருயிரடைந்தவொள்வேலோய். (௬௫)

வண்மையியுமானமுமேல்வானவர்க்கும்பேர்க்கலாத்
திண்மையியுஞ்செங்கோனெறியுந்திறம்பாத
உண்மையியுமெல்லாமுடனேகொண்டேகினையே
தண்மையிதகைமதிக்குமீந்ததனிக்குடையோய். (௬௬)

என்றெடுத்துப்பற்பலவும்பன்னியிடருழக்கும்
குன்றெடுத்ததொக்குங்குவவுத்தோட் § கோளரியை
வன்றடக்கைத்தம்பியருமற்றுள்ளமன்னவரும்
சென்றெடுத்துத்தாங்கினார்மாவதிட்டன்றேற்றினான் (௬௭)

* கொல் — சொல்லானஃறிணை.
† சதமகனென்றதிந்திரனை.
‡ அம்பரம் — துறக்கம்.
§ கோளரியை — சிங்கம்போன்ற இராமமூர்த்தியை.

பன்னரியநோன்பின்பரத்துவனேயாதியாம்
பின்னுசடையோரும்பே * ருலகமோரேழின்
மன்னவருமந்திரியரெல்லாரும்வந்தடைந்தார்
தன்னுரிமைச்சேனைத்தலைவோருந்தாமடைந்தார். (௬௮)

மற்றும்வரற்பாலரெல்லாரும்வந்தடைந்தார்
சுற்றுமிருந்தவமைதியினிற்றன்புழக்கும்
கொற்றக்குரிசினமுகநோக்கிக்கோமலரோன்
பெற்றபெருமைத்தவமுனிவன்பேசுவான். (௬௯)

வேறு.

துறத்தலுநல்லறத்துறையுமல்லது
புறத்தொருதுணையிலைப்பொருந்துமன்னுயிர்க்
கிறத்தலும்பிறத்தலுமியற்கையென்பதை
மறந்தியோமறைகளின்வரம்புகண்டநீ. (௭0)

உண்மையில் † பிறவிகளுலப்பில்கோடிகள்
‡ தண்மையில்வெம்மையிற்றழுவினவ்வெனும்
வண்மையைநோக்கியவரியகூற்றின்பால்
கண்மையுமுளதெனக்கருதலாகுமோ. (௭௧)

பெறுவதன்முன்னுயிர்பிரிதல்காண்டியால்
மறுவறுகற்பினில்வையம்யாவையும்
அறுவதினாயிரமாண்டுமாண்டவன்
இறுவதுகண்டவற்கிரங்கல்வேண்டுமோ. (௭௨)

சீலமுந்தருமமுஞ்சிதைவில்செய்கையும்
சூலமுந்திகிரியுஞ்சொல்லுந்தாங்கிய
§ மூலம்வந்துதவிய $ மூவர்க்காயினும்
காலமென்றொருவலைகடக்கலாகுமோ. (௭௩)

கண்முதற்காட்சியகரையினீளத்த
உண்முதற்பொருட்கெலாமூற்றமாவன
மண்முதற்பூதங்கண்மாயுமென்றபோ
தெண்முதலுயிர்க்குநீயிரங்கல்வேண்டுமோ. (௭௪)

* உலகமோரேழ் — ஏழுதீவுகளை நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு.

† பிரமன்முதல் பிபீலி காந்தங்காறும் என்பார் பிறவிகளுலப்பில் கோடிகள் எனவும்.

‡ அப்பிறப்புகள் புண்ணியபாவங்களின் வழிபட்டன என்பார் தண்மையில் வெம்மையில் தழுவினவெனவும், எல்லாவுயிர்களிடத்தும் இயமன் ஒரு தன்மையன் என்பார் கண்மையு முளதென எனவுங்கூறினர்.

§ மூலம் — பரமபதநாதனை.

$ மூவர் — பிரமன், விஷ்ணு, உருத்திரன்.

புண்ணியநறுநெயிற்பொருவில்காலமாம்
திண்ணியதிரியினில்விதியென்றீயினில்
எண்ணியவிளக்கவையிரண்டுமெஞ்சினால்
அண்ணலேயவிவதற்கையமாவதோ. (௭௫)

இவ்வுலகத்தினுமிடரினேகிடந்
தவ்வுலகத்தினுநரகினாழ்ந்துபின்
வெவ்வினைதுய்ப்பனவிரிந்தயோனிகள்
எவ்வளவிற்செலவெண்ணலாகுமே. (௭௬)

உண்டுகொலிதுவலதுதவிநீசெய்வ
தெண்டகுகுணத்தினாய்தாதையென்றலால்
* புண்டரீகத்தனிமுதற்கும்போக்கரு
விண்டுவினுலகிடைவிளங்கினானரோ. (௭௭)

அய்யநீயாதொன்றுமவலிப்பாயலை
உய்திறமவற்கினியிதனினூங்குண்டோ
செய்வனவரன்முறைதிருத்திச்சேர்த்திநின்
கய்யினாலொழுக்குதிகடனெலாமென்றான். (௭௮)

† விண்ணுநீர்மொக்குளின்விளியும்யாக்கையை
எண்ணிநீயழுங்குதலிழுதைப்பாலதால்
கண்ணினீருகுத்தலிற்கண்டதில்லைபோய்
மண்ணுநீருகுத்திதாமரைக்கையாலென்றான். (௭௯)

என்றபின்னேந்தலையேந்திவேந்தரும்
பொன்றிணிந்தனசடைப்புனிதனோடும்போய்ச்
சென்றனர்செறிதிரைப்புனலிற்செய்கென
நின்றனரிராமனுநெறியைநோக்கினான். (௮௦)

புக்கனன்புனலினின்முழுகிப்போந்தனன்
தக்கநன்மறையவன்சடங்குகாட்டத்தான்
முக்கையினீர்விதிமுறையினீந்தனன்
ஒக்கநின்றுயிர்தொறுமுணர்வுநல்குவான். (௮௧)

ஆனவன்பிறவுளயாவுமாற்றிப்பின்
மானமந்திரத்தவர்மன்னர்மாதவர்
ஏனையர்பிறர்களுஞ்சுற்றவேகினன்
சானகியிருந்தவச்சாலையெய்தினான். (௮௨)

---

* புண்டரீகத்தனிமுதல் - பிரமன்.

† யாக்கை நிலையாமை தோன்ற விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கையென்றார்.

எய்தியவேலையிற்றமியளெய்திய
தய்யலைநோக்கினன்சாலைநோக்கினான்
கய்களில்கண்மலர்புடைத்துக்கான்மிசை
அய்யனப்பரதன்வீழ்ந்தரற்றினனரோ. (௮௩)

வெந்துயர்தொடர்தரவிம்மல்விம்மநீர்
உந்தியநிரந்தரமூற்றுமாற்றில
சிந்தியகுரிசிலச்செம்மல்சேர்ந்தகண்
இந்தியங்களிலெறிகடலுண்டென்னவே. (௮௪)

அந்நெடுந்துயருறுமரிய * வீரனைத்
தன்னெடுந்தடக்கையாலிராமன்றாங்கினான்
நன்னெடுங்கூந்தலைநோக்கிநாயகன்
என்னெடும்பிரிவினிலிறந்திட்டானென்றான். (௮௫)

துண்ணெனுநெஞ்சினளேங்கினாடுணைக்
கண்ணெனுங்கடனெடுங்கலுழிகான்றிட
மண்ணெனுஞ்செவிலிமேல்வைத்தகையினள்
பண்ணெனுங்கிளவியாற்பன்னியேங்கினாள். (௮௬)

கன்னகுதிரள்புயக்கணவன்பின்செல
நன்னகரொத்ததுநடந்தகானமும்
மன்னவன்றுஞ்சினனென்றமாற்றத்தால்
அன்னமுந் † துயர்க்கடலடிவைத்தாளரோ. (௮௭)

ஆயவடன்னைநேர்ந்தங்கையேந்தினர்
தாயரின்முனிவர்தந்தருமப்பன்னியர்
தூயநீராட்டினர்துயரநீக்கினர்
நாயகற்சேர்த்தினர்நவையுணீங்கினர். (௮௮)

தேன்றருந்தெரியலச் ‡ செம்மனல்வரை
ஈன்றவர்மூவரோடிருமைநோக்குறும்
சான்றவர்குழாத்தொடுந்தருமநோக்குறும்
தோன்றல்பாற்சுமந்திரன்றொழுதுதோன்றினான். (௮௯)

வேறு.

எந்தையாண்டையானியம்புவீரெனா
வந்ததாயர்தம்வயங்குசேவடி
சிந்திநின்றனன்சேந்தகண்ணீர்
முந்தைநான்முகத்தவற்குமுந்தையான். (௯௰)

---

* வீரன் — ஈண்டு பரதன்.

† இதுகாறுந் துயரமென்பதறியாளாகலின் துயர்க்கடலடிவைத்தாளென்றார்.

‡ செம்மல் — பெருமையிற்சிறந்தோன்.

தாயருந்தலைப்பெய்துதாந்தழீஇ
ஓய்விலன்பினூறலோங்கினார்
ஆயசேனையுமணங்கனார்களும்
தீயில்வீழ்ந்துதீமெழுகிறேம்பினார். (௰௧)

பின்னவ்வீரரைப்பெற்றபெற்றியப்
பொன்னனார்களுஞ்சனகன் * பூவையைத்
துன்னிமார்புறத்தொடர்ந்துபுல்லினார்
இன்னல்வேலைபுக்கிழிந்தழுந்துவார். (௰௨)

சேனைவீரருந்திருநன்மாநகர்
மானைமாந்தருமற்றுளோர்களும்
ஏனைவேந்தரும்பிறரும்யாவரும்
கோனையெய்தினார்குறையுஞ்சிந்தையார். (௰௩)

படஞ்செய்நாகணைப்பள்ளிநீங்கினான்
இடஞ்செய்தொல்குலத்திறைவனாதலால்
தடஞ்செய்தேரினான்றானுநீரினால்
கடஞ்செய்வானெனக்கடலின்மூழ்கினான். (௰௪)

அன்றுதீர்ந்தபின்னரசவேலையும்
துன்றுசெஞ்சடைத்தவருஞ்சுற்றமும்
தன்றுணைத்திருத்தம்பிமார்களும்
சென்றுசூழவாண்டிருந்தசெம்மறான். (௰௫)

வரதன்றாஞ்சினான்வையமாணையால்
சரதநின்னதேமகுடந்தாங்கலாய்
விரதவேடநீயென்கொல்வேண்டுவான்
பரதகூறெனப்பரிந்துகூறினான். (௰௬)

என்றலும்பதைத்தெழுந்துகைதொழா
நின்றுதோன்றலைநெடிதுநோக்கிநீ
அன்றியாவரேயறத்துளோரதர்
பின்றுவாய்கொலாமென்னப்பேசுவான். (௰௭)

மனக்கொன்றுதனவரத்தினின்னையும்
நினக்கொன்றுநிலைநிறுவிநேமியான்
தனக்கொன்றுடருந்தனையனாதலால்
எனக்கொன்றுதவமடுப்பதெண்ணினால். (௰௮)

நோவதாகவிவ்வுலகைநோய்செய்த
பாவகாரியிற்பிறந்தபாவியேன்

---

* பூவை உவமையாகுபெயராய்ச் சீதைமேல் நின்றது.

சாவதோர்கிலேன்றவஞ்செய்வேனலேன்
யாவனாகியிப்பழிநின்றேறுவேன். (கூகூ)

நிறையினீங்கியமகளிர்நீர்மையும்
பொறையினீங்கியதவமும்பொங்கருள்
துறையினீங்கியவறமுந்தொல்லையோர்
முறையினீங்கியவரசின்முந்துமோ. (க00)

பிறந்து * நீயுடைப்பிரிவெறால்பதம்
துறந்தமாதவந்தொடங்குவாயென்றால்
மறந்துநீதியிற்றிறம்பிவாளிற்கொன்
றறந்தின்றாலெனவாசதாள்வனோ. (க0க)

தொகையிலன்பினாலிறைவன்றுஞ்சநீ
புகையும்வெஞ்சுரம்புகுதப்புந்தியால்
வகையில்வஞ்சனையரசுவௌவியான்
பகைவனேகொலாமிறவுபார்க்கின்றேன். (க0உ)

உந்தைதீமையுமுலகுறாதநோய்
தந்ததீவினைத்தாய்செய்தீமையும்
எந்தைநீங்காநீண்டரசுசெய்கெனாச்
சிந்தையாவதுந்தெரியக்கூறினான். (க0ங)

சொற்றவாசகத்துணிவுணர்ந்தபின்
இற்றதோவிவன்மனமென்றெண்ணுவான்
வெற்றிவீரயான்விளம்பக்கேளென
முற்றநோக்கினான்மொழிதன்மேயினான். (க0ச)

முறையும்வாய்மையுமுயலுநீதியும்
அறையுமேன்மையோடறனுமாதியாம்
துறையுள்யாவையுஞ்சுருதிநூல்விடா
இறைவரேவலாவியைவகாணையா. (க0ரு)

பரவுகேள்வியும்பழுதின்ஞானமும்
விரவுசீலமும்வினையின்மேன்மையும்
உரவிலோய்தொழற்குரியதேவரும்
குரவரேயெனப்பெரிதுகோடியால். (க0சு)

அந்தநற்பெருங்குரவராரெனச்
சிந்தைதேர்வுறத்தெரியநோக்கினால்

---

* நீயுடைப்பதம் மூன்றுசொல் இரண்டு சந்தியாக்கி முன்னது எழுவாய்த் தொடரும் பின்னது குறிப்பு வினையெச்சத் தொடருமாகக் கொள்க.

தந்தைதாயரென்றிவர்கடாமலால்
எந்தைகூறவேறெவருமில்லையால். (௧௦௭)

தாய்வரங்கொளத்தந்தையேவலால்
மேயநங்குலத்தருமமேவினேன்
நீய்வரங்கொளத்தவிர்தனீர்மையோ
ஆய்வரும்புலத்தறிவுமேவினாய். (௧௦௮)

தனையராயினார்தந்தைதாயரை
வினையினல்லதோரிசையை * வேய்தலோ
நினையலோவிடாநெடியவன்பழி
புனைதலோவையபுதல்வராதருன். (௧௦௯)

இம்மைபொய்யுரைத்திவறியெந்தையார்
அம்மைவெம்மைசேர்நரகமாளயான்
கொம்மைவெம்முலைக்குவையின்வைகிவாழ்
செம்மைசேர்நிலத்தரசுசெய்வெனோ. (௧௧௦)

வரனிலுந்தைசொன்மரபினாலுடைத்
தரணிநின்னதென்றியைந்ததன்மையால்
உரனினீபிறந்துரிமையாதலால்
அரசுநின்னதேயாள்கவென்னவே. (௧௧௧)

முன்னர்வந்துதித்துலகமூன்றினும்
நின்னையொப்பிலாநீபிறந்தபார்
என்னதாகில்யானின்றுதந்தனென்
மன்னபோந்துநீமகுடஞ்சூடென. (௧௧௨)

மலங்கிவையகம்வருந்துவைகனீ
உலங்கொடோளுனக்குறுவசெய்கியோ
கலங்குறுவணங்காத்திபோந்தெனாப்
பொலங்குலாவுதாள்பூண்டுவேண்டினான். (௧௧௩)

பசைந்தசிந்தைநீபரிவின்வையமென்
வசஞ்செய்தாலதுமுறைமையோவசைக்
கசைந்தவெந்தையாரருளவன்றுநான்
இசைந்தவாண்டெலாமின்றொடேறுமோ. (௧௧௪)

வாய்மையென்னுநீதன்றிவையகம்
தூய்மையென்றுமொன்றுண்மைசொல்லுமோ

* வேய்தல் - புனைதல்.

தீய்மைதானதிற்றீர்தலன்றியே
ஆய்மெய்யாகவேறறையலாவதே. (ககரு)

எந்தையேவவாண்டேழொடேழு
வந்தகாலநான்வனத்துள்வைகநீ
தந்தபாரகந்தன்னைமெய்ம்மையால்
அந்தநாளெலாமாளென்றனையால். (ககசு)

வேறு.

மன்னவனிருக்கவேயுமணியணிமகுடஞ்சூடு
கென்னயானியைந்ததன்றனேயதுமறுக்கவஞ்சி
அன்னதுநினைந்துநீயென்றனையைமறுக்கலாமோ
சொன்னதுசெய்தியையதுயருழந்தயரலென்றான். (ககஎ)

ஒள்ளியோனினையவெல்லாமுரைத்தலுமுரைக்கலுற்ற
* பள்ளநீர்வெள்ளமன்னபரதனைவிலக்கிப்பண்டு
தெள்ளியகுலத்தோர்செய்கைசிக்கறச்சிந்தைநோக்கி
வள்ளியோய்கேட்டியென்றுவசிட்டமாமுனிவன்சொன்னான். ()

வேறு.

களரகன்புனலுணின்றரியொர்கேழலாய்
† இளையெனுந்திருவினையேந்தினானரோ
உளைவரும்பெருமையோரெயிற்றினுட்புரை
வளரிளம்பிறையிடைமறுவிற்றோன்றவே. (கககூ)

ஆதியவமைதியினிறுதியைம்பெரும்
பூதமும் ‡ வெளியொழித்தெவையும்புக்கபின்
நாதனவ்வகன்புனல்கிநண்ணருஞ்
சோதியாந்தன்மையிற்றுயிறன்மேயினான். (கஉ0)

எற்றவித்தன்மையினமரர்க்கின்னமு
தூற்றுடைக்கடல்வணனுந்தியுந்திய
¶ நூற்றிதழ்க்கமலத்தினெய்தின்யாவையும்
தோற்றுவித்துதவிடமுதல்வன்றோன்றினான். (கஉக)

* வெள்ளம் பள்ளத்தடங்கல்போன்று எல்லாநற்குணங்களும் தன்னகத்தடங்கலி னங்ஙனங்கூறினார். மேட்டினின்று பள்ளத்தில் விழும் வெள்ளம் கீழ்மேலாதல்போல் அவனிலை துன்பத்தால் கீழ்மேலாய் நிற்றலிற் பள்ளநீர் வெள்ளமன்ன பரதன் என்றார்.

† இளை - இளையென்னும் பூப்பிராட்டி.

‡ வெளி - ஆகாயம்.

¶ சகத்திரதளமென்னும் வடமொழிப்பெயர்பற்றி நூற்றிதழ்த்தாமரை யென்றார்.

அன்றவனுலகினையளிக்கவாகிய
துன்றணிக்குலமுதலுள்ளவேந்தர்கள்
இன்றளவினுமுறையிகந்துளாரிலை
ஒன்றுளதுரையினமுணரக்கேட்டியால். (கஉஉ)

இதவியலியற்றிய * குரவர்யாரினும்
மதவியல்களிற்றிறையமறவில்விஞ்சைகள்
பதவியவிருமையும்பயக்கப்பண்பினால்
உதவியவொருவனேயுயருமென்பரால். (கஉங)

என்றலால்யானுனையெடுத்துவிஞ்சைகள்
ஒன்றலாதனபலவுதவிற்றுண்மையால்
அன்றெனாதின்றெனதாணையையநீ
நன்றுபோந்தளியுனக்குரியநாடென்றான். (கஉச)

கூறியமுனிவனைக்குவிந்ததாமரை
சீறியகைகளாற்றொழுதுசெங்கணான்
ஆறிய † சிந்தனையறிஞவொன்றுரை
கூறுவதுளதெனக்கூறன்மேயினான். (கஉரு)

சான்றவராகதன்குரவராகதாய்
போன்றவராகமெய்ப்புதல்வராகதான்
தேன்றருமலருளான்சிறுவசெய்வெனென்
றேன்றபின்னவ்வுரைமறுக்குமீட்டதோ. (கஉசு)

தாய்பணித்துவந்தனதந்தைசெய்கென
ஏயவெப்பொருள்களுமிறைஞ்சிமேற்கொளாத்
தீயவப்புலையனிற்செய்கைதேர்கிலா
நாயெனத்திரிவதுநல்லதல்லதோ. (கஉஎ)

முன்னுறப்பணித்தவர்மொழியையானென
சென்னியிற்கொண்டதுசெய்வனென்றதின்
பின்னுறப்பணித்தனைபெருமையோவெனக்
கென்னினிச்செய்வதையுரைசெய்யீங்கென்றான். (கஉஅ)

முனிவனுமுரைப்பதோர்முறைமைகண்டிலம்
இனியெனவிருந்தனனிளையமைந்தனும்
அனையதேலாள்பவராள்கநாடுநான்
பணிபடர்காடுடன்படர்தன்மெய்யென்றான். (கஉகூ)

---

* குரவர்-அரசன். உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன்.
† சிந்தனையடங்கியோனாகலின் ஆறிய சிந்தனை என்றார்.

அவ்வழியிமையவரறிந்துகூடினர்
இவ்வழியிராமனையிவன்கொண்டேகுமேல்
செவ்வழித்தன்றுநஞ்செயலென்றெண்ணினர்
கவ்வையர்விசும்பிடைக்கழறன்மேயினர். (௧௩௦)

எத்தரும்பெருங்குணத்திராமனிவ்வழி
* போத்தருந்தாதைசொற்புரக்கும்பூட்சியான்
ஆத்தவாண்டேழிரண்டேழுமந்நிலம்
காத்தலுன்கடனிவைகடமையென்றனர். (௧௩௧)

வானவருரைத்தலுமறுக்கற்பாலதன்
றியானுனையிரந்தனனினியென்றனையால்
ஆனதோரமைதியினளித்திபாரெனுத்
தானவன்றுணைமலர்த்தடக்கைபற்றினன். (௧௩௨)

ஆமெனிலேழிரண்டாண்டிலையநீ
நாமநீர்நெடுநகர்நண்ணிநானிலம்
கோமுறைபுரிகிலையென்னிற்கூறெரிச்
சாமிதுசரதநின்றனைசாற்றினேன். (௧௩௩)

என்பதுசொல்லியபரதன்யாதுமோர்
துன்பிலனவனதுதுணிவைநோக்கினன்
அன்பினனுருகினனன்னதாகென்றான்
† தன்புகழ்தன்னினும்பெரியதன்மையான். (௧௩௪)

விம்மினன்பரதனும்வேறுசெய்வதொன்
றின்மையினறிதெனவெண்ணியேங்குவான்
செம்மையின்றிருவடித்தலந்தந்தீகென
எம்மையுந்தருவனவிரண்டுநல்கினன். (௧௩௫)

அடித்தலமிரண்டையுமழுதகண்ணினன்
முடித்தலமிவையெனமுறையிற்சூடினன்
படித்தலத்திறைஞ்சினன்பரதன்போயினன்
பொடித்தலமிலங்குறுபொலங்கொண்மேனியான். (௧௩௬)

ஈன்றவர்முதலியவெண்ணில்சுற்றமும்
சான்றவர்குழுவொடுதவத்துளோர்களும்
வான்றருசேனையுமற்றுஞ்சுற்றுற
மூன்றுநூல்கிடந்ததோண்முனியும்போயினன். (௧௩௭)

---

* மொய்ம்மையில்லானென்பது மடம் போத்தருந்தாதை என்றார்.

† புகழினுங் குணங்கலால் பெரியனாகலின் தன்புகழ் தன்னினும் பெரியதன்மையா னென்றார்.

* பண்டைநூனெறிபரத்துவனும்போயினான்
மண்டுநீர்நெடுநகர்மாந்தர்போயினார்
விண்டுறைதேவரும்விலகிப்போயினார்
கொண்டறன்றுணையாற்குகனும்போயினான். (௧௫௮)

பாதுகந்தலைக்கொடுபரதன்பைம்புனல்
மோதுகங்கையின்கரைகடந்துமுந்தினான்
போதுகுங்கடிபொழிலயோத்திபுக்கிலன்
ஓதுகங்குலினெடிதுறக்கநீங்கினான். (௧௫௯)

† நந்தியம்பதியிடைநாதன்பாதுகம்
செந்தனிக்கோன்முறைசெலுத்தச்சிந்தையான்
இந்தியங்களையவித்திருத்தன்மேயினான்
அந்தியும்பகலுநீரறாதகண்ணினான். (௧௬0)

‡ குன்றினிலிருந்தனனென்னுங்கொள்கையான்
நின்றவர்நலிவரானேயத்தாலெனாத்
தன்றுணைத்தம்பியுந்தானுந்தையலும்
தென்றிசைநெறியினைச்சேறன்மேயினான். (௧௬௧)

௧௨-வது, கிளைகண்டுநீங்குபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௨௧௨.

---

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

அயோத்தியாகாண்டம் முற்றிற்று.

---

* பண்டைநூல் - முதனூல் அதாவது வேதம்.
† நந்தியம்பதி - நந்திக்கிராமம்.
‡ குன்று ஈண்டு சித்திரகூடத்தை.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

மூன்றாவது

# ஆரணியகாண்டம்.

இது

காரப்பங்காடு வித்வான்

கோபாலாசாரியர் மாணுக்கராகிய

தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்கார்

பரிசோதித்தது

அ. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

அவர்களது

சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1927

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## மூன்றாவது,

# * ஆரணியகாண்டம்.

## முதலாவது † விராதன்வதைப்படலம்.

காப்பு.

பேதியாதுநிமிர்பேதவுருவம்பிறழ்கிலா
ஓதியோதியுணருந்தொறுமுணர்ச்சியுதவும்
வேதம்வேதியர்விரிஞ்சன்முதலோர்தெரிகிலா
ஆதிதேவரவரெம்மறிவினுக்கறிவரோ. (க)

நூல்.

முத்திருத்தியவ்விருந்தனையமொய்ப்பகையொடும்
சித்திரக்குனிசிலைக்குமரர்சென்றணுகினார்
அத்திரிப்பெயரருந்தவனிருந்தவமைதி
பத்திரப்பழுமரப்பொழிறுவன்ற ‡ பழுவம். (உ)

திக்குறுஞ்செறிபரந்தெரியனின்றதிரள்பொற்
கைக்குறுங்கண்மலைபோற்குமரர்காமமுதலாய்
முக்குறும்பறவெறிந்தவினைவான்முனிவனைப்
புக்கிறைஞ்சினரருந்தவனுவந்துபுகலும். (௩)

குமரர்நீரிவணடைந்துதவுகொள்கையெளிதோ
அமரர்யாவரொடுமெவ்வுலகும்வந்தவளவே
எமரின்யார்தவமுயன்றவர்களென்றுருகினன்
தமரெலாம்வரவுகந்தனையதானமுனிவன். (௪)

அன்னமாமுனியொடன்றவணுறைந்தவனரும்
பன்னிகற்பி § னநுசூயைபணியாலணிகலன்
துன்னுதூசினொடுசந்திவைசுமந்தசனகன்
பொன்னொடேகியுயர்தண்டகவனம்புகுதலும். (௫)

---

* ஆரணியம்-அரணியஸம்பந்தமானது, அரணியம்-காடு.

† விராதன்-ஓரரக்கன்: மிகுதியாய் அபராதஞ்செய்பவன்.

‡ பழுவம்-ஆச்சிரமம்.

§ அநசூயை-அழுக்காறில்லாதவள்.

எட்டொடெட்டுமதமாகரியிரட்டியரிமா
வட்டவெங்கண்வரையாளிபதினாறுவகையில்
கிட்டவிட்டிடைகிடந்தனசெறிந்தவொருகை
தொட்டமுத்தலையயிற்றொகைமிடற்கழுவொடே. (௬)

செஞ்சுடர்ச்செறிமயிர்ச்சுருள்செறிந்தசெனியன்
நஞ்சுதட்டுருவுபெற்றிடைநடந்ததெனமா
மஞ்சுசுற்றியவயங்குகிரிபாதவிசையில்
பஞ்சுபட்டதுபடப்படியின்மேன்முடுகியே. (௭)

புண்டுளங்கியனகண்கள்கனல்பொங்கமழைசூழ்
விண்டுளங்கிடவிலங்கல்குலுங்கவெயிலும்
கண்டுளங்கதிர்குறைந்திடநெடுங்கடல்சுலாம்
மண்டுளங்கவய * வந்தகன்மனந்தளரவே. (௮)

புக்குவாளரிமுழங்குசெவியின்பொறியுறப்
பக்கமின்னுமணிமேருசிகரங்குழைபடச்
செக்கர்வான்மழைநிகர்த்தவெதிருற்றசெருவத்
துக்கவீரருதிரத்தினொளிர்செச்சையினொடே. (௯)

படையொடாடவர்கள்பாய்புரவிமால்களிறுதேர்
நடையவாளரிகள்கோளுழுவைநண்ணியவெலாம்
அடையவாரியரவாலசையநேகவிதவந்
தொடையன்மாலைதுயல்வந்துலவுதோள்பொலியவே. (௧௰)

குன்றுதுன்றினவெனக்குமுறுகோபமதமா
ஒன்றினொன்றிடையடுக்கினதடக்கையுதவப்
பின்றுகின்றபிலனிற்பெரியவாயினொருபால்
மென்றுதின்றுவிளியாதுவிரியும்பசியொடே. (௧௧)

பன்னகாதிபர்பணாமணிபறித்தவைபகுத்
தென்னவிண்ணவர் † விமானமிடையிட்டரவிடைத்
துன்னுகோளினொடுதாரகைதொடுத்ததுமணிச்
சன்னவீரமிடைமின்னுதடமார்பினொடுமே. (௧௨)

பம்புசெக்கரெரியொக்குமயிர்பக்கமெரியக்
கும்பமுற்றவுயர்நெற்றியின்விசித்தொளிகுலா
உம்பருக்கரசன்மால்கரியினோடையெயிறின்
‡ கிம்புரிப்பெரியதோள்வளையொடுங்கிளரவே. (௧௩)

---

* அந்தகன்-எல்லாப்பிராணிகளுக்கும் முடிவைச்செய்பவன்.
† விமானம்-தேவஊர்தி.
‡ கிம்புரி-யானைக்கொம்பிற்பூண்.

தங்குதிண்கரியகாளிமைதழைந்துதவழப்
பொங்குவெங்கொடுமையென்பதுபுழுங்கியெழமா
மங்குபாதகம்விடங்கனல்வயங்கிதிமிரக்
கங்குபூசிவருகின்றகலிகாலமெனவே. (க௪)

செற்றவாளுழுவைவன்செறியதட்டிருகுறச்
சுற்றிவாரணவுரித்தொகுதிநீவிதொடரக்
கொற்றமேவுதிசையானையின்மணிக்குலமுடைக்
கற்றைமாசுணம்விரித்துவரிகச்சொளிரவே. (கரு)

செங்கணங்கவரவின்பொருவில்செம்மணிவிராய்
வெங்கணங்கவலயங்களும்இலங்கவிரவிச்
சங்கணங்கிய * சலஞ்சலமலம்புதவளக்
கங்கணங்களுமிலங்கியகரம்பிறழவே. (கசு)

முந்துவெள்ளிமலைபொன்னின்மலையோடுமுரணப்
பந்துமுந்துகழல்பாடுபடவூடுபடர்வோன்
வந்துமண்ணினிடையோனெனினும்வானினிமையோர்
சிந்தையுள்ளும்விழியுள்ளுமுளனென்றதிறலோன். (கஎ)

பூதமத்தனையுமோர்வடிவுகொண்டுபுதிதென்
றோதவொத்தவுருவத்தனுருமொத்தகுரலன்
காதலித்தயனளித்தகடையிட்டகணிதப்
பாதலக்கமதவெற்பிடைபடைத்தவலியான். (கஅ)

சாரவந்தயல்விலங்கினன்மரங்கடறையில்
பேரவன்கிரிபிளந்துகவளர்ந்திகல்பெரு
வீரவெஞ்சிலையினோரெதிர்விராதனெனுமக்
கோரவெங்கணுருமேறனைகொடுந்தொழிலினான். (ககூ)

நில்லுநில்லுமெனவந்துநிணமுண்டநெடுவெண்
பல்லும் † வல்லெயிறுமின்னுபகுவாய்முழைதிறந்
தல்லிபுல்லுமலரன்னமனையாளையொருகைச்
சொல்லுமெல்லையின்முகந்துயாவிசும்புதொடரா. (உ0)

காளைமைந்தரதுகண்டுகதம்வந்துகதுவத்
தோளில்வெஞ்சிலையிடங்கொடுதொடர்ந்துசுடர்வாய்
வாளிதங்கியவலங்கையவர்வஞ்சனையடா
‡ மீள்தியெங்ககறியென்பதுவிளம்பவவனும். (உக)

---

* சலஞ்சலம்-வலம்புரி ஆயிரம் சூழ்ந்தசங்கு.
† வல்லெயிறு-வக்கிரதந்தம்.
‡ மீடியென்பது மீள்தியென எதுகைநோக்கிவந்த வியல்புவனப் பெண்க.

ஆதிநான்முகன்வரத்தினெனதாவியகலேன்
ஏதியாவதுமின்றியுலகியாவுமிகலில்
சாதியாதனவுமில்லையுயிர்தந்தனனடா
போதிர்மாதிவளையுந்தியினிதென்றுபுகல. (உஉ)

வீரனுஞ்சிறிதுவெண்முறுவல்வெண்ணிலவுகப்
போரறிந்திலனிவன்றனதுபொற்புமூரணும்
தீருமெஞ்சியெனநெஞ்சினுறுசிந்தைதெரியாப்
பாரவெஞ்சிலையினாணொலிபடைத்தபொழுதே. (உங)

இலைகொள்வேலடலிராமனெழுமேகவுருவன்
சிலைகொணாணெடியகோதையொலியேறுதிரைநீர்
மலைகணீடுதலநாகாபிலம்வானமுதலாய்
உலகமேழுமுருமேறெனவொலித்ததாறவே. (உச)

வஞ்சகக்கொடியபூசைநெடுவாயின்மறுகும்
பஞ்சரக்கிளியெனக்கதறுபாவையைவிடா
நெஞ்சுளுக்கினனெனச்சிறிதுநின்றுநினையா
அஞ்சனக்கிரியனானெதிரரக்கனுலா. (உரு)

பேய்முகப்பிணியறப்பகைஞாபெட்பினுதிரா
தோயமுகத்துகனத்துசுடாககுதிரையின்
வாய்முகத்திடைநிமிர்த்துவடவேலைபருகும்
தீய்முகத்திரிசிகைப்படைதிரித்தெறியவே. (உசா)

திசையுமவானவருநின்றதிசைமாவுமுலகும்
அசையுமாலமெனவன்னவயின்மின்னிவரலும்
வசையின்மேருமுதன்மால்வரைகளேழின்வலிசால
விசையவாசிலையிராமனொருவாளிவிடவே. (உஎ)

இற்றதின்றேருடிவவரக்கர்குலமென்றுபகலே
வெற்றவிண்ணினிடைநின்றநெடுமீன்விழுவபோல்
சுற்றமைந்தசுடரஃகமதிரண்டுதுணியா
அற்றகண்டமவையாசையினதந்தமுறவே. (உஅ)

சூரொடுங்கயிறுணிந்திறுநூல்கண்டுசிறிதும்
போரொடுங்கிலன்மறங்கொடுபுழுங்கிநிருதன்
பாரொடுங்குறுகாங்கொடு * பருப்பதமெலாம்
வேரொடுங்கடிதெடுத்தெதிர்விசைத்துவிடலும். (உகூ)

வட்டமிட்டகிரியற்றுகவயங்குவயிரக்
கட்டமைந்தகதிர்வாளியெதிரேகடவலான்

* பருப்பதம்-பர்வதமென்பதன் சிதைவு.

விட்டவிட்டமலைமீளவவன்மெய்யின்விசையால்
பட்டபட்டவிடமெங்குமுடலூறுபடலும். (௫௦)

ஓமராமரையொருங்குமுணர்வோருணர்வுறும்
நாமராமவரைநல்லறநிறுத்தநனுகித்
தாமராவணைதுறந்துதரைநின்றவரையோர்
மா * மராமரமிறுத்ததுகொடெற்றவராலும். (௫௧)

ஏறுசேவகனிரண்டிநெடிரண்டுகணையால்
வேறுவேறுதுணிசெய்ததுவிழுந்துவிசையால்
மாறுமாறுநிமிர்தோளிடையுமார்பினிடையும்
ஆறுமாறுமயில்வெங்கணையழுத்தவனும். (௫௨)

மொய்த்தமுட்டனதுடற்றலைதொளைப்பமுடுகிக்
கைத்தலத்தினிமிரக்கடிதுகன்றிவிசிறும்
மெய்த்தமெய்ப்பெரியகேழலெனவெங்கும்விசையில்
தைத்தவக்கணைதெறிப்பமெய்சிலிர்த்ததறவே. (௫௩)

எரியின்வார்கணையிராமன்விடவெங்குலையா
துருவியோடமறமோடெழல்செயாவுணர்வின்
அருவிபாயும்வரைபோல்குருதியாறபெருகிச
சொரிய † வேகவலிகெட்டுணர்வுசோர்வுறுதலும். (௫௪)

மெய்வரத்தினன்மிடற்படைவிடப்படுகிலன்
செய்யுமற்றுமிகலென்றுசினவாளருவிவன்
கைதுணித்துமெனமுந்துகடுகிப்படர்புயத்
தெய்வின்மற்பொருவுதோளிருவரேறினருதன். (௫௫)

உண்டெழுந்தவுணர்வவயினுணர்ந்துமுடுகித்
தண்டெழுந்தனையதோள்கொடுசுமந்துதழுவிப்
பண்டெழுந்தனதுவன்கதிபதிற்றின்முடுகிக்
கொண்டெழுந்தனன்விழுந்தழிகொழுங்குருதியான். (௫௬)

முந்துவான்முகடுறக்கடிதுமுட்டிமுடுகிச
சிந்துசோரியொடு ‡ சாரிகைதிரிந்தனனரோ
வந்துமேருவினைநாடொறும்வலஞ்செய்துழல்வோர்
இந்துசூரியரையொத்திருவரும்பொலியவே. (௫௭)

§ சுவணவண்ணனெடுகண்ணனுறைதோளன்விசைதோய்
அவணவிண்ணிடைநிமிர்ந்துபடர்கின்றவனறம்

---

* மராமரம்-ஆச்சாமரம்.
† வேகவலி-வேகமும் வலியுமென்றுமாம்.
‡ சாரிகை-மண்டலாகாரமானகதி.
§ சுவணவண்ணன்-ஸ்வர்ணவர்ணனென்பதன் சிதைவு.

சிவணதன்னசிறைமுன்னவரொடேகுசெலவத்
* துவணனென்னுநெடுமன்னவனுமொத்தனனரோ. (௩௮)

மாதயாவுடையதன்கணவன்வஞ்சன்வினையில்
போதலோடுமலமந்தனள்புலர்ந்துபொடியில்
கோதையோடுமொசிகொம்பெனவிழுந்தனள்குலச
சீதைசேவல்பிடியுண்டசிறையன்னமனையாள். (௩௯)

பின்னையேதுமுதவுந்துணைபெறாளுரைபெறாள்
மின்னையேயிடைநுடங்கிடவிரைந்துதொடர்வாள்
அன்னையேயனையவன்பினறவோர்கடமைவிட்
டென்னையேநுகர்தியென்றனளெழுந்துவிழுவாள். (௪0)

அழுதுவாய்குழறியாருயிரழுங்கியலையா
எழுதுபாவையனையாணிலையுணர்ந்திளையவன்
தொழுதுதேவிதுயர்கூரவிளையாடன்றொழிலோ
பழுதுவாழியெனவூழிமுதல்வன்பகர்வுறும். (௪௧)

ஏகநின்றநெறியெல்லைகடிதேறியினியிற்
போகனன்றெனநினைந்தனனிவன்பொருவிலோய்
சாகலின்றுபொருளன்றெனநகுந்தகைமையோன்
வேகவெங்கழலினுந்தலும்விராதன்விழவே. (௪௨)

தோளிரண்டும்வடிவாள்கொடுதுணித்துவிசையால்
மீளிமொய்ம்பினர்குதித்தலும்வெகுண்டுபுருவத்
தேளிரண்டுநெரியச்சினவுசெங்கணரவக்
கோளிரண்டுசுடருந்தொடர்வதிற்குறுகலும். (௪௩)

புண்ணிடைப்பொழியுயிர்ப்புனல்பொலிந்துவாவும்
விண்ணிடைப்படர்தல்விட்டெழுவிகற்பனினையா
எண்ணுடைக் † குரிசிலெண்ணியிளையோயிவனையிம்
மண்ணிடைக்கடிதுபொத்துதல்வழக்கெனலுமே. (௪௪)

மதநல்யானையனையானிலம்வகிர்ந்தகுழிவாய்
‡ நதமுலாவுநளிநீர்வயினழுந்தநவைதீர்
§ அதவமாயாறுநெயுண்டலகிலன்பர்கருதிற்
றுதவுசேவடியினாலமலனுந்துதலுமே. (௪௫)

---

* உவணன்-ஸுபர்ணனென்பதன் சிதைவு; அழகிய சிறகுடையவனென்று பொருள்.

† குரிசில்-பெருமையிற்சிறந்தோன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்.

‡ நதம்-மேற்குநோக்கிச் செல்லும் ஆறு; ஈண்டு தபதி, நருமதை இரண்டிலொன்றைக் கொள்ளலாம்.

§ அதவம்-யாகாக்கினியில் நெய்யைசசொரியும் அத்திக்கட்டையாற்செய்த அகப்பை. அதவு-அத்தி; அம்-சாரியை.

பட்டதன்மையுமுணர்ந்துபடர்சாபமிடமுன்
கட்டவன்பிறவிதந்தகடையானவுடருன்
விட்டுவிண்ணிடைவிளங்கினன்விரிஞ்சனெனவோர்
முட்டைதந்ததனில்வந்தமுதன்முன்னவனினே. (௪௬)
பொறியினொன்றியயல்சென்றுதிரிபுந்தியுணரான்
நெறியினொன்றினிலைநின்றநினைவுண்டதனினும்
பிறிவிலன்புதனிபண்டுடையபெற்றிதனினும்
அறிவுவந்துதவநம்பனையறிந்துபகர்வான். (௪௭)

வேறு.

வேதங்களறைகின்றவுலகெங்கும்விரிந்தனவுன்
பாதங்களிவையென்னிற்படிவங்களெப்படியோ
ஓதங்கொள்கடலன்றி * யொன்றினொடொன்றொவ்வாப்
பூதங்கடொறுமுறைந்தாலவையுன்னைப்பொறுக்குமோ. (௪௮)
கடுத்தகராங்கதுவநிமிர்கையெடுத்துமெய்கலங்கி
உடுத்ததிசையனைத்தினுஞ்சென்றொலிகொள்ளவுறுதுயரால்
அடுத்தபெருந்தனிமூலத்தரும்பரமேபரமேயென்
றடுத்தொருவாரணமழைப்பநீயோவன்றேனென்றாய். (௪௯)
புறங்காணவகங்காணப்பொதுமுகத்தினருணோக்கம்
இறங்காததாமரைக்கணெம்பெருமானணியம்புதியால்
அறங்காத்தற்குனக்கொருவராருமொருதுணையின்றிக்
கறங்காகுமெனத்திரியநீயேயோகடவாய்தான். (௫௰)
துறப்பதேதொழிலாகத்தோன்றினோர்தோன்றியக்கால்
மறப்பரோதம்மையதுவன்றாகின்மற்றவர்போல்
சிறப்பரோவெவர்க்குந்தாம்பெற்றபதம்பெறலரிதோ
இறப்பதேபிறப்பதேயெனும்விளையாட்டினிதுகந்தோய். (௫௧)
ணிநின்றபெரும்பிறவிக்கடல்கடக்கும்படிபற்றி
ணிநின்றசமயத்தோரெல்லாருநன்றென்னத்
ணிநின்றதத்துவத்தின்றகைமூர்த்திநீயாகில்
னிநின்றமுதற்றேவரென்கொண்டென்செய்வாரே. (௫௨)
ஓயாதமலரயனேமுதலாகவுளராகி
மாயாதவானவர்க்குமற்றொழிந்தமன்னுயிர்க்கும்

* பூதங்கள்-பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. நிலம்-நிலையாயிருத்தலும், கந்தமுடையதாதலும்; நீர்-பாய்ந்தோடுதலும், குளிர்ந்த பரிசமுடையதாதலும்; தீ-மேல்நோக்கி எரிதலும், சுடும்பரிசமுடையதாதலும்; விசும்பு-எங்கும் பரவியிருத்தலும், சப்தகுணமுடையதாதலுமாகிய தன்மை வேறுபாடுகளைப்பற்றி ஒன்றினோடொன்றொவ்வாப் பூதங்கள் என்றார்.

நீயாகின்முதற்றாதைநெறிமுறையாலீன்றெடுத்த
தாயாவார்யாவரேதருமத்தின்றனிமூர்த்தி. (ருங

நீயாதிபரம்பரமுநின்னவேயுலகங்கள்
ஆயாதசமயமுநின்னடியவேயயலில்லை
தீயாரிஞெளித்தியால்வெளிநின்றூற்றீங்குண்டோ
வீயாதபெருமாயைவிளையாட்டும்வேண்டுமோ. (ருச

தாய்தன்னையறியாதகன்றில்லைதன்கன்றை
யாயுமறியும்முலகின்றாயாகினைய
நீயறிதியெப்பொருளுமவையுன்னைநிலையறியா
மாயையிதுவென்கொலோவாராதேவரவல்லாய். (ருரு

பன்னலாமென்றுலகம்பலபலவுநினையுமால்
உன்னலாற்பெருந்தெய்வமுயர்ந்துளோரொழுக்கன்றே
அன்னவூர்தியைமுதலாமந்தணர்மாட்டருந்தெய்வம்
நின்னலாலில்லாமைநெறிநின்றூர்நினையாரோ. (ருசு

பொருவரியசமயங்கள்புகல்கின்றபுத்தேளிர்
இருவினையுமுடையார்போலருந்தவஞ்சின்றியற்றுவார்
திருவுறையுமணிமார்பநினக்கென்னைசெயற்பால
ஒருவினையுமில்லார்போலுறங்குதியாலுறங்காதாய். (ருஎ

அரவாகிச்சுமத்தியாலயிலெயிற்றினேந்துதியால்
ஒருவாயின்விழுங்குதியாலோரடியாலொளித்தியால்
திருவானநிலமகளையிஃதறிந்தாற்சீறாளோ
மருவாருந் * துழாயலங்கன்மணிமார்பின்வைகுவாள். (ருஅ

மெய்யைத்தான்சிறிதுணர்ந்துநீவிதித்தமன்னுயிர்கள்
உய்யத்தானாகாதோவுனக்கென்னகுறையுண்டோ
வையத்தார்வானத்தார்மழுவாளிக்கன்றளித்த
† வையத்தாற்சிறிதையந்தவிர்ந்தாருமுளரையா. (ருகூ

அன்னமாயருமறைகளறைந்தாய்நீயவையுன்னை
முன்னமாரோதுவித்தாரெல்லாருமுடிந்தாரோ
பின்னமாயொன்றுதல்பிரிந்தேயோபிரியாதோ
என்னமாமாயமிவையேனமாய்மண்ணிடந்தாய். (சுO

ஒப்பிறையும்பெறலரியவொருவாமூன்றுவந்துறையும்
அப்புறையுறைந்தடியேனருந்தவத்தாலணுகுறலால்
இப்பிறவிக்கடல்கடந்தேனினிப்பிறவேனிருவினையும்
துப்புறழுநீர்த்தசுடர்த்திருவடியாற்றுடைத்தாய்நீ. (சுக

* துழாய்-துளஸீ என்னும் வடமொழித்திரிபு.

† ஐயம்-பிச்சையுஞ் சந்தேகமுமாதல் "ஐயமே பிச்சையேற்கு மோட[illegible] மானம் பிச்சை" என்பதனாலறிக.

### வேறு.

இற்றெலாமியம்பினான்
சிற்றலோடுநீயிவ்வா
றுற்றவாறுணர்த்தெனா
வெற்றியான்விளம்பினான். (சுஉ)

கள்ளமாயவாழ்வெலாம்
விள்ளஞானம்வீசுதாள்
வள்ளல்வாழிகேளெனா
உள்ளவாறுணர்த்தினான். (சுங)

இம்பருற்றிதெய்தினேன்
வெம்புவிற்கைவீரபேர்
தும்புருத் * தனதன்சூழ்
அம்பரத்துளேனரோ. (சுச)

ஆடரம்பைநீடரங்
கூடுநின்றுபாடலால்
ஊடுவந்துகூடவிக்
கூடுவந்துகூடினேன். (சுரு)

கரக்கவந்தகாமநோய்
துரக்கவந்ததோமினால்
இரக்கமின்றியேவினான்
அரக்கன்மைந்தனாயினேன். (சுசு)

அன்னயக்கனாதியாய்
இன்னதீருமீகையான்
நின்னதாளினீங்குமென்
றன்னுமெற்குணர்த்தினான். (சுஎ)

வலஞ்செய்திந்தவானெலாம்
நலிஞ்சுதின்னநாமவேல்
பொலிஞ்சவென்றிபூணுமக்
கிலிஞ்சன்மைந்தனாயினேன். (சுஅ)

அன்றுமூலமாதியாய்
இன்றுகாறுமேழையேன்
நன்றுதீதுநாடலேன்
தின்றுதீயதேடினேன். (சுகூ)

† ஆண்டநின்றதொன்மைதான்
வேண்டநின்றவேதநூல்
பூண்டநின்பொலங்கொடாள்
நீண்டவின்றுதேறினேன். (எ0)

தெறுத்துவந்ததீதெலாம்
அறுத்தவுன்னையாதனேன்
ஒறுத்ததன்மையூழியாய்
பொறுத்தியென்றுபோயினான். ()

தேவுகாதல்சீரியோன்
ஆவிபோயினானெனாப்
பூவுலாவுபூவையோ
டேவலாருமேகினார். (எஉ)

கைகொள்காலவேலினார்
மெய்கொள் ‡ வேதமெய்யர்வாழ்
மொய்கொள்சோலைமுன்னினார்
வைகரூனும்வைகினார். (எங)

க-வது விராதன்வதைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-எங.

---

* தனதன்-சம்பத்தைக் கொடுக்கின்றவன்.

† ஆண்டுதல்-உண்டாக்கி வளர்த்தல்.

‡ வேதமெய்யர்-வேதவிதிப்படி நித்திய நைமித்திக கருமங்களிற் சிறிதும் வழுவாது ஒழுகுபவர்.

## * உ-வது, சரபங்கர் பிறப்பு நீங்கு படலம்.



குரவங்குவிகோங்கலர்கொம்பினொடும்
இரவங்கனுறும்பொழுதேகினரால்
சரவங்களிருந்துதவங்கருது
மரவங்கிளர்கோங்கொளிர் ‡ வாசவனம். (க)

செவ்வேலவர்சென்றனர்சேறலுறும்
அவ்வேலையினெய்தினனுயிரமாம்
தவ்வாதிரயும்பொலிதாமரையின்
வெவ்வேறலர்கண்ணினன்விண்ணவர்கோன். (உ)

அன்னச்செலவிற்படிமேலயல்சூழ்
பொன்னிற்பொலிவாரணிபூணொளிமேல்
மின்னிற்செறிகற்றைதவிர்ந்தனபோல்
பின்னிச்சுடரும்பிறங்குபேரொளியான். (ங)

வானிற்பொலிதோகையர்கண்மலர்வண்
கானிற்படர்கட்களிவண்டொடுகார்
மேனித்திரு § நாரதன்வீணையிசைத்
தேனிற்பொலியுஞ்செவிவண்டுடையான். (ச)

அனையின்றுறைறையம்பதொடைம்பதுநூல்
வினையின்றொகைவேள்விகிரம்பியமா
முனைவன்முதுதேவரின்மூவரலார்
புனையும்முடிதுன்றுபொலங்கழலான். (ரு)

செம்மாமலராணிகர்தேவியொடும்
மும்மாமதவெண்ணிறமுன்னுயர்தாள்
வெம்மாமிசையான்விரிவெள்ளிவிளங்
கம்மாமலையண்ணலேயனையான். (சா)

தானின்றயனின்றொளிர்தண்கதிரோன்
யானின்றதெனென்றொளியெஞ்சிடமா
வானின்றபெரும்பதம்வந்துருவாய்
மேனின்றெனநின்றொளிர்வெண்குடையான். (எ)

* சரபங்கர்-(மன்மத) பாணங்களைப் பங்கப்படுத்தினவர்; அதாவது காமத்தை ஒழித்தவர்.

‡ வாசவனம் - வாசனையையுடைய ஆச்சிரமம், வாசஸ்தானமாகிய சோலை எனினும் பொருந்தும்.

§ நாரதன் என்பதற்கு ஆத்மஞானத்தை உபதேசிப்பவனென்றும், நரர்களுக்கு உள்ள ஒற்றுமையைப் பிளப்பவனென்றும் இருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

திசைகட்டியமால்கரிதெட்டமதப்
பசைகட்டினகிட்டினபற்பலபோர்
விசைகட்டழிதானவர்விட்டவர்பேர்
இசைகட்டியவொத்திவர் * சாமரையான். (அ)

சீர்விற்றிரிசெங்கதிர்தங்குவதோர்
ஊருற்றதெனப்பொலிவொண்முடியான்
போர்வித்தகனேமிபொறுத்தவன்மா
மார்விற்றிருவிற்பொலிமாலையினான். (கூ)

செற்றிக்கதிரிற்பொலிசெம்மணியின்
கற்றைச்சுடர்விட்டெரிகஞ்சுகியான்
வெற்றித்திருவின்குளிர்வெண்ணகைபோல்
சுற்றிக்கிளருஞ்சுடர்தோள்வளையான். (க0)

பல்லாயிரமாமணிபாடமுறும்
தொல்லாரணிகால்சுடரின்றொகைதாம்
எல்லாமுடனாயெழலானயலே
வில்லாவொளிர்மேகமெனப்பொலிவான். (கக)

மானாவுலகந்தனின்மன்றல்பொரும்
தேனாறுநலஞ்செறிதொங்கலினான்
மீனேறுகெடுத்துயர்வென்றியவாம்
வானாடியர்கண்ணெனும்வாளுடையான். (கஉ)

வெல்வானசையால்விசையால்விடுநாள்
எல்வான்சுடர்மாலையிராவணன்மேல்
நெல்வாலுமறாதநிறம்பிறழா
வல்வாய்மடியாவயிரப்படையான். (கங)

நின்றானெதிர்நின்றநெடுந்தவனும்
சென்றானெதிர்கொண்டுசிறப்பமையா
என்றானிவணெய்தியவாறெனலும்
பொன்றாதபொலங்கழலோன்புகலும். (கச)

நின்னாலியனீதிநெடுந்தவமின்
றென்னானும்விளம்பரிதென்றுணர்வான்
அந்நான்முகனின்னையழைத்தனனால்
பொன்னார்சடைமாதவபோதுதியால். (கரு)

* சாமரை-சமரமென்னும் மானினது வாலின்மயிராற் செய்யப்பட்டதொரு இராஜசிஹ்நம்.

எந்தாயுலகியாவையுமெவ்வுயிரும்
தந்தானுறையுந்நெறிதந்தனனால்
நந்தாதபெருந்தவநாடதுநீ
வந்தாயெனினின்னெதிரேவருவான். (கசு)

எல்லாவுலகிற்குமுயர்ந்தமையான்
சொல்லாவகைநீயுணர்தொன்மையையா
னல்லாயுடனேநடநீயெனலும்
அல்லேலெனன * வாலறிவானறைவான். (கஎ)

சொற்பொங்குபெரும்புகழோய்தொழின்மாய்
சிற்பங்களின்வீவனசேர்குவெனோ
அற்பங்கருதேனெனருந்தவமோ
† கற்பம்பலசென்றதுகாணுதியால். (கஅ)

சொற்றுந்தாமன்றிதுசூழ்கழலாய்
பெற்றம்பெறுகில்லதொர்பெற்றியதே
மற்றென்பலசொல்லிவண்வந்துதவம்
முற்றும்பகரூனுமுடித்தனனால். (ககூ)

சிறுகாலையிலாநிலையோதிரியா
குறுகாநெடுகாகுணம்வேறுபடா
உறுகால்கிளர்பூதமெலாமுகினும்
மறுகாநெறியெய்துவென்வானுடையாய். (உ0)

என்றின்னவிளம்பிடுமெல்லையின்வாய்
வன்றிண்சிலைவீரரும்வந்தணுகா
ஒன்றுங்கிளரோதையினாலுணர்வார்
நின்றென்னைகொலின்னதெனாநினைவார். (உக)

கொம்பொத்தனநாலொளிர்கோள்வயிரக்
§ கம்பக்கரிநின்றதுகண்டனமால்
இம்பர்த்தலைமாதவர்பாலிவனும்
உம்பர்க்கரசெய்தினனென்றுணரா. (உஉ)

மானேயனையாளொடுமைந்தனையும்
பூநேர்பொழிலின்புறமேநிறுவா
ஆனேறெனவாளரியேறெனத்
தானேயவ்வகன்பொழில்சாருதலும். (உங)

* வால்அறிவான்-தத்துவஞானத்தையுடையவர், வால்-தூய்மை.

† கற்பம்-யுகம்.

§ கம்பக்கரி-மதத்தாலே கம்பத்தினின்றும் விடவொண்ணாதபடி நிற்கும்யானை; கண்டாரெல்லாம் நடுங்கும்படி மதிப்பையுடைய ஆனை. கம்பம்-நடுக்கம்.

கண்டாமவையாயிரமுங்க தூவக்
கண்டாமரைபோல்கருஞாயிறெனக்
கண்டானிமையோரிறை * காசினியின்
கண்டானருநான்மறையின்கனியை. (உ௪)

காணுமனநொந்துகவன்றனனுல்
ஆணுதவேயந்தணர்நாயகனை
நாணுளும்வணங்கியான்முடியால்
தாணுகியதோள்கொடவற்றெழுவான். (உ௫)

வேறு.

துவசமார்தொல்லமருட்டுன்னாரைச்செற்றுஞ்
சுருதிப்பெருங்கடலின்சொற்பொருள்கற்பித்தும்
திவசமாநல்லறத்தின்செந்நெறியினுய்த்துந்
திருவளித்தும்வீடளித்துஞ் † சிங்காமைத்தங்கள்
கவசமாயாருயிராய்த்தவமாய்க்கண்ணாய்க்
கடையிலாஞானமாய்க்காப்பானைக்காணு
அவசமாய்ச்சிந்தையழிந்தயலேநின்று
னறியாதான்போலவறிந்தவொன்றுசொல்வான். (உ௬)

தோய்ந்தும்பொருளனைத்துந்தோயாதுநின்ற
சுடரேதொடக்கறுத்தோர்சுற்றமேபற்றி
நீந்தவரியநெடுங்கருணைக்கெல்லா
நிலயமேவேதநெறிமுறையினேடி
ஆய்ந்தவுணர்வினுணர்வேபகையா
லலைப்புண்டடியேமடிபோற்றவந்நாள்
ஈந்தவரமுதவவெய்தினையேயெந்தா
யிருநிலத்தவோநின் ‡ னிணையடித்தாமரைதாம். (உ௭)

மேவாதவரில்லைமேவினருமில்லை
வெளியோடிருளில்லைமேல்கீழுமில்லை
மூவாமையில்லைமூத்தமையுமில்லை
முதலிடையோடீறில்லைமுன்னொடுபின்னில்லை
தேவாவிங்கிவ்வோநீசென்றநிலையென்றாற்
சிலையேந்திவந்தெம்மைச்சேவடிகளோவக்
காவாதொழியிற்பழிபெரிதோவன்றேறற்
கருங்கடலிற்கண்வளராய்கைம்மாறுமுண்டோ? (உ௮)

---

* காசினி-காஸ்யபீ என்னும் வடசொல்லின் சிதைவு; பரசுராம ராற் கச்யபமுனிவருக்கு யஜ்ஞதக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டதனுல் பூமிக்கு இப்பெயர்.

† சிங்காமை-அழியாமை. ‡ இணையடி-உபயபாதம்.

நாழிகைநீருலகெலாமாக
நளினத்துநீதந்தநான்முகனார்தாமே
ஊழிபலபலவுநின்றளந்தாலொன்று
மூலவாப்பெருங்குணத்தவுத்தமனேமேனாள்
தாழிதரையாகத்தண்டயிர்நீராகத்
தடவரையேமத்தாகத்தாமரைக்கைநோவ
ஆழிகடைந் * தமுதமெங்களுக்கேயீந்தா
யவுணர்கடாநின்னடிமையல்லாமையுண்டோ? (௨௯)

ஒன்றாகிமூலத்துருவம்பலவாகி
யுணர்வுமுயிரும்பிறிதாகியூழி
சென் † றாசறுங்காலத்தந்நிலையதாகித்
திறத்துலகந்தானாகிச்செஞ்செவேநின்ற
நன்றாயஞானத்தனிக்கொழுந்தேநங்க
ணவைதீர்க்குநாயகமேநல்வினையேநோக்கி
நின்றாரைக்காத்தியயற்பேரைக்காய்தி
நிலையில்லாத்தீவினையுநீதந்ததன்றே. (௩௰)

வல்லைவரம்பில்லாதமாயவினைதன்னான்
மயங்கினரோடெய்திமதிமயங்கிமேனாள்
அல்லையிறைவனீயாதியெனப்பேதுற்
றலமருவேமுன்னையறப்பயனுண்டாக
எல்லைவலயங்கணின்னுழையென்றந்நா
ளெரியோனைத்தீண்டி ‡ யெழுவரெனநின்ற
தொல்லைமுதன்முனிவர்சூழுற்றபோதே
தொகைநின்றவையந்துடைத்திலையோவெந்தாய்! (௩௧)

வேறு.

இன்னனபலநினைந்தேத்தினனியம்பாத்
துன்னுதவிடையுளதெனமுனிதுணிவான்
தன்னிகர்முனிவனைத்தரவிடையென்னாப்
பொன்னொளிர்நெடுமுடிப்புரந்தரன்போனான். (௩௨)

போனவனகநிலைபுலமையினுணர்வான்
வானவர்தலைவனைவரவெதிர்கொண்டான்
ஆனவனடிதொழவருள்வரவழுதான்
தானடவிடவகைதழுவினனுழைவான். (௩௩)

---

* அமுதம்-அம்ருதம் என்பதன் விகாரம்; சாவாமருந்து.

† ஆசறுதல்-முடிதல்.

‡ எழுவர்-சப்தருஷிகள்.—அத்திரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காஸ்யபர், ஆங்கிரஸர்.

* ஏழையுமிளவலும்வருகெனவினிதா
வாழியவவரொடும்வந்தனன்மகிழ்வால்
ஊழியின்முதன்முனியுறையுளையணுகா
ஆழியில்விழிதுயிலவனெனமகிழ்வான். (௩௪)

அவ்வயினமுகனும்வைகினனறிஞன்
செவ்வியவறவுரைசெவிவயினுகவ
நவ்வியின்விழியவளொடுநனியிருளைக்
கவ்வியநிசியொருகடையுறுமளவில். (௩௫)

விலகிடுநிழலினன்வெயில்விரியயில்வாள்
இலகிடுசுடரவனிசையனதிசைதோய்
அலகிடலரியதனவிர்கரநிரையால்
உலகிடுநிறையிருளுறையினையுரிவான். (௩௬)

ஆயிடையறிஞனுமவனெதிரமுவத்
தீயினைநுழைவதொர்தெளிவினையுடையான்
நீவிடைதருகெனநிறுவினனெறியால்
காயெரிவரன்முறைகடிதினினிடுவான். (௩௭)

வரிசிலையுழவனுமறையுமவனைநீ
புரிதொழிலெனையதுபுகலுதியெனலும்
திருமகடலைவசெய்திருவினையுறையான்
எரிபுகநினைகுவெனருள்கெனவிறைவன். (௩௮)

யான்வருமமைதியினிதுசெயலெவனோ
மான்வருதனியுரிமார்பினையெனலும்
மீன்வருகொடியவன்விறலடுமறவோன்
ஊன்வருமுவகையினுரைநனிபுரிவான். (௩௯)

ஆயிரமுகமுளதவமயர்குவெனான்
நீயிவண்வருதிகொலெனுநிலையுடையேன்
போயினவிருவினைபுகலுறலிதியால்
மேயினையினியொருவினையிலைவிறலோய். (௪0)

இந்திரனருளினனிறுதிசெய்பகலா
வந்தனன்மருவுதிமலரயனுலகம்
தந்தனனெனவதுசாரலெனுரவோய்
அந்தமிலுயர்பதமடைதலைமுயல்வேன். (௪௧)

ஆதலினிதுபெறவருளெனவுரையாக்
காதலியவளொடுகதழெரிமுழுகிப்

---

* ஏழை-மடமைக்குணமுடையவள்.

3

போதலைமருவினனொருநெறிபுகலா
வேதமுமறிவருமிகுபொருளுணர்வோன். (௪௨)

தேவருமுனிவருமுறுவதுதெரிவோர்
* மாவருநறுவிரைமலரயன்முதலோர்
ஏவருமறிவினிலிருவினையொருவிப்
போவதுகருதுமவ்வருநெறிபுக்கான். (௪௩)

அண்டமுமகிலமுமறிவருநெறியால்
உண்டவனொருபெயருணர்குநருறுபே
றெண்டவநெடிதெனினிறுதியிலவனைக்
கண்டவருறுபொருள்கருதுவதெளிதே. (௪௪)

உ-வது, சரபங்கர்பிறப்புநீங்குபடலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-ககஎ.

## † ௩-வது, அகத்தியப் படலம்.

அனையவனிறுதியினமைரவுநோக்கலின்
இனியவரின்னலினிரங்குநெஞ்சினர்
குனிவருதிண்சிலைக்குமரர்கொம்பொடும்
புனிதனதுறையுணின்றரிதிற்போயினார். (க)

மலைகளுமரங்களுமணிக்கற்பாறையும்
அலைபுனனதிகளுமருவிச்சாரலும்
இலைசெறிபழுவமுமினியசூழலும்
நிலைமிகுதடங்களுமினிதுநீங்கினார். (உ)

பண்டையவயன்றரு ‡ பாலகில்லரும்
முண்டருமோனருமுதலினோர்களத்
தண்டகவனத்துறைதவத்துளோர்கடாம்
கண்டனரிராமனைக்களிக்குஞ்சிந்தையார். (௩)

கனைவருகடுஞ்சினத்தரக்கர்காயவோர்
வினைபிறிதின்மையின்வெதும்புகின்றனர்
அனைவருகானகத்தமுதளாவிய
புனைவரவுயிர்வருமுலவைபோல்கின்றார். (௪)

---

* மா-அழகும் ஒளியுமாம்.

† அகத்தியர்-அகஸ்த்யர்; விந்தியபருவதத்தை வளரவொட்டாமல் தடுத்து அடக்கியவர்; அகம்-மலை; சலியாதது.

‡ பாலகில்லர் வடசொற்றிரிபு. வாலகில்லியர்-பகவானது. மயிரினின்றுந் தோன்றினவர்.

ஆய்வரும்பெருவலியரக்கர்நாமமே
வாய்வெரீஇயலமருமறுக்கநீங்கினார்
தீவருவனத்திடையிட்டுத்தீர்ந்ததோர்
தாய்வரநோக்கியகன்றின்றன்மையார். (௫)

கரக்கருங்கடுந்தொழிலரக்கர்காய்தலில்
பொரற்கிடமின்மையிற்புழுங்கிச்சோருநர்
அரக்கரென்கடலிடையாழ்கின்றாரொரு
மரக்கலம்பெற்றெனமறுக்கநீங்கினார். (௬)

தெரிஞ்சுறநோக்கினர்செய்தசெய்தவம்
அருஞ்சிறப்புதவநல்லறிவுகைதர
விரிஞ்சுறப்பற்றியபிறவிவெந்துயர்ப்
பெருஞ்சிறைவீடுபெற்றனையபெற்றியார். (௭)

வேண்டினவேண்டினர்க்களிக்குமெய்த்தவம்
பூண்டுளராயினும்பொறையினாற்றலால்
மூண்டெழுவெகுளியைமுதலினீக்கினார்
ஆண்டுறையரக்கராலலைப்புண்டாரரோ. (௮)

எழுந்தனரெய்தினரிருண்டமேகத்தின்
கொழுந்தெனநின்றவக்குரிசில்வீரனைப்
பொழிந்தெழுகாதலிற்பொருந்தினாரவன்
தொழுந்தொறுந்தொழுந்தொறுமாசிசொல்லுவார். (௯)

இனியதோர்சாலைகொண்டேகியிவ்வயின்
நனியுறையென்றவற்கமையநல்கித்தாம்
தனியிடஞ்சார்ந்தனர்தங்கிமாதவர்
அனைவருமெய்தினரல்லல்சொல்லுவான். (௧0)

எய்தியமுனிவரையிறைஞ்சியேத்துவந்
தையனுமிருந்தனனருளென்னென்றலும்
வையகங்காவலன்மைந்தவந்ததோர்
வெய்யவெங்கொடுந்தொழில்விளைவுகேளென. (௧௧)

இரக்கமென்றொருபொருளிலாதநெஞ்சினர்
அரக்கரென்றுளர்சிலரறத்தினீங்கினார்
நெருக்கவும்யாம்படர்நெறியலாநெறி
துரக்கவுமருந்தவத்துறையுணீங்கினேம். (௧௨)

வல்லியம்பலதிரிவனத்துமானென
எல்லியும்பகலுநொந்திரங்கியாற்றலெம்

சொல்லியவறநெறித்துறையுநீங்கினெம்
வில்லியன்மொய்ம்பிணெய்வீடுகொண் * குமோ. (கங-)

மாதவத்தொழுகலெமறைகள்யாவையும்
ஓதலெமோதுவார்க்குதவலாற்றலெம்
† மூதெரிவளர்க்கிலெமுறையினீங்கினேம்
ஆதலி ‡ னந்தணரேயுமாகிலேம். (க௪)

இந்திரனெனினவனரக்கரேயின
சிந்தையிற்சென்னியிற்கொள்ளுஞ்செய்கையான்
எந்தைமற்றியாருளரிடுக்கணீக்குவார்
வந்தனையாஞ்செய்ததவத்தின்மாட்சியால். (கரு)

உருளுடைநேமியாலுலகையோம்பிய
பொருளுடைமன்னவன்புதல்வபோக்கிலா
இருளுடைவைகலேமிரவிதோன்றினாய்
அருளுடைவீரநின்னபயம்யாமென்றார். (கசு)

(வேறு).

புகல்புகுந்திலரேற்புறத்தண்டத்தின்
அகல்வரேனுமென்னம்பொடும்வீழ்வரால்
தகவிறுன்பந்தவிருதிர்நீரெனப்
பகலவன்குலமைந்தன்பணிக்கின்றான். (கஎ)

வேந்தன்வீயவும்யாய்வரமேவவும்
ஏந்தலெம்பிவருந்தவுமென்னகர்
மாந்தர்வன்றுயர்கூரவும்யான்வனம்
போந்ததென்னுடைப்புண்ணியத்தாலென்றான். (கஅ)

அறந்தவாநெறியந்தணர்தன்மையை
மறந்தபுல்லர்வலிதொலையேனெனின்
இறந்துபோகினுநன்றிதுவல்லது
பிறந்தியான்பெறும்பேறென்பதியாவதோ. (க௯)

நிவந்தவேதியர்நீவிருந்தியவர்
கவந்தபந்தக்களிநடங்கண்டிட
அமைந்தவில்லுமருங்கணைத்தூணியும்
சுமந்ததோளும்பொறைத்துயர்தீருமால். (உ0)

ஆவுக்காயினுமந்தணர்க்காயினும்
யாவர்க்காணுமெளியவர்க்காயினும்

* கும்-தன்மைப் பன்மை விகுதி; எதிர்காலம் காட்டிற்று.
† மூதெரி-காருகபத்தியம், ஆகவநீயம், தக்ஷிணாக்கினி என்பவை.
‡ அந்தணர்-ஈண்டு முனிவரை.

சாவப்பெற்றவரேதகைவானுறை
தேவர்க்குந்தொழுந்தேவர்களாகுவார். (௨௧)

சூரறுத்தவனுஞ்சுடர்நேமியும்
ஊரறுத்தவொருவனுமோம்பினும்
ஆரறத்தினொடன்றிநின்றாரவர்
வேரறுப்பென்வெருவன்பினீரென்றான். (௨௨)

உரைத்தவாசகங்கேட்டவரோங்கிட
இரைத்தகாதலரேகியவின்னலர்
திரித்தகோலினர் * தேமறைபாடினர்
நிருத்தமாடினர்நின்றவிளம்புவார். (௨௩)

தோன்றனீமுனியிற்புவனத்தொகை
மூன்றுபோல்வனமுப்பதுகோடியந்
தேன்றபோதுமெஞ்ஞிரலவென்றலிற்
சான்றவேதந்தவம் ‡ பெருஞானமே. (௨௪)

அன்னதாகலினேயினவாண்டெலாம்
இன்னல்காத்திங்கினிதுறைகவெனச்
சொன்னமாதவர்பாதந்தொழுதுயர்
மன்னர்மன்னவன்மைந்தனும்வைகினான். (௨௫)

ஐந்துமைந்துமமைதியினண்டவண்
மைந்தர்தீதிலர்வைகினர்மாதவர்
சிந்தையெண்ணியகத்தியற்சேர்கென
இந்துநன்னுதறன்னொடுமேகினார். (௨௬)

விடரகங்களும்வெய்செறிகானமும்
படருஞ்சின்னெறிப்பையநீங்கினார்
சுடருமேனிச்சுதீக்கணனென்னுமவ்
விடரிலானுறைசோலைசென்றெய்தினார். (௨௭)

அருக்கனன்னமுனிவனையவ்வழிச்
செருக்கில்சிந்தையர்சேவடிதாழ்தலும்
இருக்கவீண்டென்றினியனகூறினான்
மருக்கொள்சோலையின்மைந்தரும்வைகினார். (௨௮)

வைகும்வைகலின்மாதவன்மைந்தன்பால்
செய்கையாவையுஞ்செய்திவட் § செல்வநீ

---

* தேமறை-இனிப்பான வேதங்கள், தெய்வத்தன்மையையுடைய வேதம் என்றுமாம்.

‡ பெருஞானம்-ஐயந்திரிபில்லாத உண்மையுணர்வு.

§ செல்வன்-இம்மை மறுமை வீடுகளில் அடையும் பாக்கியங்களைத் தன் அடியார்க்குத் தருபவன்.

எய்தயான்செய்தவெத்தவமென்றனன்
ஐயனும்மவற்கன்பினன்கூறுவான். (௨௯)

சொன்னநான்முகன்றன்வழித்தோன்றினர்
முன்னையோருளுயர்தவமுற்றினோர்
உன்னின்யாருளருன்னருளெய்திய
என்னின்யாருளரிற்பிறந்தாரென்றான். (௩0)

உவமைநீங்கியதோன்றலுரைக்கெதிர்
நவமைநீங்கியாற்றவன்சொல்லுவான்
அவமிலாவிருந்தாகியென்றலைமை
தவமெலாங்கொள்கதக்கிணையாவென்றான். (௩௧)

மறைவலானெதிர்வள்ளலுங்கூறுவான்
இறைவநின்னருளொத்தவத்திற்கெளி
தறைவதீண்டொன்றதற்றியற்காண்பதோர்
குறைகிடந்ததினிமெயனைக்கூறினேன். (௩௨)

நல்லதேனைந்தாயதுநாளுமுன்
சொல்லுவான்றனிகின்றதுதோன்றனீ
செல்லுகாண்டவற்சேருதிசேர்ந்தபின்
இல்லைநின்வயினெய்துவில்லாததே. (௩௩)

அன்றியுநின்வரவினையாதரித்
தின்றுகாறுநின்றேறமுறுமாலவற்
சென்றுசேருதிசேருதல்செவ்வியோய்
நன்றுதேவர்க்கும்யாவர்க்குநன்றரோ. (௩௪)

வழியுங்கூறிவரம்பகலாசிகள்
மொழியுமாதவன்மொய்ம்மலர்த்தாடொழாப்
பிழியுந்தேனிற்பிறங்கருவித்திரள்
பொழியுஞ்சோலைவிரைவினிற்போயினார். (௩௫)

வேறு.

ஆண்டகையாங்கவ்வயினடைந்தமையறிந்தான்
ஈண்டுவகைமேலதுணையேழுலகமெய்த
மாண்டவரதன்சரண்வழங்கவெதிர்வந்தான்
நீண்ட * தமிழாலுலகைநேமியினளந்தான். (௩௬)

பண்டவுணர்மூழ்கினர்படார்களெனவானோர்
எண்டவவெமக்கருள்கெனக்குறையிரந்தார்

---

* தமிழால் உலகை அளத்தல்-தமிழ்ப்பாஷையை உலகமுழுவதும் பரவச்செய்தல்.

கண்டொருகைவாரினன்முகந்துகடலெல்லாம்
உண்டவர்கள்பின்னுமிழ்கவென்றலுமுமிழ்ந்தான். (௩௭)

தூயகடனீரடிசிலுண்டது * துரந்தான்
ஆயவதலாலமருமெய்யுடையவன்றான்
மாயவினைவாளவுணன்மாயவவன்வன்மைக்
காயமினிதுண்டுலகினாரிடர்களைந்தான். (௩௮)

யோகமுறுபேருயிர்கடாமுலைவுறாமல்
எகுநெறியாதெனமிகித்தடியினேறி
மேகநெடுமாலைதவழ்விந்தையெனும்விண்டோய்
நாகமதுநாகமுறநாகமெனநின்றான். (௩௯)

மூசரவுசூடுமுதலோனுரையின்மூவா
மாசிறவவேகெனவடாதுதிசைமேனாள்
நீசமுறவாணிநெடுமாமலயநேரா
ஈசனிகராயுலகுசீர்பெறவிருந்தான். (௪௰)

உழக்குமறைநாலினுமுயர்ந்துலகமோதும்
வழக்கினுமதிக்கவியினும்மரபினாடி
நிழற்பொலிகணிச்சிமணிநெற்றியுமிழ்செங்கண்
தழற்புரைசுடர்க்கடவுடந்ததமிழ்தந்தான். (௪௧)

விண்ணினினிலத்தினில்விகற்பவுலகிற்பேர்
எண்ணினிலிருக்கினிலிருக்குமெனயாரும்
உண்ணினைகருத்தினையுறப்பெறவெனாவென்
கண்ணினிலெனக்கொடுகளிப்புறமனத்தான். (௪௨)

இரைத்தமறைநான்கினொ ‡ டியைந்தபிறயாவும்
நிரைத்தநெடுஞானநி[illegible]ர்கல்வினொடுநாளிட்
டுரைத்துமயனாலுமறியாதபொருணேர்நின்
றுரைக்குதவுமாலெனுமுணர்ச்சியினுவப்பான். (௪௩)

உய்ந்தனரிமைப்பிலருயிர்த்தனர்தவத்தோர்
அந்தணரறத்தினெறிநின்றனர்களானா
வெந்திறலரக்கர்விடவேர்முதலறுப்பான்
வந்தனன் § மருத்துவனெனத்தனிவலிப்பான். (௪௪)

எனையுயிராமுதலயாவுமிடைவேவித்
தானுகராக்கருருமைச்சுடுசினத்தின்

---

* துரத்தல்-வெளிப்படுத்துதல்.

‡ இயைந்த பிறயாவும் என்பது-அவ்வேதங்களின் பொருளை அறிபக் கருவியாகிய மீமாம்சை, புராணம், நியாயம், தருமசாத்திரம் முதலியவற்றை.

§ மருத்துவன்-மருந்தின் தன்மை யறிந்து கொடுப்பவன்.

ஆனவனைக்கடிதவித்துலகளிப்பான்
வானமழைவந்ததெனமுந்துறுமனத்தான். (௪௫)

கண்டனனிராமனைவரக்கருணைகூரப்
புண்டரிகவாணயனநீர்பொழியநின்றான்
எண்டிசையுமேழுலகுமெவ்வுயிருமுய்யக்
குண்டிகையினிற்பொருவில்காவிரிகொணர்ந்தான். (௪௬)

நின்றவனைவந்தநெடியோனடிபணிந்தான்
அன்றவனுமன்பொடுதழீஇயழுதகண்ணான்
நன்றுவரவென்றுபலநல்லுரைபகர்ந்தான்
என்றுமுளதென்றமிழியம்பியிசைகொண்டான். (௪௭)

வேதியர்கள்வேதமொழிவேறுபலகூறிக்
காதன்மிகநின்றெழில்கமண்டலுவினன்னீர்
மாதவர்கள்வீசிநெடுமாமலர்கடூவப்
போதுமணநாறுகுளிர்சோலைகொடுபுக்கான். (௪௮)

பொருந்தவமலன்பொழிலகத்தினிதுபுக்கான்
விருந்தவனமைத்தபின்விரும்பினன்விரும்பி
இருந்தவமிழைத்தவெனதில்லிடையின்வந்தென்
அருந்தவமுடித்தனையருட்கரசவென்றான். (௪௯)

என்றமுனியைத்தொழுதிராமனிமையோரும்
நின்றதவமுற்றுநெடியோரினெடியோரும்
உன்றனருள்பெற்றிலர்களுன்னருள்சுமந்தேன்
வென்றனனனைத்துலகுமேலினிதெனென்றான். (௫௦)

தண்டகவனத்துறைதியென்றுரைதரக்கொண்
டெண்டுவரவித்திசையெனப்பெரிதுவந்தேன்
* எண்டகுகுணத்தினையெனக்கொடுயர்சென்னி
துண்டமதிவைத்தவனையொத்தமுனிசொல்லும். (௫௧)

ஈண்டுறைதியையவினியிவ்வயினிருந்தால்
வேண்டியனமாதவம்விரும்பினமுடிப்பாய்
தூண்டுசினவாணிருதர்தோன்றியுளரென்றால்
மாண்டுகமலைந்தெமர்மனத்துயர்துடைப்பாய். (௫௨)

வாழுமறைவாழுமனுநீதியறம்வாழும்
தாழுமிமையோருயர்வர்தானவர்கடாழ்வார்
ஆழியுழவன்புதல்வவையமிலைமெய்யே
ஏழுலகும்வாழுமினியிங்குறைதியென்றான். (௫௩)

---

* எண்டகுகுணம்-அபஹதபாப் மத்வம், விஜரத்வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விஜகத்சத்வம், அபிபாஸத்வம், ஸத்யகாமத்வம், ஸத்யஸங்கல்பத்வம்,

செருக்கடையரக்கர்புரிதீமைசிதைவெய்தித்
தருக்கழிதரக்கடிதுகொல்வதுசமைந்தேன்
வருக்கமறையோயவர்வருந்திசையின்முந்துற்
றிருக்கைநலகிற்கருளெனென்றனனிராமன். (௫௪)

விழுமியதுசொற்றனையிவ்வில்லிதிவண்மேனாள்
முழுமுதல்வன்வைத்துளதுமூவுலகும்யானும்
வழிபடவிருப்பதிதுதன்னைவடிவாளிக்
குழுவழுவில்புட்டிலொடுகோடியெனநல்கி. (௫௫)

இப்புவனமுற்றுமொருதட்டினிடையிட்டால்
ஒப்புவரவிற்றெனவுரைப்பரியவாளும்
வெப்புருவுபெற்ற * வரன்மேருவரைவில்லா
முப்புரமெரித்ததனிமொய்கணையுநல்கா. (௫௬)

ஓங்குமரனேங்கிமலையோங்கிமணலோங்கிப்
பூங்குலைகுலாவுகுளிர்சோலைபுடைவிம்மித்
தூங்குதிரையாறுதவழ்சூழலதொர்குன்றின்
பாங்கருளதாலுறையுள் † பஞ்சவடிமஞ்ச. (௫௭)

கன்னியிளவாழைகனியீவகதிர்வாலின்
செந்நெலுளதேனெழுகுபோதுமுளதெய்வப்
பொன்னியெனலாயபுனலாறுமுள ‡ போதா
அன்னமுளபொன்னிவளொடன்பின்விளையாட. (௫௮)

ஏகியினியவ்வயினிருந்துறைதியென்றான்
மேகநிறவண்ணனும்வணங்கிவிடைகொண்டான்
பாகனையசொல்லியொடுதம்பிபரிவிற்பின்
போகமுனிசிந்தைதொடரக்கடிதுபோனான். (௫௯)

௫-வது, அகத்தியப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௭௬.

---

* அரன்-ஹரன், பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஹரிப்பவன். ஹரித்தல்-அழித்தல்.

† பஞ்சவடி-ஐந்து ஆலமரங்களின்தொகுதி; அது அகண்ட கோதாவரிக்கரையில் நாசிகாத்திரியம்பகத்துக்குச் சமீபத்திலுள்ளது.

‡ போதா-பெருநாரை.

## * ௪-வது, சடாயுகாண் படலம்.



நடந்தனர்காவதம்பலவுநன்னதி
கிடந்தனநின்றனகிரிகள்கேண்மையின்
தொடர்ந்தனதுவன்றினசூழல்யாவையும்
கடந்தனர்கண்டனர்கழுகின்வேந்தையே. (௧)

உருக்கியசுவணமொத்துயர்த்துச்சிசேர்
அருக்கனிவ்வகலிடத்தலங்குதிக்கெலாம்
தெரிப்புறுசெறிசுடர்ச்சிகையினற்சிறை
விரித்திருந்தனனெனவிளங்குவான்றனை. (௨)

முந்தொருகருமலைமுகட்டின்முன்றிலின்
சந்திரனொளியொடுதழுவச்சார்த்திய
அந்தமில்கனைகடலமரராட்டிய
மந்தரகிரியெனவயங்குவான்றனை. (௩)

மாணிறவிசும்பெழின்மறையத்தன்மணிக்
காணிறச்சேயொளிகதுவக்கண்ணகல்
நீணிறவரையினிற்பவளநீள்கொடி
போணிறம்பொலிந்தெனப்பொலிகின்றான்றனை. (௪)

தூய்மையனிருங்கலைதுணிந்தகேள்வியன்
வாய்மையன்மறுவிலன்மதியின்கூர்மையன்
ஆய்மையின்மந்திரத்தறிஞனெனச்
சேய்மையினோக்குறுசிறகனன்றனை. (௫)

வீட்டிவாளவுணரைவிருந்துகூற்றினை
ஊட்டிவீழ்பச்சிரனுண்டொடோறும்
தீட்டிமேலிந்திரன்சிறுகண்யானையின்
கோட்டிபோற்றேய்ந்தொளிர்துண்டத்தான்றனை. (௬)

கோளிருநான்கினோடொன்றுகூடின
ஆளுறுதிகிரிபோலார்த்தான்றனை
நீளுறுமேருவினெற்றிமுற்றிய
வாளிரவியிற்பொலிமௌலியான்றனை. (௭)

சொற்பங்கமுறநிமிர்திசையின்சும்மையை
அற்பங்கமுறவரு † மருணன்செம்மலை

---

* சடாயு-ஜடாயு; பலமயிர்கள் சேர்த்துத் திரித்த ஜடைபோன்ற ஆயுளுள்ளவர்; மிகுந்த ஆயுசுடையவர்; இறகில் உயிரையுடையவர்; ஜடையையுடையவர். இவருக்குப் பெரிய உடையார் என்றும் பெயர்.

† அருணன்-சூரியன் சாரதி.

சிறப்பங்கொள்பகலெனக்கடிதுசென்றுநீர்
கற்பங்களனைப்பலகண்டுளான்றனை. (அ)

ஓங்குயர்நெடுவரையொன்றினின்றது
தாங்கலதிருநிலந்தாழ்ந்துதாழ்வுற
வீங்கியவலியினிலிருந்தவீரனை
ஆங்கவரணுகினரயிர்க்குஞ்சிந்தையார். (கூ)

இறுதியைத்தன்வயினியற்றவெய்தினன்
அறிவிலியரக்கனுமல்லனுமெனின்
எறுழ்வலிக்கலுழனேயென்னவுன்னியச்
செறிகழல்வீரருஞ்செயிர்த்துநோக்கினார். (க0)

வனைகழல்வரிசிலைமதுகைமைந்தரை
அனையவன்றானுங்கண்டயிர்த்துநோக்கினன்
வினையறுநோன்பினரல்லர்வில்லினர்
புனைசடைமுடியினர் * புலவரோவென்றா. (கக)

புரந்தரன்முதலியபுலவர்யாரையும்
நிரந்தரநோக்குவெனேமியானுமக்
கரந்தருமிறைவனுமழுவலாளனும்
கரந்திலரெண்ணையாரென்றுங்காண்பெறும். (கஉ)

காமனென்பவனையுங்கண்ணினோக்கினேன்
தாமரைச்செங்கணித்தடக்கைவீரர்கள்
பூமருபொலங்கழற்பொடியினோடுமொப்
பாமெனவறிகிலெனார்கொலாமிவர். (கங)

உலகொருமூன்றுந்தம்முடைமையாக்குறும்
† அலகறுமிலக்கணமமைந்தமெய்யினர்
மலர்மகட்குவமையாளோடும்வந்தவிச்
சிலைவலிவீரரைத்தெரிகிலேனென்று. (கச)

கருமலைசெம்மலையனையகாட்சியர்
திருமகிழ்மார்பினர்செங்கண்வீரர்தாம்
அருமைசெய்குணத்தினென்றனைவனுழியான்
ஒருவனையிருவருமொத்துளாரரோ. (கரு)

எனப்பல ‡ நினைப்பினமனத்துளெண்ணுவான்
சினப்படைவீரர்மேற்செல்லுமன்பினன்

* புலவர்-அறிவுடையவர்.

† அலகறும்-அளவில்லாத, குற்றமற்றவென்றுமாம்.

‡ நினைப்பின-நினைத்தலையுடையவை. நினைப்பு இனம் எனப்பிரிநு, நினைப்புக்களின் கூட்டமென்றுமாம்.

கணப்படைவரிசிலைக்காளைநீர்கள்யார்
மனப்படவெனக்குரைவழங்குவீரென்றான். (கசு)

வினவியகாலையின்மெய்ம்மையல்லது
புனைமலர்த்தாரவர்புகல்கிலாமையால்
கனைகடலனைநிலங்காவலாழியான்
வனைகழற்றயரதன்மைந்தர்யாமென்றார். (கஎ)

உரைத்தலும்பொங்கியவுவகைவேலையன்
தரைத்தலையிழிந்தவர்த்தழுவுங்காதலன்
விரைத்தடந்தாரினிர்வேந்தர்வேந்தன்றன்
வரைத்தடந்தோளிணைவலியவோவென்றான். (கஅ)

மறக்கமுற்றதவ்வாய்மைகாத்தவன்
துறக்கமுற்றனனெனமுன்னைச்சொல்லலும்
இறக்கமுற்றனனெனவேக்கமெய்தினன்
உறக்கமுற்றனனெனவுணர்வுநீங்கினான். (கக)

தழுவினனெடுத்தனர் * தடக்கையான்முகம்
கழுவினரிருவருங்கண்ணினீரினால்
வழுவியவின்னுயிர்வந்தமன்னனும்
அழிவுறுநெஞ்சினனாற்றினானரோ. (உ0)

(வேறு.)

பரவருங்கொடைக்குநின்றன்பனிக்குடைக்கும்பொறைக்குநெடும்பண்
கரவருங்கற்பகமுமும்பதியுங்கடலிடமுங்களித்துவாழப் [புதோற்ற
புரவலர்தம்புரவலனேபொய்ப்பகையேமெய்க்கணியேபுகழின்வாழ்வே
இரவலருக்கல்லறமும்யானுமினியென்படநீத்தேகினையே. (உக)

அலங்காரமெனவுலகுக் † கமுதளிக்குந்தனிக்குடையாயாழிசூழ்ந்த
நிலங்காவலதுகிடக்கநிலையாதநிலையுடையேனையநெஞ்சின்
நலங்காணக்கடந்தனையோநாயகனேதீவினையேனண்பினின்றும்
விலங்கானேனாதலினால்விலங்கினேனின்னுமுயிர்விட்டிலேனால். (உஉ)

தயிருடைக்குமத்தென்னவுலைகலிசம்பரனைத்தடிந்தவந்நாள்
‡ அயிர்கிடக்குங்கடல்வலயத்தயலறியநீயுடனுறைவியென்று
செயிர்கிடத்தல்செய்யாததிருமனத்தாய்செப்பினைத்திறம்பாநின்சொல்
உயிர்கிடக்கவுடலைவிசும்பேற்றினையுணர்விறந்தகூற்றினைரே. (உங)

* தடக்கை-முழந்தாளளவும் நீண்ட கை.

† அமுதளித்தல்-ஈண்டு அருள்வைத்துக் காத்தல்.

‡ அயிர்-நுண்மணல்.

எழுவதோரிசைபெருகவிப்பொழுதேயொப்பரியவெரியுந்தீயின்
விழுவதேநிற்கமட * மெல்லியலார்தம்மைப்போனிலத்தின்மேல்வீழ்ந்
தழுவதேயானென்னுவறிவுற்றுனெனவெழுந்தாங்கவரைநோக்கி
முழுவதேழுலகுடையமைந்தன்மீர்கேண்மினெனமுறையிற்சொல்வான்.

தக்கனனிவயிற்றுதித்தாரைம்பதின்மர்தடங்கொங்கைத்தையலாருள்
தொக்கபதின்மூவரையக்காசிபனும்புணர்ந்தனனத்தோகைமாருள்
மிக்கவதிதிப்பெயராண்முப்பத்துமுக்கோடிவிண்ணோரீந்தாள்
மைக்கருங்கட்டிதியென்பாளதினிரட்டியசுரர்தமையீறுவாய்த்தாள். ()

தானவரேமுதலோரைத்தனுப்பயந்தாண்மதியென்பாண்மனிதர்தம்மூ
டானவருணங்களவயவத்தடைவேபயந்தனளானல்சுரபியென்பாள்
தேனுவுடன்கர்தருவமற்றுள்ளபிறபயந்தாடெரிக்குங்காலே
மானமுடைக்குரோதவசைகழுதைமரையொட்டைபிறவயிறுவாய்த்தாள்

மழைபுரைபூங்குழல்விநதைவானிடியன்னருணனுடன் † வயிநதேயன்
தழைபுரையுஞ்சிறைக்கூகைபாறுமுதற்பெரும்பறவைதம்மையீன்றாள்
இழைபுரையுந்தாம்பிரையூர்க்குருவிசிவல்காடைபலபிறவுமீன்றாள் [லாம்.
கழையெனுமக்கொடிபயந்தாள் கொடியுடனேசெடிமுதலாக்கண்டவெல்

வெருட்டியெழுங் கணபணப்பைவியாளமெலாங் கத்துருவாமின்னு மீன்றாள், மருட்டிகழுமொருதலையபுயங்கமெலாஞ் சுரசையென்னுமாதுத ந்தாள், அருட்டையெனும் வல்லிதந்தாளோர்ந்தியுடும்பணில்கண் முதலா யவெல்லாம், தெருட்டிமொதிளையீந்தாள் செல்சரமாகியபலவுந்தெரிக்கு ங்காலே. (உஅ)

அதிதிதிதிதனுவருட்டைசுரசைகழையேசுரபியணிவிநதையான்ற
மதியிளைகத்துருவுடனேகுரோதவசைதாம்பிரையாமடநலார்கள் [ரேருள்
விதிமுறையேயிவையனைத்தும் பயந்தனர்கள்விநதைசுதனருணன்மென்
புதுமதிசேர்நுதலரம்பைதனைப்புணரவுதித்தனம்யாம்புவனிமீதே. (உகூ)

அருணன்றன்புதல்வனியானவன்படருமுலகெல்லாம்படர்வேனூழி,
இருண்மொய்ம்புகெடத்துரந்த தயரதற்கின்னுயிர்த்துணைவ னிமையோ
ரோடும்,வருணங்கள்வகுத்திட்டகாலத்தேவந்துதித்தேன் கழுகின்மன்ன
ன்,தருணங்கொள்பேரொளியீர் § சம்பாதிபின்னர்வருசடாயுவென்றான்.

ஆண்டவனீதுரைசெய்ய ‡ வஞ்சலித்தமலர்க்கையானம்பிரோடும் [ரார்
மூண்டபெருந்துன்பத்தான்முறைமுறையினிறைமலர்க்கண்மொய்த்தநீ
பூண்டபெரும்புகழ்நிறுவித்தம்பொருட்டான்மேலுலகம்புக்கதாதை
மீண்டனன்வந்தானவனைக்கண்டனரேயொத்தனரவ்விலங்கற்றோளார்.

---

* மெல்லியலார்-மெல்லிய இயற்கையையுடையவர், அன்பர் இறந்தகாலத்து மண்ணில் விழுந்து புரண்டு அழுதல் பெண்களுக்கு இயற்கை; "புனையிழை மகளிர்போலப் புலம்பல்" என்றார் சிந்தாமணியாரும்.

† வயிநதேயன்-விநதையின்மகன்.

§ சம்பாதி-நன்றாய்விழுதலுடையவன். ‡ அஞ்சலித்தல்-கூப்புதல்.

மருவினியகுணத்தவரையிருசிறகாலுறத்தழுவிமக்காணீரே
உரியகடன்வினையேற்குமுதவுவீருடலிரண்டுக்குயிரொன்றானேன்
பிரியவுந்தான்பிரியாதேயினிதிருக்குமுடற்பொறையாம்பீழைபாரா
தெரியதனினின்றேபுக்கிறவேனேலித்துயரமறவேனென்றான். (௩௨)

வேறு.

என்றுரைத்தவெருவையரசனைத்
துன்றுதாரவர்நோக்கித்தொழுதுகண்
ஒன்றுமுத்தமுறைமுறையாயுக
நின்றுமற்றின்னநீர்மைநிகழ்த்தினார். (௩௩)

உய்விடத்துதவற்குரியானுந்தன்
மெய்விடக்கருதாதுவிண்ணேறினான்
இவ்விடத்தினியெம்பெருமானுனைக்
கைவிடற்பிணையார்களைகண்ணுளார். (௩௪)

தாயினீங்கருந்தந்தையிற்றண்ணகர்
வாயினீங்கினம்புகுந்தெய்திய
நோயினீங்கினெனுன்னினெனெங்களை
நீயுநீங்குதியோநெறிநீங்கலாய். (௩௫)

என்றசொல்லரிதாங்கழிநெஞ்சினர்
நின்றவீரனைநோக்கினைந்தவன்
அன்றதென்னி * னயோத்தியினையன்றீர்
சென்றபின்னவற்சேர்குவென்யானென்றான். (௩௬)

வேந்தன்விண்ணடைந்தானெனின்யார்நீர்
பாந்துழாலவனிதனியாதிவட்
போந்ததென்னைபுகுந்தவென்புந்திபோய்க்
காந்துகின்றதுகட்டுரையென்றான். (௩௭)

தேவர்தானவர்திண்டிறனகர்வே
றேவராகவிடரிழைத்தாரெனின்
பூவராவுபொலங்கறைவேலினர்
சாவராக்கித்தருவெனரசென்றான். (௩௮)

தாதைகூறலுந்தம்பியைநோக்கினான்
சீதைகேள்வனவனுந்தன் † சிற்றவை
மாதரால்வந்தசெய்கைவரம்பிலா
ஓதவேலையொழிவின்றுணர்த்தினான். (௩௯)

---

* அயோத்தி-சண்டையிடுதற்குக் கூடாதென்பதுபொருள்.
† சிற்றவை=சிறு+அவ்வை, அவ்வை-ஔவை; தாய்.

உந்தையுண்மையனுக்கியுன்சிற்றவை
தந்தசொல்லைத்தலைக்கொண்டுதாரணி
வந்ததம்பிக்குதவியவள்ளலே
எந்தைவல்லதுயாவர்வல்லாரரோ. (௪௦)

அல்லித்தாமரைக்கண்ணனையன்புறப்
புல்லிமோந்துபொழிந்தகண்ணீரினன்
வல்லைமைந்தவம்மன்னையுமென்னையும்
எல்லையில்புகழெய்துவித்தாயென்றான். (௪௧)

பின்னரும்மப்பெரியவன்பெய்வளை
அன்னமன்னவணங்கினைநோக்கினான்
மன்னர்மன்னவன்மைந்தவிவ்வாணுதல்
இன்னளென்னவியம்புதியாலென்றான். (௪௨)

அல்லிறுத்தன * தாடகையாதியா
வில்லிறுத்ததிடையெனமேலைநாள்
புல்லிறுத்ததியாவும்புகன்றுதன்
சொல்லிறுத்தனன்றோன்றல்பின்றோன்றினான். (௪௩)

கேட்டுவந்தனன்கேழ்கிளர்மௌலியான்
தோட்டலங்கலினீர்துறந்தீர்வளம்
காட்டினீவிருநன்னுதலாளுடிக்
காட்டில்வைகுதிர்காக்குவென்யானென்றான். (௪௪)

இறைவவெண்ணியகத்தியனீந்துள
துறையுநன்மணியாற்றினகன்கரைத்
துறையுளுண்டொருசூழலச்சூழல்புக்
குறைதுமென்றனனுள்ளத்துறைகுவான். (௪௫)

பெரிதுநன்றப்பெருந்துறைவைகிநீர்
புரிதிர்மாதவம்போதுமின்யானது
தெரிவுறுத்துவெனென்றவர்திண்சிறை
விரியுநீழலிற்செல்லவிண்சென்றனன். (௪௬)

ஆயசூழலறியவுணர்த்தியத்
தூயசிந்தையதோமில்குணத்தினன்
போயபின்னைப்பொருசிலைவீரரும்
ஏயசோலையினிதுசென்றெய்தினர். (௪௭)

---

* தாடகை-மலைகளில திரிபவள்.

வார்ப்பொற்கொங்கைமருங்கியைமக்களை
எற்பச்சிந்தனையிட்டவ்வரக்கர்தம்
சீர்ப்பைச்சிக்கறத்தேறினன்சேக்கையில்
* பார்ப்பைப்பார்க்கும்பறவையிற்பார்க்கின்றான். (௪௯)

௪-வது, சடாயுகாண்படலம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௨௨௪.

## ௫-வது, † சூர்ப்பணகைப்படலம்.

புவியினுக்கணியாயான்றபொருடந்துபுலத்திற்றாகி
அவியகத்துறைகடாங்கியைந்திணைநெறியளாவிச
சவியுறத்தெளிந்துதண்ணென்றொழுக்கமுந்தழுவிச்சான்றோர்
கவியெனக்கிடந்தகோதாவரியினைவீரர்கண்டார். (௧)

வண்டுறைகமலச்செவ்விவாண்முகம்பொலியவாசம்
உண்டுறைகுவளையொண்கணொருங்குறநோக்கியூழின்
தெண்டிரைக்கரத்தின்வாரித்திருமலர்தூவிச்செல்வர்க்
கண்டடிபணிவதென்னப்பொலிந்ததுகடவுள்யாறு. (௨)

எழுவுறுகாதலாலிங்கிரைத்திரைத்தேங்கியேங்கிப்
பழுவநாட்குவளைச்செவ்விக்கண்பனிபரந்துசோர
வழுவிலாவாய்மைமைந்தர்வனத்துறைவருத்தநோக்கி
அழுவதுமொத்ததாலவ்வலங்குநீராறுமன்னோ. (௩)

நாளங்கொணளினப்பள்ளிநயனங்களனையநேமி
வாளங்களுறைவகண்டுமங்கைதன்கொங்கைநோக்கும்
நீளங்கொள்சிலையோன்மற்றைநேரிழைநெடியநம்பி
தோளின்கண்மனம்வைத்தன்னசுடர்மணித்தடங்கள்கண்டாள். (௪)

ஓதிமமொதுங்கக்கண்டவுத்தமனுழையளாகும்
சீதைதன்னடையைநோக்கிச்சிறியதோர்முறுவல்செய்தான்
மாதவடானுமாண்டுவந்துநீருண்டுமீளும்
போதகநடப்பநோக்கிப்புதியதோர்முறுவல்பூத்தாள். (௫)

வில்லியறடக்கைவீரன்வீங்குநீராற்றின்பாங்கர்
வல்லிகளுடங்கக்கண்டான்மங்கைதன்மருங்குனோக்க
எல்லியங்குவளைக்கானத்திடையிடைமலர்ந்துநின்ற
அல்லியங்கமலங்கண்டாளண்ணறன்வடிவுகண்டாள். (௬)

---

* பார்ப்பு-இளமைப்பெயர், "பார்ப்பும் பிள்ளையும் பரப்பவற்றிளமை" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

† சூர்ப்பணகை-சூர்ப்பணகா என்ற வடசொல் ஈறு திரிந்தது; சூர்ப்பம் + நகம் = முறம்போன்ற (வடிவமுடைய) நகமுள்ளவள்; சிலர் சூர்ப்பநகி என்பர். வித்யுஜ்ஜிஹ்வனென்னும் அசுரன் மனைவி.

அனையதோர்தன்மையாலவ்வருவிநீராற்றின்பாங்கர்ப்
பணிதருபடிவப் * பஞ்சவடியெனும்பருவச்சோலைத்
தனியிடமதனைநண்ணித்தம்பியாற்சமைக்கப்பட்ட
இனியபூஞ்சாலையெய்தியிருந்தனனிராமனிப்பால். (௭)

(வேறு.)

நீலமாமணிநிறநிருதர்வேந்தனை
மூலநாசம்பெறமுடிக்குமொய்ம்பினாள்
மேலைநாளுயிரொடும்பிறந்துதான்விளை
காலமோர்ந்துடனுறைகடியநோயனாள். (அ)

செம்பராகம்படச்செறிந்தகூந்தலாள்
வெம்பராகுத்தனிவிளைந்தமெய்யினாள்
உம்பரானவர்க்குமொண்டவர்க்குமோதநீர்
இம்பரானவர்க்குமோரிறுதிகாட்டுவாள். (௯)

வெய்யதோர்காரணமுண்மையேயினாள்
வைகலுந்தமியளவ்வனத்துவைகுவாள்
நொய்தினிவ்வுலகெலாநுழையுநோன்மையாள்
எய்தினளிராகவனிருந்தசூழல்வாய். (௧௦)

எண்டகுமிமையவராக்கமெங்கண்மேல்
விண்டனர்விலக்குதியென்னமேலைநாள்
அண்டசத்தருந்துயிறுறந்தவையனைக்
கண்டனடன்கிளைக்கிறுதிகாட்டுவாள். (௧௧)

† சிந்தையினுறைபவற்குருவந்தீர்ந்ததால்
இந்திரற்காயிரநயனமீசற்கு
முந்தியமலர்க்கணோர்மூன்றுநான்குதோள்
உந்தியினுலகளித்தாற்கென்றுன்னுவாள். (௧௨)

கற்றையஞ்சடையவன்கண்ணிற்காய்தலால்
இற்றவனன்றுதொட்டின்றுகாறுந்தான்
நற்றவமியற்றியவ்வநங்கனல்லுருப்
பெற்றனனாமெனப்பெயர்த்துமெண்ணுவாள். (௧௩)

தரங்களினமைந்துதாழ்ந்தமுகின்சார்பினை
மரங்களுங்கர்க்கலமலையும்புல்லிய
உரங்களினுயர்திசையோம்புமானையின்
கரங்களேயிவன்மணிக்கையென்றுன்னுவாள். (௧௪)

---

* பஞ்சவடி-ஓர்தலம்; பஞ்ச-ஐந்து, வடம்-ஆலமரம்.

† சிந்தையிலுறைபவற் குருவந்தீர்ந்தது-மனத்திலுறையும் மன்மதனுக்கு உருவம்போயிற்று.

வின்மலைவல்லவன்வீரத்தோளொடும்
கன்மலைநிகர்க்கலகனிந்தநீலத்தின்
நன்மலையல்லதுநாமமேருவும்
பொன்மலையாதலாற்பொருவலாதென்பாள். (௧௫)

தாளுயர்தாமரைத்தளங்கடம்மொடும்
கேளுயர்நாட்டத்துக்கிரியின்றேற்றத்தான்
தோளொடுதோள்செலத்தொடர்ந்துநோக்குறின்
நீளியவல்லகணெடியமார்பென்றாள். (௧௬)

அதிகநின்றொளிருமிவ்வழகனுண்முகம்
பொதியவிழ்தாமரைப்பூவையொப்பதோ
கதிர்மதியாமெனிற்கலைகடேயுமம்
மதியெனின்மதிக்குமோர்மறுவுண்டென்பரால். (௧௭)

எவன்செயவினியவிவ்வுருவையெய்தினோன்
அவன்செயத்திருவுடம் * பலசநோற்கின்றான்
நவன்செயத்தகையவிந்நளினநாட்டத்தான்
தவன்செயத்தவன்செய்ததவமெனென்கின்றாள். (௧௮)

உடுத்தநீராடையளுருவச்செவ்வியள்
பிடித்தருநடையினள்பெண்மைநன்றிவன்
அடித்தலந்தீண்டலினவனிக்கம்மயிர்
பொடித்தனநகர்க்குமாற்புல்லென்றுன்னுவாள். (௧௯)

வாணிலைமருங்குலான்வயங்குசோதியைக்
காணலனேகொலோகதிரினாயகன்
சேணெலாம்புல்லொளிசெலுத்திச்சிந்தையின்
நாணலன்மீமிசைநடக்கின்றனென்றாள். (௨௦)

குப்புறற்கரியமாக்குன்றைவென்றுயர்
இப்பெருந்தோளவனிழுக்கேற்பதோர்
ஒப்பெனவுலகமேலுரைக்கினுள்ளமே
துப்பெனிற்றுப்புடையாதைச்சொல்லுகேன். (௨௧)

நற்கலைமதியுறவயங்குநம்பிதன்
எற்கலைதிருவரையெய்தியேமுற
வற்கலைநோற்றனமாசிலாமணிப்
பொற்கலைநோற்றிலபோலுமாலென்றாள். (௨௨)

தொடையமைநெடுமழைத்தொங்கலாமெனக்
கடைகுழன்றிடைநெறிகரியகுஞ்சியைச்

* அலசநோற்கின்றான்-வாடத்தவஞ்செய்கின்றான்.

சடையெனப்புனைந்திலனென்னிற்றையலார்
உடையுயிர்யாவையுமுடையுமாலென்றாள். (௨௩)

நாறியநகையணிநல்லபுல்லினால்
ஏறியசெவ்வியினியற்றுமோவெனா
மாறகன்முழுமணிக்காசின்மாட்சிதான்
வேறொருமணியினால்விளங்குமோவென்பாள். (௨௪)

கரந்திலனிலக்கணமெடுத்துக்காட்டிய
பரந்தருநான்முகன்பழிப்புற்றானோ
இரந்திவனிணையடிப்பொடியுமேற்கலாப்
புரந்தரனுலகெலாம்புரக்கின்றானென்றாள். (௨௫)

நீத்தமும்பரவையுங்குறுகநெஞ்சிடைக்
கோத்தவன்புணர்விடைக்குளிப்பமீக்கொள
* ஏத்தவம்புரியவொன்றீகலான்பொருள்
காத்தவன்புகழெனத்தேயுங்கற்பினாள். (௨௬)

வான்றனில்வரைந்ததோர்மாதரோவியம்
போன்றனள்புலர்ந்தனள்புழுங்குநெஞ்சினள்
தோன்றலசுடர்மணித்தோளினுடடங்கள்
ஊன்றினள்பறிக்கவோராற்றம்பெற்றிலள். (௨௭)

நின்றனளிருந்தவனெடியமார்பகம்
ஒன்றுவெனன்றெனினமுதமுண்கினும்
பொன்றுவென்போக்கினியரிதுபோன்மெனாச்
சென்றெதிர்நிற்பதோர்செய்கைதேடுவாள். (௨௮)

எயிறுடையரக்கியெவ்வுயிருமிட்டதோர்
வயிறுடையாளெனமறுக்குமாதலால்
குயிலொடார்குதலையோர்கொவ்வைச்செவ்விவாய்
மயிலொடாரியலியாய்மருவனன்றெனா. (௨௯)

பங்கயச்செல்வியைமனத்துப்பாவியா
அங்கையினயமந்திரத்தையாய்ந்தனள்
திங்களிற்சிறந்தொளிர்முகத்தள்செவ்வியள்
பொங்கொளிவிசும்பினிற்பொலியத்தோன்றினாள். (௩0)

வேறு.

பஞ்சியொளிர்விஞ்சு † குளிர்பல்லவமனுங்கச்
செஞ்செவியகஞ்சநிமிர்சீறடியளாகி

---

* ஏத்தவம்புரிய-எல்லாருந்துதிக்கின்ற தருமத்தைச்செய்ய.

† குளிர்ப்பல்லவமனுங்க-குளிர்ந்த தளிர்களும் ஒப்பாகாமையால் வருந்த.

அஞ்சொலிளமஞ்ஞையெனவன்னமெனமின்னும்
வஞ்சியெனநஞ்சமெனவஞ்சமகள்வந்தாள். (௩௧)

பொன்னொழுகுபூவிலுறைபூவையெழில்பூவை
பின்னெழில்கொள் * வாளிணைபிறழ்ந்தொளிர்முகத்தாள்
கன்னியெழில்கொண்டதுகலைத்தடமணித் † தேர்
மின்னிழிவதுண்மையிதுவிண்ணிழிவதென்ன. (௩௨)

கானினுயர்கற்பகமுயிர்த்தகதிர்வல்லி
மேனிநனிபெற்றுவிளைகாமநெறிவாசத்
தேனின்மொழியுற்றினியசெவ்விநனிபெற்றோர்
மானின்விழிபெற்றுமயில்வந்ததெனவந்தாள். (௩௩)

நூபுரமுமேகலையுநூலுமறமேலோதிப்
பூமுரலும்வண்டுமிசைபூசலிடுமோதை
தாமுறைசெய்கின்றதொருதையல்வருமென்னக்
கோமகனுமத்திசைகுறித்தனன்விழித்தான். (௩௪)

விண்ணருளவந்ததொருமெல்லமுதமென்ன
வண்ணமுலைகொண்டிடைவணங்கவருபோழ்தத்
தெண்ணருளியோறைமைதுடைத்தெழுமெய்ஞ்ஞானக்
கண்ணருள்செய்கண்ணனிருகண்ணினெதிர்கண்டான். (௩௫)

பேருமையநாகருலகிற்பிறிதின்வானிற்
பாருழையினில்லதொருமெல்லுருவபாரா
ஆருழையடங்குமழகிற்கவதியுண்டோ
நேரிழையர்யாவரிவர்நேரெனநினைந்தான். (௩௬)

அவ்வயினவ்வாசைதனகத்துடையவன்றன்
செவ்விமுகமுன்னியடிசெங்கையினிறைஞ்சா
வெவ்வியநெடுங்கணயில்வீசியயல்பாரா
நவ்வியினொதுங்கியிறைநாணியயனின்றாள். (௩௭)

நீதில்வரவாகதிருநின்வரவுசேயோய்
போதவுளதெம்முழையோர்புண்ணியமதன்றோ
ஏதுபதியேதுபெயர்யாவருறவென்றான்
‡ வேதமுதல்பேதையவடன்னிலைவிரிப்பாள். (௩௮)

வேறு.

பூவிலோன்புதல்வன்மைந்தன்புதல்விமுப்புரங்கள்செற்ற
சேவலோன்றுணைவனானசெங்கையோன்றங்கைதிக்கின்

* கணைவாள்-இரண்டு கண்கள்.
† தேர்-அல்குலுக்கு ஒப்பு.
‡ வேதமுதல்-வேதங்களால் துதிக்கப்படுமாதிபகவன்.

மாவெலாந்தொலைத்துவெள்ளிமலையெடுத்துலகமூன்றும்
காவலான்பின்னைகாமவல்லியாங்கன்னியென்றாள். (௩௯)

அவ்வுரைகேட்டவீரனையுறுமனத்தான்செய்கை
செவ்விதன்றறிதலாகுஞ்சிறிதினென்றுணரச்செங்கண்
வெவ்வுருவமைந்தோன்றங்கையென்றதுமெய்ம்மையாயின்
இவ்வுருவியைந்ததன்மையியம்புதியியல்பினென்றான். (௪௦)

தூயவன்பணியாமுன்னஞ்சொல்லுவாள்சோர்விலாளம்
மாயவல்லரக்கரோடுவாழ்வினைமதிக்கலாதேன்
ஆய்வுறுமனத்தேனாகியறந்தலைநிற்பதானேன்
தீவினைதீயநோற்றுத்தேவரிற்பெற்றதென்றாள். (௪௧)

இமையவர்தலைவனேயுமெளிமையினேவல்செய்யும்
அமைதியினுலகமூன்றுமாள்பவன்றங்கையாயின்
சுமையுறுசெல்வத்தோடுந்தோன்றலைதுணையுமின்றித்
தமியைநீவருதற்கொத்ததன்மையென்னையலென்றான். (௪௨)

வீரனஃதுரைத்தலோடுமெய்யிலாள்விமலயானச்
சீறியரல்லார்மாட்டுச்சேர்கிலென்றவர்பாலும்
ஆரியமுனிவர்பாலுமடைந்தனனிறைவவீண்டோர்
காரியமுண்மைநின்னைக்காணியவந்தேனென்றாள். (௪௩)

அன்னவளுரைத்தலோடுமையனுமறிதற்கொவ்வா
நன்னுதன்மகளிர்சிந்தைநன்னெறிப்பாலவல்ல
பின்னிதுதெரியுமென்னாப்பெய்வளைத்தோளியென்பால்
என்னைகாரியத்தைசொல்லஃதியையுமேலிழைப்பலென்றான். (௪௪)

தாமுறுகாமத்தன்மைதாங்களேயுரைப்பதென்ப
தாமெனலாவதன்றாலருங்குலமகளிர்க்கம்மா
ஏமுறுமுயிர்க்குநோவேனென்செய்கேன்யாருமில்லேன்
காமனென்றொருவன்செய்யும்வன்மையைக்காத்தியென்றாள். (௪௫)

சேணுறநீண்டுமீண்டுசெவ்வரிசிதறிவெவ்வே
றேணுறமிளிர்ந்துநாளுமிதம்புரண்டிருண்டவாட்கட்
பூணியல்கொங்கையன்னாளம்மொழிபுகறலோடும்
நாணிலளையனெய்யணல்லளுமல்லளென்றான். (௪௬)

பேசலனிருந்தவள்ளலுள்ளத்தின் * பெற்றியோராள்
பூசல்வண்டரற்றுங்கூந்தற்பொய்ம்மகள்புகன்றவென்கண்
ஆசைகண்டருளிற்றுண்டோவன்றெனலுண்டோவென்னும்
ஊசலாலுலாவுகின்றாண்மீட்டுமோருரையைச்சொல்வாள். (௪௭)

* பெற்றி-தன்மை.

எழுதருமேனியாயீண்டெய்தியதறிந்திலாதேன்
முழுதுணர்முனிவரேவல்செய்தொழின்முறையின்முற்றிப்
பழுதறுபெண்மையோடிளமையும்பயனின்றேகப்
பொழுதொடுநாளும்வாளாகழிந்தனபோலுமென்றாள். (௪௮)

நிந்தனையரக்கிநீதிநிலையிலாள்வினைமற்றெண்ணி
வந்தனளாகுமென்றேவள்ளலுமனத்துட்கொண்டான்
சுந்தரிமரபிற்கொத்ததொன்மையின்றுணிவிற்றன்றால்
* அந்தணர்பாவைநீயானரசரில்வந்தேனென்றான். (௪௯)

ஆரணமறையோனெந்தையருந்ததிகற்பினெம்மோய்
தாரணிபுரந்தசாலகடங்கர்தமரபின்றையல்
பேரணிபொலங்கொள்வேலாய்பொருந்தலையிகழ்தற்கொத்த
காரணமிதுவேயாயினென்னுயிர்காண்பெனென்றாள். (௫௦)

அருத்தியளனையகூறவகத்துறாநகையின்வெள்ளைக்
குருத்தெழுகின்றநிலைக்கொண்டலுண்டாட்டங்கொண்டான்
வருத்தநீங்காக்கர்தம்மின்மானுயர்மணத்தனங்கை
பொருத்தமன்றென்றுசாலப் † புலமையோர்புகல்வரென்றான். (௫௧)

பராவருஞ்சிறத்தையாரும்பத்தியின்பயத்தையோரா
திராவணன்தங்கையென்றதேழைமைப்பாலதென்றே
அராவணையமலனென்றையறிவித்தேன்முன்னந்தேவர்ப்
பராவினினீங்கினேனப்பழிபடுபிறவியென்றாள். (௫௨)

ஒருவனேயுலகமூன்றிற்கோங்கொருதலைவனாங்கில்
ஒருவனேகுபேரனின்னேடுன்பிறந்தவர்களன்னோர்
தருவரோற்கோடுமன்றேற்றரையைவேறிடத்துச்சார
வெருவுவெனங்கையென்றான்வேதத்தினறிவைவென்றான். (௫௩)

காந்தர்ப்பமென்பதுண்டாற்காதலிற்கலந்தசிந்தை
மாந்தர்க்குமடந்தைமார்க்குமறைகளேவகுத்தகூட்டம்
ஏந்தற்பொற்றோளினாயிஃதியைந்தபினெனக்குமூத்த
வேந்தர்க்கும்விருப்பிற்றாகும்வேறுமோருரையுண்டென்றாள். (௫௪)

முனிவரோடுடையர்முன்னைமுதிர்பகைமுறைமைநோக்கார்
தனியைநீயாதலான்மற்றவரொடுந்தழுவற்கொத்த
வினையமீதல்லதில்லைவிண்ணுநின்னாட்சியாக்கி
இனியராயன்னர்வந்துன்னேவலினிற்பரென்றாள். (௫௫)

நிருதர்தமருளும்பெற்றேனின்னலம்பெற்றேனின்னோ
டொருவருஞ்செல்வத்தியாண்டுமுறையவும்பெற்றேனென்றே .

---

* அந்தணர்-அம் தண் அர் எனப் பிரிந்து, அழகிய தண்மையை (குளிர்ந்த அருளை) உடையவரென்றும், அந்த அணவு அர் எனப்பிரிந்து, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவரென்றும் பொருள்படும். † புலமையோர்-கணிதவல்லோர்.

திருநகர்தீர்ந்தபின்னர்ச்செய்தவம்பயந்ததென்று
வரிசிலைவடித்ததோளான்வாளெயிறிலங்கநக்கான். (௩௬)

விண்ணிடையிம்பர்நாகர்விரிஞ்சனேமுதலோர்க்கெல்லாம்
* கண்ணிடையொளியின்பாங்கர்க்கடிகமழ்சாலைநின்றும்
பெண்ணிடையரசிதேவர்பெற்றநல்வரத்தாற்பின்னர்
மண்ணிடைமணியின்வந்தவஞ்சியேபோல்வாள்வந்தாள். (௩௭)

ஊன்சுடவுணங்குபேழ்வாயுணர்விலியுருவநாறும்
வான்சுடர்ச்சோதிவெள்ளம்வந்திடையயங்கநோக்கி
மீன்சுடர்விண்ணுமண்ணும்விரிந்தபோரரக்கரென்னும்
கான்சுடமுளைத்தகற்பின்கனலியைக்கண்ணிற்கண்டாள். (௩௮)

மருவொன்றுகூந்தலாளைவனத்திவன்கொண்டுவாரான்
உருவிங்கிதுடையராகமற்றையோர்யாருமில்லை
அரவிந்தமலருணீங்கியடியிணைபடியிற்றோயத்
திருவிங்குவருவாள்கொல்லோவென்றகந்திகைத்துநின்றாள். (௩௯)

பண்புறநெடிதுநோக்கிப்படைக்குநர்சிறுமையல்லால்
எண்பிறங்கழகிற்கெல்லையில்லையாமென்றுநின்றாள்
கண்பிறபொருளிற்செல்லாகருத்தெனின்அஃதேகண்ட
பெண்பிறந்தேனுக்கென்றாலென்படும்பிறருக்கென்றாள். (௪0)

பொருதிறத்தானைநோக்கிப்பூவையைநோக்கிநின்றாள்
கருதமற்றினிவேறில்லைகமலத்துக்கடவுடானே
ஒருதிறத்துணரநோக்கியுருவினுக்குலகமூன்றின்
இருதிறத்தார்க்குஞ்செய்தவரம்பிவரிருவரென்றாள். (௪௧)

பொன்னைப்போற்பொருவின்மேனிப்பூவைப்பூவண்ணத்தானிம்
மின்னைப்போலிடையாளோடுமேவுமெய்யுடையனல்லன்
தன்னைப்போற்றகையோரில்லாத்தனிமைப்போலடியினாளும்
என்னைப்போலிடையேவந்தாளிகழ்விப்பெனிவளையென்று. (௪௨)

வருமிவண்மாயம்வல்லள்வஞ்சனையரக்கிநெஞ்சம்
தெரிவிலதேறுந்தன்மைசீரியோய்செயலிற்றன்றால்
உருவிதுமெய்யதன்றாலூனுகர்வாழ்க்கையாளை
வெருவினெனெய்திடாமல்விலக்குதிவீரவென்றாள். (௪௩)

ஒள்ளிதுன்னுணர்வுமின்னேயுன்னையாரொளிக்குமீட்டார்
தெள்ளியநலத்தினாலுன்சிந்தனைதெரிந்ததம்மா
கள்ளவல்லரக்கிபோலாமிவளைநீகாண்டியென்று
வெள்ளியமுறுவன்முத்தம்வெளிப்படவீரனக்கான். (௪௪)

---

* கண்ணிடை யொளியின்பாங்கர் - கண்ணிலுள்ள சோதியாகிய ஸ்ரீராமபிரான்பக்கலில்.

ஆயிடையமுதின்வந்தவருந்ததிக்கற்பினஞ்சொல்
வேயிடைதோளினளும்வீரனைச்சேரும்வேலை
நீயிடைவந்ததென்னைநிருதர்தம்பாவையென்னக்
காயெரியனையகள்ளவுள்ளத்தாள்கதித்தலோடும். (௬

அஞ்சினளஞ்சியன்னமின்னிடையலசவோடிப்
பஞ்சின்மெல்லடிகணோவப்பதைத்தனள்பருவக்கால
மஞ்சிடைவயங்கித்தோன்றும்பவளத்தின்வல்லியென்னக்
குஞ்சரமனையவீரன் * குவவுத்தோடழுவிக்கொண்டாள். (௬

வளையெயிற்றவர்களோடுவரும்விளையாட்டென்றாலும்
விளைவனதீமையேயாமென்பதையுணர்ந்துவீரன்
உளைவனவியற்றலொல்லையுன்னிலையுணருமாயின்
இளையவன்முனியுநங்கையேகுதிவிரைவினென்றான். (௬

பொற்புடையரக்கிபூவிற்புனலினிற்பொருப்பில்வாழும்
† அற்புடையுள்ளத்தாருமநங்கனுமமரர்மற்றும்
எற்பெறத்தவஞ்செய்கின்றாரென்னைநீயிகழ்வதென்னே
நற்பொறைநெஞ்சினில்லாக்கள்வியையாச்சியென்றாள். (௬௮

தன்னொடுந்தொடர்விலாதேமென்னவுந்தவிராடாணிக்
கன்னெடுமெனத்திசொல்லுங்கள்ளவாசகங்களொன்றோ
மின்னொடுதொடர்ந்துசெல்லுமேகம்போன்மிதிலைவேந்தன்
பொன்னொடும்புனிதன்போயப்பூம்பொழிற்சாலைபுக்கான். (௬௯

புக்கபின்போயதென்னுமுணர்வினள்பொறையுணீங்கி
உக்கதாமுயிரளொன்றுமுயிர்த்திலளொடுங்கிநின்றாள்
தக்கிலண்மனத்துள்யாதுந்தழுவிலள்சலமுங்கொண்டாள்
மைக்கருங்குழலினண்மாட்டன்பினில்வலியனென்பாள். (௭௦

நின்றிலளவனைச்சேருநெறியினைநினைந்துபோனாள்
இன்றிவனகம்புல்லேனெனினுயிரிழப்பெனென்னாப்
பொன்றிணிசரளச்சோலைப்பளிக்கறைப்பொதும்பர்புக்காள்
சென்றதுபரிதிமேல்பாற்செக்கர்வந்திறுத்ததன்றே. (௭௧)

வேறு.

அழிந்தசிந்தையளாயயர்வாள் ‡ வயின்
மொழிந்தகாமக்கடுங்கனன்மூண்டதால்
வழிந்தநாகத்தின்வன்றொளைவாளெயிற்
றிழிந்தகார்விடமேறுவதென்னவே. (௭௨)

---

* குவவுத்தோள்-திரண்டுயர்ந்ததோள்.
† அன்பு-அற்பெனத்திரிந்தது.
‡ வயின்-இடம்.

* தாடகைக்கொடியாட்டமார்பிடை
ஆடவர்க்கரசன்னயிலம்புபோல்
பாடவத்தொழின்மன்மதன்பாய்கணை
ஓடவுட்கியுயிருலைந்தாளரோ. (எங)

கலையுவாமதியேகறியாகவன்
சிலையின்மாரனைத்தின்னுநினைப்பினள்
மலயமாருதமாநெடுங்காலவேல்
உலையமார்பிடையூன்றிடவோயுமால். (எச)

அலைக்குமாழியடங்கிடவங்கையால்
மலைக்குலங்களிற்றூர்க்குமனத்தினள்
நிலைக்கும்வாணினெடுமதிநீணிலா
மலைக்கநீங்குமிடுக்கினண்மாந்துவாள். (எரு)

பூவெலாம்பொடியாகவிப்பூமியுள்
காவெலாமொடிப்பென்னெனக்காந்துவாள்
சேவலோடுறைசெந்தலையன்றிலின்
நாவினால்வலியெஞ்சநடுங்குவாள். (எசு)

அணவிறிங்களைநுங்கவராவினைக்
கொணர்வெனோடியெனக்கொதித்துன்னுவாள்
† பணையின்மென்முலைமேற்பனிமாருதம்
புணரவாருயிர்வெந்துபுழுங்குமால். (எஎ)

கைகளாற்றன்கதிரிளங்கொங்கைமேல்
ஐயதண்பனியள்ளினளப்பினள்
மொய்கொடையிடைவெந்துமுருங்கிய
வெய்யபாறையில்வெண்ணெய்நிகர்க்குமால். (எஅ)

அளிக்குமெய்யுயிர்கான் ‡ றழலஞ்சினள்
குளிக்குநீருங்கொதித்தெழக்கூசுமால்
விளிக்கும்வேலையைவெங்கணநங்கனை
ஒளிக்கலாமிடம்யாதெனவுன்னுமால். (எகூ)

---

* தாடகை-மலைகளில் சஞ்சரிப்பவள்; சுகேதுவெனும் யக்ஷன்மகள்; இவள்கணவன் சுந்தன்; ஆயிரம்யானை வலிமைகொண்டவள்; அகஸ்தியரதுகோபாக்கினியினால் சுந்தன் சாம்பராயினன்; இவள் தன்மக்களோடு அவரை எதிர்த்தகாலத்தில் அவரது சாபத்தால் இராக்கதத்தன்மையடைந்தார்கள்.

† பணையின்மென்முலை-பெரிய மெல்லியதனங்கள் அல்லது முரசு போன்ற முலையெனினும் பொருந்தும்.

‡ 'அழலஞ்சினள் குளிக்குநீருங் கொதித்தெழக்கூசும்' என்ற இடத்து ''ஊருளெழுந்த வுருகெழுசெந்தீக்கு, நீருட்குளித்து முயலாகும்- நீருட், குளிப்பினுங் காமஞ்சுடுமே'' என்றது அறியத்தக்கது.

வந்துகார்மழைதோன்றினுமாமணிக்
கந்துகாணினுங்கைத்தலங்கூப்புமால்
* இந்துகாந்தத்தினீரநெடுங்கலும்
வெந்துகாந்தவெதுப்புறுமேனியாள். (அ0)

வாமமாமதியும்பனிவாடையும்
காமனுந்தனைக்கண்டுணராவகை
நாமவாளெயிற்றோர்கடிநாகம்வாழ்
சேமமால்வரையின்முழைசேருமால். (அக)

அன்னகாலையுள்ம்குதென்றலும்
முன்னின்மும்மடியாய்முலைவெந்துக
இன்னவாசெய்வதென்றறியாதிளம்
பொன்னின்வார்தளிர்ப்புரண்டாளரோ. (அஉ)

வீரன்மேனிவெளிப்படவெய்யவள்
கார்கொண்மேனியைக்கண்டனளாமெனச்
சோரும்வெள்குந்துணுக்கெனுமவ்வுருப்
பேருங்கால்வெம்பிணியிடைப்பேருமால். (அங)

ஆகக்கொங்கையிணையனென்றஞ்சன
மேகத்தைத்தழுவும்மவைவெந்தன
போகக்கண்டுபுலம்புமப்புன்மையாள்
மோகத்துக்கொர்முடிவுமுண்டாங்கொலோ. (அச)

ஊழிவெங்கனலுற்றனளொத்துமவ்
வேழையாவியிறந்திலளென்பரால்
ஆழியானையடைந்தனள்பின்னையும்
வாழலாமெனுமாசைமருந்தினே. (அரு)

வஞ்சனைக்கொடுமாயைவளர்க்குமென்
நெஞ்சுபுக்கெனதாவத்தைநீக்கெனும்
அஞ்சனக்கிரியேயருளாயெனும்
நஞ்சநக்கினள்போலநடுங்குவாள். (அசு)

† காவியோகயலோவெனுங்கண்ணிணைத்
தேவியோதிருமங்கையிற்செவ்வியாள்
பாவியேனையும்பார்க்குங்கொலோவெனும்
ஆவியோயினுமாசையிறேய்விலாள். (அஎ)

மாண்டகற்புடையாண்மலர்மாமகள்
ஈண்டிருக்குநல்லாண்மகளென்னுமால்

* இந்துகாந்தம்-சந்திரனது பிரகாசம். இந்தபிரகாசத்தினாலே நீர் காலும் கல்லுக்குச் சந்திரகாந்தக்கல் என்றுபெயர்.
† காவியோகயலோ-ஓகாரமிரண்டும் ஐயவினைப்பொருளன.

வேண்டகிற்பினல்லான்வரமெய்யிடைத்
தீண்டகிற்பதன்றேதெறுங்காமமே. (௮௮)

ஆன்ற * காதலஃதுறவெய்துழி
மூன்றுலோகமுமூடுமரக்கராம்
என்றகாரிருணீக்கவிராகவன்
தோன்றினனெனவெய்யவன்றோன்றினன். (௮௯)

வேறு.

விடியல்காண்டலினீண்டுதன்னுயிர்கண்டவெய்யாள்
படியிலாண்மருங்குள்ளவெனையவன்பாரான்
கடிதிறேடினெனெடுத்தொல்லைக்கரந்தவள்காதல்
வடிவினுனுடன்வாழ்வதேவாழ்வெனமதியா. (௯0)

வந்துநோக்கினள்வள்ளல்போயொருமணித்தடத்தான்
சந்திநோக்கினனிருந்ததுகண்டனடம்பி
இந்துநோக்கியநுதலியைக்காத்தயலிருண்ட
கந்தநோக்கியசோலையிலிருந்ததுகாணுள். (௯௧)

தனியிருந்தனள்சமைந்ததென்சிந்தனைதாழ்வுற்
றினியிருந்தெனக்கெண்ணுவதில்லெனவெண்ணுத்
துனியிருந்தவன்மனத்தினடோகையைத்தொடர்ந்தாள்
கனியிரும்பொழில்காத்தயலிருந்தவன்கண்டான். (௯௨)

நில்லடீஇயெனக்கடுகினன்பெண்ணெனநினைந்தான்
வில்லெடாதவள்வயங்கெரியாமெனவிரிந்த
சில்லலோதியைச்செங்கையிற்றிருகுறப்பற்றி
ஒல்வயிற்றுதைத்தொளிகிளர்சுற்றுவாளுருவி. (௯௩)

ஊக்கித்தாங்கிவிண்படர்வெனென்றுருத்தெழுவாளை
நூக்கிநொய்தினின்வெய்திழையேலெனநுவலா
மூக்குங்காதும்வெம்முரண்முலைக்கண்களுமுறையால்
போக்கிப்போக்கியசினத்தொடும்புரிகுழல்விட்டான். (௯௪)

அக்கணத்தவள்வாய்திறந்தரற்றியவமலை
திக்கனைத்தினுஞ்சென்றதுதேவர்தஞ்செவியும்
புக்கதுற்றதுபுகல்வதென்மூக்கெனும்புழையூ
டுக்கசோரியினீரமுற்றுருகியதுலகம். (௯௫)

கொலைதுமித்துயர்கொடுங்கதிர்வாளினக்கொடியாள்
முலைதுமித்துயர்மூக்கினைநீக்கிய † முறைமை

* காதல்-எல்லாப்பொருளையும் நுகர்தற்குச் செல்லும் வேட்கை.

† மூத்தம் எனப்பாடமுமுண்டு. முகூர்த்தம் மூத்தம் என வடசொற் சிதைவு.

மலைதுமித்தெனவிராவணன்மணியுடைமகுடத்
தலைதுமித்தற்குநாட்கொண்டதொத்ததோர்தன்மை. (௯௪

அதிரமாநிலத்தடிபதைத்தரற்றியவரக்கி
கதிர்கொள்காலவேற்கரன்முதனிருதர்வெங்கதப்போர்
எதிரிலாதவரிறுதியினிமித்தமாவெழுந்தாண்
டுதிரமாரிபெய்கார்நிறமேகமொத்துயர்ந்தாள். (௯௭

உயரும்விண்ணிடைமண்ணிடைவிழுங்கிடந்துழைக்கும்
அயருங்கைகுலைத்தலமருமாருயிர்சோரும்
பெயரும்பெண்பிறந்தேன்பட்டபிழையெனப்பிதற்றும்
துயருமஞ்சிமுன்றொடர்ந்திலாத்தொல்குடிப்பிறந்தாள். (௯௮

ஒற்றுமூக்கினையுலையுறுதீயெனவுயிர்க்கும்
எற்றுங்கையினைநிலத்தினிலிணைத்தடங்கொங்கை
பற்றும்பார்க்குமெய்வெயர்க்குந்தன்பருவலிக்காலால்
சுற்றுமோடும்போய்ச்சோரிநீர்சொரிதரச்சோரும். (௯௯)

ஊற்றுமிக்கநீரருவியினொழுகியகுருதிச்
சேற்றுவெள்ளத்துட்டிரிபவடேவருமிரியக்
கூற்றுமுட்குந்தன்குலத்திறோர்பெயரெலாங்கூறி
ஆற்றுகிற்கிலள்பற்பலபன்னிநின்றழைத்தாள். (௧00)

வேறு.

நிலையெடுத்துநெடுநிலத்துநீயிருக்கத் * தாபதர்கள்
சிலையெடுத்துத்திரியுமிதுசிறிதன்றோதேவரெதிர்
தலையெடுத்துவிழியாமைச்சமைப்பதேதழலெடுத்தான்
மலையெடுத்ததனிமலையேயிவைகாணவாராயோ. (௧0௧)

புலிதானேபுறத்தாகக்குட்டிகோட்படாதென்ன
ஒலியாழியுலகுரைக்குமுரைபொய்யோவூழியினும்
சலியாதமூவருக்கும்வானவர்க்குந்தானவர்க்கும்
வலியானேயான்பட்டவலிகாணவாராயோ. (௧0௨)

ஆர்த் † தானைக்கரசுந்தியமரர்கணத்தொடுமடர்ந்து
போர்த்தானையிந்திரனைப்பொருதவனைப்போர்தொலைத்து
வேர்த்தானையுயிர்கொண்டுமீண்டானைவெரின்பண்டு
பார்த்தானேயான்பட்டபழிவந்துபாராயோ. (௧0௩)

காற்றினையும்புனலினையுங்கனலினையுங்கடுங்காலக்
கூற்றினையும்விண்ணினையுங்கோளினையும்பணிகொண்டற்

---

* தாபதர்-தாபஸரென்ற வடசொல்லின் திரிபு; தவஞ்செய்பவ ரென்று பொருள்.

† ஆனைக்கரசு-ஐராவதம்.

காற்றினைநீயீண்டிருவர்மானுடவர்க்காற்றாது
மாற்றினையோவுன்வலத்தைச்சிவன்றடக்கை * வாள்கொண்டாய். ()

உருப்படிவமன்மதனையொத்துளரேயாயினுமுன்
† செருப்படியிற்பொடியொவ்வாமானிடரைச்சீறுதியோ
நெருப்படியிற்பொடிசிதறநிறைந்தமதத்திசையானை
மருப்பொடியப்பொருப்பிடியத்தோணிமிர்த்தவலியோனே. (௧௦௫)

தேனுடையநறுந்தெரியற்றேவரையுந்தெறுமாற்றல்
தானுடையவிராவணற்குந்தம்பியர்க்குந்தவிர்ந்ததோ
ஊனுடையவுடம்பினராயெங்குலத்தோர்க்குணவாய
மானுடவர்மருங்கேபுக்கொடுங்கினதோவலியம்மா. (௧௦௬)

மரனையுநெடுங்கானின்மறைந்துறையுந்தாபதர்கள்
உரனேயோவடலரக்கரோய்வேயோவுற்றெதிர்ந்தார்
அரனேயோவயனேயோவரியேயோவெனுமாற்றற்
கரனேயோயான்பட்ட ‡ கையறவுகாணாயோ. (௧௦௭)

இந்திரனுமரனயனுமிமையவரும்பணிகேட்பச்
சுந்தரிபல்லாண்டிசைப்பவுலகேழுந்தொழுதேத்தச்
சந்திரன்போறனிக்குடைக்கீழ்நீயிருக்குஞ்சவைக்கேவெ
வந்தடியேனுறுமுகங்காட்டவல்லேனே. (௧௦௮)

உரனெரிந்துவிழவென்னையுதைத்துருட்டிமூக்கரிந்த
நரனிருந்துதோள்பார்க்கநான்கிடந்துபுலம்புவதோ
கரனிருந்தவனமன்றோவிவைபடவுங்கடவேனோ
அரனிருந்தமலையெடுத்தவண்ணாவோவண்ணாவோ. (௧௦௯)

நசையாலேமூக்கிழந்துநாணமிலாநான்பட்ட
வசையாலேநினதுபுகழ்மாசுண்டதாகாதோ
திசையானைவிசைகலங்கச்செருச்செய்துமருப்பொசித்த
இசையாலேநிறைந்தபுயத்திராவணவோவிராவணவோ. (௧௧௦)

கானமதினிடையிருவர்காதொடுமூக்குடனரிய
மானமதாற்பாவியேனிவண்மடியக்கடவேனோ
தானவரைக்கருவறுத்துச்சதமகனைத்தளையிலிட்டு
வானவரைப்பணிகொண்ட § மருகாவோமருகாவோ. (௧௧௧)

ஒருகாலத்துலகேழுமுருத்தெரியத்தனுவொன்றால்
திருகாதசினந்திருகித்திசையனைத்துஞ்செலநூறி

---

* சிவபிரானிட மிராவணன்பெற்றவாளுக்குச் சந்திரஹாஸமெனப் பெயர். † செருபடி-யுத்தபூமி. செருப்பினடியிலுள்ள எனச் சிலேடை.
‡ கையறவு-துன்பம். § மருகன்-மருமகன்; இங்கே உடன்பிறந்தான்மகன்.

இருகாலிற்புரந்தரனையிருஞ்சிறையினிடுவித்த
மருகாவோமானிடவர்வலிகாணவாராயோ. (௧௧௨)

கல்லீரும்படைத்தடக்கையடற்கரதூடணர்முதலா
அல்லீருஞ்சுடர்மணிப்பூணரக்கர்குலத்தவதரித்தீர்
கொல்லீரும்படைக் * கும்பகருணனைப்போற்குவலயத்துள்
எல்லீருமுறங்குதிரோயானழைத்தல்கேளீரோ. (௧௧௩)

என்றின்னபலபன்னியலரக்கியழுதிரங்கிப்
† பொன்றுன்னும்படியகத்துப்புரள்கின்றபொழுதகத்து
நின்றந்தாதியகத்துநிறைதவத்தின்குறைமுடித்து
வன்றிண்கைச்சிலைநெடுந்தோண்மரகதத்தின்மலைவந்தான். (௧௧௪)

வந்தானையிடைநோக்கிவயிறலைத்துமழைக்கண்ணீர்
செந்தாரைக்குருதியொடுசெழுநிலத்தைச்சேறாக்கி
அந்தோவுன்றிருமேனிக்கன்பிழைத்தவன்பிழையால்
எந்தாயான்பட்டபடியிதுகாணென்றெதிர்விழுந்தாள். (௧௧௫)

விரிந்தாயகூந்தலாள்வெய்யவினையாதானும்
புரிந்தாளென்பதுணர்ந்துபொருவரியதிருமனத்தால்
தெரிந்தானின்றிளையானையிவளைநெடுஞ்செவியொடுமூக்
கரிந்தானென்பதுமுணர்ந்தானவளைநீயாரென்றான். (௧௧௬)

அவ்வுரைகேட்டலரக்கியறியாயோநீயென்னைத்
தெவ்வுறையென்றொருலகுமில்லாதசெற்றத்தான்
வெவ்விலைவேலிராவணனும்விண்ணுலகமுதலாக
எவ்வுலகுமுடையானுக்குடன்பிறந்தேன்யானென்றாள். (௧௧௭)

தாமிருந்ததகையரக்கர்புகலொழியத்தவமியற்ற
யாமிருந்தநெடுங்கூற்கென்செயவந்தீரெனலும்
வேமிருந்தின்னனைக்கனலும்வெங்காமவெம்பிணிக்கு
மாமருந்தேநெருநலினும்வந்திலேனியானென்றாள். (௧௧௮)

செங்கயல்போற்கருநெடுங்கட்டேமருதாமரையுறையும்
நங்கையிவரெனநெருநடைந்தவோராநாமென்னக்
கொங்கைகளுங்குழைக்காதுங்கொடிமூக்குங்குறைத்தழித்தால்
அங்கணரசேயொருவர்க்கழியாதோவழகென்றாள். (௧௧௯)

மூரன்முறுவலனிளையமொய்ம்பினோன்முகநோக்கி
வீரவிரைந்தனையிவடன்விடுகாதுங்கொடிமூக்கும்

---

* கும்பகருணன்-குடம்போன்ற காதினையுடையான்.

† பொன்றுன்னும்படி-அழகுவிளங்கும் பூமி, இலக்குமியாகிய பிராட்டி யிருக்குமிடமென்று கூறலுமமையும்.

ஈரமிலாந்திவளிழைத்தபிழையென்னென்றிறைவினவச்
சூரநெடுந்தகையவளையடிவணங்கிச்சொல்லுவான். (கஉ0)

* தேட்டந்தான்வாளெயிற்றிற்றின்னவோதீவினையோர்
கூட்டந்தான்புறத்துளதோகுறித்தபொருளறிந்திலமால்
நாட்டந்தானெரியுமிழநல்லாண்மேற்பொல்லாதாள்
† ஓட்டந்தாளரிதினிவளுடனெறழுந்தாளெனவுரைத்தான். (கஉக)

ஏற்றவளை ‡ வரிசிலையோனியம்பாமுனிகலரக்கி
சேற்றவளைதன்கணவனருகிருப்பச்சினந்திருகிச்
சூற்றவளைநீருழக்குந்துறைகெழுநீர்வளநாடா
§ மாற்றவளைக்கண்டக்காலழலாதோமனமென்றாள். (கஉஉ)

பேடிப்போர்வல்லரக்கர்பெருங்குலத்தையொருங்கவிப்பான்
தேடிப்போந்தனையின்றுதீமாற்றஞ்சிலவிளம்பி
வீடிப்போகாதேயிம்மெய்வனத்தைவிட்டகல
ஓடிப்போவென்றுரைத்தவுரைகடந்தாற்கவளுரைப்பாள். (கஉங)

நரைதிரையென்றில்லாதநான்முகனேமுதலமரர்
கரையிறந்தோரிராவணற்குக்கரனிறக்குங்குடியென்றால்
விரையுமிதுநன்றன்றுவேறுகயானுரைக்கும்
உரையுளதுநுமக்குறுதியுணர்வுளதேலென்றுரைப்பாள். (கஉச)

ஆக்கரியமூக்குங்கையரியுண்டாளென்றுரை
நாக்கரியுந்தயமுகனார் $ நாகரிகரல்லாமை
மூக்கரிந்துநுங்குலத்தைமுதலரிந்தீரினியுமக்குப்
போக்கரிதிவ்வழகையெல்லாம்புல்லிடையேயுகுத்தீரே. (கஉரு)

வான்காப்போர்மண்காப்போர்மாநாகர்வாழுலகந்
தான்காப்போரினித்தங்கடலைகாத்துநின்றுங்கள்
ஊன்காக்கவுரியாரயாரென்னையுயிர்நீர்காக்கின்
யான்காப்பெனல்லாலவ்விராவணனருளரென்றாள். (கஉசு)

காவற்றிண்கற்பமைந்தார்தம்பெருமைதாங்கபூரார்
ஆவற்பேரன்பினலைறகின்றேறுமன்றே
தேவர்க்கும்வலியான்றன்றிருத்தங்கையாளிவளீண்
டேவர்க்கும்வலியாளென்றிளையானுக்கியம்பீரோ. (கஉஎ)

---

* தேட்டந்தான்-தேடிவந்ததுதான்.

† ஓட்டந்தாள்-ஓடிவந்தாள்.

‡ வரிசிலையோன்-ஈண்டு இலக்குமணன்.

§ மாற்றவள்-சக்களத்தியை.

$ நாகரிகம்-கண்ணோட்டம் "பெயக்கண்டு நஞ்சுண்டமைவர் நயத்தக்க, நாகரிகம்வேண்டுபவர்" என்புழி நாகரிகம்-கண்ணோட்டமென்றார் பரிமேலழகரும்.

மாப்போரிற்புறங்காப்பென்வான்சுமந்துசெலவல்லேன்
* தூப்போலக்கனிபலவுஞ்சுவையுடையதரவல்லேன்
காப்போரைக்கைத்தென்னீர்கருதியதுதருவேனிப்
பூப்போலுமெல்லியலாற்பொருளென்னோபுகலீரால். (கஉஅ)

குலத்தாலுநலத்தாலுங்குறித்தனவேகொணர்தக்க
வலத்தாலுமதியாலும்வடிவாலுமடத்தாலும்
நிலத்தாரும்விசும்பாருநேரிழையாரென்னைப்போல்
சொலத்தானிங்குரியாரைச்சொல்லீரோவல்லீரேல். (கஉகூ)

†.போக்கினீரென்னுசி ‡ போய்த்தென்னீர்பொறுக்குவிரேல்
ஆக்குவதேனோர்நொடிவரையினமுகமைவெனருள்கூரும்
பாக்கியமுண்டெனினதனாற்பெண்மைக்கோர்பழுதுண்டோ
மேக்குயருநெடுமூக்குமடந்தையர்க்குப்பகையன்றோ. (கங0)

விண்டாரேயல்லாரோவேண்டாதார்தான்வேண்டின்
உண்டாயகாதலினென்னுயிரென்பதுமதன்றோ
கண்டாரே காதலிக்குங்கட்டழகும்விடமன்றோ
கொண்டாரேகொண்டாடுமுருப்பெற்றூர்கொள்ளீரோ. (கஙக)

சிவனுமலர்த்திசைமுகனுந்திருமாலுந்தெருவுலிசத்
தவனுமடுத்தொன்றுகிலன்றன்னையருவேனோ
புவனமனைத்தையுமொருதன்பூங்கணையாலுயிர்வாங்கும்
அவனுமுனக்கிளையானோவிவனேபோலருவிலனல். (கஙஉ)

வேறு.

பொன்னுருவப்பொருகழலீர்புழைகாணமூக்கரிவான்பொருள்வேறுண்டோ, இன்னுருவமிதுகொண்டிங்கிருந்தொழிபுநம்மருங்கேயேகாளப்பால், பின்னிவளையமொருவர்பாரொன்றேயரிந்தீர்பிழைசெய்தீரோ அன்னதனையறிந்தன்றேவன்பிட்டிபூண்டதுநானறிவிலேனே. (கஙங)

வெப்பழியாசெடுவெகுளிவேலரக்கர்தறிந்துவெகுண்டுநோக்கின் அப்பழியாலுலகனைத்துநம்பொருட்டாலழிந்தனவாமறத்தைநோக்கி ஒப்பழியச்செய்கிலாருயர்குலத்துத்தோன்றினோருணர்ந்துநோக்கி [ருள். இப்பழியைத்துடைத்துதவியினிதிருத்திரென்றொடுமென் றிறைஞ்சிநின்

நாடறியாத்துயரிழைத்தசுவையரக்கிநின்னென்னைதன்னைநல்கும், தாடகையையுயிர்கவர்ந்தசமயிருந்தன்றியுநான்றவமேற்கொண்ட, தோடகையதுறுமலர்த்தாரிகலரக்கர்குலந்தொலைப்பான்றோன்றினென்றேன், போடகலப்புல்லொழுக்கைவல்லரக்கியென்றிறைவன்புகலும்பின்னும். (கஙசு)

* தூ-தசை "தாயதூற்றைம்பகைதசையுந்தூவே" என்பது பிங்கலந்தை.

† போக்கினீர்-அரிந்தீர்.

‡ போய்த்தென்-அதனால்போயதென்னை. தவமேற்கொண்டு என்றும் பாடம்.

தரையளித்ததனிநேமித்தயரதன்றன்புதல்வரியாந்தாய்சொற்றாங்கி
விரையளித்தகான்புகுந்தேம்வேதியருமாதவரும்வேண்டநீண்டு [டை
கரையளித்தற்கரியபடைக் கடலரக்கர்குலந் தொலைத்துக்கண்டாய்பண்
* வரையளித்தகுலமாடநகர்புகுவேமிவைதெரியமனக்கொளென்றான்.()

நெறித்தாரைசெல்லாதநிருதரெதிர்நில்லாதேநெடியதேவர்
மறித்தாரீண்டிவரிருவர்மானிடவரென்றதுவல்லையாகின்
† வெறித்தாரைவேலரக்கர்விறலியக்கர்முதலினர்நீயிடலோரென்று
குறித்தாரையாவரையுங்கொணருதியேனின்னெதிரேகோறுமென்றான்.

கொல்லலாமாயங்கள்குறித்தனவேகொள்ளலாங்கொற்றமுற்ற
வெல்லலாமற்றியற்றும்வினையெல்லாங்கடக்கலாமேல்வாய்நீங்கிப்
பல்லெலாமுறத்தோன்றும்பகுவாயாளென்றுதுபார்த்தியாயின்
நெல்லெலாஞ்சுரந்தளிக்குநீர்நாடகேளென்றுநிருதிகூறும். (கஙஅ)

காம்பறியுந்தோளாளைக்கைவிடவொணினும்யான்மிகையோகள்வர்
ஆம்பொறியிலடலரக்கரவரோடேசெருச்செய்வானமைந்தீராயின்
தாம்பொறியிற்பலமாயந்தரும்பொறிகளறிந்தவற்றைத்தடுப்பெனன்றே
பாம்பறியும்பாம்பின்காலெனமொழியும்பழமொழியும்பார்க்கிலீரோ. ()

உளங்கோடலுனையிழைத்தாளுளளொருத்தி யென்னுதியேனிருத ரோடும், களங்கோடற்குரிய செருக்கண்ணியக்கா லொருமுவேங்கலந்த காலைக், ‡குளங்கோடுமென்றிதுவுமுறகோளேயென்றுணருங்குறிக்கோ ளில்லா, இளங்கோவோ டுனையிருத்தினிருகோளுஞ்சிறைவைத்தாற் § கிளையேயெனென்றாள். (கசɒ)

பெருங்குலாவுறுநகர்க்கேயேகுநாள்வேண்டுமுருப்பிடிப்பேனென்றேல்
அருங்கலாமுற்றிருந்தாலென்னினுமீங்கிளையவன்றனரிந்தநாசி
ஒருங்கிலாவிவளோடுமுறைறவேறுவென்பானேவிறைவவொன்றும்
மருங்கிலாதவளோடுமென்றேநீநெடுங்காலம்வாழ்ந்ததென்பாய். (கசக)

என்றவண்மேலிளையவன்றனிலங்கிலைவேல்கடைக்கணியாவிவளையீண்டு
கொன்றுகளையேமென்றானெடிதலைக்குமருளென்கொல்கோவேயென்ன
நன்றதுவேயாமன்றேபோகாளேலாகவெனநாதன்கூற
ஒன்றுமிவரெனக்கிரங்காருயிரிழப்பெனிற்கினெனவரக்கியுன்று. (கசஉ)

ஏற்றநெடுங்கொடிமூக்குமிருகாதுமுலையிரண்டுமிழந்தும்வாழ
ஆற்றுவனேவஞ்சனையாலுமையுள்ளபரிசறிவானமைந்ததன்றே
காற்றினிலுங்கனலினிலுங்கடியானைக்கொடியானைக்கரனையுங்கள் [றாள்.
கூற்றுவனையிப்பொழுதே கொணர்கின்றேனென்று சலங்கொண்டுபோ

ரு-வது, சூர்ப்பணகைப்படலம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-ருகஎ.

---

* வரைதல்-எழுதுதல். இனி வரை-மலையெனக்கொண்டு மலை போன்ற குலமாடலுமென்னலுமமையும்.

† வெறிதாரைவேல் அரக்கர்-கோபாவேசத்தையும் கூர்மைபொருந் திய வேலாயுதத்தையுமுடைய அரக்கருள்ளும் வெறிதார் ஐவேலரக்கர் எனப்பிரித்து வாசனைபொருந்திய வெற்றிமாலையையணிந்த அழகிய வேலினையுடையரெனப் பொருள் கோடலுமாம்.

‡ குளங்கோடும் - குளம்பறித்துவிடுவோம்: அதாவது, அவ்வரக்க ரது தலைகொள்ளுவோம் என்றபடி. § இளைத்தல்-தளர்தல்.

# * ௬-வது, கரன் வதைப்படலம்.

இருந்தமாக்கரன்றாளிணையின்மிசைச்
† சொரிந்தசோரியள்கூந்தலதூம்பெனத்
தெரிந்தமூக்கினள்வாயினள்செக்கர்மேல்
விரிந்தமேகமெனவிழுந்தாளரோ. (௧)

அழுங்குநாளிதென்றந்தகனுணையால்
தழுங்குபேரியெனத்தனித்தேங்குவாள்
முழங்குமேகமுடித்தவெந்தீயினால்
புழுங்குநாகமெனப்புரண்டாளரோ. (௨)

வாக்கிற்கொக்கப்புகைமுந்துவாயினான்
நோக்கிக்கூசலர்நன்னையித்தன்மையை
ஆக்கிப்போனவரார்கொலென்றானவன்
மூக்கிற்சோரிமுழீஇக்கொண்டகண்ணினாள். (௩)

இருவர்மானிடர்தாபதரேந்திய
வரிவில்வாட்கையர்மன்மதன்மேனியர்
தருமநீரர்தயரதன்காதலர்
‡ செருவினேருநிருதரைத்தேடுவார். (௪)

ஒன்றுநோக்கலருன்வலியோங்கறன்
நின்றுநோக்கிநிறுத்துநினைப்பினர்
வென்றிவேற்கைநிருதரைவேரறக்
கொன்றுநீக்குதுமென்றுணர்கொள்கையார். (௫)

மண்ணினோக்கருவாளினின்மற்றினில்
எண்ணினோக்குறின்யாவர்க்குநோக்கலாப்
பெண்ணினோக்குடையாளொருபேதையென்
கண்ணினோக்கியுரைப்பருங்காட்சியாள். (௬)

கண்டுநோக்கருங்காரிகையாடனைக்
கொண்டுபோவலிலங்கையர்கோக்கெனா
விண்டுமேல்விழுந்தேனைவெகுண்டவர்
துண்டமாக்கினர்மூக்கெனச்சொல்லினாள். (௭)

---

* கரன்-கொடியவன்; வதை-கொலை; இராவணனுக்கு சிறியதாயாகிய கும்பீநசியின் மகன்.

† அரக்கியின் செம்பட்டமயிர்க்கும் அரத்தத்துக்கும் செவ்வானமும், அவள் கரியமேனிக்கு மேகமும் உவமை. சொரிந்த என்பதைக் கூந்தலொடும், தூம்பெனத்திரிந்த என்பதை வாயொடுங்கூட்டுக.

‡ செருவில்-போரில். செரு வில் என்றும் பிரிக்கலாம்.

கேட்டனன்னுரைகண்டிலன்கேடினர்
தோட்டநுங்கிற்றொளையுறமூக்கினைக்
காட்டெனவெழுந்தானெதிர்கண்டவர்
நாட்டந்தீயவுலகைநடுக்குவான். (௮)

எழுந்துநின்றுலகேழுமெரிந்துகப்
பொழிந்தகோபக்கனலுகப்பொங்குவான்
கழிந்துபோயினர்மானிடரென்னுங்கால்
அழிந்ததோவிவ்வரும்பழியென்னுமால். (௯)

வருகதேரெனுமாத்திரைமாடுளோர்
இருகைமால்வரையேழினொடேழுனார்
ஒருகையாலுலகேந்துமுரத்தினார்
தருகவிப்பணியெம்வயிற்றானென்றார். (௧௦)

சூலம்வாண்மழுத்தோமரஞ்சக்கரம்
காலபாசங்கதைபொருங்கையினார்
வேலைஞாலம்வெருவுறுமார்ப்பினார்
* ஆலகாலந்திரண்டன்னவாக்கையார். (௧௧)

வெம்புகோபக்கனலர்விலக்கினார்
நம்பியெம்மடிமைத்தொழினன்றெனா
உம்பர்மேலின்றுருத்தனைபோதியோ
இம்பர்மேலினியாமுளமோவென்றார். (௧௨)

நன்றுசொல்லினிர்நாணிச்சிறார்கண்மேல்
சென்றுபோர்செயிற்றேவர்சிரிப்பரால்
கொன்றுசோரிகுடித்தவர்கொள்கையை
வென்றுமீளுதிர் † மெல்லியலோடென்றான். (௧௩)

என்னலோடும்விரும்பியிறைஞ்சினார்
சொன்னநாணிலி ‡ யந்தகன்றாதென
அன்னள்பிற்படர்வாரெனவாயினார்
மன்னன்காதலர்வைகிடநண்ணினார். (௧௪)

துமிலப்போர்வல்லரக்கர்க்குச்சுட்டினாள்
அமலத்தொல்பெயராயிரத்தாழியான்
நிமலப்பாதநினைவினிருந்தவக்
கமலக்கண்ணனைக்கையினிற்காட்டினாள். (௧௫)

---

* ஆலகாலம்-நிறத்துக்கும் கொடிய செயலுக்கும் உவமை.

† மெல்லியல் - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

‡ அரக்கர் குலமுழுதும் அழிதற்கு இச்சூர்ப்பணகையே காரணமாக விருத்தல்பற்றி 'அந்தகன்றாதெனவன்னள்' என்றார்.

எற்றுவாம் * பிடித்தேந்துதுமென்குநர்
பற்றுவாநெடும்பாசத்தினென்குநர்
முற்றுவாமிறைசொன்முறையாலெனுச்
சுற்றினார்வரைசூழ்ந்தன்னதோற்றத்தார். (க

ஏத்துவாய்மையிராமனிளவலைக்
காத்திதையலையென்றுதன்கற்பகம்
பூத்ததன்னபொருவிறடக்கையால்
ஆத்தநாணினருவரைவாங்கினான். (க

வாங்கிவாளொடுவாளிபெய்புட்டிலும்
தாங்கித்தாமரைக்கண்ணனைச்சாலையை
நீங்கியிவ்வழிநேர்மினோடாவெனு
வீங்குதோளன்மலைதலைமேயினான். (க

மழுவும்வாளும்வயங்கொளிமுச்சிகைக்
கழுவுங்காலவெந்தீயன்னகாட்சியார்
எழுவினீட்டடக்கையெழுநான்கையும்
தழுவும்வாளிகளாற்றலஞ்சார்த்தினான். (கக

மரங்கள்போனெடுவாளொடுதோள்விழ
† உரங்களானடர்ந்தார்க்குரவோன்விடும்
சரங்களோடினதைக்கவவர்கடம்
சிரங்களோடினதீயவளோடினாள். (உ௦

ஒளிறுவேற்கரற்குற்றதுணர்த்தினாள்
குளிறுகோபவெகுகோளரிமாவடக்
களிறெலாம்படக்கைதலைமேலுறப்
பிளிறியோடும்பிடியன்னபெற்றியாள். (உக)

அங்கரக்கரவிந்தழிந்தாரெனப்
பொங்கரத்தம்விழிவழிபோந்துக
வெங்கரப்பெயரோன்வெகுண்டான்விடைச்
சங்கரற்குந்தடுப்பருந்தன்மையான். (உஉ)

அழையென்றேரெணக்காக்கு ‡ வென்போர்படை
உழையரோடியொருநொடியோங்கன்மேல்
மழையென்மாமுழசெற்றுதிர்வல்லென்றான்
முழையின்வாளரியஞ்சமுழங்குவான். (உங)

---

* பிடித்து-இடைநிலைத்தீவகம்.

† உரம்-ஊக்கம். மார்பு, வலி எனப் பலபொருள் குறிக்கும் ஒரு சொல். உரவோன்-வலிமையையுடையோன் "ஒருதாமாகிய வுரவோர்" என்னும் புறப்பாட்டினும் இப்பொருட்டாதல் காண்க.

‡ வென்-வெற்றி.

பேரியோசைபிறத்தலும்பெட்புறு
மாரிமேகம்வரம்பிலவந்தெனத்
தேரின்சேனை திரண்டனதேவர்தம்
ஊருநாகருலகுமுலைந்தவே. (௨௪)

போர்ப்பெரும்பணைபொம்மென்முழக்கமா
நீர்த்தரங்கநெடுந்தடந்தோள்களா
ஆர்த்தெழுந்ததிறுதியினார்கலிக்
கார்க்கருங்கடல்கால்கிளர்ந்தென்னவே. (௨௫)

காடுதுன்றிவிசும்புகரந்தென
நீடியெங்குநிமிர்ந்தநெடுங்கொடி
ஓடுமெங்கள்பசியென்றுவந்தெழுந்
தாடுகின்றவலகையினோடவே. (௨௬)

தறியினீங்கியதாழ்தடக்கைத்துணைக்
குறிகொளாமதவேழக்குழுவினார்
செறியும்வாளொடுவாளிடைதேய்த்துகும்
பொறியிற்கானெங்கும்வெங்கனல்பொங்கவே. (௨௭)

* முருடிரண்டுமுழங்குறத்தாக்கொலி
உருடிரண்டெழுந்தேரொலியுட்புக
அருடிரண்டவருக்கன்றன்மேல்வழுந்
இருடிரண்டுவந்தீண்டியதென்னவே. (௨௮)

தலையின்மாசுணந்தாங்கியதாரணி
நிலைநிலாதுமுதுகைநெளிப்புற
உலைவிலேழுலகத்தினுமோங்கிய
மலையெலாமொருமாடுதொக்கென்னவே. (௨௯)

வேறு.

வல்லியக்குழாங்களோமழையினீட்டமோ
ஒல்லிபத்தொகுதியோவோங்குமோங்கலோ
அல்லமற்றரிகளினனிகமேயெனப்
பல்பதினாயிரம்படைக்கைவீரரே. (௩0)

||| ஆளிகள்பூண்டனவரிகள்பூண்டன
மீளிகள்பூண்டனவேங்கைபூண்டன
ஞாளிகள்பூண்டனநரிகள்பூண்டன
கூளிகள்பூண்டனகுதிரைபூண்டன. (௩௧)

---

* முருடு-பத்தல், மத்தளமுமாம்.

|| ஏற்றினமார்த்தனவேனமார்த்தன
காற்றினமார்த்தனகழுதையார்த்தன
தோற்றினமாத்திரத்துலகுசூழ்வரும்
பாற்றினமார்த்தனபணிலமார்த்தன. (௩௨)

|| தேரினந்துவன்றினசிறுகட்செம்முகக்
காரினநெருங்கினகாலிற்கால்வரு
தாரினங்குழுமினதடையில்கூற்றன்ன
பேரினங்கடலெனப்பெயருங்காலையே. (௩௩)

மழுக்களுமயில்களும்வயிரவாள்களும்
எழுக்களுந்தோமரத்தொகையுமீட்டியும்
முழுக்களுமுசுண்டியுந்தண்டுமுத்தலைக்
கழுக்களுமுலக்கையுங்காலபாசமும். (௩௪)

குந்தமுங்குலிசமுங்கோலும்பாலமும்
அந்தமில்சாபமுஞ்சரமுமாழியும்
வெந்தொழில்வலயமும்விளங்குசங்கனு
பந்தமுங்கப்பணப்படையும்பாசமும். (௩௫)

ஆதியினருக்கனுமனலுமஞ்சுறும்
சோதியசோரியுந்தூவுந்துன்னிய
எதிகண்டிடைந்தனவிமையவர்க்கெலாம்
வேதனைகொடுத்தனவாகைவேய்ந்தன. (௩௬)

ஆயிரமாயிரங்களிற்றின்ஞற்றலர்
மாயிருஞாலத்தைவிழுங்கும்வாயினர்
தீயெரிவிழியினர்நிருதர்சேனையின்
நாயகர்பதின்மரோடடுத்தநால்வரே. (௩௭)

ஆறிரெண்டாயிரமமைந்தவாயிரம்
கூறினவொருபடைகுறித்தவப்படை
ஏறினவேழினதிரட்டியென்பரால்
ஊறினசேனையின்றொகுதியுன்னுவார். (௩௮)

உரத்தினருருமெனவுரறும்வாயினர்
கரத்தெறிபடையினர்கமலத்தோன்றரும்
வரத்தினர்மலையெனமழைதுயின்றெழு
சிரத்தினர்தருக்கினர்செருக்குஞ்சிந்தையார். (௩௯)

---

|| (௩௧-௩௨-௩௩) கருத்து, — இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைப்படையும் ஒன்றுசேர்ந்தனவென்பதாம்.

விண்ணளவிடநிமிர்ந்துயர்ந்தமேனியர்
கண்ணளவிடவருமார்பர்காலினல்
மண்ணளவிடுநெடுவலத்தர்வானவர்
எண்ணளவிடவருஞ்செருவென்றேறினர். (௪0)

இந்திரன்முதலினோறெறிந்தமாப்படை
சிந்தினதெறித்துகச் * செறிந்ததோளினர்
அந்தகனடிதொழுதடங்குமாணையார்
வெந்தழலுருவுகொண்டனையமேனியார். (௪௧)

சூலமும்பாசமுந்தொடர்ந்தசெம்மயிர்ச்
சாலமுந்தறுகணுமெயிறுந்தாங்கினர்
ஆலமும்வெளிதெனுநிறத்தராற்றலால்
காலனுங்காலனென்றயிர்க்குங்காட்சியார். (௪௨)

கழலினர்தாரினர் † கவசமார்பினர்
நிழலுறுபூணினர்நெறித்தநெற்றியர்
அழலுறுகுஞ்சியரமரைவேட்டுவர்
தெழலுறுமனத்தினரொருமையெய்தினர். (௪௩)

மருப்பிறுமதக்களிற்றமரர்மன்னனும்
விருப்புறுமுகத்தெதிர்விழிக்கின்வெண்ணிடும்
உருப்பொருவுவெறுமுலகமூன்றினும்
செருப்பெறுத்தினவுறுசிகரத்தோளினர். (௪௪)

குஞ்சரங்குதிரைபேய்குரங்குகோளரி
வெஞ்சினக்கரடிநாய்வேங்கையாளியென்
றஞ்சுறக்கனல்புரைமுகத்தரார்கலி
நஞ்சுதொக்கெனப்புரைநயனத்தார்களும். (௪௫)

எண்கையரெழுகையரேழுமெட்டுமாய்க்
கண்கனல்சொரிதருமுகத்தர் ‡ காலினர்
வண்கையின்வளைத்துயிர்வாரிவாயினிட்
டுண்கையினுவகையருலப்பிலார்களும். (௪௬)

இயக்கரிற்பறித்தனவவுணரிட்டன
§ மயக்குறுத்தமரரைவலியின்வாங்கின
துயக்கில்கந்தர்ப்பரைத்துரந்துவாரின
நயப்புறுசித்தரைநலிந்துவவ்வின. (௪௭)

---

* செறிந்த எனற்கு வன்மைபொருந்திய எனவும் மிகுந்த எனலும் பொருந்தும்.

† கவசம்-இருப்புச்சட்டை.

‡ காலினர்-கால்களையுமுடையவர்; காற்றின்தன்மையுடையவர்கள் என்றும் பொருள்கோடலாம்.

§ மயக்குறுத்தல்-மாயைப்போர்புரிந்து மயங்கச்செய்தல்.

கொடிதழைகவிகைவான்றெருங்கல்குஞ்சரம்
படியுறுபதாகைபீலிதானம்பல்வகை
இடையிலாதெங்கணுமிசையமீமிசை
மிடைதலினுலகெலாம்வெயிலிழப்பவே. (௪௮)

எழுவரோடெழுவராமுலகமேழொடேழ்
தழுவியவென்றியர்தலைவர்தானையர்
மழுவினர்வாளினர்வயங்குசூலத்தர்
உழுவையொடரியெனவுடற்றுஞ்சீற்றத்தார். (௪௯)

வில்லினர்வாளினரிதழின்மீதிடும்
பல்லினர்மேருவைப்பறிக்குமாற்றலர்
புல்லினர்திசைதொறும்புரவித்தேரினர்
சொல்லினமுடிக்குறுந்துணிவினெஞ்சினர். (௫௦)

* தூடணன்றிரிசிராத்தோன்றலாதியர்
கோடணைமுரசினங்குளிறுசேனையர்
ஆடவருயிர்கவரலங்கல்வேலினர்
பாடவநிலையினர்பலருஞ்சுற்றினர். (௫௧)

ஆன்றமையெறிபடையழுவத்தார்கலி
வான்றொடர்மேருவைவளைத்ததாமென
ஊன்றினதேரினனுயர்ந்ததோளினன்
தோன்றினன்யாவருந்துணுக்கமெய்தவே. (௫௨)

அசும்புறுமதகரிபுரவியாடகத்
தசும்புறுசயந்தனமரக்கர்தாடர
விசும்புறுதூளியான்வெண்மைமேயின
பசும்பரிபகலவன்பைம்பொற்றேரரோ. (௫௩)

வனந்துகள்பட்டனமலையின்வானுயர்
கனந்துகள்பட்டனகடல்கடூர்ந்தன
இனந்தொகுதூளியாலிசைப்பதென்னினிச்
சினந்தொகுநெடுங்கடற் † சேனைசெல்லவே. (௫௪)

நிலைமிசைவிசும்பிடைநெருக்கலானொடு
மலைமிசைமலையினம்வருவபோன்மலைத்
தலைமிசைதலைமிசைதாவிச்சென்றனர்
கொலைமிசைநஞ்செனக்கொதிக்குநெஞ்சினர். (௫௫)

* தூஷணன்-(யாவரையும்) நிந்திப்பவன்; கரனுடைய தம்பி. திரிசிரர்-மூன்று தலைகளையுடையவன்.

† சேனை-நால்வகைப்படைக்கும் பொதுப்பெயராயினும் ஈண்டு சினமிகுதிபற்றிக் காலாட்படை மாத்திரையாய் நின்றது.

வே று.

வந்ததுசேனைவெள்ளம்வள்ளியோன்மருங்குமாய
பந்தமாவினையைமாளப்பற்றறுபெற்றியோர்க்கும்
உந்தருநிலையதாகியுடனுறைந்துயிர்கடம்மை
அந்தகற்களிக்குநோய்போலரக்கிமுன்னுகவம்மா. (ருசு)

தூரியக்குரலின்வானின்மூகிற்கணந்துணுக்கங்கொள்ள
வார்சிலையொலியினஞ்சியுருமெலாமறுக்கங்கொள்ள
ஆர்கலியார்ப்பினுட்கியசைவுறவரக்கர்சேனை
போர்வனத்திருந்தவீரருறைவிடம்புக்கதன்றே. (ருஎ)

வாய்புலர்ந்தழிந்தமெய்யின்வருத்தத்தவழியின்யாண்டும்
ஓய்விலநிமிர்ந்துவீங்குமுயிர்ப்பினவுலைந்தகண்ண
தீயவர்சேனைவந்துசேர்ந்தமைதெரியச்சென்று
வேய்தெரிந்துரைப்பபோன்றபுள்ளொலிவிலங்குமம்மா. (ருஅ)

தூளியின்படலைவந்துதொடர்வுறமரமுந்தூறும்
தாளிடையொடியுமோசைசடசடவொலிப்பக்கானத்
தாளியுமரியுமஞ்சிப்பிரிதருமலக்கணோக்கி
மீளிமொய்ம்பினருஞ்சேனைமேல்வந்ததுளதென்றுன்னு. (ருகூ)

பின்னின்றசிலையன்வீரகவசத்தன்விசித்தவாளன்
பொன்னின்றவடிம்பின்வாளிப்புட்டிலன்புகையுநெஞ்சன்
நின்னின்றுகாண்டியான்செய்நிலையெனவிரும்பிநோரா
முன்னின்றபின்வந்தோனைநோக்கினன்மொழியலுற்றான். (சு0)

நெறிக்கொண்மாதவர்க்குமுன்னேநேர்ந்தனெனிருதராவி
பறிக்குவென்யானேயென்றபழமொழிபழுதுறாமே
வெறிக்கொள்பூங்குழலினுளைவீரநீவேண்டினேன்யான்
குறிக்கொடுகாத்தியின்னேகொல்வெனிக்குழுவையென்று. (சுக)

மரன்படர்கானமெங்குமதர்படவந்தசேனை
கரன்படையென்பதெண்ணிக்கருகிறக்கமலக்கண்ணன்
சரன்படர்புட்டில்கட்டிச்சாபமுந்தரித்தான் * றள்ளா
உரன்படர்தோளின் † மீளாக்கவசமிட்டுடைவாளார்த்தான். (சுஉ)

மீளருஞ்செருவின்விண்ணுமண்ணுமென்மேல்வந்தாலும்
நாளுலந்தழியுமென்றேநானுனக்குரைப்பதென்னே

---

* தள்ளாவுரம் - எவராலும் வெல்லமுடியாத வலிமை.

† மீளாக்கவசம் - ஸ்ரீராமபிரானுடலினின்றும் பிறர்கணையால் பெயர்த்துவிட முடியாத வலியகவசம்.

ஆளியின்றப்பினுயிவ்வமரெனக்கருளினின்றென்
தோளினைத்தின்னுகின்றசோம்பினைத்துடைத்தியென்றான். (௬௩)

என்றனனிளையவீரனிசைந்திலனிராமனேந்தும்
குன்றனதோளினாற்றலுள்ளத்தினுணரக்கொண்டான்
அன்றியுமண்ணலாணைமறுக்கிலனங்கைகூப்பி
நின்றனனிருந்தான்கண்ணீர்நிலனுறப்புலர்கின்றாள்பால். (௬௪)

குழையுறுமதியம்பூத்தகொம்பனாள்குழைந்துசோரத்
தழையுறுசாலைநின்றுந்தனிச்சிலைதரித்தமேரு
மழையெனமுழங்குகின்றவாளெயிற்றரக்கர்காண
முழையினின்றெழுந்துசெல்லுமடங்கலின்முனிந்துசென்றான். (௬௫)

தோன்றியதோன்றறன்னைச்சுட்டினள்காட்டிச்சொன்னாள்
வான்றொடர்மூங்கிறந்தவயங்குவெந்தீயிதென்னத்
தான்றொடர்குலத்தையெல்லாந்தொலைக்குமாசமைந்துநின்றாள்
என்றுவந்தெதிர்த்தவீரனிவனிகலிராமனென்ன. (௬௬)

கண்டனன்கனகத்தேர்மேற்கதிரவன்கலங்கிநீங்க
விண்டனினின்றவென்றிக்கரனெனும்விலங்கற்றோளான்
மண்டமர்யானேசெய்திம்மானிடன்வலியைநீக்கிக்
கொண்டனன்வாகையென்றுபடைஞரைக்குறித்துச்சொன்னான். (௬௭)

மானிடனொருவன்வந்தவலிகெழுசேனைக்கம்மா
கானிடமில்லையென்னுங்கட்டுரைகலந்தகாலை
யானுடைவென்றியென்னும்யாவருங்கண்டுநிற்றிர்
ஊனுடையிவனையானேயுண்குவெனுயிரையென்றான். (௬௮)

அவ்வுரைகேட்டுவந்தா *னகம்பனென்றமைந்தகல்விச்
செவ்வியானொருவனையசெப்புவென்செருவிற்சால
வெவ்வியராதனன்றேவீரரிலாண்மைவீர
இவ்வயினுளவாந்தீயநிமித்தமென்றியம்பலுற்றான். (௬௯)

வேறு.

குருதிமாமழைசொரிந்தனமேகங்கள்குமுறிப்
பருதிவானவனூர்வளைப்புண்டதுபாராய்
கருதுவீரநின்கொடிமிசைக்காக்கையின்கணங்கள்
பொருதுவீழ்வனபுலம்புவநிலம்படப்புள்வ. (௭0)

வாளின்வாய்களையீவளைக்கின்றனவயவர்
தோளுநாட்டமுமிடந்துடிக்கின்றனதூங்கி
நீளிமொய்ம்பரிநிவுளிவீழ்கின்றனவிரவி
ஞாளியோடுநின்றழைக்கின்றநரிக்குலம்பலவால். (௭௧)

---

* அகம்பன்-(போரிற்) சலனமில்லாதவன்.

பிடியெலாமதம்பெய்திடப்பெருங்கவுள்வேழம்
ஒடியுமான்மருப்புலகமுங்கம்பிக்குமுயர்வான்
இடியும்வீழ்ந்திடுமெரிந்திடும்பெருந்திசையெவர்க்கும்
முடியின்மாலைகள்புலாலொடுமுழுமுடைநாறும். (எ௨)

இனையவாகலின்மானிடனொருவனென்றிவனை
நினையலாவதொன்றன்றதுந்தியாகின்ற
வினையெலாஞ்செய்துவெல்லலாந்தன்மையனல்லன்
புனையும்வாகையாய்பொறுத்தியென்றுரையெனப்புகன்றான். (எ௩)

உரைத்தவாசகங்கேட்டலுமுலகெலாமுலையச்
சிரித்துநின்றவென்சேவகந்தேவரைத்தேய
அரைத்தவம்பியாமலங்கெழிற்றோளமர்வேண்டி
இரைத்துவீங்குவமானிடற்கெளியவோவென்றான். (எ௪)

என்னுமாத்திரத்தெறிபடையிடியெனவிடியா
மன்னர்மன்னவன்மதலையைவளைந்தனவளைந்து
பின்னும்வாலுளைமடங்கலைமுனிந்தனவேழம்
துன்னினாலெனச்சுடுசினத்தரக்கர்தந்தொகுதி. (எ௫)

வளைந்தகாலையில்வளைந்தனவிராமன்கைவரிவில்
விளைந்தபோரையுமாவதும்விளம்புதும்விசையால்
புனைந்தபாய்பரிபுரண்டனபுகர்முகப்பூட்கை
உளைந்தமால்வரையுருமிடிபடவொடிந்தென்ன. (எ௬)

சூலமற்றனவற்றனசுடர்மழுத்தொகைவாள்
மூலமற்றனவற்றனமுரட்டண்டு * பிண்டி
பாலமற்றனவற்றனபகழிவெம்பகுவாய்
வேலுமற்றனவற்றனவில்லொடுபல்லம். (எ௭)

தொடிதுணிந்தனதோளொடுதோமரந்துணிந்த
அடிதுணிந்தனகடக்களிறச்சொடுநெடுந்தேர்
கொடிதுணிந்தனகுரகதந்துணிந்தனகுலமா
முடிதுணிந்தனமுளையொடுதுணிந்தனமுசலம். (எ௮)

கருவிமாவொடுகார்மதக்கைம்மலைக்கணத்தோ
டுருவிமாதிரத்தோடினசுடுசரமுதிரம்
அருவிமாரியிற்றேங்கினதவனியிலரக்கர்
திருவின்மார்பகந்திறந்தனதுறந்தனசிரங்கள். (எ௯)

ஒன்றுபத்துநூறாயிரகோடியென்றுணராத்
துன்றுபத்தியவிராகவன்சுடுசரந்துரப்பச்

* பிண்டிபாலம்-பீலித்தண்டு, எஃகம் என்பனவாம்.

சென்றுபத்திரத்தலையெனமலைதிரண்டெனக்
கொன்றுபத்தியிற்குவித்தனபிணப்பெருங்குன்றம். (அO)

காடுகொண்டகாருலவைகள்கதழ்வுறிகதுவச்
சூடுகொண்டனவெனத்தொடர்குருதிநீர்த்தோன்ற
ஆடுகின்றனவறுகுறையயிலம்புவிண்மேல்
ஓடுகின்றனவுயிரையுந்தொடர்வனவொத்த. (அக)

கைகள்வாளொடுகளம்படக்கழுத்தறக்கவசம்
மெய்கள்போழ்படத்தாள்விழவெருவிடநிருதர்
செய்யமாத்தலைசிந்தினதிசையுறச்செல்ல
வையவார்சுடுவிழியெனக்கொடியனசரங்கள். (அஉ)

மாரியாக்கியவடிக்கணைமழைமறைநிருதர்
பேரியாக்கையிற்பெருங்கரைவயின்வெறுப்பிறங்க
எரியாக்கினயாவையுமயர்ந்தினர்மையச
சோரியாக்கினபோக்கினவலம்பெறுந்தொன்மை. (அங)

அலைபிறந்தனகுருதியின்பெருங்கடலரக்கர்
தலைபிறந்தனசெங்கதிர்பிறந்தனதடக்கை
மலைபிறந்தனவாம்பரிபிறந்தனவயப்போர்ச்
சிலைபிறந்தனகொடியொடுபிறந்தனதேர்கள். (அச)

ஆயகாலையினனல்விழித்தார்த்திகலரக்கர்
தீயவார்கணைமுதலியதெறுசினப்படைகள்
மேயமால்வரையொன்றினைவளைத்தனமேகம்
தூயதாரைகள்சொரிவனவாமெனச்சொரிந்தார். (அரு)

சொரிந்தபல்படைதுணிபடத்துணிபடசரத்தால்
அரிந்துபோந்தனசிந்திடத்திசைதிசையகற்றி
நெரிந்துபார்மகண்முதுகிறவனமுற்றுநிறைய
விரிந்தசெம்மயிர்க்கருந்தலைமலையெனவீழ்த்தான். (அசு)

கவந்தபந்தங்கள்களித்தனகுதித்தனமலைகள்
சிவந்துபாய்ந்தவெங்குருதியிற்றிருகியசினத்தால்
நிவந்தவெந்தொழினிருதர்தநெடுநிணந்தெவிட்டி
உவந்தவன்கழுதுயிர்சுமந்துளுக்கியதும்பர். (அஎ)

மருடருநகளிவஞ்சனை * வளையெயிற்றரக்கர்
கருடனஞ்சுறுகண்மணிகாகமுங்கவர்ந்த
இருடரும்புரத்திழுதையர்பழுதுறற்கெளிதே
அருடருந்திறத்தறனன்றிவலியதுண்டாமோ. (அஅ)

---

* வளையெயிறு-வளைந்தபற்கள், வக்கிரதந்தங்கள்.

வேறு.

பல்லாயிரமிருள்கீறியபகலோனெனவொளிரும்
வில்லாளனைமுனியாவெயிலயிலாமெனவிழியாக்
கல்லார்மழைகணமாமுகில்கடைநாள்விடுவனபோல்
எல்லாமொருதொடையாவுடனெய்தார்வினைசெய்தார். (அகூ)

எறிந்தாரெனவெய்தாரெனநினைந்தாரெனவெறிய
அறிந்தாரெனவறியாவகையயில்வாளியினறுத்தான்
செறிந்தாரையும்பிறிந்தாரையுஞ்செறுத்தாரையுஞ்சினத்தால்
மறிந்தாரையும்வலித்தாரையுமடித்தான்சிலைபிடித்தான். (கூ0)

வானத்தனகடலின்புறவலயத்தனமகிருஞ்
ஞானத்தனவெளிர்குண்டலவுதுனத்தனவிடல்வெங்
கானத்தனமலையத்தனதிசைசுற்றியகரியின்
தானத்தனகாகுத்தனசரமுந்தியசிரமே. (கூக)

மண்மேலனமலைமேலனமழைமேலனமதிமேதாய்
விண்மேலனநெடுவேலையின்மேல்கீழனவிடமேலார்
புண்மேலனகுருதிப்பொழிதிரையாறுகள்பொங்கத்
திண்மேருவைநகுமார்பினையுருவித்திரிசரமே. (கூஉ)

பொலந்தாரினரனவின்சிகைபொதிகண்ணினரெவரும்
வலந்தாங்கியவடிவெம்படைவிடுவார்சரமழையால்
உலந்தாருடல்கடலோடுறவுலவாவுடனுற்றார்
அலந்தார் * நிசிசாராமெனவிமையோரொடுமார்த்தார். (கூ௩)

ஈரற்செறிகமலத்தனவிரதத்திரள்புளினம்
வீரக்கரிமுதலைக்குலமிதக்கின்றனவுதிக்கும்
பாரக்குடர்மிடைபாசடைபடர்கின்றனபலவான்
மூரித்திரையுதிரக்கடன்முழுகிக்கழுதெழுவே. (கூச)

அழைத்தார்சிலரயர்ந்தார்சிலரழிந்தார்சிலர்கழிந்தார்
உழைத்தார்சிலருயிர்த்தார்சிலருருண்டார்சிலர்புரண்டார்
குழைத்தாழ்திரைக்குருதிக்கடல்குளித்தார்சிலர்கொலைவாய்
மழைத்தாரைகள்படப்பாரிடைமடிந்தார்சிலருடைந்தார். (கூரு)

உடைந்தார்களைநகைசெய்தனருருடேரினருடனெய்
அடைந்தார்படைத்தலைவீரர்கள்பதினால்வருமயில்வாள்
மிடைந்தார்நெடுங்கடற்றானையர்மிடல்வில்லினர்விரிநீர்
கடைந்தார்வெருவுறமீதெழுகடுவாமெனக்கொடியார். (கூசு)

நாகத்தனியொருவில்லியைநளிர்முப்புரார்முன்னாள்
மாகத்திடைவளைவுற்றனரெனவள்ளலைமதியார்

---

* நிசிசரர்-இரவில் (மிக்கவலிமைகொண்டு) சஞ்சரிப்பவர்.

ஆகத்தெழுகனல்கண்வழியுகவுற்றெதிரழன்றார்
மேகத்தினைநிகர்வில்லியைவளைத்தார்செருவிளைத்தார். (௯௭)

எய்தார்பலரெறிந்தார்பலர்மழுவோச்சினரெழுவால்
பொய்தார்பலர்புடைத்தார்பலர்கிடைத்தார்பலர்பொருப்பாப்
பெய்தார்மழைபிதிர்த்தாரெரிபிறைவாளெயிற்றரக்கர்
வைதார்பலர்தெழித்தார்பலர்மலையாமெனவளைத்தார். (௯௮)

தேர்பூண்டனவிலங்கியானையுஞ்சிலைபூண்டெழுகொலையால்
பார்பூண்டனமதமாகரிபலிபூண்டனபரிமாத்
தார்பூண்டனவுடல்பூண்டிலதலைவெங்கதிர்தழிவந்
தார்பூண்டனபிரிந்தாலெனவிரிந்தாருயிருலந்தார். (௯௯)

* மால்பொத்தினமறவோருடன்மறைபொத்தினவழிசெம்
பால்பொத்தினர்செயிற்கிளர்படிபொத்தினபடர்வான்
மேல்பொத்தினகுழுவிண்ணவர்விழி † பொத்தினர்விரைவெங்
கால்பொத்தினர்மன்றாதுவர்கடிதுற்றுயிர்கவர்வார். (௧௦௦)

பேயேறினசெருவேட்டெழுபித்தேறினர்பிலவாய்
நாயேறினதலைமேனெடுநரியேறினவெரிகால்
வாயேறினவடிவாளியின் ‡ வானேறினர்வந்தார்
தீயேறிகலரியேறெனமுகிலேறெனச்செறிந்தார். (௧௦௧)

தலைசிந்தினவிழிசிந்தினதழல்சிந்தினதரைமேல்
மலைசிந்தினபடிசிந்தினவரிசிந்துரமழைபோல்
சிலைசிந்தினகணைசிந்தினதிசைசிந்தினதிசையோ
டுலைசிந்தினபொறிசிந்தினவுயிர்சிந்தினவுடலம். (௧௦௨)

வேறு.

படைப்பெருந்தலைவரும்படைத்ததேர்களும்
உடைத்தடம்படைகளுமொழியவுற்றெதிர்
விடைத்தடர்ந்தெதிர்ந்தவர்வீரன்வாளியால்
முடைத்தவெங்குருதியின்கடலின்மூழ்கினார். (௧௦௩)

சுற்றுறநோக்கினர்தொடர்ந்தசேனையில்
அற்றிலதலையெனுமாக்கைகண்டிலர்
தெற்றினரெயிறுகடிருகினார்சினம்
முற்றினரிராமனைமுடுகுதேரினார். (௧௦௪)

எழிருதேரும்வந்திமைப்பின்முன்பிடைச்
சூழ்வனகணைகளிற்றுணியநூறினான்

---

* மால்-தப்பிப்பிழைக்க வழிகாணாது கொண்ட மயக்கம்.
† பொத்துதல்-மூடுதல்.
‡ வானேறினர்-இறந்தனர்.

ஆழியும்புரவியுமாளுமற்றவை
ஊழிவெங்காலெறியோங்கலொத்தவே. (௧௦௫)

அழிந்தனதேரவரவனிகீண்டுகை
இழிந்தனர்வரிசிலையெடுத்தகையினர்
ஒழிந்திலர்சரங்களையுருமினேறெனப்
பொழிந்தனர்பொழிகனல்பொடிக்குங்கண்ணினர். (௧௦௬)

நூறியசரமெலாநுறுங்கவாளியால்
ஈறுசெய்தவர்சிலையேழொடேழையும்
ஆறினொடாறுமோரிரண்டுமம்பினால்
கூறுசெய்தமர்த்தொழிற்கொதிப்பைநீக்கினான். (௧௦௭)

வில்விழுந்தனவரும்வெகுளிமீக்கொளக்
கல்லுயர்நெடுவரைகடிதினேந்தினார்
ஒல்லையினுருத்துயர்விசும்பினோங்கினான்
றெல்லுயர்பொறியுகவெறிதன்மேயினார். (௧௦௮)

* கலைகளின்பெருங்கடல்கடந்தகல்வியான்
இலைகொள்வெம்பகழியேழிரண்டுவாங்கினான்
கொலைகொள்வெஞ்சிலையொடுபுருவங்கோட்டினான்
மலைகளுந்தலைகளும்விழுந்தமண்ணினே. (௧௦௯)

படைத்தலைத்தலைவர்கள்படலும்பல்படை
புடைத்தடர்ந்தெதிர்முல்புரையுங்கண்ணினார்
கிடைத்தனராக்கர்கள்கீழுமேலுமாய்
அடைத்தனர்திசைகளையமராஞ்சினார். (௧௧௦)

முழங்கினபெரும்பணைமூரிமால்கரி
முழங்கினவரிசிலைமுடுகுநாணொலி
முழங்கினசங்கொடுபுரவிமுற்றுற
முழங்கினவரக்கர்தமுகிலினார்ப்பரோ. (௧௧௧)

வேறு.

வெம்படைநிருதர்வீசவிண்ணிடைமிடைந்தவீரன்
அம்பிடையறுக்கசிந்தியற்றனபடுமென்றஞ்சி
உம்பருமிரியல்போனாருலகெலாமுலைந்துசாய்ந்த
கம்பமிறிசையினின்றகளிறுங்கண்ணிமைத்தவன்றே. (௧௧௨)

வேறு.

அத்தலைத்தானையனளவிலாற்றலன்
முத்தலைக்குரிசில்பொன்முடியன்முக்கணான்

---

* கலைகள்-தநுர்வேதமுதலிய நூல்கள்.

கைத்தலைச்சூலமேயனையகாட்சியான்
வைத்தலைப்பகழியான்மழைசெய்வில்லினான். (௧௧௩)

அன்னவனடுவுறவாழியூழியி
தென்னவந்தெங்கணுமிரைத்தசேனையுள்
தன்னிகர்வீரனுந்தமியன்வில்லினன்
துன்னிருளிடையதோர்விளக்கிற்றோன்றினான். (௧௧௪)

ஓங்கொளிவாளினனுருமினார்ப்பினன்
வீங்கியகவசத்தன்வெய்யகண்ணினன்
ஆங்கவனணிக்கெதிரணிகளாகநேர்
தாங்கினனிராமனுஞ்சரத்தின்றானையால். (௧௧௫)

தாளிடையற்றனதலையுமற்றன
தோளிடையற்றனதொடையுமற்றன
வாளிடையற்றனமழுவுமற்றன
சோ[illegible]டையற்றனகுடையுமற்றன. (௧௧௬)

கொடியொடுகொடுஞ்சினைப்புரவிக்கூட்டறப்
படியிடைபடிந்தனபருத்ததேர்பனை
நெடியவன்கடகரிபுரண்டநெற்றியின்
இடியொடுமுறிந்துவீழ்சிகரமென்னவே. (௧௧௭)

அற்றனசிரமெனவறிதரேற்றலர்
கொற்றவெஞ்சிலைச்சரங்கோத்துவாங்குவார்
இற்றவரிருதவரெழுந்துவிண்ணினைப்
பற்றினமழையெனப்படைவழங்குவார். (௧௧௮)

கேடகத்தடக்கையர்கிரியின்றோற்றத்தர்
ஆடகக்கவசத்தர்கவந்தமாடுவ
பாடகத்தரம்பையர்மருளப்பல்வித
நாடகத்தொழிலினைநடிப்பவொத்தவே. (௧௧௯)

கவரிவெண்குடையெனுநுரையகைம்மலைச்
சுவறருசுறவமாழ்சுழியதண்டுறைப்
பவரினப்படுமணிக்குவிக்கும்பண்ணைய
உவரியைப்புதுக்கினவுதிரயாறரோ. (௧௨௦)

* சண்டவெங்கடுங்கணைதடியத்தாஞ்சில
திண்டிறல்வளையெயிற்றரக்கர்தேவராய்

* சண்டவெங் கடுங்கணை-மேகம்பொருந்திய கொடியபாணங்கள் நமன்போன்ற கொடியகணைகளுமாம்.

வண்டுழல்புரிகுழன் மடந்தைமாரொடும்
கண்டனர் தம்முடைக்கவந்தநாடகம். (௧௨௧)

ஆய்வளைமகளிரோடமரரீட்டத்தர்
தூயவெங்கடுங்கணை துணித்ததுங்கடோள்
பேயொருதலைகொளப்பிணங்கிவாய்களின்
நாயொருதலைகொளநகையுற்றார்சிலர். (௧௨௨)

தெரிகணைமூழ்கலிற்றிறந்தமார்பினர்
இருவினைகடந்துபோயும்பரெய்தினார்
நிருதர்தம்பெரும்படைநெடிதுநின்றவன்
ஒருவனென்றுள்ளத்தினுலைவுற்றாரோ. (௧௨௩)

கைக்கரியன்னவன்பகழிகண்டகர்
மெய்க்குலம்வேரொடுந்துணித்துவீழ்த்தின
மைக்கருமனத்தொருவஞ்சன்மாண்பிலன்
பொய்க்கரிகூறியகொடுஞ்சொல்போன்றவே. (௧௨௪)

அஞ்சிறை * யறுபதமடைந்ததக்கைத்
தஞ்செனத்தன்மயமாக்குந்தன்மைபோல்
வஞ்சகத்தரக்கரைவளைத்துவள்ளறன்
செஞ்சரத்தூய்மையாற்றேவராக்கினான். (௧௨௫)

வலங்கொள்போர்மானிடன்வலிந்துகொன்றமை
அலங்கல்வேலிராவணற்கறிவிப்பாமெனச்
சலங்கொள்போரரக்கர்தமுருக்கடாங்கின
இலங்கையினுற்றவக்குருதியாறரோ. (௧௨௬)

சூழ்ந்ததார்நெடும்படைபகழிசுற்றுறப்
போழ்ந்துயிர்குடித்தலிற்புரளப்பொங்கினான்
தாழ்ந்திலன்முத்தலைத்தலைவன்சோரியின்
ஆழ்ந்ததேரம்பரத்தோட்டியார்க்கின்றான். (௧௨௭)

ஊன்றியதேரினனுருமின்வெங்கணை
வான்றொடர்மழையெனவாய்மையாவர்க்கும்
சான்றெனநின்றவத்தருமமன்னவன்
தோன்றறன்றிருவுருமறையத்தூவினான். (௧௨௮)

தூவியசரமெலாந்துணியவெங்கணை
ஏவினனிராமனுமேவியேழிரு
பூவியல்வாளியாற்பொலங்கொடேரழித்
தாவிவெம்பாகனையழித்துமாற்றினான். (௧௨௯)

---

* அறுபதம்-சினையாகுபெயராய் அறுகாற்பறவையையுணர்த்திற்று.

அன்றியுமக்கணத்தமரரார்த்தெழப்
பொன்றெரிவடிம்புடைப்பொருவில்வாளியால்
வன்றெறுழிறீயவன்மகுடமாத்தலை
ஒன்றொழித்திரண்டையுமுருட்டினனரோ. (௧௫0)

நேரழிந்தவ்வழித்திரிசிராவெனும்
பேரழிந்ததனினுமறம்பிழைத்திலன்
வாரழிந்துமிழ்சிலைவாணனாட்டெழிக்
காரிழிந்தாலெனக்கணைகள்சிந்தினான். (௧௫௧)

ஏற்றியநுதலினனிருண்டகார்மழை
தோற்றியவில்லொடுந்தொடர்மீமிசைக்
காற்றிடையழிந்தெனக்கார்முகத்தையும்
மாற்றரும்பகழியாலறுத்துமாற்றினான். (௧௫௨)

வேறு.

வில்லிழந்தனனெனினும்விழித்தவாண்முகத்தின்
எல்லிழந்திலனிழந்திலன்வெங்கதமிடிக்கும்
சொல்லிழந்திலன்றோள்வலியிழந்திலன்சொரியும்
கல்லிழந்திலனிழந்திலன்கறங்கெனத்திரிதல். (௧௫௩)

ஆளிரண்டுநூறனைவெனவந்தரத்தொருவன்
மூளிரும்பெருமாயவெஞ்செருமுயல்வானைத்
தாளிரண்டையுமிரண்டுவெங்கணைகளாற்றடிந்து
தோளிரண்டையுமிரண்டுவெங்கணைகளாற்றுணித்தான். (௧௫௪)

அற்றதாளொடுதோளினனயிலெயிறிலங்கப்
பொற்றைமாமுழைப்புலாலுடைவாயினன்புகுந்து
பற்றவாதரிப்பான்றனைநோக்கினன்பரியான்
கொற்றவார்சிலைச்சரங்கொடுதலையையுங்குறைத்தான். (௧௫௫)

திரிசிராவெனுஞ்சிகரமண்சேர்தலுஞ்செறிந்த
நிருதரோடினர்தாடணன்விலக்கவுநில்லார்
பரிதிவானினர்கேடகத்தடக்கையர்பரந்த
குருதிநீரிடைவார் * கழல்கொழுங்குடர்தொடக்க. (௧௫௬)

கணத்தின்மேனின்றவானவர்கைபுடைத்தார்த்தார்
பணத்தின்மேனிலங்குழியுறக்கால்கொடுபதைத்தார்
நிணத்தின்மேல்விழுந்தழுந்தினர்சிலர்சிலர்நிவந்த
பிணத்தின்மேல்விழுந்துருண்டனருயிர்கொடுபிழைப்பார். (௧௫௭)

* கழல்-வீரர்காலில் அணிகின்ற அணி.

வேய்ந்தவாளொடுவேலிடையிடைந்தனவெட்ட
ஓய்ந்துளார்சிலருலர்ந்தனருதிரநீர்யாற்றில்
பாய்ந்துகால்பறித்தழுந்தினர்சிலர்சிலர்பயத்தால்
நீந்தினார்நெடுங்குருதியங்கடல்புக்குநிலையார். (௧௩௮)

கச்சும்வாளுந்தங்காலொடுடர்ந் * தீர்வனகாணார்
அச்சமென்பதொன்றுருவுகொண்டாலெனவழிவார்
உச்சவீரன்கைச்சுடுசரங்குதர்நெஞ்சுருவத்
தச்சுநின்றனகண்டனரவ்வழித்தவிர்ந்தார். (௧௩௯)

மண்டியோடினர்சிலர்நெடுங்கடகரிவயிற்றில்
புண்டிறந்தமாமுழையிடைவாளொடும்புகுவார்
தொண்டைநீங்கியகவந்தத்தைத்துணைவநீயெம்மைக்
கண்டிலேனெனப்புகலெனக்கைதலைக்கொள்வார். (௧௪௦)

அனையராகியவரக்கரையாண்டொழிக்கமைந்த
வினையநீங்கியமனித்தரைவெருவன்பினன்ன
நினையுநானுமக்குரைப்பதுமுண்டெனநின்றே
துணையும்வாம்பரித்தேரினன்றூடணன்சொன்னான். (௧௪௧)

வச்சையாமெனும்பயமனத்துண்டெனவாழும்
கொச்சைமாந்தரைக்கோல்வளைமகளிருங்கூசார்
நிச்சயம்மெனுங்கவசந்தானிலைநிற்பதன்றி
அச்சமென்னுமீதாருயிர்க்கருந்துணையாமோ. (௧௪௨)

† பூவராவுவேற்புரந்தரனொடுதான்பொன்று
மூவரோடுதான்முன்னின்றுமுட்டியமுனையில்
ஏவரோடினர்ராக்கதர்நுமக்கிடைந்தோடும்
தேவரோடுகெற்றறிந்துமிராமெனத்திகைத்தீர். (௧௪௩)

இங்கொர்மானிடற்கித்தனைவீரர்களிடைந்தீர்
உங்கைவாளொடுபோய்விழுந்தார்புகலுற்றீர்
கொங்கைமார்பிடைக்குளிப்புறக்களிப்புற்றுங்கொழுங்கண்
நங்கைமார்களைப்புல்லுதிரோநலநுகர்வீர். (௧௪௪)

செம்புகாட்டியகண்ணிணைபாலெனத்தெளிந்தீர்
வெம்புகாட்டிடைநுழைதொறும்வெரிநுறப்பாய்ந்த
கொம்புகாட்டுதிரோதடமார்பிடைக்குளித்த
அம்புகாட்டுதிரோகுலமங்கையர்க்கம்மா. (௧௪௫)

---

* ஈர்தல்-இழுத்தலும் பிளத்தலுமாம்.

† பூவராவுவேல்-இலைபோலும் அராவுவேல், பொலிவுற்ற அராவிய வச்சிராயுதமுமாம்.

எக்கமிங்கிதன்மேலுமுண்டேயிகன்மனிதன்
ஆக்கும்வெஞ்சமத்தாண்மையவ்வமரர்க்குமரிதாத்
தாக்கரும்புயத்துங்குலத்தலைமகன்றங்கை
மூக்கொடன்றியும்முதுகொடும்போம்பழிமுயன்றீர். (கசசு)

ஆரவாழ்க்கையின்வணிகராயமைதிரோவயில்வேல்
* வீரவாட்கொடுவேன்மடுத்துழுதிரோவெறிபோர்த்
தீரவாழ்க்கையிற்றெவ்வரைச்செருவிடைப்பறித்த
வீரவாட்கையிரெங்ஙனம்வாழ்திரோவிளம்பீர். (கசஎ)

என்றுதானுந்தன்னெறிகடற்சேனையுமறைநீர்
நின்றுகாண்டிரென்னெடுஞ்சிலைவலியெனநேராச்
சென்றுதாக்கினன்றேவருமருள்கொண்டுதிகைத்தார்
நன்றுகாத்தியென்றிராமனுமெதிர்செலநடந்தான். (கசஅ)

ஊடறுப்புண்டமொய்படைக்கையொடுமுயர்ந்த
கோடறுப்புண்டகுஞ்சரங்கொடிஞ்சொடுகொடியின்
காடறுப்புண்டகாலியறேர்கதிர்ச்சாலி
சூடறுப்புண்டவெனக்கழுத்தறுப்புண்டதுரகம். (கசகூ)

துருவியோடினவுயிர்நிலைசுடுசரந்துரந்து
கருவியோடினகச்சையுங்கவசமுங்கழல
அருவியோடினவெனவழிகுருதியாறெழுந்
உருவியோடினகேடகத்தட்டொடுமுடலம். (கருo)

ஆய்ந்தகங்கபத்திரங்கள்புக்கரக்கரதாவி
தோய்ந்ததோய்விலாப்பிறைமுகச்சரஞ்சிரந்துமித்த
காய்ந்தவெஞ்சரகிருதர்தங்கவசமார்புருவப்
பாய்ந்தவஞ்சகரிதயமும்பிளந்தனபல்லம். (கருக)

ஆடணன்விடுசுடுசரம்யானையுந்துணிய
மாடுநின்றவர்வழங்கியபடைகளுமாற
ஆடல்கொண்டனனளப்பரும்பெருவலியரக்கர்
கூடிநின்றவக்குறைகடல்வறள்படக்குறைத்தான். (கருஉ)

ஆர்த்தெழுந்தனர்வானவரருவரைமரத்தோ
டார்த்தெழுந்தனகுருதியின்பெருநதியிராமன்
தூர்த்தசெஞ்சரந்திசைதொறுந்திசைதொறுந்தொடர்ந்து
போர்த்தவெஞ்சினத்தரக்கரைப்புரட்டினபுவியில். (கருங)

தோன்றுமால்வரைத்தொகையெனத்துவன்றியசிணச்சே
ரூன்றபாழ்வயிற்றலகையைப்புகல்வதெனமர்வேட்

* வீரவாட்கொடுவெழுமடுத்துழுதிரோ எனப் பிரதியந்தரம்.

னேன்றினரெலாமுலைந்தனரொல்லையிலொழிந்தார்
கான்றவின்னுயிர்காலலுங்கவர்ந்துமெய்ம்மறந்தான். (௧௫௪)

களிறுதேர்பரிகடுத்தவர்முடித்தலைகவந்தம்
ஒளிறுபல்படைத்தங்குலத்தரக்கர்த * முடலம்
வெளிறுசேர்பிணம்பிறங்கியவடுக்கலின்மீதாக்
குளிறுதேர்கடிதோட்டினன்றூடணன்கொதித்தான். (௧௫௫)

அறங்கொளாதவராக்கைகளடுக்கியவடுக்கல்
பிறங்கிநீண்டனகணிப்பிலபெருங்கடுவிசையால்
கறங்குபோன்றுளதாயினும்பிணப்பெருங்கட்டத்
திறங்குமேறுமத்தேர்பட்டதியாதெனவுரைப்பாம். (௧௫௬)

அரிதினெய்தினனையந்துகொய்யுளைப்பரிமா
உருளுமாழியதொருதனித்தேரினனுலகத்
திருளைநீக்கியவிந்துவிற்பொலிகின்றவிராமன்
தெருளும்வார்கணைக்கூற்றெதிராவிசென்றென்ன. (௧௫௭)

சென்றதேதையுஞ்சிலையுடைமலையெனத்தேர்மேல்
நின்றதூடணன்றன்னையுநோக்கிய † நிமலன்
நன்றுநன்றுநின்னிலையெனவருளிறைநயந்தான்
என்றகாலத்தவ்வெய்யவன்பகழிமூன்றெய்தான். (௧௫௮)

ஆரவட்டவெண்டிசைகளைத்தனித்தனிசுமக்கும்
பாரவெட்டிரேடிரண்டினிரென்றுபார்புக்கப்
போரவிட்டவனுதலணியோடையிற்பிறழும்
வீரபட்டிகைபட்டனவிண்ணவர்வெருவ. (௧௫௯)

எய்தகாலமும்வலியுநல்லெனநினைந்திராமன்
செய்த ‡ சேயொளிமுறுவலன்கடுங்கணைதெரிந்தான்
நொய்தினங்கவனெறிற்பரித்தேர்படநூறிக்
கையின்வெஞ்சிலையறுத்தொளிர்கவசமுங்கடிந்தான். (௧௬0)

தேவரார்த்தெழமுனிவர்கடிசைதொறுஞ்சிலம்பும்
ஓவில்வாழ்த்தொலிநாற்கடன்முழக்கெனவோங்கக்
காவடாவிதுவல்லையேனீயெனக்கணையொன்
றேவினனவனெயிறுடைநெடுந்தலையிழந்தான். (௧௬௧)

வேறு.

தம்பிதலையற்றபடியுந்தயரதன்சேய்
அம்புபடையைத்துணிபடுத்ததுமறிந்தான்

---

* உடலம்-உறுப்புகளறுபடாமல் வீழ்ந்திறந்த சரீரம்.

† நிமலன்-மலரகிதன்.

‡ சேயொளி-செம்மையொளி.

வெம்புபடைவிற்கைவிசயக்கரன்வெகுண்டான்
கொம்புதலைகட்டியகுலக்கரிகடுப்பான். (கசுஉ)

அந்தகனுமுட்கிடவரக்கர்கடலோடும்
சிந்துரம்வயப்புரவிதேர்திசைபரப்பி
இந்துவைவளைக்குமெழிலிக்குலமெனத்தான்
வந்துவரிவிற்கைமதயானையைவளைத்தான். (கசுங)

அடங்கலில்கொடுந்தொழிலரக்கரவ் * வனந்தன்
படங்கிழிதரப்படிதனிற்பலவிதப்போர்
கடங்கலுழ்தடங்களிறுதேர்பரிகடாவித்
தொடங்கினர்நெடுந்தகையும்வெங்கணைதுரந்தான். (கசுச)

துடித்தனகடக்கரிதுடித்தனபரித்தேர்
துடித்தனமுடித்தலைதுடித்தனதொடித்தோள்
துடித்தனமணிக்குடர்துடித்தனதசைத்தோல்
துடித்தனகழற்றுணைதுடித்தனவிடத்தோள். (கசுரு)

வாளின்வனம்வேலின்வனம்வார்சிலைவனந்திண்
தோளின்வனமென்றிவைதுவன்றிநிருதப்போர்
ஆளின்வனநின்றதனையம்பின்வனமென்னும்
கோளின்வனவன்குழுவினிற்குறைபடுத்தான். (கசுசு)

தானுருவுகொண்டதருமத்தெரிசரந்தான்
மீனுருவுமேருவைவிலங்குருவுமேலாம்
வானுருவுமண்ணுருவும்வாளுருவிவந்தார்
ஊனுருவுமென்னுமிதுணர்த்துவுமுரித்தோ. (கசுஎ)

அன்றிடைவளைந்தவர்குலங்களொடடங்கச்
சென்றுலைவுறும்படிதெரிந்துகணைசிந்த
மன்றிடைநலிந்துவலியோர்களெளியோரைக்
கொன்றனர்நுகர்ந்தபொருளிற்கடிதுகொன்ற. (கசுஅ)

கடுங்கரனெனப்பெயர்படைத்தகழல்வீரன்
அடங்கலுமரக்கரழிவுற்றிடவழன்றான்
ஒடுங்கலினிணக்குருதியோதமதினுள்ளான்
நெடுங்கடலின்மந்தரமெனத்தமியனின்றான். (கசுகூ)

செங்கணெரிசிந்தவரிவிற்பகழிசிந்தப்
பொங்குகுருதிப்புணரியுட்புகையுநெஞ்சன்
கங்கமொடுகாகமிடையக்கடலினூடும்
வங்கமெனலாயதொருதேரின்மிசைவந்தான். (கஎ0)

* அநந்தன்-அந்தமில்லாதவன்.

செறுத்திறுதியிற்புவனிதீயவெழுதீயின்
மறத்தின்வயிரத்தொருவன்வந்தணுகுமுந்தைக்
கறுத்தமணிகண்டர்கடவுட்சிலைகரத்தால்
இறுத்தவனும்வெங்கணைதெரிந்தனனெதிர்ந்தான். (கஎக)

தீயுருவகால்விசையசெவ்வியனவெவ்வாய்
ஆயிரம்வடிக்கணையரக்கர்பதியெய்தான்
தீயுருவகால்விசையசெவ்வியனவெவ்வாய்
ஆயிரம்வடிக்கணையிராமனுமறுத்தான். (கஎஉ)

ஊழியெரியிற்கொடியபாய்பகழியொன்பான்
எழுலகினுக்குமொருநாயகனுமெய்தான்
சூழ்சுடர்வடிக்கணையவற்றெதிர்தொடுத்தே
ஆழிவரிவிற்கரனுமன்னவையறுத்தான். (கஎஙு)

* கள்ளவமர்மாயவினைகல்வியின்விளைத்தான்
வள்ளலுருவைப்பகழிமாரியின்மறைத்தான்
உள்ளமுலைவுற்றமரரோடினரொளித்தார்
வெள்ளெயிறிசழ்ப்பவளவீரனும்வெகுண்டான். (கஎச)

வேறு.

முடிப்பெனின்றொருமொய்கணையாலெனாத்
தொடுத்துநின்றுயர்தோளுறவாங்கினான்
பிடித்ததிண்சிலைபேரகல்வானிடை
இடிப்பினோசைபடக்கடிதிற்றதே. (கஎரு)

வெற்றிகூறியவானவர்வீரன்வில்
இற்றபோதுதுணுக்கமுற்றேங்கினார்
மற்றோர்வெஞ்சிலையின்மைமனக்கொளா
அற்றதாலெம்வலியெனவஞ்சினார். (கஎசா)

என்னுமாத்திரத்தேந்தியகார்முகம்
சின்னமென்றுந்தனிமையுஞ்சிந்தியான்
மன்னர்மன்னவன்செம்மன்மரபினால்
பின்னுறத்தன்பெருங்கரநீட்டினான். (கஎஎ)

கண்டுநின்றுகருத்துணர்ந்தானென
அண்டர்நாதன்றடக்கையினத்துணை
பண்டுபோர்மழுவாளியைப்பண்பினால்
கொண்டவில்லைவருணன்கொடுத்தனன். (கஎஅ)

---

* கள்ளவமர்-உருமறைந்து நின்று செய்யும்போர்.

கொடுத்தவில்லையக்கொண்டணிறத்தினான்
எடுத்துவாங்கிவலங்கொண்டிடக்கையில்
பிடித்தபோதுநெறிபிழைத்தோர்க்கெலாம்
துடித்தவாலிடக்கண்ணொடுதோளுமே. (௧௭௯)

ஏற்றிநாணிமையாமுனெடுத்தது
கூற்றினாருங்குணிக்கக்குனித்தெதிர்
ஆற்றினானவனாழியந்தேர்சரம்
நூற்றினானுண்பொடிபடநூறினான். (௧௮௦)

எந்திரத்தடந்தேரழிந்தாணிபூந்
தந்தரத்திடையார்த்தெழுந்தம்பெலாம்
சுந்தரத்தனிவில்லிதன்றோளெனும்
மந்தரத்தின்மழையின்வழங்கினான். (௧௮௧)

தாங்கினின்றதயரதராமனும்
ஆங்குதுணியிடைச்சுடுசெஞ்சரம்
வாங்குகின்றவலக்கையொர்வாளியால்
வீங்குதோளொடுபோர்வில்லைவீழ்த்தினான். (௧௮௨)

வலக்கைவீழ்தலுமற்றைக்கையால்வெற்றி
உலக்கைவானத்துருமெனவோச்சினான்
* இலக்குவற்குமுன்வந்தவிராமனும்
விலக்கினானொருவெங்கதிர்வாளியால். (௧௮௩)

விராவருங்கடுவெள்ளெயிறிற்றபின்
அராவழன்றதனையதனாற்றலால்
மராமரங்கையில்வாங்கிவந்தெய்தினான்
இராமனங்கோர்தனிக்கணையேவினான். (௧௮௪)

வரமரக்கன்படைத்தலின்மாயையின்
உரமுடைத்தன்மையாலுலகேழையும்
பரமுருக்கியபாவத்தினால்வலக்
கரமெனக்கரன்கண்டமுற்றானரோ. (௧௮௫)

ஆர்த்தெழுந்தனராடினர்பாடினர்
தூர்த்தமைந்தனர்வானவர்தூய்மலர்
† தீர்த்தனும்பொலிந்தான்கதிரோன்றிசை
போர்த்தமென்பனிபோக்கியதென்னவே. (௧௮௬)

---

* இலக்குவற்குமுன்வந்த-போர்க்கோலங்கொண்ட இளையபெருமாளைத் தடுத்து நிறுத்திவிட்டுவந்த என்றும் இலக்குவற்குமுன்னே பிறந்தோனென்னலுமியையும்.

† தீர்த்தன்-பரிசுத்தன், ஆலோசனைக்காரன், நியமிப்பவன், மேன்மையுடையவன்.

முனிவர்வந்துமுறைமுறைமொய்ப்புற
இனியசிந்தையிராமனுமேகினன்
அனிகவெஞ்சமத்தாருயிர்போகத்தான்
தனியிருந்தவுடலன்னதையல்பால். (௧௮௭)

விண்ணினீங்கியவெய்யவர்மேனியில்
புண்ணினீரும்பொடிகளும் * போயுக
அண்ணல்வீரனைத்தம்பியுமன்னமும்
கண்ணினீரினிற்பாதங்கழுவினார். (௧௮௮)

† மூத்தமொன்றின்முடிந்தவர்மொய்புண்ணீர்
நீத்தமோடிநெடுந்திசைநேருறக்
கோத்தவேலைக்குரலெனவானவர்
ஏத்தவீரனினிதிருந்தானரோ. (௧௮௯)

இங்குநின்றதுரைத்துமிராவணன்
தங்கைதன்கைவயிறுதகர்த்தனள்
கங்குலன்னகரனைத்தழீஇநெடும்
பொங்குவெங்குருதிப்புரண்டாளரோ. (௧௯௦)

ஆக்கினேன்மனத்தாசையவ்வாசையென்
மூக்கினேடுமுடியமுடிந்திலேன்
வாக்கினாலுங்கள்வாழ்வையுநாளையும்
போக்கினேன்கொடியேனென்றுபோயினள். (௧௯௧)

அலங்கல்வேற்கையரக்கரை ‡ யாசறக்
குலங்கள்வேரறுப்பான்குறித்தாளுயிர்
கலங்குகூறைவன்போர்நெடுங்காலென
இலங்கைமாநகர்நொய்திற்சென்றெய்தினள். (௧௯௨)

௯-வது, கரன்வதைப்படலம்-முற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம்-௫௫௯.

---

* போயுக-நீங்க. † மூத்தம்-முகூர்த்தம்.

‡ அரக்கரை பாவத்தைப்போக்கித் தேவராக்குந் தன்மையையுடைய ராமபாணத்துக்கு இரையாக்கக் குறித்தாளென்பார் 'ஆசற' என்றார்.

## * எ-வது, மாரீசன்வதைப்படலம்.



இரைக்குநெடும்பணையரக்கர்நந்ததனை மறந்தனள்போலிராமன்றுங்க
வரைப்புயத்திணிடைக்கிடந்தபேராசைமனங்கவற்றவாற்றளாகித்
திரைப்பரவைப்பேரகழித்திண்ணகரிற்கடிதோடிச்சீதைதன்மை [ளே
உரைப்பெனெனச் † சூர்ப்பணகைவரவிருந்தானிருந்தபரிசுரைத்துமன்

நிலையிலாவுலகினிடைநிற்பனவுநடப்பனவுநெறியினீந்த
மலரின்மேனான்முகற்கும்வகுப்பரிது தனிப்பதொருவரம்பிலாற்றல்
உலைவிலாவகையுழந்தருமமெனநினைந்தவெலாமுதவுந்தச்சன்
புலனெலாந்தெரிப்பதொருபுனைமணிமண்டபமதனிற்பொலியமன்றே.

பண்டலங்குதிசைக்களிற்றின்பணைமருப்பினிணையொடியப் படர்ந்தபொ
விண்டலங்களுறவீங்கியோங்குதயமால்வரையின்விளங்கமீதில் [ற்றோள்
குண்டலங்கள்குலவரையைவலம்வருவானிரவிகொழுங்கதிர்சூழ்கற்றை
மண்டலங்கள்பன்னிரண்டுநாலைந்தாய்ப்பொலிந்தவெனவயங்கமன்றே.

புலியினதளுடையானும்பொன்னாடைபுனைந்தானும்பூவினானும்
நலியும்வலத்தரல்லர்தேவரினிங்கியாவரினிநாட்டலாவார்
மெலியுமிடைத்தடிக்குழலைவயிளந்தோட்சேயரிக்கண்வென்றிமாதர்
வலியநெடும் ‡ புலவியினும்வணங்காதமகுடநிரைவயங்கமன்றே. (௪)

வாளுலா § முழுமணிகள்வயங்கொளியின்றொகைவழங்கவயிரக்குன்றத்
தோளெலாம்படிசுமந்தவிடவரவின்படநிரையிற்றோன்றவான்ற
நாளெலாம்புடைதயங்கநாமநீரிலங்கையிற்றன்வாரியிட்ட
கோளெலாங்கிடந்தநெடுஞ்சிறையன்னநிறையாரங்குலவமன்றே. (௫)

### வேறு.

ஆய்வரும்பெருவலியரக்கராதியோர்
நாயகர்நளிர்மணிமகுடநண்ணலால்
தேய்வுறத்தேய்வுறப்பெயர்ந்துசெஞ்சுடர்
ஆய்மணிப்பொலன்கழலடிநின்றார்ப்பவே. (௬)

---

* மாரீசன்-மிக்கமாயையில்வல்ல ஓரரக்கன்; சர்ச்சரனென்னும் யக்ஷனது புத்திரனை சுகேதுவின்மகளாகிய தாடகையின் குமாரன்.

† சூர்ப்பணகை-சூர்ப்பணகா என்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று. இப்பெயர்-சூர்ப்பம் நகம் எனப்பிரிந்து முறம்போன்ற (வடிவமுடைய) நகமுள்ளவளென்று மதுப்பொருள்படும். இது அவளுக்கு வடிவுபற்றி வைக்கப்பட்ட காரணக்குறியாகிய இயற்பெயர்.

‡ புலவியாவது-ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும்பொருட்டு ஒருவரோடொருவர் கோபித்தல். § முழுமணி-உத்தமவிலக்கணம் நிறைந்த இரத்தினம், ஒளிநிரம்பிய இரத்தினம்,

மூவகையுலகினுமுதல்வர்முந்தையோர்
ஓவலருதவியபரிசினோங்கல்போல்
தேவருமவுணருமுதலினோர்திசை
தூவியநறுமலர்க்குப்பைதுன்னவே. (௭)

இன்னபோதிவ்வழிநோக்குமென்பதை
உன்னலர்காதலஞ்சுமந்தவுச்சியர்
மின்னவிர்மணிமுடிவிஞ்சைவேந்தர்கள்
துன்னினர்முறைமுறைதுறையிற்சுற்றவே. (௮)

மங்கையர்திறத்தொருமாற்றங்கூறினும்
தங்களையாமெனத்தாழுஞ்சென்னியர்
அங்கையுமுள்ளமுங்குவிந்தவாக்கையர்
சிங்கவேறெனத்திறற்சித்தர்சேரவே. (௯)

அன்னவனமைச்சரைநோக்கியாண்டொரு
நன்மொழிபகரினுநடுங்குஞ்சிந்தையர்
என்னைகொல்பணியெனவிறைஞ்சுகின்றனர்
கின்னரர்பெரும்பயங்கிடந்தநெஞ்சினர். (௧௦)

பிரகரநெடுந்திசைப்பெருந்தண்டேந்திய
கரதலத்தண்ணலைக்கண்ணினோக்கிய
நரகினராமெனநடுங்குநாவினர்
உரகர்கடம்பணமுலைந்துசூழவே. (௧௧)

திசையுறுகரிகளைச்செற்றுத்தேவனும்
வசையுறக்கைலையைமறித்துவானெலாம்
அசையுறப்புரந்தரனடர்த்ததோள்களின்
இசையினைத் * தும்புருவிசையினேத்தவே. (௧௨)

சேணுயர்நெறிமுறைதிறம்பலின்றியே
பாணிகள்பணிசெயப்பழுதில்பண்ணிடை
வீணையினரம்பிடைவிளைத்ததேமறை
வாணியி † னாரதன்செவியின்வார்க்கவே. (௧௩)

வேறு.

மேகமென்றுருத்திகொண்டுவிண்ணவர்தருவும்விஞ்சை
நாகமுஞ்சுரந்ததீந்தேம்புனலொடுமளாவிநவ்வித்
தோகையர்துகிலிற்றோயுமென்பதோர்துணுக்கத்தோடும்
சீகரமகரவேலைக்காவலன்சிந்தமன்னோ. (௧௪)

---

* தும்புரு-நாரதன்போல இசைபாடுதலிற்சிறந்தவனும், கந்தருவர்களுக்குக் குருவுமான ஒருமுனிவன். இவனதுவீணை கலாவதி.

† நாரதன்-ஆத்துமஞானத்தை உபதேசிப்பவன்; மனிதர்களுக்குள்ள ஒற்றுமையைக் கெடுப்பவன். இவரதுவீணை மகதி. சரஸ்வதிவீணை கச்சபீ.

நறைமலர்த்தாதுந்தேனுநளிநெடுமகுடகோடி
முறைமுறையறையச்சிந்திமுரிந்துகுமணியுமுத்தும்
தறையிடையுகாதமுன்னர்தாங்கினன்றழுவிவாங்கித்
துறைதொறுந்தொடர்ந்துநின்று * சமீரணன்றுடைப்பமன்னோ. (கரு)

வேறு.

மின்னுடைவேத்திரக்கையர்மெய்புகத்
துன்னெடுங்கஞ்சுகத்துகிலர்சோர்விலர்
பொன்னொடுவெள்ளியும்புரந்தராதியர்க்
கின்னியன்முறைமுறையிருக்கையீயவே. (கசு)

சூலமேமுதலியதுறந்துசுற்றிய
சேலையாற்சிறியவாய்புதைத்துச்செங்கையின்
தோலுடைநெம்பணைதுவைக்குந்தோறெலாம்
காலன்வந்திசைக்குநாட்கடிகைகூறவே. (கஎ)

நயங்கிளர்நானநெய்யளாவிநந்தலில்
வியங்கருப்பூரமென்பஞ்சின்மீக்கொளீஇக்
கயங்களின்மலைமலர்க்காடுபூத்தென
வயங்கெரிக்கடவுளும்விளக்கமாட்டவே. (கஅ)

அதிசயமளிப்பதற்கருளறிந்துநற்
புதிதலர்கற்பகத்தருவும்பொய்யிலாக்
கதிர்நெடுமணிகளுங்கறவையான்களும்
நிதிகளுமுறைமுறைநின்றுநீட்டவே. (ககூ)

குண்டலமுதலியகுலங்கொள்பேரணி
மண்டியபேரொளிவயங்கவீசலால்
உண்டுகொலிரவினியுலகமேழினும்
எண்டிசைமருங்கினுமிருளின்றென்னவே. (உ0)

கங்கையேமுதலியதீர்த்தகன்னியர்
கொங்கைகள்சுமந்திடைகொடியினொல்கிடச்
செங்கையினரிசியுமலருஞ்சிந்தினர்
மங்கலமுறைமுறைகூறிவாழ்த்தவே. (உக)

ஒருவிற்றோன்றியவுயிர்பெய்யோவியம்
காரினிற்செருக்கியகலாபமஞ்ஞைபோல்
வார்விசிக்கருவியோர்வகுத்தபாணியின்
நாரியரருநடநடிப்பநோக்கியே. (உஉ)

இருந்தனனுலகங்களிரண்டுமொன்றுந்தன்
அருந்தவமுடைமையினளவிலாற்றலில்

* சமீரணன்-நன்றாகச்சஞ்சரிப்பவன் அதாவது வாயுதேவன்.

பொருந்தியவிராவணன்புருவக்கார்முகக்
கருந்தடங்கண்ணியர்கண்ணின்வெள்ளத்தே. (உரு)

சூர்ப்பணகை இராவணனரண்மனையின் வடக்குக்
கோபுரவாயிலில் வருதல்.

தங்கையுமவ்வழித்தலையிற்றுங்கிய
செங்கையள்சோரியின்றாரைசோந்திழி
கொங்கையண்மூக்கினள்குழையில்காதினள்
மங்குலிகுெலிபடத்திறந்தவாயினள். (உச)

* முடியிடைவாயிலின்முறையிட்டார்கலிக்
கடையுகக்கடலொலிகாட்டக்கார்துவாள்
குடதிசைச்செக்கரிற்சேர்ந்தகூந்தலாள்
வடதிசைவாயிலின்வந்துதோன்றினாள். (உரு)

இதுமுதல் பத்தொன்பது கவிகளில், அவளது நிலையைக்கண்டு
அரக்கர் துயருறுதலைக் கூறுகிறார்.

தோன்றலுந்தொன்னகரக்கர்தோகையர்
என்றெதிர்வயிறலைத்திரங்கியேங்கினார்
மூன்றுலகுடையவன்றங்கைமூக்கிலள்
தான்றனியவள்வரத்தரிக்கவல்லரோ. (உசு)

பொருக்கெனநோக்கினர்புகல்வதோர்கிலர்
அரக்கருமிமைத்தனர்சனியாமெனக்
கரத்தொடுகரங்களைப்புடைத்துக்கண்களை
நெருப்பெழவிழித்துவாய்மடித்துநிற்கின்றார். (உஎ)

இந்திரன்மேலதோவுலகாீன்றபோ
அந்தணன்மேலதோவாழியானதோ
சந்திரமௌலிபாற்றங்குமேகொலோ
அந்தரமென்றுநின்றழல்கின்றார்சிலர். (உஅ)

செப்புறற்குரியவர்தெய்வர்யாருளர்
முப்புறத்துலகமுமடங்கமூடிய
இப்புறத்தண்டத்தோர்க்கியைவதன்றிது
† அப்புறத்தண்டத்தோராமென்றார்சிலர். (உகூ)

என்னையேயிராவணன்றங்கையென்றபின்
அன்னையேயென்றடிவணங்கலன்றியே

* முடியிடைவாயிலின்-பல அரசர்களுடைய கிரீடங்கள் நெருங்கிய இராவணனது அரண்மனைவாயிலில், சிகரங்கள் நெருங்கிய கோபுர வாயிலின் என்றும் பொருள்படும்.

† அப்புறத்தண்டம்-பகிரண்டம், வெளியண்டம்.

உன்னவேயொண்ணுமோவொருவராலிவள்
தன்னையேயரிந்தனடானென்றார்சிலர். (௫0)

போரிலான்புரந்தரனேவல்பூண்டனன்
ஆருலாநேமியானுற்றறேற்றுப்போய்
நீரினனெருப்பினன்பொருப்பினனினி
ஆர்கொலாமீதெனவறைகின்றார்சிலர். (௫க)

சொற்பிறந்தார்க்கிதுதுணியவொண்ணுமே
இற்பிறந்தார்தமக்கியைவசெய்திலள்
* கற்பிறந்தாளெனக்கடன்கொலாமிவள்
† பொற்பிறந்தாக்கினன்புகன்றென்றார்சிலர். (௫உ)

தத்துறுசிந்தையர்தளருந்தேவரில்
பித்துறவல்லரேபிழைப்பில்சூழ்ச்சியார்
முத்திறத்துலகையுமுடிக்கவெண்ணுவார்
இத்திறம்புணர்த்தனரென்கின்றார்சிலர். (௫௩)

இனியொரு ‡ கற்பமுண்டென்னினன்றியே
வினைகழல்வயங்குவாள்வீரர்வல்லரோ
பனிவருங்கானிடைப்பழிப்பிறேன்புடை
முனிவரர்வெகுளியின்முடிபென்றார்சிலர். (௫௪)

கரையறுதிருநகர்க்கருங்கணங்கைமார்
நிரைவளைத்தளிர்க்கைகணெரித்துநோக்கினர்
பிரையுறுபாலெனநிலையிற்பின்றிய
உரையினரொருவர்முன்னொருவரோடினார். (௫௫)

முழவினில்வீணையின்முரலியாழினில்
தழுவியகுழலினிற்சங்கிற்றாரையில்
எழுகுரலின்றியேயென்றுமில்லதோர்
அழுகுரல்பிறந்ததவ்விலங்கைக்கன்றரோ. (௫௬)

கள்ளுடைவள்ளமுங்களித்ததும்பியும்
உள்ளமுமொருவழிகிடக்கவோடினார்
வெள்ளமுநாணுறவிரிந்தகண்ணினார்
தள்ளுறுமருங்கினர்தழீஇக்கொண்டேகினார். (௫௭)

நாந்தகவழுவைநாட்டுந்தண்டத்தர்
காந்தியமனத்தினர்புலவி § கைம்மிகச்

---

* கற்பு-பதிவிரதாதருமம்.

† பொற்பு-பொலிவு.

‡ கற்பம்-காலத்தின் ஒருபேரெல்லை; பிரமனது ஆயுட்காலம்.

§ கைம்மிக-மிகவும் அதிகப்பட, எல்லைமிக.

சேந்தகணதிகமுஞ்சிவந்துநீருக
வேந்தனுக்கிளையவடாளின்வீழ்ந்தனர். (௩௮)

பொற்றலைமரகதப்பூகநேர்வுறச்
சுற்றியமணிவடந்தூங்குமூசலின்
முற்றியவாடலின்முனிவுற்றேங்கினார்
சிற்றிடையலமரத்தெருவுசேர்கின்றார். (௩௯)

எழுவெனமலையெனவெழுந்ததோள்களைத்
தழுவியவளைத்தளிர்நெகிழ்த்தாமரை
முழுமுகத்திருகயன்முத்தினாலிகள்
பொழிதரச்சிலருளர்பொருமிவிம்முவார். (௪0)

வேறு.

நெய்ந்நிலையவேலரசனேருநரையில்லான்
இந்நிலையுணர்ந்தபொழுதெந்நிலையனென்றோ
மைந்நிலைநெடுங்கண்மழைவாணிலையதாகப்
பொய்ந்நிலைமருங்கினர்புலம்பினர்புரண்டார். (௪௧)

மனந்தலைவருங்கணவரின்சுவைமறந்தார்
கனந்தலைவருங்குழலொசிந்துகலைசோர
நனந்தலையகொங்கைகடதும்பிடநடந்தார்
அனந்தரிளமங்கையரழுங்கியயர்கின்றார். (௪௨)

அங்கையினரன்கயிலைகொண்டதிறலையன்
தங்கைநிலையிங்கிதுகொலென்றுதளர்கின்றார்
கொங்கையிணைசெங்கையின்மலைந்துகுலைகோதை
மங்கையர்கணங்கையெதிர்வந்துவிழுகின்றார். (௪௩)

இலங்கையில்விலங்குமிவையெய்தலிலவென்றும்
வலங்கையிலிலங்குமயின் * மன்னனுளனென்ன
நலங்கையிலகன்றதுகொனம்மினெனநைந்தார்
கலங்கவினிலங்கணிணைவாரிகலுழ்கின்றார். (௪௪)

சூர்ப்பணகை இராவணனடியில் விழுந்துபுரளுதல்.

என்றினையவன்றுயரிலங்கைநகரெய்த
நின்றவரிருந்தவரொடோடுநெறிதேடக்
குன்றினடிவந்துபடிகொண்டலெனமன்னன்
பொன்றிணிகருங்கழல்விழுந்தனள்புரண்டாள். (௪௫)

* மன்-பெருமை; அதனையுடையவன், மன்னன்.

இதுமுதல் ரு-கவிகள் அப்பொழுது உலகத்திலுண்டான குழப்பத்தைக் கூறும்.

மூடின திருட்படலமூவுலகுமுற்றச்
சேடனும்வெருக்கொடுசிரக்குவைநெளித்தான்
ஆடின * குலக்கிரியருக்கனுமயிர்த்தான்
ஓடின திசைக்கரிகளும்பருமொளித்தார். (சசு)

விரிந்தவலயங்கண்மிடைதோள்படரிதிட்
டெரிந்தநயனங்களெயிறின்புறமெரிப்ப
நெரிந்தபுருவங்களிடைநெற்றியினைமுற்றத்
திரிந்தபுவனங்கள்வினைதேவருமயிர்த்தார். (சஎ)

தென்றிசைநமன்றனெடுதேவர்குலமெல்லாம்
இன்றிறுதிவந்ததுநமக்கெனவிருந்து
நின்றுயிர்நடுங்கியுடல்விம்மிநிலைநில்லார்
ஒன்றுமுரையாடல்லருரும்பரினெடிம்பர். (சஅ)

இராவணன் சூர்ப்பணகையை இதுசெய்தவர் யார் என்றல்.

மடித்தபிலவாய்கடொறும்வந்துபுகைமூந்தத்
துடித்ததொடர்மீசைகள்சுறுக்கொளவுயிர்ப்பக்
கடித்தகதிர்வாளெயிறுமின்கஞலமேகத்
திடித்தவுருமொத்துரறியாவர்செயலென்றான். (சகூ)

சூர்ப்பணகை விடைகூறுதல்.

கானிடையடைந்துபுவிகாவல்புரிகின்றார்
மீனுடைநெடுங்கொடியிேனைனையர்மேல்கீழ்
ஊனுடையுடம்புடைமையோருவமையொவ்வா
மானிடர்தடிந்தனர்கள்வாளுருவியென்றாள். (ருo)

இராவணன் கோபித்து நடந்ததை விவரமாகக் கூறு என்றல்.

செய்தனர்கண்மானிடரெனத்திசையனைத்தும்
எய்தநகைவந்ததெரிசிந்தினகணெல்லாம்
நொய்தவர்வலித்தொழிலுவன்றமொழியொன்றோ
பொய்தவிர்பயத்தையொழிபுக்கபுகலென்றான். (ருக)

இதுமுதல் ஆறுகவிகள் ஒருதொடர்; சூர்ப்பணகை விவரமாகக்கூறும் விடை.

மன்மதனையொப்பர்மணிமேனிவடமேரு
தன்னெழிலழிப்பர்திரடோளின்வலிதன்னால்

---

* குலகிரிகள்-கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலம், கந்தமாதநம் என்பன.

என்னதனையிப்பொழுதிசைப்பதுலகேழின்
நன்மதனழிப்பரொரிமைப்பி * னனிவில்லான். (௫௨)

வந்தனைமுனித்தலைவர்பாலுடையர்வானத்
திந்துவின்முகத்தரெறிநீரிலெழுநாளக்
கந்தமலரைப்பொருவுகண்ணர்கமல்கையர்
அந்தமிறவத்தொழிலராரவரையொப்பார். (௫௩)

வற்கலையர்வார்கழலர்மார்பினணிநூலர்
விற்கலையர்வேதமுறைநாவர்நனிமெய்யர்
உற்கலையருன்னையொர்துகட்டனையுமுன்னார்
சொற்கலையெனத்தொலைவிலாணிகள்சுமந்தார். (௫௪)

† ஆறுபுலனஞ்சினமரக்கரையெனச்சென்
றேறுநெறியந்தணரியம்பவுலகெல்லாம்
வேறுமெனு நங்கள்குலம்வேரொடுமடங்கக்
கோறுமெனமுந்தையொருசூளுறவுகொண்டார். (௫௫)

மாரருளரேயிருவரோருலகின்வாழ்வார்
வீரருளரோயவரின்வில்லதனின்வல்லார்
ஆரொருவரன்னவரையொப்பவர்களையா
ஓரொருவரேயிறைவர்மூவரையுமொப்பார். (௫௬)

தாரவலயநேயுமுவன்றயரதப்பேர்ப்
பாரவருநலத்தொருவன் ‡ மைந்தர்பழியில்லார்
விரவருவனத்தவன்விளம்பவுறைகின்றார்
இராமனுமிலக்குவனுமென்பர்பெயரென்றாள். (௫௭)

இதுமுதல் நான்குகவிகள் இராவணன் தன்னை வெறுத்தல்.

மருந்தனையதங்கைமணிநாசிவடிவாளால்
அரிந்தவருமானிட § ரரிந்துமுயிர்வாழ்வார்
விருந்தனையவாளொடும்விழித்திறையும்வெள்கா
இருந்தனனிராவணனுமின்னுயிர்கொடின்னும். (௫௮)

கொற்றமதுமுற்றிவலியாலரசுகொண்டேன்
உற்றபயன்மற்றிதுவொல்காவுறையிறந்தேன்
முற்றவுலகத்துமுதல்வீரர்முடியெல்லாம்
அற்றபொழுதத்திதுபொருந்துமெனலாமே. (௫௯)

* நனி-விசேடித்த உரிச்சொல்.

† ஆறுபுலன் "மக்கள்தாமே யாறறிவுயிரே" என்ற தொல்காப்பியத்தால் மக்களெனப்படுவார் ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோரறிவு முடையராதலுணர்க.

‡ மைந்து-இளமை, வலிமை, அழகு; அதனையுடையவர், மைந்தர்.

§ அறிந்து முயிர்வாழ்வாரென்றும் பாடம்.

மூளுமுளதாயபழியென்வயின்முடித்தோர்
ஆளுமுளவாமவரதாருயிருமுண்டாம்
வாளுமுளதோதவிடமுண்டவன்வழங்கும்
நாளுமுளதோளுமுளநானுமுளனன்றே. (௬0)

இது இராவணன் தன்மனத்தை முன்னிலைப்படுத்திக் கூறுவது.

* புத்துறவுறப்பழிபுகுந்ததெனநாணித்
† தத்துறுவதென்னைமனனேதளரலம்மா
எத்துயருனக்குளதினிப்பழிசுமக்கப்
பத்துளதலைப்பகுதிதோள்கள்பலவன்றே. (௬௧)

இராவணன் கரன்முதலியோர் அவர்களைக்
கொன்றிலரோ! என்றல்.

என்றுரைசெயாநகைசெயாவெரிவிழிப்பான்
வன்றுணையிலாவிருவர்மானிடரைவாளால்
கொன்றிலர்களாநெடியகுன்றுடையகானில்
நின்றகரனேமுதலினோர்நிருதரென்றான். (௬௨)

வேறு.

அதற்குச் சூர்ப்பணகை விடை கூறத்தொடங்கல்.

அற்றவனுரைத்தலோடுமழுநிழியருவிக்கண்ணள்
எற்றியவயிற்றள்பாரினிடைவிழுந்தேங்குகின்றாள்
சுற்றமுந்தொலைந்ததையநொய்தெனச்சுமந்தகையள்
உற்றதுதெரியும்வண்ணமொருவகையுரைக்கலுற்றாள். (௬௩)

சூர்ப்பணகை செய்திகூறல்.

சொல்லென்றென்வாயிற்கேட்டார்தொடர்ந்தெழுசேனையோடும்
கல்லென்றவொலியிற்சென்றார்கரன்முதற்காளைவீரர்
எல்லொன்றுகமலச்செங்கணிராமனென்றிசைத்தவேந்தல்
வில்லொன்றிற்கடிகைமூன்றிலேறினர்விண்ணினென்றாள். (௬௪)

அதுகேட்டு இராவணன் சோகமும் கோபமும் ஒருங்குஅடைதல்.

தாருடைத்தானையோடுந்தம்பியர்தமியன்செய்த
போரிடைமடிந்தாரென்றவுரைசெவிபுகாதமுன்னம்
காரிடையுருமின்மாரிகனலொடுபிறக்குமாபோல்
நீரொடுநெருப்புக்கான்றநிறைநெடுங்கண்களெல்லாம். (௬௫)

---

* புதுமை + உறவு = புத்துறவு; பண்புப்பெயர் ஈறுபோய்த் தன்னொற்று இரட்டிற்று. இனி புத்துற-புதுமையாக, உற-மிகவும், பழி புகுந்தது என்றலுமொன்று.

† தத்துறுவது-அலைவது.

இராவணன் சூர்ப்பணகையை நீ அவருக்குச்செய்த்
குற்றம் என்? என்றல்.

ஆயிடையெழுந்தசீற்றத்தழுந்தியதுன்பமாழ்ந்
தீயிடையுகுக்குநெய்யிற்சீற்றத்திற்கூற்றஞ்செய்ய
நீயிடையிழைத்தகுற்றமென்னைகொனின்னையின்னே
வாயிடையிதழுமூக்கும்வலிந்தவர்கொய்யவென்றான். (௬௬)

அதற்கவள் கூறும் விடை.

என்வயினுற்றகுற்றம்யாவர்க்குமெழுதொணாத
தன்மையணிராமனோடுந்தாமரைதவிரப்போந்தாள்
மின்வயின்மருங்குல்கொண்டாள்வேய்வயின்மென்றோள்கொண்டாள்
பொன்வயின்மேனிகொண்டாள்பொருட்டினாற்புகுந்ததென்றாள். (௬௭)

இராவணன் அவள் யார்? என்ன, சூர்ப்பணகை
விரித்துக் கூறலுறல்.

ஆரவளென்னலோடுமரக்கியுமையவாழ்ந்து
தேரவடிரண்டகொங்கைசெம்பொன்செய்குலிகச்செப்புப்
பாரவள்பாதந்தீண்டப்பாக்கியம்படைத்ததம்மா
பேரவள்சீதையென்றுவடிவெலாம்பேசலுற்றாள். (௬௮)

இதுமுதல் ௧௧-கவிகள் சூர்ப்பணகை பலவாற்றால்
சீதையை வருணித்தல்.

காமரமுரலும்பாடல்கள்ளெனக்கனிந்தவின்சொற்
றேமலர்நிரந்தகூந்தற்றேவர்க்குமணங்காமென்னத்
தாமரையிருந்த * தையல்சேடியாந்தரமுமல்லள்
யாமுரைவழங்குமென்பதேழைமைப்பாலதன்றே. (௬௯)

மஞ்சொக்குமளகவோதிமழையொக்கும்வடித்தகூந்தல்
பஞ்சொக்குமடிகள்செய்யபவளத்தின்விரல்களைய
அஞ்சொற்களமுதிலள்ளிக்கொண்டவள்வதனமைதீர்
கஞ்சத்தினளவிற்றேனுங்கடலினும்பெரியகண்கள். (௭0)

ஈசனார்கண்ணின்வெந்தானென்னுமிதுமுதைச்சொல்லிவ்
வாசகநாறோதியாளைக்கண்டனன்வல்லவாற்றால்
பேசலாந்தகைமைத்தல்லாப்பெரும்பிணிபிணிப்பநீண்ட
ஆசையாலழிந்துதேய்ந்தானநங்கனவ்வுருவமம்மா. (௭௧)

தெவ்வுலகத்துங்காண்டிசிரத்தினிற்பணத்தினோர்கள்
அவ்வுலகத்துங்காண்டியலைகடலுலகிற்காண்டி
வெவ்வுலையுற்றவேலைவாளினைவென்றகண்ணாள்
இவ்வுலகத்தாளங்கம்யாவர்க்குமெழுதொணாதாள். (௭௨)

* தையல்-அழகு; அதனையுடையாளுக்குப் பண்பாகுபெயர்.

தோளையேசொல்லுகேனோசுடர்முகத்துலவுகின்ற
வாளையேசொல்லுகேனோவல்லவைவழுத்துகேனோ
மீளவுந்திகைப்பதல்லாற்றனித்தனிவிளம்பலாற்றேன்
நாளையேகாண்டியன்றோநானுனக்குரைப்பதென்னோ. (௭௩)

வில்லொக்குநுதலென்றாலும்வேலொக்கும்விழியென்றாலும்
பல்லொக்குமுத்தென்றாலும்பவளத்தையிதழென்றாலும்
சொல்லொக்கும்பொருளொவ்வாவாற்சொல்லலாமுவமையுண்டோ
நெல்லொக்கும்புல்லென்றாலுநேருரைத்தாகவற்றே. (௭௪)

இந்திரன்சசியைப்பெற்றானிருமூன்றுவதனத்தோன்றன்
தந்தையுமுமையைப்பெற்றானாமரைச்செங்கணானும்
செந்திருமகளைப்பெற்றான்சீதையைப்பெற்றாய்நீயும்
அந்தரம்பார்க்கினன்மையவர்க்கில்லையுனக்கேயையா. (௭௫)

பாகத்திலொருவன்வைத்தான்பங்கயத்திருந்தபொன்னை
ஆகத்திலொருவன்வைத்தானந்தணனாவில்வைத்தான்
மேகத்தின்னன்னமேனிமின்னனுண்ணிடையைநீயும்
மாகத்தோள்வீரபெற்றாலெங்ஙனம்வைத்துவாழ்தி. (௭௬)

பிள்ளைபோற்பேச்சினாளைப்பெற்றபின்பிழைக்கலாற்றாய்
கொள்ளைபோகின்றசெல்வமையனுக்கேகொடுத்தியைய
வள்ளலேயுனக்குநல்லேன்மற்றுநின்மனையில்வாழும்
கிள்ளைபோன்மொழியார்க்கெல்லாங்கேடுசூழ்கின்றனன்றே. (௭௭)

தேர்தந்தவல்குற்சீதைதேவர்தமுலகினிம்பர்
வார்தந்தகொங்கையார்தம்வயிறுதந்தாருமல்லள்
தார்தந்தகமலத்தாளைத்தருக்கினர்கடையச்சங்க
நீர்தந்ததனைவெல்வானிலந்தந்ததம்பிற்றன்றே. (௭௮)

மீன்கொண்டோடும்வேலைமேகலையுலகமேத்தத்
தேன்கொண்டோடுங்கூந்தற்சிற்றிடைச்சீதையென்னும்
மான்கொண்டோடுநீயுன்வாள்வலியுலகங்காண
யான்கொண்டோடும்வண்ணமிராமனைத்தருதியென்பால். (௭௯)

தருவதுவிதியேயென்றாற்றவம்பெரிதுடையரேனும்
வருவதுவருநாளன்றிவந்துகைகூடலற்றே
ஒருபதுமுகமுங்கண்ணுமுருவமுமார்புந்தோள்கள்
இருபதும்படைத்தசெல்வமெய்துவதினிநீயெந்தாய். (௮0)

சூர்ப்பணகை இவளை யெடுக்கையிலிது செய்யப்பட்டேன் என்றல்.

இன்னவடன்னையுன்பாலுய்ப்பலென்றெடுக்கலுற்ற
என்னையவ்விராமன்றம்பியிடைபுகுந்திலங்குவாளால்

முன்னைமூக்கரிந்துவிட்டான்முடிந்ததென்வாழ்வுமுன்னின்
சொன்னபினுயிரைநீப்பான்றுணிந்தனெனென்னச்சொன்னாள். (அக)

அதுகேட்டு இராவணன் மிக்க காமமடைதல்.

கோபமுமறனுமானக்கொதிப்புமென்றினையவெல்லாம்
பாபமின்றிடத்துநில்லாப்பெற்றிபோற்பற்றுவிட்ட
நீபமொன்றொன்றையுற்றுவென்னலாஞ்செயலிற்புக்க
தாபமுங்காமநோயுமாருயிர்கலந்தவன்றே. (அஉ)

இதுமுதல் அரு-கவிகள் இராவணனது காமவேதனையைக்கூறும்.

கரனையுமறந்தான்றங்கைமூக்கினைக்கடிந்துநின்றான்
உரனையுமறந்தானுற்றபழியையுமறந்தான்வெற்றி
அரனையுங்கொண்டகாமனம்பினான்முன்னைப்பெற்ற
வரனையுமறந்தான்கேட்டமங்கையைமறந்திலாதான். (அங)

சிற்றிடைச்சீதையென்னுநாமமுஞ்சிந்தைதானும்
உற்றிரண்டொன்றாய்நின்றவொன்றொழிந்தொன்றையுள்ள
மற்றொருமனமுமுண்டோமறக்கலாம்வழிமற்றியாதோ
கற்றனர் * ஞானமென்றேற்காமத்தைக்கடக்கலாமே. (அச)

மயிலுடைச்சாயலாளைவஞ்சியாமுன்னநீண்ட
எயிலுடையிலங்கைநாதனிதயமாஞ்சிறையில்வைத்தான்
அயிலுடையரக்கனுள்ளமவ்வழிமெல்லமெல்ல
வெயிலுடைநாளிலுற்றவெண்ணெய்போல்வெதும்பிற்றன்றே. (அரு)

விதியதுவலியினானுமேலுளவிளைவினானும்
பதியுறுகேடுவந்துகுறுகியபயத்தினானும்
கதியுறுபொறியின்வெய்யகாமநோய்கல்விநோக்கா
மதியிலிமறையச்செய்ததீமைபோல்வளர்ந்ததன்றே. (அசு)

பொன்மயமானநங்கைமனம்புகப்புன்மைபூண்ட
தன்மையோவரக்கன்றன்னையயர்த்ததோர்தகைமையாமோ
மன்மதன்வாளிதூவிநலிவதோர்வலத்தனானான்
வன்மையைமாற்றுமாற்றல்காமத்தேவதிந்ததன்றே. (அஎ)

இராவணன் சபையைவிட்டுத் தன்மனையினுள்ளே செல்லுதல்.

எழுந்தனனிருக்கைநின்றண்டேழுலகத்துள்ளோரும்
மொழிந்தனராசியோசைமுழங்கினசங்கமெங்கும்
பொழிந்தனபூவின்மாரிபோயினர்புறத்தோரெல்லாம்
அழிந்தழிசிந்தையோடுமாடகக்கோயில்புக்கான். (அஅ)

* ஞானமாவது-முத்திநிலையையும் மற்றைப் பிரபஞ்சநிலைகளையும் சந்தேக விபரீதங்களின்றி உள்ளபடியறிதல்.

### இனி இராவணனது காமநோய் முதிர்ச்சி.

பூவினல்வேய்ந்துசெய்தபொங்குபேரமளிகொங்கைத்
தேவிமார்குழுவுநீங்கச்சேர்ந்தனன்சேர்தலோடும்
நாவிநாறுதிரவ்விநயனமுங்குயமும்புக்குப்
பாவியாக்கொடுத்தவெம்மைபயப்பயப்பரந்ததன்றே. (அகூ)

வேறு.

நூக்கலாகலாதகாதனூறுநூறுகோடியாப்
பூக்கவாசவாடையீசுசீதநீர்பொதிந்தமென்
சேக்கையீகரிந்துதிக்கயங்களெட்டைவென்றதோள்
ஆக்கைதீயவுள்ளமையவாவிவேவதாயினன். (கூ0)

தாதுகொண்டசீதமேயசந்துசந்தமென்றளிர்ப்
போதுகொண்டடுத்தபோதுபொங்குதீமருந்தினல்
வேதுகொண்டதென்னமேனிவெந்துவெந்துவிம்முதீ
ஊதுவன்றுருத்திபோலுயிர்த்துயிர்த்துயங்கினன். (கூக)

தாவியாதுநீதெனுதுமையலாளைமெய்யுறப்
பாவியாதபோதிலாதபான்மைமாமைபானல்வேல்
காவியானகண்ணிமேனிகாணமூளுமாசையால்
ஆவிசாலநொந்துநொந்தழுங்குவானுமாயினன். (கூஉ)

பரங்கிடந்தமாதிரம்பரித்தபாழியானையின்
கரங்கிடந்தகொம்பொடிந்திரங்கவென்றகாவலன்
மரங்குடைந்ததும்பிபோலசெங்கண்வாளிவந்துவந்
துரங்குடைந்துநொந்துநொந்துளைந்துளைந்தொதுங்கினன். (கூந)

கொன்றைதுன்றுகோதையோடோர்கொம்புவந்தநெஞ்சிடை
நின்றதுண்டுகண்டதென்றழிந்தழுங்குநீர்மையான்
மன்றறங்கலங்கன்மாரன்வாளிபோலமல்லிகைத்
தென்றல்வந்தெதிர்ந்தபோதுசீறுவானுமாயினன். (கூச)

### இராவணன் மாளிகையை விட்டு ஒருசோலையை யடைதல்.

அன்னகாலையங்குநின்றெழுந்தழுங்குசிந்தையான்
இன்னவாறுசெய்வெனென்றொரெண்ணிலானிரங்குவான்
பன்னுகோடிதீபமாலைபாலையாழ்பழித்தசொற்
பொன்னனாரெடுக்கவங்கோர்சோலையூடுபோயினன். (கூரு)

வேறு.

### அந்தச்சோலையின் வருணனை.

மாணிக்கம்பனசம்வாழைமரகதம்வயிரந்தேமா
ஆணிப்பொன்வேங்கைகோங்கம்ரவிந்தராசம்பூகம்

சேணுய்க்குநீலஞ்சாலங்குருவிந்தந்தென்னம்வெள்ளி
பாணித்தென்பளிங்குநாகம்பாடலம்பவளமன்றே. (கூசு)

அங்கு ஒருமண்டபத்தில் ஒருபடுக்கையிற் சேர்தல்.

வானுறநிவந்தசெங்கேழ்மணிமரந்துவன்றிவான
மீனெனுமலர்கடம்மில்வேற்றுமைதெரிதறேற்றாத்
தேனுகுசோலைநாப்பட்செம்பொன்மண்டபத்துளாங்கோர்
பானிறவமளிசேர்ந்தான்பையுளுற்றுயங்கிநைவான். (கூஎ)

அங்குப் பறவைகள் இராவணனுக்கு அஞ்சி மௌனமாயிருத்தல்.

கனிகளின்மலரின்வந்தகள்ளுண்டுகளிகளன்ன
வனிதையர்மழலையின்சொற்கிள்ளையுங்குயிலும்வண்டும்
இனியனமிழற்றுகின்றயாவையுமிலங்கைவேந்தன்
முனியுமென்றவிந்தவாயமூங்கையர்போன்றவன்றே. (கூஅ)

வசந்தகாலம் வருதல்.

பருவத்தால்வாடைவந்தபசும்பனியாங்கபாணம்
உருவிப்புக்கொளித்தபுண்ணிற்குளித்தலுமுளைந்துவிம்மி
இருதுத்தான்யாதடாவென்றியம்பினனியம்பலோடும்
வெருவிப்போய்ச்சிசிரநீங்கிவேனில்வந்திறுத்ததன்றே. (கூகூ)

இராவணனது தாபம் தணிவுபெறாமை.

வன்பனிமரமுந்தீயமலைகளுங்குளிரவாழும்
மென்பனியெரிந்ததென்றால்வேனிலைவிளம்பலாமோ
அன்பெனும்விடமுண்டாரையாற்றலாமருந்துமுண்டோ
இன்பமுந்துன்பந்தானுமுள்ளத்தோடியைந்தவன்றே. (க௦௦)

அவன் சரத்காலத்தைக் கொணரக் கட்டளையிடுதல்.

மாதிரத்திறுதிகாறுந்தன்மனத்தெழுந்த * மையல்
வேதனைவெப்பஞ்செய்யவேனிலும்வெதுப்புங்காலை
யாதிதிங்கிதனின்முன்னைச்சிசிரனன்றிதனைநீக்கிக்
கூதிராம்பருவந்தன்னைக்கொணருதிர்விரைவினென்றான். (க௦க)

அதுவும் தபிக்கவே அவன் எல்லாப்பருவத்தையும் ஒழிக்கவென்றல்.

கூதிர்வந்தடைந்தகாலைகொதித்தனகுவவுத்திண்டோள்
சீதமுஞ்சுடுமோமுன்னைச்சிசிரமேகாணிதென்றான்
ஆதியாயஞ்சுமன்றேயருளலதியற்றவென்ன
யாதுமிங்கிருதுவாகாதியாவையுமகற்றுமென்றான். (க௦உ)

* மையல்வேதனை-மோகத்துன்பம்.

இருதுவொன்றுமில்லாத அச்சமயத்துநிலைமையின் வருணனை.

என்னலுமிருதுவெல்லாமேகினையாவுந்தத்தம்
பன்னரும்பருவஞ்செய்யாயோகிபோற்பற்றுநீத்த
பின்னருமுலகமெல்லாம்பிணிமுதற்பாசம்வீசித்
துன்னருந்தவத்தினெய்துந் * துறக்கம்போற்றோன்றிற்றன்றே. (௧௦௩)

தாபம் ஒழியாமை.

கூலத்தாருலகமெல்லாங்குளிர்ப்பொடுவெதுப்புநீங்க
நீலத்தாரரக்கன்மேனிநெய்யின்றியெரிந்ததன்றே
காலத்தால்வருவதொன்றோகாமத்தாற்கனலும்வெந்தீச்
சீலத்தாலவிவதன்றிச்செய்யத்தாறுவதுண்டோ. (௧௦௪)

தாபந்தணியாது அவன் சந்திரனைக்கொணர்க என்றல்.

நாரமுண்டெழுந்தமேகந்தாமரைவளையநாறு
சாரமுண்டிருந்ததுசந்தனந்தணிரென்றோதா
டாரமுண்டிருந்துஞ்சிந்தையயர்கின்றானையின்றை
ஈரமுண்டென்பரோடியிந்துவைக்கொணர்தியென்றான். (௧௦௫)

சந்திரன் வருதல்.

வெஞ்சினத்தரக்கனண்டவியனகர்மீதுபோதும்
நெஞ்சிலமுறைதுங்குகின்றானைமதியோனைநோக்கி
அஞ்சலைவருகின்றேனையழைத்தனனரசனென்னைச்
சஞ்சலந்துறந்துதானச்சந்திரனுதிக்கலுற்றான். (௧௦௬)

சந்திரோதயவருணனை: சந்திரன் இராவணனை வருத்துதல்.

அயிருறக்கலந்தவன்னீராழிநின்றுழிநீத்துச்
செயிருறக்கலந்தாண்டோர்தேய்வுவந்துற்றபோது
வயிரமுற்றுடைந்துசென்றோர்வலியவற்செல்லுமாபோல்
உயிர்தெறக் † காலனன்னான்பாலுறுத்தனனுதயஞ்செய்தான். (௧௦௭)

பாரவருங்கதிர்களெங்கும்பரப்பிப்படர்ந்துவானில்
தாரதலத்தெவரும்பேணவலனையேசலிக்குநீரால்
அராவணைதுயிலுமண்ணல்காலமோர்ந்தற்றநோக்கி
இராவணனுயிர்மேலுய்த்ததிகிரியுமென்னலானான். (௧௦௮)

அருகுறுபாலின்வேலையமுதெலாமளாந்துவாரிப்
பருகினன்பாந்துபாய்ந்துநிலாச்சுடர்ப்பனிமென்கற்றை
நெறியுறுபுருவச்செங்கணரக்கர்க்குநெருப்பிறைப்பண்
உருகியவெள்ளியள்ளிவீசினதொத்ததன்றே. (௧௦௯)

* துறக்கம்-முத்தியுலகம், சுவர்க்கம்.
† காலன்-காலத்தை அறுதியிடுபவன்.

மின்னிலங்கிரீந்ததன்னவிழுநிலாமிதிலைசூழ்ந்த
செந்நெலங்கழனிநாடன்றிருமகள்செவ்விகேளா
நன்னலந்தொலைந்துசோருமரக்கனைநாளுந்தோலாத்
* துன்னலனொருவன்பெற்றபுகழெனச்சுட்டதன்றே. (கக0)

சூரியனை என்கொணர்ந்தீர்? என்றல்.

கருங்கழற்காலனஞ்சுங்காவலன்கருத்துநோக்கித்
தருங்கதிர்ச்சிதயாக்கைச்சந்திரற்றருதிரென்ன
முருங்கியதணலின்மூரிவிடத்தினைமுகக்குஞ்சீற்றத்
தருங்கதிரருக்கன்றன்னையாரழைத்தீர்களென்றான். (ககக)

ஏவலாளர் சந்திரனே என்றல்.

அவ்வழிச்சிலதாஞ்சியாதியாயருளில்லாதை
இவ்வழித்தருதுமென்பதியம்பலாமியல்பிற்றன்றால்
செவ்வழிக்கதிரோனென்னுந்தேரின்மேலன்றிவானான்
வெவ்வழித்தெளிவுவர்ந்திங்கள்விமானத்தின்மேலதென்றார். (ககஉ)

வேறு.

இராவணன் சந்திரனென்றறிந்து அவனை வெறுக்கத் தொடங்கல்.

பணந்தாழல்குற்பணிமொழியார்க்கன்புபட்டார்படுங்காமக்
குணந்தான்முன்னமறியாதான்கொதியாநின்றான்மதியாலே
தணந்தாமரையின்றனிப்பகைஞனென்னுந்தன்மையொருதானே
உணர்ந்தானுணர்வுற்றவன்மேலிட்டுயிர்த்துய்க்கவுரைசெய்வான். ()

தேயாநின்றாய்மெய்வெளுத்தாயுள்ளங்கறுத்தாய்நிலைதிரிந்து
காயாநின்றாயொருநீயுங்கண்டார்சொல்லக்கேட்டாயோ
பாயாநின்றமலர்வாளிபறியாநின்றாரின்மையால்
ஓயாநின்றேனுயிர்காத்தற்குரியார்யாவருடுபதியே. (ககச)

ஆற்றாராகிற்றம்மைக்கொண்டடங்காரோவென்னுருயிர்க்குக்
கூற்றாய்நின்றகுலச்சனகிகுவளைமலர்த்தாமரைக்குத்
தோற்றாயதனைக்கங்கரித்தாய்மெலிந்தாய்வெதும்பத்தொடங்கினாய்
† மாற்றார்செல்வங்கண்டழிந்தால்வெற்றியாக ‡ வற்றாமோ. (ககரு)

இராவணன் சூரியனையும் பகலையும் வரவழைத்தல்.

என்னப்பன்னியிடருழவாவிரவோடியனைக்கொண்டகற்றி
முன்னைப்பகலும்பகலோனும்வருகவென்றான்மொழியாமுன்
உன்னற்கரியவுடுபதியுமிரவுமொழிந்தவொருநொடியில்
பன்னற்கரியபகலவனும்பகலும்வந்துபரந்தவால். (ககசா)

---

* துன்னலன்-சேராதவன். † மாற்றார்-மனம் மாறுபடுதலையுடையவர். ‡ வற்று-வல்லது; பண்படிக்குறிப்புமுற்று.

இதுமுதல் ௧௩-கவிகள் அவ்வுதயகாலவருணனை.

இருக்கின்மொழியாரெரிமுகத்தினீந்தநெய்யினவிர்செம்பொன்
உருக்கியனையகதிர்பாயவனல்போல்விரிந்ததுயர்கமலம்
அருக்கனெய்தவமைந்தடங்கிவாபூவாடாதபொருளெய்திச்
செருக்கியிடையேதிருவிழந்தசிறியோர்போன்றசேதாம்பல். (௧௧௭)

நாணிநின்றவொளிமழுங்கிநடுங்காநின்றவுடம்பினராய்ச்
சேணினின்றுபுறஞ்சாய்ந்துகங்குற்றாரம்பின்செல்லப்
பூணின்வெய்யோனொருதிசையேபுகுதப்போவான்புகழ்வேந்தர்
ஆணைசெல்லநிலையழிந்தவரசர்போன்றானல்லாண்டான். (௧௧௮)

வேறு.

மணந்தபேரன்பரைமலரின்சேக்கையுள்
புணர்ந்தவரிடையொருவெகுளிபொங்கலாற்
* கணங்குழைமகளிர்கள்கங்குனீங்கிட
உணர்ந்திலர்கனவினுமூடறீர்ந்திலர். (௧௧௯)

தள்ளுறுமுயிரினர்தலைவர்நீங்கலால்
நள்ளிரவிடையுறுநடுக்கநீங்கலர்
கொள்ளையினலர்தருகுவளைநாண்மலர்
கள்ளுகுவனவெனக்கலுழுங்கண்ணினார். (௧௨0)

அணைமலர்ச்சேக்கையுளாடறீர்ந்தனர்
பணைகளைத்தழுவியபவளவல்லிபோல்
இணைமலர்க்கைகளினிறுகவின் † னுயிர்த்
துணைவரைத்தழுவினர்துயில்கின்றார்சிலர். (௧௨௧)

அளியினங்கடந்தொறுமார்ப்பவாய்கதிர்
ஒளிபடவுணர்ந்திலவுறங்குகின்றன
தெளிவிலவின்றுயில்கிளையுஞ்சேக்கையுள்
களிகளைநிகர்த்தனகளிகல்யானையே. (௧௨௨)

விரிந்துறைதுறைதொறும்விளக்கம்யாவையும்
எரிந்திழுதகலவொளியிழந்தன
அருந்துறைநிரம்பியவுயிரினன்பரைப்
பிரிந்துறைதருங்குலப்பேதைமாரினே. (௧௨௩)

‡ புனைந்திதழுரிஞ்சுறுபொழுதுபுல்லியும்
வனைந்திலவைகறைமலருமாமலர்

* கணம்-கூட்டம்.

† உயிர்த்துணைவர்-உயிர்போன்ற துணைவரென உவமத்தொகை.

‡ புனைதல்-அழகுசெய்தல் "பொன்னியற்புனை தோட்டியால்" என்புழி இப்பொருட்டாதல் காண்க. (புறநானூறு ௧௪-வது பாட்டு.)

நனந்தலையமளியிற்றுயிலுநங்கைமார்
அனந்தரினெடுங்கணோடொத்தவாமரோ. (கஉச)

இச்சையிற்றுயில்வதற்கியாவர்கண்களும்
நிச்சயம்பகலுந்தமிமைகணீக்கல
பிச்சையுமிடுதுமென்றுணர்வுபேணலர்
வச்சையர்நெடுமனைவாயிலானவே. (கஉரு)

நஞ்சுறுபிரிவினைநாளினீளமோர்
தஞ்சுறவிடுவதோர்தயாவுதாங்கலால்
வெஞ்சிறைநீங்கியவினையினரென
நெஞ்சுறக்களித்தனநேமிப்புள்ளெலாம். (கஉசா)

நாண்மதிக்கல்லதுநடுவணெய்திய
ஆணையினீக்கலாவலரிற்பாய்வன
* மாண்வினைபயன்படாமாந்தர்வாயில்சேர்
பாணரிற்றளர்ந்தனபாடற்றும்பியே. (கஉஎ)

அருமணிச்சாளரமதனினூடுபுக்
கெரிகதிரின்றுயிலெழுப்பியேற்றவும்
மருவொடுமருளுறுநிலையர்மங்கையர்
தெருளுறமெய்ப்பொருடெரிந்திலாரினே. (கஉஅ)

ஏவலின்வன்மையையெண்ணமேற்றலர்
நாவலரியற்றியநாளினுமநூல்
காவலினினிதுணர்கணிதமாக்களும்
கூவுறுகோழியுந்துயில்வுகொண்டவே. (கஉகூ)

இராவணன் அப்பொழுது சூரியனைச் சந்திரனென்றல்.

இனையனயுலகினினிகழுமெல்லையில்
கனைகழலரக்கனுங்கண்ணினோக்கினன்
நினைவுறுமனத்தையுநெருப்பிற்றீக்குமால்
அனையவத்திங்களேயாகுமாலென்றான். (கஙo)

ஏவலர் சூரியனே என்று உணர்த்தல்.

திங்களோவன்றிதுசெல்வசெங்கதிர்
பொங்குளைப்பச்சையம்புரவித்தேரதால்
வெங்கதிர்சுடுவதேயன்றிமெய்யுறத்
தங்குதண்கதிர்சுடத்தகாதென்றார்சிலர். (கஙக)

* மாண்வினை-பாடலின் தன்மையை யுணர்ந்து கேட்டு மகிழ்தலும் பாணர்க்கு வேண்டியபடி கொடுத்துப் பெருமையை யடைதலுமாகிய செயல்களாம்.

வேறு.

இராவணன் இளம்பிறையைக் கொணர்க என்றல்.

நீலச்சிகரக்கிரியன்னவனின்றவெய்யோன்
ஆலத்தினும்வெய்யனகற்றியமற்றுகின்ற
வேலைக்குரலைத்தவிர்கென்றுவிலக்கிமேலை
மாலைப்பிறைப்பிள்ளையைக்கூவுதிர்வல்லையென்றான். (௧௩௨)

இளம்பிறை தோன்றுதல்.

சொன்னானிருதர்க்கிறையம்மொழிசொல்லலோடும்
அந்நாளினிரம்பியவம்மதியாண் * டோர்வேலை
முந்நாளினிளம்பிறையாகிமுளைத்ததென்றால்
எந்நாளுமருந்தவமன்றியியற்றலாமோ. (௧௩௩)

இராவணன் பிறையைப் பழித்தல்.

குடபாலின்முளைத்ததுகண்டகுணங்கடியோன்
வடவாவனலன்றெனின்மண்பிடர்வைத்தபாம்பின்
விடவாளெயிறன்றெனினென்னைவெகுண்டவாலை
அடவாருருவிக்கொடுதோன்றியதாகுமன்றே. (௧௩௪)

தாதுண்சடிலத்தலைவைத்ததுமண்டமங்கும்
மோதுங்கடலிற்கிடைமுழ்த்துபிறந்தபோதே
ஓதுங்கடுவைத்தன்பிடற்றினொளித்ததக்கோன்
ஈதுங்கடுவாமெனவெண்ணியவெண்ணமன்றே. (௧௩௫)

உருமொக்கவுலைந்துயிர்நுங்கியதிங்களோடித்
திருமிச்சிறவின்பிறைநீமைகுறைந்ததில்லை
கருமைக்கறையொன்றினினஞ்சுகலந்தபாம்பின்
பெருமைச்சிறுமைக்கொருபெற்றிகுறைந்ததுண்டோ. (௧௩௬)

இராவணன் இருளைத்தருக என்றல்.

கன்னக்கனியும் ருடன்னையுங்காண்டுமன்றே
முன்னைக்கதிர்நன்றிதகற்றுதிர்முன்புசான்ற
என்னைச்சுடுமென்னினிவேழுலகத்தும்வாழ்வோர்
பின்னைச்சிலருய்வரென் † றங்கொருபேச்சுமுண்டோ. (௧௩௭)

அந்தகாரவருணனை.

ஆண்டப்பிறைநீங்கலுமெய்தியதந்தகாரம்
தீண்டற்கெளிதாய்ப்பலதேய்ப்பனதேய்க்கலாகி
வேண்டிற்கரபத்திரத்தீர்த்துவிழுத்தலாகிக்
காண்டற்கினிதாய்ப்பலகந்துதிரட்டலாகி. (௧௩௮)

* ஒருவேலை-ஒருபுறத்தில், எல்லை.
† அங்கு-அசை.

முருடேர்ந்துருட்டற்கெளிதென்பதென்முற்றமுற்றிப்
பொருடங்கில்கேள்விச்சுடர்புக்குவழங்கலின்றிக்
குருடங்கிதென்னக்குறிக்கொண்டுகண்ணோட்டங்குன்றி
அருடேர்ந்தநெஞ்சிற்கரிதென்பதவ்வத்தகாரம். (௧௩௯)

இராவணன் இருளைப் பழித்தல்.

விள்ளாதுசெறிந்திடைமேலுறவோங்கி * யெங்கும்
நள்ளாதிருளந்தகன்ஞாலம்விழுங்கவோடும்
எள்ளாதுலகியாவையும்யாவரும்வீயுமென்ப
துள்ளாதுமிழ்ந்தான்விடமுண்டவொருத்தனென்றான். (௧௪0)

வேலைத்தலைவந்தொருவன்வலியால்விழுங்கும்
ஆலத்தினடங்குவதன்றிதறிந்துணர்ந்தேன்
ஞாலத்தொடுவிண்முதல்யாவையுமாவினைக்கும்
காலக்கனல்கார்விடமுண்டுகறுத்ததன்றே. (௧௪௧)

இராவணன் சீதையை உருவெளித்தோற்றத்திலே கண்டு
கூறும் வார்த்தை.

அம்புமனலுநுழையாக்கனவார்தகாரத்
தும்பர்மழைகொண்டயலொப்பரிதாயதுப்பின்
கொம்பர்குரும்பைக்குலங்கொண்டதுதிங்கடாங்கி
வெம்புந்தமியேன்முன்விளக்கெனத்தோன்றுமன்றே. (௧௪௨)

மருளோடுவந்தமயக்கோமதிமற்றுமுண்டோ
தெருளாதிதென்னோதினிமையிறைத்தாலுமொவ்வா
இருளோடிருகுண்டலங்கொண்டுமிருண்டநீலச்
சுருளோடும்வந்தோர்சுடர்மாமதிதோன்றுமன்றே. (௧௪௩)

† புடைகொண்டெழுகொங்கையுமல்குலும்புல்கிநிற்கும்
இடைகண்டிலமல்லதெல்லாவுருவுந்தெரிந்தாம்
விடநுங்கியகண்ணுடையாரிவர்மெல்லமெல்ல
மடமங்கையராயென்மனத்தவராயினாரே. (௧௪௪)

பண்டேயுலகேழினுமுள்ளபடைக்கணாரைக்
கண்டேனிவர்போல்வதோர்பெண்ணுருக்கண்டிலேனால்
உண்டேயெனின்வேறினியெங்கையுணர்த்திநின்ற
வண்டேறுகோதைமடவாரிவராகுமன்றே. (௧௪௫)

இராவணன் சூர்ப்பணகையை யழைக்க என்றல்.

பூண்டிப்பிணியானுறுகின்றதுதான்பொறாதாள்
தேண்டிக்கொடுவந்தனள்செய்வதொர்மாறுமுண்டோ

---

* எங்கும் நள்ளாது-யாதோரிடத்தையும் விட்டிடாமல்.
† புடை-பக்கம், திரட்சியுமாம்.

காண்டற்கினியாளுருக்கண்டவட்கேட்கு * மாற்றால்
ஈண்டிப்பொழுதேவிரைந்தெங்கையைக்கூவுகென்றான். (௧௪௬)

சூர்ப்பணகை இராவணனிடத்து வருதல்.

என்றானெனலுங்கடிதேகிளர்கூவுமெல்லை
வன்றாணிருதக்குலம் † வேரறமாய்த்தல்செய்வாள்
ஒன்றாதகாமக்கனலுட்டெறலோடுநாசி
பொன்றாழ்குழைத்தன்னொடும்போக்கினள்போய்ப்புகுந்தாள். (௧௪௭)

இராவணன் அவளைநோக்கி இவள் சீதைதானோ என வினவல்.

பொய்க்கின்றநெஞ்சிற்கொடியாள்புகுந்தாளைநோக்கி
நெய்க்கின்றகூர்வாளவனேருறநோக்குநங்காய்
மைக்கின்றவாட்கண்மயிலின்றனைவந்தென்முன்னர்
உய்க்கின்றவளாங்கொலியம்பியசீதையென்றான். (௧௪௮)

அவள் தனது உருவெளித்தோற்றத்தின்படி இராமனென்றல்.

செந்தாமரைக்கண்ணொடுஞ்செங்கனிவாயினோடும்
சந்தார்தடந்தோளொடுந்தாழ்தடக்கைகளோடும்
அந்தாரகலத்தொடுமஞ்சனக்குன்றமென்ன
வந்தானிவனாகுமவ்வல்விலிராமனென்றாள். (௧௪௯)

சூர்ப்பணகையை நோக்கி மதுகாசுகி மாறுபடுமேதேன்' என்றல்.

பெண்பாலுருவானிதுகண்டதுபேதைநீயெண்
டெண்பாலுமில்லாதவொராணுருவென்றியென்னே
கண்பாலுறுமாயைகவற்றுதல்கற்றநம்மை
மண்பாலவரேகொல்விளைப்பவர்மாயையென்றான். (௧௫௦)

அவள் இராவணனை நோக்கி நீ கண்ட பெண்ணுரு
உருவெளித்தோற்றமே என்றல்.

ஊன்றுமுணர்வப்புறமொன்றினுமோடலின்றி
ஆன்றுமுளதாநெடிதாசைகனற்றநின்றாய்க்
கேன்றுமெனதிரேவிழிநோக்குமிடங்கடோறும்
தோன்றுமனையாளிதுதொன்னெறித்தாகுமென்றாள். (௧௫௧)

நீ இராமனைக்கண்டது என்னே' எனற்கு அவள் விடைகூறல்.

அன்றாளதுகூறவரக்கனுமன்னதாக
நின்றாலவிராமனைக்காண்குறுநீரெனென்றான்
எந்நாளவனென்னையித்தீர்வருமின்னல்செய்தான்
அந்நாண்முதல்யானுமயர்த்திலனாகுமென்றாள். (௧௫௨)

* ஆறு-வழி. ஆற்று-தலைக்கடைவாயில்.
† வேரறமாய்த்தல்-நிர்மூலமாக்குதல், சந்ததியுமறத்தொலைத்தல்.

சீதையைக்கவர்ந்துவரும்படி சூர்ப்பணகை இராவணனுக்குக் கூறுதல்.

ஆமாமதடுக்குமெனுக்கையொடாவிநைய
வே * மால்வினையேற்கினியென்விடிவாகுமென்னக்
கோமானுலகுக்கொருநீகுறைகின்றதென்னே
பூமாண்குழலாடனைவவ்வுதிபோதியென்றாள். (௧௫௩)

இராவணன் காமநோயால் மரணாவத்தைப்படுதல்.

என்றாளகன்றாளரக்கனுமிடழிந்தான்
ஒன்றானுமுணர்ந்திலனாவியுலைந்துசோர்ந்தான்
நின்றாருநடுங்கினர்நின்றுளநாளினாலே
பொன்றாதுளனாயினனத்துணைபோலுமன்றே. (௧௫௪)

இராவணன் தனது வெப்பந்தீர்தற்பொருட்டுச் சந்திரகாந்தமண்டபஞ் செய்யச்சொல்லல்.

இறந்தார்பிறந்தாரெனவின்னுயிர்பெற்றமன்னன்
மறந்தானுணர்தானவண்மாடுநின்றாரைநோக்கிக்
கறந்தாலெனநீர்தருசந்திரகாந்தத்தாலே
சிறந்தார்மணிமண்டபஞ்செய்கெனச்செப்புகென்றான். (௧௫௫)

தெய்வத்தச்சன் சந்திரகாந்தமண்டப மியற்றல்.

வந்தானெடுவானுறைதச்சன்மனத்துணர்ந்தான்
† சிந்தாவினையன்றியுஞ்செய்வினையானுஞ்செய்தான்
அந்தாமநெடுந் ‡ தறியாயிரத்தாலமைந்த
சந்தார்மணிமண்டபந்தாமரையோனுநாண. (௧௫௬)

காந்தமமுதின்றுளிகால்வனகாலமீனின்
வேந்தனொளியன்றியுமேலொடுகீழ்விரித்தான்
பூந்தென்றல்புகுந்துறைசாளரமும்புனைந்தான்
ஏந்துமணிக்கற்பகச்சீதளக்காவிழைத்தான். (௧௫௭)

இராவணன் மண்டபங்காண வருதல்.

ஆணிக்கமைபொற்கைமணிச்சுடரார்விளக்கம்
சேணுற்றிருள்சீப்பவத்தெய்வமடந்தைமார்கள்
பூணிற்பொலிவார்புடையேந்திடப்பொங்குதோளான்
மாணிக்கமானத்திடைமண்டபங்காணவந்தான். (௧௫௮)

---

* மால்வினையேற்கு-வேட்கைச்செயலையுடைய எனக்கு, பெரிய தீவினையையுடைய எனக்கு. † சிந்தாவினை-மாநஸ்கர்மம்; மனத்தால் நினைத்தவளவில் நிருமித்தல்; குறைவற்றவேலை.

‡ தறியாயிரத்தாலமைந்தமண்டபம்-ஆயிரக்கால் மண்டபம்.

இராவணனது பரிசாரகப்பெண்களின் முகவொளி.

அல்லாயிரகோடியடுக்கியதொத்ததேனும்
நல்லார்முகமாநளிர்வாணிலவீன்றநாமப்
பல்லாயிரகோடிபனிச்சுடரீன்றதிங்கள்
எல்லாமுடனாயிருளோடியிரிந்ததன்றே. (௧௫௯)

அம்மண்டபத்தைச் சூழ்ந்த சோலையிலுள்ள கற்பக விருட்சங்களின் காந்திவிசேடம்.

பொற்புற்றனமாமணியொன்பதும்பூவினின்ற
கற்பத்தருவின்கதிர்நாணிழற்கற்றைநார
அற்பற்றழியப்பகலாக்கியதாலருக்கன்
சிற்பத்தெளிகின்றதுநீள்சுடர்மென்மையன்றோ. (௧௬௦)

இராவணன் மண்டபத்தினுட் புகுதல்.

ஈட்டோரைமுதற்பொறியாவையுமொன்றியொன்று
தேருங்கலையுற்றதொர்சிந்தையன்செய்கையோரான்
வேறாயபிறப்பிடைவேட்கைவிசித்ததீர்ப்ப
மாறோருடலூற்றெனமண்டபம்வந்துபுக்கான். (௧௬௧)

(வேறு.)

இராவணன் அங்குப் பூம்பள்ளியை யடைதல்.

தண்டலிறவுஞ்செய்வோர்தாம்வேண்டியதுவேநல்கும்
மண்டலமகரவேலையமுதொடும்வந்ததென்னப்
பண்டருசுரும்புசேரும்பசுமரமுயிர்த்தபைம்பொற்
றண்டளிர்மலரிற்செய்தபிதளச்சேக்கைசார்ந்தான். (௧௬௨)

அங்குத் தென்றற்காற்று வீசுதல்.

நேரிழைமகளிர்கூந்தனிறைநறைவாசநீந்தி
வேரியஞ்சாரச்சோலைவேனிலான்விருந்துசெய்ய
ஆர்கலியழுவந்தந்தமருந்தெனவொருவராவி
தீரினுமுதவற்கொத்ததென்றல்வந்திறுத்த * தன்றே. (௧௬௩)

அத்தென்றலுக்கு இராவணன் வருந்துதல்.

சாளரத்தூடுவந்துதவழ்தலுந்தரித்ததேறற்றான்
நீளரத்தங்கள்சிந்திநெருப்புகநோக்குநீரான்
வாழ்மனைபுகுந்ததாண்டோர்மாசுணம்வரக்கண்டன்ன
கோளுறக்கொதித்துவிம்மியுழையரைக்கூவிச்சொன்னான். (௧௬௪)

* அன்றே-ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

இராவணன் வாயில்காவலரை யழைத்துவரச் சொல்லுதல்.

கூவலினுயிர்த்தசின்னீருலகினைக்குப்புற்றென்னத்
தேவரினொருவனென்னை யின்னலுஞ்செய்யத்தக்கான்
ஏவலினன்றிவந்திங்கிவ்வழியெய்திற்றென்னாக்
காவலினுழையர்தம்மைக்கொணருதிர்கடிதினென்றான். (௧௬௫)

வாயில்காவலனொருவன் இராவணனுக்குச் சமாதானங்கூறல்.

அவ்வழியுழையரோடியாண்டவற்கொணர்தலோடும்
வெவ்வழியமைந்தசெங்கண்வெருவுறநோக்கிவெய்யோன்
செவ்வழிதென்றலோர்க்குத்திருத்தினைநீகொலென்ன
இவ்வழியிருந்தகாலைத்துடையவற்கில்லையென்றான். (௧௬௬)

(இங்கே ஒருசெய்யுள் விடுபட்டுப்போனதென்று தெரிகிறது; அது இவ்வார்த்தை கேட்டவுடன் இராவணன் பரிசனங்களை நோக்கி தேவர்கள் தம்தம் இச்சைப்படி வந்து தந்தமக்கு வேண்டியபடி செய்வதானால் எனது கட்டளையும் வலிமையும் என்னபயனுடையன? பலதிசைகளிலுமுள்ள காற்றுக்களையெல்லாம் நீங்கள் இக்கணமே ஓடிப்பிடித்து வந்து சிறையிடுங்கள் என்று கட்டளையிட்டான் என்னுங் கருத்துடையது.)

இராவணன் ஏவலரை நோக்கி மந்திரிகளை யழைக்க என்றல்.

காற்றினோன்றன்னை வாளாமுனிதலிற்கண்டதில்லை
கூற்றுவந்தென்னையின்னேகுறுகுமாற்குறித்தவாற்றால்
வேற்றருங்கருங்கட்சீதைமெய்யருள்புனையேனென்றால்
ஆற்றலாலடுத்ததென்னுமமைச்சரைக்கொணர்திரென்றான். (௧௬௭)

ஏவலர் அழைக்க அமைச்சர் விரைந்து வருதல்.

ஏவினசிலதரோடியேயெனுந்துணையினெங்கும்
கூவினர்கூவலோடுங்குறுகினர்கொடித்திண்டேரர்
மாவினர்சிவிகைமேலர்மும்மதக்களிற்றர்வையத்
தேவரும்வானந்தன்னிற்றேவரும்சிந்தைசிந்த. (௧௬௮)

மந்திரிகளுடன் ஆலோசித்து இராவணன் மாரீசனிடஞ் செல்லுதல்.

வந்த * மந்திரியரோடுமாசறமனத்தினெண்ணிச்
சிந்தையினினைந்தசெய்யுஞ்செய்கையன்றெளிவினெஞ்சன்
அந்தரஞ்செல்வதாண்டோர்விமானத்திலாருமின்றி
இந்தியமடக்கிநின்றமாரீசனிருக்கைசேர்ந்தான். (௧௬௯)

மாரீசன் இராவணனை எதிர்கொண்டு உபசரித்தல்.

இருந்தமாரீசனந்தவிராவணனெய்தலோடும்
பொருந்தியபயத்தன்சிந்தைபொருமுற்றுவெருவுகின்றான்

* மந்திரி - மந்த்ரீயென்ற வடசொல்லின் திரிபு; ஆலோசனையுடையவனென்று பொருள்படும். மந்திரம்-ஆலோசனை.

கருந்தடமலையன்னானையெதிர்கொண்டுகடன்கள்யாவும்
திருந்தியசெய்துசெவ்வித்திருமுகநோக்கிச்செப்பும். (கஎ0)

வேறு.

மாரீசன் இராவணனை நீ வந்த காரியம் என் ? என்றல்.

சந்தமலர்த்தண்கற்பகநீழற்றலைவற்கும்
அந்தகனுக்குமஞ்சவடுக்குமரசாள்வாய்
இந்தவனத்தென்னின்னலிருக்கைக்கெளியோரின்
வந்தகருத்தென்சொல்லுதியென்றான்மருள்கின்றான். (கஎக)

இராவணன் கூறும் விடை.

ஆனதனைத்துமாவிதரித்தேனயர்கின்றேன்
போனதுபொற்புமேன்மையுமற்றென்புகழோடும்
யானதனைக்கின்றெங்ஙனுரைக்கேனினிதென்னா
வானவருக்குநாணுதருக்கும்வசைமன்னோ. (கஎஉ)

வன்மைதரித்தோர்மானுடர்மற்றங்கவர்வாளால்
நின்மருகிக்குநாசியிழக்குநிலைசேர்த்தார்
என்மரபுக்குநின்மரபுக்குமிதன்மேலோர்
புன்மைதெரிப்பின்வேறினியெற்றேபுகல்வேலோய். (கஎங)

இருகுசினத்தார்முதிரமலைத்தார்சிறியோர் * நாள்
பருகினரென்றால்வென்றநலத்தின்பழியன்றோ
இருகைசுமந்தாயினிதினிருந்தாயிகல்வேலுன்
மருகருலந்தாரொருவன்மலைந்தான்வரிவில்லால். (கஎச)

வெப்பழியாதென்னெஞ்சுமுலந்தேன்விளிகின்றேன்
ஒப்பழிவென்றேபோர்செயவொல்லேனுடன்வாழும்
துப்பழிசெவ்வாய்வஞ்சியைவெளவத்துணைகொண்டிட்
டிப்பழிநின்னாற்றீர்க்கியவந்தேனிவணென்றான். (கஎரு)

அதுகேட்ட மாரீசன் உடன்படாது மறுத்துக் கூறத்தொடங்குதல்.

இச்சொலினைத்துஞ்சொல்லியாக்கனெரிகின்ற
† கிச்சினுருக்கிட்டெய்த்தனனென்னக்கிளராமுன்
சிச்சியெனத்தன்மெய்ச்செவிபொத்தித்தெருமந்தான்
அச்சமகற்றிச்செற்றமனத்தோடறைகின்றான். (கஎசு)

மாரீசன் எதிர்மறுத்துக் கூறும் வார்த்தை.

மன்னாநீநின்வாழ்வைமுடித்தாய்மதியற்றாய்
உன்னானன்றீதாழ்வினையென்றேயுணர்கின்றேன்

---

* நாள்பருகுதல் - ஆயுளையொழித்தல். † கிச்சு - நெருப்பு.

இன்னாநெஞ்சனேனுமுறைப்பலிதமென்னாச்
சொன்னானன்றேயன்னவனுக்குத்துணிவெல்லாம். (௧௭௭)

அற்றகரத்தோடின்றலைநீயேயனன்முன்றில்
பற்றினையுய்த்தாய்பற்பலகாலம்பசிகூர
உற்றுயிருள்ளேதேயவுலந்தாயுழையன்றோ
பெற்றனைசெல்வம்பின்னைதிகழ்ந்தாற்பெறலாமோ. (௧௭௮)

திறத்திறனாலோசெய்தவமுற்றித்திருவுற்றாய்
மறத்திறனாலோசொல்லுதிசொல்லாய்மறைவல்லோய்
அறத்திறனாலேயெய்தினையன்றோவதுவீயும்
புறத்திறனாலேபின்னுமிழக்கப்புகுவாயோ. (௧௭௯)

* நாரங்கொண்டார்நாடுகவர்ந்தார்நடையல்லா
வாரங்கொண்டார்மற்றொருவர்க்காய்மனைவாழும்
தாரங்கொண்டாரென்றிவர்தம்மைத்தருமந்தான்
ஈருங்கண்டாய் † கண்டகருய்ந்தாரெவரையா. (௧௮௦)

அந்தரமுற்றா ‡ னகலிகைபொற்பாலழிவுற்றான்
இந்திரனொப்பாரெத்தனையோர்தாமிழிவுற்றார்
செந்திருவொப்பாரெத்தனையோர்நின்றிருவுண்பார்
மந்திரமற்றாருற்றதுரைத்தாய்மதியற்றாய். (௧௮௧)

செய்தாயேனுந்தீவினையோடும்பழியல்லால்
எய்தாதெய்தாதெய்தினிராமனுலகின்றான்
வைதாலன்னவாளிகள்கொண்டும்வழியோடும்
கொய்தானன்றேகொற்றமுடித்துன்குழுவெல்லாம். (௧௮௨)

என்றாலென்னேயெண்ணலையேநீகரனென்பான்
நின்றானைக்குமேலுளனென்னுநிலையம்மா
தன்றானைக்குற்றாரொடுமாளத்தனுவொன்றால்
கொன்றான்முற்றுங்கொல்லமனத்திற்குறிகொண்டான். (௧௮௩)

வெய்யோர்யாரேவீவிராதன்றனைவெய்யோர்
ஐயோபோனானம்பொடுமும்பர்க்கவனென்றால்
உய்வார்யாரேநம்பினைக்கொண்டுணர்தோறும்
நையாநின்றேனீயிதுரைத்துநலிவாயோ. (௧௮௪)

---

* நாரம்-ஈண்டு அன்பு.

† கண்டகர் - முட்போன்றவர்; பிறர்க்கு உபத்திரவஞ் செய்பவரென்றபடி.

‡ அகலிகை - அஹல்யா என்னும் வடமொழியின் திரிபு; இச்சொல்லுக்கு அழகில்லாமை யில்லாதவளென்று பொருள்; மிக்க அழகுடையவளென்று கருத்து; ஹல்யம் - அழகின்மை.

மாண்டார்மாண்டார்நீயினிமாள்வார்தொழில்செய்ய
வேண்டாவேண்டாசெய்கெனினுய்வான்விதியுண்டோ
ஆண்டாராண்டாரெத்தனையென்கோவறநோனார்
ஈண்டாரீண்டார்நின்றவரெல்லாமிலரன்றே. (கஅரு)

எம்பிக்குமென்னன்னைதனக்குமிறுதிக்கோர்
அம்புக்கும்போர்வில்லிதனக்குமயனிற்கும்
தம்பிக்குந்தம் * மாண்மைதவிர்த்தேசயநிற்கும்
நம்பிக்குமென்னெஞ்சலனென்றேநசைவல்கின்றேன். (கஅசு)

நின்றுஞ்சென்றும்வாழ்வனயாவுநிலையாவால்
பொன்றும்மென்றும்மெய்ம்மையுணர்ந்தாம்புலையாடற்
கொன்றும்முன்றோயென்றுரைகொள்ளாயுயர்செல்வத்
தென்றும்மென்றும்வைகுதியாயினியென்றான். (கஅஎ)

(வேறு.)

அதுகேட்டு இராவணன் மாரீசன்மேற் கோபித்தல்.

கங்கைசடைவைத்தவனெடுங்கயிலைவெற்போ
டங்கையிலெடுத்தவனுமாடெழின்மணித்தோள்
இங்கொருமனிதற்கெளியவென்றனையெனத்தன்
வெங்கணெரியப்புருவமீதுறவிடைத்தான். (கஅஅ)

நிகழ்ந்தவைநினைத்திலையெனஞ்சினிலையஞ்சா
திகழ்ந்தனையெனக்கிளையகங்கைமுகமெங்கும்
அகழ்ந்தனையதொப்புறவமைத்தவரையையா
புகழ்ந்தனை † தனிப்பிழைபொறுத்தனனிதென்றான். (கஅக)

மாரீசன் மீண்டும் உறுதிமொழி கூறல்.

தன்னைமுனியுற்றதறகட்டகவிலோனைப்
பின்னைமுனியுற்றிடுமெனத்துவிர்தல்பேணு
துன்னைமுனியுற்றனகுலத்தைமுனியுற்றா
னன்னைமுனியுற்றிலையிதென்னெனவிசைத்தான். (ககூo)

எடுத்தமலையேசனையினீசனிகல்வில்லாய்
வடித்தமலையேயிதுவலித்தியெனவாரிப்
பிடித்தமலைநாணிடைபிடித்தொருவன்மேனாள்
ஒடித்தமலையும்பர்முகடுற்றமலையன்றே. (ககூக)

யாதுமறியாயுரைகொளாயிகலிராமன்
கோதைபுனையாமுனுயிர்கொள்ளைபடுமன்றே

---

* ஆண்மை - பௌருஷம்.

† தனி பிழை-ஒருகுற்றம்; ஒப்பற்ற (பெரும்) பிழையென்றும் பொருள் கொள்ளலாம்.

பேதைமதியாலிஃதொர்பெண்ணுருவமென்றாய்
சீதையுருவோவிருதர்தீவினையதன்றோ. (௧௯௨)

உஞ்சுபிழையாயுறவினோடுமெனவுன்னா
நெஞ்சுபறைபோதுமதுநீநினையகில்லாய்
அஞ்சுமெனதாருயிரறிந்தருகுநின்றார்
நஞ்சுநுகர்வாரையிதுநன்றெனலுநன்றோ. (௧௯௩)

ஈசன்முதன்மற்றவிமையோருலகுமற்றைத்
தேசமுதன்முற்றுமொரிமைப்பினுயிர்தின்ப
* கோசிகனமைத்தகடவுட்படைகொதிப்போ
டாசிலகணிப்பிலவிராமனருணிற்ப. (௧௯௪)

ஆயிரமடற்கையுடையானைமழுவாளால்
எயெனுமிமைப்பினுயிர்செற்றவெதிரில்லோன்
மேயவிறன்முற்றுவரிவெஞ்சிலையினோடும்
நாயகன்வலித்தகையையோமுறைதகைத்தோ. (௧௯௫)

வேதனைசெய்காமவிடமேவிடமெலிந்தாய்
தீதுரைசெய்தாயினையசெய்கைசிதைவன்றோ
மாதுலனுமாய்மரபின்முந்தையுறவுந்தன்
ஈதுரைசெய்தேனதனையுன்னைதவிர்கென்றான். (௧௯௬)

இராவணன் மாரீசனைச் சினந்து கூறல்.

என்னவுரையத்தனையுமெத்தனையுமெண்ணச்
சொன்னவனையேசினவரக்கர்பதிசொன்னான்
அன்னையுயிர்செற்றவனையஞ்சியுறைகின்றாய்
உன்னையொருவற்கொருவனென்றுணர்கைநன்றோ. (௧௯௭)

திக்கயமொளிப்பநிலைதேவர்கெடவானம்
புக்கவரிருக்கைபுகைவித்துலகம்யாவும்
† சக்கரநடத்துமெனையோதயரதன்றன்
மக்கணலிகிற்பரிதுவென்றவலியன்றோ. (௧௯௮)

மூவுலகினுக்கு ‡ மொருநாயகமுடித்தேன்
மேவலர்கிடைக்கினிதுன்மேலினியதுண்டோ
ஏவல்செயகிற்றியெனதாணைவழியெண்ணிக்
காவல்செயமைச்சர்கடனீகடவதுண்டோ. (௧௯௯)

* கோசிகன்-கௌசிகனென்ற வடசொல்லின் விகாரம்; குசிகனது குலத்திற் பிறந்தவனென்று பொருள்படும்; குசனே குசிகனெனவும் வழங்கப்படுவன்.

† ஆஞ்ஞையைச் சக்கரமென்றல் கவிசமயம்.

‡ ஒருநாயகம்-ஏகாதிபத்தியம்.

மறுத்தனையெனப்பெறினுநின்னைவடிவாளால்
ஒறுத்தெனமனக்குறைமுடிப்பதொழிகல்லேன்
வெறுப்பனகிளத்தலுறுதித்தொழிலைவிட்டென்
குறிப்பின்வழிநிற்றியுயிர்கொண்டுழலியென்றான். (௨00)

வேறு.

மாரீசன் ஆய்ந்து அடங்குதல்.

அரக்கனஃதுரைத்தலோடுமறிந்தனனடங்கிநெஞ்சம்
தருக்கினர்கெடுவரன்றேதத்துவமிலையிற்றன்றோ
செருக்கினிற்றீர்துமென்பார்தம்பினார்செருக்கரென்று
உருக்கியசெம்பினூற்றநீரெனவுரைக்கலுற்றான். (௨0௧)

மாரீசன் இராவணனுக்கு இணங்கிக்கூறும் வார்த்தை.

உன்வயினுறுதிநோக்கியுண்மையினுணர்த்தினேன்மற்
றென்வயினிறுதிநோக்கியச்சத்தாலிசைத்தேனல்லேன்
நன்மையுந்தீமையன்றேநாசம்வந்துற்றபோது
புன்மையினூற்றநோய்செய்வதுபுகறியென்றான். (௨0௨)

இராவணன் மாரீசனைநோக்கி சீதையைத்தருக என்றல்.

என்றலுமெழுந்துபுல்லியேறியவெகுளிநீங்கிக்
குன்றனைக்குலித்தோளாய்மாமேவள்கொதிக்குமம்பால்
பொன்றலினிராமனம்பாற்பொன்றலேபுகழுண்டன்றோ
தென்றலைப்பகையைச்செய்தசீதையைத்தருதியென்றான். (௨0௩)

மாரீசன் அதற்கு யான் செய்யவேண்டுவது என்? என்றல்.

ஆண்டையானனையகூறவரக்கனோரிருவரோடும்
பூண்டவென்மானர்தீரத்தவனம்புக்கபோழ்தில்
தூண்டியசமங்கள்பாயத்துணைவர்பட்டுளவஞ்சி
மீண்டயான்சென்றுசெய்யும்வினையென்கொல்விளம்புகென்றான். (௨0௪)

சீதையை மாயையால் வஞ்சித்துக் கவரவேண்டும் என்றல்.

ஆயதாங்கனையகூறவரக்கர்கோனையநொய்துன்
தாயையாருயிருண்டானையான்கொலச்சமைந்துநின்றேன்
போயையாபுணர்ப்பதென்னேயென்பதுபொருந்திற்றன்றோ
மாயையால்வஞ்சித்தன்றேவௌவுதலவளையென்றான். (௨0௫)

மாரீசன் போர்வெற்றியால் சீதையைக்கொள்ளுதலே சிறப்பு என்றல்.

புறத்தினியுரைப்பதென்னே * புரவலன்றேவிதன்னைத்
திறத்துழியன்றிவஞ்சித்தெய்துதல்சிறுமைத்தாகும்

* புரவலன்-அரசர்குலத்தான், சக்கரவர்த்தி குமாரன், காத்தற்றொழிற் கடவுளாகிய திருமாலின் அம்சமானவன்.

அறத்துளதொக்குமன்றேயமர்த்தலைவென்றுகொண்டுன்
மறத்துறைவளர்த்திமன்னவென்னமாரீசன்சொன்னான். (௨0௬)

அதிதகுதியன்றென்று இராவணன் காரணங்காட்டல்.

ஆனவனுரைக்கரக்கவர்க்கர்கோனவரைவெல்லத்
தானையும்வேண்டுமோவென்றடக்கைவாடக்கதன்றோ
ஏனையரிறக்கிற்றானுந்தமியனாயிறக்குமன்றே
மானவளாதலாலேமாயையின்வலித்துமென்றான். (௨0௭)

மாரீசன் சிந்தைப்படுதல்.

தேவியைத்தீண்டாமுன்னமிவன்றலைசரத்திற்சிந்திப்
போம்வகைபுணர்ப்பனென்றுபுந்தியாற்புகல்கின்றேற்கும்
ஆம்வகையாயிற்றில்லையார்விதிவிளைவையோர்வார்
எவதுசெய்வதல்லாலில்லைவேறென்றெண்ணா. (௨0௮)

மாரீசன் மாயமானதற்கு உடன்படுதல்.

என்னமாமாயம்யான்மற்றியற்றுவதியம்புகென்றான்
பொன்னின்மானாகிப்புக்குப் * பொன்னைமால்புணர்த்துகென்ன
அன்னதுசெய்வனென்னாமாரீசனமைந்துபோனான்
மின்னும்வேலரக்கர்கோனும்வேறொருநெறியிற்போனான். (௨0௯)

வேறு.

இது கலிக்கூற்று.

மேனாளவன்வில்வலிகண்டமையால்
தானாகவமைந்துசமைந்திலனால்
மானாகுதியென்றவன்வாய்மொழியால்
போனான்மனமுஞ்செயலும்புகல்வாம். (௨௧0)

மாரீசனது மனநிலை.

வெஞ்சுற்றமினைந்துகும்வீரரைவே
றஞ்சுற்றுமறுக்குறுமாழ்குழிநீர்
நஞ்சுற்றுறுமீனினடுக்குறுமால்
நெஞ்சுற்றதொர்பெற்றிநினைப்பரிதால். (௨௧௧)

மாரீசன் இராமனுள்ளஇடத்தை யடைதல்.

அக்காலமும்வேள்வியினன்றிவனோ
டெக்கானுநலிந்துமொரீறுபெறான்
முக்காலின்முடிந்திடுவான்முயல்வான்
புக்கானவிராகவன்வைகுபுனம். (௨௧௨)

* பொன்-பொன்னிறமானவள்; பொன்போல் அருமையானவள், திருமகளின் அம்சமானவள்.

மாரீசன் பொன்மானுருவங்கொண்டு எதிர்வரல்.

தன்மானமிலாததயங்கொளிசால்
மின்வானமுமண்ணும்விளங்குவதோர்
பொன்மானுருவங்கொடுபோயினனால்
கன்மானனையாடனை * நாடுறுவான். (உகங)

அந்த மானை மான்கள்பலவுந் தொடர்தல்.

கலைமான்முதலாயினகண்டவெலாம்
அலைமானுறுமாசையின்வந்தனவால்
நிலையாமனவஞ்சனைநேயமிலா
† விலைமாதர்கண்யாரும்விழுந்தெனவே. (உகச)

அப்பொழுது சீதை மலர்கொய்து வருதல்.

பொய்யாமெனவோதுபுறஞ்சொலினால்
நையாவிடைநோவநடந்தனளால்
மைமேநகிதன் ‡ வால்வளைமென்கையெனும்
கொய்யாமலரான்மலர்கொய்துறுவாள். (உகரு)

சீதை மாயமானைக் காணுதல்.

உண்டாகியபேதைமையார்துயில்வாய்
எண்டானுமியையாத்தியையாவுருவம்
கண்டாளெனலாம்வகைகண்டனளால்
பண்டாருமுருவிடர்பாடுறுவாள். (உகசு)

சீதை அந்த மானினிடத்து விருப்பங்கொள்ளல்.

காணாவிதுகைதவமென்னுணராள்
§ பேணாதநலங்கொடுபேணினளால்
வாணாளையிராவணன்மாளுதலால்
வீணாளெனநம்புவிமேவுதலால். (உகஎ)

அதனைப்பிடித்துத்தரச் சொல்லும்பொருட்டுச் சீதை
இராமனிடம் வருதல்.

நெற்றிப்பிறையாண்முனைநின்றிடலும்
முற்றிப்பொழிகாதலின்முந்துறுவாள்
பற்றித்தருகென்பெனவப்பதையா
$ வெற்றிச்சிலைவீரனைமேவினளால். (உகஅ)

* நாடுறு, உறு-துணைவினை.

† விலைமாதர்-தமது மெய்யின்பத்தைப் பொருட்கு விலைப்படுத்தும் மகளிர். ‡ வால்-வெண்மையும் ஒண்மையுமாம்.

§ பேணாதநலம்-விரும்பத்தகாத அழகு; பாராட்டத்தகாத ஆசை என்றும் பொருள்கொள்ளலாம். $ வெற்றிச்சிலை-விசயகோதண்டம்.

அந்தமானைக்குறித்துச் சீதை இராமனிடம் பிரஸ்தாபித்தல்.

ஆணிப்பொனிறாகியசாய்கதிரால்
சேணிற்சுடர்கின்றது * திண்செவிகால்
மாணிக்கமயத்தொருமானுளதால்
காணத்தகுமென்றனள்கைதொழுவாள். (௨௧௯)

இராமன் அதனைப்பார்க்க விரும்புதல்.

இம்மானிநிலத்தினிவில்லையென
எம்மானிதெனச்சிறிதெண்ணல்செயான்
செம்மானவள்சொற்கொடுதேமலரோன்
அம்மானுமருத்தியனாயினனால். (௨௨0)

அப்பொழுது இலக்குமணன் ஒன்றுகூறத்தொடங்கல்.

ஆண்டங்கிளையோனுரையாடினனால்
வேண்டும்மெனலால்விளைவன்றிதேன்
பூண்டஞ்சுபொலங்கொடியேயாயதுநாம்
காண்டும்மெனும்வள்ளல்கருத்துணர்வான். (௨௨௧)

இலக்குமணனதை மாயமானென்றல்.

காயங்கனகம்மணிகால்செவிவால்
பாயும்முருவோடிதுபண்பெனலால்
மாயம்மெனலன்றிமனக்கொளவே
எயும்மிறையையுறவென்றளவே. (௨௨௨)

இராமன் அதனை மறுத்துக்கூறல்.

நில்லாவுலகின்னிலைநேர்மையினால்
வல்லாருமுணர்ந்திலர்மன்னுயிர்தாம்
பல்லாயிரகோடிபரந்துளவால்
இல்லாதனவில்லையிளங்குமரா. (௨௨௩)

என்னென்றுநினைத்ததிழைத்துளநம்
கன்னங்களின்வேறுளகாணுதுமால்
பொன்னின்னொளிமேனிபொருந்தியவேழ்
அன்னங்கள்பிறந்ததறிந்திலையோ. (௨௨௪)

அவ்வளவிற் சீதை அதுபோய்விடுமே என வருந்தல்.

முறையும்முடியும்பிலைமொய்யுயிரென்
றிறைவன்னிளையானொடியம்பினனால்
பறையுந்துணையன்னதுபன்னெறிபோய்
மறையும்மெனவேழைவருந்தினளால். (௨௨௫)

* திண்செவி-செறித்த காது.

வேறு.

இராமன் சென்று அந்தமானைக் காணுதல்.

அனையவள்கருத்தையுன்னாவஞ்சனைக்குன்றமன்னான்
புனையிழைகாட்டதென்றுபோயினான்பொருதசிந்தைக்
கனைகழற்றம்பிபின்புசென்றனன்கடக்கவொண்ணா
வினையெனவந்துநின்றமானெதிர்விழித்ததன்றே. (௨௨௬)

இராமன் அந்தமானைக் கொண்டாடுதலும் அதன் மூலகாரணமும்.

நோக்கியமானைநோக்கி * நுதியிழைமதியினென்றும்
தூக்கிலனன்றிதென்றானதன்பொருள்சொல்லலாகும்
† சேக்கையினரவுநீங்கிப்பிறந்ததுதேவர்செய்த
பாக்கியமுடைமையன்றேயன்னதுபழுதுபோமோ. (௨௨௭)

இராமன் இலக்குமணனுக்கு அந்தமானின் அழகை யெடுத்துக்காட்டல்.

என்னொக்குமென்னலாகுமையவிதனைநோக்காய்
தன்னொக்குமுவமையல்லாற்றனையொக்குமுவமையுண்டோ
பன்னக்கதளமொக்கும்பசும்புன்மேற்படருமென்னா
மின்னொக்குஞ்செம்பொன்மேனிவெள்ளியின்விளங்கும்புள்ளி. (௨௨௮)

வரிசிலைமறைவலோனேமானிதன்வடிவையுற்ற
அரிவையர்மைந்தர்யாரேயாதரங்கூர்கிலாதார்
உருகியமனத்தவாகியூர்வனபறப்பயாவும்
விரிசுடர்விளக்கங்கண்டவிட்டில்போல்வீழ்வகாணாய். (௨௨௯)

இலக்குமணன் அந்தமானைப்பற்றிப் பராமுகமாகக் கூறல்.

ஆரியனனையகூறவன்னதுதன்னைநோக்கிச
‡ சீரியதன்றிதென்றுசிந்தையிற்றெளிந்ததம்பி
காரியமென்னையீண்டுக்கண்டதுகனகமானேல்
வேரியந்தெரியல்வீரவின்வதேமேன்மையென்றான். (௨௩௦)

சீதை இராமனை அதைப்பிடித்துத்தரும்படி வேண்டுதல்.

அற்றவன்பகராமுன்னமகனையநுகியாளும்
கொற்றவன்மைந்தமற்றைக்குழைவுடையுழையைவல்லை
பற்றினைதருதியாயிற்பதியிடையவதியெய்தப்
பெற்றழியினிதுண்டாடப்பெறற்கருந்தகைமைத்தென்றாள். (௨௩௧)

இராமன் அதனைப்பிடிக்க உடன்படுதலை இலக்குமணன் தடுத்துக்கூறல்.

ஐயநுண்மருங்குனங்கையஃதுரைசெய்யவையன்
செய்வெனென்றமையநோக்கித்தெளிவுடைச்செம்மல்செப்பும்

* நுதி-நுட்பம், கூர்மை.
† சேக்கையினரவு-படுக்கையாகிய ஆதிசேஷன்.
‡ சீரியதன்று-நன்மை விளைப்பதன்று.

வெய்யவல்லரக்கர்வஞ்சம்விரும்பினார்வினையிற்செய்த
கைதவமாமெனன்றண்ணல்காணுதிகடையிலென்றான். (உ௩உ)

இராமன் இதனைப்பிடிக்கத்தொடங்குதலிற் குற்றமில்லை என்றல்.

மாயமேன்மடிவாமன்றேவாளியின்மடிந்தபோது
காய்சினத்தவரைக்கொன்றுகடன்கழித்தோமுமாதும்
தூயதேற்பற்றிக்கோடுஞ்சொல்லியவிரண்டினுள்ளும்
தீயதேயுரைத்தியென்றான்றேவரையிடுக்கண்டீர்ப்பான். (உ௩௩)

இலக்குமணன் ஆராய்ச்சியின்றி வேட்டையாடச் செல்லல் தகுதியன்று எனல்.

பின்னின்றரிளையவொன்றுமுணர்கிலம்பிடித்தமாயம்
என்னென்றுந்தெளிதறேற்றும்யாவதென்றுமோமாயம்
முன்னின்றார்முறைமையினின்றார்முனிந்துளவேட்டமுற்றல்
பொன்னின்றவயிரத்தோளாய்புகழுடைத்தாமன்றென்றான். (உ௩௪)

இராமன் அதனை மறுத்துக்கூறல்.

பகையுடையரக்கரென்றும்பலரென்றும்பயினுமாயம்
மிகையுடைத்தென்றும்பூண்டவிரதத்தைவிடுதுமென்றல்
நகையுடைத்தாகுமன்றேயாதலினன்றீதென்னாத்
* தகையுடைத்தம்பிக்கண்ணாட்சதுமுகன்றதைசொன்னான். (உ௩௫)

இலக்குமணன் நான் சென்று பிடித்துக்கொண்டு வருவேன் என்றல்.

அடுத்தவுமெண்ணிச்செய்தலண்ணலேயமைதியன்றே
விடுத்திதன்பின்னின்றார்கள்பலருளரெனினும்வில்லால்
தொடுத்தவெம்பகழிதாவித்தொடர்ந்தனென்விரைந்துசென்று
படுக்குவெனதுவன்றியிற்பற்றினென்கொணர்வெனென்றான், (உ௩௬)

சீதை இராமனைநோக்கி நீ பிடித்துத்தருவாயல்லைபோலும் என்றல்.

ஆயிடையன்னமன்னாளமுதுகுத்தனையசெய்ய
வாயிடை † மழலையின்சொற்கிளியினிற்குழறிமாழ்கி
நாயகநீயேபற்றிநல்கலைபோலுமென்னாச்
சேயரிக்குவளைமுத்தஞ்சொரிந்துபுசிதறிப்போனாள். (உ௩௭)

இராமன் மானைப் பிடித்தற்குச் செல்லத் தொடங்கல்.

போனவள்புலவிநோக்கிப்புரவலன்பொலன்கொடாராய்
மானிதுநானேபற்றிவல்லையின்வருவெனன்றே
கானியன்மயிலன்னாளைக்காத்தனையிருத்தியென்னா
வேனுசரமும்வில்லும்வாங்கினன்விரையலுற்றான். (உ௩௮)

* தகை-யோக்கியதை; தக்காற்குண நற்செய்கைகளையுடைமை.
† மழலை-திரம்பாமென்சொல்.

அங்ஙனமே இலக்குமணன் சீதையைக் காத்துநிற்றல்.

முன்னமுமகவாய்வந்தழுவரியொருவன்போனான்
அன்னமாரீசனென்றேயயிர்த்தனனிதனையைய
இன்னமுங்காண்டிவாழியேயெனவிருகைகூப்பிப்
பொன்னனாள்புக்கசாலைகாத்தனன்புறத்துநின்றே. (௨௩௯)

இராமன் மானைத் தொடர்தல்.

மந்திரத்திளையோன்சொன்னவாய்மொழிமனத்துக்கொள்ளான்
சந்திரற்குவமைசான்றவதனத்தாள்சலத்தைநோக்கிச்
சிந்துரப்பவளச்செவ்வாய்முறுவலன்சிகரச்செவ்விச்
சுந்தரத்தோளினானம்மானினைத்தொடரலுற்றான். (௨௪0)

அந்த மான் மிக்கவிரைவாய் ஓடுதல்.

* மிதித்ததுமெல்லமெல்லவெறித்ததுவெருவிநீங்கிக்
குதித்ததுசெவியைநீட்டிக்குரபதமுரத்தைக்கூட்டி
உதித்தெழுமுழையுள்ளமென்றிவையுருவச்செல்லும்
கதிக்கொருகல்விவேறேகாட்டியதொத்ததன்றே. (௨௪௧)

இராமன் மிக்கவிசையோடு அந்தமானைத் தொடர்தல்.

நீட்டினனுலகமூன்றுநின்றெடுத்தளந்தபாதம்
மீட்டொருமுறைமிதித்தற்கம்மாவுமோரண்டமுண்டோ
ஓட்டினன்றொடர்ந்ததன்னையொழிவறநிறைந்ததன்மை
காட்டினனன்றியன்றக்கருமையார்கணிக்கற்பாலார். (௨௪௨)

அந்த மான் ஓடும் வகை.

குன்றிடையிவருமேகக்குழுவிடைக்குதிக்குங்கூடச்
சென்றிடினகலுந்தாழிற்றீண்டலாந்தகைமைத்தாகும்
† நின்றதேபோலநீங்குநெறிவழியேயகட்டும்
மன்றலங்கோதைமாதர்மனமெனப்போயிற்றம்மா. (௨௪௩)

இராமன் அதனை மாயமானென்று கருதுதல்.

காயம்வேறாகிச்செய்யுங்கருமம்வேறாகிநின்றே
ஏயுமேயென்னின்முன்னமெண்ணமேயிளவற்குண்டே
ஆயுமேலுறுதல்செல்லாவரக்கரானவர்கள்செய்த
மாயமேயாயதேதானென்றருந்தியதென்றான்வள்ளல். (௨௪௪)

(வேறு).

இராமன் மானைப்போக்கையறிந்து மாரீசன் தப்பியோடி உய்யமுயலுதல்.

பற்றுவானினியல்லன்பகழியால்
செற்றுவானிற்செலுத்தலுற்றானென

---

* வாயுவேக மனோவேகங்களைக்காட்டிலும் வேகமாய் ஓடிற்று அந்த மான் என்பது கருத்து.

† நின்றதேபோல நீங்கும் என்றதுவரையில் தன்மைநவிற்சியணி.

மற்றமாயவரக்கன்மனக்கொளா
உற்றவேகத்தினும்பரிஞேங்கினன். (௨௪௫)

இராமன் அம்புதொடுத்தல்.

அக்கணத்தினிலையனும்வெய்யதன்
சக்கரத்திற்றகைவரிதாயதோர்
செக்கர்மேனிப்பகழிசெலுத்தினன்
புக்கதேயம்புக்கின்னுயிர்போக்கென. (௨௪௬)

மாரீசன் கதறிக்கொண்டு விழுந்து இறத்தல்.

நெட்டிலைச்சரம்வஞ்சனைநெஞ்சுறப்
பட்டதப்பொழுதேபகுவாயினல்
அட்டதிக்கினுமப்புறமும்புக
விட்டழைத்தொருகுன்றெனவீழ்ந்தனன். (௨௪௭)

அதுகண்டு இராமன் இலக்குமணனைக் குறித்துக் கொண்டாடுதல்.

வெய்யவன்றனுருவொடுவீழ்தலும்
செய்யதன்றனைச்செப்பியதம்பியை
ஐயன்வல்லனென்றாருயிர்வல்லனென்
உய்யவந்தவன்வல்லனென்றன்னினன். (௨௪௮)

இறந்துவிழுந்த வடிவத்தைப்பார்த்து இராமன் மாரீசனென்றறிதல்.

ஆசைநீளத்தரற்றினன்வீழ்தவந்
நீசன்மேனியைநின்றுடனேக்கினன்
மாசின்மாதவன்வேள்வியின்வந்தமா
ரீசனேயிவனென்பதுந்தேறினன். (௨௪௯)

இவன்கதறியகுரலால் சீதை வருந்துவளேயென்று இராமன் சிந்தித்தல்.

உழைத்தவாளியுரம்புகப்புல்லியோன்
இழைத்தமாயையினென்குரலாலிசைத்
தழைத்ததுண்டதுகேட்டயர்வெய்துமால்
மழைக்கணேழையென்றுள்ளம்வருந்தினன். (௨௫0)

இலக்குமணன் சீதைக்குத் தேறுதல்சொல்லக்கூடு மென்று
இராமன் கருதல்.

மாற்றமின்னதுமாயமாரீசனென்
றேற்றமுன்னுணர்ந்தானெனினென்னுடை
ஆற்றநேருமறிவினனுதலாற்
றேற்றுமாலிழையோனெனத்தேறினன். (௨௫௧)

இராமன் சிந்தையோடு திரும்புதல்.

மாள்வதேபொருளாகவந்தானலன்
சூழ்வதோர்பொருளுண்டிவன்சொல்லினல்
மூள்வதேதமதுமுடியாமுனம்
மீள்வதேநலனென்றவன்மீண்டனன். (௨௫௨)

ஏ-வது, மாரீசன்வதைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-அ௧௧.

# * ௯-வது, சடாயு வுயிர் நீத்த படலம்.



கவிக்கூற்று: பிராட்டியின்செய்தியைக் கூறத்தொடங்குவோ மென்றல்.

சங்கடுத்த தனிக்கடன்மேனியாற்
கங்கடுத்த நிலைமையறைந்தனம்
கொங்கடுத்தமலர்க்குழற்கொம்பனாட்
கிங்கடுத்த தகைமையியம்புவாம். (௧)

மாயமானின் கூக்குரல்கேட்ட பிராட்டி வருந்தியது.

வயிறலைத்துழைபு திறந்தேங்கிய
செயிர்த்தலைக்கொண்டசொற்செவிசேர்தலும்
குயிலலைத்திடையுற்றதோர்கொள்கையாள்
வயிறலைத்துவிழுந்துமயங்கினாள். (௨)

பிடித்தாலிங்கிலையெனப்பேதையேன்
முடித்தனென் * முதல்வாழ்வெனமொய்குழல்
கொடிப்படர்ந்தெனநெடுங்கோளரா
இடிக்குடைந்தெனப்புரண்டேங்கினாள். (௩)

சீதை இலக்குமணனை வெறுத்துக்கூறல்.

குற்றம்வீந்த குணத்தினெங்கோமகன்
மற்றைவாளரக்கன்புரிமாயையால்
இற்றுவீழ்ந்தனனென்னவுமென்னயல்
நிற்றியோவிளையோயொருநீயென்றாள். (௪)

(வேறு.)

இலக்குமணன் சீதைக்குத் தேறுதல் கூறல்.

எண்மையாருலகினிலிராமற்கேற்றமோர்
திண்மையாருளரெனச்செப்பற்பாலதோ
பெண்மையாலுரைசெயப்பெறுதிராலென
† உண்மையானனையவட்குணரக்கூறினான். (௫)

ஏழுமேகடலுலகேழுமேழுமே
சூழுமேன்மலையவைதொடர்ந்தசூழல்வாய்
வாழுமேனையர்சிறுவலிக்குவாளமர்
தாழுமேயிராகவன்றனிமைதையலீர். (௬)

---

* ஜடாயு-பலமயிர்கள் சேர்த்துத் திரித்த ஜடையையுடையவர், மிகுந்த ஆயுளுடையவர்; இறகில் உயிரையுடையவர்; இவருக்குப் பெரிய உடையார் என்றும் பெயர்.

† கொழுநனோடுகூடிவாழும் வாழ்க்கையினும் சிறப்புடைய வாழ்வு வேறு குலமகளிர்க்கு இன்றாதலால் அத்தலைமைவிளங்க 'முதல்வாழ்வு' எனப்பட்டது. ‡ உண்மையான்-ந்யாயவாதி.

பாரெனக்கனலெனப்புனலெனப் * பகாப்
பேரெனத்திசையெனமுனியிற்பெருமால்
காரெனக்கரியவக்கமலக்கண்ணனை
யாரெனக்கருதியிவ்விடரினாழ்கின்றீர். (எ)

இடைந்துபோய்நிசிசரற்கிராமனெவ்வம்வந்
தடைந்தபோதழைக்குமேயழைக்குமாமெனின்
மிடைந்தபேரண்டங்கண்மேலகீழன
உடைந்துபோமயன்முதலுயிருந்தீயுமால். (அ)

மாற்றமென்பகர்வதுமண்ணும்வானமும்
போற்றவன்றிரிபுரமெரித்தபுங்கவன்
எற்றிநின்றெய்தவில்லிற்றதெம்பிரான்
ஆற்றலினமைவதோராற்றலுண்மையோ. (௯)

காவலனீண்டுநீர்கருதிற்றெய்துமேல்
மூவகையுலகமுமுடியுமுந்துள
தேவருமுனிவருமுதலசெவ்வியோர்
எவரும்வீந்துளாராமுமெஞ்சுமால். (௧0)

பரக்கவென்பகர்வதுபகழிபண்ணவன்
துரக்கவந்ததுபடத்தொலைந்துசோர்கின்ற
அரக்கனவ்வுரையெடுத்தரற்றினானதற்
கிரக்கமுற்றிரங்கலிருத்திரீண்டென்றான். (௧௧)

சீதை இலக்குமணனை மீளவும் பழித்தல்.

என்றவனியம்பலுமெடுத்தசீற்றத்தள்
கொன்றனவின்னலள்கொதிக்குமுள்ளத்தள்
நின்றநின்னிலையிதுநெறியிற்றன்றென
வன்றறுகண்ணினள்வயிர்த்துக்கூறுவாள். (௧௨)

சீதை நெருப்பில் விழுந்து இறப்பேன் என்றல்.

ஒருபகல்பழகினருயிரையீவரால்
பெருமகனுலைவுறப்பெற்றிகேட்டுநீ
வெருவலைநின்றனைவேறென்யானினி
எரியிடைவீழ்ந்துயிரிறப்பெனீண்டெனா. (௧௩)

* பகாப்பேர்-என்றது,இடைவிடாமல் சஞ்சரிப்பது என்ற பொருளைத்தந்து, வாயுவுக்கு ஒரு காரணக்குறியாம்; ஸதாகதி, ஸமீரணன், பவன் என்ற வாயுவின் வடமொழிப்பெயர்கள் இப்பொருள்படுவன வாதலால், பகாப்பேர் என்பது-அவற்றின் மொழிபெயர்ப்பாய் வந்ததொரு பயரெனக் கொள்க. பகா - பகாமல்; ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். பெயர் என்ற வினை, பேர் என மருவிற்று. 'பகர்பேர்' என்று பாடமோதி மற்றுஞ்சொல்லப்படுகிற பேர்; அதாவது-இங்குக் கூறப்படாத காற்று என்பாரும் உளர்.

இலக்குமணன் சீதையை வணங்கி விலக்குதல்.

தாமரைவனத்திடைத்தாவுமன்னம்போல்
தூமவெங்காட்டெரிதொடர்கின்றானைச்
சேமவிற்குமரனும்விலக்கிச்சீறடிப்
பூமகடொழுதிலம்புல்லிச்சொல்லுமால். (௧௪)

இலக்குமணன் செல்லவுடன்பட்டுக் கூறுந் தணிவுரை.

துஞ்சலுந்தன்னைநீர்சொற்றசொல்லையான்
அஞ்சவென்மறுக்கிலெனலந்தீர்ந்தினி
* இஞ்சிருமடியனேனேகுகின்றனென்
வெஞ்சினவிதியினைவெல்லவல்லமோ. (௧௫)

இலக்குமணன் விடைபெறுதல்.

போகின்றேனடியனேன்பொருந்திவந்துகே
டாகின்றதரசன்றனைநீர்மறுத்
தேகென்றிரிருக்கின்றீர்தமியிரென்றபின்
வேகின்றசிந்தையான்விடைகொண்டேகினேன். (௧௬)

அப்பொழுது இலக்குமணன் அடைந்த சிந்தை.

இருப்பனேலெரியிடையிறப்பராலிவர்
பொருப்பனையானிடைப்போவெனேயெனின்
† அருப்பமில்கேடுவந்தடையுமாருயிர்
விருப்பனேற்கென்செயலென்றுவிம்மினான். (௧௭)

இலக்குமணன் ஒருவாறு துணிதல்.

அறந்தனைவழியிலதாகினைக்கலாம்
இறந்துபாடிவர்க்குறமிதனினிவ்வழி
துறந்துபோமிதனையேதுணிவென்றல்வினைப்
பிறந்துபோந்திதுபடும்பேதையேனென. (௧௮)

சடாயு பாதுகாக்கும் என்றுசொல்லி இலக்குமணன் செல்லல்.

போவதுபுரிவல்யான்புகுந்ததுண்டெனின்
காவல்செய்யெருவையின்றலைவன்கண்ணுறும்
ஆவதுகாக்குமென்றறிவித்தவ்வழித்
தேவர்செய்தவத்தினாற்செம்மலேகினான். (௧௯)

---

* இங்கு என்பது இஞ்சு எனத்திரிந்தது, எதுகை நோக்கியதோர் போலிவழக்கு.

† அருப்பம்-அரண். "வீங்கு சிறைவியலருப்பம்" (புறநானூறு-௧௭) இனி, அருப்பம்-அருமையுமாம் "அடிநிலைதளர்க்கு மருப்பமுமுடைய" (மலைபடுகடாம் ௨௨௨.)

இராவணன் சந்நியாசிவேடங்கொண்டு சீதையிடத்தில் வருதல்.

இளையவனேகலுமிறவுபார்க்கின்ற
வளையெயிற்றிராவணன்வஞ்சமுற்றுவான்
முளைவரித் * தண்டொருமூன்றுமுப்பகைத்
தளையரிதவத்தவர்வடிவுந்தாங்கினன். (உ0)

ஊணிலனெனவுலர்ந்தமேனியன்
சேணெறிவந்ததோர்வருத்தச்செய்கையன்
பாணியினடத்திடைப்படிக்கின்றானென
வீணையினிசைபடவேதம்பாடுவான். (உக)

பூப்பொதியவிழ்த்தனநடையன்பூதலந்
தீப்பொதிந்தாமெனமிதிக்குஞ்செய்கையன்
காப்பருநடுக்குறுங்காலன்கையினன்
மூப்பெனும்பருவமுமுனியமுற்றினான். (உஉ)

தாமரைக்கண்ணனோடோர்தவத்தின்மாலையன்
ஆமையினிருக்கையன்வளைந்தயாக்கையன்
காமநூன்மார்பினனணுகினனோர
ஆமனைத்தருந்ததிபிருந்தகுழல்வாய். (உங)

இராவணன் பர்ணசாலை வாயிலில் வந்து இதில்
உள்ளார் யார்? என்றல்.

தோமறுசாலையின்வாயிறுன்னினான்
நாமுதற்குழறிடநடுங்குசொல்லினான்
யாவிரிவ்விருக்கையுளிருந்துளீரென்றான்
தேவருமருள்கொளத்தெரிந்தமேனியான். (உச)

சீதை இராவணமுனியை எதிர்கொள்ளுதல்.

தோகையுமிவ்வழித்தோமில்சிந்தனை
சேகறுநோன்பினரென்னுஞ்சிந்தையாள்
பாகியல்கிளவியாள்பவளக்கொம்பர்போன்
றேகுமினீண்டெனவெதிர்வந்தெய்தினாள். (உரு)

இராவணன் சீதையைப் பார்த்தல்.

வெற்பிடைமதமெனவியர்க்குமேனியன்
அற்பினற்றிரைபுரளாசைவேலையன்
பொற்பினுக்கணியினைப்புகழின்சேக்கையைக்
கற்பினுக்கரசியைக்கண்ணினோக்கினான். (உசு)

* தண்டொருமூன்று-அரசு, புரசு, மூங்கில் என்னும் மூன்றுவகைக்
கோல்களையும் ஒன்றாகமுறுக்கிச் சேர்த்தது திரிதண்டமாம்.

சீதையைக் கண்டவளவிலே இராவணன் வேட்கை
நோய் விஞ்சிப் படும் அவத்தை.

தூங்கலினுருவினைச்சொல்லினும்பரும்
ஓங்கியவழகினாளுருவங்காண்டலும்
எங்கினன்மனநிலையாதென்றனுவாம்
வீங்கினமெலிந்தனவீரத்தோள்களே. (உ௭)

புனமயிற்சாயலினெழிலிற்பூநறைச்
சுனைமடுத்துண்டிசைமுரலுந்தும்பியின்
இனமெனக்களித்துளதென்பதென்னவன்
மனமெனக்களித்தது * கண்ணின்மாலையே. (உ௮)

சேயிதழ்த்தாமரைச்சேக்கைநீர்த்திவண்
மேயவண்மணிநிறமேனிகாணுதற்
கேயுமேயிருபதிங்கிமைப்பிலாட்டங்கள்
ஆயிரமில்லையென்றல்லலெய்தினான். (உ௯)

† அரைகடையிட்டமுக்கோடியாயுவும்
புரைதபுதவத்தினான்படைத்தபோதுமே
நிரைவளைமுன்கையிந்நின்றநங்கையின்
கரையறுநன்னலக்கடற்கென்றுன்னினான். (௩0)

தேவருமவுணருந்தேவிமாரொடும்
கூவல்செய்தொழிலினர் ‡ குடிமைசெய்திட
மூவுலகுமிவர்முறையினாளயான்
ஏவல்செய்துய்குவெனினியென்றுன்னினான். (௩௧)

உளைவுறுதுயர்முகத்தொளியிதாமெனின்
முளையெயிறிலங்கிடுமுறுவலென்படும்
தளையவிழ்குழலிவட்கண்டதந்தவென்
இளையவட்களிப்பெனென்னரசென்றெண்ணினான். (௩உ)

அம்முனிவனுக்குச் சீதை வருகவென்று உபசாரமொழி கூறல்.

§ ஆண்டையானனையனவுன்னியாசைமேல்
மூண்டெழுசிந்தனைமுறையிலோன்றனைக்
காண்டலுங்கண்ணினீர்துடைத்தகற்பினாள்
ஈண்டெழுந்தருளுமென்றினையகூறினாள். (௩௩)

* கண்களிருபதாதலின்-கண்ணின்மாலை எனப்பட்டது.

† அரைகடையிட்டமுக்கோடி-அரையென்னும் எண்ணைக்கடையில் எழுதப்பட்ட மூன்றுகோடி என்க.

‡ குடிமை-பரம்பரையாச்செய்யும் அடிமை.

§ ஆண்டையான்-அவ்விடத்தான்.

சீதை தந்த ஆசனத்தில் அம்முனிவன் வீற்றிருத்தல்.

எத்தினளெய்தலுமிருத்திரீண்டென
வேத்திரத்தாசனம்விதியினல்கினாள்
மாத்திரிதண்டயல்வைத்தவஞ்சனும்
பூத்தொடர்சாலையினிருந்தபோழ்தினே. (௫௪)

அப்பொழுது சராசரங்கள் அஞ்சிநடுங்கல்.

நடுங்கின மலைகளுமரனு மாவலிர்
தடங்கினபறவையும்விலங்குமஞ்சின
படங்குறைந்தொதுங்கினபாம்புமாதகக்
கடுந்தொழிலரக்கனைக்காணுங்கண்ணினே. (௫௫)

அம்முனி சீதையைநோக்கி இப்பர்ணசாலைக்கு
உரியவர் யார்? என்றல்.

இருந்தவன்யாவதிவ்விருக்கையிங்குறை
இருந்தவன்யாவனீர்யாரையென்றலும்
விருந்தினரிவ்வழி * விரகிலாரெனப்
பெருந்தடங்கண்ணவள்பேசன்மேயினாள். (௫௬)

அதற்குச் சீதை விடைகூறுதல்.

தயரதன்றொல்குலத்தலைவன்றம்பியோ
டுயர்குலத்தன்னைசொலுச்சியேந்தினான்
அயர்விலதிவ்வழியுறையுமன்னவன்
பெயரினைத்தெரிகுதிர்பெருமையீரென்றாள். (௫௭)

அம்முனிவன் சீதையை நீர் யார்மகள் என்றல்.

கேட்டனென்கண்டிலென்கெழுவுகங்கைநீர்
நாட்டிடையொருமுறைநண்ணினேன்மலர்
வாட்டடங்கண்ணினீர்யாவன்மாமகள்
காட்டிடையரும்பகல்கழிக்கின்றீரென்றான். (௫௮)

அதற்குச் சீதை விடைகூறுதல்.

அனகமாநெறிபடரடிகளும்மலால்
நினைவதோர்தெய்வம்வேறிலாதநெஞ்சினான்
சனகன்மாமகள்பெயர்சனகி † காகுத்தன்
மனைவியானென்றனண்மறுவில்கற்பினாள். (௫௯)

சீதை அம்முனிவனை நீர் எங்கு நின்று வருகிறீர்? என்றல்.

அவ்வழியவனையனவுரைத்தவாயிழை
வெவ்வழிவருந்தினிர்விளைந்ததுமொப்பினிர்

---

* விரகிலார்-தம்மை இத்தன்மையாரென்று அறிந்தில்லாதவர். விரகு-அறிவு "விரகறியாளர்" (புறப்பாட்டு-உகூக.)

† காகுத்தன்-ககுஸ்தனென்னும் அரசனது மரபில்தோன்றியவன்; சீதை தன்கணவன்பெயர் சொல்லாமல் வம்சத்தின்பெயரைச் சொல்லியதுகவனிக்க; காகுத்தனென்றபெயர், இந்திரனைவாகனமாகக்கொண்டு சென்று அசுரரையழித்து அமரரையளித்த அரசனது மரபினர்.

இவ்வழியிருவினைகடக்கவெண்ணினிர்
எவ்வழிநின்றுமிங்கெய்தினீரென்றாள். (௪0)

அதற்கு அவன் கூறும் விடை.

இந்திரற்கிந்திரனெமுதலாகலாச்
சுந்தரனான்முகன்மரபிற்றோன்றினான்
அந்தரத்தோடுமெவ்வுலகுமாள்கின்றான்
மந்திரத்தருமறைநவைகுராவினான். (௪௧)

ஈசனாண்டிருந்தபேரிலங்குமால்வரை
கூசிவேரொடும்பறித்தெடுக்குமுற்றத்தான்
* ஆசைகள்சுமந்த † பேரளவில்யானைகள்
பூசல்செய்மருப்பினைப்பொடிசெய்தோளினான். (௪௨)

நிற்பவர்கடைத்தலைநிறைந்துதேவரே
சொற்பகுமற்றவன்பெருமைசொல்லுங்கால்
கற்பகமுதலியநிதியங்கையன
பொற்பகமானநீரிலங்கைப்பொன்னகர். (௪௩)

மேனகைதிலோத்தமைமுதலமேவளையர்
வானகந்துறந்துவந்தவன்றன்மாட்சியால்
ஊனமிலடைப்பைகால்வருடலொண்செருப்
பானவைமுதற்றொழில்வரதாகுமே. (௪௪)

சந்திரனிரவியென்பவர்கடாமவன்
சிந்தனைவழிநிலைதிரிவர்தேசுடை
இந்திரன்முதலியவமரரீண்டவன்
கந்துடுகோயிலின்காவலாளரே. (௪௫)

பொன்னகரத்தினும்பொலங்கொணகரத்தும்
தொன்னகரத்தினுந்தொடர்ந்தமாநிலத்
தென்னகரத்தினுமினியவீண்டவன்
நன்னகரத்தனசுவையிலாதன. (௪௬)

தாளுடைமலருளான்றந்தவந்தமில்
நாளுடைவாழ்க்கையனரிபாகத்தன்
வாளுடைத்தடக்கையன்வாரிவைத்தவெங்
கோளுடைச்சிறையினன்குணங்கண்மேன்மையான். (௪௭)

வெம்மைதீரொழுக்கினன்விரிந்தகேள்வியன்
‡ செம்மையோன்மன்மதன்றிகைக்குஞ்செவ்வியன்

---

* ஆசைகள்-திக்குகள். † பேரளவில்யானை-மிகப்பெரியயானை.

‡ செம்மை-நடுவுநிலைமை. ஞமன்கோலன்னசெம்மைதாங்கி (மது
ரைக்காஞ்சி-௪௯௧.)

சீதை இனி இராமனால் அரக்கர் அழிய
உலகுஇன்புறும் என்றல்.

திறந்தெரிவஞ்சனச்சொற்செப்பலுஞ்செப்பமிக்காள்
அறந்தருவள்ளலீண்டிங்கருந்தவமுயலுநாளுள்
மறந்தலைதிரிந்தவாழ்க்கையரக்கர்தம்வருக்கத்தோடும்
இறந்தனர்முடிவர்பின்னரிடரிலையுலகமென்றாள். (௫௬)

அதற்கு இராவணன் மனிதர் அரக்கரைக் கொல்ல
வல்லரோ? என்றல்.

மானவனுரைத்தலோடுமானிடரரக்கர்தம்மை
மீனெனமிளிருங்கண்ணாய்வேறலவெல்வரென்னின்
யானையினினத்தையெல்லாமிளமுயல்கொல்லும்பின்னும்
கூனுகிர்மடங்கலேற்றைக்குறுநரிமான்கொல்லுமென்றான். (௫௭)

அதற்குச் சீதை, விராதன் கரன் முதலியோரை இராமன்
கொன்றதை நீர் அறியீரோ? என்றல்.

மின்றிரண்டனைய * பங்கிவிராதனும்வெகுளிபொங்கக்
கன்றியமனத்துவென்றிக்கரன்முதற்கணக்கிலோரும்
பொன்றியபூசலொன்றுங்கேட்டிலிர்போலுமென்றாள்
அன்றவர்க்கடுத்ததுன்னிமையுண்கணீரருவிசோர்வாள். (௫௮)

மற்றும் சீதை அரக்கரனைவரும் விரைவில் அழிவர் என்றல்.

வாளரிவள்ளறன்னாலிலங்கைமாநிருதரெல்லாம்
கேளொடுமெறியுமாறும்வானவர்கிளருமாறும்
நாளையேகாண்டியன்றேநகையிலிருணர்கிலீரோ
மீளருந்தருமந்தன்னைவெல்லுமோபாவமென்றாள். (௫௯)

அதுகேட்டு இராவணன் கோபங்கொள்ளுதல்.

தேனிடையமுதளாயவன்னமென்சிலசொன்மாலை
தானுடைச்செவிகளூடுதவழுறத்தளிர்த்துவீங்கும்
ஊனுடையுடம்பினானுமுருகெழுமானமூன்ற
மானிடர்வலியரென்றமாற்றத்தாற்சீற்றம்வைத்தான். (௬0)

இராவணனது கோபவார்த்தை.

சீற்றினனுரைசெய்வானச்சிலைவலிப்புல்லியோர்கட்
கீற்றுருமனிதன்செய்தானென்றெடுத்தியம்பினையேல்
தேறுதிநாளையேயவ்விருபதுதிண்டோள்வாடை
வீறியபொழுது † பூளைவீயெனவீவனன்றே. (௬௧)

மேருவைப்பறிக்கவேண்டின்விண்ணினையிடிக்கவேண்டின்
நீரினைக்கலக்கவேண்டினெருப்பினையவிக்கவேண்டின்

* பங்கி-ஆண்மயிர். † பூளை-ஓர்செடி; இலவம்பஞ்சுமாம்.

ரிணையெடுக்கவேண்டிற்பலவினைசிலசொல்லேழாய்
ரெனக்கருதிச்சொன்னாயிராவணற்கரிதென்னென்றான். (சுஉ)

அதற்குச் சீதை கூறுந் தக்க சமாதானவார்த்தை.

ரண்டருதிரடோள்சாலவுளவெனினாற்றலுண்டோ
ரண்டநீரிலங்கைவேந்தைச்சிறைவைத்தகழற்கால்வீரன்
ரண்ட * தோள்வனத்தையெல்லாஞ்சிறியதோர்பருவந்தன்னில்
ரண்டுதோளொருவனன்றேமழுவினாலெறிந்தானென்றாள். (சுங)

இராவணன் பெருங்கோபங்கொண்டு மாயைத்
துறவிவேடத்தை விடுத்தல்.

ன்றிவளுரைத்தலோடுமெரிந்தனநயனந்திக்கிற்
சன்றனதிரடோள்வானந்தீண்டினமகுடந்திண்கை
ன்றொடொன்றடித்தமேகத்துருமெனவெயிற்றிரேளி
மன்றனவெகுளிபொங்கவிட்டதுமாயவேடம். (சுச)

சீதை சங்கிக்குமளவில் அவன் தன்னுருவங்காட்டல்.

ருவினைதுறந்தமேலோரல்லன்கொலிவனென்றெண்ணி
ரிவையுமையமெய்தாவாரிவன்றானென்றென்றும்
தரிவருநிலையளாகத்திகைத்தவந்தானே
ருகெழுசீற்றம்பொங்கிப்பணம்விரித்துயர்ந்ததொத்தான். (சுரு)

அப்பொழுது சீதை அஞ்சிநடுநடுங்கிய நிலைமை.

ற்றவெந்துயரத்தன்னாளாண்டுற்றவலக்கணேக்கின்
ற்றமென்னினைக்கலாகுமெதிரெடுத்தியம்பலாகும்
ாற்றமொன்றில்லைசெய்யும்வினையில்லைவரிக்கலாகாக்
டற்றம்வந்துற்றகாலத்துயிரெனக்குலைவுகொண்டாள். (சுசு)

இராவணன் சீதையை வெருட்டிப்பேசுதல்.

ிண்ணவரேவல்செய்யவென்றவென்வீரம்பாராய்
ண்ணிடைப்புழுவின்வாழுமானிடர்வலியரென்றாய்
புண்ணெனப்பிழைத்தாயன்றேலுன்னையான்பிசைந்துதின்ன
ண்ணுவெனெண்ணிற்பின்னையென்னுயிரிழப்பெனென்றான். (சுஎ)

உடனே இராவணன் அவளைச் சமாதானப்படுத்தித்
தன்கருத்தைப் புலப்படுத்தல்.

நலைவுறலன்னமுன்னம்யாரையுங்கும்பிடாவென்
நலைமிசைமகுடமென்னத்தனித்தனியினிதுதாங்கி
லகில்பூணரம்பைமாதராடிமுறையேவல்செய்ய
டலகமீரேழுமாளுஞ்செல்வத்துளுறைதியென்றான். (சுஅ)

---

* தோள்வனம்-தோளின்தொகுதி.

அதுகேட்டவுடனே சீதை இராவணனை நிந்தித்தல்.

செவிகளைத்தளிர்க்கையாலேசிக்குறச்சேமஞ்செய்தாள்
கவினும்வெஞ்சிலைக்கைவென்றிக்காகுத்தன்கற்பினேனைப்
புவியிடையொழுக்கநோக்காப்பொங்கெரிப்புனிதரீயும்
* அவியைநாய்வேட்டதென்னவென்சொனாயரக்கவென்னா. (௬௯)

சீதை இராவணனை அதட்டிப்பேசுதல்.

புன்னுனைநரினொய்தாப்போதலேபுரிந்துநின்ற
இன்னுயிரிழத்தலஞ்சியிற்பிறப்பழிதலுண்டே
மின்னுயிர்த்துருமிற்சீறும்வெங்கணைவிரவாமுன்னம்
உன்னுயிர்க்குறுதிநோக்கினொளித்தியாலோடியென்றாள். (௭௦)

உன்கணவனம்பு என்னை யாதுஞ்செய்யமாட்டாது என்று
இராவணன் கூறுதல்.

என்றவளுரைக்கநின்றவிரக்கமிலரக்கனெய்த
உன்றுணைக்கணவனம்பவ்வுயர்திசைசுமந்தவோங்கல்
வன்றிறன்மருப்பினாற்றன்மடித்தவென்மார்பின்வந்தால்
குன்றிடைதொடுத்துவிட்டபூங்கணைகொல்லதென்றான். (௭௧)

இராவணன் மீண்டும் இன்சொற்கூறிச் சீதையை வணங்குதல்.

அணங்கினுக்கணங்கனாய்நின்னாசைநோயகத்துப்பொங்க
உணங்கியவுடம்பினேனுக்குயிரினையுதவி † யும்பர்க்
கணங்குழைமகளிர்க்கெல்லாம்பெரும்பதங்கைக்கொளென்னா
வணங்கினனுலகந்தாங்குமலையினும்வலியதோளான். (௭௨)

வேறு.

அப்பொழுது பிராட்டி அலறிக்கதறல்.

தறைவாயவன்வந்தடிதாழுதலும்
கறைவாள்படவாவிகலங்கினள்போல்
இறைவாவிளையோயெனவேங்கினளால்
பொறைதானுயிர்போவதுபோற்புகல்வாள். (௭௩)

இராவணன் சீதையைத் தரையுடனே பெயர்த்தெடுத்தல்.

ஆண்டாயிடைதீயவ ‡ னாயிழையைத்
தீண்டாலெனுமேலுரைசிந்தைசெயாத்
தூண்டாமெனவொழுயர்தோள்வலியாற்
கீண்டானிலம்யோசனைகீழொடுமேல். (௭௪)

---

* அவி-ஹவிஸ் என்ற வடசொல்லின் சிதைவு; மந்திரபூர்வமாக அக்கினியில் ஓமஞ்செய்யப்படும் நெய்முதலிய தேவருணவு.

† உம்பர்கணங்குழை மகளிர்க்கெல்லாம் பெரும்பதம் என்றது-எல்லாத்தேவர்களையும் வென்று திரிலோகாதிபத்தியத்தைக்கைக்கொண்ட தனக்கு உரியவளாதலை.

‡ ஆயிழை-தேர்ந்தெடுத்தணிந்த சிறந்த ஆபரணங்களையுடையவள்.

இராவணன் சீதையைத் தரையோடு எடுத்துத் தேரில் வைத்துக் கொண்டு ஆகாயமார்க்கமாக எழுதல்.

கொண்டானுயர்தேர்மிசைகோல்வளையாள்
கண்டாடனதாருயிர்கண்டிலளால்
மண்டானுறுமின்னின்மயங்கினளால்
விண்டான்வழியாவெழுவான்விரைவான். (எ௫)

பிராட்டி சோகித்துப் புலம்பலுறல்.

விடுதேரெனவெங்கனல்வெந்தழியும்
கொடிபோல்புரள்வாள்குலைவாளயர்வாள்
துடியாவிழுவாடயராவெழுவாள்
கடிதாவறனேயிதுகாவெனுமால். (எசு)

சீதை பலபொருள்களையும் நோக்கி இரங்கிக்கூறும் மொழிகள்.

மலையேமரனேமயிலேகுயிலே
கலையேபிணையேகளிறேபிடியே
நிலையாவுயிரேநிலைதேறினர்போய்
உலையாவலியாருழைநீருரையீர். (எஎ)

செஞ்சேவகனார்நிலைநீர்தெரியீர்
மஞ்சேபொழிலேவனதேவதைகாள்
அஞ்சேலெனநல்குதிரேலடியேன்
உஞ்சாலதுதானிழிபோவுரையீர். (எஅ)

நிருதாதியர்வேரறநீண்முகில்போல்
சரதாரைகள்சிந்தினிர்சார்கிலிரோ
வரதாவிளையோய்மறுவேதுமிலாப்
பரதாவிளையோய்பழிபூணுதிரோ. (எகூ)

கோதாவரியேகுளிர்வாய்குழைவாய்
மாதாவனையாய்மனனேதெளிவாய்
ஓதாதுணர்வாருழையோடினைபோய்
நீதான்வினையேனிலைசொல்லலையோ. (அ0)

முந்துஞ்சுனைகாண்முழைவாழரிகாள்
இந்தந்நிலவேனுடுமெடுத்தகைநா
லைந்துந்தலைபத்துமலைந்துலையச்
சிந்தும்படிகண்டுசிரித்திடுவீர். (அக)

வேறு.

இராவணன் சீதைவார்த்தையைப் பரிகசித்தல்.

என்றின்னபலவும்பன்னியிரியலுற்றரற்றுவாளைப்
பொன்றுன்னுபுணர்மென்கொங்கைப்பொலங்குழாய்போரிலென்னைக்

கொன்றுன்னைமீட்பர்கொல்லம்மானிடர்கொள்கவென்னா
வன்றிண்கையெறிந்துாக்கான்வாழ்க்கைநாள்வறிதுவீழ்வான். (௮௨)

சீதை இராவணனைநோக்கி நீ வல்லவனாயின் தேரைச் செலுத்தாதே என்றல்.

வாக்கினாலன்னான்சொல்லமாயையால்வஞ்சமானான்
றாக்கினாயாக்கியுன்னையாருயிருண்ணுங்கூற்றைப்
போக்கினாய்புகுந்துகொண்டுபோகின்றாய்பொருதுநின்னைக்
காக்குமாகாண்டியாயிற்கடவலுன்றேரையென்றாள். (௮௩)

மற்றும் சீதை இராவணனைநோக்கி நீ அச்சத்தாலேயே வஞ்சனைசெய்தாய் என்றல்.

மீட்டுமொன்றுரைசெய்வாணீவீரனேல்விரைவின்மற்றுன்
கூட்டராமரக்கர்தம்மைக்கொன்றுங்கைகொங்கைமூக்கும்
வாட்டினார்வனத்திலுள்ளார்மானிடரென்றவார்த்தை
கேட்டுமிம்மாயஞ்செய்ததச்சத்தின்கிளர்ச்சியன்றோ. (௮௪)

மனிதரோடு பொருதல் எனக்கு இழிவன்றோ! என்று இராவணன் கூறல்.

மொழிதருமளவினங்கைகேளிதுமூணில்யாக்கை
இழிதருமனிதரோடேயான்செருவேற்பவென்றால்
விழிதருநெற்றியான்றன்வெள்ளிவெற்பெடுத்ததோட்குப்
பழிதருமதனிற்சாலப்பயன்றரும்வஞ்சமென்றான். (௮௫)

சீதை இராவணனை நிந்தித்தல்.

பாவையுமதனைக்கேளாத்தங்குலப்பகைஞர்தம்பால்
போவதுகுற்றம்வானிற்பொருவதுநாணம்போலாம்
ஆவதுகற்பினாரைவஞ்சிக்குமாற்றலேயாம்
ஏவமென்பழிதானென்னேயிரக்கமிலரக்கர்க்கென்றாள். (௮௬)

அச்சமயத்தில் சடாயு வந்து எதிர்த்தல்.

என்னுமவ்வேலையின்கணெங்கடாபோவதென்னா
நின்னிலென்றிடித்தசொல்லனெருப்பிடைப்பரப்புங்கண்ணன்
மின்னெனவிளங்கும்வீரத்துண்டத்தன்மேருவென்னும்
பொன்னெடுங்குன்றம்வானின்வருவதேபோலுமெய்யான். (௮௭)

பாழிவன்கிரிகளெல்லாம்பறித்தெழுந்தொன்றோடொன்று
பூழியினுதிரவிண்ணிற்புடையுறக்கிளர்ந்துபொங்கி
ஆழியுமுலகுமொன்றாயழிதரமுழுதும்வீசும்
ஊழிவெங்காற்றிதென்னவிருசிறையூதைமோத. (௮௮)

வேறு.

சாகைவன்றலையொடுமாமுந்தாழமேல்
மேகமும்விண்ணின்மீச்செல்லுமிசை
மாகவெங்கலுழனும்வருகின்றனென
நாகமும்படமொளித்தொதுங்கினையமே. (௮௯)

யானையும்யாளியுமுதலயாவையும்
கானொடுமரத்தொடுநூறுகல்லினை
மேனிறைந்திருசிறையீச்சினேறலால்
வானமுங்கானமுமாறுகொள்ளவே. (௯0)

* உத்தமன்றேவியையுலகொடோங்குதேர்
வைத்தனையேகுவதெங்குவாணிரே
டித்தனைதிசையையுமறைப்பெனீண்டெனுப்
பத்திரச்சிறைகளைவிரிக்கும்பண்பினேன். (௯௧)

வந்தனனெருவையின்மன்னன்மாண்பிலான்
எந்திரத்தேர்செலவொழிக்குமெண்ணினேன்
சிந்துரக்கால்சிரஞ்செக்கர்சூடிய
கந்தரக்கைலையின்சார்க்குங்காட்சியான். (௯௨)

வேறு.

சடாயு சீதைக்கு அபயங்கூறல்.

ஆண்டுற்றவணங்கினையஞ்சலெனுத்
தீண்டுற்றிலனென்றுணர்சிந்தையினான்
மூண்டுற்றெழுவெங்கதமுற்றிலனெல்
மீண்டுற்றுரையாடலையேயினனால். (௯௩)

சடாயு இராவணனைநோக்கிக் கூறுங் கோபவார்த்தைகள்:

கெட்டாய்கிளையோடுநின்வாழ்வையெலாம்
சுட்டாயிதுவென்னதொடங்கினை நீ
பட்டாயெனவேகொடு † பத்தினியை
விட்டேகுதியால்விளிகின்றிலையால். (௯௪)

பேதாய்பிழைசெய்தனைபே ‡ ருலகின்
மாதாவனையாளைமனக்கொடுநீ
யாதாகநினைத்தனையெண்ணமிலாய்
ஆதாரநினக்கினியாருளரோ. (௯௫)

உய்யாமன்மலைந்துமராருயிரை
மெய்யாகவிராமன்விருந்திடவே

* உத்தமன்-புருஷோத்தமன்.
† பத்நீ-அக்கினிசாக்ஷியாய் விவாகஞ்செய்துகொள்ளப்பட்டமனைவி.
‡ உலகின்மாதா-லோகமாதா.

கையாரமுகந்துகொடந்தகனார்
ஐயாபுதிதுண்டதறிந்திலையோ. (௯௬)

கொடுவெங்கரிகொல்லியவர்ததன்மேல்
விடுமுண்டைகடாவவிரும்பினையே
அடுமென்பதுணர்ந்திலையாயினும்வன்
கடுவுண்டபிரின்னிலைகாணுதியோ. (௯௭)

எல்லாவுலகங்களுமீன்றானும்
அல்லாதவர்மூவருமத்தகனும்
புல்வாய்புலிகண்டதுபோல்வரலால்
வில்லாளனைவெல்லுமிடுக்குளதோ. (௯௮)

இம்மைக்குறமேவாதிறந்தழியும்
வெம்மைத்தொழிலிங்கிதுன்மேலிலையால்
அம்மைக்கருமாநரகத்துருமால்
எம்மைக்கிதமாகவிதெண்ணினையோ. (௯௯)

முத்தேவரின்மூலமுதற்பொருளாய்
அத்தேவரிம்பாணிடயாதலினும்
எத்தேவரொடெண்ணுவதெண்ணலலாப்
பித்தேறினையாதல்பிழைத்தனையால். (௧௦௦)

புரம்பற்றியபோர்விடையோனருளால்
வரம்பெற்றவுமற்றுளவிஞ்சைகளும்
உரம்பெற்றனவாவனவுண்மையிதேன்
சரம்பற்றியசாபம்விடுந்தனையே. (௧௦௧)

வாலுள்பவன்மைந்தன்வளைத்தவிலான்
தானேவரினின்றுதடுப்பரிதால்
நானேயவனுய்ப்பெணிநன்னுதலைப்
போநீகடிதென்றுபுகன்றிடலும். (௧௦௨)

இராவணன் மறுத்துக்கூறும் வார்த்தைகள்.

கேட்டானிருதர்க்கிறைகேழ்கிளர்தன்
வாட்டாரைநெருப்புகவாய்மடியா
ஓட்டாயினிநீயுரைசெய்குநரைக்
காட்டாய்கடிதென்றுகனன்றுரையா. (௧௦௩)

வரும்புண்டரம்வாளியின்மார்புருவிப்
பெரும்புண்டிறவாவகைபேருதிநீ
இரும்புண்டநீர்மீள்கினுமென்னுழையிற்
கரும்புண்டசொன்மீள்கிலள்காணுதியால். (௧௦௪)

## வேறு.

அதுகேட்டுச் சீதை மிகவும்வருந்த, சடாயு அவட்கு உறுதிகூறல்.

ன்னும்மளவிற்பயமுன்னினிரட்டியெய்த
ன்னம்மயர்கின்றதுநோக்கியரக்கன்யாக்கை
ன்னம்முறுமிப்பொழுதேசிலையேந்திநங்கள்
ன்னன்மகன்வந்திலனென்றுவருந்தலன்னே. (௪0௫)

த்துக்கனபோன்முகத்தாலிமுலைக்கண்வீழ்த்
த்துற்றயரேறலைதாலபலத்தினேனும்
காத்தொப்பனகொண்டிவன்கொண்டனனென்றவாசை
த்திற்கும்ன்றே * பலியீவதுபார்த்தியென்றான். (௪0௬)

சடாயுவுக்கும் இராவணனுக்கும் நடந்தபோரைக் கூறுதல்.

டிப்பொத்தமுழக்கினிருஞ்சிறைவீசியெற்றி
முடிப்பத்திகளைப்படியிட்டுமுழங்குதுண்டம்
டிப்பக்கடிதுற்றவன்காண்டருந்தண்டமீணக்
கொடிப்பற்றியொடித்துயர்வானவராசிகொண்டான். (௪0௭)

அக்காலையரக்கரைக்குருக்கன்னகண்ணன்
க்காலமுமின்னதொரீடழிவுற்றிலாதான்
நக்கானுலகேழுநடுங்கிடநாகமன்ன
கைக்கார்முகத்தோடுகைடைப்புருவங்குனித்தான். (௪0௮)

சண்டப்பிறைவாளெயிற்றான்சரதாரைமாரி
மண்டச்சிறகாலடித்தான்சிலவள்ளுகிரால்
கண்டப்படுத்தான்சிலகாலனுங்காணவுட்கும்
துண்டப்படையாற்சிலதுண்டதுண்டங்கள்கண்டான். (௪0௯)

மீட்டும்மனுகாநெடுவெங்கணைமந்தநாகம்
வாட்டுங்கலுழனெனவன்றலைபத்தின்மீதும்
நீட்டுந்நெடுமூக்கெனுநேமியன்சேமவிற்கால்
கோட்டும்மளவின்மணிக்குண்டலங்கொண்டெழுந்தான். (௪௪0)

எழுந்தான்றடமார்பினிலேழிறைடேழுவாளி
அழுந்தாதுகழன்றிடப்பெய்தெடுத்தார்த்தரக்கன்
பொழிந்தான்புகர்வாளிகண்மீளவும்போர்ச்சடாயு
விழுந்தானெனவஞ்சினர்விண்ணவர்வெய்துயிர்த்தார். (௪௪௪)

புண்ணிற்புதுநீர்பொலியப்பொழிபுள்ளின்வேந்தன்
மண்ணிற்கரனேமுதலோருதிரத்தின்வாரி

---

* பலி-தேவர்க்கு இடும் உணவு.

கண்ணிற்கடலென்று நுகர்ந்தது கான்றுமீள
விண்ணிற்பொலிகின்றதொர்வெண்ணிறமேகமென்ன. (ககஉ)

ஒத்தானுடனேயுயிர்த்தானுருத்தானவன்றேள்
பத்தோடுபத்தினொடும்பத்தியிற்றத்திழுக்கால்
கொத்தாககத்தாற்குடையாச்சிறையாற்புடையா
முத்தாரமார்பிற்க * வசத்தையுமூட்டறுத்தான். (ககங)

அறுத்தானையரக்கனுமைம்பதொடைம்பதம்பு
செறித்தான்றடமார்பிற்செறித்தலுந்தேவரஞ்சி
வெறித்தார்வெறியாமுனிராவணன்வில்லைப்பல்லால்
பறித்தான்பறவைக்கிறைவிண்ணவர்பண்ணையார்ப்ப. (ககச)

எல்லிட்டவெள்ளிக்கயிலைப்பொருப்பீசனோடு
மல்லிட்டதோளாலெடுத்தான்சிலைவாயின்வாங்கி
வில்லிட்டுயர்ந்தநெடுமேகமெனப்பொலிந்தான்
சொல்லிட்டவன்றோள்வலியாருளர்சொல்லவல்லார். (கக௫)

நீளாசிறத்தாயிரங்கண்ணவன்விண்ணினோட
வாளாலொறுத்தான்சிலைவாயிடைநின்றும்வாங்கித்
தாளாலிறுத்தான்றறல்வண்ணன்றடக்கைவில்லைத்
தோளாலிறுத்தான்றனைத்தாதைதனன்பிற்றோழன். (கக௬)

ஞாலம்படிப்பான்றனதாற்றலுக்கேற்றநல்வில்
மூலம்மொடிப்புண்டதுகண்டுமுனிந்தநெஞ்சன்
ஆலம்மிடற்றான்புரமட்டதொரம்புபோலும்
சூலம்மெடுத்தானெறிந்தான்மறந்தோற்றிலாதான். (ககஎ)

ஆற்றானிவனென்றணராதெனதாற்றல்காணென்
றேற்றானொருவைக்கிறைமுத்தலையெஃகமார்பின்
மேற்றானிதுசெய்பவர்யாரெனவிண்ணுளோர்கள்
தோற்றாதுநின்றார்தமதோள்புடைகொட்டியார்த்தார். (கக௮)

பொன்னேக்கியர்தம்புலனேக்கிய † புன்கணோரும்
இன்னேக்கியரில்வழியெய்தியால்லிருந்தும்
தன்னேக்கியநெஞ்சுடையோகியர்தம்மைச்சார்ந்த
மென்னேக்கியர்நோக்கமுமாமெனமீண்டதவ்வேல். (கக௯)

வேகம்முடன்வேலிழந்தான்படைவேறெடாமுன்
மாகம்மறையும்படிநீண்டவயங்குமான்றேர்ப்

* கவசத்தையு மூட்டு அறுத்தான்-கவசத்தின் பூட்டுகளைத் துணித்தான்.

† புன்கண்-வாடிய கண். பொருளின்மை துன்பத்துள் துன்பமாதலால் வறியவர் புன்கணோர் எனப்பட்டனர்.

ாகன் றலையைப்பறித்துப்படர்கற்பினாள்பால்
மாகம்படைத்தானுளைவெய்தமுகத்தெறிந்தான். (கஉ0)

றிந்தானதுநோக்கியிராவணனெஞ்சினற்றல்
றிந்தான்முனிந்தாண்டவெதாராடகத்தண்டுவாங்கிப்
பாறிந்தாங்கெரியின்சிகைபொங்கியெழப்புடைத்தான்
றிந்தானொருவைக்கிறைமால்வரைபோலமண்மேல். (கஉக)

ண்மேல்விழுந்தான்விழுவோடும்வயங்குமான்றேர்க்
ண்மேலொளியுந்தொடராவகைதான்கடாவி
ிண்மேலெழுந்தானெழுமெல்லியலாளும்வெந்தீப்
ண்மேனுழையத்துடிக்கின்றனள்போற்புரண்டாள். (கஉஉ)

கொழுந்தேயனையாள்குழைந்தேங்கியகொள்கைகண்டான்
ழுந்தேலவலத்திடையஞ்சலையன்னையென்றா
ழுந்தானுயிர்த்தானடவெங்கிளிப்போவதென்றா
ழுந்தானவன்றேர்திசைவிண்ணவர்பண்ணையார்ப்ப. (கஉ௩)

ாய்ந்தானவன்பன்மணித்தண்டுபறித்தெறிந்தான்
ாய்ந்தார்கதித்தேர்ப்பரியெட்டினொடெட்டுமெஞ்சித்
ீந்தாசறவீசியத்திண்டிறற்றண்டவாளால்
ாய்ந்தான்கவார்ந்தானுயிர்காலனுங்கைவிதிர்த்தான். (கஉ௪)

திண்டோரழித்தாங்கவன்றிண்புறஞ்சேர்ந்ததூணி
விண்டான்மறைப்பச்செறிகின்றனவில்லிலாமை
ண்டாரமர்தான்வழங்காமையின்வச்சைமாக்கள்
ண்டாரமொக்கின்றனவள்ளுகிராற்பறித்தான். (கஉ௫)

* மாச்சிச்சிரம்பாய்ந்தவன்மார்பினுந்தோள்கண்மேலும்
ஓச்சிச்சிறகாற்புடைத்தான்கடித்தானுலையா
மூச்சிற்றவிராவணனும்முடிசாய்ந்திருந்தான்
போச்சித்தனைபோலுநின்றேற்றலெனப்புகன்றான். (கஉ௬)

அவ்வேலையினேமுனிந்தான்முனிந்தாற்றலன்ன
வெவ்வேலரக்கன்விடலாம்படைவேறுகாணான்
இவ்வேலையினேயிவனின்னுயிருண்பெனென்றுச்
செவ்வேபிழையாநெடுவாளுறைநீர்த்தெறிந்தான். (கஉஎ)

வலியின்றலைதோற்றிலன்மாற்றருந்தெய்வவாளால்
நலியுந்தலையென்றதுவன்றியும்வாழ்க்கைநாளும்

---

* மாச்சிச்சிரம்-மிக்கவிநோதம், மகாசித்ரம், பெரிய சிச்சிலிக்குருவி என்று பொருள்கூறுதலும் ஈண்டு பொருந்தும். பெருங்கழுகு என்பதும் பொருந்தும். சிச்சிரமென்பது கழுகென்னும் பொருளதாதற்கு மேற்கோள் கிடைத்திலது.

மெலியுங்கடைசென்றுளதாகலின்விண்ணின்வேந்தன்
குலிசம்மெறியச்சிறையற்றதொர்குன்றின்வீழ்ந்தான். (௧௨௮)

சடாயு விழுந்ததைக் கண்ட பிராட்டி பட்ட துயரம் கூறல்.

விரிந்தார்சிறைகீழுறவீழ்ந்தனன்மண்ணின்விண்ணோர்
இரிந்தாரிழந்தாடுணையென்னமுனிக்கணங்கள்
பரிந்தார்படர் * விண்டுவிணாட்டவர்பைம்பொன்மாரி
சொரிந்தாரதுநோக்கியசீதைதுளக்கமுற்றாள். (௧௨௯)

வெள்கும்மரக்கன்னெனவிண்புகவார்த்துயிக்கான்
தொள்கின்றலையெய்திமானெனச்சோர்ந்துளைவாள்
உள்கும்முயிர்க்கும்முயங்கும்மொருசார்புகாணாள்
கொள்கொம்பொடியக்கொடிவீழ்ந்ததுபோற்குலைந்தாள். (௧௩௦)

வேறு.

வன்றுணையுளனெனவந்தமன்னனும்
பொன்றினனெனக்கினிப்புகலெனென்கின்றாள்
இன்றுணைபிரிந்திரிந்தின்னலெய்திய
அன்றிலம்பெடையெனவரற்றினாளரோ. (௧௩௧)

பின்னவனுரையினைமறுத்துப்பேதையேன்
அன்னவன்றனைக்கடிதகற்றினேன்பொரு
மன்னவன்சிறையறமயங்கினேன்விதி
இன்னமுமெவ்வினையியற்றுமோவெனா. (௧௩௨)

அல்லலுற்றேனைவந்தஞ்சலென்றவிந்
நல்லவன்றோற்பதேதாகன்வெல்வதே
வெல்வதும்பாவமோவேதம்பொய்க்குமோ
இல்லையோவறமெனவிரங்கியேங்கினாள். (௧௩௩)

† நாணிலேனுரைகொடுநடந்தநம்பிமீர்
நீணிலையறநெறிநின்றுளோர்க்கெலாம்
ஆணியையுந்தையர்க்கமைந்தவன்பனைக்
காணியவம்மெனக்கலங்கிவிம்மினாள். (௧௩௪

கற்பழியாமையென்கடமையாயினும்
பொற்பழியாவலம்பொருந்தும்போர்வலான்
விற்பழியுண்டதுவினையினேன்வந்த
இற்பழியுண்டதென்றிரங்கியேங்கினாள். (௧௩௫)

---

* விண்டுவிணாட்டவர்-நித்தியசூரிகள்.

† நாணாவது-செய்யத்தகாதவற்றில் உள்ளமொடுங்குதல்; இலச்சை. தகாதகாரியத்தில் முயலும்படி இராமனைத் தான் தூண்டியதுமன்றி இலக்குமணனையும் தன்னைப்பிரிந்து செல்லும்படி தகுதியில்லாது ஏவியதனால் 'நாணிலேன்' என்று தன்னைத்தானே பழித்துக்கொண்டாள்.

எல்லியல்விசும்பிடையிருந்தநேமியாய்
சொல்லியலாய்நெறிதொடர்ந்ததோழமை
நல்லியலருங்கடன்கழித்தநம்பியைப்
புல்லுதியோவெனப்பொருமிப்பொங்கினாள். (கௌகூ)

பொழுது இராவணன் சீதையுடனே விரைந்து அப்பாற்செல்லுதல்.

எங்குவாடன்மையுமிறகிழந்தவன்
ஆங்குறுதன்மையுமரக்கனோக்கினான்
வாங்கினன்றேரிடைவைத்தமண்ணொடும்
வீங்குதோண்மீக்கொடுவிண்ணினேகினான். (கௌஎ)

அப்பொழுது சீதை மூர்ச்சித்துத் தரையிற் கிடத்தல்.

விண்ணிடைவெய்யவனேகும்வேகத்தால்
கண்ணொடுமனமவைசுழன்றசுற்பினாள்
உண்ணிறையுணர்வழிந்தொன்றுமோர்ந்திலள்
மண்ணிடைத்தன்னையுமறந்துசாம்பினாள். (கௌஅ)

இராவணன் அப்பாற் செல்லுதலைக் கண்ட சடாயு இரங்கல்.

ஏகினனரக்கனுமெருவைவேந்தனும்
மோகவெந்துயர்சிறிதாறிமூர்ச்சியா
மாகமேனோக்கினன்வஞ்சன்வல்லையில்
போகுதல்கண்டகம்புலர்ந்துசொல்லுவான். (கௌகூ)

வந்திலர்மைந்தர்நம்மருகிக்கெய்திய
வெந்துயர்துடைத்தனனொன்றுமெய்ப்புகழ்
தந்திலர்விதியினார்தருமவேலியைச்
சிந்தினர்மேலினிச்செயலென்னாங்கொலோ. (கசO)

வெற்றியருளனினின்மின்னினுண்ணிடைப்
பொற்றொடிக்கிந்நிலைபுகுதற்பாலதோ
உற்றதையின்னதென்றுணாகிற்றிலேன்
சிற்றவைவஞ்சனைமுடியச்செய்ததோ. (கசக)

பஞ்சணைபாம்பணையாகப்பள்ளிசேர்
அஞ்சனவண்ணனேயிராமனாதலால்
வெஞ்சினவரக்கனல்வெல்லற்பாலனோ
வஞ்சனையிழைத்தனன்கள்ளமாயையால். (கசஉ)

வேரறவரக்கரைவென்றுவெம்பழி
தீருமென்சிறுவனுந்தீண்டவஞ்சுமால்
ஆரியன்றேவியையரக்கனன்மலர்ப்
பேருலகளித்தவன்பிழைப்பில்சாபத்தால். (கசங)

பருஞ்சிறையின்னனபன்னியுன்னுவான்
அருஞ்சிறையுற்றனளாமெனுமனம்
பொருஞ்சிறையிற்றதேற்பூவைகற்பெனும்
இருஞ்சிறையிறுதெனவிடருநீங்கினான். (கசச)

சடாயு சோர்ந்து துயில்கொள்ளல்.

அஞ்சிறைகுருதியாலழிந்துசோர்வுற
வஞ்சியைமீட்கிலேனென்னுமானமும்
செஞ்செலேமக்கள்பாற்சென்றகாதலும்
நெஞ்சுறத்துயின்றன * னுணர்வுநீங்கலான். (கசரு)

இராவணன் சீதையைக்கொண்டுபோய்

அசோகவனத்திற் சிறைவைத்தல்.

வஞ்சியையரக்கனும்வல்லைகொண்டுபோய்ச்
செஞ்செலேதிருவுருத்தீண்டலஞ்சுவான்
நஞ்சியலரக்கியர்நடுவணுயிடைச்
சிஞ்சுபவனத்திடைச்சிறைவைத்தானரோ. (கசசு)

இலக்குமணன் செய்தியைக்கூறத் தொடங்கல்.

இந்நிலையினையவன்செயலியம்பினும்
பொன்னிலைமானின்பின்றொடர்ந்துபோகிய
மன்னிலையறிகெனமங்கையேவிய
பின்னிளையவனிலைபேசுவாமரோ. (கசஎ)

சீதையின் தனிமைக்காக இலக்குமணன் சிந்தித்தல்.

ஒருமகடனிமையையுன்னியுள்ளுறும்
பருவரன்மிகிடப்பதைக்குநெஞ்சினன்
பெருமகன்றனைத்தனிபிரிந்துபேதுறும்
திருநகர்நீருமப்பரதன்செய்கையான். (கசஅ)

இலக்குமணன் இராமனைக் காணுதல்.

தெண்டிரைக்கலிமெனவிரைவிற்செல்கின்றான்
புண்டரீகத்தடங்காடுபூத்தொரு
கொண்டல்வந்திழிந்தெனக்கோலத்தான்றனைக
கண்டனன்மனமெனக்களிக்குங்கண்ணினான். (கசகூ)

இராமன் இலக்குமணனைக் காணுதல்.

தண்ணெனுமல்வுமைதொடரத்தோகையும்
பெண்ணெனும்பேதைமையயக்கப்பேதினால்

---

* உணர் நீங்கலான் என்றது, எப்பொழுதும் நிலைகுலையாத நல்லறிவுடையானென்ற இயல்பை விளக்குவதோடு இப்பொழுது உயிரொழிந்திலனென்ற செய்தியையும் விளக்கும்.

உண்ணிறைசோருமென்றாசலாமெக்
கண்ணனுமிளவலைக்கண்ணுற்றனனரோ. (கசo)

வேறு.

இலக்குமணன் வருதலின் காரணத்தை இராமன்
உள்ளபடி ஆலோசித்தல்.

புன்சொற்கடந்தபகுவாயரக்கனுரைபொய்யெனாதுபுகல்வாள்
வன்சொற்கடந்துமடமங்கையேவநிலைதேர்வந்தமருளோ
தன்சொற்கடந்துதளர்கின்றநெஞ்சமுடையேன்மருங்குதனியே
என்சொற்கடந்துமனமுட்தளர்ந்தவிளவீரன்வந்தவியல்பே. (கசக)

இராமன் இலக்குமணனைத் தழுவி வந்தகாரணத்தை வினவல்.

என்றுன்னியென்னைவிதியார்முடிப்பதெனவெண்ணிநின்றவிறையைப்
பொன்றுன்னுவிற்கைவயவீரன்வந்துபுனைதாள்வணங்குபொழுதில்
பின்றுன்னுநாலின்மணிமார்பழுந்தவிறைவோடுபுல்லியுருகா [ன்.
நின்றுன்னிவந்தநிலையென்கொலென்று *நெடியோனிளம்பனொடிவா

இலக்குமணன் தான்வந்த காரணங் கூறல்.

இல்லாநிலத்தினிசையாதவெஞ்சொலொடுவந்திமையவமுறையால்
வல்லாயரக்கனுரையாகுமென்னமதியாண்மறுக்கமுறுவாள்
நில்லாதுமற்றிதறிபோதியென்னநெடியோய்புயத்தின்வலியென்
சொல்லான்மனத்தினடையாள் சினத்தின்முனிவோடுநின்றுதுவள்வாள்

ஏகாதுநிற்றியெனின்யானெருப்பினிடைவீழ்வெனென்றுமுடுகா
மாகானகத்தினிடையோடலோடுமனமஞ்சிவஞ்சவினையேன்
போகாதிருக்கினிறவாதிருக்கைபுணராதெனக்கொடுணரா
ஆகாதிறக்கையறனன்றெனக்கொடிவண்வந்ததென்னவமலன். (கசச)

நடந்தசெயலைக்குறித்து இராமன் சிந்தித்தல்.

சாவாதிருத்தலிலளானதுற்றதுமேதாதடுக்கமுடியா
ஆவாவலக்கணுறுவாளுரைத்தபொருளோவகத்தினடையா
காவாநிலத்தின்கருமேதமற்றதொழியாதுகைக்கொடகலப்
போவார்பிரிக்கமுயல்வார்புணர்த்தபொருளாமிதென்றதெருளா. (கசரு)

இராமன் இலக்குமணனைநோக்கிச் சிலகூறல்.

வந்தாய்திறத்தினுளதன்றுகுற்றமடவாண்மறுக்கமுறுவாள்
சிந்தாகுலத்தொடுரைசெய்தசெய்கையதுதீருமென்றுதெளிவாய்
முந்தேதடுக்கவொழியாதெடுத்தவினையேன்முடித்தமுடிவால்
அந்தோகெடுத்ததெனவுன்னியுன்னியழியாதவுள்ளமழிவான். (கசசு)

* நெடியோன்-மூத்தவன்; இனி, திருக்கலியாண குணகணங்களாற் பெரியவனும், திரிவிக்கிரமாவதாரத்தில் நீண்டு வளர்ந்தவனும் நெடிய விசுவரூபமுடையவனுமாம்.

இனித் தாமதஞ்செய்யலாகா தென்று இராமன் விரைந்து
பர்ணசாலைக்கு மீளுதல்.

பாணிக்கன்றுபயருவமென்னைபயில்பூவையன்னகுயிலைக்
காணிற்கடந்ததுயர்சீருமன்றியயலில்லையென்றுகடுகிச்
சேணுற்றகன்றநெறியூடுசென்றுசிலைவாளியன்னவிசைபோய்
ஆணிப்பசும்பொனனையாளிருந்தவிர்சோலைவல்லையணுகா. (கருஎ)

வேறு.

அங்குச்சீதையைக் காணமல் இராமன் வருந்தல்.

ஓடிவந்தனன்சாலையின்சோலையினுதவும்
தோடிவர்ந்தபூஞ்சுரிகுழலாடனைக்காணுன்
கூடுதன்னுடையதுபிரிந்தாருயிர்குறியா
நேடிவந்ததுகண்டிலதாமெனநின்றுன். (கருஅ)

கைத்தசிந்தையன்கனங்குழையணங்கினைக்காணுன்
துய்த்துவாழ்தரவேறொருபொருளிலானுறந்த
வைத்தமாநிதிமண்ணொடுமறைந்தனவாங்கிப்
பொய்த்துளோர்கொளத்திகைத்துநின்றானையும்போன்றுன். (கருகூ)

அப்பொழுது உலகத்திலுண்டான குழப்பத்தைக் கூறல்.

மண்சுழன்றதுமால்வரைசுழன்றதுமதியோர்
எண்சுழன்றதுசுழன்றதவ்வெறிகடலேழும்
விண்சுழன்றதுவேதமுஞ்சுழன்றதுவிரிஞ்சன்
கண்சுழன்றதுசுழன்றதுகதிரொடுமதியும். (கசு0)

அறத்தைச்சீறுங்கொலருளையேசீறுங்கொலமரர்
திறத்தைச்சீறுங்கொன்முனிவரைச்சீறுங்கொறீயோர்
மறத்தைச்சீறுங்கொலென்கொலோமுடிவென்றுமறையின்
நிறத்தைச்சீறுங்கொனெடுந்தகையோனெனநடுங்கா. (கசுக)

நீலமேனிநன்னெடியவன்மனைநிலைதிரிய
மூலகாரணத்தவனெடுமுடிவுறமுற்றப்
காலமாமெனக்கடையிடுகணிக்கரும்பொருள்கள்
மேலகீழுறக்கீழனமேலுறும்வேலை. (கசுஉ)

சீதையைக் கொண்டுபோனவனைத் தொடர்வோம் என்று
இலக்குமணன் கூறல்.

தேரினாழியுந்தெரிந்தனநீண்டுதலஞ்சிப்
பாரினோடுகொண்டகழ்ந்ததும்பார்த்தனம்பயனின்
றேருந்தன்மையிதென்னென்பதுரனிலாதவர்போல்
தூரம்போதன்முன்றொடர்துமென்றிளையவன்றொழுதும். (கசுங)

அதற்கு இராமன் உடன்பட, இருவரும் தேர்ச்சுவட்டின் வழியே செல்லல்.

ஆமதேயினியமைவதென் றமலனுமெய்யில்
தாமவார்கணைப்புட்டிலு முதலியதாங்கி
வாமமால்வரைமரனிவைமடிதரவயவர்
பூமிமேலவன்றேர்சென்றநெடுநெறிபோனார். (௧௧௪)

தரையில் தேர்ச்சுவடு மறைந்தமை கண்டு இராமன் திகைத்தல்.

மண்ணின்மேலவன்றேர்சென்றசுவடெலாமாய்ந்து
விண்ணினோங்கியதொருநிலைமெய்யுறவெந்த
புண்ணினூடுறுவேலெனமனமிகப்புழுங்கி
எண்ணினானினிச்செய்வதென்னிளவலேயென்றான். (௧௧௫)

தேர்சென்ற தென்திசையை நோக்கிச் செல்வோம் என்று இலக்குமணன் கூறல்.

தெற்குநோக்கியதேனும்பொருடெரிந்துத்திண்டேர்
மற்குநோக்கியதிரள்புயத்தண்ணலேவானம்
விற்குநோக்கியபகழியினெடிதன்றுவிம்மி
நிற்குநோக்கிதென்பயத்ததென்றிளையவனேர்ந்தான். (௧௧௬)

அங்ஙனம் தெற்கேசெல்லும் வழியில் வீணைக்கொடி விழுந்து கிடக்கக் காணுதல்.

ஆகுமன்னதேகருமமென்றத்திசைநோக்கி
ஏகியோசனையிரண்டுசென்றாரிடையெதிர்ந்தார்
மாகமால்வரைகால்பொரமறிந்ததுமானப்
பாகவீணையின்கொடியொன்றுகிடந்ததுபார்மேல். (௧௧௭)

கண்டு சங்கிக்கையில் இராமன் ஒன்று கூறலுறல்.

கண்டுகண்டகரோடுமக்காரிகைபொருட்டால்
அண்டராதியர்க்கரமர்விளைந்ததென்றயிர்த்தார்
துண்டவானினிற்சுடர்க்கொடிதுணிந்ததென்றுணராப்
புண்டரீகக்கண்புனல்வரப்புரவலன்புகல்வான். (௧௧௮)

சடாயு போர்செய்திருப்பானென்று இராமன் கூறல்.

நோக்கினாலையநொய்திவணெய்தியதுந்தை
மூக்கினாலிதுமுறிந்தமைமுடிந்ததான்மொய்ம்பின்
தாக்கினானைவெடுத்ததுதெரிகிலந்தமியன்
யாக்கைதேம்பிடுமெண்ணரும்பருவங்களிறந்தான். (௧௧௯)

ஆயின் விரைவிற்செல்வோம் என்று இலக்குமணன் கூறல்.

நன்றுசாலவுநடுக்கருமிடுக்கினனும்
சென்றுகூடலாம்பொழுதெலாந்தடுப்பதுதிடனால்

வென்றுமீட்கினுமீட்குமால்வேறுறவெண்ணி
நின்றுதாழ்ந்தொருபயனிலையென்றனுநெடியோன். (௧௭0)

இராமலக்குமணர் அப்பாற் செல்லுகையில்
வில்முறிந்து கிடத்தலைக் காணுதல்.

தொடர்வதேசலமாமெனப்படிசைச்சுற்றிப்
படருங்காலெனக்கறங்கெனச்செல்லுவார்பார்த்தார்
மிடல்கொள்வெஞ்சிலைவிண்ணிடுவின்முறிந்தென்னக்
கடலின்மாநெயர்திரையெனக்கிடந்ததுகண்டார். (௧௭௧)

இராமன் அவ்வில்லின் வலிமையையும், அதைத்
துணித்தவனது ஆற்றலையும் வியந்துகூறல்.

சிலைகிடந்ததாலிலக்குவவேவர்க்கடைத்த
மலைகிடந்தெனவலியதேவடிவிறன்மதியின்
* கலைகிடந்தெனக்காட்சியனிதுகடித்தொடித்தான்
நிலைகிடந்தவாறோக்கெனநோக்கினனின்றான். (௧௭௨)

அவர்கள் பின்னுஞ் செல்லுகையில் சூலத்தையும்,
அம்பறாத் தூணிகளையும் காணுதல்.

நின்றபின்னருநெடுநெறிகடந்துறநிமிரச
சென்றுநோக்கினர்திரிசிகைத்திணிநெடுஞ்சூலம்
ஒன்றுபல்கணைமழையுறுபுட்டிலோரிரண்டு
குன்றுபோலவட்கிடந்தனகுறுகினருற்றார். (௧௭௩)

அவர்கள் மற்றுஞ்செல்லுகையில் கவசங்கிடக்கக் காணுதல்.

மறித்துஞ்சென்றனர்வானிடையயங்குறவுங்கி
எறிக்குஞ்சோதிகள்யாவையுந்தொக்கனவெனலாம்
நெறிக்கொள்கானகமறைதரநிருதர்கோனெஞ்சின்
பறித்துவீசியகவசமுங்கிடந்ததுபார்த்தார். (௧௭௪)

குதிரைகளும் சாரதியும் இரத்தவெள்ளமும் கிடக்கக்கண்டு
சடாயு விழுந்துகிடக்குமிடத்துக்கு அருகில் வருதல்.

கான்கிடந்ததுமறைதரக்கால்வயக்கலிமாத்
தான்கிடந்துழிசாரதிகிடந்துழிசார்ந்தார்
ஊன்கிடந்தொரிருதிரமுங்கிடந்தளதுலகின்
வான்கிடந்ததுபோல்பவன்கிடந்துழிவந்தார். (௧௭௫)

அவர்கள் குண்டலங்களையும் மற்றும்பல அணிகளையுங் காணுதல்.

கண்டலங்குதங்கைத்தலம்விதிர்த்தனர்கவிஞர்
விண்டலந்துறந்திறுதியின்விரிகதிர்வெய்யோன்

* கலை-சந்திரன், பங்கு.

மண்டலம்பலமண்ணிடைக்கிடந்தனமணியின்
குண்டலம்பல * குலமணிப்பூண்களின்குவியல். (கசுசு)

இராமன் தம்பியைநோக்கி சடாயுவுடன் பலர் பொருதனர் போலும் என்றல்.

தோளணிக்குலம்பலவுளகுண்டலத்தொகுதி
வாளிமைப்பனபலவுளமணிமுடிபலவால்
† நாளனைத்தையுங்கடந்தனன்றமியனந்தாதை
யாளிபோல்பவர்பலருளர்பொருதனரிளையோய். (கஎஎ)

அதற்கு இலக்குமணன் பொருதவன் இராவணன்போலும் என்றல்.

திருவினாயகனுரைசெய ‡ சுமித்திரைசிங்கம்
தருவினீளியதோள்பலதலைபலவென்றால்
பொருதுதாதையையித்தனைநெறிக்கொடுபோனான்
ஒருவனேயவனிராவணனெனவுரைத்தான். (கஎஅ)

இராமன் சடாயு விழுந்துகிடத்தலைக் காணுதல்.

மடலுடைட்டியதாரினையோன்றனைமதியா
மிடலுடைட்டங்கையுகநோக்கினன்விறைவான்
உடலுடைட்டியகுருதியம்பரவையினும்பர்க்
கடலுடைட்டியவரையெனத்தாதையைக்கண்டான். (கஎக)

இராமன் சடாயுவின்மேல் விழுந்து புலம்பல்.

துள்ளியோங்குசெந்தாமரைநயனங்கள்சொரியத்
தள்ளியோங்கியவமலன்றன்றனியுயிர்த்தந்தை
வள்ளியோன்றிருமேனியிற்றழுவினவண்ணன்
வெள்ளியோங்கலிலஞ்சனமலையெனவீழ்ந்தான். (கஅ0)

இராமன் மூர்ச்சித்துத் தெளிந்து புலம்பலுறுதல்.

உயிர்த்திலன்னொருநாழிகையுணர்விலன்கொல்லென்
றயிர்த்ததம்பிபுக்கங்கையினெடுத்தனனருவிப்
புயற்கலந்தநீர்தெளித்தலும்புண்டரீகக்கண்
பெயர்த்துப்பைப்பயவயர்வுதீர்ந்தினையனபேசும். (கஅக)

வேறு.

சடாயுவைக்குறித்து இராமன் புலம்பல்.

தந்தாதையரைத்தனயர்கொலைநேர்ந்தார்
முந்தாரேயுள்ளார்முடிந்தான்முனையொருவன்

---

* குலமணி-உயர்ந்தசாதியிரத்தினம்.

† நாளனைத்தையுங் கடந்தனன்என்றது-மிகமுதிர்ந்த மூப்புடையவ னென்றவாறு.

‡ சுமித்திரை-(கணவனுக்குச் சமயோசிதமான அறிவு கூறி உதவுவதில்) நல்லதோழன் போன்றவளென்று பொருள்; தசரதன்மனைவி.

எந்தாயோவெற்காகநீயுமிறந்தனையோ
அந்தோவினையேனருங்கூற்றமானேனே. (௧௮௨)

பின்னுறவதோராதேபேதுறுவேன்பெண்பாலாள்
தன்னுறுவதீர்ப்பான்றனியுறுவதோராதே
உன்னுறவுநீதீர்த்தாயோருறவுமில்லாதேன்
என்னுறுவான்வேண்டியிடருறுவேனென்றாயே. (௧௮௩)

மாண்டேனேயன்றேமறையோர்குறைமுடிப்பான்
பூண்டேன்விரதமதனுலுயிர்பொறுப்பேன்
நீண்டேன்மரம்போலநின்றொழிந்தபுன்றொழிலேன்
வேண்டேனிம்மாயப்புன்பிறவிவேண்டேனே. (௧௮௪)

என்றாம்பற்றுண்ணவேன்றாயைச்சான்றோயைக்
கொன்றானுநின்றான்கொலையுண்டுநீகிடந்தாய்
வன்றாட்சிலையேந்திவாளிக்கடல்சுமந்து
நின்றேனுநின்றேனெடுமரம்போனின்றேனே. (௧௮௫)

சொல்லுடையாரென்போலினியுளரோதொல்வினையேன்
* இல்லுடையாள்காணவிறகுடையாயெண்ணிலாப்
பல்லுடையாயுன்னைப்படையுடையான்கொன்றகல
வில்லுடையேனின்றேன்விறலுடையேனல்லேனே. (௧௮௬)

இங்ஙனம் புலம்புகையில் சடாயு சிறிது மூர்ச்சைதெளிதல்.

அன்றுபலபலவும்பன்னியழுமயங்கும்
தன்னேரிலாதானுந்தம்பியுமத்தன்மையனாய்
உன்றவுணர்வுசிறிதுண்முளைப்பப்புள்ளரசும்
இன்றுயிர்ப்பானிருவரையுநோக்கினான். (௧௮௭)

சடாயு இராமலக்குமணரைக் கண்டதனால் மகிழ்தல்.

உற்றதுணராதுயிருலையவெய்துயிர்ப்பான்
கொற்றவனைக்கண்டான்றனுள்ளங்குளிர்ப்புற்றான்
இற்றவிருசிறகுமின்னுயிருமேழுலகும்
பெற்றனனேயொத்தான்பெயர்த்தேன்பழியென்றான். (௧௮௮)

சடாயு அவர்களை அருகில்அழைத்து உச்சிமோந்தல்.

பாக்கியத்தாலின்றென்பயனில்பழியாக்கை
போக்குகின்றேன்கண்ணுற்றேன்புண்ணியரேவம்மினென்று
தாக்கியரக்கன்மகுடத்தலைதுமித்த
மூக்கினாலுச்சிமுறைமுறையேமோக்கின்றான். (௧௮௯)

---

* இல் உடையாள்-வீட்டுக்கு உரிமையுடையவள்; இல்லறவாழ்க்கைத்துணைவி.

சடாயு இரங்கிக்கூறும் வார்த்தை.

வஞ்சனையால்வந்தவரவென்பதென்னுடைய
நெஞ்சகமேமுன்னேநினைவித்ததானாலும்
அஞ்சொன்மயிலையருந்ததியையீங்கினிரோ
எஞ்சலிலாவாற்றலிருவீருமென்றுரைத்தான். (கக௦)

வேறு.

அப்பொழுது இலக்குமணன், நடந்தசெய்தியைத் தாம் அறிந்தவரையில் கூறுதல்.

என்றவனியம்பலுமிளையகோமகன்
ஒன்றுமாண்டுறுபொருளொழிவுறாவகை
வன்றிறன்மாயமான்வந்ததாதியா
நின்றதுநிகழ்ந்ததுநிரப்பினனரோ. (ககக)

சடாயு அவர்கட்குத் தேறுதல்வார்த்தை கூறத்தொடங்கல்.

* ஆற்றலோனவ்வுரையனையவாணையால்
ஏற்றுணர்ந்தெண்ணியவ்வெருவைவேந்தனும்
மாற்றருந்துயரவர்மனக்கொளாவகை
தேற்றுதற்கென்றனவினையசெப்புவான். (சகஉ)

சடாயு தேறுதல் கூறல்.

† அதிசயமொருவராலமைக்கலாகுமோ
துதியறுபிறவியினின்பதுன்பந்தான்
விதிவயமென்பதைமேற்கொளாவிடின்
மதிவலியான்விதிவெல்லவல்லமோ. (ககங)

தெரிவுறுதுன்பம்வந்தூன்றச்சிந்தையை
யெரிவுசெய்தொழியுமதிழுதைநீரதால்
பிரிவுசெய்துலகெலாம்பெறலிப்பான்றலை
அறிவுசெய்விதியினுக்கரிதுண்டாகுமோ. (ககச)

அலக்கணுமின்பமுமணுகுகாலினை
விலக்குவமென்பதுமெய்யிற்றாகுமோ
இலக்கமுப்புரங்களையெய்தவில்லியார்
தலைக்கலத்திரந்ததுந்தவத்தின்பாலதோ. (ககரு)

பொங்குவெங்கோளராவிசும்புபூத்தன
வெங்கதிர்ச்செல்வனைவிழுங்கிநீங்குமால்
அங்கண்மாஞாலத்தைவிளக்குமாய்கதிர்த்
திங்களுமொருமுறைவளருந்தேயுமால். (ககசு)

* ஆற்றல்-வல்லமை, புத்திபலமுமாம்.
† அதிசயம்-புதுமை, அதிகமுமாம்.

அந்தரம்வருதலுமனையதீர்தலும்
சுந்தரத்தோளினிர்தொன்மைநீரவால்
மந்திரவிமையவர்குருவின்வாய்மொழி
இந்திரனுற்றனவெண்ணவொண்ணுமோ. (௧௯௭)

தடைக்கரும்பெருவலிச்சம்பரப்பெயர்க்
கடைத்தொழிலவுணனுற்குலிசக்கையினன்
படைத்தனன்பழியதுபகழிவில்லவாய்
துடைத்தனனூர்கைதன்குவவுத்தோளினால். (௧௯௮)

வேறு.

பிள்ளைச்சொற்கிளியனாளைப்பிரிவுறலுற்றபெற்றி
தள்ளுற்றவறமூர்தேவர் துயரமூர்த்தத்தேயால்
கள்ளப்போரரக்கரென்னுங்களையினைக்களைந்துவாழ்தி
புள்ளிற்கும்புலனில்பேய்க்குந்தாயன்னபுலவுவேலோய். (௧௯௯)

வடுக்கண்வார்கூர்தவாளையிராவணன்மண்ணினோடும்
எடுத்தனனேகுவானையெதிர்த்தெனதாற்றல்கொண்டு
தடுத்தனெனவனெல்லாத்தவத்தான்றந்தவாளால்
படுத்தனனிங்குவீழ்ந்தேனிதுவின்றபட்டதென்றான். (௨௦௦)

அதுகேட்டவுடனே இராமன் கொண்ட கோபம்.

கூறினமாற்றஞ்சென்றுசெவித்துளைகுறுகாமுன்னம்
ஊறினவுதிரஞ்செங்கணுமிர்த்தனவுயிர்ப்புச்செந்தீ
ஏறினபுருவமேன் * மேலிரிந்தனசுடர்களெங்கும்
கீறினதண்டகோளங்கிழிந்தனதிரிகளெல்லாம். (௨௦௧)

அப்பொழுது பிரபஞ்சத்திலுண்டான தடுமாற்றம்.

† மண்ணகந்திரியின்றமால்வரைதிரியமற்றைக்
கண்ணகன்புனலுங்காலுங்கதிரொடுந்திரியக்காவல்
விண்ணகந்திரியமேலைவிரிஞ்சனுந்திரியவீரன்
எண்ணரும்பொருள்களெல்லாமென்பதுதெரிந்ததன்றே. (௨௦௨)

இராமன் கோபாவேசத்தோடு சிலகூறத் தொடங்கல்.

குறித்தவெங்கோபம்யார்மேற்கொள்ளுறுங்கொல்லென்றஞ்சி
வெறித்துநின்றுலகமெல்லாம்விம்முறுகின்றவேலைப்
பொறிப்பிதிர்படலைச்செந்தீப்புகையொடுபொடிப்பப்பொம்மென்
றெறிப்பதோர்முறுவறோன்றவிராமனுரியம்பலுற்றான். (௨௦௩)

---

* மேலிழந்தனவென்றும்பாடம்.

† அப்பொழுது மண்ணகந்திரிதல்முதலியவற்றின் அநுமானத்தால் "ஸர்வம் விஷ்ணுமயம்ஜகத்" என்றபடி உலகமுழுவதும் எம்பெருமானது சொரூபமாகவேயிருக்குமியல்பு அறியப்பட்டதென்க.

இராமன் கூறும் கோபவார்த்தை.

பெண்டனியொருத்திதன்னைப்பேதைவாளரக்கன்பற்றிக்
கொண்டனனேகநீயிக்கோளுறக்குலுங்கல்செல்லா
எண்டிசையிறுதியானவுலகங்களிவற்றையின்றே
கண்டவானவர்களோடுங்களையுமாறின்றுகாண்டி. (உ0ச)

தாரகையுதிருமாறுந்தனிக்கதிர்பிதிருமாறும்
போகல்வானமெங்கும்பிறங்கெரிபிறக்குமாறும்
நீரொடுநிலனுங்காலுநின்றவுங்கிடந்தயாவும்
வேரொடுமெழியுமாறும்விண்ணவர்விளியுமாறும். (உ0ரு)

இக்கணமொன்றினின்றவேழினோடேழுசான்ற
மிக்கனபோன்றதோன்றுமுலகங்கள்விளியுமாறும்
திக்குடையண்டகோளப்புறத்தவுந்திரிந்தின்
மொக்குளினுடையுமாறுங்காணெனமுனியும்வேலை. (உ0சு)

அப்பொழுது சூரியன் மறைய யாவும் அஞ்சுதல்.

வெஞ்சுடர்க்கடவுணீண்டமேருவின்மறையலுற்றான்
எஞ்சலிறிசையினின்றயானையுமரியல்போய
துஞ்சினவுலகமெல்லாமென்பதொன்றுணிந்ததென்னின்
அஞ்சினனிளையகோவுமயலுளோர்க்கவதியுண்டோ. (உ0எ)

சடாயு இராமனுக்குக் கூறும் தணிவுரை.

இவ்வழிநிகழும்வேலையெருவைகட்கிறைவன்யாதும்
செவ்வியோய்முனியல்வாழிதேவருமுனிவர்தாமும்
வெவ்வலிவீரநின்னால்வேறலமென்றேமுற்றுய்வார்
எவ்வலிகொண்டுவெல்வாரிராவணன்செயலையென்றான். (உ0அ)

நாட்செய்தகமலத்தண்ணனல்கினகவையிலாற்றல்
தோட்செய்தவீரமென்னிற்கண்டனைசொல்லுமுண்டோ
தாட்செய்தகமலத்தாமனமுதலினர்தலைபத்துள்ளாற்
காட்செய்கின்றார்களன்றியறஞ்செய்கின்றார்கள்யாரே. (உ0கூ)

தெண்டிரையுலகந்தன்னிற்செறுநர்மாட்டேவல்செய்து
பெண்டிரின்வாழ்வரன்றேயிதுவன்றேதேவர்பெற்றி
பண்டுலகளந்தோனல்கப்பாற்கடலமுதமந்நாள்
உண்டிலராயினிந்நாளன்னவர்க்குய்தலுண்டோ. (உக0)

வம்பிழைகொங்கைவஞ்சிவனத்திடைத்தமியள்வைகக்
கொம்பிழைமானின்பின்போய்க்குலப்பழிகூட்டிக்கொண்டீர்
அம்பிழைவரிவிற்செங்கையையன்மீராயுங்காலை
உம்பிழையென்பதல்லாலுலகஞ்செய்பிழையுமுண்டோ. (உகக)

ஆதலான்முனிவாயல்லையருந்ததியனையகற்பிற்
காதலாடுயராக்கித்தேவர்தங்கருத்துமுற்றி
வேதநூன்முறையின் * யாவும்விதியுளிநிறுவிவேறும்
தீதுளதுடைத்தியென்றான்சேவடிக்கமலஞ்சேர்வான். (உகஉ)

இராமன் உலகத்தார்மேற் கொண்ட கோபந் தணிதல்.

புயனிறவண்ணனண்டப்புண்ணியன்புகன்றசொல்லை
தயரதன்பணியிதென்னச்சிரத்தையிற்றழுவிநின்றான்
அயலினிமுனிவதென்னையரக்கரைவருக்கந்தீர்க்கும்
செயலினிச்செயலென்றெண்ணிக் † கண்ணியசீற்றந்தீர்ந்தான். (உகங)

பின்பு சடாயு உயிர்நீத்தல்.

ஆயபின்மலன்றானுமையநீயனைமதியென்ன
வாயிடைமொழிந்ததன்றிமற்றொருசெயலுமுண்டோ
போயதவ்வரக்கனெங்கேபுகலெனப்புள்ளின்வேந்தன்
ஓய்வினனுணர்வுந்தேயவுரைத்திலனுயிருந்தீர்ந்தான். (உகச)

சடாயு பரமபதமடைதல்.

சீதங்கொண்டலருளோனுந்தேவருமெய்ப்பதென்னே
வேதங்கள்காண்கிலாமைவெளிநின்றமறையும்வீரன்
பாதங்கள்கண்ணிற்பார்த்தான்படிவங்கொணெடியபஞ்ச
பூதங்கள்விளியுநாளும்போக்கிலாவுலகம்புக்கான். (உகரு)

அப்பொழுது அனைவரும் இரங்கி சடாயுவை நன்குமதித்தல்.

வீடவனெய்தும்வேலைவிரிஞ்சனேமுதலமேலோர்
ஆடவர்க்கரசனோடுதம்பியுமழுதுசோரக்
காடமர்மரமுமாவுங்கற்களுங்கரைந்துசாய்ந்த
சேடரும்பாரினோர்க்குங்கரஞ்சிரஞ்சேர்ந்தவன்றே. (உகசு)

பின்பு இராமன் தம்பியைநோக்கிக் கூறிய இரங்கன்மொழி.

அறந்தலைநின்றிலாதவரக்கனாண்மைசேர்ந்தேன்
துறந்தனென்றவஞ்செய்கேனோதுறப்பெனோவுயிரைச்சொல்லாய்
பிறந்தனென்பெற்றுநின்றபெற்றியாற்பெற்றதாதை
இறந்தனனிருந்துளேன்யானென்செய்கேனிளவலென்றான். (உகஎ)

இலக்குமணன் அரக்கரையழித்தலே செய்தற்பாற்று என்றல்.

என்றலுமிளையகோவவ்விறையினையிறைஞ்சியாண்டும்
வென்றியாய்விதியின்றன்மைபழியலவிளைந்ததொன்றோ
நின்றினிநினைவதென்னைநெருக்கியவ்வரக்கர்தம்மைக்
கொன்றபினன்றோவெய்யகொடுந்துயர்குளிப்பதென்றான். (உகஅ)

* யாகம் என்றது-உலகாளுதல் வேள்விசெய்தல் முதலியவற்றைக் குறிக்கும். † கண்ணுதல்-கருதுதல்.

எந்தைநீயிம்பிற்றென்னையெண்மையனாகியேழைச்
சந்தவார்குழலினாளைத்துறந்தனை தணிதியேனும்
உந்தையையுயிர்கொண்டானையுயிருண்ணாதுற்றயில்லாச்
சிந்தையையாகிநின்று * செய்தவஞ்செய்கையென்றான். (௨௧௯)

இராமன் இனிச் சடாயுவுக்குச் சரமக்கிரியை செய்வோம் என்றல்.

அவ்வழியிளவல்கூறவறிவனுமயர்வுநீங்கி
இவ்வழியினையவெண்ணினேனைமைப்பாலதென்றா
வெவ்வழிபொழியுங்கண்ணீர்விலக்கினன்விளிர்ந்தாதை
செவ்வழியுரிமையாவுந்திருத்துவஞ்சிறுவவென்றான். (௨௨0)

சடாயுவுக்கு இராமன் அந்திமக்கிரியைசெய்தல்.

இந்தனமெனையவென்னக்காரகிலிட்டத்தோடும்
சந்தனங்குவித்துவேண்டுந்தருப்பையுந்திருத்திப்பூவும்
சிந்தினன்மணலின்மேனீர்தூவியாற்றிற்றெண்ணீர்
தந்தனன்றாதைதன்னைத்தடக்கையாலெடுத்துச்சார்வான். (௨௨௧)

ஏந்தினனிருகைதன்னாலேற்றினனீமத்தின்மேல்
சாந்தொடுமலருஞ்சாந்துஞ்சொரிந்தனன்றலையிற்சாரல்
காந்தெரிகஞலமூட்டிக்கடன்முறைகடாவண்ணம்
நேர்ந்தனனிராமன்றானுமந்திரநெறியின்வல்லான். (௨௨௨)

கிளித்தனகளித்தமேனிதாமரைக்கெழுவுசெம்பூந்
துளித்தனவனையவென்னத்துள்ளிசோர்வெள்ளக்கண்ணன்
குளித்தனன்கொண்டலாற்றுக்குளித்தபின்கொண்டநன்னீர்
அளித்தனனரக்கர்ச்செற்றசீற்றத்தானலந்தீர்ந்தான். (௨௨௩)

மீட்டினியுரைப்பதென்னேவிரிஞ்சனேமுதலமேல்வீழ்
காட்டியவுயிர்களெல்லாமருந்தினகளித்துபோலாம்
† பூட்டியகைகளாலப்புள்ளினுக்கரசைக்கொள்கென்
றூட்டியநன்னீரையனுண்டதொத்ததன்றே. (௨௨௪)

சூரியாஸ்தமன வருணனை.

பல்வகைத்துறையும்வேதப்பலிக்கடன்பலவுமுற்றி
வெல்வகைக்குமரனின்றவேலையின்வேலைசார்ந்தான்
தொல்வகைக்குலத்தின்வந்தான்றுன்பத்தாற்புனலுந்தோய்ந்து
செல்வகைக்குரியவெல்லாஞ்செய்குவானென்னவெய்யோன். (௨௨௫)

அ-வது, சடாயுவுயிர்நீத்தபடலம் - முற்றிற்று.

ஆகு திருவிருத்தம்-௧0௫௬.

---

* செய்தவம்-சிறந்ததவம், செய்தற்குரியதவம், அன்றி செவ்விய தவமுமாம். † பூட்டியகைகள்-சேரவைத்த கைகள், சேரங்கை.

# * கூ-வது, அயோமுகிப்படலம்.



இராமலக்குமணர் ஒருமலையிற் சேர்தலும், இருள் மிகுதலும்.

அந்திவந்தணுகும்வேலையவ்வழியவருநீங்கிச்
சிந்துரச்சென்னித்தாண்டோர்மைவரைச்சேக்கைகொண்டார்
இந்திரற்கடங்கல்செல்லாவிராக்கதரெழுந்தென்ன
வெந்துயர்க்கூற்றமாயவிரியிருள்வீங்கிற்றன்றே. (க)

அவர்கள் அவ்விரவில் மிகப்பரிதபித்தல்.

தேனுகவருவிசிந்தித்தெருமரலுறுவபோலக்
கானமுமலையுமெல்லாங்கண்ணினீருகுக்குங்கங்குல்
மானமுஞ்சினமுந்தாதைமரணமுமைந்தர்சிந்தை
ஞானமுந்துயருந்தம்முண்மலையெனநலிந்தவன்றே. (உ)

மெய்யுறவுணர்வுசெல்லாவறிவினைவினையினோக்கும்
பொய்யுறுபிறவிபோலப்போக்கரும்பொங்குகங்குல்
நெய்யுறுநெருப்பின்வீங்கிநிமிர்தரவுயிர்ப்புநீளக்
கையறவுறுகின்றோர்க்காணலாங்கரையிற்றன்றே. (ங)

இராமபிரான் அவ்விரவுமுழுவதுஞ் சிறிதுந் துயில்கொள்ளாமை.

யாமநுதெரிதேற்றான்மின்னைச்சனகியென்னும்
காமருதிருவைநீத்தோமுகமதிகாண்கிலாதோ
தேமருதெரியல்வீரன்கண்ணெனத்தெரிந்தசெய்ய
தாமரைகங்குற்போதுங்குவியலாத்தன்மையென்னோ. (ச)

பெண்ணியற்றீபமன்னபேரெழிலாட்டிமாட்டு
நண்ணியபிரிவுசெய்த † நவையிலாநவையினுள்ளத்
தெண்ணியதறிதேற்றாமைத்தலைவிராமனென்னும்
புண்ணியன்கண்ணும்வான்றோட்டம்பிகண்போன்றவன்றே. (ரு)

சந்திரோதயம்.

வண்டுளர்கோதைச்சீதைவாண்முகம்பொலியவானிற்
கண்டனனென்றவீரற்காங்கொருகாதல்காட்டத்
தண்டமிழ்த்தென்றலென்னுங்கோளராத்தவழுஞ்சாரல்
விண்டலம்விளங்குஞ்செவ்விவெண்மதிவிரிந்ததன்றே. (கூ)

நிலவு இராமனை வருத்துதல்.

களியுடையனங்கக்கள்வன்கரந்துறைகங்குற்காலம்
வெளிபடுத்துலகமெங்கும்விளக்கியநிலவின்வெள்ளம்

---

* அயோமுகி-இரும்புக்குச்சமமான முகத்தையுடையவள்.

† நவையென்றது சீதையைப்பிரிந்த வருத்தம். தான் காப்பாற்ற வேண்டிய தருமபத்தினியைப் பிரிந்ததனால் வருந்துவது நியாயமே யென்பதை விளக்க, நவையிலா என்ற அடைமொழி அதற்குக் கொடுக்கப்பட்டது.

நளியிருட்பிழம்பென்றீண்டுநஞ்சொடுகலந்தநாகத்
துளையெயிற்றான்றலுற்றதாமெனச்சுட்டதன்றே. (எ)

இராமன் சீதையை நினைத்து வருந்துதல்.

இடம்படுமானத்துன்பமிருடரவெண்ணிற்றீர்ந்தான்
விடம்பரந்தனையதாயவெண்ணிலாவெதுப்பவீரன்
படம்பரந்தனையவல்குற்பால்பரந்தனையவின்சொற்
றடம்படுகண்ணினோடன்றனிமையைநினையலுற்றான். (அ)

வேறு.

மடித்தவாயன்வயங்குமுயிர்ப்பினன்
துடித்துவீங்கியொடுங்குறுதோளினன்
பொடித்ததண்டளிர்ப்பூவொடுமால்கரி
ஒடித்தகொம்பனையாடிறத்துன்னுவான். (கூ)

வாங்குவில்லன் * வரும்வருமென்றிரு
பாங்குநீணெறிபார்த்தனளோவெனும்
வீங்கும்வேலைவிரிதிரையாமென
ஓங்கியோங்கியொடுங்குமுயிர்ப்பினான். (க0)

துன்னினைத்திலளென்பதுசாலுமே
மின்னிணைந்தவிலங்குமெயிற்றினான்
தின்னிலென்றுநெருங்கியபோதவள்
என்னினைந்தனளோவெனவெண்ணுமால். (கக)

நஞ்சுகாலுநகைநெடுநாகத்தின்
வஞ்சவாயின்மதியெனமட்குவாள்
வெஞ்சினஞ்செயரக்கர்தம்வெம்மையை
அஞ்சினான்கொலென்றையுறுமாலென்பான். (கஉ)

பூண்டமானமும்போக்கருங்காதலும்
தூண்டநின்றிடைதோமுறுமாருயிர்
மீண்டுமீண்டுவெதுப்பவெதும்பினான்
வேண்டுமோவெனக்கின்னமும்வில்லென்பான். (கங)

வில்லைநோக்கிநகுமிகவீங்குதோட்
கல்லைநோக்கிநகுங்கடைக்கால்வரும்
சொல்லைநோக்கித்துணுக்கெனுந்தொன்மறை
எல்லைநோக்கினர்யாவருநோக்குவான். (கச)

* வரும் வரும் என்ற அடுக்கு - தன்னை மீட்பதற்கு இராமன் வருவது நிச்சயமென்ற கருத்தை விளக்கிற்று.

கூதிர்வாடைவெங்கூற்றினைநோக்கினன்
வேதவேள்விவிதிமுறைமேவிய
சீதையென்வயிற்றீர்ந்தனளோவெனும்
* போதகம்மெனப்பொம்மெனுயிர்ப்பினான். (கரு)

நின்றபல்லுயிர்காத்தற்குநேர்ந்தயான்
என்றுணைக்குலமங்கையொரேந்திழை
தன்றுயர்க்குத்தகவிலெனாயினேன்
நன்றுநன்றென்வலியெனநாணுமால். (கசு)

சாயுந்தம்பிதிருத்தியதண்டளிர்
தீயுமங்கைவதிர்கெனுஞ்செவ் † விருந்
தாயுமாவிபுழுங்கவழுங்குமால்
வாயுநெஞ்சும்புலரமயங்குவான். (கஎ)

பிரிந்தவேதுகொல்போரிமானங்கொல்
தெரிந்திலதிருமலர்க்கண்ணிமை
பொருந்துவாயிபங் ‡ கற்பங்கள்போக்குவான்
இருந்துகண்டிலன்கங்குலின்றரோ. (கஅ)

வென்றிவேற்கையினவலமெலாம்
ஒன்றுபோலவுலப்பிலாநாள்கடாம்
நின்றுகாண்டியன்றேநெடுங்கங்குலுன்
இன்றுநீள்வதற்கேதுவென்னுமால். (ககூ)

சந்திரோபாலம்பனம் (சந்திரனைப்பழித்தல்.)

நீண்டமாலைமதியினைநித்தமும்
மீண்டுமீண்டுமெலிந்தனைவெள்குவாய்
பூண்டபூணவள்வாண்முகம்போதர
ஈண்டுசாலவிளங்கினையென்னுமால். (உ0)

நீணிலாவினிசைநிறைதன்குலத்
தாணியாயபழிவரவன்னது
நாணிநாடுகடந்தனனுங்கொலோ
சேணுலாந்தனித்தேரவனென்னுமால். (உக)

சுட்டகங்குனெடிதெனச்சோர்கின்றான்
முட்டமைந்தநெடு § முடக்கோனொடு

* போதகம்-யானைக்கன்று; பருவப்பெயராகாமல் யானையென்ற மாத்திரமாய்நின்றது. † விருந்து-புதுமை. ‡ கற்பம்-பிரமனாயுள்.

§ சூரியன் சாரதியான அருணன் துடையில்லாதவனாதலால் முடக்கோன் எனப்பட்டான்; இதுபற்றி இவனுக்கு வடமொழியில் அநூரு என்று ஒருபெயர். இவன் கருடனது தமையன்.

கட்டிவாளரக்கன்கதிரோனையும்
இட்டனன்கொலிருஞ்சிறையென்னுமால். (௨௨)

துடியினேரிடைதோன்றலளாமெனிற்
கடியகாரிருட்கங்குலின்கற்பம்போய்
முடியுமாகின்முடியுமிம்மூரிநீர்
நெடியமாநிலமென்னநினைக்குமால். (௨௩)

திறத்தினுதன * செய்தவத்தோருற
ஒறுத்துஞாலத்துயிர்தமையுண்டுழல்
மறத்தினார்கள்வலிந்தனர்வாழ்வரேல்
அறத்தினுலினியாவதெனென்னுமால். (௨௪)

மன்மதன் செயலைக் கூறுதல்.

தேனின்றெய்வத்திருநெடுநாட்சிலைப்
பூநின்றெய்யும்பொருகணைவீரனும்
மேனின்றெய்யவிமலனைநோக்கினான்
தானுந்தோர்கிலனுய்த்தமொறுவான். (௨௫)

உழந்தயோகத்தொருமுதல்கோபத்தால்
இழந்தமேனியுமெண்ணியிரங்கினான்
கெழுந்தகைக்கொருவன்மைகிடைக்குமேல்
பழந்துயர்க்குப்பரிவுறும்பான்மையால். (௨௬)

இரவு கழிதல்.

நீலமாயநிறத்தனிணைப்பிடைச்
சூலமாகத்தொலைவுறுமெல்லையின்
மூலமா † மலர்முன்னவன்முற்றுறும்
காலமாமெனக்கங்குல்கழிந்ததே. (௨௭)

வேறு.

இராமன் வருத்தம்.

வெள்ளஞ்சிலம்புபாற்கடலின்விரும்புந்துயிலைவெறுத்தளியும்
கள்ளுஞ்சிலம்பும்பூங்கோதைகற்பின்கடலிற்படிவாற்குப்
புள்ளுஞ்சிலம்பும்பொழில்சிலம்பும்புனலுஞ்சிலம்பும்புனைகோலம்
உள்ளுஞ்சிலம்புஞ்சிலம்பாவாறுயிருண்டாகும்வகையுண்டோ. (௨௮)

மயிலும்பெடையுமுடன்றிரியமானுங்கலையுமருவிவரப்
பயிலும்பிடியுங் ‡ கடகரியும்வருவதிரிவபார்க்கின்றான்

---

* திறத்தினையினவென்றும் பாடம்.

† மலர்முன்னவன் முற்றுறுங்காலம்-பிரமகற்பம், இது இங்கு மிக்க நீட்சிக்கு உவமை கூறப்பட்டது.

‡ கடகரி-மதம்பிடித்தயானை; கடம் - கன்னம்; அதிலுண்டாகும் மதத்துக்கு இலக்கணை.

குயிலுங்கரும்புஞ்செழுந்தேனுங்குழலும்யாழுங்கொழும்பாகும்
அயிலுமமுதுஞ்சுவைதீர்த்தமொழியைப்பிரிந்தாலழியாரோ. (உக)

சூரியோதயம்.

முடிநாட்டியகோட்டுதயத்துமுற்றவுற்றுன்முதுகங்குல்
விடிநாட்கண்டுங்கிளிமிழற்றமென்சொற்கேளாயீரற்காண
டடிநாட்செந்தாமரையொதுங்குமன்னமிலனாலயானைடைத்த
கடிநாட்கமலத்தெனவவிழ்த்துக்காட்டுவான்போற்கதிர்வெய்யோன். ()

பொழிலைநோக்கும்பொழிலுறையும்புள்ளைநோக்கும்பூங்கொம்பின்
எழிலைநோக்குமிளமயிலினியல்பைநோக்குமியல்பாளள்
குழலைநோக்கிக்கொங்கையிணைக்குவட்டைநோக்கியக்குவட்டின்
தொழிலைநோக்கித்தன்னுடையதோளைநோக்கிநாள்கழிப்பான். (ருக)

இராமலக்குமணர் தேடிச் செல்லுதல்.

அன்னகாலையினாயிரனடியின்வணங்கிநெடியோயப்
பொன்னைநாடாநீண்டிருத்தல்பொருளோவென்னப்புகழோனும்
சொன்னவாக்கனிருக்குமிடர்துருவியறிதற்கெதடர்ந்தென்ன
பின்னுஞ்சிலையார்மலைதொடர்ந்தவெயில்வெங்கானம்போயினரால். ()

வேறு.

ஆசைசுமந்தநெடுங்கரியன்னூர்
* பாசிலைதுன்றுவனம்பலபின்னுக்
காசறுகுன்றினொடாறுகடந்தார்
யோசனையொன்பதொடொன்பதுசென்றார். (ருரு)

மட்படிசெய்ததவத்தினின்வந்த
கட்படிகோதையைநாடினர்காணார்
உட்படிகோபமுயிர்ப்பொடுபொங்கப்
புட்படியுங்குளிர் † கார்ப்பொழில்புக்கார். (ருசு)

சூரியாஸ்தமனம்.

ஆரியர்சிந்தையலக்கணறிந்தான்
நாரியையெங்கணுநாடினரூடிப்
பேருலகெங்குமுழன்றனன்பின்னு
மேருவைவெங்கதிரீளமறைந்தான். (ருஎ)

எங்கும் இருள் மூடுதல்.

அரண்டருகுஞ்செறியஞ்சனபுஞ்சம்
முரண்டனபோலிருளெங்கணுமூந்தத்
தெருண்டறிவில்லவர்சிந்தையின்மூந்தி
இருண்டனமாதிரமெட்டுமிரண்டும். (ருஅ)

* பாசிலை-பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது.
† கார்ப்பொழில்-பெரியதொருசோலை;மேகந்தவழும்சோலையுமாம்.

அவ்விருவரும் அங்கு ஓர் பளிக்கறையில் தங்குதல்.

* இளிக்கறையின்சொலியையர்தலைபூவை
கிளிக்கறையும்பொழில்கிஞ்சுகவேலி
ஒளிக்கறைமண்டிலமொத்துளதாங்கோர்
பளிக்கறைகண்டதில்வைகல்பயின்றார். (௩௭)

இராமன் கட்டளைப்படி இலக்குமணன் நீர்கொணரச் செல்லுதல்.

அவ்விடையெய்தியவண்ணலிராமன்
வெவ்விடைபோலிளவீரனைவீர
இவ்விடைசாடினைநீர்கொணர்கென்றான்
தெவ்விடைவில்லவனுந்தனிசென்றான். (௩௮)

அயோமுகி இலக்குமணனைக் கண்டு காமுறுதல்.

எங்கணுநாடினனீரிடைகாணான்
சிங்கமெனத்தமியன்றிரிவானை
அங்கவணத்து † ளயோமுகியானா
வெங்கணரக்கிவிரும்பினள்கண்டாள். (௩௯)

நன்மதியோர்புகன்மந்திரநாமச்
சொன்மதியாவரவிற்றொடர்கிற்பாள்
தன்மதனோடுதன்வெம்மைதணிந்தாள்
மன்மதனாமிவனென்னுமனத்தாள். (௪0)

அழுந்தியசிந்தையரக்கியலக்கண்
எழுந்துயர்காதலின்வந்தெதிர்நின்றாள்
புழுங்குமென்னேனொடுபுல்லுவெனன்றி
விழுங்குவெனேயெனவிம்மலுழன்றாள். (௪௧)

இரந்தனெனெய்தியபோதிசையாது
கரந்தனனேனனிகொண்டுகடந்தென்
‡ முராஞ்சினின்மேவிமுயங்குவெனென்றா
விரைந்தெதிர்வந்தனளுயிரும்வெய்யாள். (௪௨)

அயோமுகியின் தன்மை.

உயிர்ப்பினெருப்புமிழ்கின்றனளொன்ற
எயிற்றின்மலைக்குலமென்றினிதுண்ணும்
வயிற்றுவயக்கொடுமாசுணம்வீசு
கயிற்றினிசைத்தமுலைக்குழிகண்ணாள். (௪௩)

* இளி - எழிசைகளிலொன்று. † அயோமுகியென்ற வடமொழிப் பெயர்-இரும்பினாலாகியதுபோன்ற முகமுடையவளென்று பொருள்படும்.
‡ முழைஞ்சு என்பது முராஞ்சு என எதுகைநோக்கித் திரிந்தது. முராஞ்சு-குகை.

பற்றியகோளரியாளிபணிக்கண்
தெற்றிய * பாதசிலம்புசிலம்ப
இற்றுகயானையுமீறுறுமந்நாள்
முற்றியஞாயிறுபோலுமுகத்தாள். (௪௪)

ஆழிவறக்கமுகக்கவமைந்த
† மூழையெனப்பொலிமொய்பிலவாயாள்
கூழைபுறத்துவிரிந்தொர்கொட்பால்
ஊழிநெருப்பினுருத்தனையொப்பாள். (௪௫)

தடிதடவத்தலைபலதழுவத்தாள்
நெடிதடையக்குடர்கெழுமுமிணைத்தாள்
படிதடவப்பலபாவலிசைக்கும்
கடிதடவற்றிணைஞருமுகறிப்பாள். (௪௬)

இலையிறையொப்பனவெஃகெனவிழிப்பாள்
அலைகுளிரக்கடிதழலுமெயிற்றாள்
குலைகுலையக்கடல்குலியலைப்பாள்
தலையில்புவித்திருமாணைடப்பாள். (௪௭)

வளரவச்சரிதாழ்கைநிரைத்தாள்
ஆளரவப்புலியாரமணைத்தாள்
யாளியினைப்பலதாலியிசைத்தாள்
கோளரியைக்கொடுதாழ்குழையிட்டாள். (௪௮)

இலக்குமணன் அயோமுகியைக் காணுதல்.

தின்றனளாசையினீர்கலுழுங்கண்
குன்றிநிகர்ப்பகுளிர்ப்பவிழிப்பாள்
மின்றிரிகின்றவெயிற்றின்விளக்கால்
கன்றிருளிற்றிரிகோளரிகண்டான். (௪௯)

இலக்குமணன் அவளை அரக்கியென்று அறிதல்.

பண்டையினுசியிழுத்துபதைக்கும்
திண்டிறலாளொடுதாடகைசீராள்
கண்டகராயவரக்கர்கணத்தோர்
ஒண்டொடியாமிவளென்பதுணர்ந்தான். (௫௦)

இலக்குமணன் அயோமுகியை நீ யார் என்று வினவல்.

பாவியராயவர்பண்பிலர்நம்பால்
மேவியகாரணம்வேறிலையென்பான்

---

* ‘பாத சிலம்பு தரித்தாள்’ என்றும் பாடம். † ‘மூழை-முழை என்பதன் நீட்டல்’ மூழையென்றேகொண்டு அகப்பையென்று கூறினுமாம். மூழை-முகவையுமாம்.

மாவியல்கானின்வயங்கிருள்வந்தாய்
யாவளடீயுரைசெய்கடிதென்றான். (௫௧)

அயோமுகி தான்வந்த காரணத்தைக் கூறுதல்.

பேசினனங்கவள்பேசுறநாணாள்
ஊசலுமுன்றழிசிந்தையளாந்தான்
நேசமிலன்பினளாயினுநின்பால்
ஆசையின்வந்தவயோமுகியென்றாள். (௫௨)

பின்னுமுரைப்பவள்பேரெழில்வீரா
முன்னமொருத்தர்தொடாமுலையோடும்
பொன்னின்மணித்தடமார்புபுணர்ந்தென்
இன்னுயிரைக்கடிதீகுதியென்றாள். (௫௩)

அவள் வேண்டுகையை இலக்குமணன் மறுத்தல்.

ஆறியசிந்தையளஃதுரைசெய்யச்
சீறியகோளரிகண்கள்சிவந்தான்
மாறிலவார்கலையிவ்வுரைவாயில்
கூறிடினின்னுடல்கூறிடுமென்றான். (௫௪)

அயோமுகி தலைமேற்கைகூப்பி மீண்டும் இலக்குமணனை வேண்டுதல்.

மற்றவனவ்வுரைசெப்பமனத்தால்
செற்றிலள்கைத்துணைசென்னியின்வைத்தாள்
கொற்றவநீயெனைவந்துயிர்கொள்ளப்
பெற்றிடி * னின்றுபிறந்தனெனென்றாள். (௫௫)

வெங்கதமில்லவள்பின்னருமேலோய்
இங்குநறும்புனலாடுதியேனுன்
அங்கையினாலெனையஞ்சலையென்றால்
கங்கையினீர்கொணர்வென்கடிதென்றாள். (௫௬)

இலக்குமணன் அயோமுகியை அச்சமுறுத்தல்.

சுமித்திரைசேயவள்சொன்னசொலன்ன
கமித்திலனின்னிருகாதொடுநாசி
துமிப்பதன்முன்பகலென்பதுசொல்ல
இமைத்திலணின்றனளின்னநினைந்தாள். (௫௭)

---

* பிறந்து வெகுநாளாயும் பிறப்பெடுத்ததற்குப் பயனாக இலக்குமணனைக்கூடாது காலம் வீணேகழித்தமையாற் கீழ்ச்சென்றகாலங்களைப் பிறவாத நாளாகவே வைத்து அவனைக் கூடப்பெறும் அந்தநாளையே தான் புதிதாகப் பிறந்தநாளாகக் கருதி 'இன்றுபிறந்தனென்' என்றாள். இனி, காமநோயால் இறந்துபோன்றுள்ள தனது உயிரை இவ்வீரனுடைய சேர்க்கையாலேயே பெறுவதாக இவள் நினைத்தமையால், 'பிழைத்தது புநர்ஜன்மம்' என்றபடி 'இன்று பிறந்தனென்' என்றாளுமாம்

அயோமுகி இலக்குமணனை எடுத்துச்செல்லக் கருதுதல்.

எடுத்தனெனேகினெனென்முழைதன்னுள்
அடைத்திவன்வெம்மையகற்றியபின்னை
உடற்படுமோலுடனேயுறுநன்மை
திடத்திதுவேநலனென்றயல்சென்றாள். (ருஅ)

அயோமுகி இலக்குமணனை எடுத்துச் செல்லுதல்.

மோகனையென்பதுமுந்திமுயன்றாள்
மாகநெடுங்கிரிபோலியைவவ்வா
ஏகினளும்பரினீர்துவொடேகும்
மேகமெனும்படிநொய்தினின்வெய்யாள். (ருகூ)

மந்தரம்வேலையில்வந்ததும்வானத்
திந்திரனார்பிடியென்னலுமானாள்
வெந்திறல்வேல்கொடுகூரடும்வீரச்
சுந்தரனார்தருதோகையுமொத்தாள். (சு0)

அயோமுகி இலக்குமணனைத் தழுவுதல்.

ஆங்கவண்மார்பொடுகையினடங்கிப்
பூங்கழல்வார்சிலைமீளிபொலிந்தான்
வீங்கியவெஞ்சினவீழ்மதவெம்போர்
ஓங்கலுரிக்குமுருத்திரனொத்தான். (சுக)

இலக்குமணன் வாராததுகண்டு இராமன் தேடத்தொடங்குதல்.

இப்படியேகினளன்னவளிப்பால்
அப்பிடைதேடிநடந்தவெனவித்
துப்புடைமால்வரைதோன்றலனென்றே
* வெப்புடைமெய்யுடைவீரன்விரைந்தான். (சுஉ)

வேறு.

இராமன் இலக்குமணனைப்பற்றிப் பலவாறு சிந்தித்து வருந்துதல்.

வெய்தாகியகானிடைமேவருநீ
ரைதாதலிரேயவயலொன்றளதோ
நொய்தாய்வரவேகமுநொய்திலனால்
எய்தாதொழியானிதுவென்னைகொலாம். (சுங)

நீர்கண்டனையிவ்வழிநேடினைபோய்ச்
சார்கொண்டெனவித்துணைசார்கிலனால்
வார்கொண்டணிகொங்கையைவவ்வினர்பால்
போர்கொண்டனனோபொருளுண்டிதெனு. (சுச)

---

* வெப்பு-விரகதாபமும், தாகதாபமும், தம்பியைக் காணாமையா லான தாபமும்.

அஞ்சொற்கிளியன்னவணங்கினைமுன்
வஞ்சித்தவிராவணன்வவ்வினனே
நஞ்சிற்கொடியானடலைத்தொழிலால்
துஞ்சுற்றனனேவிதியின்றுணிவால். (௬௫)

வரிவிற்கையெனாருயிர்வந்திலனேல்
தருசொற்கருதேனொருதையலையான்
பிரிவுற்றனனென்பதொர்பீழைபெருந்
தெரிவுற்றிடவாலியிறந்தனனே. (௬௬)

உண்டாகியகாரிருளோடொருவென்
கண்டானயல்வேறொருகண்ணிலனேல்
புண்டானுறுநெஞ்சுபுழுங்குறுவேன்
எண்டாணிலெனெங்ஙனநாடுகெனே. (௬௭)

துள்ளாவினையேன்றனியாருயிராய்
உள்ளாயொருநீயுமொளித்தனையோ
பிள்ளாய்பெரியாய்பிழைசெய்தனையால்
கொள்ளாவுலகுன்னையிதோகொடிதே. (௬௮)

போராவிடர்வந்தனபோக்கவலாய்
தீராவிடர்தந்தனைதெய்வர்தொழும்
வீராவெனையிங்ஙன்வெறுத்தனையோ
வாராய்புறமித்துணைவைகுதியோ. (௬௯)

என்னைத்தருமெந்தையையென்னையரைப்
பொன்னைப்பொருகின்றபொலங்குழையாள்
தன்னைப்பிரிவேனுளனாவதுதான்
உன்னைப்பிரியாதவுயிர்ப்பலவோ. (௭0)

பொற்றோடிவர்கின்றபொலங்குழையாள்
தற்றேடிவருந்துதவம்புரிவேன்
நிற்றேடிவருந்தநிரப்பினையோ
வெற்றேடினைவந்தவிளங்களிறே. (௭௧)

இன்றேயிறவாதொழியேனெமரோ
பொன்றாதொழியார்புகல்வாருளரோ
ஒன்றாகியவுன்கிளையோரையெலாம்
கொன்றாய்கொடியாயிதுவுங்குணமோ. (௭௨)

மாந்தாமுதன்மன்னவர்தம்வழியில்
வேந்தாகைதுறந்தபின் * மெய்யுறவோர்

---

* மெய்யுறவோர் என்றது, தந்தைதாய்முதலிய உள்ளன்புடைய சுற்றத்தாரை; தேகபந்துக்களென்றபொருளில்மெய்யுறவோர்என்றாருமாம்

தாந்தாமொழியத்தமியேனுடனே
போந்தாயெனைவிட்டனைபோயினையோ. (எரு)

என்றவுரையாவெழும்வீழுமிருந்
துன்றவுணர்வோய்வுறுமொன்றலைவால்
மின்றதிடியாதிருள்வாய்விளைவீ
தென்றவெனுமென்றனிநாயகனே. (எச)

நாடும்பலசூழ்கடோறுநடந்
தோடும்பெயர்சொல்லியுளைந்துயிர்போய்
வாடும்வகைசோருமயங்குறுமால்
ஆடுங்களிமாமதயானையனான். (எ௫)

கமையாளொடுமென்னுயிர்காவலினின்
றிமையாதவனித்துணைதாழ்வுறுமோ
சுமையாவுகூடுமுறெல்வினையேன்
அமையாதுகொல்வாழ்வறியேனெனுமால். (எசு)

இராமன் தற்கொலை செய்யத் துணிதல்.

அறப்பாலுளதேலவன்முன்னவனாய்ப்
பிறப்பானுறின்வந்துபிறக்கவெனா
மறப்பால்வடிவாள்கொடுமன்னுயிரைத்
துறப்பானுறுகின்றதொடர்ச்சியின்வாய். (எஎ)

இலக்குமணன் அயோமுகியை அங்கபங்கப்படுத்தல்.

போர்ந்தானெடுமோயையினிற்பிரியா
ஈர்ந்தானவளைப்பிடித்திளையோன்
சோர்ந்தாளிடுபூசல்செவித்துளையில்
சேர்ந்தார்தனுமேதிருமாறெருளா. (எஅ)

வேறு.

இராமன் அக்குரலால் அரக்கியென்று துணிதல்.

பாற்றருகானகத்தரக்கர்பல்கழல்
மூற்றருவெஞ்சமமூள்கின்றாறெதிர்
உரற்றியவோசையன்றெருத்தியூறுபட்
டரற்றியகுரலவளரக்கியேகொலாம். (எகூ)

இராமன் ஆக்கினேயாஸ்திரத்தை யெடுத்துவிட முயலுதல்.

அங்கியினெடும்படைவாங்கியங்கது
செங்கையிற்கரியவன்றிரிக்குமெல்லையில்
பொங்கிருளப்புறத்துலகம்புக்கது
கங்குலும்பகலெனப்பொலிந்துகாட்டிற்றே. (அ0)

நெடுவரைபொடிபடநிவந்தமாமரம்
ஒடிவுறநிலமகளுலையவூங்கெலாம்
சடசடவெனுமொலிதழைப்பத்தாக்குமா
மூடுகினனிராமன்வெங்காலின்மும்மையான். (அக)

இலக்குமணன் வந்த இராமனை வருந்தாதே யென்று சொல்லிக்
கிட்ட இராமன் மகிழ்தல்.

ஒருங்குயர்ந்துலகின்மேலூழிப்பேர்ச்சியுள்
கருங்கடல்வருவதேயனையகாட்சித்தன்
பெருந்துணைத்தம்முனைநோக்கிப்பின்னவன்
வருந்தலைவருந்தலைவள்ளியோயெனு. (அஉ)

வந்தனெனடியனேன்வருந்தல்வாழிநின்
* அந்தமிலுள்ளமென்றறியக்கூறுவான்
சந்தமென்றளிர்புரைசரணஞ்சார்ந்தனன்
சிந்தினநயனம்வந்தனையசெய்கையான். (அங)

ஊற்றுறுகண்ணினீரொழுகநின்றவன்
ஏற்றிளங்கன்றினைப்பிரிவுற்றெங்கணும்
ஆற்றலினுற்றுவதரிதினெய்திய
பாற்றிளம்பான்முலையாவின்பான்மையான். (அச)

இராமன் இலக்குமணனை நோக்கி மனநெகிழ்தல்.

தழுவினன்பன்முறைதாரைக்கண்ணினீர்
கழுவினனுண்டவன் † கனகமேனியை
வழுவினையாமெனமனக்கொடேங்கினேன்
எழுவெனமலையெனவியைந்ததோளினய். (அரு)

என்னையங்கெய்தியதியம்புவாயென
அன்னவனஃதெலாமறியக்கூறலும்
இன்னலுமுவகையுமிரண்டுமெய்தினன்
தன்னலாதொருபொருடனக்குமேலிலான். (அசா)

இராமன் இலக்குமணனைத் தேற்றுதல்.

ஆய்வுறுபெருங்கடலகத்துளேயவன்
பாய்திரைவருதொறும்பரிதற்பாலனும்
தீவினைப்பிறவிவெஞ்சிறையிற்பட்டயாம்
நோயுறுதுயரெனநடுங்கனேன்மையோ. (அஎ)

---

*.அந்தமில் உள்ளம்-மயக்கமற்ற மனம், அழிவற்றமனமெனினு
மாம். † கனகமேனி-சுவணவண்ணன்.

20

இராமன் இலக்குமணனைப் புனைந்துகூறுதல்.

மூவகையமரருமுலகமும்மையும்
மேவரும்பகையெனக்காகமேல்வரின்
எவரேகடப்பவரெம்பிநீயுளை
யாவதேவலியினியரணும்வேண்டுமோ. (௮௮)

பிரிபவர்யாவரும்பிரிகபேரிடர்
வருவனயாவையும்வருகவார்கழற்
செருவலிவீரநிற்றீருமல்லது
பருவரலென்வயிற்பயிலற்பாலதோ. (௮௯)

இராமன் இலக்குமணனை நோக்கி அரக்கியைக் கொல்லாமை யைப்பற்றி வினவல்.

வன்றொழில்வீரபோர்வலியரக்கியை
வென்றுபோர்மீண்டனனெனவிளம்பினாய்
புன்றொழிலனையவள்புகன்றசீற்றத்தால்
கொன்றிலைபோலுமாற்கூறுவாயென்றான். (௯0)

இலக்குமணன் மறுமொழி கூறல்.

துளைபடுமூக்கொடுசெவிதுமித்துகத்
தளைவயினகிலொடுதடிந்துநீக்கிய
அளவையிற்பூசலிட்டரற்றினாளென
இளையவன்விளம்பினின்றிருகைகூப்பினான். (௯௧)

இராமன் இலக்குமணனைத் தழுவுதல்.

தொல்லிருடனைக்கொலத்தொடர்கின்றாளையும்
கொல்லலாசியைக்கொய்துநீக்கினாய்
வல்லைநீ * மனுமுதன்மரபினோயெனப்
புல்லினனுவகையிற்பொருமிவிம்முவான். (௯௨)

இராமலக்குமணர் நீர்பருகி ஒரு மலையில் தங்குதல்.

பேரருந்துயரறப்பேர்ந்துளோரென
வீரனுந்தம்பியும்விடிவுநோக்குவார்
வாருணநினைந்தனர்வானநீரினால்
† தாரணித்தங்கொருகிரியிற்றங்கினார். (௯௩)

---

* மனு-சூரியனது மகன்; இவனே, இச்சூரியகுலத்து அரசர்க்கெல்லாம் முதல்வன்; வைவசுவதமநுவெனப் பிரசித்திபெற்றவன்.

† தாரணித்தல்-உடம்புதரித்தல்.

இராமன் பள்ளிகொள்ளல்.

கல்லகல் * வெள்ளிடைக்கானகத்துள
பல்லவமலர்கொடுபடுத்தபாயலின்
எல்லையிறுயரினேடிருந்துசாய்ந்தனன்
மெல்லடியிளையவன்வருடவீரனே. (௬௪)

இராமன் விரகவேதனையால் வருந்துதல்.

மயிலியல்பிரிந்தபின்மானநோயினல்
அயில்விலனெருபொருளவலமெய்தலால்
துயில்விலனென்பதுசொல்லற்பாலதோ
உயிர்நெடிதுயிர்ப்பிடையூசலாடுவான். (௬௫)

இராமன் விரகதாபத்தால் வருந்திக் கூறல்.

மானவண்மெய்யிறைமறக்கலாமையின்
ஆனதோவன்றெனினரக்கர்மாயமோ
கானகமுழுவதுங்கண்ணினேக்குங்கால்
சானகியுருவெனத்தோன்றுந்தன்மையே. (௬௬)

கருங்குழற்சேயரிக்கண்ணிறகற்பினேர்க்
கருங்கலமருங்குவந்திருப்பவாசையால்
ஒருங்குறத்தழுவுவாரென்றுங்காண்கிலேன்
மருங்குல்போலானதோவடிவுமெல்லவே. (௬௭)

புண்டரிகப்புதுமலரிற்றேன்பொதி
தொண்டையஞ்சேயொளித்துவர்த்த † வாயமு
துண்டனெனீண்டவளுறைழையளல்லளால்
கண்டுயிலன்றியுங்கனவுண்டாகுமோ. (௬௮)

மண்ணினும்வானினுமற்றைமூன்றினும்
எண்ணினும்பெரியதோரிடர்வந்தெய்திறைல்
தண்ணறுங்கருங்குழற்சனகன்மாமகள்
கண்ணினுநெடியதோகொடியகங்குலே. (௬௯)

சந்திரோபாலம்பனம்.

அப்புடையலங்குமீனமருமார்கலி
‡ உப்புடையிந்துவென்றுதித்த § வூழித்தீ

* வெள்ளிடை-மேல்மறைவில்லாத இடம்.

† வாயமுது உண்ணல்-அதரபானம் பருகல்.

‡ உப்பு-அழகு. §. ஊழித்தீ-பிரளயகாலத்தில் கடலினின்று வெளிக்கிளம்பி உலகத்தையழிக்கும் வடவாமுகாக்கினி.

வெப்புடைவிரிகதிர்விரிப்பமெய்யெலாம்
கொப்புளம்பொடித்ததோகொதிக்கும்வானமே. (௯00)

சூரியோதயம்.

இன்னனவின்னனபன்னியீடழி
மன்னவர்மன்னவன்மதிமயங்கினான்
அன்னதுகண்டனனல்கினானெனத்
துன்னியசெங்கதிர்ச்செல்வன்றோன்றினான். (௯0௧)

கூ-வது, அயோமுகிப்படலம்-முற்றிற்று.
ஆ. திருவிருத்தம்-௧௧௩௭.

## ௧0-வது, கவந்தப்படலம்.

இராமலக்குமணர் சீதையைத் தேடிச்செல்லுதல்.

நிலம்பொறையிலதெனநிமிர்ந்த † கற்பினாள்
நலம்பொறைகூர்தருமயிலைநாடிய
அலம்புறுபறவையுமழுவவாமெனப்
புலம்புறுவிடியலிற்கடிதுபோயினார். (௧)

வேறு.

இராமலக்குமணர் நடுப்பகலில் கவந்தவன மடைதல்.

ஐயைந்தடுத்தயோசனையினிரட்டியடவிபுடைபடுத்த
வையந்திரிந்தார்கதிரவனும்வானிளுப்பண்வந்துற்றான்
எய்யுஞ்சிலைக்கையிருவருஞ்சென்றிருந்தேநீட்டியெவ்வுயிரும்
கையின்வளைத்துவயிற்றடக்குங்கவந்தன்வனத்தின்கண்ணுற்றார். (௨)

வேறு.

அக்கவந்தன்கையில் அகப்பட்டவற்றின் தன்மை.

‡ எறுப்பினங்கடையுறயானையேமுதல்
உறுப்புடையுயிரெலாமுலைந்துசாய்ந்தன
வெறிப்புறுநோக்கினவெருவுகின்றன
பறிப்பருவலையிடைப்பட்டபான்மைய. (௩)

‡ மரபுளிநிறத்திலன்புரக்குமாண்பிலன்
உரனிலாளொருவனுட்டுயிர்கள்போல்வன

† கற்பு-கணவனையே தெய்வமென்றுணர்தல்.

வெருவுவசிந்துவகுவிலவிம்மலோ
டிரிவனமயங்குவவியல்புநோக்கினர். (ச)

‡ மால்வரையுருண்டனவருவமாமரம்
கால்பறிந்திடுவனகானயாறுகள்
மேலுளதிசையொடுவெளிகரப்பன
சூன்முதிர்மேகங்கள்சுருண்டுவீழ்வன. (ரு)

இராமலக்ஷ்மணர் கவந்தன்கையில் அகப்படுதல்.

நாற்றிசைப்பரவையுமிறுதிநாளுறக்
காற்றிசைத்தெழுவெழுந்தலைக்கால்பரந்
தேற்றிசைத்துரந்துவந்திடுங்குகின்றனை
போற்றிசைசுற்றியகரத்துப்புக்குளார். (சு)

இராமலக்ஷ்மணர் கவந்தன்கைகளை அரக்கர்சேனை
யென்றுகருதி மகிழ்தல்.

தேமொழிதிறத்தினலரக்கர்சேனைவந்
தேமுறவளைந்ததென்றுவகையெய்தினர்
நேமிமால்வரைவரநெருக்குகின்றதே
யாமெனலாயகைம்மதிட்குளாயினர். (எ)

இது அரக்கர்சேனை யாதலால் அரக்கரும் அருகிலுள்ளதுபோலும்
என்று இராமன் இலக்குமணனுக்குக் கூறுதல்.

இளவலைநோக்கினனிராமனேழையை
யுளைவுசெயிராவணனுறையுமூருமிவ்
வளவையதாகுதலறிதியையநம்
கிளர்பெருந்துயரமுங்கீண்டதாமென. (அ)

அரக்கர்சேனையன்று என்று இலக்குமணன் கூறுதல்.

முற்றியவரக்கர்தமுழங்குதானையேல்
எற்றியமுரசொலியேங்குஞ்சங்கிசை
பெற்றிலதாகலிற்பிறிதொன்றுமெனச்
சொற்றனனிளையவன்றொழுதுமுன்னினன். (கூ)

இலக்குமணன் இது பெருநாகமாயிருக்கலாம் என்று குறித்தல்.

தெள்ளியவமுதெழத்தேவர்வாங்கிய
வெள்ளெயிற்றரவந்தான்வேறோர்நாகந்தான்
தள்ளருவாலொடுதலையினல்வளைத்
துள்ளுறக்கவர்வதேயொக்குமூழியாய். (க0)

‡ இக்குறியிட்ட மேன்மூன்றுகவிகளும் ஒருதொடர்.

இருவரும் கவந்தனெதிரிற் செல்லுதல்.

என்றிவைவிளம்பிடவிளவல்வாசகம்
நன்றெனநினைந்தனன்நடந்தநாயகன்
ஒன்றிரண்டியோசனையுள்புக்கோங்கரு
ணின்றெனவிருந்தவக் * கவந்தனோர்சென்றார். (௧௧)

கவந்தனது தோற்றங் கூறல்.

வெயிற்சுடரிரண்டினைமேருமால்வரை
குயிற்றியவாமெனக்கொதிக்குங்கண்ணினன்
எயிற்றிடைக்கிடையிருகாதமீட்டிய
வயிற்றிடைவாயெனுமகரவேலையான். (௧௨)

ஈண்டியபுலவரோடவுண † ரிந்துவைத்
தீண்டியநெடுவரைத்தெய்வமத்தினைப்
பூண்டுயர்வடமிருபுடையும்வாங்கலின்
நீண்டெனக்கிடந்தனநிமிர்ந்தகையினான். (௧௩)

தொகைக்கனற்கருமகன்றுருத்தித்தூம்பெனப்
புகைக்கொடிகனலொடுபொடிக்குழக்கினான்
பகைத்தகைநெடுங்கடற்பருகும்பாவகன்
சிகைக்கொழுந்திதுவெனத்திருகுநாவினான். (௧௪)

புரண்டுபொம்பிடைவரவெருவிப்புக்குறை
அரண்டனைநாடியோரருவிமால்வரை
முரண்டொகுமுழைநுழைமுழுவெண்டிங்களை
இரண்டுகூறிட்டெனவிலங்கெயிற்றினான். (௧௫)

ஓதநீர்மண்ணிவைமுதலவோதிய
பூதமோரைந்தினிற்பொருந்திற்றன்றியே
வேதநூல்வரன்முறைவிதிக்குமப்பெரும்
பாதகந்திரண்டுயிர்படைத்தபண்பினான். (௧௬)

வெய்யவெங்கதிர்களைவிழுங்குவெவ்வராச்
செய்தொழிலிலைதுயில்செவியின் ‡ றொள்ளையான்

---

* வயிற்றுக்குள் தலையடங்கியமைபற்றி கவந்தம்போலத் தோற்றமுடையவனாயிருந்ததனால் இவனுக்குக் கவந்தனென்றுபெயர். கவந்தம்-கபந்தம் என்ற வடசொல்லின் திரிபு. இதற்கு தலையற்றதும் தொழிலுடன்கூடியதுமான உடல் என்றுபொருள்.

† இந்துவைத்தீண்டியநெடுவரை சந்திரனை அடைதூணாகக்கொண்ட பெரியமலை; உயர்ச்சியாற் சந்திரமண்டலத்தை யளாவிய மலையென்றலும் ஒன்று.

‡ தொள்ளை-தொளை. தொளை-துளை.

பொய்கிளர்வன்மையிற்புரியும்புன்மையோர்
வைகுறுநரகையுநகும்வயிற்றினன். (கஎ)

முற்றியவுயிரெலாமுருங்கவாரித்தான்
பற்றியகரத்தினன்பணைத்தபண்ணையிற்
றுற்றியபுகுதருந்தோற்றத்தால்யமன்
கொற்றவாய்தற்செயல்குறித்ததவாயினன். (கஅ)

ஓலமார்கடலெனமுழங்குமோதையான்
ஆலமேயெனவிருண்டழன்றவாக்கையான்
நீலமாநேமியிற்றலையைநீக்கிய
காலநேமியிற்பெருங்கவந்தக்காட்சியான். (கசு)

இராமலக்ஷ்மணர் கவந்தனைக் காணுதல்.

தாக்கியதணப்பில்காலெறியத்தன்னுடை
மேக்குயர்கொடுமுடியிழந்தமேருநேர்
ஆக்கையினிருந்தவன்றன்னையவ்வழி
நோக்கினரிருவருநுணங்குகேள்வியார். (உ0)

இராமலக்ஷ்மணர் கவந்தன்வாயைக் காணுதல்.

நீர்புகுநெடுங்கடலடங்குநேமிசூழ்
பார்புகுநெடும்பகுவாயைப்பார்த்தனர்
சூர்புகலரியதோரரக்கர்தொன்மதில்
ஊர்புகுவாயிலோவிதுவென்றுன்னினார். (உக)

இலக்குமணன் கவந்தனைப் பூதமென்று கருதிக் கவலை கொண்டு
இராமனிடம் கூறல்.

அவ்வழியிளையவனமர்ந்துநோக்கிய
வெவ்வியதொருபெரும்பூதம்வில்வலாய்
வவ்வியதன்கையின்வளைத்துவாய்ப்பெயும்
செய்வதெனிவணெனச்செம்மல்சொல்லுவான். (உஉ)

இராமன் இலக்குமணனை நோக்கிக் கூறல்.

* பாரிடமேயிதுபரவைசுற்றுறும்
† பாரிடமரிதெனப்பரந்தமெய்யது
பாரிடம்வலம்வரப்பரந்தகையது
‡ பாரிடந்தெடுத்தமாவனையபாழியாய். (உங)

* பாரிடம்-பூதம். † பாரிடம் என்பது பரு + இடம் என்று பிரிந்து, அகலிடம் என்று பொருள்படும். ‡ பாரிடம்-பூமி.

தோகையும்பிரிந்தனளெந்தைதுஞ்சினன்
வேகவெம்பழிசுமந்துழலவேண்டலேன்
ஆகலின்யானினியிதனுக்காமிட
மேகுதியீண்டெனின்றிளவலேயென்றான். (௨௪)

ஈன்றவரிடர்படவெம்பிதுன்புறச்
சான்றவர்துயருறப்பழிக்குஞ்சார்வுமாய்த்
தோன்றலினென்னுயிர்துறந்துபோதலால்
ஊன்றியபெரும்பழிதுடைக்கவொண்ணுமோ. (௨௫)

இல்லியல்புடையநீரளித்தவின்சொலாம்
வல்லியவ்வரக்கர்தம்மனையுளாளெனச்
சொல்லிநன்மலையெனச்சுமந்ததுணியென்
வில்லினென்செல்வெனோமிதிலைவேந்தன்பால். (௨௬)

தலையவிழ்கோதையைத்தாங்கலாற்றலென்
இலைபுரிந்தளித்தன்மேலிவர்ந்தகாதலேன்
உளனெனவுரைத்தலினும்பரானென
விலைதனன்றாதலின்விளிதனன்றென்றான். (௨௭)

வேறு.

இலக்குமணன் மறுமொழி.

ஆண்டானின்னனபன்னிடவையற்கிளவீரன்
ஈண்டியானுன்பின்னேகியபின்னிவ்விடர்வந்து
மூண்டான்முன்னேயாருயிரோடுமுடியாதே
மீண்டேபோதற்காமெனினன்றென்வினையென்றான். (௨௮)

என்றானென்றப்பின்னுமிசைப்பானிடர்தன்னை
வென்றாரன்றேவீரர்களாவார் * விரவாரின்
தன்றாய்தந்தைதம்முனெனுந்தன்மையர்முன்னே
பொன்றானென்றானீங்குவதன்றேபுகழம்மா. (௨௯)

மானேயன்னாடன்னொடுதம்முன்வரையாரும்
கானேவைகக்கண்டுயில்கொள்ளாதயல்காத்தற்
கானானென்னேயென்றவர்முன்னேயவரின்றித்
தானேவந்தானென்றலின்வேறோர்தவறுண்டோ. (௩௰)

என்றாயுன்முன்னேவியயாவுமிசையின்னல்
பின்றாதெய்திப்பேரிசையாளற்கழிவுண்டேல்
பொன்றாமுன்னம்பொன்றுதியென்றானுரைபொய்யா
நின்றாலன்றோநிற்பதுவாய்மைநிலையம்மா. (௩௧)

---

* விரவார்-தன்னோடு கவ்வாதவர்; எனவே பகைவர்.

எற்பெற்ருளும்யானுமெனைத்தோர்வகையானு
நிற்பெற்ருட்குநிற்குநினைப்புப்பிழையாமல்
நற்பொற்ருேளாய்நல்லவிர்பேணநணிநிற்குஞ்
சொற்பெற்ருன்மற்ருருயிர்பேணித்துறவேமால். (௫௨)

ஓதுங்காலப்பல்பொருண்முற்றுற்ருெருவாது
வேதஞ்சொல்லுந்தேவரும்வீயுங்கடைவீயாய்
* மாதங்கந்தின்றுய்ந்திவ்வனத்தின்றலையாழும்
பூதங்கொல்லப்பொன்றுதிபோலும்பொருளுண்டோ. (௫௩)

கேட்டார்கொள்ளார்கண்டவர்பேணுர்கிளர்போரில்
தோட்டார்கோதைச்சோர்குழறன்னைத்துவளாமல்
மீட்டானென்னும்பேரிசைகொள்ளான்செருவெல்ல
மாட்டான்மாண்டானென்றபின்மேலும்வசையுண்டோ. (௫௪)

தணிக்குந்தன்மைத்தன்றெனினன்றித்தகைவாளால்
கணிக்குந்தன்மைத்தல்லவிடத்திற்கனல்பூதம்
பிணிக்குங்கையும்பெய்பிலவாயும்பிழையாமல்
துணிக்கும்வண்ணங்காணுதிதுன்பந்துறவென்ருன். (௫௫)

இராமலக்ஷ்மணர் கவந்தனிடத்தில் ஒருவரினும் ஒருவர்
முற்பட்டுச் செல்லுதல்.

என்னுமுன்னேசொல்லுமிளங்கோ † விறையோற்கு
முன்னேசெல்லமுன்னவனன்ருனினுமுந்தத்
தன்னேரில்லாத்தம்பிதடுப்பான்பிறரில்லை
யன்ருேகண்டாரும்பரும்வெய்துற்றழுதாரால். (௫௬)

வேறு.

யாரென்று கவந்தன் கேட்க இருவரும் கோபங்கொள்ளுதல்.

இனையராகியவிருவருமுகத்திருகண்போற்
கனையும்வார்கழல்வீரர்சென்றணுகலுங்கவந்தன்
வினையினெய்தியவீரர்நீர்யாவர்கொலென்ன
நினையுநெஞ்சினரிமைத்திலருருத்தனர்நின்ருர். (௫௭)

---

* மாதங்கம்-யானை. மதங்கமுனிவரிடத்தினின்று உண்டானதென்று பொருள்.

† இறையோன்-கடவுள். இதற்கு (யாவர்மனத்திலுந்) தங்குகிறவனென்று பொருள். இறுத்தல்-தங்குதல். இறைமையுடையோன் என்றுமாம். இறைமை-தலைமை.

21

இராமலக்ஷ்மணர் கவந்தனது தோள்களை வெட்டித்தள்ளுதல்.

அழிந்துளாரலரிகழ்ந்தனரென்னையென் றழன்றான்
பொழிந்தகோபத்தன்புதுப்பொறிமயிர்ப்புறம்பொடிப்ப
விழுங்குவேனெனவீங்கலும்விண்ணுறவீரர்
எழுந்ததோள்களைவாள்களாலரிந்தனரிட்டார். (௩அ)

கைகள் அற்ற கவந்தனது தோற்றம்.

கைகளற்றுகுகுருதியாறொழுகியகவந்தன்
மெய்யின்மேற்கொடுகிழக்குறப்பெருநதிவிரவும்
சையமாநெடுந்தாழ்வரைத்தனிவரைதன்னோ
டையம்நீங்கியபேரெழிலுவமையனானான். (௩௯)

அரக்கவுருவையொழித்துக் கவந்தன் நல்லுருப்பெற்று
ஆகாயத்தில் விளங்குதல்.

ஆனநாயகனங்கையிற்றீண்டியவதனால்
மூனஞ்சாபத்தின்முந்தியதீவினைமுடித்தான்
தோளும்வாங்கியதோமுடையாக்கையைத்துறவா
நீளநீங்கியபறவையின்விண்ணுறநிமிர்ந்தான். (௪0)

கவந்தன் ஆகாயத்தில் நின்று இராமனைத் துதித்தல்.

விண்ணினின்றவன் * விரிஞ்சனேமுதலினர்யார்க்கும்
கண்ணினின்றவனிவனெனக்கருத்துறவுணர்வான்
எண்ணிலன்னவன்குணங்களைவாய்திறந்திசைத்தான்
† புண்ணியம்பயக்கின்றழியரியதெப்பொருளே. (௪௧)

வேறு.

ஈன்றவனேயெப்பொருளுமெல்லைதீர்நல்லறத்தின்
சான்றவனேதேவர்தவத்தின்றனிப்பயனே
மூன்றுகவடாய்முளைத்தெழுந்தமூலமோ
தோன்றியிருவினையேன்சாபத்திடர்துடைத்தாய். (௪௨)

‡ மூலமேயில்லாமுதல்வனேநீமுயலும்
கோலமேயார்க்குந்தெரிவரியகொள்கைத்தால்
ஆலமோவாலினடையோவடைகிடந்த
பாலனோவாதிப்பரனேபகராயே. (௪௩)

---

* விரிஞ்சன்-பூதங்களைப் படைக்கிறவனென்றும் (அன்னப்) பறவையால் தாங்கப்படுகிறவனென்றும் அவயவப்பொருள்.

† புண்ணியமாவது-பகவானுடைய அநுக்கிரகம்.

‡ மூலமேயில்லா முதல்வனே-யாவும் உன்னிடத்தினின்று தோன்றினவேயன்றி நீ ஒன்றினின்றுந் தோன்றாதவன் என்பது கருத்து.

காண்பார்க்குங்காணப்படுபொருட்குங்கண்ணாகிப்
பூண்பாய்போல்நிற்றியால்யாதொன்றும்பூணாதாய்
மாண்பாலுலகைவயிற்றொளித்துவாங்குதியால்
ஆண்பாலோபெண்பாலோவப்பாலோவெப்பாலோ. (சச)

ஆதிப்பிரமனுநீயாதிப்பரமனுநீ
ஓதியுறுபொருளுக்கப்பாலுண்டாயினுநீ
சோதிச்சுடர்ப்பிழம்புநீயென்றுசொல்லுகின்ற
வேதமுறைசெய்தால்வெள்காரோவேறுள்ளார். (சரு)

எண்டிசையுந்திண்சுவராவேழுநிலைவகுத்த
வண்டப்பெருங்கோயிற்கெல்லாமழகுடைய
மண்டலங்கண்மூன்றின்மே * லென்றுமலராத
புண்டரிகமொட்டின்பொகுட்டேபுரையம்மா. (சசு)

மண்பாலமரர்வரம்பாருங்காணாத
வெண்பாலுயர்ந்தவெரியோங்குநல்வேள்வி
யுண்பாய்நீயூட்டுவாய்நீயிரண்டுமொக்கின்ற
பண்பாறிவார்பகராய் † பரமேட்டி. (சஎ)

நிற்குநெடுநீத்தநீரின்முளைத்தெழுந்த
மொக்குளேபோலமுரணிற்றவண்டங்கள்
ஒக்கவுயர்ந்துனுளேதோன்றியொளிக்கின்ற
பக்கமறிதற்கெளிதோபரம்பரனே. (சஅ)

நின்செய்கைகண்டுநினைந்தனவோநீண்மறைகள்
உன்செய்கையன்னவைதான்சொன்னவொழுக்கினவோ
என்செய்தேன்முன்னமறஞ்செய்கையெய்தினார்
பின்செல்வதில்லாப்பெருஞ்செல்வநீதந்தாய். (சகூ)

மாயப்பிறவிமயனீக்கிமாசிலாக்
காயத்தைநல்கித்துயரின்கரையேற்றிப்
பேயொத்தேன்பேதைப்பிணக்கறுத்தவெம்பெருமான்
நாயொத்தேனென்னநலனிழைத்தேனென்றான். (ருo)

ஆகாயத்தில் திவ்வியசரீரத்தோடுநின்ற கவந்தனை இராமன் காணுதல்.

என்றுங்கினிதியம்பியின்றறியக்கூறுவெனேல்
ஒன்றாதுதேவருறுதிக்கெனவுன்னாத்

* என்று மலராத-எப்பொழுதும் மலராத, சூரியனால் மலராததுமாம். என்று-சூரியன்; பெயர்ச்சொல்.

† பரமேஷ்டி-பரமே எல்லாவுலகத்தினுஞ் சிறந்ததாகிய பரமபதத்தில், ஸ்தி-இருப்பவன் என்பது பொருள்.

தன்றூயைக்கண்ணுற்றகன்றனையதன்மையனாய்
நின்றானைக்கண்டானென்றிநின்றார்நோநின்றான். (௫௧)

இராமன் இலக்குமணனுக்குக் கவந்தனைச் சுட்டிக்காட்ட
அவன் கவந்தனை நீ யாரென்று வினவல்.

பாராயிளையவனேபட்டவிவன்வேறேயோர்
பேராளன்றானொளியோங்கும்பெற்றியனாய்
நேராகாயத்தின்மிசைநிற்கின்றானீயிவனை
யாராயெனவவனுமார்கொலோநீயென்றான். (௫௨)

வேறு.

கவந்தன் தன்வரலாறு கூறுதல்.

சந்தப்பூணலங்கல்வீரதனுவெனுநாமத்தேனோர்
கந்தர்ப்பன்சாபத்தாலிக்கடைப்படுபிறவிகண்டேன்
வந்துற்றீர்மலர்க்கைதீண்டமுன்னுடைவடிவம்பெற்றேன்
எந்தைக்குமெந்தைநீரேயிசைப்பதுகேண்மினென்றான். (௫௩)

கவந்தன் இராமலக்குமணரை நோக்கி உங்களுக்குத்
துணைவேண்டும் என்றல்.

கணையுலாஞ்சிலையினீரைக்காக்குநரின்மையேனும்
இணையிலாடன்னைநாடற்கேயனசெய்தற்கேற்கும்
புணையிலாதவற்குவேலைபோக்கரிதன்னதேபோற்
றுணையிலாதவற்குமின்றுபகைப்புலந்தொலைததுநீக்கல். (௫௪)

பழிப்பறுநிலைமையாண்மைபகர்வதென்பதுமபீடத்
துழிப்பெருந்தகைமைசான்றவந்தணனுயிர்த்தவெல்லாம்
அழிப்பதற்கொருவனைவண்ணலுமறிதிரன்றே
ஒழிப்பருந்திறல்பல்பூதகணத்தொடுமுறையுமுண்மை. (௫௫)

கவந்தன், சீதையைத்தேட நல்லுபாயஞ் சொல்லுதல்.

ஆயதுசெய்கையென்பதறத்துறைநெறியினெண்ணித்
தீயவர்சேர்க்கிலாதுசெவ்வியோர்சேர்த்துசெய்தல்
தாயினுமுயிர்க்குநல்குஞ்சவரியைத்தலைப்பட்டன்னா
ளேயதோர்நெறியினெய்தி * யிரலையின்குன்றமேறி. (௫௬)

* இரலையின் குன்றம்-ருசியமுக பருவதம். ருசயமுகம் என்னும் வடமொழிப்பெயர்க்கு-கலைமான்கள் ஒலியாமல் வாழப்பெறும் மலை என்று பொருள்; அப்பெயர்க்கு ஞாபகமாக அதில் 'ருசியம்' என்னும் முதல்மொழியின் பொருளைமாத்திரம் எடுத்துக்கொண்டு, அம்மலையை இரலையின்குன்றம் என்று குறித்தார். இது நாமைகதேசே நாமக்கிரகணத்தின்பாற்படும். இரலை-கலைமான்.

கதிரவன்சிறுவனுயகனகவாணிறத்தினனை
எதிரெதிர்தழுவிநட்பினினிதமர்ந்தவனினீண்ட
வெதிர்பொருந்தோளினனைநாடுதல்விழுமிதென்ருன்
அதிர்கழல்வீரர்தாமுமன்னதேயமைவதாஞர். (கஎ)

கவந்தன் செல்ல, இராமலக்ஷ்மணர் அன்றிரவில்
மதங்காசிரமம் அடைதல்.

ஆனவன்ருெழுதுவாழ்த்தியந்தரமெழுந்துபோஞன்
மானவக்குமரர்தாமுமத்திசைவழிக்கொண்டேகிக்
கானமுமலையுநீங்கிக்கங்குல்வந்திறுத்தகாலை
யானையினிரட்டையென்னமதங்கனதிருக்கைசேர்ந்தார். (கஅ)

கo-வது, கவந்தப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கஈ௪௬.

---

## கக-வது, சவரி பிறப்புநீங்கு படலம்.

மதங்காசிரம வர்ணனை.

கண்ணியதருதற்கொத்தகற்பகதருவுமென்ன
உண்ணியநல்குஞ்செல்வமுறுசுறுஞ்சோலைஞாலம்
எண்ணியவின்பமன்றித்துன்பங்களில்லையான
புண்ணியம்புரிந்தோர்வைகுந்துறக்கமேபோன்றதன்றே. (க)

இராமன் சவரியைக்கண்டு க்ஷேமம் விசாரித்தல்.

அன்னதாமருக்கைநண்ணியாண்டுநின்றளவில்காலந்
தன்னையேநினைந்துநோற்குஞ்சவரியைத்தலைப்பட்டன்னுட்
கின்னுயிரருளித்தீதின்றிருந்தனைபோலுமென்ருன்
முன்னிவற்கிதுவென்றெண்ணலாவதோர்மூலமில்லான். (உ)

* சவரி-இவள், மதங்கரது சிஷ்யர்களுக்கு உபசாரஞ் செய்துகொண்டு அவ்வாச்சிரமத்திலேயே வசித்துவந்த துறவறம்பூண்ட ஓர் தவப்பெண். க்ஷத்திரியஸ்திரீயும் வைசியபுருஷனும் சேர்ந்து பிறந்தவர்களுக்கு சபரரென்று சொல்லுவர்; இச்சாதியாருக்கு தேன் கொண்டுவந்து விற்கும் தொழில். பிறப்பு நீங்குதல்-மறுபடியும் (பூலோகத்தில்) பிறவாதபடி மோக்ஷவீடடைதல்.

சவரி இராமனுக்கு விருந்துசெய்து உபசரித்தல்.

ஆண்டவளன்பினேத்தியமுதிழியருவிக்கண்ணள்
மாண்டதென்மாயப்பாசம்வந்ததுவரம்பில்காலம்,
பூண்டமாதவத்தின்செல்வம்போயதுபிறவியென்பாள்
வேண்டியகொணர்ந்துநல்கவிருந்துசெய்திருந்தவேலை. (௩

பிரமன் முதலியோர் தன்னைத் தத்தம் உலகிற்கு வரும்படி அழைத்தனரென்று சவரி கூறுதல்.

ஈசனுங்கமலத்தோனுமிமையவர்யாருமெந்தை
வாசவன்றானுமீண்டுவந்தனர்மகிழ்ந்துநோக்கி
ஆசறுதவத்திற்கெல்லையணுகியதிராமற்காய
பூசனைவிரும்பியெம்பாற்போதுதியென்றுபோனார். (௪

சவரி இராமனைப் புகழ, இராமன் அவளைநோக்கி முகமன்கூறல்.

இருந்தனனெந்தைநீயீண்டெய்துதியென்னுந்தன்மை
பொருந்திடவின்றுதானென்புண்ணியம்பூத்ததென்ன
அருந்தவத்தாசிதன்னையன்புறநோக்கிநங்கள்
வருந்துறுதுயரந்தீர்த்தாயம்மனைவாழியென்றார். (௫)

சவரி அவர்களுக்குச் சுக்கிரீவனுள்ளவிடத்துக்குச் செல்லும் வழியைக் கூறுதல்.

அனகனுமிளையகோமன்றவனுறைந்தபின்றை
வினையறுநோன்பினாளுமெய்ம்மையினோக்கிவெய்ய
துணைபரித்தேரோன்மைந்தனிருந்தவத்துளக்கில்குன்ற
நினைவரிதாயற்கொத்தநெறியெலாநினைந்துசொன்னாள். (௬)

சவரி கூறினவற்றை இராமன் கேட்டல்.

வீட்டினுக்கமைவதானமெய்ந்நெறிவெளியிற்றாகக்
காட்டுறுமறிஞரென்னவன்னவள்கழறிற்றெல்லாங்
கேட்டனனென்பமன்னோகேள்வியாற்செவிகண்முற்றுந்
தோட்டவருணர்வினுண்ணுமமுதத்தின்சுவையாய்நின்றான். (௭)

சவரி முத்தியடைய, இராமலக்ஷ்மணர் அப்பாற்செல்லுதல்.

பின்னவளுழன்றுபெற்றயோகத்தின்பெற்றியாலே
தன்னுடலுறந்துதானத்தனிமையினினிதுசார்ந்தா
ளன்னதுகண்டவீரரதிசயமளவின்றெய்திப்
பொன்னடிக்கழல்களார்ப்பப்புகன்றமாநெறியிற்போனார். (௮)

இராமலக்ஷ்மணர் பம்பைப்பொய்கையை யடைதல்.

தண்ணெனுங்கானுங்குன்றுந் திசைகளுந் தவிரப்போனார்
மண்ணிடைவைகளூறும் வரம்பிலா மாக்களாடக்
கண்ணியவினைகளென்னுங் கட்டழல் கதுவலாலே
புண்ணியமுருகிற்றன்ன பம்பையாம் * பொய்கைபுக்கார். (௬)

கக-வது, சவரிபிறப்புநீங்குபடலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉ0௬.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

ஆரணியகாண்டம் முற்றிற்று.

* பொய்கை-மானிடராக்காத நீர்நிலை.

# ஆரணியகாண்டம்



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத்கம்பராமாயணம்

நான்காவது

# கிஷ்கிந்தாகாண்டம்.



இது

காரப்பங்காடு வித்வான்

கோபாலாசாரியர் மாணுக்கராகிய

தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்கார்

பரிசோதித்தது


அ. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

அவர்களது

சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1927

# கிஷ்கிந்தாகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்

நான்காவது,

# * கிஷ்கிந்தாகாண்டம்.

## முதலாவது, § பம்பைப்படலம்.

### தனியன்.

தாலாற்றுங்கவிச்சககரவர்த்திசெய்யுடாளுமுடைமைநோக்கி
† வரலாற்றுமுறையின்மும்மைத்தமிழுணர்ந்தமுதியோருமற்றுளோரும்
முரலாற்றுங்கடற்பாரிற்கம்பசூத்திரமுதுசொன்மொழிபவன்னேற்
கொரலாற்றுமால்சங்கமொக்குமெனின்யாம்வேறொப்பியம்பலாமால்.

### காப்பு.

மூன்றுருவெனக்குணமும்மையாமுதற்
றோன்றுருவெவையுமம்முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவுமிடையினின்றவுஞ்
சான்றுருவுணர்வினுக்குவந்ததாயினான். (க)

### நூல்.

இதுமுதலிருபத்தொரு பாடல் பம்பையின் வருணனை.

தேன்படிமலரதுசெங்கண்வெங்கைம்மா
தான்படிகின்றதுதெளிவுசான்றது
மீன்படிமேகமும்படிந்துவீங்குநீர்
வான்படிந்துலகிடைக்கிடந்தமாண்பது. (உ)

ஈர்ந்தநுண்பளிங்கெனத்தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்த ‡ பித்திகை
சேர்ந்துழிச்சேர்ந்துழிநிறத்தைச்சேர்தலான்
ஓர்ந்துணர்விலவருள்ளமொப்பது. (௩)

குவான்மணித்தடந்தொறும்பவளக்கோலிவர்
கவானரசன்னமும்பெடையுங்காண்டலில்
தவாநெடுவானகந்தயங்குமீனொடும்
உவாமதியுலப்பிலவுதித்ததொப்பது. (ச)

---

* கிஷ்கிந்தம்-ஒருமலை; அம்மலையைச்சார்ந்தநாட்டுக்கும் அப்பெயர்; அதனது முக்கியபட்டணம் கிஷ்கிந்தை, மலையிடையே குகைபோலுள்ளது. § பம்பை-ஒருபெரியகுளம்.

† வரலாற்று முறையாவது அகத்தியன்வழிவந்த அருந்தமிழ்க் கலைகளை முதுமொழிப்பெரும்புலவர்மாட்டுப் புலமைநிரம்புங்காறும் பயிறல்.

‡ பித்திகை-கரை.

ஓதநீருலகமுமுயிர்களியாவையும்
வேதபாரகரையும்விதிப்பவேட்டநாள்
சீதம்வீங்கு * வரியைச்செருக்குமாறொரு
காதிகாதலன்றருகடலினன்னது. (௫)

எற்பொருநாகர்தமிருக்கைமீதெனக்
கிற்பதோர்காட்சியதெனினுங்கீழுறக்
கற்பகமனையவக்கவிஞர்நாட்டிய
சொற்பொருளாமெனத்தோன்றல்சான்றது. (௬)

களனவிலன்னமேமுதலகண்ணகன்
தளமலர்ப்புள்ளொலிதழங்கவின்னதோர்
கிளவியென்றறிவருங்கிளர்ச்சித்தாதலால்
வளநகர்க் † கூலமேபோலுமாண்பது. (௭)

அரிமலர்ப்பங்கயத்தன்னமெங்கணும்
புரிகுழல்புக்கிடம்புகல்கிலாமையாம்
திருமுகநோக்கலதிறந்துதீர்துமென்
றெரிபுகுவனவெனத்தோன்றுமீட்டது. (௮)

காசடைவிளக்கியகாட்சித்தாயினும்
மாசடைபேதைமையிடைமயக்கலான்
ஆசடைநல்லுணர்வனையதாமெனப்
பாசடைவயின்றொறும்பரந்தபண்பது. (௯)

களிப்படாமனத்தவன்காணிற்கற்பெனும்
கிளிப்படாமொழியவள்விழியின்கேளெனத்
துளிப்படாநயனங்களிப்பச்சோருமென்
‡ றொளிப்படாதாயிடையொளிக்குமீனது. (௧௦)

கழைபடுமுத்தமுங்கலுழிக்கார்மத
மழைபடுதாளமுமணியும்வாரிநேர்
இழைபடர்ந்தனையநீருருவியெய்தலாற்
குழைபடுமுகத்தியர்கோலமொப்பது. (௧௧)

பொங்குவெங்கடகரிபொதுவினுடலின்
கங்குலினெதிர்பொருகலவிப்பூசலின்
அங்கநொந்தலசியவிலையினுய்வனை
மங்கையர்வடிவெனவருந்துமெய்யது. (௧௨)

விண்டொடர்நெடுவரைத்தேனும்வேழத்தின்
வண்டுளர்நறுமதமழையுமண்டலால்

---

* உவரி-கடல். † கூலம்-கடைவீதி.

‡ ஒளிப்படாது - விளங்காமல்.

உண்டவர்பெருங்களியுறலினோதியர்
தொண்டையங்கனியிதழ்த்தோன்றல்சான்றது. (கங)

ஆரியமுதலியபதினெண்பாடையிற்
* பூரியரொருவழிபுகுந்ததாமெனா
ஓர்விலகிளவிகளொன்றொடொப்பில
சோர்விலவிளம்புபுட்டுவன்றுகின்றது. (கச)

தானுயிருறத்தணிதழுவும்பேடையை
ஊனுயிர்பிரிந்தெனப்பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம்வயங்குநூபுரத்
தேனுகுமழலையைச்செவியினோர்ப்பது. (கரு)

ஈறிடலரியமால்வரைநின்றீர்ந்திழி
ஆறிடுவிரையகிலாரமாதியா
ஊறிடவொண்ணகக்குறைத்தவொண்டளச்
சேறிடு † பரணியிற்றிகழுந்தோற்றது. (கசு)

வேறு.

நவ்விநோக்கியரிதழ்நிகர்குமுதத்தினறுந்தேன்
வவ்வுமாந்தரிற்களிமயக்குறுவன ‡ மகரம்
எவ்வநீங்கியபிறப்பினொடிறப்பிலையென்னக்
கவ்வுமீனொடுமுழுகுவவெழுவன § கரண்டம். (கஎ)

கவளயானையனாற்கந்தக்கடிநறுங்கமலத்
தவளைவீகலமாவதுசெய்துமென்றருளித்
திவளவன்னங்கடிருநடைகாட்டுவசெங்கண்
குவளைகாட்டுவதுவரிதழ்காட்டுவகுமுதம். (கஅ)

பெய்கலன்களினிலங்கொளிமருங்கொடுபிறழ
வைகலும்புனல்குடைபவர்வானரமகளிர்
¶ செய்கையன்னங்களேந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்களேந்தியபூங்கொம்பர்பொலிவ. (ககூ)

ஏலுநீர்நிழலிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல்புகுந்துளவாமெனப்பொங்கி
ஆலுமீன்கணமஞ்சினவலம்வரவஞ்சிக்
() கூலமாமரத்திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம். (உ0)

அங்கொர்பாகத்தினஞ்சனமணிநிழலடையப்
பங்குபெற்றொளிர்பதுமராகத்தொளிபாயக்

---

* பூரியர்-இழிஞர், மிக்கோருமாம். † பரணி-பாத்திரம். ‡ மகரம்-ஓர்மீன். § கரண்டகம்-நீர்க்காகம். ¶ செய்கையன்னம்-அன்னப்பறவை. () கூலம்-கரை.

கங்குலும்பகலும்மெனப்பொலிவெய்துகரைய
மங்கைமார்தடமுலையெனப்பொலிவன * வாளம். (உக)

வலிநடத்தியவாளெனவாளைகள்பாய
நிலைநடத்தியநிரைதொறுமுகள்வனநீர்நாய்
கலிநடைக் † கழைக்கண்ணுளரெனநடங்கலினைப்
பொலிவுடைத்தெனத்தேரைகள்புகழ்வனபோலும். (உஉ)

இராமன் பம்பையைக்கண்டு சானகியைநினைந்து புலம்புதல்.

அன்னதாகியவகன்புனற்பொய்கையையணுகிக்
கன்னியன்னமுங்கமலமுமுதலியகண்டான்
தன்னினீங்கியதனியற்குருகினன்றளர்வான்
உன்னுகல்லுணர்வொடுங்கிடப்புலம்பிடலுற்றான். (உங)

(வேறு.)

வரியார்மணிக்கால்வாளமேமடவன்னங்காளெனைநீங்கத்
தரியாணடந்தாளில்லளேற்றளர்ந்தபோதுந்தகைவேயோ
எரியாநின்றவாருயிருக்கிரங்கினாலிதிசையன்றே
பிரியாதிருந்தேற்கொருமாற்றம்பேசிற் ‡ பூசல்பெரிதாமோ. (உச)

வண்ணநறுந்தாமரைமலரும்வாசக்குவளைநாண்மலரும்
புண்ணினெரியுமொருநெஞ்சம்பொதியுமருந்திற்றரும்பொய்காய்
கண்ணுமுகமுங்காட்டுவாய்வடிவுமொருகாற்காட்டாயோ
ஒண்ணுமென்னினஃதுதவாது § லோவினருமுயர்ந்தாரோ. (உரு)

விரிந்தகுவளைசேதாம்பல்விரைமென்கமலங்கொடிவள்ளை
தரங்கங்கெண்டைவராலாமையென்றித்தகையதமைநோக்கி
மருந்தினனையாளவயவங்களவைநிற்கண்டேன்வல்லரக்கன்
அருந்தியகல்வான்சிந்தினவோவாவியுரைத்தியாமன்றே. (உசா)

ஓடாநின்றகளிமயிலேசாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்றநீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத்தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்றாயாயிரங்கணுடையாய்க்கொளிக்குமாறுண்டோ. (உஎ)

o அடையீரெனினுமொருமாற்றமறிந்ததுரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோபிழையாதாற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரோநடுவிலாதார்நணியவரோ
உடையீர்பகைதானுமைநோக்கியுவக்கின்றேனைமுனிவீரோ. (உஅ)

---

* வாளம்-சக்கரவாளப்பறவை. † கழைக்கண்ணுளர்-கழைக்கூத்தர்.
‡ பூசல்-இரைச்சல். § உலோவினர்-உலோபகுணமுடையார்.
o அடையீரெனினும்-அடைகாத்திருப்பவாயினும்.

பொன்பால்பொருவும்விரையல்லிபுல்லிப்பொலிந்தபொலந்தாது
தன்பாற்றழுவுங்குழல்வண்டு * தமிழ்ப்பாட்டிசைக்குந்தாமரையே
என்பாலில்லையப்பாலோவிருப்பாரல்லர்விருப்புடைய
உன்பாலில்லையென்றக்காலொளிப்பாரோடுமுறவுண்டோ. (௨௯)

ஒருவாசகத்தைவாய்திறந்திட்டுதவாய்பொய்கையுள்ளொடுங்கும்
திருவாயனையசேதாம்பற்கயலேகிடந்தசெங்கிடையே
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும்பவழச்செவ்விக்கொழுங்கனிவாய்
தருவாயவ்வாயன்னாளமிழ்துந்தண்ணென்மொழியுந்தாராயோ. (௩௦)

அலக்கணுற்றேற்குற்றதவற்கடைவொன்றுண்டேகொடிவள்ளாய்
மலர்க்கொம்பனையமடச்சீதைகாமேதமற்றொன்றல்லையால்
பொலக்குண்டலமுங்கொடுங்குழையும்புனைதாழ்முத்தின்பொற்றோடும்
விலக்கிவர்த்தாய்விளம்பாதேயின்னும்பூசல்விரும்புதியோ. (௩௧)

பஞ்சுபூத்தவிரற்பதுமம்பவளம்பூத்தவடியாளென்
நெஞ்சுபூத்ததாமரையினிலயம்பூத்தாணிறம்பூத்த
மஞ்சுபூத்தமலர்பூத்தகுழலாள்கண்போன்மணிக்குவளாய்
நஞ்சுபூத்ததாலென்னாகுவாயென்னைநலிவாயோ. (௩௨)

வேறு.

என்றயாவுயிர்க்கின்றவனேடலிழ்
கொன்றையாவிப்புறத்திவைகூறியான்
பொன்றயாதும்புகல்கிலேபோலுமால்
வன்றயாவிலியென்னவருந்தினான். (௩௩)

வாரணித்தழைமாப்பிடிவாயிடைக்
காரணிக்கலுழிக்கருங்கைம்மலை
நீரளிப்பதுநோக்கினனின்றனன்
பேரளிக்குப்பிறந்தவில்லாயினான். (௩௪)

இளையோனிராமனைநீராடிநெடியோற்றொழுகென்றல்.

ஆண்டவ்வள்ளலையன்பெனுமாரணி
பூண்டதம்பிபொழுதுகழிந்தத்தால்
ஈண்டிரும்புனறோய்ந்துன்னிசையென
நீண்டவன்கழறொழுநெடியோயென்றான். (௩௫)

இராமன் பம்பையில்மூழ்குதல்.

அரசுமவ்வழிநின்றரிதெய்தியத்
திரைசெய்தீர்த்தமுன்செய்தவமுண்மையால்
வரைசெய்மாமதவாரணநாணுற
விரைசெய்பூம்புனலாடலைமேயினான். (௩௬)

* தமிழ்ப்பாட்டு-இனிமையானபாட்டு.

நீத்தநீரினெடியவன்மூழ்கலும்
தீத்தகாமத்தெறுகதிர்த்தீயினால்
* காய்த்திரும்பைக்கருமகக்கம்மியன்
தோய்த்ததண்புனலொத்ததுதோயமே. (௩௭

(வேறு.)

சூரியனுதித்தல்.

ஆடினானன்னமாயருமறைகள்பாடினான்
நீடுநீர்மூன்னைநானெறிமுறையி † னேமிதாள்
சூடினான்முனிவர்தந்தொகுதிசேர்சோலைவாய்
மாடுதான்வைகினனெரிகதிரும்வைகினான். (௩௮

சந்திரனுதித்தல்.

அந்தியாள்வந்துதானணுகவங்கணுகுருச்
சந்தவார்கொங்கையாடணிமைதணிநாயகன்
சிந்தையாலொத்துதேய்பொழுதுதெறுசீதநீர்
இந்துவானுந்துவானெரிகதிரெனென. (௩௯

(வேறு.)

அனைத்துயிருமொடுங்கல்.

பூவொடுங்கினவிரவுபுள்ளொடுங்கினபொழில்கண்
மாவொடுங்கினமானுமலையொடுங்கினகிளிகள்
நாவொடுங்கினமயில்கணடமொடுங்கினகுயில்கள்
கூவொடுங்கினபிளிறுகுரலொடுங்கினகளிறு. (௪0)

அனைத்துயிருமுறங்கல்.

மண்டுயின்றனமலையமலைதுயின்றனமறுவில்
பண்டுயின்றனவிரவுபணிதுயின்றனபகரும்
விண்டுயின்றன ‡ கழுதும்விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றிலநெடியகடறுயின்றனகளிறு. (௪௧)

இராவுநீங்குதல்.

பொங்கிமுற்றியவுணர்வுபுணர்தலும்புகையினொடு
பங்கமுற்றனையவினைபரிவுறும்படிமுடிவில்
கங்குலிற்றதுகமலமுகமெடுத்தனகடலில்
வெங்கதிர்க்கடவுளெழு § விமலன்வெந்துயரினெழ. (௪௨)

* காய்த்து-காய்ச்சு. எதுகை நயநோக்கிச் சகரந் தகரமாயின்றதென்ப.

† நேமி-மண்டு சந்தியகாலத்தையுடைய சூரியனென்று பொருள்.

‡ கழுது-பிசாசு. § விமலன்-அழுக்கில்லாதவனான இராமன்.

பம்பைக்கரையினின்றும் இராமனும் இளையோனும் சீதையை நாடிப்போகுதல்.

காலையேபடி துவரவேகினார்கடல்கவினு
சோலையேய்மலைதழுவுகானநெறிதொலைய
ஆலையேய்துபுனியகருடாார்கலிபதிக்கு
போலவேயுறைசெய்புனமாலைநாடிதப்புரானே. (௪௧)

க-வது, பம்பைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-[illegible].

---

## உ-வது, அநுமப்படலம்.

இராமனு மிளையோனும் வானரரிருந்தமலையையுறுதலு மனுமானஞ்சுதலும்.

எய்தினார்சவரிசொடுதேயமால்வரையயலிதின்
நொய்தினேரினைதனிநேனனைசால் † கவியரசு
செய்வதோர்கிலனிவர்கடெவ்வராமெனவெருவி
உய்துநாமெனவினைவிடோடினான்மலைமுழையின். (௧)

காலின்மாமதலையிவர்காண்டிநேகையுடையா
வாலியேவலின்வரவிடுநர்கடாம்வரிசிலையர்
நீலமால்வரையனையர்நீதியாய்நினைதியெனா
‡ மூலமோர்கிலர்மறுகியோடினார்முறைமையதனின். (௨)

தாரனீலனைமருவுதாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன்மேருமால்வரையனைகள்
பாரமாமலையினொருபாலமோடிதல்புரிய
ஆரமார்பருமதனினேகுமாறறல்கருதி. (௩)

மானைநாடுதல்புரிநர்வாலியேவலின்வருதல்
ஆனவாறலர்மறுகியாவிசோர்தலையரென
ஏனைவானரர்சிலருமேகிமாமுழையின்முழு
ஞானநாதனையறிவினோடிமாருதிமொழியும். (௪)

அவ்விடத்தவர்மறுகியஞ்சிநெஞ்சழியமைதி
வெவ்விடத்தினைமறுகுதேவர்தானவர்வெருவல்
§ தவ்விடத்தனியருளுதாழ்சடைக்கடவுளென
இவ்விடத்தினிதிருமினஞ்சலென்றிடையுதவி. (௫)

---

* அனுமான்-(குழந்தைப்பருவத்தில் சூரியனைப் பழமென்று பிடிக்கத் தாவியகாலத்தில் இந்திரனது வஜ்ஜிராயுதத்தால் அடிக்கப்பட்டுச் சிதைந்த) கன்னமுடையவன். † கவியரசு-சுக்ரீவன். ‡ மூலம்-காரணம்.
§ தவ்விடத்து-கொண்டவிடத்து.

அஞ்சனைக்கொருசிறுவனஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொரு * மாணவப்படிவமொடு
வெஞ்சினத்தொழிலர்தவமெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறையநின்றுகற்பினினினையும்.

† தேவருக்கொருதலைவராமுதற்றேவரெனின்
மூவர்மற்றிவரிருவர்மூரிவிற்கரிவரை
யாவரொப்பவருலகின்யாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்நிலைமைதேர்வதெக்கிழமைகொடு.

சிந்தையிற்சிறிதுதுயர்சேர்வுறத்தெருமரலின்
நொந்துயர்த்தவனையர்நோவுறச்சிறியரலர்
அந்தரத்தமரரலர்மானிடப்படிவர்மயர்
சிந்தனைக்குரியபொருடேடுதற்கொருநிலையர்.

தருமமுந்தகவுமிவர்தனமெனுந்தகையரிவர்
கருமமும்பிறிதொர்பொருள்கருதியன்றதுகருதின்
அருமருந்தனையதிடையழிவுவந்துளததனை
இருமருங்கினுநெடிதுதுருவுகின்றனரிவர்கள்.

கதமெனும்பொருண்மையிலர்கருணையின்கடலனையர்
இதமெனும்பொருளலதொரியல்புணர்ந்திலரிவர்கள்
‡ சதமனஞ்சுறுநிலையர்தருமனஞ்சுறுசரிதர்
மதனனஞ்சுறுவடிவர்மறலியஞ்சுறுவிறலர். (௮

வேறு.

என்பனபலவுமெண்ணியிருவரையெய்தநோக்கி
அன்பினனுருகுகின்றவுள்ளத்தனார்வத்தோரை
முன்பிரிந்தனையர்தம்மைமுன்னினனென்னநின்றான்
தன்பெருங்குணத்தாற்றன்னிற்றனலதொப்பிலாதான். (௯

தன்கன்றுகண்டவன்னதன்மையதாகட்பேழ்வாய்
மின்கன்றுமெயிற்றன் § கோண்மாவேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப்பேய்கணித்திரங்குகின்ற
எண்கன்றுகின்றதெண்ணிற்பற்பலவிவரையம்மா. (க

மயின்முதற்பறவையெல்லாமணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறற்கிரங்கிநீதாவிருஞ்சிறைப்பந்தர்வீசி
எயில்வகுத்தெய்துகின்றவிண்முகிற்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப்பயப்பயத்தழுவும்பாங்கர். (கக

---

* மாணவப்படிவம்-பிரமசாரியுருவம். † தேவருக்கொருதலைவராகி முதற்றேவராவார் அயனரியரனென்பார். ‡ சதமன்-இந்திரன். சதமன் வென்பது சதமனெனநின்றது. § கோண்மாவேங்கை-கொலையினை யுடைய பெரிய வேங்கை.

காயெரிகனலுங்கற்கள்கள்ளுடைமலர்களேபோல்
தூயசெங்கமலபாதந்தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறுமாறெனும்புல்லுமெல்லாம்
சாய்வுறுந்தாழ்வும்போலிங்கிவர்களோதருமமாவார். (௧௪)

துன்பினைத்துடைத்துமாயதொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றிமீளாநெறியுய்க்குந்தேவரோதாம்
என்பெனக்குருகுகின்றதிவர்கின்றதளவில்காதல்
அன்பினுக் * கவதியில்லையடைவென்கொலறிதறேற்றேன். (௧௫)

இவ்வழியெண்ணியாண்டவ்விருவருமெய்தலோடும்
செவ்வழியுள்ளத்தானுந்தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றாகநுங்கள்வரவெனக்கருணையோனும்
எவ்வழிநீங்கிப்போய்நீயாரெனவியம்பலுற்றான். (௧௬)

அநுமான் றன்வரலாறு கூறல்.

மஞ்செனத்திரண்டகோலமேனியமகளிர்க்கெல்லாம்
நஞ்செனத்தகையவாகிநளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்யகண்ணையான் † காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றின்வந்தேனாமமுமநுமனென்றான். (௧௭)

இம்மலையிருந்துவாழுமெரிகதிர்ப் ‡ பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன்றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையனேவவினவியவந்தேனென்றான்
எம்மலைக்குலமுந்தாழவிசைசுமந்தெழுந்ததோளான். (௧௮)

மாற்றமஃதுரைத்தலோடும்வரிசிலைக்குரிசின்மைந்தன்
தேற்றமுற்றிவனினூங்குச்செவ்வியோரின்மைதேறி
ஆற்றலுநிறைவுங்கல்வியமைதியுமறிவுமென்னும்
வேற்றுமையிவனோடில்லையாமெனவிளம்பலுற்றான். (௧௯)

இராமன் இளையவனிடம் அநுமான் சொல்லாற்றலை
வியந்துகூறல்.

இல்லாதவுலகத்தெங்குமிங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக்கடலுமேயென்னுங் § காட்சி
சொல்லாலேதோன்றிற்றன்றேயார்கொலிச்சொல்லின்செல்வன்
வில்லார்தோளிளையவீரவிரிஞ்சனோவிடைவலானோ. (௨௦)

$ மாணியாம்படிவமன்றுமற்றிவன்வடிவமைந்த
ஆணியிவ்வுலகுக்கெல்லாமென்னலாமாற்றற்கேற்ற

* அவதி-எல்லை. † காற்றின்வேந்தன்-வாயுதேவன். ‡ பரிதிச்செல்வன் செம்மல்-சூரியகுமாரனான சுக்கிரீவன். § காட்சி-அற்புதம். $ மாணி-பிரமசாரி.

சேணுயர்பெருமைதன்னைச்சிக்கறத்தெளிந்தேன்பின்னர்க்
காணுதிமெய்ம்மையென்றுதம்பிக்குக்கழறிக்கண்ணன்.

மற்றுமிவ்வுலகத்துள்ளமுனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றுச்சுருதியின்றெருகுதியாவும்
முற்றறிசரும்பிம்மாணிமொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியர்மூவர்க்கேயும்பேராற்றலரிதுமன்றே.

அனுமனைச் சுக்ரீவனைக்காட்டென விராமன்கேட்டல்.

எவ்வழியிருந்தான்சொன்னகவிக்குலத்தரசன்யாங்கள்
அவ்வழியவனைக்காணு * மருத்தியாலணுகவந்தேம்
இவ்வழிநின்னையுற்றவெமக்கு நீயின்சொலன்ன
செவ்வழியுள்ளத்தோனைக்காட்டுதிதெரியவென்றான். (

அவ்வாறாயிற் சுக்கிரீவன் தவச்செல்வ நல்லனென்றல்.

மாதிரப்பொருப்போடோங்கிவாம்பிலாவுலகின்மற்றுப்
† பூதரப்புயத்துவீரர் நும்மொக்கும்புனிதர்யாரே
ஆதரித்தவனைக்காண்டற்கணுகினிரென்னிலன்னான்
நீதவத்துமையச்செய்தசெய்தவச்செல்வமன்றே. (௨

இரவிதன்புதல்வன்றன்னை ‡ யிந்திரன்புதல்வனென்னும்
§ பரிவிலன்சீறப்போந்துபருவரற்கொருவனாகி
அருவியங்குன்றினெண்ணேடிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோராமைவின்வந்தீர்வரையினும்வளர்ந்ததோளீர். (௨

அஞ்சினார்க்கு அபயமளித்தலே சிறந்ததென்னல்.

ஒடுங்கலிலுலகம்யாவுமுவந்தனவுதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத்தொல்லறந்துணிவரன்றேல்
கொடுங்குலப்பகைஞனுகிக்கொல்லியவந்தகூற்றை
நடுங்கினர்க்கபயநல்குமதனினுநல்லதுண்டோ. (௨௪

எம்மையேகாத்திரென்றற்கெளிதரோவிமைப்பிலாதோர்
தம்மையேமுதலிட்டான்றசராசரஞ்சமைந்தவாற்றல்
நும்மையேயுலகங்காக்குமுதல்வர்நீர்முருகற்செவ்வி
உம்மையேபுகல்புக்கேமுக்கி $ தின்வருமுறுதியுண்டோ (௨௭

யாரெனவிளம்புகேனெங்குலத்தலைவற்கும்மை
வீரநீர்பணித்திரென்றான்மெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன்மரபுளிவாய்மையாதும்
சோர்விலனிலைமையெல்லாந்தெரிவுறச்சொல்லலுற்றான். (௨௮)

* அருத்தி-விருப்பம். † பூதரம்-மலை. ‡ இந்திரன் புதல்வன்-வாலி
§ பரிவு-அன்பு. $ இதின்-இதனினும்.

இதுமுதல் மூன்றுபாடல் இளையோன் அநுமானுக்கு இராமன் வரலாறு உரைத்தல்.

சூரியன்மரபிற்றோன்றிச்சுடர்நெடுநேமியாண்ட
ஆரியனமரர்க்காகியசுரரையாவியுண்ட
வீரியன்வேள்விசெய்துவிண்ணுலகோடுமாண்ட
காரியன்கருணையன்னகண்ணனக்கவிகைமன்னன். (உகூ)

புயறருமதத்திண்கோட்டுப்புகர்மலைக்கிறையையூர்ந்து
மயறருமவுணர்யாருமடிதரவரிவிற்கொண்ட
இயறரும்புலமைச்செங்கோன்மனுமுதல்யாருமொவ்வார்
தயரதன்கனகமாடத்தடமதிலயோத்திவேந்தன். (௩0)

அன்னவன்சிறுவனிவ்வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந்தம்பிக்குத்தகவினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தானெம்முனிராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக்கேவல்செய்யடியன்யானே. (௩க)

இராமனடிகளில் அநுமான் வணங்குதல்.

என்றவன்றோற்றமாதியிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலிறுதியாகப்புகுந்துளபொருள்களெல்லாம்
ஒன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்த்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்தனெடிதுவந்தடியிற்றாழ்ந்தான். (௩உ)

அநுமான் தன்னை வானரரிலொருவனென்றல்.

தாழ்தலுந்தகாதசெய்ததென்னைநீதருமமன்றால்
கேள்விநான்மறைவலாளாவென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரமாருதிபதுமச்செங்கண்
ஆழியாயடியேன்றானு * மரிக்குலத்தொருவனென்றான். (௩௩)

அநுமான் தன்னுருவெய்திநிற்றல்.

மின்னுருக்கொண்டவில்லோர்வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும்பெருமையாம்பொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேருபுயத்திற்குவமைபோதாத்
தன்னுருக்கொண்டுநின்றான்றருமத்தின்றனிமைதீர்ப்பான். (௩௪)

கண்டிலனுலகமூன்றுங்காலினாற்கடந்துகொண்ட
புண்டரிகக்கணாழிப்புரவலன்பொலங்கொள்சோதி
குண்டலவதனமென்றாற்கூறலாந்தகைமைத்தன்றால்
பண்டைநூல்கதிரோன்சொல்லப்படித்தனன்படிவமம்மா. (௩௫)

---

* அரி-குரங்கு.

அனுமனுருவினைக்கண்ட விராமன் வியப்பெய்தியுரைத்தல்.

தாட்படாக்கமலமன்னதடங்கணான்றம்பிக்கம்மா
கீட்படாநின்றநீக்கிக்கிளர்படாதாகியென்றும்
நாட்படாமறைகளாலுநவைபடாஞானத்தாலும்
கோட்படாப் * பதமேயையகுரக்குருக்கொண்டதென்றான். (௩௬)

சுக்கிரீவன்றன்மை சொல்லரிதென்னல்.

நல்லனநிமித்தம்பெற்றேநம்பியைப்பெற்றேநம்பால்
இல்லையேதுன்பமானதின்பமுமெய்திற்றின்றும்
வில்லினாயிவனைப்போலாங்கவிக்குலக்குரிசில்வீரன்
சொல்லினுமேலவல்செய்வானவனிலைசொலற்பாற்றே. (௩௭)

அனுமன் விடைபெற்றுச் செல்லுதல்.

என்றகமுவந்துகோலமுகமலர்ந்தினிதினின்ற
குன்றுறழ்தோளினானைநோக்கியக்குரக்குச்சீயம்
சென்றவன்றன்னையின்னேகொணர்கின்றேனென்சிறிதும்போது
வென்றியிரிருக்கின்றென்றவிடைபெற்றவிரைவிற்போனான். (௩௮)

௨-வது, அனுமப்படலம்-முற்றிற்று.

ஆக, திருவிருத்தம்-௮௧.

---

## ௩-வது, நட்புக்கோட்படலம்.

வேறு.

போனமைந்தனமணிப்புயநெடும்புகழினான்
ஆனதன்பொருசினத்தரசன்மாடணுகினான்
யானுமென்குலமுமிவ்வுலகுமுய்ந்தனமெனா
மானவன்குணமெலாநினையுமாமதியினான். (௧)

வாலியைக்கொல்லுங் காலன் வந்தானென்றல்.

மேலவன்றிருமகற்குரைசெய்தான்விரைசெய்தார்
வாலியென்றளவிலாவலியினானுயிர்செறக்
காலன்வந்தனனிடர்க்கடல்கடந்தனமெனா
ஆலமுண்டவனினின்றருநடம்புரிகுவான். (௨)

---

* பதம்-பதத்திலுள்ள பொருள்.

இதுமுதல் ௧௰-பாடல்கள் இராமசரிதத்தினை அனுமான் சுக்ரீவர்க்கு உணர்த்தல்.

மண்ணுளார்விண்ணுளார்மாறுளார்வேறுளார்
எண்ணுளாரியலுளாரிசையுளார்திசையுளார்
கண்ணுளாராயினார்பகையுளார்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க்கமிழ்தமேபோலுளார். (௧)

* சூழிமால்யானையார்தொழுகழற்றயரதன்
பாழியாலுலகெலாமொருவழிப்படரவாழ்
ஆழியான்மைந்தர்பேரறிவினாராகினார்
ஊழியாலெளிதினிற்கரசுதந்துதவுவார். (௨)

நீதியார்கருணையின்னெறியினார்நெறிவயிற்
பேதியாநிலைமையார்தேவரினும்பெருமையார்
போதியாதளவிலாவுணர்வினார்புகழினார்
காதிசெய்கருகடற்கடவுள்வெம்படையினார். (௩)

வேலிகற்சிலையுதாடகைவிளிந்தருளவிற்
கோலியக்கொடுமையாள்புதல்வனைக்கொன்றுதன்
காலியற்பொடியினானெடியகற்படிவமாம்
† ஆலிகைக்கரியபேருருவளித்தருளினான். (௪)

நல்லுறப்பமையுதம்பியரின்முன்பவனையர்
செல்லுறப்பரியபேரெழுசுடர்க்கடவுடன்
பல்லிறுத்தவன்வலிக்கமைதிரியம்பகமெனும்
வில்லிறுத்தருளினான்மிதிலைபுக்கனையநாள். (௭)

‡ உளைவயப்புரவியானுதவுதற்றொருசொலால்
அளவில்கற்புடையசிற்றவைபணித்தருளலால்
வளையுடைப்புணரிசூழ்மகிதலத்திருவெலாம்
இளையவற்குதவியித்தலையெழுந்தருளினான். (௮)

○ தெவ்விராவகைநெடுஞ்சிகைவிராமழுவினான்
அவ்விராமனையுமாவலிதொலைத்தருளினான்
இவ்விராகவன்வெகுண்டெழுவிராவனையனும்
வெவ்விராதனையிராவகைதுடைத்தருளினான். (௯)

கரன்முதற்கருணையற்றவர்கடற்படையொடும்
சிரமுகச்சிலைகுனித்துதவுவான்றிசையுளார்
பரமுகப்பகைதுமித்தருளுவான்பரமராம்
அரன்முதற்றலைவருக்கதிசயத்திறலினான். (௧௰)

---

* சூழி-முகபடாம். † ஆலிகை-அகலிகை.
‡ உளை-புறமயிர். ○ தெவ்-பகை.

ஆயமானாகர்தாமூழியானையலால்
காயமானாயினன்யாவனேகாவலா
நீயமானேர்நியானிருதமாரீசனோ
மாயமானாயினன்மாய * மானாயினன். (கக)

உக்கவந்தமுமுடற்பகைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுமாயக்குறைசெயும்புரையவோ
திக்கவந்தரவொடுங்கொள்கவன்சினையதோள்
மிக்கவந்தனைவிளைத்தமார்தாழ்சவரிபோல். (கஉ)

முன்னைவரும்பிறருமேன்முடிவரும்பகலெலாம்
இன்னையர்வந்துறுவரென்றியறவம்புரிகுவார்
வினையொறுத்துச்சிறைதுறந்துயர்பதம்விரவினோர்
எனையவொன்றனைசெய்சேனிரவிதன்சிறுவனே. (கங)

மாயையான்மதியிலாவிருதர்கோன்மனைவியைத்
தீயகானெறியினுய்த்தனனவட்டேடுவார்
நீயையாதவலினைத்துடைமையாமெனுமனம்
ஆயையாவுடைமையாவுறவினைத்துணிகுவார். (கச)

அக்கிருத்தனைமருட்டகைவெதிர்ப்பகைஞனும்
இந்திரன்சிறுவனுக்கிறுதியின்றிசைதரும்
புத்தியின்பெருமையாய்போதவொன்றனைசெய்தான்
மந்திரக்கெழுமுதான்மைபுணர்ந்துதவுவான். (கரு)

சுக்கிரீவன் இராமனை யடைதல்.

அன்னவாமுறையெலாமறிவினாலுணர்குவான்
உன்னையேயுடையவெற்கரியதெப்பொருளரோ
பொன்னையேபொருவுவாய்போதெனப்போதுவான்
தன்னையேயனையவன்சரணம்வந்தணுகினான். (கசு)

வேறு.

கண்டனனென்பமன்னோகதிரவன்சிறுவன்காமர்க்
குண்டலந்துறந்தகோலவதனமுங்குளிர்க்குங்கண்ணும்
புண்டரிகங்கள்பூத்துப்புயறழீஇப்பொலிந்ததிங்கள்
மண்டலமுதயஞ்செய்தமரகதக்கிரியனானை. (கஎ)

நோக்கினனெடிதுநின்றானொடிவருங்கமலத்தண்ணல்
ஆக்கியவுலகமெல்லாமன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாம் † குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்றுவீரராய்விளைந்தவென்பான். (கஅ)

* மான்-மகான்.

† குவிந்து-ஒன்றாகி.

தேறினனமரர்க்கெல்லாந் * தேவராந்தேவரன்றே
மாறியிப்பிறப்பில்வந்தார்மானுடராகிமன்னோ
ஆறுகொள்சடிலத்தானுமயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லாமானுடமென்றதென்றே. (௧௯)

இராமன் சுக்கிரீவனை இருக்கப்பணித்தல்.

எனநினைந்தினையவெண்ணியிவர்கின்றகாதலோடுங்
கனைகடற்கரைநின்றேறுங்கண்ணினைகளிப்பநோக்கி
அனகனைக்குறுகினானவ்வண்ணலுமருத்திகூடப்
புனைமலர்த்தடக்கைநீட்டிப்போந்தினிதிருத்தியென்றான். (௨0)

சுக்கிரீவராமர்கள் சந்திரசூரியரை யொத்தாரென்னல்.

தவாவலியரக்கரென்னுந் † தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்றகாலத்தின்கூட்டமொத்தார்
அவாமுதலறுத்தசிந்தையனகனுமரியின்வேந்தும்
உவாவுறவந்துகூடுமுடுபதியிரவியொத்தார். (௨௧)

தவமு முயற்சியும் கல்வியு ஞானமு மொத்தாரென்னல்.

கூட்டமொத்திருந்தவீரர்குறித்ததோர்பொருட்குமுன்னாள்
ஈட்டியதவமும்பின்னர்முயற்சியுமியைந்ததொத்தார்
நீட்டும்வாளரக்கரென்னுந்தீவினைவேரின்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடுஞானமுங்கிடைத்ததொத்தார். (௨௨)

சுக்கிரீவன் யானே தவமுடையேனென்றல்.

ஆயதோரவதியின்கணருக்கன்சேயரசைநோக்கித்
தீவினைதீயநோற்றேனென்னின்யார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லாமென்னலாநலத்திக்கோயை
மேயினன்விதியேநல்கின்மேவலாகாதென்னென்றான். (௨௩)

இராமன் சவரியா லுன்னை யுணர்ந்தெய்தினே னென்னல்.

மையறுதவத்தின்வந்தசவரியிம்மலையினீவந்
தெய்தினையிருந்ததன்மையியம்பினள்யாங்களுற்ற
‡ கையறுதுயரநின்னாற்கடப்பதுகருதிவந்தேம்
ஐயநிற்றீருமென்னவரிக்குலத்தரசன்சொல்வான். (௨௪)

சுக்கிரீவன் யானுனக்கபயமென்றல்.

முரணுடைத்தடக்கையோச்சிமுன்னவன்பின்வந்தேனை
யிருணிலைப்புறத்தின்காறுமுலகெங்குந்தொடரவிக்குன்

---

* தேவராந்தேவர்-தலைவராகிய பரமபதநாதர். † தகா-தகுதியற்ற.
‡ கையறுதுயரம்-பிரிதற்றுன்பம்.

றரணுடைத்தாகியுய்ந்தேனருயிர்துறக்கலாற்றேன்
* சரணுனைப்புகுந்தேனென்னைத்தாங்குதறருமமென்றான். (உரு)

என்றவக்குரக்குவேந்தையிராமனுமிரங்கிநோக்கி
உன்றனக்குரியவின்பதுன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோகமேல்வந்துறுவனநீர்ப்பலன்ன
நின்றனவெனக்குநிற்கு † நேரெனமொழியுநேரா. (உசு)

இராமன் சுக்கிரீவனை நீயே யென்றோழனென்றல்.

மற்றினியுரைப்பதென்னேவானிடைமண்ணிலுன்னைச்
‡ செற்றவரென்னைச்செற்றார்தீயரேயெனினுமுன்னோ
டுற்றவரெனக்குமுற்றாருன்கிளையெனதென்காதற்
சுற்றமுன்சுற்றநீயென்னின்னுயிர்த்துணைவனென்றான். (உஎ)

அம்மொழிகேட்டனைவருமகிழ்தல்.

ஆர்த்ததுகுரக்குச்சேனையஞ்சனைசிறுவன்மேனி
போர்த்தனபொடித்தரோமப்புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ்சொரிந்தன § வனகன்சொன்ன
வார்த்தையைக்குலத்துளோர்க்குமறையினுமெய்யென்றன்றே. ()

ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்தவஞ்சனைசிங்கம்வாழி
யாண்டிரடடந்தோண்மைந்ததோழனுநீயும்வாழி
ஈண்டுநங்கோயிலெய்தியினிதினிருக்கைகாண
வேண்டுநம்மருளென்னென்றான்வீரனும்விழுமிதென்றான். (உகூ)

இராமனுமிளையோனுஞ் சோலைபுகுதல்.

ஏகினனிரவிசேயுமிருவருமரிகளேறும்
ஊகவெஞ்சேனைசூழவநந்தொடர்ந்துவந்துவாழ்த்த
நாகமுநாகத்தக்காவுநளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும்புதுமலர்ச்சோலைபுக்கார். (௩0)

ஆரமுமகிலுந்துன்றியவிர்பளிக் $ கறையளாவி
நாரநின்றனபோற்றோன்றிநவமலர்த்தடங்களோடும்
பாரமுமருங்குந்தெய்வத்தருவுநீர்ப்பண்ணையாடும்
சூரமகளிருசறுவன்றியசும்மைத்தன்றே. (௩க)

வேறு.

அயர்வில்கேள்விசாலறிஞர்வேலைமுன்
பயில்வில்கல்வியார்பொலிவில்பான்மைபோல்

---

* சரண்-அடைக்கலம். † நேரென-சமானமென்று. ‡ செற்றவர்-சிறினோர் கொன்றோருமாம். § அனகன்-பாவமில்லாதவன்.
$ அறை-பாறை.

குயிலுமாமணிக்குழூஉச்சோதியால்
வெயிலும்வெள்ளிவெண்மதியுமேம்படா. (௩௨)

ஏயவன்னதாமினியசோலைவாய்
மேயமைந்தருங்கவியின்வேந்தனும்
தூயபூவணைபொலிந்துதோன்றினார்
ஆயவன்பினோடளவளாவுவார். (௩௩)

இராமன் கோடிக் கந்தமூலபலாதியருந்தல்.

கனியுங்கந்தமுங்காயுந்தூயநன்
இனியயாவையுங்கொணர்ந்தியாரினும்
புனிதன்மஞ்சனத்தொழில்புரிந்துபின்
* இனிதிருந்துநல்விருந்துமாயினான். (௩௪)

இராமன் சுக்கிரீவனை நீயும்மனைவியைப்பிரிந்தவனோ வெனல்.

விருந்துமாகியம்மெய்ம்மையன்பினோ
டிருந்துநோக்கிநின்றிறைவன்சிந்தியாப்
பொருந்துநின்மனைக்குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோநீயும்பின்னென்றான். (௩௫)

அனுமான் சுக்கிரீவன் சரிதமுரைத்தல்.

என்றவேலையினெழுந்துமாருதி
குன்றுபோலநின்றிருகைகூப்பினான்
நின்றநீதியாய்நெடிதுகேட்டியால்
ஒன்றியானுனக்குரைப்பதுண்டெனா. (௩௬)

இதுமுதல் ௧௨-பாடல்களால் வாலியின் வரலாறுணர்த்தல்.

நாலுவேதமாநவையிலார்கலி
வேலியன்னதொன்மலையின்மேலுளான்
† சூலிதன்னருட்டுறையின்முற்றினான்
வாலியென்றுளான்வரம்பிலாற்றலான். (௩௭)

கழறுதேவரோடவுணர்கண்ணினின்
றுழலுமந்தரத்துருவுதேயமுன்
அழலுங்கோளராவகடுதேய்விடச்
சுழலும்வேலையைக்கடையுந்தோளினான். (௩௮)

நிலனுநீருமாய்நெருப்புங்காற்றுமென்
றலைவில்பூதநான்குடையவாற்றலான்
அலையின்வேலைசூழ்கிடந்தவாழிமா
மலையினின்றுமிம்மலையின்வாவுவான். (௩௯)

---

* இனிதருந்தி-என்றும்பாடம். † சூலி-சிவபெருமான்.

கிட்டுவார்பொரக்கிடைக்கினன்னவர்
பட்டநல்வரம் * பாகமெய்துவான்
எட்டுமாதிரத்திறுதிநாளுமுற்
றட்டமூர்த்திதாள்பணியுமாற்றலான். (௪0)

கால்செலாதவன்முன்னர்க்கந்தவேள்
வேல்செலாதவன்மார்பின்வென்றியான்
வால்செலாதவாயலதிராவணன்
கோல்செலாதவன்குடைசெலாதரோ. (௪௧)

மேருவேமுதற்கிரிகள்வேரொடும்
பேருமேயவன் † பேருமேனெடும்
காரும்வானமுங்கதிருநாகமும்
ஆருமேயவன்பெரியதோள்களால். (௪௨)

பாரிடந்தவெம்பன்றிபண்டைநாள்
நீர்கடைந்தபேராமைமேருவான்
‡ மார்பிடந்த § மாவெனினுமற்றவன்
தார்கிடந்ததோடகையவல்லவோ. (௪௩)

படர்ந்தநீணெடுந்தலைபரப்பிரீ
தடர்ந்துபாரம்வந்துறவநந்தனுங்
கிடந்துதாங்குமிக்கிரியைமேயினான்
நடந்துதாங்குமப்புவனநாளெலாம். (௪௪)

கட $ லுளைப்பதுங்கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர்மீதுசெல்வதும்
தொடரமற்றவன்சுளியினேற்றலான்
அடலின்வெற்றியாயயலிறுபவோ. (௪௫)

வெள்ளமேழுபத்துள்ளமேருவைத்
தள்ளலானதோளரிகடானையான்
உள்ளமின்றியவ்வுயிரையஞ்சலால்
வள்ளலேயவன்வாழுவாழுமால். (௪௬)

மழையிடிப்புறாவயவெஞ்சியமா
முழையிடிப்புறுமுரண்வெங்காலுமென்
றழைதுடிப்புறச்சார்வுறாதவன்
விழைவிடத்தின்மேல்விளிவையஞ்சலால். (௪௭)

---

* பாகம்-பாதி. † பேருமேல்-அசைவானானால்.
‡ மார்பிடந்த-இரணியன் மார்பைப்பிளந்த.
§ மா-சிங்கம். $ உளைப்பது-ஒலிப்பது.

மெய்க்கொள்வாலினுன்மிடலிராவணன்
தொக்கதோளுறத்தொடர்படுத்தநாள்
புக்கிலாதவெம்பொழியரத்தநீர்
உக்கிலாதவேறுலகம்யாவதோ. (சஅ)

இந்திரன்றனிப்புதல்வனின்னலிச்
சந்திரன்றனைத்துணையதன்மையான்
அந்தகன்றனக்கரியவாணையான்
முந்திவந்தனனிவனின்மொய்ம்பினோய். (சகூ)

அன்னவன்வனமக்கராசனேகவே
பின்னவன் * னிளம்பதமியற்றுநாள்
முன்னவன்குலப்பகைஞன்முட்டினன்
மின்னெயிற்றவாளவுணன்மேன்மையான். (ருO)

முட்டிநின்றவன்முரணுரத்தினோர்
ஒட்டவஞ்சிநெஞ்சுலையவோடினான்
வட்டமண்டலத்துரிதுயாழ்வெனா
எட்டரும்பெரும் † பிலனுமெய்தினான். (ருக)

எய்துகாலையப்பிலனுமெய்தியான்
நொய்திணங்கவற்கொணர்வெனென்மையாய்
செய்திகாவனீசிறிதுபோழ்தெனு
வெய்தினெய்தினன்வெகுளிமேயினான். (ருஉ)

ஏகிவாலியும் ‡ மிருதுவேழொடேழ்
வேகவெம்பிலந்தடவிவெம்மையான்
மோகவென்றிமேன்முயல்வின்வைகிடச்
சோகமெய்தினன்றுணைதுளங்கினான். (ருங)

அழுதழுங்குறும்பிவனையன்பினில்
தொழுதிரந்துநின்றொழிலதாதலால்
எழுதுவென்றியாயரசுசெய்கெனப்
பழுதிதென்றனன்பரியுநெஞ்சினான். (ருச)

என்றுதானுமவ்வழியிரும்பிலம்
சென்றுமுன்னவற்றேடுவேனவற்
கொன்றுளான்றனைக்கொலவொணுதெனிற்
பொன்றுவேனெனுப்புகுதன்மேயினான். (ருரு)

* இளம்பதம்-இளவரசு.
† பிலம்-பாதாளம்.
‡ இருதுவேழொடேழ்-இரண்டேகால்வருடம்.

தடுத்துவல்லவர்தணிவுசெய்துநோய்
எடுத்தவேலையோரெரியைவாலியைத்
தடுத்தகாவலும் * மரிகளாணையால்
கொடுத்ததுண்டிவன்கொண்டனன்கொலாம். (௪௬)

அன்னநாளின்மாயாவியப்பிலத்
தின்னவாயினாடெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப்பொருப்பொழித்துவே
றுன்னுகுன்றெலாமுடனடுக்கினேம். (௪௭)

சேமமவ்வழிச்செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக்கொண்டுவந்தியாம்
மேவுகுன்றின்மேல்வைகும்வேலைவாய்
ஆவியுண்டன † னவனையன்னவன். (௪௮)

ஒளித்தவன்னுயிர்க்களையுண்டுளம்
களித்தவாலியுங்கடிதினெய்தினான்
விளித்துநின்றுவேறுரைபெறானிருந்
தளித்தவாறுமன்றிளவலாரெனா. (௪௯)

வால்விசைத்துவான்வளிநிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன்கடிதி ‡ னெற்றலும்
நீல்நிறத்துவிண்ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும்பெரியவெற்பெலாம். (௫௦)

எற்றினானென்னவருமஞ்சுறச்
சீறினானெடுஞ்சிகரமெய்தினான்
வேறிலாதவன்புதல்வன்மெய்ம்மையால்
ஆறினானும்வந்தடிவணங்கினான். (௫௧)

வணங்கியண்ணனின்வரவிலாமையால்
உணங்கியுன்வழிப்படரவுன்னுவேற்
§ கிணங்கரின்மையாலிறைவனும்முடைக்
கணங்கள்காவலுன்கடன்மையென்றனர். (௫௨)

ஆணையஞ்சியிவ்வரசையெய்திவாழ்
நாணிலாதவென்னவையைநல்குவாய்
பூணுலாவுதோளிணைபொறாயெனக்
$ கோணினானெடுங்கொடுமைகூறினான். (௫௩)

* அரிகளாணையால்-வானரங்களின் கட்டளையால்.
† அவனை-அம்மாயாவியை. ‡ எற்றலும்-அடித்தலும்.
§ இணங்கர்-சகாயிகள்.
$ கோணினான்-வணங்கினான் கோபித்தானென்றுமாம்.

அடல்கடந்ததோளவனையஞ்சிவெங்
குடல்கலங்கியெங்குலமொடுங்கமுன்
கடல்கடைந்தவெங்கரதலங்களால்
உடல்கடைந்தனனிவனுலைந்தனன். (௬௪)

இவனுலைந்துலைந்தெழுகடற்புறத்
தவனியுங்கடந்தெயிலடைந்தனன்
கவனமொன்றிலான்காலகடாவென
அவனிவ்வேலையேயரியின்வாலினான். (௬௫)

என்றுகான்மகனியம்ப * ஈசனும்
நன்றுநன்றெனாநனிதொடர்ந்துபின்
சென்றவாலிமுன்சென்றசெம்மலான்
அன்றவாவுதற்கறிந்தனன்கொலாம். (௬௬)

இராமன் வாலிசுக்ரீவர்களின் போரினையுமையென வுரைத்தான்.

இனையவாலியுந்திளவறன்றெறும்
வினையும்வார்கழற்கருணைவள்ளல்பின்
பினையவீரர்செய்தமையியம்பெனப்
புனையும்வாகையான்புகறன்மேயினான். (௬௭)

உக்கரக்கடற்புறத்தாண்ணுநாள்
செக்கர்மெய்த்துனிச்சோதிசேர்கலாச
சக்கரப்பொருப்பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன்கடிதுபற்றினான். (௬௮)

பற்றியஞ்சலன்பழியின்வெஞ்சினம்
முற்றிநின்றதன்முரண்வலிக்கையால்
எற்றுவானெடுத்தெழுதலும்பிழைத்
† தற்றமொன்றுபெற்றிவனகன்றனன். (௬௯)

எந்தைமற்றவன்னெயிறதுக்குமேல்
அந்தகற்குமோரரணுமில்லையால்
இந்தவெற்பின்வந்திவணிருந்தனன்
முந்தையுற்றதோர்சாபமுண்மையால் (௭௦)

உரிமையென்றிவற்குரியதாரமாம்
அருமருந்தையும்மவன்விரும்பினான்
இருமையுந்துறந்திவணிருந்தனன்
கருமமிங்கிதேகடவுளென்றனன். (௭௧)

* ஈசனும்-இராமனும். † அற்றம்-மறைவு

வேறு.

வாலிசரிதங்கேட்ட விராமன் கோபமெய்தல்.

பொய்யிலாதவன்வரன்முறையிம்மொழிபுகல
ஐயனாயிரம்பெயருடையமலர்க்குமமலன்
வையந்தாங்கியவாயிதழ்துடித்ததுமலர்க்கண்
செய்யதாமரையாம்பலம்போதெனச்சிவந்த. (௭௨)

திறத்துமாமறையய * னொடைம்முகன்பிறர்தேடிப்
புறத்தகத்துணரரியதன்பொலனடிக்கமலம்
உறச்சிவப்பளித்ததுமையிசையுறலுறாக்கல்
மறத்தைவீட்டுதலன்றியேபிறிதுமற்றுண்டோ. (௭௩)

ஈரநீங்கியசிற்றவைசொற்றனளென்ன
ஆரம்வீங்குதோட்டம்பிக்குத்தன்னரசுரிமைப்
பாரளித்தவன் † பரிவிலனொருவன்றனிளையோன்
தாரம்வவ்வினனென்றசொற்றரிக்குமாறுளதோ. (௭௪)

வாலியைக்கொன்றரசுந்தாரமுமளிப்பேனென்றல்.

உலகமேழினொடேழும்வந்தவனுயிர்க்குதவி
விலகுமென்னினும்வில்லிடைவாளியின்வீட்டித்
‡ தலைமையோடுநின்றாரமுமுனக்கின்றுதருவேன்
புலமையோயவனுறைவிடங்காட்டென்றுபுகன்றான். (௭௫)

சுக்கிரீவாதியர் மந்திராலோசனைசெய்தல்.

எழுந்துபேருவகைக்கடற்பெருந்திரையிரைப்ப
அழுந்துதுன்பத்துக்கக்கரைகண்டனனனையான்
விழுந்ததேயினிவாலிதன்வலியெனவிரும்பா
மொழிந்தவீரற்கியாமெண்ணுவதுண்டெனமொழிந்தான். (௭௬)

அனுமான் தேற்றங்கூறல்.

அனையவாண்டுரைத்தனுமனேமுதலியவமைச்ச
ரினைவுங்கல்வியுநீதியுஞ்சூழ்ச்சியுநிறைந்தார்
எனையரன்னவரோடும்வேறிருந்தனனிரவி
தனையனவ்வழிச்சமீரணன்மகனுரைதருவான். (௭௭)

உன்னினேனினதுள்ளத்தினுள்ளத்தையுரவோய்
அன்னவாலியைக்காலனுக்களிப்பதோ § ராற்றல்
இன்னவீரர்பாலில்லையென்றயிர்த்தனையினியான்
சொன்னகேட்டவைகடைப்பிடிப்பாயெனச்சொன்னான். (௭௮)

* ஐம்முகன்-உருத்திரன். † பரிவிலன்-துன்பமிலன்.
‡ தலைமையோடு-அரசுரிமையுடன். § ஆற்றல்-வன்மை.

திருமாலே இராமனெனல்.

சங்குசக்கரக்குறியுளதடக்கையிற்றாளில்
எங்குமித்தனையிலக்கணம்யாவர்க்குமில்லை
செங்கண்விற்கரத்திராமனத்திருநெடுமாலே
இங்குதித்தனனீண்டறநிறுத்துதற்கின்னும். (௭௯)

செறுக்கும்வன்றிறற்றிரிபுரந்தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக்காலன்றன் * காலமுங்காலால்
அறுக்கும்புங்கவனுண்டபேராடகத்தனிவில்
இறுக்குந்தன்மையம்மாயவற்கன்றியுமெளிதோ. (௮0)

என்னையீன்றவனிவ்வுலகியாவையுமீன்றான்
தன்னையீன்றவற்கடிமைசெய்தவமன்றேயா
உன்னையீன்றவெற்குறுபதமுளதெனவுரைத்தான்
இன்னதோன்றலேயவனிதற்கேதுவுண்டிறையோய். (௮௧)

துன்புதோன்றியபொழுதுடன்றோன்றுவனெவர்க்கும்
முன்புதோன்றலையறிதற்குமுடிவன்றென்றியம்ப
அன்புசான்றெனவுரைத்தனையவென்யாக்கை
என்புதோன்றலவுருகினதெனிற்பிறிதெவனோ. (௮௨)

மராமரத்தாலிராமன் வலியையளந்து காண்டியெனல்.

பிறிதுமன்னவன்பெருவலியாற்றலைப்பெரியோய்
அறிதியென்னினுண்டுபாயமும்மஃதருமரங்கள்
நெறியினின்றனவேழினொன்றுருவவிந்நெடியோன்
† பொறிகொள்வெஞ்சரம்போவதுகாணெனப்புகன்றான். (௮௩)

நன்றுநன்றெனநன்னெடுங்குன்றமுநாணும்
தன்றனைத்தனிமாருதிதோளிணைதழுவிச்
சென்று ‡ செம்மலைக்குறுகியான்செப்புவதுளதால்
ஒன்றுனக்கெனவிராமனுமுரைத்தியஃதென்றான். (௮௪)

ஏகவேண்டுமிந்நெறியெனவினிதுகொண்டேகி
மாகநீண்டனகுறுகிடநிமிர்ந்தனமரங்கள்
ஆகவைந்தினொடிரண்டினொன்றுருவநின்னம்பு
போகவேயென்றன்மனத்திடர்போமெனப்புகன்றான். (௮௫)

மறுவிலானதுகூறலும்வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன்முன்னியமுயற்சியைமுன்னி
எறுழ்வலித்தடந்தோள்களாற்சிலையைநாணேற்றி
அறிவினாலளப்பரியவற்றருகுசென்றணைந்தான். (௮௬)

௫-வது, நட்புக்கோட்படலம்-முற்றிற்று.

ஆ௨ திருவிருத்தம்-௧௬௬.

---

* காலம்-ஆயுள்.
† பொறிகள்-பெயரெழுதப்பெற்ற.
‡ செம்மல்-இராமன்.

# * ௪-வது, மராமரப்படலம்.



இதுமுதல் ௯-பாடல்கள் மராமரவருணனை.

ஊழிபேரினும்பேர்விலவுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந்தாழ்விலதயங்குபேரிருள்சூழ்
ஆழிமாநிலந்தாங்கியவரும்பெருங்கிரிகள்
ஏழுமாண்டுசென்றொருவழிநின்றனவியைந்த. (௧)

கலைகொண்டோங்கியமதியமுங்கதிரவன்றானும்
தலைகண்டோடுதற்கருந்தகைத்தொடங்குறுஞ்சாரல்
மலைகண்டோமென்பதல்லதுமலர்மிசையயற்கும்
இலைகண்டோமெனத்தெரிப்பருந்தரத்தனவேழும். (௨)

ஒக்கநாளெலாமுழுவனவுலைவிலவாக
மிக்கதோர்பொருளுளதெனவேறுகண்டிலமால்
திக்கும்வானமுஞ்செறிந்தனத்தருந்துறந்தார்
புக்குங்கலிற்றளர்விலவிரவிதேர்ப்புரவி. (௩)

நீடுநாள்களுங்கோள்களுமென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவமலரெனப்பொலிகின்றவளத்த
ஓடுமாச்சுடர்வெண்மதிக்குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற்களங்கமுற்றமெனுங்குறிய. (௪)

தீதுறும்பெருஞ் * சாகைகடழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந்தகுவனவிசும்பினுமுயர்ந்த
ஆதியண்டமுன்பனித்தவனுலகினங்கலனார்
ஓதிமந்தனிப்பெடையொடும்புடையிருந்துறைவ. (௫)

மாற்றமல்கும்பாதுடைகனிகாய்முதலனைத்தும்
வீற்றுமண்டலத்தியாவையும்வீழ்கிலயாண்டும்
காற் † றலம்பினுங்கலிகெடுமாணிடைக்கலந்து
ஆற்றின்வீழ்ந்துபோயலைகடற்பாய்தருமியல்ப. (௬)

அடியநான்மறையந்தணனண்டத்துக்கப்பால்
முடியின்மேற்சென்றமுடியனவாதலின்முடியா
நெடியமாலெனுநிலையனநீரிடைக்கிடந்த
படியின்மேனின்றமேருமால்வரையினும்பரிய. (௭)

* மராமரம்-ஸாலவிருக்ஷம்; ஒருவகை ஆச்சாமரம்.

† சாகை-கிளை.

‡ அலம்பினும்-வீசினும்.

வள்ள * லிந்திரன்மைந்தற்குத் † தம்பிக்கும்வயிர்த்த
உள்ளமேயெனவொன்றினொன் றுள்வயிர்ப்புடைய
தெள்ளுநீரிடைக்கிடந்துபார்சுமக்கின்றசேடன்
வெள்ளிவெண்படங்குடைந்துபோகியவேர். (௮)

சென்றுதிக்கினையளந்தனபணைகளிற்றேவர்
என்றுநிற்குமென்றிசைப்பனவிருசுடர்திரியுங்
குன்றினுக்குயர்ந்தன்றனைவொன்றினுங்...
ஒன்றினுக்கொன்றினிடைவெளியோசனையுடைய. (௯)

இராமன் வின்னாணெறிதல்.

ஆயமாமரமனைத்தையுநோக்கினன்றமலன்
ஆயவார்கணைதூப்பதோர்தாரந்தோன்றச்
சேயவானமுந்திசைகளுஞ்செவிடுறத்தேவர்க்
கேய்விலாதமேதார்ப்பயம்வரச்சிலையினாணெறிந்தான். (௧0)

ஒக்கநின்றதெக்குலையமுழக்கங்கேயோசை
பக்கநின்றவர்க்குற்றதுபகர்வதெப்படியோ
திக்கயங்களுமயங்கினதிசைகளுந்திகைத்த
புக்கயன்பதிசலிப்புறவொலித்ததப்பொருவில். (௧௧)

‡ அரிந்தமன்சிலைநாணொடிதார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர்கற்பத்தினிறுதியென்றயிர்த்தார்
பரிந்ததம்பியேயாங்குநின்றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையையுரைசெயிற்பழியவர்ப்புணரும். (௧௨)

இராமன் மராமரத்திலம்பெய்தல்.

எய்தல்காண்டிட்கொலின்னமென்றரிதின்வந்தெய்திப்
பொய்யின்மாருதிமுதலினோர்புகழ்ந்துறும்பொழுதில்
மெய்கொள்வார்சிலைநாணினைமுறையுறவாங்கி
வெய்யவாளியையாளுடைவில்லியும்விட்டான். (௧௩)

எழுமாமரமுருவிக்கீழுலகமென்றிசைக்கும்
எழுமூடுபுக்குருவிப்பின்னுடனடுத்தியன்ற
எழிலாமையான்மீண்டதவ்விராகவன்பகழி
எழுகண்டபினுருவுமாலொழிவதன்றின்னும். (௧௪)

எழுவேலையுமுலகமேலுயர்ந்தனவேழும்
எழுகுன்றமுமிருடிகளெழுவரும்புரவி
எழுமங்கையரெழுவருநடுங்கினரென்ப
எழுபெற்றதோவிக்கணைக்கிலக்கமென்றெண்ணி. (௧௫)

* இந்திரன்மைந்தன்-வாலி. † தம்பி-சுக்கிரீவன்.
‡ அரிந்தமன்-நாராயணன்.

அன்னதாயினுமறத்தினுக்காருயிர்த்துணைவன்
என்னுந்தன்மையைநோக்கினரியாவருமெவையும்
பொன்னின்வார்கழற்புதுநிறத்தாமரைபூண்டு
சென்னிமேற்கொளுஉ வருக்கன்சேயிவையிவைசெப்பும். (கசு)

வேறு.

வையநீவானுநீமற்றுமலரின்மேல்
ஐயனீயாழிநீ * யாழிவாழ்மனெநீ
செய்யதீவினைதெறுந்தேவுநீயாயினேன்
உய்யவந்துதவிஞையுலகமூன்றுதவிஞய்.                (கஎ)

என்னெனக்கரியதெப்பொருளுமெற்கெளிதலால்
உன்னையித்தலைவிடுத்துதவிஞர்விதியிஞர்
அன்னையொப்புடையவுன்னடியருக்கடியன்யான்
மன்னவர்க்கரசனென்றுரைசெய்தான்வசையிலான்.                (கஅ)

ஆடிஞர்பாடிஞரங்குமிங்குங்கலைத்
தோடிஞருவகையின்றறவையுண்டிணர்கிலார்
ஓடிஞம்வாலிகாலனையெனுநெடிதுநாள்
வாடிஞர்தோளெலாம்வளர † மற்றவரெலாம்.                (க௯)

துந்துபியினுடலைக்காண்டல்.

அண்டமும்மகிலமும்மடையவன்றனலிடைப்
பண்டுவெந்தனநெடும்பசைவறந்திடினும்வான்
மண்டலந்தொடுவதம்மலையின்மேன்மலையெனக்
கண்டனன்றுந்துபிக்கடலனுடலமோ.                (உ0)

‡ தென்புலக்கிழவனூர் § மயிடமோதிசையின்வாழ்
வன்புலக்கரிமடிந்ததுகொலோமகரமீன்
என்புலப்புறவுலர்ந்ததுகொலோவிதுவெனு
அன்புலப்பரியநீயுரைசெயாயெனவவன்.                (உக)

ச-வது, மராமரப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சஅஎ.

---

* ஆழி-கடல்.

† மற்றவர்-ஏனையவானரவீரர்.

‡ தென்புலக்கிழவன்-யமன்.

§ மயிடம்-எருமைக்கடா; மஹிஷம் என்னும் வடமொழியின் திரிபு.

# ரு-வது, துந்துபிப்படலம்.



துந்துபிப்பெயருடைச்சுடுசினத்தவுணன்*
றிந்துவைத்தொடரியிர்க்கெழு † மருப்பிணையினன்
மந்தரக்கிரியெனப்பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருதிறத்தரியினைத்தேடுவான். (௧)

அங்குவந்தரியெதிர்ந்தமைதியென்னென்றலும்
பொங்குவெஞ்செருவினிற்பொருதியென்றுரைசெயக்
கங்கையின்கணவனைக்கறைமிடற்றிறைவனே
உங்கள்வெங்கதவலிக்கொருவனென்றுரைசெய்தான். (௨)

கடிதுசென்றவனுமக்கடவுடன்கயிலையைக்
கொடியகொம்பினின்மடுத்தெழுதலுங்குறுகிமுன்
னொடிதிநின்குறையெனென்றலுமவன்றனைமோ
முடிவில்வெஞ்செருவெனக்கருள்செய்வான்முயல்கெனு. (௩)

மூலமேயீரமேமுடிஞயோடுபோர்
எலுமேதேவர்பாலேகெனமேவினன்
சாலநாள்போர்செய்வாயாதியேற்சாரல்போர்
வாலிபாலேகெனவானுளோர்வானுளான். (௪)

அன்னவன்விடவுவந்தவனும்வந் ‡ தரிகடம்
மன்னவன்வருகபோர்செய்கெனமலையினைச்
சின்னபின்னம்படுத்தெய்தலுஞ்சினவியென்
முன்னவன்முன்னர்வந்தனையவன்முனைதலும். (௫)

இருவருந்திரிவுறும்பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந்திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார்விழுவர்நின்றெழுவரால்
மருவருந்தகையர்தானவர்கள்வானவர்கடாம். (௬)

தீயெழுந்ததுவிசும்புறநெடுந்திசையெலாம்
போயெழுந்ததுமுழக்குடனெழுந்ததுபுகை
தோயநன்புணரியுஞ்சுடர்தடங்கிரிகளுஞ்
சாயழிந்தனவடித்தலமெடுத்திடுதலால். (௭)

---

* துந்துபி-பேரிகை; இவன்முழக்கம் துந்துபிவாத்தியத்தினது பேரொலியை ஒத்திருந்ததால் இப்பெயர் உண்டாயிற்று. இவன் எருமைக்கடாவின் உருவம் பூண்டவன்; இராவணன் மனைவியான மண்டோதரியின் உடன் பிறந்தவனான மாயாவி (மாயையுடையவன்) யின் சகோதரன்; மயன் என்பவனுக்கும் ஹேமா என்ற அப்ஸரஸ்திரீக்கும் பிறந்தவன். † மருப்பிணையினன்-இரண்டு கொம்புடையவன்.

‡ அரிகடம்மன்னவன்-வானரவரசன்.

புயலும்வானகமுமப்புணரியும்புணரிசூழ்
அயலும்வீழ்தூளியாலறிவருந்தகையவாம்
மயனின்மாமகனும்வாலியுமறத்துடலினார்
இயலுமாமதியபீராறம்வந்தெய்தவே. (௮)

அற்றதாகியசெருப்புரிதறும்மளவினிற்
கொற்றவாலியுமவன்குவவுதோள்வலியொடும்
பற்றி * யாசையினெடும்பணைமருப்பிணைபறித்
தெற்றினானவனும்வானிடியினின்றாறினான். (௯)

தலையின்மேலடிபடக்கடிதுசாய்செடிதுதாள்
உலையவாய்முழைதிறந்துதிரவாறொழுகமா
மலையின்மேலுருபிடித்தென்னவான்மண்ணொடும்
குலையமாதிசைகளுந்செவிடுறக்குத்தினான். (௧0)

† கவரியிங்கிதுவெனக்கரதலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட்டிசைதொறுந்திசைதொறும்
துவளணிந்தனவெனப்பொசிதுதைந்தனதுணைப்
பவர்நெடும்பணைமருப்பகையின்வன்கரிகளே. (௧௧)

புயல்கடந்திரலிதன் ‡ புகல்கடந்தயலுளோர்
இயலுமண்டிலமிகந்தெனயவுந்தவிரமேல்
வயிரவன்காதலத்தவன்வலித்தெறியவன்
றயிரும்விண்படரவிவ்வுடலுமிப்பரிசரோ. (௧௨)

முட்டிவான்முகடுசென்றளவியிம்முடையுடற்
கட்டிமால்வரையைவந்துறுதலுங்கருணையான்
இட்டசாபமுமெனக்குதவுமிவ்வியல்பினிற்
பட்டவாமுழுவதும்பரிவினாலுரைசெய்தான். (௧௩)

வேறு.

கேட்டனனமலனுங்கிளர்ந்தவாறெலாம்
வாட்டொழிலிளவலையிதனைமைந்தநீ
ஓட்டெனவவன்கழல்விரலினுந்தினான்
மீட்டதுவிரிஞ்சனுமுற்றுமண்டமே. (௧௪)

ஆயிடையரிக்குலமசனியஞ்சுற
வாய்திறந்தார்த்ததுவள்ளலோங்கிய
தூயசற்சோலையிலிருந்தசூழல்வாய்
நாயகவுணர்த்துவதுண்டோவெனா. (௧௫)

௭-வது, துந்துபிப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௨0௨.

---

* ஆசை-திக்கு. † கவரி-எருமைக்கடா. ‡ புகல்-இருப்பிடம்.

## * அ-வது, கலன்காண்படலம்.



இவ்வழியாமியைர்திருந்ததோரிடை
வெவ்வழியிராவணன்கொணரமேலைநாள்
செவ்வழிநோக்கினன்றேவியேகொலாம்
† கவ்வையினாற்றினள்கழிந்தசேணுளாள். (க)

உழையரினுணர்த்துவதுளதென்றான்னியோ
‡ குழைபொருகண்ணினாள்குறித்ததோர்ந்திலர்
மழைபொருகண்ணிணைவாரியோடுதன்
இழைபொதிந்திட்டனள்யாங்களேற்றனர். (உ)

வைத்தனமிவ்வழிவள்ளனின்வயின்
உய்த்தனமென்றுபோதுணர்தியாலெனக்
கைத்தலத்தன்னவைகொணர்ந்துகாட்டினன்
மெய்த்துலைப்பால்கலந்துணையமேயத்தான். (௩)

தெரிவுறநோக்கினன்றெரிவைமெய்யணி
எரிகணையெய்தியமெழுகின்யாக்கைபோல்
உருகினனென்கிலமுயிருக்கூற்றமாய்ப்
பருகினனென்கிலம்பகர்வதென்கொலாம். (௪)

நல்குவதென்னினிநங்கைகொங்கையைப்
புல்கியபூணுமக்கொங்கைபோன்றன
அல்குலினணிகளுமல்குலாயின
பல்கலன்பிறவுமப்படிவமானவே. (௫)

விட்டபேருணர்வினைவிளித்தவென்கெனோ
அட்டனவுயிரையவ்வணிகளென்கெனோ
கொட்டினசாந்தெனக்குளிர்ந்தவென்கெனோ
சுட்டனவென்கெனோயாதுசொல்லுகேன். (௬)

மோந்திடாநறுமலரானமொய்ம்பினின்
ஏந்திடவுத்தரியத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளிதழுவப்போர்த்தலால்
பூந்துகிலாயவப்பூவைபூண்களே. (௭)

ஈர்த்தனசெங்கணீர்வெள்ளம்யாவையும்
போர்த்தனமயிர்ப்புறம்புளகம்பொங்குதோள்

---

* கலம்-ஆபரணம்.
† கவ்வை-ஓசை.
‡ குழை-காதணி.

வேர்த்தனவென்கெனோவெதும்பினனென்கோ
தீர்த்தனையவ்வழியாதுசெப்புகேன். (௮)

விடம்பரந்தனையதோர்வெம்மைமீக்கொள
நெடும்பொழுதுணர்விலனுயிர்ப்புநீங்கிய
தடம்பெருங்கண்ணனைத்தாங்கினான்றன
துடம்பினிற்செறிமயிர்சுறுக்கென்றேறவே. (௯)

தாங்கினனிருத்தியத்துயரந்தாங்கலா
தேங்கியநெஞ்சினனிரங்கிவிம்முவான்
வீங்கியதோளினாய் * வினையினேனுயிர்
வாங்கினனிலவணிவருவித்தேனென்னா. (௧௰)

அயனுடையண்டத்தினப்புறத்தையும்
மயர்வறநாடியென்வலியுங்காட்டியுன்
உயர்புகழ்த்தேவியையுதவற்பாலனேன்
அயருறத்துயர்தியோசுருதிநூல்வலாய். (௧௧)

திருமகளனையவத்தெய்வக்கற்பினாள்
வெருவரச்செய்துளவெய்யவன்புயம்
இருபதுமீரைந்துதலையுமேலினான்
ஒருகணைக்காற்றுமோவுலகமேழுமே. (௧௨)

எண்ணுநீயிருந்தருளேழொடேழுறைப்
பூண்டபேருலகங்கள்வலியிற்புக்கிடைத்
தேண்டியவ்வரக்கனைத்திருகித்தேவியைக்
காண்டியாலிவ்வழிக்கொணருங்கைப்பணி. (௧௩)

வல்செய்துணைவரேம்யாங்களீங்கிவன்
† தாவரும்பெருவலித்தம்பிநம்பிநின்
சேவகமிதுவெனிற்சிறுகசோக்கலென்
மூவகையுலகுநின்மொழியின்முந்துமோ. (௧௪)

பெருமையோராயினும்பெருமைபேசலார்
கருமமேயல்லதுபிறிதென்கண்டது
தருமநீயல்லதுதனித்துவேறுண்டோ
அருமையேதுனக்குநின்றவலங்கூர்தியோ. (௧௫)

முளரிமேல்வைகுவான்முருகற்றந்தவத்
தளிரியல்பாகத்தான்றடக்கையாழியான்
அளவியொன்றுவரேயன்றியையமில்
கிளவியாய்தனித்தனிக்கிடைப்பரோ ‡ துணை. (௧௬)

---

* வினையினேன்-பாவியாகியயான்.
† தாவரும்-கெடுதலற்ற.
‡ துணை-உனக்கொப்பு.

என்னுடைச்சிறுகுறைமுடித்தலின்றொரீஇப்
பின்னுடைத்தாயினுமாகபேதுறு
மின்னிடைச்சனகியைமீட்டுவீடுபோல்
பொன்னுடைச்சிலையினாய்விரைந்துபோயென்றான். (௧௭)

* எரிகதிர்க் † காதலனினையகூறலும்
அருவியங்கண்டிறந்தன்பினேக்கினான்
திருவுறைமார்பனுந்தெளிவுதோன்றிட
ஒருவகையுணர்வுவந்துரைப்பதாயினான். (௧௮)

விலங்கெழிற்றோளினாய்வினையினேனுமிவ்
‡ விலங்குவிற்கரத்தினனிருக்கவேயவள்
கலன்கழித்தனளிதுகற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர்புரிந்துளோர்கள்யார். (௧௯)

வாணெடுங்கண்ணியென்வாழ்வுபோக்கயான்
தாணெடுங்கிரியொடுந்தடங்கடம்பொடும்
பூணொடும்புலம்பியிப்பொழுதுபோக்கினேன்
நாணெடுஞ்சிலைசுமந்துழலுநாணிலேன். (௨௦)

ஆறுடன்செல்பவர்க்கொன்மாதரை
வேறுளார்துயர்செயில்விலக்கிவெஞ்சமத்
தாறுறத்தம்முயிருகுப்பரென்பதும்
§ தேறினன்றுயரநான்றீர்க்ககிற்றிலேன். (௨௧)

கருங்கடலெருட்டனர்கங்கைதந்தனர்
பொரும்புலிமானொடுபுனலூட்டினர்
பெருந்தகையென்குலத்தரசர்பின்னொரு
திருந்திழைதுயரநான்றீர்க்கநோற்றிலேன். (௨௨)

இந்திரற்குரியதோரிடுக்கண்டீர்த்திகல்
அந்தகற்கரிய $ போரவுணற்றேய்த்தனன்
எந்தைமற்றவனின்வந்துதித்தயானுளேன்
வெந்துயர்க்கொடும்பழிவில்லிற்றூங்கினேன். (௨௩)

விரும்பெழிலெந்தையார்மெய்ம்மையீயுமேல்
வரும்பழியென்றலான்மகுடஞ்சூடலேன்
¶ கரும்பழிசொல்லியைப்பகைஞன்கைக்கொளப்
பெரும்பழிசூடினேன்பிழைத்ததென்னரோ. (௨௪)

---

* எரிகதிர்-சூரியன். † காதலன்-மகன்.
‡ இலங்குவிற்கரத்தனும் என்றும் பாடம். § தேறி-உணர்ந்து.
$ போரவுணன்-போர்புரிந்த சம்பராசுரன்.
¶ கரும்பழி-கரும்பினை இனிமையில்லாததாகச் செய்கின்ற.

என்னநொந்தின்னனபன்னி * யீடழிந்
துன்னருந்துயரத்துச்சோர்கின்றான்றனைப்
பன்னருங்கதிரவன்புதல்வன்பையுள்பார்த்
தன்னவெந்துயரெனுமளக்கர்நீக்கினான். (௨௫)

ஐயநீயாற்றலினாற்றினையல
துய்வனேயெனக்கினுறுதிவேறுண்டோ
வையகத்திப்பழிதீரமாய்வது
செய்வனின்குறைமுடித்தன்றிச்செய்கலேன். (௨௬)

என்றனனிராகவனினையகாலையில்
வன்றிறன்மாருதிவணங்கினானெடுங்
குன்றிவர்தோளினாய்கூறவேண்டுவ
தொன்றுளததனைநீயுணர்ந்துகேளென. (௨௭)

கொடுந்தொழில்வாலியைக்கொன்றகோமகன்
கடுங்கதிரோன்மகனுக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டினனென்றிசேடரி
தடும்படையாக்கர்தமிருக்கையானையாய். (௨௮)

வானதோமண்ணதோமற்றவெற்பதோ
ஏனைமாநாகர்தமிருக்கைப்பாலதோ
தேனுலாந்தெரியலாய்தெரிவதன்றுநா
மூனுடைமானிடமானதுண்மையால். (௨௯)

எவ்வுலகங்களுமிமைப்பினெய்துவர்
வவ்வுவரவ்வழிமகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவந்தெனவருவர்மீள்வரால்
அவ்வவருறைவிடமறியற்பாலதோ. (௩௦)

ஒருமுறையேயபார்த்துலகம்யாவையும்
திருமகளுறைவிடந்தேரவேண்டுமால்
வான்முறைநாடிடவரம்பின்றாலுல
கருமையுண்டளப்பருமாண்டுவேண்டுமால். (௩௧)

எழுபத்தாகியவெள்ளத்தெம்படை
ஊழியிற்கடலெனவுலகம்போர்க்குமால்
ஆழியைக்குடிப்பினுமயன்செயண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினுங்கிடைத்தசெய்யுமால். (௩௨)

ஆதலாலன்னதேயமைவதாமென
நீதியாய்நினைந்தனனெனநிகழ்த்தினான்

* ஈடழிந்து-நிலைகெட்டு.

சாதுவாமென்றவத்தனுவின்செல்வனும்
போதுநாம்வாலிபாலென்னப்போயினர். (௩௩)

(வேறு.)

வெங்கணாளியேறுநீளிமாவும்வேகநாகமும்
சிங்கவேறிரண்டொடுந்திரண்டவன்னசெய்கையார்
தங்குசாலமூலமார்தமாலமேலமாலைபோல்
பொங்குநாகமுந்துவன்றசாரலூடுபோயினர். (௩௪)

உழையுலாநெடுங்கண்மாதர் * ஊசலூசலல்லவேல்
தழையுலாவுசந்தலர்ந்தசாரல்சாரலல்லவே
மழையுலாவுமுன்றிலல்லமன்றனூறுசண்பகக்
குழையுலாவுசோலைசோலையல்லபொன்செய்குன்றமே. (௩௫)

அறங்கணூறுமேனியாரிக்கணங்களோடுமங்
கிறங்குபோதுமேறுபோதுமீறிலாதவோதையால்
கறங்குவார்கழற்சலன்கலிப்பமுந்துகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்துமாகமீதுலாவுமே. (௩௬)

நீடுநாகமூடுமேகமோடநீருமோடநேர்
ஆடுநாகமோடமானயானைமேயோடவாளிபோம்
மாடுநாகநீடுசாரல்வாளையோடும்வாவியூ
டோடுநாகமோடவேங்கையோடும் † யூகமோடுமே. (௩௭)

மருண்டமாமலைத்தடங்கள்செல்லலாவவல்லமால்
தெருண்டிலாமதத்தயானைசீறிநின்றுசிந்தலால்
இருண்டகாழகிற்றடத்தொடிற்றுவீழ்ந்தசந்துவந்
துருண்டபோதழிந்ததேனொழுங்குபே ‡ ரிழுக்கினே. (௩௮)

§ மினன்மணிக்குலந்துவன்றிவில்லலர்ந்துவிண்குலாய்
அனல்பரப்பவொப்பரீதிமைப்பவந்தவிப்பபோல்
புனல்பரப்பவொப்பிருந்தபொன்பரப்புமென்பவா
லினையவிற்றடக்கைவீரரேகுகின்றகுன்றமே. (௩௯)

மருவியாடும்வாவிதோறும்வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனினேறுபாயுமாறுபோல்
அருவிபாயுமொன்றியொன்றினைபாயுமேனலிற்
குருவிபாயுமோடிமந்திகோடுபாயுமாடெலாம். (௪0)

---

* ஊசலல்லவேல்-ஊசல். ஊசலல்லாதன.

† யூகம்-கருங்குரங்கு.

‡ இழுக்கு-வழுக்கல்.

§ மினன்மணி-ஒளிவிடுமணி.

தேணிழுக்குசாரல்வாரிசெல்லமீதுசெல்லு * நாண்
மீனிழுக்குமன்றிவானவில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவுகோளிழுக்குமென்பவால்
வானிழுக்குமேலவாசமன்றணுறுகுன்றமே. (௪௧)

அன்னதாயகுன்றிணுறுசென்றயரைந்தொடைத்
துன்னலாயயோசனைக்குமும்பரேறியிம்பரிற்
† பொன்னிணுடிழிந்தனன்னவாலிவாழ்பொருப்பிடம்
துன்னிணுர்கள்செய்வதென்னையென்றுநின்றுசொல்லுவார். (௪௨)

௯-வது, கலன்காண்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௨௪௪.

---

## ௰-வது, வாலிவதைப்படலம்.

அவ்விடத்திராமனீயழைத்துவாலியானதோர்
‡ வெவ்விடத்தின்வந்துபோர்விளைக்கு § மெல்லைவேறுநின்
றெவ்விடத்துணிந்தமைந்ததென்கருத்திதென்றனன்
$ தெவ்வடக்கும்வென்றியானுநன்றிதென்றுசிந்தியா. (௧)

வார்த்தையன்னதாகவானியங்குதேரிணுன்மகன்
நீர்த்தரங்கவேலையஞ்சநீலமேகநாணவே
வேர்த்துமண்ணுளோரிரிந்துவிண்ணுளோர்கள்விம்மமேல்
ஆர்த்தவோசையீசனுண்டவண்டமுற்றுமுண்டதே. (௨)

இடித்துரப்பிவந்துபோரெதிர்த்தியேலடர்ப்பனென்
றடித்தலங்கள்கொட்டிவாய்மடித்தடுத்தலங்குதோள்
புடைத்துநின்றுளைத்தபூசல்புக்கதென்பமிக்கிடந்
துடிப்பவங்குறங்குவாலிதிண்செவித்தொளைக்கணே. (௩)

வேறு.

() மாற்பெருங்கடகரிமுழக்கம்வாளரி
எற்பதுசெவித்தலத்தென்னவோங்கிய
ஆர்ப்பொலிகேட்டனனமளிமேலொரு
பாற்கடல்கிடந்ததேயனையபான்மையான். (௪)

---

* நாள்மீன்-நட்சத்திரம்.
† பொன்னிணுடிழிந்தன - சுவர்க்கமேவந்திருந்தாற்போன்ற.
‡ எவிடஎன்பது-எவ்விடவென்றுயது.
§ எல்லை-சமயம்.
$ தெவ்-பகை. () மால்-மதமயக்கம்.

உருத்தனன்பொரவெதிர்ந்திளவலுற்றமை
வரைத்தடந்தோளினான்மனத்தினெண்ணினான்
சிரித்தனனவ்வொலிதிசையினப்புறத்
* திரித்ததவ்வுலகமோரேழொடேழையே. (௫)

எழுந்தனன்வல்விரைந்திறுதியூழியிற்
கொழுந்திரைக்கடல்கிளர்ந்தனையகொள்கையான்
அழுந்தியதக்கிரியருகின்மால்வரை
விழுந்தனதோள்புடைவிசித்தகாற்றினே. (௬)

போய்ப்பொடித்தனமயிர்ப்புறத்துவெம்பொறி
காய்ப்பொடுற்றெழுவடகனலுங்கண்கெட
தீப்பொடித்தனவிழிதேவர்நாட்டினும்
தீப்பொடித்தனபுகையுயிர்ப்புயீங்கவே. (௭)

கைக்கொடுகைத்தலம்புடைப்பக்காவலின்
திக்கயங்களுமதச்செருக்குச்சிந்தின
உக்கனவுருமினமுலைந்தவும்பரும்
நெக்கனநெரிந்தனநின்றகுன்றமே. (௮)

வந்தனென்வந்தனெனென்றவாசகம்
† இந்திரிமுதற்றிசையெட்டுங்கேட்டன
சந்திரன்முதலியதாரகைக்குழாம்
சிந்தினமணிமுடிச்சிகரந்தீண்டவே. (௯)

வீசினகாற்றின்வேர்பறிந்தவெற்பினம்
ஆசையையுற்றனவண்டப்பித்திகை
பூசினவெண்மயிர்பொடித்தவெம்பொறி
கூசினனந்தகன்குலைந்ததும்பரே. (௧௦)

கடித்தவாயெயிறுகுகனல்கள்கார்விசும்
பிடித்தவாயுகுமுருமினத்திற்சிந்தின
‡ தடித்துவீழ்வனவெனத்தகர்ந்துசிந்தின
வடித்ததோள்வலயத்தின்வயங்குகாசரோ. (௧௧)

ஞாலமுநாற்றிசைப்புனலுநாகரும்
மூலமுமுற்றிடமுடிவிற்றீக்குமக்
காலமுமொத்தனன்கடலிற்றான்கடை
ஆலமுமொத்தனனெவருமஞ்சவே. (௧௨)

ஆயிடைத்தாரையென்றமிழ்திற்றோன்றிய
வேயிடைத்தோளினாளிடைவிலக்கினாள்

---

* இரித்தது-அசைந்துவிலகச்செய்தது.
† இந்திரி-கிழக்கு. ‡ தடித்து-மின்னல்.

வாயிடைப்புகைவரவாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங்கூந்தறீகின்றாள். (௧

விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரம்
கலக்கியக்கடல்கடைந்தமுதுகண்டென
உலக்கவின்னுயிர்குடித்தொல்லைநீள்குவன்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள். (௧

கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
கிற்றையனல்லனு * ஈண்டேகுவான்
பெற்றிலன்பிறர்திலன்பெயர்த்தும்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள். (௧

மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றனவெனக்குநேரெனத்
தோன்றினுந்தோற்றவைதொலையுமென்றலின்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால். (௧

மந்தரநெடுவரைமத்துவாசுகி
அந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரனாணைதிர்தருக்கின் † வாங்குநர்
இந்திரன்முதலியவமரரேனையோர். (௧

பெயர்வுறவலிக்கவு ‡ மிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றதைநோக்கியானது
துயிரெனக்கடைந்தவர்க்கமுதந்தந்ததும்
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ. (௧

ஆற்றினெனமாருமவுணர்யாவரும்
தோற்றனரேனையவர்சொலற்பாலதோ
கூற்றுமென்பெயர்சொலக்குலையுமாலினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினோர். (௧

பேதையரெதிர்குவரெனினும்பெற்றுடை
யோதியவரங்களுமுரமுமுள்ளதிற்
பாதியுமென்னதாற்பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழிகெனநின்றுகூறினன். (௨௦

அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந்திராமனென்பவன்

* ஈண்டேகுவான்-தோற்றோடுபவன்.
† வாங்குநர்-கடைவோர்.
‡ மிடுக்கு-சாமர்த்தியம்.

உன்னுயிர்கோடலுக்குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர்சொல்லினரென்றாள். (௨௧)

இதுமுதல் ௬-பாடல் இராமனறம்பிழையாதவனெனத்
தாரைக்கு வாலிகூறுதல்.

உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கலா
தழைத்தயருலகினுக் * கறத்தினெறெலாம்
இழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன்பெண்மையாலென்றான். (௨௨)

இருமையுநோக்குறுமியல்பினுற்கிது
பெருமையோவிங்கிதிற்பெறுவதென்கொலோ
அருமையினின்றுயிரளிக்கு † மாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ. (௨௩)

ஏற்றபேருலகெலாமெய்தியீன்றவள்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ. (௨௪)

நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருவருந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனே. (௨௫)

தம்பியரல்லதுதனக்குவேறுயிர்
இம்பரினிலதெனவெண்ணியேய்ந்தவன்
எம்பியுமியானுமுற்றெதிர்ந்தபோரிடை
அம்பிடைதொடுக்குமோவருளினாழியான். (௨௬)

இருத்திநீயிறையிவணிமைப்பில்காலையில்
உருத்தவனுயிர்குடித்துடன்வந்தாரையும்
கருத்தழித்தெய்துவென்கலங்கலென்றனன்
விரைக்குழல்பின்னுளைவிளம்பவஞ்சினாள். (௨௭)

வேறு.

ஒல்லைச்செருவேட்டியர்வல்புயவோங்கலும்பர்
எல்லைக்குமப்பாலிவர்கின்றவிரண்டிடனும்
மல்லற்கிரியின்றலைவந்தனன்வாலிகீழ்பால்
தொல்லைக்கிரியின்றலைதோற்றியஞாயிறென்ன. (௨௮)

---

* அறத்தினெறெலாம் இழைத்தவற்கு - தருமமார்க்கமனைத்துஞ் செய்த இராமற்கு.

† ஆறுடை-வழியினையுடைய.

வாயிடைப்புகைவரவாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங்கூந்தறீகின்றாள். (௧௩)

விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரம்
கலக்கியக்கடல்கடைந்தமுதுகண்டென
உலக்கவின்னுயிர்குடித்தொல்லைநீள்குவன்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள். (௧௪)

கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
கிற்றையனல்லனு * வீடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன்பெயர்த்தும்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள். (௧௫)

மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றனவெனக்குநேரெனத்
தோன்றினுந்தோற்றனைதொலையுமென்றலின்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால். (௧௬)

மந்தரநெடுவரைமத்துவாசுகி
அந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரனாணெதிர்தருக்கின் † வாங்குநர்
இந்திரன்முதலியவமரரேனையோர். (௧௭)

பெயர்வுறவலிக்கவு ‡ மிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றனைநோக்கியானது
தயிரெனக்கடைந்தவர்க்கமுதந்தந்ததும்
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ. (௧௮)

ஆற்றினெனமாருமவுணர்யாவரும்
தோற்றனரெனையவர்சொல்லற்பாலதோ
கூற்றமென்பெயர்சொலக்குலையுமாலினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினோர். (௧௯)

பேதையரெதிர்குவரெனினும்பெற்றுடை
னாதியமரங்களுமுமுமுள்ளதிற்
பாதியுமென்னதாற்பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழிகெனநின்றுகூறினான். (௨௦)

அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந்திராமனென்பவன்

* ஈண்டேகுவான்-தோற்றோடுபவன்.
† வாங்குநர்-கடைவோர்.
‡ மிடுக்கு-சாமர்த்தியம்.

உன்னுயிர்கோடலுக்குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர்சொல்லினுரென்றான். (உக)

இதுமுதல் கூ-பாடல் இராமனறம்பிழையாதவனெனத்
தாரைக்கு வாலிகூறுதல்.

உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கலா
தழைத்தயருலகினுக் * கறத்திறனெலாம்
இழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன்பெண்மையாலென்றான். (உஉ)

இருமையுநோக்குறுமியல்பினுற்கிது
பெருமையோவிங்கிதிற்பெறுவதென்கொலோ
அருமையினின்றுயிரளிக்கு † மாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ. (உ௩)

ஏற்றபேருலகெலாமெய்தினின்றவள்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ. (உ௪)

நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருவருந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனோ. (உ௫)

தம்பியரல்லதுதனக்குவேறுயிர்
இம்பரினிலதெனவெண்ணியேய்ந்தவன்
எம்பியும்யானுமுற்றெதிர்ந்தபோரிடை
அம்பிடைதொடுக்குமோவருளினாழியான். (உ௬)

இருத்திநீயிறையிவணிமைப்பில்காலையில்
உருத்தவனுயிர்குடித்துடன்வந்தாரையும்
கருத்தழித்தெய்துவென்கலங்கலென்றனன்
விரைக்குழல்பின்னுளைவிளம்பவஞ்சினள். (உ௭)

வேறு.

ஒல்லைச்செருவேட்டியர்வல்புயவோங்கலும்பர்
எல்லைக்குமப்பாலிவர்கின்றவிரண்டிடேனும்
மல்லற்கிரியின்றலைவந்தனன்வாலிகீழ்பால்
தொல்லைக்கிரியின்றலைதோற்றியஞாயிறென்ன. (உ௮)

* அறத்திறனெலாம் இழைத்தவற்கு - தருமமார்க்கமனைத்துஞ் செய்த இராமற்கு.

† ஆறுடை-வழியினையுடைய.

நின்றனெதிர்யாவருநெஞ்சுநடுங்கியஞ்சத்
தன்றோள்வலியாற்றகைமால்வரைசாலும்வாலி
குன்றூடுவந்துற்றனன் * கோளவுணன்குறித்த
வன்றூணிடைத்தோன்றியமாநரசிங்கமென்ன. (௨௯)

ஆர்க்கின்றபின்னோன்றனைநோக்கினன்றானுமார்த்தான்
வேர்க்கின்றவானத்துருமேறுவெறித்துவீழப்
போர்க்கின்றதெல்லாவுலகும்பொதிர்வுற்றபூசல்
கார்க்குன்றமன்னானிலங்காலியகாலினென்ன. (௩0)

அவ்வேலையிராமனுமன்புடைத்தம்பிக்கையா
செவ்வேசெலநோக்குதிதானவர்தேவர்நிற்க
வெவ்வேலையெம்மேகமெக்காலொடெக்காலவெந்தீ
வெவ்வேறலகுத்திவன்மேனியைமானுமென்றான். (௩௧)

வள்ளற்கிளையான்பகர்வானிவன்றம்முன்வாளைக்
கொள்ளக்கொடுங்கூற்றவனைக்கொணர்ந்தான்குரங்கின்
எள்ளற்கருஞ்சோரதுசெய்கலனென்னுமின்னல்
உள்ளத்திலுண்டனுணர்வுற்றிலனென்றுமென்றான். (௩௨)

இளையோன் இராமனிடஞ் சுக்ரீவனை இகழ்ந்துரைத்தல்.

ஆற்றாதுபின்னும்பகர்வானறத்தாறழுங்கத்
தேற்றாதுசெய்வார்களைத்தேறுதல்செவ்விதன்றான்
மாற்றானெனத்தம்முனைக்கொல்லியவந்துநின்றான்
வேற்றார்க்கடிறத்திவன்றஞ்சமென்வீரவென்றான். (௩௩)

அத்தாவிதுகேளெனவாரியன்கூறுவானிப்
பித்தாயவிலங்கினொழுக்கினைப்பேசலாமோ
எத்தாயர்வயிற்றினும்பின்பிறந்தார்களெல்லாம்
ஒத்தாற்பரதன்பெரிதுத்தமனாதலுண்டோ. (௩௪)

விற்றாங்குவெற்பன்னவிலங்கெழிற்றோளமெய்ம்மை
உற்றார்சிலரல்லவர்பலரென்பதுண்மை
பெற்றாருழைப்பெற்றபயன்பெறும்பெற்றியல்லால்
அற்றார்நவையென்றலுக்காகுநரார்கொலென்றான். (௩௫)

வாலி சுக்கிரீவயுத்தம்.

வீரத்திறலோரிவையின்னவிளம்பும்வேலை
தேரிற்றிரிவான்மகனிந்திரன்செம்மலென்றிப்
பாரிற்றிரியும்பணிமால்வரையன்னபண்பார்
மூரித்திசையானையிரண்டெனமுட்டினாரே. (௩௬)

* கோளவுணன்-கொலைத்தொழிலினையுடைய இரணியன்.

குன்றோடுகுன்றொத்தனர்கோளரிக்கொற்றவல்லே
றொன்றோடுசென்றொன்றெதிருற்றனவேயுமொத்தார்
நின்றார்திரிந்தார்நெடுஞ்சாரிநிலந்திரிந்த
வன்றோட்குயவன்றிணிமட்கலத்தாழியென்ன. (௩௭)

தோளோடுதோடேய்த்தலிற்றொன்னிலந்தாங்கலாற்றாத்
தாளோடுதாடேய்த்தலிற்றந்ததழற் * பிறங்கல்
வாளோடுமின்னோடுவபோனெடுவானினோடும்
கோளோடுகோளுற்றனவொத்தடர்ந்தார்கொதித்தார். (௩௮)

தந்தோள்வலிமிக்கவர்தம்மொருதாய்வயிற்றின்
வந்தோர்மடமங்கைபொருட்டுமலைக்கலுற்றார்
† சிந்தோடரியொண்கட்டிலோத்தமைகாதல்செற்ற
சுந்தோபசுந்தப்பெயர்த்தொல்லையினேருமொத்தார். (௩௯)

கடலொன்றினொடொன்றுமலைக்கவுங்காவன்மேருத்
திடலொன்றினொடொன்றமர்செய்யவுஞ்சீற்றமென்ப
துடல்கொண்டிரண்டாகியுடற்றவுங்கண்டிலாதே
மிடலிங்கவர்வெந்தொழிற்கொப்புரைவேறுகாணேம். (௪௦)

ஊகங்களினாயகர்வெங்கணுமிழ்ந்ததீயான்
மேகங்களெரிந்தனவெற்புமெரிந்ததிக்கின்
நாகங்கணடுங்கினகானிலமுங்குலைந்த
மாகங்களைநண்ணியவிண்ணவர்போய்மறைந்தார். (௪௧)

விண்மேலினரோநெடுவெற்பின்முகட்டினரோ
மண்மேலினரோபுறமாதிரவீதியாரோ
கண்மேலினரோவெனயாவருங்காணநின்றார்
புண்மேலிரத்தம்பொடிப்பக்கடிப்பார்புடைப்பார். (௪௨)

எழொத்துடனைந்திசையெட்டொடிரண்டுமுட்டும்
ஆழிக்கிளரார்கலிக் ‡ கைம்மடங்கார்ப்பினோசைப்
பாழித்தடந்தோளினுமார்பினுங்கைகள்பாய
ஊழிக்கிளர்காரிடியொத்ததுகுத்துமோதை. (௪௩)

வெவ்வாயெயிற்றான்மிடல்வீரர்கடிப்பமீச்சென்
றவ்வாயெழுசோரியதாசைகடோறும்வீச
வெவ்வாயுமெழுந்தகொழுஞ்சுடர்மீன்கள்யாவும்
செவ்வாயைநிகர்த்தனசெக்கரையொத்தமேகம். (௪௪)

---

* பிறங்கல்-மலை.

† சிந்தோடு-கடலும்பின்னிடுகின்ற.

‡ ஐம்மடங்கு-ஐந்துபங்கு.

(வேறு.

வெந்தவல்லிரும்பிடைநெடுங் * கூடங்கள்வீழ்ப்பச்
சிந்தியெங்கணுஞ்சிதறுவபோற்பொறிதெறிப்ப
இந்திரன்மகன்புயங்களுமிரவிசேயுரனும்
சந்தவன்னெடுந்தடக்கைகடாக்கலிற்றகர்வ. (சரு

உரத்தினான்மடித்துந்துவர்பாதமிட்டுதைப்பர்
கரத்தினால்விசைத்தெற்றுவர்கடிப்பர்நின்றிடிப்பர்
மரத்தினாலடித்துரப்புவர்பொருப்பினம்வாங்கிச்
சிரத்தின்மேலெறிந்துறுக்குவர்தெழிப்பர்தீவிழிப்பர். (சசு

எடுப்பர்பற்றியுற்றொருவரையொருவர்விட்டெறிவர்
கொடுப்பர்வந்துரங்குத்துவர்கைத்தலங்குளிப்பக்
கடுப்பினிற்பெருங்கறங்கெனச்சாரிகைபிறங்கத்
தடுப்பர்பின்றுவரொன்றுவர்தழுவுவர்விழுவர். (சஎ

வாலினாலுரம்வரிந்தனர்நெரித்துகவலிப்பர்
காலினானெடுங்கால்பிடித்துடற்றுவர்கழல்வர்
மேலினாலுறவெறிந்தனவிறல்வலி † யுகிரால்
தோலினாலுடனெடுவரைமுறைமுறையெனத்தொளைப்பர். (சஅ)

மண்ணகத்தனமலைகளுமரங்களுமற்றும்
கண்ணகத்தினிற்றோன்றியயாவையுங்கையால்
எண்ணகப்பறித்தெறிதலினெற்றலினிற்ற
விண்ணகத்தினைமறைத்தனமறிகடல்வீழ்ந்த. (சகூ)

வெருவிச்சாய்ந்தனர்விண்ணவர்வேறென்னைவிளம்பல்
ஒருவர்க்காண்டமரொருவருந்தோற்றிலருடன்று
செருவிற்றாய்த்தலிற்செங்கனல்வெண்மயிர்செல்ல
முரிபுற்கானிடையெரிபரந்தனவெனமுனைவார். (ருo)

அன்னதன்மையராற்றலினமர்புரிபொழுதின்
வன்னெடுந்தடந்திரள்புயத்தடுதிறல்வாலி
சொன்னதம்பியைத் ‡ தும்பியையரிதொலைத்தென்னக்
கொன்னகங்களிற்கரங்களிற்குலைந்துகமலைந்தான். (ருக)

இராமன் சுக்கிரீவனை [illegible]ம்மையறிந்துகொள்ளக்
கொடிப்பூச்சூடிச் செல்லெனல்.

மலைந்தபோதி § னைந்திரவிசேயையன்மாட்டணுகி
உலைந்தசிந்தையோடுணங்கினன்வணங்கிடவுள்ளம்

* கூடங்கள்-சம்மட்டிகள். † உகிரால்-நகத்தால்.
‡ தும்பியை-யானையை. § இனைந்து-வருந்தி.

நலைந்திடேலுமைவேற்றுமைதெரிந்திலங்கொடிப்பூ
பிலைந்துசெல்கெனவிடுத்தனனெதிர்த்தனன்மீட்டும். (௫௨.)

நயங்குதாரகைநிரைதொடுத்தணிந்தனபோல
பயங்குசென்னியன்வயப்புலிவானவல்லேற்றே
யெங்குமார்பினைஞெல்லைவக்தடுதிறல்வாலி
பயங்கொளப்புடைத்தெற்றினன்குத்தினன்பலகால். (௫௩)

* அயிர்த்தசிந்தையனந்தகன்குலைகுலைந்தஞ்சச்
செயிர்த்துநோக்கினன்சினத்தொடுசிறுநகைசெய்யா
வயிர்த்தகையினுங்காலினுங்கதிர்மகன்மயங்க
உயிர்த்தலைத்தொறும்புடைத்தனனடித்தனனுதைத்தான். (௫௪)

நக்கினுயிருயிர்ப்பொடுஞ்செவிகளிற்கண்ணின்
உக்கதாங்கெரிப்படலையோடுதிரத்திறனெழுக்கம்
திக்குநோக்கினன்செங்கதிரோன்மகன்செருக்கிப்
புக்குநீக்கொடுநெருக்கினனிந்திரன்புதல்வன். (௫௫)

வாலியின்மேல் இராமன் அம்பெய்தல்.

எடுத்துப்பாரிடையெற்றுவாம்பற்றியென்றிளவல்
† கடித்தலத்தினுங்கழுத்தினுந்தன்னிருகரங்கள்
மடுத்துமீக்கொண்டவாலிமேற்கோலொன்றுவாங்கித்
தொடுத்துநாணொடுதோளுறத்திராகவன்றுரந்தான். (௫௬)

காரும்வார்சுவைக்கதலியின்கனியினைக்கழியச்
சேருஞ்சூசியிற்சென்றதுநின்றதென்செப்ப
நீருநீர்தருநெருப்பும்வன்காற்றுங்கீழ்நிமிர்ந்த
பாருஞ்சார்வலிபடைத்தவனுரத்தையப்பகழி. (௫௭)

அலங்குதோள்வலியழிந்தனன்றம்பியை ‡ யருளான்
வலங்கொள்பாரிடையெற்றுவானுற்றபோர்வாலி
கலங்கிவல்விசைக்கால்கிளர்ந்தெறிவுறக்கடைக்கால்
விலங்கன்மேருவும்வேர்பறிந்தாலெனவீழ்ந்தான். (௫௮)

சையம்வேரொடுமுருமுறச்சாய்ந்தெனச்சாய்ந்தான்
வையமீதிடைக்கிடந்துபோருடுதிறல்வாலி
வெய்யவன்றருமதலையைவிடல்கொடுவரும்
கைநெகிழ்ந்தனனெகிழ்ந்திலன்கடுங்கணைகவர்தல். (௫௯)

வெற்றிவீரனதடுகணையவன்மிடலுரத்து
டுற்றதப்புறத்துருதமுனுறுவலிக்கரத்தால்

---

* அயிர்த்த-சந்தேகித்த.

† கடித்தலம்-இடுப்பினிடம்.

‡ அருளான்-காவானாய்.

பற்றிவாலினுங்காலினும்பிணித்தகப்படுத்தான்
கொற்றவெங்கொடு * மறலியுஞ்சிரதலங்குலைந்தான். (௬0)

எழுந்துவான்முகடிடித்துகப்படுப்பவென்றிவரும்
உழுந்துபேர்வுழித்திசைதிரிந்திறுப்பவென்றுறுக்கும்
விழுந்துபாரினைவேரொடும்பறிப்பவென்றேரும்
அழுந்துமிச்சரமெய்தவனோர்கோவென்றயிர்க்கும். (௬௧)

எற்றுங்கையினைநிலத்தொடுமெரிப்பொறிபறப்பச்
சுற்றுநோக்குறுஞ்சுடுசரத்தைத்துணைக்கரத்தால்
பற்றிவாலினுங்காலினும்வலியுறப்பறிப்பான்
† உற்றுழுறைமையினுலைவுறாமலையெனவுருளும். (௬௨)

தேவரோவெனவயிர்க்குமத்தேவரிச்செயலுக்
காவரோவவர்க்காற்றலுண்டோவெனுமயலோர்
யாவரோவெனநகைசெயுமொருவனேயிறைவர்
மூவரோடுமொப்பான்செயலாமெனமொழியும். (௬௩)

நேமிதான்கொலோநீலகண்டன்னெடுஞ்சூலம்
ஆமிதாங்கொலோவன்றெனிற்குன்றுருவயிலும்
நாமவிந்திரன்வச்சிரப்படையுமென்னடுவட்
போமெனுஞ் ‡ துணைபோதுமோயாதெனப்புழுங்கும். (௬௪)

வில்லினூற்றுரப்பரிதிவ்வெஞ்சரமெனவியக்கும்
சொல்லினானெடுமுனிவரோதாண்டினனென்னும்
பல்லினாற்கடிப்புறும்பலகாலுந்தன்னுரத்தைக்
கல்லியார்ப்பொடும்பறிக்குமப்பகழியைக்கண்டான். (௬௫)

சரமெனும்படிதெரிந்ததுபலபடச்சலித்தென்
உரமெனும்பதமுயிரொடுமுருவியவொன்றைக்
கரமிரண்டினும்வாலிலுங்காலினுங்கழற்றிப்
பரமனின்னவன்பெயரறிகுவெனெனப்பறிப்பான். (௬௬)

ஓங்கரும்பெருந்திறலுடைமனத்தனுள்ளத்தன்
வாங்கினான்மற்றவ்வாளியையாளிபோல்வாலி
ஆங்குநோக்கினரமரருமவுணரும்பிறரும்
வீங்கினார்கடோள்வீரரையார்வியவாதார். (௬௭)

மோடுதெண்டிரைமுரிதருகடலெனமுழங்கி
சுடுபேருலகிறந்துளதாமெனற்கெளிதோ

* மறலி-யமன்.
† உற்றுழுறைமையின்-முயன்றமுடியாமையின்.
‡ துணைபோதுமோ-கூர்போதுமானதோ.

காடுமாநெடுவிலங்கல்கள்கடந்ததக்கடலின்
ஊடுபோதலுற்றதனையொத்துயர்ந்துளதுதிரம். (௬௮)

வாலிமார்பிலிரத்தங்கண்ட சுக்ரீவன்வருந்தி மயங்கிவிழுதல்.

வாசத்தாரவன்மார்பெனுமலைவழங்கருவி
ஓசைச்சோரியைநோக்கினனுடன்பிறப்பென்னும்
பாசத்தாற்பிணிப்புண்டவத்தம்பியும்பசுங்கண்
நேசத்தாரைகள்சொரிதரநெடுநிலஞ்சேர்ந்தான். (௬௯)

பறித்தவாளியைப்பருவலித்தடக்கையாற்பற்றி
இறுப்பெனென்றுகொண்டெழுந்தனன்மேருவையிறுப்போன்
முறிப்பெனென்னினுமுறிவதன்றாமெனமொழியாப்
பொறித்தநாமத்தையறிகுவானோக்கினன்புகழோன். (௭௰)

வேறு.

மும்மைசாலுலகுக்கெல்லா * மூலமந்திரத்தைமுற்றும்
தம்மையேதமர்க்குநல்குந்தனிப்பெரும்பதத்தைத்தானே
இம்மையேயெழுமைநோய்க்குமருந்தினையிராமனென்னும்
செம்மைசேர்நாமந்தன்னைக்கண்களிற்றெரியக்கண்டான். (௭௧)

இல்லறந்துறந்தநம்பியெம்மனோர்க்காகத்தங்கள்
வில்லறந்துறந்தவீரன்றோன்றலால்வேதநூலிற்
சொல்லறந்துறந்திலாதசூரியன்மரபுந்தொல்லை
நல்லறந்துறந்ததென்னாநகைவரநாணுட்கொண்டான். (௭௨)

வெள்கிடமகுடஞ்சாய்க்கும்வெடிபடச்சிரிக்குமீட்டும்
உள்கிடுமிதுவுந்தானோரோங்கறமோவென்றுன்னும்
முள்கிடுங்குழியிற்புக்கமூரிவெங்களிநல்யானை
தொள்கொடுங்கிடந்ததென்னத்துயருழந்தழிந்துசோர்வான். (௭௩)

இராமன் வாலியெதிரே வருதல்.

இறைதிறம்பினனென்னேயிழிந்துளோரியற்கையென்னின்
† முறைதிறம்பினனென்றுமொழிகின்றமுகத்தான்முன்னர்
மறைதிறம்பாதவாய்மைமன்னர்க்குமுன்னஞ்சொல்லும்
துறைதிறம்பாமற்காக்கத்தோன்றினன்வந்துதோன்ற. (௭௪)

இராமனைப் பார்த்து வாலியுரைத்தல்.

கண்ணுற்றான்வாலிநீலக்கார்முகில்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவில்லேந்திவருவதேபோலுமாலைப்
புண்ணுற்றதனையசோரிப்பொறியொடும்பொடிப்பநோக்கி
எண்ணுற்றாயென்செய்தாயென்றேசுவாளியம்பலுற்றான். (௭௫)

---

* மூலமந்திரம்-தாரகமந்திரம்.
† முறை-நீதி.

வாய்மையுமரபுங்காத்துமன்னுயிர்துறந்தவள்ளற்
றூயவன்மைந்தனேநீபரதன்முன்றோன்றினையே
தீமைதான்பிறரைக்காத்துத்தான்செய்தாற்றீங்கன்றாமோ
தாய்மையுமன்றிநட்புந்தருமமுந்தழுவிநின்றாய். (எசு)

குலமிதுகல்வியீதுகொற்றமீதுற்றுநின்ற
நலமிதுபுவனமூன்றினாயகமுன்னதன்றே
வலமிகிவ்வுலகந்தாங்கும்வண்மையீதென்றாற்றிண்மை
அலமரச்செய்யலாமோவறிந்திருந் * தயர்ந்துளார்போல். (எஎ)

கோவியற்றருமமுங்கள்குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணாவுருவத்தாயுடைமையன்றோ
ஆவியைச்சனகன்பெற்றவன்னத்தையமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்னைத்திகைத்தனைபோலுஞ்செய்கை. (எஅ)

அரக்கரோரழிவுசெய்துகழிவரேலதற்குவேறோர்
குரக்கினத்தரசைக்கொல்லமனுநெறிகூறிற்றுண்டோ
இரக்கமெங்குகுத்தாயென்பாலெப்பிழைகண்டாயப்பா
† பரக்கழியிதுநீபூண்டாற்புகழையார்பரிக்கற்பாலார். (எகூ)

ஒலிகடலுலகந்தன்னிலூர்தருகுரங்கின்மாடே
கலியதுகாலம்வந்துபரந்ததோகருணைவள்ளால்
மெலியவர்பாலதேயோவொழுக்கமும்விழுப்பந்தானும்
வலியவர்மெலிவுசெய்தாற்புகழன்றிவசையுமுண்டோ. (அ0)

கூட்டொருவரையும்வேண்டாக்கொற்றவபெற்றதாதை
பூட்டியசெல்வமாங்கேதம்பிக்குக்கொடுத்துப்போந்து
நாட்டொருகருமஞ்செய்தாயெம்பிக்கிவ்வரசைநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய் ‡ கருமந்தானிதன்மேலுண்டோ. (அக)

அறைகழலலங்கல்வீரராயவர்புரிவதாண்மைத்
துறையெனலாயிற்றன்றேதொன்மையினன்னூற்கெல்லாம்
இறைவனீயென்னைச்செய்ததீதெனிலிலங்கைவேந்தன்
முறையலசெய்தானென்றுமுனிதியோமுனிவிலாதாய். (அஉ)

இருவர்போரெதிருங்காலையிருவருநல்லுற்றாரே
ஒருவர்மேற்கருணைதூண்டியொருவர்மேலொளித்துநின்று
வரிசிலைகுழையவாங்கிவாயம்புமருமத்தெய்தல்
தருமமோபிறிதொன்றாமோதகுகிலதென்னும்பக்கம். (அங)

* அயர்ந்துளார்-மறந்தார்.
† பரக்கழி-நிந்தை. இது திசைச்சொல்.
‡ கருமம்-பாவம்.

வேறு.

வீரமன்று * விதியன்றுமெய்ம்மையின்
வாரமன்றுநின் மண்ணினுக்கென்னுடல்
பாரமன்றுபகையன்றுபண்பொழிந்
தீரமன்றிதுவென்செய்தவாறுநீ. (௮௪)

இருமைநோக்கினின்றியாவர்க்குமொக்கின்ற
அருமையாற்றலன்றேவறங்காக்கின்ற
பெருமையென்பதிதென்பிழைபேணல்விட்
டொருமைநோக்கியொருவற்குதவலோ. (௮௫)

செயலைச்செற்றபகைதெறுவான்றெரிந்
துயலைப்பற்றித்துணையமைந்தாயெனின்
புயலைப்பற்றுமப்பொங்கரிபோக்கியோர்
முயலைப்பற்றுவதென்னமுயற்சியோ. (௮௬)

காரியன்றகளங்கநிறத்தொன்மை
ஊரியன்றமதிக்குளதாமெனச்
சூரியன்மரபுக்குமோர்தொன்மறு
† ஆரியன்பிறந்தாக்கினையாமரோ. (௮௭)

மற்றொருத்தன்வலிந்தறைகூவவந்
தற்றவென்னையொளித்துயிருண்டநீ
‡ இற்றையிற்பிறர்க்குமிகலேறெனை
நிற்றிபோலுங்கிடந்தநிலத்தரோ. (௮௮)

நூலியற்கையுநுங்குலத்துந்தையர்
போலியற்கையுஞ்சீலமும்போற்றலை
வாலியைப்படுத்தாயலை § மன்னற
வேலியைப்படுத்தாய்விறல்வீரனே. (௮௯)

தாரமற்றொருவன்கொளத்தன்கையிற்
பாரவெஞ்சிலைவீரம்பழிப்பதே
நேருமன்றுமறைந்துநிராயுதன்
மார்பினெய்யவோவில்லிகல்வல்லதே. (௯0)

என்றுதானுமெயிறுபொடிபடத்
தின்றுகான்றவிழிவழித்தீயுக
அன்றவாலியனையனகூறினான்
நின்றவீரனினையநிகழ்த்தினான். (௯௧)

---

* விதி-நியாயம்.
† ஆரியன்-அழகனாகியநீ.
‡ இற்றையில்-இன்றுமுதல்.
§ மன்னறவேலி-இராசநீதியாகிய வேலி.

## இராமன் வாலியைத் தான் கொலைபுரிந்தது நியாயமெனவுரைத்தல்.

பிலம்புக்காய்நெடுநாள்பெயராயெனப்
புலம்புற்றுன்வழிப்போதலுற்றான்றனைக்
குலம்புக்கான்றமுதியர்குறிக்கொணீ
அலம்பொற்றாரவனேயரசென்றனும். (௧௨)

வானமாளவென்றம்முனைவைத்தவன்
தானுமாளக்கிளையினிறத்தடிந்
தியானுமாள்வெனிருந்தரசாள்கிலென்
ஊனமானவுரைபகர்ந்தீரென. (௧௩)

பற்றியான்றபடைத்தலைவீரரும்
முற்றுணர்ந்தமுதியருமுன்பரும்
எற்றுநும்மரசெய்துவையாமெனக்
கொற்றநன்முடிகொண்டதக்கோதிலான். (௧௪)

வந்தவுன்னைவணங்கிமகிழ்ந்தனன்
எந்தையென்கணினைத்தவாற்றலிற்
றந்தவுன்னரசென்றுதருக்கிலான்
முந்தையுற்றது * சொற்றமுனிந்துநீ. (௧௫)

கொல்லலுற்றனையும்பியைக் † கோதவற்
றில்லையென்பதுணர்ந்துமிரங்கலை
அல்லல்செய்யேலுனக்கபயம்பிழை
புல்லலென்னவும்புல்லலைபொங்கினாய். (௧௬)

ஏற்றமுற்றுடையானுனக்காரமர்
தோற்றுமென்றுதொழுதுயர்கையனீ
கூற்றமுண்ணக்கொடுப்பனென்றெண்ணினாய்
நாற்றிசைக்கும்புறத்தையுநண்ணினான். (௧௭)

அன்னதன்மையறிந்துமருளலை
பின்னவன்னியனென்பதும்பேணலை
வன்னிதானிடுசாபவரம்புடைப்
பொன்மலைக்கவணண்ணலிற்போகலை. (௧௮)

‡ ஈரமாவதுமிற்பிறப்பாவதும்
வீரமாவதுங்கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவதுமற்றொருவன்புணர்
தாரமாவதுதாங்குந்தருக்கமோ. (௧௯)

* சொற்ற-உரைத்தன.
† கோது-குற்றம்.
‡ ஈரம்-இரக்கம்.

மறந்திறம்பல்வலியமெனுமனம்
புறந்திறம்பவெளியவர்ப் * பொங்குதல்
அறந்திறம்பலருங்கடிமங்கையர்
திறந்திறம்பதெளிவுடையோர்க்கெலாம். (௪00)

தருமமின்னதெனுந்தகைத்தன்மையும்
இருமையுந்தெரிந்தெண்ணலையெண்ணினால்
அருமை † யும்பிதனருயிர்த்தேவியைப்
பெருமைநீங்கினையெய்தப்பெறுதியோ. (௪0௧)

ஆதலானுமவனெனக்காருயிர்க்
காதலானெனலானுநிற்கட்டனென்
‡ ஏதிலாருமெளியரென்றுரையும்
தீதுதீர்ப்பதென்சிந்தைக்கருத்தரோ. (௪0௨)

பிழைத்ததன்மையிதுவெனப்பேரெழில்
தழைத்தவீரனுரைசெயத்தக்கிலா
இழைத்தவாலியியல்பலவிந்துணை
விழைத்திறத்தொழிலென்னவிளம்புவான். (௪0௩)

ஐய நுங்களருங்குலக்கற்பினைப்
பொய்யின்மங்கையர்க்கேய்ந்தபுணர்ச்சிபோல்
செய்திலன்னெமைத்தேமலர்மேலவன்
எய்தினெய்தியதாகவியற்றினேன். (௪0௪)

மணமுமில்லைமறைநெறிவந்தன
குணமுமில்லைக்குலமுதற்கொத்தன
உணர்வுசென்றுழிச்செல்லுமொழுக்கலால்
நிணமுநெய்யுமிணங்கியநேமியாய். (௪0௫)

பெற்றிமற்றிதுபெற்றதொர்பெற்றியிற்
குற்றமுற்றிலெனீயதுகோடியால்
வெற்றியுற்றதொர்வெற்றியினையெனச்
சொற்றசொற்றமைக்குற்றதுசொல்லுவான். (௪0௬)

நலங்கொடேவரிற்றோன்றிநவையறக்
கலங்கலாதறநன்னெறிகாண்டலின்
விலங்கலாமைவிளங்கியதாதலான்
§ அலங்கலார்க்கிதடுப்பதன்றுமரோ. (௪0௭)

---

* பொங்குதல்-சீறுதல்.
† உம்பி-உன்தம்பி.
‡ ஏதிலார்-பகைவர்.
§ அலங்கலார்-இரக்கமுடையார்.

7

பொறியின்யாக்கையதோபுலனேக்கிய
அறிவின்மேலதன்ருேவறத்தாறுதான்
நெறியி * னேன்மையைநேர்நின்றுணர்ந்தநீ
பெறுதியோபிழையுற்றுறுபெற்றிதான். (௧0௮)

மாடுபற்றியிடங்கர்வலித்திடக்
† கோடுபற்றியகொற்றவற்கூயதோர்
பாடுபெற்றவுணர்வின்பயத்தினல்
வீடுபெற்றவிலங்குமிலங்கரோ. (௧0௯)

சிந்தைநல்லறத்தின்வழிச்சேர்தலால்
பைந்தொடித்திருவின்பரிவாற்றுவான்
வெந்தொழிற்றிறல்வீடுபெற்றெய்திய
‡ எந்தையும் $ மெருவைக்கரசல்லனே. (௧௧0)

நன்றுதீதென்றியநெறிநல்லறி
வின்றியாழ்வதன்ருேவிலங்கின்னிடை
நின்றநன்னெறிநீயறியாநெறி
ஒன்றுமின்னையுன் ¶ வாய்மையுணர்த்துமால். (௧௧௧)

தங்களின்னதுதாதுவின்னவன்
நெருக்கவுன்னலராயினுயர்ந்துள
மக்களும்விலங்கேயறிவின்னெறி
புக்கவேலவ்விலங்கும்புத்தேளிரே. (௧௧௨)

காலனுற்றல்கழிந்தகணிச்சியான்
பாலினுற்றியபத்திபயத்தலான்
மாலினுற்றருவன்பெரும்பூதங்கள்
காலினுற்றலுமாற்றழிநண்ணினய். (௧௧௩)

மேவருந்தருமத்துறைமேவினர்
எவரும்பவத்தாலிழிந்தோர்களும்
தாவருந்தவரும்பலதன்மைசால்
தேவரும்முளர்சீர்மைதிருந்தினர். (௧௧௪)

இனையதாதலினெக்குலத்தியாவர்க்கும்
வினையினல்வருமேன்மையுங்கீழ்மையும்
அனையதன்மையறிந்துமழித்தனை
0 மனையின்மாட்சியென்ருன்மனுநீதியான். (௧௧௫)

---

* நோன்மை-தவத்திறம். † கோடு-சங்கு.
‡ எந்தையும்-எனது சிறியதந்தையும். $ எருவை-கழுகு.
¶ வாய்மை-சொல்.
0 மனையின்மாட்சி-இல்லறதருமம்.

(வேறு.)

அவ்வுரையமையக்கேட்டவரிகுலத்தரசமாண்ட
செவ்வியோயனையதாகச்செருக்களத்துருத்தெய்யாதே
வெவ்விய * புளினரென்னவிலங்கியேமறைந்துவில்லால்
எவ்வியதென்னையென்றானிலக்குவனியம்பலுற்றான். (௧௧௬)

முன்புநின்றம்பிவந்துசரண்புகமுறையிலோயைத்
தென்புலத்துய்ப்பலென்றுசெப்பினன்செருவிலீயும்
அன்பினையுயிருக்காகியடைக்கலமியானுமென்றி
என்பதுகருதியண்ணன்மறைந்துநின்றெய்ததென்றான். (௧௧௭)

கவிகுலத்தரசனன்னகட்டுரைமனத்திற்கொண்டான்
அவியுறாமனத்தனாகியறத்திறனழியச்செய்யான்
புவியிடையண்ணலெண்பதெண்ணினன்பொருந்திமுன்னே
செவியுறக்கேள்விச்செல்வன்சென்னியையிறைஞ்சிச்சொன்னான். (௧௧௮)

தாயெனவுயிர்க்குநல்கித்தருமமுந்தகவுஞ்சால்பும்
நீயெனநின்றநம்பிநெறியினிநோக்குநேர்மை
நாயெனநின்றவெம்பானவையறவுணரலாமே
தீயனபொறுத்தியென்றான்சிறியனசிந்தியாதான். (௧௧௯)

இரந்தனன்பின்னுமெந்தையாவதுமெண்ணா † தேற்றாக்
குரங்கெனக்கருதிநாயேன்கூறியமனத்துக்கொள்ளேல்
அரந்தைவெம்பிறவிநோய்க்குமருந்தனையவையா
வரந்தருவள்ளாலொன்றுகேளெனமறுத்துஞ்சொல்வான். (௧௨௦)

(வேறு.)

ஏவுகூர்வாளியாலெய்துநாயடியனேன்
ஆவிபோம்வேலைவாயறிவுதந்தருளினாய்
மூவர்நீமுதல்வனீமுற்றுநீமற்றுநீ
பாவநீதருமநீபகையுநீயுறவுநீ. (௧௨௧)

புரமெலாமெரிசெய்தோன்முதலினோர் ‡ பொருவிலா
வரமெலாமுருவியென்வசையிலாவலிமைசால்
உரமெலாமுருவியென்னுயிரெலாமுருகுநின்
சரமலாற்பிறிதுவேறுளதவோதருமமே. (௧௨௨)

$ மாவலச்சூலியார்வாழ்த்துநர்க்குயர்வரம்
ஓவலற்றுதவனின்னொருதனிப்பெயரியம்
பாவலிப்புடைமையாலாகுமப்பொருளையாம்
தேவநிற்கண்டவெற்கரிதெனோதேரினே. (௧௨௩)

---

* புளினர்-வேடர். † தேற்றா-தெளிவிலாத. ‡ பொருவிலா-ஒப்பற்ற.
$ இப்பாடல் சிலவேடுகளின்மாத்திரங் காணப்படுகின்றது.

யாவரும்மெவையுமாயிருதுவும்பயனுமாய்ப்
பூவுநல் * வெறியுமொத்தொருவரும்பொதுமையாய்
ஆவனீயாவதென்றறிவினோரருளினோர்
தாவரும்பதமெனக்கருமையோதனிமையோய். (கஉச)

உண்டெனுந்தருமமேயுருவமாயுடையநிற்
கண்டுகொண்டேனினிக்காணவென்கடவேனோ
பண்டொடின்றளவுமேயென்பெரும்பழவினைத்
தண்டமேயடியனேற்குறுபதந்தருவதே. (கஉரு)

வேறு.

மற்றினியுதவியுண்டோவானினுமுயர்ந்தமானக்
கொற்றவநின்னையென்னைக்கொல்லியகொணர்ந்துதொல்லைச்
சிற்றினக்குரங்கினோடுந்தெரிவுறச்செய்தசெய்கை
வெற்றரசெய்தியெம்பி † வீட்டரசெனக்குவிட்டான். (கஉசு)

ஓவியவுருவநாயேனுளதொன்றுபெறுவதுன்பால்
பூவிய ‡ நறவமாந்திப்புந்திவேறுற்றபோது
தீவினையியற்றமேனுமெம்பிமேற்சீறியென்மேல்
ஏவியபகழியென்னுங்கூற்றினையேவலென்றான். (கஉஎ)

இன்னுமொன்றிரப்பதுண்டாலெம்பியையும்பிமார்கள்
தன்முனைக்கொல்வித்தானென்றிகழ்வரேற்றடுத்திதக்கோய்
முன்முனேமொழிந்தாயன்றேயிவன்குறைமுடிப்பதையா
பின்னவன்வினையின்செய்கையதனையும்பிழைக்கலாமோ. (கஉஅ)

மற்றிலெனெனினுமாயவரக்கனைவாலிற்பற்றிக்
கொற்றவநின்கட்டந்துகுரக்கியற்றொழிலுங்காட்டப்
பெற்றிலென்கடந்தசொல்லிற்பயனிலைப்பிறிதொன்றேனும்
முற்றதுசெய்கென்றாலுமுரியனிவ்வனுமனென்றான். (கஉகூ)

அனுமனென்பவனையாழியையநின்செய்யசெங்கைத்
தனுவெனநினைதிமற்றென்றம்பிநின்றம்பியாக
நினைதியோர்துணைவரின்றோரனையவரிலைநீயீண்டவ்
வனிதையைநாடிக்கோடிவானினுமுயர்ந்ததோளாய். (கங0)

என்றவற்கியம்பிப்பின்னரிருந்தனனிளவறன்னை
வன்றனைத்தடக்கைநீட்டிவாங்கினன்றழுவிமைந்த
ஒன்றுனக்குரைப்பதுண்டாலுறுதியஃதுணர்ந்துகோடி
குன்றினுமுயர்ந்ததோளாய்வருந்தலையென்றுகூறும். (கஙக)

* வெறி-மணம்.
† வீட்டரசு-முத்தித்தானங்களுளுயர்ந்த பரமபதம்.
‡ நறவமாந்தி-கட்குடித்து.

மறைகளுமுனிவர்யாருமலர்மிசையயனுமற்றைத்
துறைகளின்முடிவுஞ்சொல்லுந்துணிபொரு * ணெவிற்றாக்கி
அறைகழலிராமனாகியறநெறிநின்றுத்தவந்த
இறையொருசங்கையின்றியெண்ணுதியெண்ணமிக்கோய். (கரு௨)

† நிற்கின்றசெல்வம்வேண்டிநெறிநின்றபொருள்களெல்லாம்
கற்கின்றவிவன்றனாமங்கருதுவவினைக்கண்டாய்
பொற்குன்றமனையதோளாய்பொதுநின்றதலைமைநோக்கின்
எற்கொன்றவலியேசாலுமிதற்கொன்றமேதுவேண்டா. (கருரு)

கைதவமியற்றியாண்டுங்கழிப்பருங்கணக்கிறீமை
வைகலும்புரிந்துளாரும் ‡ வானுயர்நிலையவள்ளல்
எய்தவர்பெறுவரென்றாலிணையடியிறைஞ்சியேயவல்
செய்தவர்பெறுவதையாசெப்பலாந்தன்மைத்தாமோ. (கருச)

அருமையென்விதியினாலேயுதவுவானமைந்தகாலை
இருமையுமெய்தினெய்மற்றினிச்செயற்பாலதெண்ணின்
திருமறுமார்பனேவல்சென்னியிற்சேர்த்திச்சிந்தை
ஒருமையினிறுவிமும்மையுலகினுமுயர்தியன்றே. (கருரு)

மதவியல்குரக்குச்செய்கைமயர்வொடுமாற்றிவள்ளல்
உதவியையுன்னியாவியுற்றிடத்துதவுகிற்றி
பதவியையெவர்க்குநல்கும்பண்ணவன்பணித்தயாவும்
§ சிதைவிலசெய்துநொய்திற்றீர்வரும்பிறவிதீர்தி. (கருசு)

அரசியற்பாரம்பூரித்தயர்ந்தனையிகழாதையன்
மரைமலர்ப்பாதநீங்காவாழுதிமன்னரென்பார்
எரியனற்குரியாரென்றேயெண்ணுதியெண்ணம்யாவும்
புரிதிசிற்றடிமைகுற்றம்பொறுப்பரென்றெண்ணவேண்டா. (கரு௭)

என்னவித்தகையவாயவுறுதிகள்யாவுமேங்கும்
பின்னவற்கியம்பிநின்றபேரெழிலானைநோக்கி
மன்னவர்க்கரசன்மைந்தமற்றிவன்சுற்றத்தோடும்
உன்னடைக்கலமென்றுந்தியுயர்கரமுச்சிவைத்தான். (கருஅ)

வைத்தபினுரிமைத்தம்பிமாமுகநோக்கிவல்லே
உய்த்தனைகொணர்தியுன்றனோங்கருமகனையென்ன
அத்தலையவனையேவியழைத்தலினணைந்தானென்ப
கைத்தலத்துவரிநீரைக்கலக்கினான்பயந்தகானை. (கருகூ)

---

* துணிவிலெனற்பாலது-துணிவிலென்றுயது.
† நிற்கின்றசெல்வம்-இடையிலழியாத பரமபதச்செல்வம்.
† வானுயர்நிலை-வானத்திலுயர்ந்தவிடம்.
§ சிதைவில்-சிதைவிலவாக.

சுடருடைமதியமென்னத்தோன்றினன்றோன்றியாண்டும்
இடருடையுள்ளத்தோரையெண்ணினுமுணர்ந்திலாதான்
மடருடைநறுமென்சேக்கைமலையன்றியுதிரவாரிக்
கடரிடைக்கிடந்தகாதற்றாதையைக்கண்ணிற்கண்டான். (கச0)

கண்டனன்கலுழிநீருங்குருதியுங்காலமாலைக்
குண்டலமலம்புகின்றகுவவுத்தோட்குரிசிறிங்கள்
மண்டலமுலகில்வந்துகிடந்ததம்மதியின்மீதா
விண்டலந்தன்னினின்றோர் * மீன்விழுந்தென்னவீழ்ந்தான். (கசக)

எந்தையேயெந்தையேயிவ்வெழுதிரைவளாகத்தியார்க்கும்
சிந்தையாற்செய்கையாலோர்தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்கநின்முகநோக்கிக்கூற்றம்
வந்ததேயன்றேவஞ்சாதாரதன்வலியைத்தீர்ப்பார். (கச௨)

தறையடித்ததுபோற்றீராத்தகையளித்திசைகடாங்கும்
கறையடிக்கயிறுசெய்த † கண்டகனெற்சமுன்றன்
நிறையடிக்கோலவாலினிலைமையையுன்னுந்தோறும்
பறையடிக்கின்றதந்தப்பயமறப்பறந்ததன்றே. (கச௩)

குலவரைநேமிக்குன்றமென்றவானுயர்ந்தகோட்டின்
தலைகளுநின்பொற்றோளிற்றழும்பினித்தவிர்ந்தவன்றே
மலைகொளுமரவுமற்றுமதியமும்பலவுந்தாங்கி
அலைகடல்கடையவேண்டிஞானிக்கடைவரையா. (கசச)

பஞ்சின்மெல்லடியாள்பாகன்பாதுகமல்லயாவும்
அஞ்சலித்தறியாச்செங்கையாணையாயமரர்யாரும்
எஞ்சலிருந்தாருன்னாலின்னமுநீந்தநீபோ
துஞ்சினை ‡ வள்ளியோர்கணின்னின்யார்சொலற்பாலார். (கச௫)

ஆயனபலவும்பன்னியழுங்கினன்புழுங்கிநோக்கித்
தீயுறமெழுகிற்சிந்தையலம்வருஞ்செங்கண்வாலி
நீயினியயர்வாயல்லையென்றுதன்னெஞ்சிற்புல்லி
நாயகனிராமன்செய்தநல்வினைப்பயனிதென்றான். (கச௬)

தோன்றலுமிறத்தலுந்துகளறத்துணிந்துநோக்கின்
மூன்றுலகத்திேனார்க்குமுலத்தேமுடிந்தவன்றே
யான்றவமுடைமையாலிவ்விறுதிவந்திசைந்தியார்க்கும்
சான்றெனநின்றவீரன்றான்வந்துவீடுதந்தான். (கச௭)

* மீன்-நட்சத்திரம்.

† கண்டகன்-கொடியராவணன்.

‡ வள்ளியோர்-கொடையாளர்.

பாலமைதவிர்நீயென்சொற்பற்றுதியென்னினைய
மேலொருபொருளுமில்லாமெய்ப்பொருள்வில்லுந்தாங்கிக்
கால்தரைதோயநின்றுகட்புலக்குற்றதம்மா
மால்தரும்பிறவிநோய்க்குமருந்தெனவணங்குமைந்த. (௧௪௮)

என்னுயிர்க்கிறுதிசெய்தானென்பதை * யிறையுமெண்ணா
துன்னுயிர்க்குறுதிசெய்தியிவற்கமருற்றதுண்டேல்
பொன்னுயிர்த்தொளிரும்பூணாய்போதுநீநிலைமைநோக்கி
மன்னுயிர்க்குறுதிசெய்வான்மலரடிசமர்த்துவாழ்த்தி. (௧௪௯)

என்றனனினையவாயவுறுதிகள்யாவுஞ்சொல்லித்
தன்றுணைத்தடக்கையாற்றனயனைத்தழுவிச்சாலக்
குன்றினுமுயர்ந்ததிண்டோட்குரக்கினத்தரசன்கொற்றப்
பொன்றிணிவயிரப்பைம்பூட்புரவலன்றன்னைநோக்கி. (௧௫௦)

நெய்யடைநெடுவேற்றானைநீனிறநிருதனென்னும்
துய்யடைக்கனலியன்னதோளினன்றெறுழிலுந்தூயன்
பொய்யடையுள்ளத்தார்க்குப்புலப்படாப்புலவமற்றான்
† கையடையாகுமென்றவ்விராமற்குக்காட்டுங்காலை. (௧௫௧)

தன்னடிதாழ்தலோடுந்தாமரைத்தடங்கணானும்
பொன்னுடைவாளைநீட்டிநீயிதுபொறுத்தியென்றான்
என்னலுமுலகமேழுமேத்தினவிறந்துவாலி
அந்நிலைதுறந்துவானுக்கப்புறத்துலகனானான். (௧௫௨)

கையவணெகிழ்தலோடுங்கடுங்கணைகாலவாலி
வெய்யமார்பகத்துட்டங்காதுருவிமேக்குயரமீப்போய்த்
துய்யநீர்க்கடலுட்டோய்ந்துதூய்மலரமரர்சூட்ட
ஐயன்வெங்விடாதகொற்றத் ‡ தாவம்வந்தடைந்ததன்றே. (௧௫௩)

ஏ-வது, வாலிவதைப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௫௯௯.

---

* இறையும்-சிறிதும்.

† கையடை-அடைக்கலம்.

‡ ஆவம்-அம்புக்கூடு.

## ௮-வது, அரசியற்படலம்.



வாலியுமேகினான்விண்வரம்பிலாவாற்றலோடும்
பாலியாமுன்னர்நின்றபரிதிசேய்செங்கைபற்றி
ஆலிலைப்பள்ளியானுமங்கதனோடும்போனான்
வேல்விழித்தாரைகேட்டாள்வந்தவன்மேனிவீழ்ந்தாள். (௧)

குங்குமங்கொட்டியன்னகுவிமுலைக் * குவட்டிற்கொக்கப்
பொங்குவெங்குருதிபோர்ப்பப்புரிகுழல்சிவப்பப்பொற்றோள்
அங்கவனலங்கன்மார்பிற்புரண்டனளகன்றசெக்கர்
வெங்கதிர்விசும்பிற்றோன்றுமின்னெனத்திகழுமெய்யாள். (௨)

வேய்ங்குழல்விளிகொணல்யாழ்வீணையென்றினையநாண
எங்கினளிரங்கிவிம்மியுருகினளிருகை † கூப்பித்
தாங்கினடலையிற்சேர்ந்துசரிந்துதாழ்குழல்கடள்ளி
ஓங்கியகுரலாற்பன்னியினையனவுரைக்கலுற்றாள். (௩)

வேறு.

வரைசேர்தோளிடைநாளுமுறைவேன்
கரைசேரா ‡ விடர்வேலைகாண்கிலேன்
உரைசேராருயிரேயெனுள்ளமே
அரைசேயாளிதுகாணவஞ்சினேன். (௪)

துயராலேதொலையாதவென்னையும்
§ பயிராயோபகையாதபண்பினோய்
செயிர்தீராய்விதியானதெய்வமே
உயிர்போனாலுடலாருமுய்வரோ. (௫)

நறிதாநல்லமிழ்துண்ணநல்கலின்
பிறியாவின்னுயிர்பெற்றபெற்றிதாம்
அறியாரோநமனுமதன்றெனின்
சிறியாரோவுபகாரஞ்சிந்தியார். (௬)

அணங்கார்பாகனையாசைதோறுமுற்
றுணங்காவொண்மலர்கொண்டுளன்பொடும்
இணங்காக்காலமிரண்டொடொன்றினும்
வணங்காதித்துணைவைகவல்லையோ. (௭)

---

* குவடு-மலை.
† கூப்பி-சேர்த்து.
‡ இடர்வேலை-துக்கசமுத்திரம்.
§ பயிராயோ-அழையாயோ.

வரையார்தோள்பொடியாடவைகுவாய்
தரைமேலாயுறுதன்மையீதெனக்
கரையாதேனிடுபூசல்கண்டுமொன்
றுரையாயென்வயினானம்யாவதோ. (அ)

நையாநின்றனனினிருந்திங்கன்
மெய்யாரோர்திருநாடுமேவினாய்
ஐயாநீயெனதாவியென்றதும்
பொய்யோபொய்யுரையாதபுண்ணியா. (கூ)

செருவார்தோளநின்சிந்தையுமென்னினிஃ்
* மருவார்வெஞ்சரமென்னையும்வெளவுமால்
ஒருவேனுள்ளநேயாகிலுய்கியால்
இருவேமுள்ளிருவேமிருந்திலேம். (க0)

எந்தாய்நீயமிழ்தீயயாமெலாம்
உய்ந்தாமென்றுபகாரமுன்னுவார்
நந்தாநாண்மலர்சிந்திநண்பொடும்
வந்தாரோரவெகிர்வானுளோரெலாம். (கக)

ஓயாவாளியொளித்துநின்றெய்வான்
ஏயாவந்தவிராமனென்றுளான்
வாயாலேயினனென்னினின்வாழ்வெலாம்
ஈயாயோவமிழ்தேயுமீகுவாய். (கஉ)

சொற்றேறன்முந்துறவன்னசொற்கொளாய்
அற்றானன்னதுசெய்கலாமென்றோ
உற்றாயும்பியை † யூழிகாணுநீ
இற்றாயானுனையென்றுகாண்கேனோ. (கங)

நீறாமேருவுநீநெருக்கினால்
மாறோர்வாளியுன்மார்பையீர்வதோ
தேறேன்யானிதுதேவர்மாயமோ
வேறோர்வாலிகொலாம்விளிந்துளான். (கச)

தகைநேர்வண்புகழ்நின்றதம்பியார்
பகைநேர்வாருளரானபண்பினால்
உகநேர்சிந்தியுலந்தழிந்தவால்
மகனேகண்டிலையோநம்வாழ்வெலாம். (கரு)

அருமந்தற்றமகற்றும்வில்லியார்
ஒருமைந்தற்குமடாததன்னினார்

* மருவார்-பகைவர். † ஊழி-அழிவு.

தருமம்பற்றியதக்கவர்க்கெலாம்
கருமங்கட்டளையென்றல் * கட்டதோ. (௧௬)

என்றளின்னனபன்னியின்னலோ
டொன்றவுள்ளுணர்வேதுமுற்றிலாள்
நின்றாளந்நிலைநோக்கிநீதிசால்
வன்றண்மால்வரையன்னமாருதி. (௧௭)

மடவாராலமடந்தைமுன்னர்வாழ்
இடமேவும்படியேவிவாலிபால்
கடன்யாவுங்கடைகண்டுகண்ணனே
டெனுவுற்றவெலாமுணர்த்தலும். (௧௮)

அகம்வேறற்றுகய்சருக்கனோர்
புகுமேலைக்கிரிபுக்கபோழ்தினின்
நகமேயொத்தகுரக்குநாயகன்
முகமேயொத்ததருப்பரிமண்டிலம். (௧௯)

மறைந்தான்மாலையருக்கன்வள்ளியோன்
உறைந்தான்மங்கைநிறத்தையுன்னுவான்
குறைந்தானெஞ்சுகுழைந்தழுங்குவான்
நிறைந்தார்கங்குலின்வேலைநீந்தினான். (௨௦)

புதல்வன்பொன்மகுடம் † பொறுத்தலான்
முதல்வன்பேருவகைக்குமுந்துவான்
உதவும்பூமகள்சேரவொண்மலர்க்
கதவஞ்செய்யகரத்தினீக்கினான். (௨௧)

அதுகாலத்திலருட்குநாயகன்
மதிசாறம்பியைவல்லையேவினான்
கதிரோன்மைந்தனையயகைகளால்
விதியான்மௌலிபிலைச்சுவாயென. (௨௨)

அப்போதேயருணின்றவண்ணலும்
மெய்ப்போர்மாருதிதன்னையீரநீ
இப்போதேகொணரின்னசெய்வினைக்
கொப்பாம்யாவையுமென்றுணர்த்தலும். (௨௩)

‡ மண்ணுந்நீர்முதன்மங்கலங்களும்
எண்ணும்பொன்முடியாதியாவையும்

* கட்டதோ-பொய்யோ.
† பொறுத்தலான்-தரித்தலால்.
‡ மண்ணும்-அபிடேகிக்கின்ற.

நண்ணும்வேலையினம்பிதம்பியும்
திண்ணஞ்செய்வனசெய்துசெம்மலை. (௨௪)

மறையோராசிவழங்கவானுளோர்
நறைதோய்நாண்மலர்தூவநன்னெறிக்
கிறையோர்முன்வினைசெய்யவேந்தலைத்
துறையோர்நூன்முறைமௌலிசூட்டினன். (௨௫)

பொன்மா * மௌலிபுனைந்துபொய்யிலான்
தன்மானக்கழுமும்வேலையின்
நன்மார்பிற்றழுவுற்றநாயகன்
சொன்னான்முற்றியசொல்லினெல்லையான். (௨௬)

வேறு.

ஈண்டுநின்றேகிநீநின்னியல்பமையிருக்கையெய்தி
வேண்டுவமரபினெண்ணிவிதிமுறையியற்றிவீர
பூண்டபேரரசுக்கேற்றயாவையும்புரிந்துபோரில்
மாண்டவன்மைந்தனோடும்வாழ்திநற்றிருவின்வைகி. (௨௭)

வாய்மைசாலறிவின்வாய்த்தமந்திரமாந்தரோடும்
தீமைதீரொழுக்கின்வந்ததிறத்தொழின்மறவரோடும்
ஆய்மைசால் † புணர்ச்சிபேணித்துகளறுதொழிலையாகிச்
சேய்மையோடணிமையின்றித்தேவரிற்றெரியநிற்றி. (௨௮)

புகையுடைத்தென்னினுண்டுபொங்கனலங்கென்றானும்
மிகையுடைத்துலகநூலோர்வினையமும்வேண்டற்பாற்றே
பகையுடைச்சிந்தையார்க்கும்பயனுறுபண்பிற்றீரா
நகையுடைமுகத்தையாகியின்னுரைநல்குநாவால். (௨௯)

தேவருமருடற்கொத்தசெயிரறுசெல்வமஃதுன்
காவலுக்குரியதென்றாலன்னதுகருதிக்காண்டி
ஏவருமினியநண்பராயலவர்விரவாரென்று
மூவகையியலோராவர்முனைவர்க்குமுலகமூன்றின். (௩0)

செய்வனசெய்தல்யாண்டுந்தீயனசிந்தியாமல்
வைவனவந்தபோதும்வசையிலவினியகூறல்
மெய்சொலல்வழங்கல்யாவுமேவினவெஃகலின்மை
உய்வனவாக்கித்தம்மோடுயர்வனவுவந்துசெய்வாய். (௩௧)

சிறியரென்றிகழ்ந்துநோவுசெய்வனசெய்யன்மற்றிந்
நெறியிகந்தியானோர்தீமையிழைத்தலாலுணர்ச்சிநீண்டு

---

* மௌலி-மகுடம்.

† புணர்ச்சிபேணி-கலந்தாலோசித்து.

குறியதாமேனியாயகூனியாற்குவவுத்தோளாய்
வெறியனவெய்திநொய்தின்வெந்துயர்க்கடலின்வீழ்ந்தேன். (௩௨)

மங்கையர்பொருட்டாலெய்துமாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலிசெய்கையாற்சாலுமின்னும்
அங்கவர்திறத்திஞனேயல்லலுமபழியுமாதல்
எங்களிற்காண்டியன்றேயிதனின்வேறுறுதியுண்டோ. (௩௩)

நாயகனல்லனம்மைநனிபயந்தெடுத்துநல்கும்
தாயெனவினிதுபேணத்தாங்குதிதாங்குவாரை
ஆயதுதன்மையேனுமறவரம்பிகவாவண்ணம்
தீயனவந்தபோது * சுடுதியாற்றீமையோரை. (௩௪)

இறத்தலும்பிறத்தறானுமென்பனவிரண்டும்யாண்டும்
திறத்துளிநோக்கிற்செய்தவினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னேபூவின்மேற்புனிதற்கேனும்
அறத்தினதிறுதிவாழ்நாட்கிறுதியஃதுறுதியென்ப. (௩௫)

ஆக்கமுங்கேடுந்தாஞ்செயறத்தொடுபாவமாய
போக்கிவேறுண்மைதேறார்பொருவரும்புலமைநூலோர்
தாக்கினவொன்றேயொன்றுதருக்குறுஞ்செருவிற்றக்கோய்
பாக்கியமன்றியொன்றும்பாவத்தைப்பற்றலாமோ. (௩௬)

இன்னதுதகைமையென்பவியல்புளிமரபினெண்ணி
மன்னரசியற்றியென்கண்வருவழிமாரிக்காலம்
பின்னுறமுறையினுன்றன்பெருங்கடற்சேனேயோடும்
† துன்னுதிபோதியென்றான்சுந்தரனவனுஞ்சொல்வான். (௩௭)

குரங்குறையிருக்கையென்னுங்குற்றமேகுற்றமல்லால்
அரங்குறுதுறக்கநாட்டுக்கரசெனவாயதன்றே
மரங்களரருவிக் ‡ குன்றம்வள்ளனீமனத்தினெம்மை
இரங்கியபணியாஞ்செய்ய விருத்தியாற்சின்றனெம்பால். (௩௮)

§ அரிந்தமநின்னேயண்மியருளுக்குமுரியேமாகிப்
பிரிந்துவேறெய்துஞ்செல்வம்வெறுமையிற்பிறிதொன்றுமோ
கருந்தடங்கண்ணினுளோநாடலாங்காலங்காறும்
இருந்தருடருதியெம்மோடென்றடியிணையின்வீழ்ந்தான். (௩௯)

எந்தலுமிதனைக்கேளாவின்னிளமுறுவ $ னூற
வேந்தமையிருக்கையெம்போல்விரதியர்விழைதற்கொவ்வா

---

* சுடுதி - தண்டித்தி. † துன்னுதி - அடைவாய்.
‡ குன்றம் - குன்றத்தில்.
§ அரிந்தம - நாராயணனே.
$ நூற - தோன்ற.

பாந்தவணிருப்பினெம்மைப்போற்றவேபொழுதுபோமால்
சார்ந்தனைநிற்கமுன்பவ்வரசியற்றருமந்தீர்தி. (௪0)

ழிரண்டாண்டியான்போந்தெரிவனத்திருக்கவேண்டுறன்
ாழியாயரசர்வைகும்வளநகர்வைக * லொல்லேன்
ாழியந்தடந்தோள்வீரபார்த்திலேபோலுமன்றே
ாழிசைமொழியோடன்றியானுறையின்பமென்றே. (௪௧)

தேவிர்வறரக்கன்வைத்தசேமத்துளிருப்பத்தான்றன்
ாவிபோற்றுணைவரோடுமௌவிடற்கரியவின்பம்
மேவிஞனிராமனென்றூலையவிவ்வெய்யமாற்றம்
பூவகையுலகமுற்றுங்காலத்துமுற்றவற்றே. (௪௨)

இல்லறந்துறந்திலாதோரியற்கையையெதிர்ந்துபோதின்
வில்லறந்துறந்துவாழ்வேற்கின்னமேன்மையில்லாச்
சில்லறம்புரிந்துநின்றதீமைகமருமாறு
நல்லறந்துறந்தநோன்பினவையறோற்பவென்றுன். (௪௩)

அரசியற்குரியயாவுமாற்றுழியாற்றியான்ற
திரைசெயற்குரியசேனைக்கடலொடுந் ‡ திங்களொன்றின்
§ விரசுகவென்பாணின்னைவேண்டினென்விரவென்றுன்
உரைசெயற்கெளிதுமாகியரிதுமாமொழுக்கினின்றுன். (௪௪)

மறித்தொருமாற்றங்கூறுன்வானுயர்தோற்றத்தன்றன்
குறிப்பறிந்தொழுகன்மாதோகோதிலாதலென்றே
நெறிப்படர்கண்கள்பொங்கிநீர்வரநெடிதுதாழ்ந்து
பொறிப்பருந்துன்பமுன்றுக்கவிக்குலத்தரசன்போனன். (௪௫)

வாலிகாதலனுமாண்டுமலரடிவணங்கினேனை
நீலமாமேகமன்னநெடியவனருளினேக்கிச்
சீலநீயுடையையாதலிவன்சிறுதாதையென்றே
மூலமேதந்தநுந்தையாமெனமுறையினிற்றி. (௪௬)

என்னமற்றினேயகூறியேகவற்றொடரவென்றுன்
பொன்னடிவணங்கிமற்றப்புகழுடைக்குரிசில்போனன்
பின்னர்மாருதியைநோக்கிப்பேரெழில்வீரநீயும்
அன்னவனரசுக்கேற்றதாற்றுதியறிவினென்றுன். (௪௭)

பொய்த்தலிலுள்ளத்தன்புபொழிகின்றபுணர்ச்சியானும்
இத்தலையிருந்துநாயேனேயினவெனக்குத்தக்க

---

* ஒல்லேன்-கூடாதவனுக இருக்கின்றேன்.

† தேவி-சானகி.

‡ திங்கள்-மாதம்.

§ விரசுக-சேர்வாயாக.

கைத்தொழில்செய்வேனென் றுகழலிணைவணங்குங்காலை
மெய்த்தலைநின் றவீரனிவ்வுரைவிளம்பிவிட்டான். (சஅ)

நிரம்பினுனொருவன்காத்தநிறையரசிறுதிநின்ற
வரம்பிலாததனைமற்றோர்தலைமகன்வலிதிற்கொண்டால்
* அரும்புவநலனுந்தீங்குமாகவினையதின்போற்
பெரும்பொறையறிவிற்றொரனிலையினைப்பெறுவதம்மா. (சகூ)

† ஆன்றவற்குரியதாயவரசினைகிறுவியப்பால்
என்றெனக்குரியதாயகருமமுமியற்றற்கொத்த
சான்றவர்நின்னினில்லையாகலாற்றருமந்தானே
போன்றநீயானேவேண்டவத்தலைபோதியென்றான். (நிo)

ஆழியானனையகூறவாணையிதாகினைந்தே
வாழியான்புரிவேனென்றுவணங்கிமாருதியும்போனன்
சூழிமால்யானையன்னதம்பியுந்தானுந்தொல்லை
நாழிநாயகனும்வேறோருயர்தடங்குன்றமுற்றான். (நிக)

ஆரியனருளிற்போயவ்வகன்மலையகத்தனுய
சூரியன்மகனுமானந்துணைவருங்கிளையுஞ்சுற்றத்
தாரையைவணங்கியன்றோடாயெனத்தக்கதுமுறைதைச்
சீரியன்சொல்லேயென்னச்செய்வினையரசுசெய்தான். (நிஉ)

வளவரசெய்திமற்றைவானரவீரர்யாரும்
இளைஞரினுதவவாணைகிளர்திசையளப்பக்கேளோ
டளவிலவாற்றலாண்மையங்கதன்றங்கள்செல்வத்
திளவரசியற்றவேவியினிதினிருந்தானிப்பால். (நிந.)

‡ வள்ளலுமலைவணின்றேகிமதங்கனதிருக்கையாய
வெள்ளவான்குடுமிக்குன்றத்தொருசிறைமேவிமெய்ம்மை
அள்ளுறுகாதற்றம்பியன்பினுலமைக்கப்பட்ட
எள்ளவில்சாலையெய்தியினிதினிருந்தகாலை. (நிச)

அ-வது, அரசியற்படலம்-முற்றிற்று.
ஆ. திருவிருத்தம்-சநிந.

---

* அரும்புவ-தோன்றுவ.
† ஆன்றவர்-உயர்ந்தோர்.
‡ வள்ளல்-வரையாதுகொடுப்போன்.

## * ௬-வது, கார்காலப்படலம்.



இதுமுதல் ௰௦-பாடல்கள் மழைக்கால வருணனை.

மாவியல்வடதிசைநின்றுவானவன்
ஓவியமேயெனவொளிக்கவின்குலாம்
தேவியைநாடியமுந்தித்தென்றிசைக்
கேவியதாமெனவிரவியேகினான். (௧)

† பையணைப்பஃறலைப்பாந்தளேந்திய
மொய்ந்நிலத்தகளியின்முழங்குநீர்மெயின்
வெய்யவன்விளக்கமாமேருப்பொற்றிரி
மையெடுத்தொத்ததுமழைத்தவானமே. (௨)

‡ நண்ணுதலருங்கடனஞ்சநுங்கிய
கண்ணுதல்கண்டத்தின்காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டதுவெயிலின்வெங்கதிர்
தண்ணியமெலிந்துளதழைத்தமேகமே. (௩)

நஞ்சினினளிர்நெடுங்கடலினங்கையர்
அஞ்சனநயனத்தினவிழ்ந்தகூந்தலின்
வஞ்சனையரக்கர்தம்வடிவிற்செய்கையின்
நெஞ்சினினிருண்டதுநீலவானமே. (௪)

நாட்கனினளிர்கடனாரநாவுற
வேட்கையிற்பருகியமேகமின்னுவ
வாட்கைகண்மயங்கியசெருவின்வார்மதப்
§ பூட்கைகணிறைந்தபுண்டிறப்பபோன்றவே. (௫)

நீனிறப்பெருங்கரிநிரைத்தநீர்த்தெனச்
சூனிறமுகிற்குலந்துவன்றிச்சூழ்திரை
மானிறநெடுங்கடல்வாரி $ மூரிவான்
மேனிரைத்துளதெனமுழக்கமிக்கதே. (௬)

அரிப்பெரும்பெயரவன்முதலினோரணி
விரிப்பவுமொத்தனவெற்புமீதுதீ
எரிப்பவுமொத்தனவேசிலாசைகள்
சிரிப்பவுமொத்தனதெரிந்தமின்னெலாம். (௭)

* கார்காலம்-மேகங்கள் மழைபெய்யுங்காலம்.

† பையணை-விடப்பையினையுடைய பாம்பாகிய அணை. இஃது ஆகு பெயர். ‡ நண்ணுதலரும்-அருகிலடைதற்கரிய.

§ பூட்கை-யானை. $ மூரி-பெரிய.

* மாதிரக்கருமகன்மாரிக்கார்மழை
யாதினுமிருண்டவிண்ணிருந்தைக்குப்பையின்
கூதிர்வெங்கானெடுந்துருத்திக்கோளமைத்
ஊதுவெங்கனலுமிழுலையுமொத்ததே. (௮)

பிரிந்துறைமகளிரும்பிலத்தபாந்தளும்
எரிந்துயிர்நடுங்கிடவிரவியின்கதிர்
அரிந்தனவாமெனவசனிநாவென
விரிந்தனதிசைதொறுமிசையின்மின்னெலாம். (௯)

சூடினமணிமுடித்துகளின்விஞ்சையர்
கூடுறைநீக்கியகுருதிவாட்களும்
ஆடவர்பெயர்தொறுமாசையானையின்
ஓடைகளொளிபிறழ்வனவுமொத்ததே. (௧௦)

எண்வகைநாகங்கடிசைகளெட்டையும்
நண்ணினகாவலைத்தலையமின்னகக்
† கண்ணன்மெய்வடிவெனக்கருகிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பென ‡ ஊதைபொங்கவே. (௧௧)

தலைமையுங்கீழ்மையுந்தவிர்தலின்றியே
மலையினுமரத்தினுமற்றுமுற்றினும்
விலைநினைந்துளவழிவிலங்கும்வேசையர்
உலைவுறுமனமெனவுலாயதூதையே. (௧௨)

அழுங்குறுமகளிர்த § மன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலைகொதிப்பப்புக்குலாய்
கொழுங்குறைத்தசையெனவீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயெனவாடையீங்கிற்றே. (௧௩)

ஆர்த்தெழுதுகள்விசும்படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப்பிறழுங்கொட்பினும்
தார்ப்பெரும்பணையின்விண்டழுங்குதாவினும்
போர்ப்பெருங்களமெனப்பொலிந்ததும்பரே. (௧௪)

இன்னகைச்சனகியைப்பிரிந்தவேந்தன்மேல்
மன்மதன்மலர்க்கணைவழங்கினானெனப்
பொன்னெடுங்குன்றின்மேற்பொழிந்ததாரைகள்
மின்னொடுந்துவன்றினமேகராசியே. (௧௫)

---

* கருமகன் - கொல்லன்; இரும்புவேலைசெய்பவன்.
† கண்ணுதன் மிடறெனக்கருகி என்றும்பாடம்.
‡ ஊதை - ஒருவகைக் காற்று.
§ அன்பர் - நாயகர்.

கல்லிடைப்படுந்துளித்திவலைகாரிடு
வில்லிடைச்சரமெனவிசையின்வீழ்ந்தன
* செல்லிடைப்பிறந்தசெங்கனல்கள்சிந்தின
வல்லிடைமணிசிறந்துமிலியற்றல்போல். (௧௬)

† மள்ளர்கண்மறுபடைமானயானைமேல்
வெள்ளிவேலெறிவனபோன்றமேகங்கள்
தள்ளருந்துளிபடத்தகர்ந்துசாய்கிரி
புள்ளிவெங்கடகரிபுரள்வபோன்றவே. (௧௭)

வாணிடுதனுநெடுங்கருப்புவின்மழை
மீனெடுங்கொடியவன்பகழிவீழ்துளி
தானெடுஞ்சார்துணைபிரிந்ததன்மையர்
ஊனுடையுடம்பெலாமுழுக்கலொத்தவே. (௧௮)

‡ தீர்த்தனுங்கவிகளுஞ்செறிந்துநம்பகை
பேர்த்தனரினியெனப்பேசிவானவர்
ஆர்த்தெனவார்த்தனமேகமாய்மலர்
தூர்த்தனவொத்தனதுள்ளிவெள்ளமே. (௧௯)

வண்ணவிற்கரதலத்தரக்கன்வாளினன்
விண்ணிடைக்கடிதுகொண்டேகும்வேலையில்
பெண்ணினுக்கருங்கலமனையபெய்வளை
கண்ணெனப்பொழிந்ததுகாலமாரியே. (௨௦)

சிரஞ்சுடர்மதிபுனைதேவன்விண்டொடர்
புரஞ்சுடவிடுசரம்புரையுமின்னினம்
அரஞ்சுடப்பொறிமிர § யிலினுடவர்
உரஞ்சுடவுளைந்தனபிரிந்துளோர்க்கெலாம். (௨௧)

பொருடரப்போயினர்ப்பிரிந்தபொய்யுடற்
குருடருதேர்மிசையுயிர்கொண்டுய்த்தலான்
மருடருபிரிவினோய் $ மாசுணங்கெடக்
கருடனைப்பொருவினகாலமாரியே. (௨௨)

முழங்கினமுறைமுறைமூரிமேகநீர்
வழங்கினமிடைவனமானயானைகள்
தழங்கினமொழிமதத்திவலைதாழ்தரப்
புழுங்கினவெதிரெதிர்பொருவபோன்றவே. (௨௩)

* செல்-மேகம். † மள்ளர்-போர்வீரர்.
‡ தீர்த்தன்-தூயவன், ஈண்டிராமன்மேற்று.
§ அயில்-வேலாயுதம். $ மாசுணம்-பாம்பு.

விசைகொடுமாருதமறித்துவீசலால்
அசைவுறுசிறுதுளியப்புமாரியின்
இசைவுறவெய்யனவியையவவாயிருந்
திசையொடுதிசைசெருச்செய்தவொத்தவே. (௨௪)

விழையுறுபொருடரப்பிரிந்தவேந்தர்வந்
துழையுறவுயிருறவுயிர்க்குமாதரின்
மழையுறமாமுகமலர்ந்துதோன்றின
குழையுறப்பொலிந்தன * வுலவைக்கொம்பெலாம். (௨௫)

(வேறு.)

பாடலம்வறுமைகூரப்பகலவன்பசுமைகூரக்
கோடல்கள்பெருமைகூரக்குவலயஞ்சிறுமைகூர
ஆடினமயில்கள்பேசாதடங்கினகுயில்களன்பர்த்
தேடுறத்தளர்ந்தார்போன்றுந்திருவுறக்கிளர்ந்தார்போன்றும். (௨௬)

நாணிறச்சுரும்பும்வண்டுதென்மணியணியுஞ்சாரற்
றேனுகமலர்ந்துசாய்ந்தசேயிதழ்க்காந்தட்செம்பூ,
மேனிலைவென்றதம்மாகாரெனவியந்துநோக்கி
மாணிலக்கிழத்திகைகண்மறித்தனபோன்றமன்றே. (௨௭)

வாளெயிற்றரவம்போலவன்றலைகான்றமானத்
தாளுடைக்கோடரம்மைத்தழீஇயனகாதறங்க
மீளலவவையுமன்னவிழைவனவுணர்வுவீந்து
கோளரவென்னப்பின்னியவற்றொருங்குழைந்துசாய்ந்த. (௨௮)

எள்ளிடவிடனுமின்றியெழுந்தனவிலங்கு † கோபம்
தள்ளுறத்தலைவர்தம்மைப்பிரிந்தவர்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங்கலவியிற்பலகாற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பைசிதர்ந்தெனவிரிந்தமாதோ. (௨௯)

தீங்கனிநாவலோங்குஞ்சேணுயர்குன்றிற்செம்பொன்
வாங்கினகொண்டுபாரின்மண்டுமால்யாறுமான
வேங்கையின்மலருங்கொன்றைவிரிந்தனவீயுமீர்த்துத்
தாங்கினகலுழிசென்றுதலைமயக்குறுவதம்மில். (௩0)

நன்னெடுங்கார்தட்போதினறைவிரிகடுக்கைமென்பூத்
துன்னியகோபத்தோடுந்தோன்றியதோற்றந்தும்பி
இன்னிசைமுரல்வநோக்கியிருநிலமலர்க்கையேந்திப்
பொன்னெடுங்காசையீட்டிக்கொடுப்பதேபோன்றதன்றே. (௩௧)

---

* உலவைக்கொம்பு-பட்டமரக்கிளை.

† கோபம்-இந்திரகோபம்; பட்டுப்பூச்சியென்ப.

நீடுநெஞ்சுறுநேயத்தானெடிதுறப்பிரிந்து
வாடுகின்றனமருளுறுகாதலின்மயங்கிக்
கூடுநன்னதித்தடந்தொறுங்குடைந்தனபடிவுற்
றூடுகின்றனகொழுநரைப்பொருவினவன்னம். (௪

காரெனும்பெயர்க்கரியவன்மார்பினிற்கதிர்முத்
தாரமென்னவும்பொலிந்தனவளக்கருமளக்கர்
நீர்முகந்தமாமேகத்தினருகுறநிரைத்துக்
கூரும்வெண்ணிறத்திறத்தனபறப்பன * குரண்டம். (௪௧

மருவிநீங்கல்செல்லாநெடுமாலையவானிற்
பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப
திருவினாயகனிவனெனத்தேமறைதெரிக்கும்
ஒருவன்மார்பினினுத்தரியத்தையுமொத்த. (௪௨

உறவெதுப்புறுங்கொடுந்தொழில்வேனிலானொழியத்
திறவினைப்பருங்காரெனுஞ்செவ்வியோன்சேர
நிறமனத்துறுகுளிர்ப்பினினெடுநிலமடந்தை
புறமயிர்த்தலம்பொடித்தனபோன்றனபசும்புல். (௪௩)

தேனவாமலர்த்திசைமுகன்முதலினர்தெளிந்தோர்
ஞானநாயகனவையுறநோக்கினர்நல்கக்
கானம்யாவையும்பரப்பியகண்ணெனச்சனகன்
மானைநாடிநின்றழைப்பனபோன்றன † மஞ்ஞை. (௪௪)

செஞ்செவேலவர்செறிசிலைக்குரிசிலரிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப்புதுநிறங்கொடுக்கும்
பஞ்சிபோர்த்தமெல்லடியெனப்பொலிந்தனபதுமம்
வஞ்சிபோலியர்மருங்கெனநுடங்கினவல்லி. (௪௫)

நீயிரன்னவர்குழலையராதலினேடிப்
போயதையலைத்தருதிரென்றிராகவன்புகலத்
தேயமெங்கணுந்திரிந்தனபோந்திடைதேடிக்
‡ கூயவாய்க்குரல்குறைந்தபோற்குறைந்தனகுயில்கள். (௪௬)

பொழிந்தமாநிலம்புற்றரக்குமட்டியபுனிற்று
எழுந்தவாம்பிகளிடறினசெறிதயிரேய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலையாய்ச்சியர்முழவிற்
பிழிந்தபால்வழிநுரையினைப்பொருவுவ § பிடவம். (௪௭)

---

* குரண்டம்-வெண்கொக்கு.

† மஞ்ஞை-மயில்.

‡ கூய-அழைத்த.

§ பிடவம்-ஒருமலர்.

வேங்கைநாறினகொடிச்சியர்வடிக்குழல்விரைவண்
டேங்கநாகமுநாறினநுளைச்சியரைம்பால்
ஆங்குநாண்முல்லைநாறினவாய்ச்சியரோதி
ஞாங்கருற்பலமுழத்தியர் * பித்திகைநாற. (௪௮)

தேரைக்கொண்டபேரல்குலாடிருமுகங்காணான்
ஆரைக்கண்டுயிராற்றுவானல்லுணர்வழிந்தான்
மாரற்கெண்ணில்பல்லாயிரமலர்க்கணைவகுத்த
காரைக்கண்டனன்வெந்துயர்க்கொருகரைகாணான். (௪௯)

அளவில்காரெனுமப்பெரும்பருவம்வந்தணைந்தால்
தளர்வரென்பதுதவம்புரிவோருக்குந்தகுமால்
கிளவிதேனினுமமிழ்தினுங்கிளத்தவெள்வளைதோள்
வளவியுண்டவன்வருந்துமென்றாலதுவருத்தோ. (௫௦)

கார்வளங்கண்ட ராமன் காதலியை நினைந்து வருந்துதல்.

காவியுங்கருங்குவளையுநெய்தலுங்காயாம்
பூவையும்பொருவானவன்புலம்பினன்றளர்வான்
ஆவியுஞ்சிறிதுண்டுகொலாமெனவயிர்த்தான்
தூவியன்னமன்னாடிறத்தினையிவைசொல்லும். (௫௧)

வேறு.

வாரோர்முலையாளைமறைக்குநர்வாழ்
ஊரேயறியேனுயிரோடுழல்வேன்
† நீரேயுடையாயருணின்னிலையோ
காரேயெனதாவிகலக்குதியோ. (௫௨)

வெப்பார்நெடுமின்னினெயிற்றைறவெகுண்
டெப்பாலும்விசும்பினிருண்டெழுவாய்
அப்பாதகவஞ்சவரக்கரையே
ஒப்பாயுயிர்கொண்டல ‡ தோவலையோ. (௫௩)

அயிலேவிழியார்விளையாரமிழ்தின்
குயிலேமொழியார்க்கொணராய்கொடியாய்
துயிலேனொருவேனுயிர்சோர்வுணர்வாய்
மயிலேயெனைநீவலியாடுதியோ. (௫௪)

மழைவாடையொடாடிவலிந்துயிர்மேல்
நுழைவாய்மலர்வாய் § நொடியாய்கொடியே
இழைவாணுதலாளிடைபோலிடையே
குழைவாயெனதாவிகுழைக்குதியோ. (௫௫)

* பித்திகை-கூந்தல். † நீர்-சலமும், நெகிழ்ந்த குணமும்.
‡ ஓவலையோ-ஒழியாயோ. § நொடியாய்-பேசுவாயாக.

விழையேன்விழைவானவைமேன்மையினின்
றிழையேனுணர்வேனவையின்மையினால்
பிழையேனுயிரோடுபிரிந்தனரால்
உழையேயவரெவ்வுழையாருரையாய். (௫௬)

பயில்பாடகமெல்லடிபஞ்சனையார்
செயிரேதுமிலாரொடுநீருதியோ
அயிராதுடனேயகல்வாயலையோ
உயிரேகெடுவாயுறவோர்கிலையோ. (௫௭)

ஒன்றைப்பகராய்க்குழலுக்குடையாய்
வன்றைப்புறநீள்வயிரத்தினையோ
கொன்றைக்கொடியாய்க்கொணர்கிற்றிலையோ
என்றைக்குறவாகவிருந்தனையோ. (௫௮)

(வேறு.)

குராவரும்பனையகூர்வாளெயிற்றுவெங்குருளைநாகம்
விராவுவெங்கடுவிற்கொல்லுமெல் * லிணர்முல்லைவெய்தின்
உராவருந்துயரமூட்டியோய்வறமலைவதொன்றோ
இராவணகோபமிற்கவிந்திரகோபமென்றோ. (௫௯)

ஓடைவாணுதலினாளையொளிக்கலாமுபாயமுன்னி
நாடிமாரீசனோராடகநவ்வியானான்
வாடையாய்க்கூற்றினுருமுருவினைமாற்றிவந்தார்
கேடுசூழ்வார்க்குவேண்டுமுருக்கொளக்கிடைத்தவன்றே. (௬௦)

அருவினையரக்கரென்னவந்தரமதனின்யாரும்
வெருவரமுழங்குகின்றமேகமேமின்னுகின்றாய்
தருவலென்றிரங்கினாயோதாமரைமறந்தையல்
உருவினைக்காட்டிக்காட்டியொளிக்கின்றாயொளிக்கின்றாயால். (௬௧)

உண்ணிறைந்துயிர்க்கும்வெம்மையுயிர்சுடவுடலையுள்ளம்
புண்ணுறவாளிதூர்த்தல்பழுதினிப்போதிமாரா
எண்ணுறுகல்வியுள்ளத்திளையவனின்னையுன்னைக்
கண்ணுறுமாயிற்பின்னையாரவன்சீற்றங்காப்பார். (௬௨)

வில்லும்வெங்கணையும்வீரர்வெஞ்சமத்தஞ்சினார்மேல்
புல்லுநவல்லவாற்றல்போற்றலர்குறித்தல்போலாம்
அல்லுநன்பகலுநீங்காயனங்கநீயருளிற்றீர்ந்தாய்
செல்லுமென்றெளிவந்தேமைச்செயலுறுஞ்சீர்மைத்தாமோ. (௬௩)

* இணர்-கொத்து.

என்னவித்தகையபன்னியீடழிந்திரங்குகின்ற
தன்னையொப்பானைநோக்கித் * தகையழிந்தயர்ந்ததம்பி
நின்னையெத்தகையையாகநினைந்தனைநெடியோயென்றுச்
சென்னியிற்சுமந்தகையன்றேற்றுவான்செப்பலுற்றான். (௬௫)

வேறு.

காலநீளிதுகாருமாரியும்வந்ததென்றகவற்சியோ
நீலமேனியரக்கர்வீரநினைந்தழுங்கியநேர்மையோ
வாலிசேனைமடந்தைதனைவிடநாடவாரலிலாமையோ
சாலுநல்லுணர்கேள்விவீரதளர்ந்ததென்னைதவத்திறேய். (௬௬)

மறைதுளங்கினுமதிதுளங்கினும்வானுமாழ்கடல்வையமும்
நிறைதுளங்கினுநிலைதுளங்குறுநிலைமைநின்வயினிற்குமோ
பிறைதுளங்குவவனையபேரெயிறுடைய † பேதையர்பெருமைநின்
இறைதுளங்குறுபுருவமென்சிலையிடைதுளங்குறவிசையுமோ. (௬௭)

அனுமனென்பவனளவறிந்தனமறிஞவங்கதனாதியோர்
எனையரென்பதொரிறுதிகண்டிலமெழுபதென்றெணுமியல்பினார்
வினையின்வெந்துயர்விரவுதிங்களும்விரைவுசென்றனவெரிதினின்
தனுவெனுந்திருநுதலிவந்தனள் ‡ சரதம்வன்றுயர்தவிர்தியே. (௬௮)

மறையறிந்தவர்வரவுகண்டுமைவலியும்வஞ்சகர்வழியொடும்
குறையவென்றிடர்களைவமென்றனைகுறைமுடிந்ததுவிதியினால்
இறைவவங்கவரிறுதிகண்டினிதிசைபுனைந்திமையவர்கடாம்
உறையுமும்பருமுதவிநின்றருளுணர்வழிந்திடலுறுதியோ. (௬௯)

காதுகொற்றமினக்கலாதுபிறர்க்கெவ்வாறுகலக்குமோ
வேதனைக்கிடமாதல்வீரதையன்றுபேதைமையாமரோ
போதுபிற்படலுண்டிதோர்பொருளன்றியின்றுபுணர்த்தியேல்
யாதுனக்கியலாததெந்தைவருந்தலென்னவியம்பினான். (௭0)

சொற்றதம்பியுரைக்குணர்ந்துயிர்சோர்வொடுங்கியதொல்லையோன்
இற்றவின்னலியக்கமெய்திட § வைகல்பற்பலவேகமேல்
உற்றுநின்றவினைக்கொடும்பிணியொன்றின்மேலுடனென்றுபாய்
மற்றும்வெம்பிணிபற்றிறலெனவந்தெழுந்ததுமாரியே. (௭௧)

வேறு.

நிறைந்தனநெடுங்குளனெருங்கினதரங்கம்
குறைந்தனகருங்குயில்குளிர்ந்தவுயர்குன்ற

* தகையழிந்து-நிலைமைகெட்டு.
† பேதையர்-அறிவிலிகளான அசுரர்.
‡ சரதம்-உண்மை. § வைகல்-நாள்.

மறைந்தனதடந்திசைவருந்தினர்பிரிந்தார்
உறைந்தன * வகன்றிலுட † னன்றிலுயிரொன்றி. (௭௧)

பாசிழையரம்பையர்பழிப்பிலகலல்குற்
றூசுதொடரூசனனிவெம்மைதொடர்வுற்றே
வீசியதுவாடையெரிவெந்தவிரிபுண்வீழ்
ஆசிலயில்வாளியெனவாசைபுரிவார்மேல். (௭௨)

வேலைநிறைவுற்றனவெயிர்கதிர்வெதுப்பும்
சீலமழிவுற்றபுனலுற்றுருவுசெப்பின்
காலமறிவுற்றுணர்தல் ‡ கன்னலளவல்லால்
மாலைபகலுற்றதெனவோர்வரிதுமாதோ. (௭௩)

நெற்கிழியநெற்பொதிசிதம்பினநிரம்பாச்
சொற்கிழியநற்கிளிகடோகையவர்தூய்மென்
பற்கிழிமணிப்படர்திரைப்பரதர்முன்றில்
பொற்கிழிவிரித்தனசினைப்பொதுளுபுன்னை. (௭௪)

நிறங்கருகுகங்குல்பகலின்றநிலைநீவா
அறங்கருதுசிந்தைமுனியந்தணரிறைஞ்சிப்
பிறங்கருநெடுந்துளிபடப்பெயர்வில்குன்றின்
உறங்கலில்விலங்கலிலநின்றவுயர்வேழம். (௭௫)

சந்தினடையிற்படலைவேதிகைதடந்தோ
றந்தியிடகிற்புகைநுழைந்தகுளிரன்னம்
மந்திதுயிலுற்றமுழைவன்கடுவ § னங்கத்
திந்தியமவித்ததனியோகியினிருந்த. (௭௬)

ஆசில்சுனைவாலருவியாயிழையரைம்பால்
வாசமணநாறலிலவானமணிவன்கால்
ஊசல்வறிதானவிதெஞண்மணிகள்விண்மேல்
வீசலிலவாளிநெடுமாரிதுளிவீச. (௭௭)

கருந்தகையதண்சினையகைதைமடல்காதல்
தருந்தகையபோதுகிளையிற்புடைதயங்கப்
பெருந்தகையபொற்சிறையொடுக்கியுடல்போரா
திருந்தகுருகின்பெடைபிரிந்தவர்களென்ன. (௭௮)

* அகன்றில்-ஒருசாதிப்பறவை.
† அன்றில்-ஒருசாதிப்புள்.
‡ கன்னல்-நாழிகைவட்டில்.
§ அங்கத்திந்தியமவித்த-உடலிலுள்ள பஞ்சேந்திரியங்களைஒடுக்கிய.

* பதங்கமுழ † வொத்தவிசைபன்முறிமிறுபன்ன
விதங்களினடித்திடுவிகற்பவழிமேவும்
மதங்கியரையொத்தமயில்வைகுமரமூலத்
தொதுங்கினவுழைக்குலமழைக்குலமுழக்க. (எகூ)

விளக்கொளியகிற்புகைவிழுங்கமணிமென்கொம்
பிளைக்குமிடைமங்கையருமைந்தர்களுமேறத்
தளத்தகுமலர்த்தவிசிகந்துநகுசந்தின்
றுளைத்துயிலுவந்துதுயில்வுற்றகுளிர்தும்பி. (அ0)

தாமரைமலர்த்தவிசிகந்துதகையன்னம்
மாமரணிரைத்தொகுபொதும்பருழைவைகத்
தேமரணடுக்கிதணிடைச்செறிகுரம்பைத்
தூமருவெயிற்றியரொடன்பர்துயில்வுற்றார். (அக)

வள்ளிபுடைசுற்றியுயர்சிற்றிலைமரந்தோ
றெள்ளருமறிக்குருளொடண்டர்களிருந்தார்
கள்ளரிநெரித்துழனெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுதின்றுபசியுழ்கிடவிருந்த. (அஉ)

சரம்பயினெடுந்துளிகிழிந்தபுயல்சார
உரம்பெயர்வில்வன்கரிகரந்துறவொடுக்கா
வரம்பகனெடும்பிரசம்வைகல்பலவைகும்
முரம்பினிணிரம்பலமுழைஞ்சிடைநுழைந்த. (அங)

இத்தகையமாரியிடைதுன்னியிருளெய்த
மைத்தகுமணிக்குறுநகைச்சனகன்மான்மேல்
உய்த்தவுணர்வத்தினெருப்பிடையுயிர்ப்பான்
வித்தகனிலக்குவனைமுன்னினன்விளம்பும். (அச)

(வேறு.)

மழைக்கருமின்னெயிற்றரக்கன்வஞ்சனை
இழைப்பருங்கொங்கையுமெதிர்வுற்றின்னலின்
உழைத்தனளுலைந்துயிருலக்குமொன்றினும்
பிழைப்பரிதெனக்குமிதென்னபெற்றியோ. (அரு)

தூநிறச்சுடுசரந்தூணிதூங்கிட
வானுறப்பிறங்கியவயிரத்தோளொடும்
யானுறக்கடவதேயிதுவுமின்றிலை
வேனிறத்துற்றதொத்துழியும்வீகிலேன். (அகூ)

* பதங்கம்-விட்டுவிட்டொலிக்கு மொருவகைப்பறவை, சிள்வீடு
மாம். † ஒத்த-அடிக்க.

தெரிகணைமலரொடுந்திறந்தநெஞ்சொடும்
அரியவன்றயரொடும்யானும்வைகுவேன்
எரியுமின்மினிமணிவிளக்கினின்றுணைக்
குரீஇயினம்பெடையொடுந்துயில்கூட்டினுள். (அஎ

வானகமின்னினுமழைமுழங்கினும்
யானகமெலிகுவேனெயிற்றராவெனக்
கானகம்புகுந்தியான்முடித்தகாரியம்
மேனகுங்கீழ்நகுமினியென்வேண்டுமால். (அஅ

மறந்திருந்துய்கலேன்மாரியீதெனின்
இறந்துவிண்சேர்வது * சரதமிப்பழி
பிறந்துபின்றீர்வலோபின்னரன்னது
துறந்துசென்றுறுவலோதுயரின்வைகுவேன். (அகூ

ஈண்டுநின்றரக்கர்தமிருக்கையாமினிக்
காண்டலிற்பற்பலகாலங்காண்டுமால்
வேண்டுவதன்றிதுவீரநோய்தெற
மாண்டனெனென்றதுமாட்சிப்பாலதால். (கூ0

† செப்புருக்கனையவிம்மாரிச்சீகரம்
வெப்புறப்புரஞ்சுடவெந்துவீவதோ
அப்புருக்கொண்டவாணெடுங்கணாயிழை
துப்புருக்குமுதவாயமுதந்துய்த்தயான். (கூக

செய்யடைநீயெதிர்நிறுவிநிற்கிவள்
கையடையென்றவச்சனகன்கட்டுரை
பொய்யடையாக்கிய ‡ பொறியிலேனொடு
மெய்யடையாதினிவிளிதனன்றரோ. (கூஉ

தேற்றுவாய்நீயுளையாகத்தேறிநின்
றாற்றுவேனுளனாகவாய்வளை
தோற்றுவாளல்லளித்துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொருவரம்புண்டாகுமோ. (கூங

விட்டபோர்வாளிகள்விரிஞ்சன்விண்ணையும்
சுட்டபோதிமையவர்முதலதொல்லையோர்
பட்டபோதுலகமுமுயிரும்பற்றறக்
கட்டபோதல்லதுமயிலைக்காண்டுமோ. (கூச

---

* சரதம்-உண்மை.
† செப்புருக்கனைய-செம்புருகினாற்போன்ற.
‡ பொறி-அறிவு.

தருமமென்றொருபொருடன்னையஞ்சியான்
றெருமருகின்றதுசெறுநர்தேவரோ
டொருமையின்வந்தனரேனுமுய்கலார்
உருமெனவொலிபடு * முரவிலோயென்றான். (௯௫)

இளவலுமுறைசெய்வானெண்ணுநாளினும்
உளவலகூதிருமிறுதியுற்றதால்
களவுசெய்தவ † னுறைகாணுங்காலம்வந்
தளவியதயர்வதெனுணையாழியாய். (௯௬)

திரைசெயத்திண்கடலமிழ்தஞ்செங்கணான்
உரைசெயத்தரினுமத்தொழிலுவந்திலன்
வரைமுதற்கலப்பைகண்மாடொட்டித்தன்
குரைமலர்த்தடக்கையாற்கடைந்துகொண்டனன். (௯௭)

மனத்தினினலகெலாம்வகுத்துவாய்ப்பெயும்
நினைப்பினனெயினுநேமியானொடு
மெனைப்பலபடைக்கலமேந்தியாரையும்
வினைப்பெருஞ்சூழ்ச்சியிற்பொருதுவெல்லுமால். (௯௮)

கண்ணுடைநுதலினன் ‡ கணிச்சிவாளவன்
விண்ணிடைப்புரஞ்சுடவெகுண்டமேலைநாள்
எண்ணியசூழ்ச்சியுமீட்டக்கொண்டவும்
அண்ணலேயொருவராலறியற்பாலவோ. (௯௯)

ஆகுநர்யாரையுந்துணைவராக்கிப்பின்
ஏகுறுநாளிடையெய்தியெண்ணுவ
சேகுறப்பன்முறைதெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள்வழுவற்பாலதோ. (௪௦௦)

அறத்துறைதிறம்பினராக்கராற்றலர்
மறத்துறைநமக்கெனவலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறிதிறம்பலுண்டெனின்
புறத்தினியார்திறம்புகழும்வாகையும். (௪௦௧)

பைந்தொடிக்கிடர்களைபருவம்பையவே
வந்தடுத்துளதினிவருத்தநீங்குவாய்
அந்தணர்க்காகுநாமரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய்சொல்லுநீயென்றான். (௪௦௨)

* உரவிலோய்-வலியவில்லினையுடையாய்.
† உறை-இருப்பிடம்.
‡ கணிச்சி-மழு.

உறுதியஃதேயெனவுணர்ந்தவாழியான்
இறுதியுண்டேகொலிம்மாரிக்கென்பதோர்
தெறுதுயருழந்தனன்றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்ததப்பருவமாண்டுபோய். (௧௦௩

மள்கலில்பெருங்கொடைமருவிமண்ணுளோர்
உள்கியபொருளெலாமுதவியற்றபோ
தெள்கலிரவலர்க்கிவதின்மையால்
வெள்கியமாந்தரின்வெளுத்தமேகமே. (௧௦௪

தீவினைநல்வினையென்னத்தேற்றிய
பேர்வினைப்பொருடனையறிந்துபெற்றதோர்
ஆய்வினைமெய்யுணர்வணுகவாசறு
மாயையின்மாய்ந்ததுமாரிப்பேரிருள். (௧௦௫

மூளமர்தொலைவுறமுரசவிந்தபோல்
கோளமைகோண்முகில்குமுறலோவின
நீளுகணையெனத்துளியுநீங்கின
வாளுறையுற்றெனமறைந்தமின்னெலாம். (௧௦௬

தடுத்ததாணெடுந்தடங்கிரிகடாழ்வரை
அடுத்தநீரொழிந்தனவருவிதூங்கின
எடுத்தநூலுத்தரியத்தொடெய்தினின்
றுடுத்தவாணிறத்துகிலொழிந்தபோலுமே. (௧௦௭

மேகமாமலைகளின்புறத்துவீதலால்
* மாகயாறியாவையும்வாரியற்றன
வாகையாற்றகவிழந்தழிவினன்பொருள்
போகவாறொழுகலான்செல்வம்போன்றவே. (௧௦௮

† கடந்திறந்தொழுகலிற்றனையகார்முகில்
இடந்திறந்தேகலிற்பொலிந்ததிந்துவும்
நடந்திறனவில்வுறுநங்கைமார்முகம்
படந்திறந்துருவலிற்பொலியும்பான்மைபோல். (௧௦௯

பாசிழைமடந்தையர் ‡ பகட்டுவெம்முலை
பூசியசந்தனம்புழுகுகுங்குமம்
மூசினமுயங்குசேறுலரமொண்டுற
வீசியநறும்பொடிவிண்டுவாடையே. (௧௧௦

* மாகயாறு-ஆகாயவழி.
† கடம்-மத்தாரை.
‡ பகட்டு-தோற்றம்.

மன்னவன் றலைமகன்வருத்தமாற்றுவான்
அந்நெறிப்பருவம்வந்தணுகிற்றுதலால்
பொன்னிணைநாடியபோதுமென்பபோல்
அன்னமுந்திசைதிசையகன் றவிண்ணின்வாய். (கககக)

தஞ்சிறையொடுக்கினதழுவுதின்னல
நெஞ்சுறுபயனிலகிணைப்புநீண்டன
மஞ்சுறுநெடுமழைபிரிந்தமாமயில்
எஞ்சினமிதிலைநாட்டன்னமென்னவே. (ககஉ)

வஞ்சனைத்தீவினைமறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தனநீர்நீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென்பாதப்பேதையர்
அஞ்சனக்கண்ணெனப்பிறழ்ந்தவாடன்மீன். (ககங)

ஊடியமடந்தையர்வதனமொத்தன
தாடொகமலர்ந்தனமுதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க்கோலங்கொண்டன
சேடுறுநறுமுகைவிரிந்தசெங்கிடை. (ககச)

கல்வியிற்றிகழ் * கணக்காயர்கம்பலைப்
பல்விதச்சிறுரெனப்பகர்வபல்லரி
செல்லிடத்தல்லதொன் றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரினவிந்தநாவெலாம். (ககரு)

செறிபுனற்பூந்துகிறிரைக்கையாற்றிரைத்
துறுதுணைக்கான்மடுத்தொத்தவோதநீர்
எறும்வலிக்கணவனையெய்தியாறெலாம்
முறுவலிக்கின்றனபோன் றமுத்தெலாம். (ககசு)

சொன்னிறைகேள்வியிற்றொடர்ந்தமாந்தரின்
இன்னிறப் † பசலையுற்றிருந்தமாதரின்
தன்னிறம்பயப்பயநீங்கித்தள்ளரும்
பொன்னிறம்பொருந்தினபூகத்தாறெலாம். (ககஎ)

பயின்றுடல்குளிர்ப்பவும்பழனநீத்தவண்
இயன்றிலவிளவெயிலெழுதுமெய்யன
வயின்றொறும்வயின்றொறுமடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாத்தடங்கடோறுமே. (ககஅ)

* கணக்காயர்-உபாத்தியாயர்.

† பசலை-மகளிர்மாட்டுக் காமங் கைமிக்க காலத்துக்காணுமொருவகை நிறம்.

வெம்புகானிடைப்போகின்றவேகத்தால்
உம்பர்தோயுமராமரத்தூடுசெல்
அம்புபோன்றனன்றடல்வாலிதன்
தம்பிமேற்செலு * மானவன்றம்பியே. (கஉ)

மாடுவென்றியொர் † மாதிரயானையின்
சேடுசென்றுகெடிலொருதிக்கின்மா
நாடுகின்றதுநண்ணியகால்பிடித்
தோடுகின்றதுமொத்துளனாயினன். (கங)

உருக்கொளொண்கிரியொன்றினின்றொன்றினைப்
‡ பொருக்கவெய்தினன்பொன்னொளிர்மேனியான்
அருக்கன்மாவுதயத்தினின்றத்தமாம்
பருப்பதத்தினையெய்தியபண்பினால். (கச)

தன்றுணைத்தமையன்றனிவாளியிற்
சென்றுசேணுயர்கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொருகுன்றினிற்குப்புறும்
பொன்றாங்குளைச் § சீயமும்போன்றனன். (கரு)

கண்டவானரங்காலினைக்கண்டபோல்
மண்டியோடினவாலிமகற்கையா
கொண்டசிற்றத்திளையோன்குறுகினான்
சண்டவேகத்தினனென்றசாற்றலும். (கசு)

அன்னதோன்றலுமாண்டொழிலான்வர
வின்னதென்றறிவான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன்மனக்கருத்துட்கொளாப்
பொன்னின்வார்கழற்றாதையிற்போயினான். (கஎ)

நளினியற்றியநாயகக்கோயிலுள்
தளமலர்த்தகைப்பள்ளியிற்றாழ்குழல்
இளமுலைச்சியரேந்தடிதைவர
விளைதுயிற்குவிருந்துவிரும்புவான். (கஅ)

தெள்ளியோருதவப்பெருஞ்செல்வமாம்
கள்ளினாலதிகங்களித்தான்கதிர்ப்
புள்ளிமானெடும்பொன்வரைபுக்கதோர்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவான். (ககூ)

---

* மானவன்-போர்வீரன்.

† மாதிரம்-திக்கு.

‡ பொருக்க-விரைவாக.

§ சீயம்-சிங்கம்.

* சிந்துவாரந்திருநறைதேக்ககில்
சந்தமாமயிற்சாயலர்தாழ்குழற்
கந்தமாமலர்க்காடுகடாவிய
மந்தமாருதம்வந்துறவைகுவான். (உ0)

நித்தியர்நின்றசெங்கிடைவாய்ச்சியர்
முத்தவாண்முகைமுள்ளெயிறூறுதேன்
பித்துமாலும்பிறவும்பெருக்கலான்
மத்தவாரணமென்னமயங்கினான். (உக)

மகுடகுண்டலமேமுதன்மண்டலத்
துகுநெடுஞ்சுடர்க்கற்றையுலாவலால்
பகலவன்சுடர்பாய்பனிமால்வரை
நகமலர்ந்துபொலிந்துநயங்குவான். (உஉ)

கிடந்தனன்கிடந்தானைக் † கிடைத்திரு
தடங்கைகூப்பினன்றாழ்முன்றாட்டந்த
மடங்கல்வீரனன்மாற்றம்விளம்புவான்
தொடங்கினனவனைத்துயிலீக்குவான். (உங)

எந்தைகேளவ்விராமற்கிளையவன்
சிந்தையுண்ணெடுஞ்சீற்றந்திருமுகம்
தந்தளிப்பத்தடுப்பரும்வேகத்தன்
வந்தனன்னுன்மனக்கருத்தியாதென்றான். (உச)

இனையமாற்றமிசைத்தனனென்பதோர்
நினைவிலானெடுஞ்செல்வநெருக்கவும்
நனைநறுந்துளிநஞ்சுமயக்கவும்
தனையுணர்ந்திலன்மெல்லணைதங்கினான். (உரு)

ஆதலோடுமரசிளங்கோளரி
யாதுமுன்னினின்றியற்றுவதின்மையால்
கோதில்சிந்தையனுமனைக்கூவுவான்
‡ போதன்மேயினன்போதகமேயனான். (உசு)

மந்திரத்தனிமாருதிதன்னொடும்
வெந்திறற்படைவீரர்விராய்வர
அந்தரத்தின்வந்தன்னைதன்கோயிலை
§ இந்திரற்குமகன்மகனெய்தினான். (உஎ)

* சிந்துவாரத்தருநறை-அரும்நறை சிந்துஆரத்துளன்று கொண்டு கூட்டுக.

† கிடைத்து-அடைந்து. ‡ போத-போக.
§ இந்திரற்கு மகன்மகன்-அங்கதன்.

எய்திமேற்செயத்தக்கதென்னென்றலும்
செய்திர்செய்தற்கருநெடுந்தீயன
நொய்திலன்னவைநீக்கவுநோக்குதிர்
உய்திர்போலுமுதவிகொன்றீரென. (௨௮)

நீட்டுமொன்றுவிளம்புகின்றேன்படை
கூட்டுமென்றுமைக்கொற்றவன்கூறிய
நாட்டிறம்பி * நுந்நாட்டிறம்பும்மெனக்
கேட்டிலீரினிக்காண்டிர்கிடைத்திரால். (௨௯)

வாலியாருயிர்காலனும்வாங்கவிற்
கோலிவாலியசெல்வங்கொடுத்தவர்
போலுமாலும்புறத்திருப்பாரிது
சாலுமாலுங்கடன்மையினோர்க்கெலாம். (௩௦)

தேவிநீங்கவத்தேவரிற்சீரியன்
ஆவிநீங்கினன்போலயர்வானது
† பாவியாதுபருகுதிர்போலுநும்
காவிநாண்மலர்க்கண்ணியர்காதனீர். (௩௧)

திறம்பினீர்மெய்சிதைத்திருதவியை
நிறம்பொலீருங்கடவினைசேர்ந்ததால்
மறஞ்செய்வானுறின்மாளுதிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதெனென்கின்றபோதின்வாய். (௩௨)

கோளுறுத்தற்கரியகுரக்கினம்
நீளெழுத்தொடருந்நெடுவாயிலைத்
தாளுறுத்தித்தடவரைதந்தன
மூளுறுத்தியடைக்கினமொய்ம்பினால். (௩௩)

சிக்குறக்கடைசேமித்தசெய்கைய
தொக்குறுத்தமரத்ததுவன்றின
புக்குறுக்கிப்புடைத்துமெனப்புறம்
மிக்கிறுத்தனவெற்புமிறுத்தன. (௩௪)

காக்கவோகருத்தென்றுகதத்தினால்
பூக்கமூரற்புரவலர்புங்கவன்
‡ தாக்கணங்குறைதாமரைத்தாளினால்
தூக்கினானக்கதவினைநொய்தினின். (௩௫)

---

* நுந்நாள்-உமது வாழ்நாள்.

† பாவியாது-கருதாது.

‡ தாக்கணங்கு-வீரலட்சுமி.

காவன்மாமதிலுங்கதவுங்கடி
மேவும்வாயிலடுக்கியவெற்பொடும்
தேவுசேவடிதீண்டலுந்தீண்டரும்
பாவமாமெனப்பற்றழிந்திற்றவால். (௧௬)

நொய்தினேன்கதவும்முதுவாயிலும்
செய்தகன்மதிலுந்திசையோசனை
ஐயிரண்டினளவடியற்றுக
வெய்தினின்றகுரக்கும்வெருக்கொளா. (௧௭)

பரியமாமதிலும்படர்வாயிலும்
சரியவீழ்ந்ததடித்தின்முடித்தலை
நெரியநெஞ்சுபிளப்பநெடுந்திசை
இரியலுற்றனவிற்றிலவின்னுயிர். (௧௮)

பகரவேயுமரிதுபரித்தெழு
புகரில்வானரமஞ்சியபூசலான்
* சிகரமால்வரைசென்றுதிரிந்துழி
மகரவேலையையொத்ததுமாநகர். (௧௯)

வானரங்கள்வெருவிமலையொரீஇக்
கானொருங்குபடரவக்கார்வரை
மீனொருங்கியவானகமீனெலாம்
போனபின்பொலிவற்றதுபோன்றதே. (௨௦)

அன்னகாலையிறுண்டைகையாழியான்
பொன்னினன்னகர்வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச்சுற்றினர்நின்றவர்
என்னசெய்குவதெய்தினனென்றனர். (௨௧)

அனையனுள்ளமுமாய்வளையாயலர்
மனையின்வாயில்வழியினைமாற்றினால்
நினையும்வீரனநீணெறிநோக்கலன்
வினையாதிதென்றனுமன்விளம்பினான். (௨௨)

நீரெலாமயனீங்குமினோர்ந்தியான்
வீரனுள்ளம்விளக்குவனென்றலும்
பேரநின்றனர்யாவரும்பேர்கலாத்
தாரைசென்றனடார்குழலாரொடும். (௨௩)

உரைசெய்வானரவீரருவந்துறை
அரைசர்வீதிகடந்தகன்கோயிலைப்

* சிகரமால்வரை-கொடிமுடிகளையுடைய பெரியமலை.

புரைசையானையனுன்புகலோடுமவ்
விரைசெய்வார்குழற்ருரைவிலக்கினுள். (சச)

இலங்குமெல்லியல்வெண்ணகைவெண்மதி
இலங்குநுண்ணிடையேந்திளமென்முலைக்
குலங்கொடோகைமகளிர்குழாத்திஞல்
வலங்கொள்வீதிநெடுவழிமாற்றினுள். (சரு)

வில்லும்வாளுமணிதொறுமின்னிட
மெல்லரிக்குரன்மேகலையார்த்தெழப்
பல்வகைப்புருவக்கொடிபம்பிட
* வல்லியாயம்வலத்தினில்வந்ததே. (சசு)

வேறு.

ஆர்க்குநூபுரங்கள்பேரியல்குலாந்தடந்தேரொத்த
வேற்கண்வெம்புருவம்போர்வின்மெல்லியர்வளைந்தபோத
பேர்க்கருஞ்சீற்றம்பேரமுகம்பெயர்ந்தொதுங்கிற்றல்லால்
பார்க்கவுமஞ்சினனப்பணையினுமுயர்ந்ததோளான். (சஎ)

தாமரைவதனஞ்சாய்த்துத்தனுநெடுந்தரையினூன்றி
மாமியர்குழுவின்வந்தாளுமெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனுர்தம்பொதுவிடைப்புகுந்துபொற்ருேள்
தூமனநெடுங்கட்டாரைநடுங்குவாளினையசொன்னுள். (சஅ)

அந்தமில்காலநோற்றவாற்றலுண்டாயினன்றி
இந்திரன்முதலினேராலெய்தலாவியல்பிற்றன்றே
மைந்தநின்பாதங்கொண்டெம்மனைவரப்பெற்றுவாழ்ந்தேம்
உய்ந்தனம்வினையுந்தீர்ந்தேமுறுதிவேறிதனினுண்டோ. (சகூ)

† வெய்தினீவருதனோக்கிவெருவுறுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாதுதிருவுளந்தெரித்தியென்றுள்
ஐயநீயாழிவேந்தனடியிணைபிரிகலாதாய்
எய்தியதென்னையென்றுளிசையினுமினியசொல்லாள். (ருo)

ஆர்கொலோவுரைசெய்தாரென்றருள்வரச்சீற்றமஃகாப்
பார்குலாமுழுவெண்டிங்கள்பகல்வந்தபடிவம்போலும்
வார்குலாமுகத்தினுளையிறைமுகமெடுத்துநோக்கித்
தார்குலாமலங்கன்மார்பன்ருயரைநினைந்துநைந்தான். (ருக)

‡ மங்கலவணியைநீக்கிமணியணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக்குங்குமஞ்சாந்தங்கொட்டாப்

* வல்லியாயம்-மடவார்கூட்டம். † வெய்தில்-விரைவாக.
‡ மங்கலவாணி-மங்கலசூத்திரம்.

பொங்குவெம்முலைகள்பூகக்கழுத்தொடுமறையப்போர்த்த
நங்கையைக்கண்டவள்ளனயனங்கள்பனிப்பநின்றான். (௫௨)

இனையராமென்னையீன்றவிருவருமென்னவந்த
நினைவினனயர்ப்புச்சென்றநெஞ்சினனெடிதுநின்றான்
வினவினாட்கெதிரோர்மாற்றம்விளம்பவும்வேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்தகாரியம்புகல்வதானான். (௫௩)

சேனையும்யானுந்தேடித்தேவியைத்தருவேனென்று
மானவற்குரைத்தமாற்றமறந்தனனருக்கன்மைந்தன்
ஆனவனமைதிவல்லையறியெனவருளின்வந்தேன்
மேனிலையனையான்செய்கைவிளைந்தவாவிளம்புகென்றான். (௫௪)

* சீறுவாயல்லையையசிறியவர்தீமைசெய்தால்
ஆறுவாய்நீயலான்மற்றாருளரயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந்தூதரைவிடுத்தவெல்லை
ஊறுமாநோக்கித்தாழ்த்தானுதவிமாறுதவியுண்டோ. (௫௫)

ஆயிரகோடிதூதாரிக்கணமழைப்பவானை
போயினர்புகுதுநாளும்புகுந்ததுபுகல்புக்கோர்க்குத்
தாயினுமினியநீரேதணிகிராற்றருமமஃதால்
தீயனசெய்யாராயின்யாவரேசெறுநராவார். (௫௬)

அடைந்தவர்க்கபயநீவிரருளியவளவில்செல்வம்
தொடர்ந்துநும்பணியிற்றீர்ந்தாலதுவுநுந்தொழிலேயன்றோ
மடந்தைதன்பொருட்டால்வந்தவாளமர்க்களத்துமாண்டு
கிடந்திலரென்னிற்பின்னுநிற்குமோகேண்மையம்மா. (௫௭)

செம்மைசேருள்ளத்தீர்கள்செய்தபேருதவிதீரா
வெம்மைசேர்பகையுமாற்றியரசுவீற்றிருக்கவிட்டீர்
உம்மையேயிகழ்வரென்னினெளிமையாவொழிவதொன்றோ
இம்மையேவறுமையெய்தியிருமையுமிழப்பரன்றே. (௫௮)

ஆண்டுபோர்வாலியாற்றன்மாற்றியதம்பொன்றாயின்
வேண்டுமோதுணைவர்நும்பால்வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர்தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்தற்பாலார்நுங்கழல்புகுந்துளோரும். (௫௯)

என்றவனுரைத்த † மாற்றம்யாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாளனருள்வரநாணுட்கொண்டான்
நின்றனனிற்றலோடுநீத்தனன்முனிவென்றோரா
வன்றுணைவயிரத்திண்டோண்மாருதிமருங்கின்வந்தான். (௬௦)

---

* சீறுவாயல்லை-கோபங்கொள்ளாதே.

† மாற்றம்-சொல்.

வந்தடிவணங்கிநின்றமாருதிவதனநோக்கி
அந்தமில்கேள்விநீயுமயர்த்தனையாகுமன்றே
முந்தினசெய்கையென்றான்முனிவினுமுளைக்குமன்பான்
எந்தைகேட்டருளுகென்னாவியம்பினனியம்பவல்லான். (௯௧)

சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வப்
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
* வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன்மாயா
உதவிகொன்றார்க்கொன்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ. (௯௨)

ஐயநும்மோடுமெங்களரிக்குலத்தரசனோடும்
மெய்யுறுகேண்மையாகமேலைநாள்விளைவதாய
செய்கையென்செய்கையன்றோவன்னதுசிதையுமாயின்
உய்வகையெவர்க்குமுண்டோவுணர்வு * மாசுண்டதன்றோ. (௯௩)

தேவருந்தவமுஞ்செய்யுநல்லறத்திறமுமற்றும்
யாவருநீரேயென்பதென்வயிற்கிடந்ததெந்தாய்
ஆவதுநிற்கசேரு ‡ மரணுண்டோவருளுண்டன்றே
மூவகையுலகுங்காக்குமொய்ம்பினீர்முனிவுண்டானால். (௯௪)

மறந்திலன்கவியின்வேந்தன்வயப்படைவருவிப்பாரைத்
திறந்திறமேவியன்னார்சேர்வதுபார்த்துத்தாழ்த்தான்
அறந்துணைநமக்குத்தான்றன்வாய்மையையழிக்குமாயின்
பிறந்திலனன்றேயொன்றோநரகமும்பிழைப்பதன்றால். (௯௫)

§ உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதயானையனையமைந்தமற்றுமுண்டாகவற்றோ
சிதையாதசெருவிலன்னான்முன்சென்றுசெறுநர்மார்பில்
உதையானேனுதையுண்டாவியுலையானேனுலகின்மன்னோ. (௯௬)

ஈண்டினிசிற்றலென்பதினியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரேனுங்கேண்மைதீர்வினையிற்றாமால்
ஆண்டகை $ யாளிமொய்ம்பினையநீரளித்தசெல்வம்
காண்டியாலுன்முன்வந்தகவிக்குலக்கோனொடென்றான். (௯௭)

மாருதிமாற்றங்கேட்டமலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைசென்றுநின்றசீற்றத்தான்சிந்தைசெய்தான்
ஆரியனருளிற்றீர்ந்தானல்லன்வந்தடுத்தசெல்வம்
பேர்வரிதாகச்செய்தசிறுமையானென்னும்பெற்றி. (௯௮)

---

* வதைபுரிகுநர்-கொலைபுரிவோர். † மாசுண்டது-அழுக்கடைந்தது. ‡ அரண்-காவல்.
§ உதவாமல்-தானொன்றுஞ் செய்யாமல்.
$ யாளி-சிங்கம், யானையாளியுமாம்.

அனையதுகருதிப்பின்னரரிக்குலத்தவனைநோக்கி
நினையொருமாற்றநின்னேநிகழ்த்துவதுளதுநின்பால்
இனையனவுரைத்தற்கேற்றவெண்ணுதியிவைநீயென்று
வனைகழல்வயிரத்திண்டோண்மன்னிளங்குமரன்சொல்வான். (௬௯)

தேவியைக்குறித்துச்செய்தசீற்றமுமானத்தீயும்
ஆவியைக்குறித்துநின்றவையனையதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக்கொடுமையோடுறவுகூடிப்
பாவியர்க்கேற்றசெய்கைகருதுவல்பழியும்பாரேன். (௭௰)

ஆயினுமென்னையானேயாற்றிநின்றுவியுற்று
நாயகன்றனையுந்தேற்றநாள்பலகழிந்துவன்றேல்
தீயுமிவ்வுலகமூன்றுந்தேவரும்வீவதொன்றோ
வீயுநல்லறமும்போகாவிதியையார்விலக்கற்பாலார். (௭௧)

உன்னைக்கண்டுங்கோன்றன்னையுற்றிடத்துதவும்பெற்றி
என்னைக்கண்டனன்போற்கண்டிந்நாளிடைநெடிதுவைகித்
தன்னைக்கொண்டிருந்தேதாழ்த்தானன்றெனிற்றனுவொன்றாலே
மின்னைக்கண்டனையாடன்னைநாடுதல்விலக்கற்பாற்றோ. (௭௨)

ஒன்றுமோவானமன்றியுலகமும்பதினாலுள்ள
வென்றிமாக்கடலுமேழுமலையுள்ளவென்னவேயாய்
நின்றதோரண்டத்துள்ளேயெனினதுநெடியதொன்றோ
அன்றுநீர்சொன்ன * மாற்றந்தாழ்வித்தறருமமன்றால். (௭௩)

தாழ்வித்தீரல்லீர்பன்னாடருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல்வருவித்தீர்மரபிற்றீராக்
கேள்வித்தீயாளர்துன்பங்கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர்முனியாதானைமுனிவித்தீர்முடிதிரென்றான். (௭௪)

தோன்றலஃதுரைத்தலோடுமாருதிதொழுதுதொல்லை
ஆன்றநூலறிஞபோயபொருண்மனத் † தடைப்பாயல்லை
என்றதுமுடியவென்னினிறத்துமித்திறத்துக்கெல்லாம்
சான்றினியறனேபோந்துன்றம்முனைச்சார்தியென்றான். (௭௫)

முன்னுநீசொல்லிற்றன்றோமுயன்றதுமுற்றுங்காலை
இன்னுநீயிசைத்தசெய்வானியைந்தனமென்றுகூறி
அன்னதோரமைதியான்றனருள்சிறிதறிவானோக்கிப்
பொன்னின்வார்சிலையினானுமாருதியோடும்போனான். (௭௬)

---

* மாற்றம்-சொல்.

† அடைப்பாயல்லை-வைய்யாதே.

அயில்விழிக்குமுதச்செவ்வாய்ச்சிலைநுதலன்னப் * போக்கின்
மயிலியற்கொடித்தேரல்குன்மணிநகைத்திணிவேய்மென்றோட்
குயின்மொழிக்கலசக்கொங்கைமின்னிடைக்குமிழேர்மூக்கின்
புயலியற்கூந்தன்மாதர்குழாத்தொடுந்தாரைபோனாள். (எஎ)

வல்லமந்திரியரோடுவாலிகாதலனுமைந்தன்
அல்லியங்கமலமன்னவடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கிவிரைவினென்வரவுவீர
சொல்லுதிநுந்தைக்கென்றானன்றெனத்தொழுதுபோனான். (எஅ)

போனபின்றாதைகோயில்புக்கவன்பொலங்கொள்பாதம்
தானுறப்பற்றிமுற்றுந்தைவந்துதடக்கைவீரன்
மானவற்கிளையோன்வந்துன்வாயிலின்புறத்தான்சீற்றம்
மீனுயர்வேலைமேலும்பெரிதிதுவிளைந்ததென்றான். (எகூ)

அறிவுற்றுமகளிர்வெள்ளமலமருமலைநோக்கிப்
பிறிவற்றமயக்கத்தான்முந்துற்றதோர்பெற்றியோரான்
செறிபொற்றாரலங்கல்வீரசெய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுங்கென்னோகாரணங்கண்டதென்றான். (அ0)

இயைந்தநாளெந்தைநீசென்றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய்மெய்யிலையென்னவீங்கி
உயர்ந்ததுசீற்றமற்றதுற்றதுசெய்யமுற்று
நயந்தெரியனுமன்வேண்டநல்கினனம்மையின்னும். (அக)

வருகின்றவேகநோக்கிவானரவீரர்வானைப்
பொருகின்றநகரவாயிற்பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம் † வாங்கினரடுக்கிமற்றும்
தெரிகின்றசினத்தீபொங்கச்செருச்செய்வானமைந்துநின்றார். (அஉ)

ஆண்டகையதனைநோக்கியம்மலர்க்கமலத்தாளிற்
றீண்டினன்றீண்டாமுன்னந்தெற்கொடுவடக்குச்செல்வ
நீண்டகன்மதிலுங்கொற்றவாயிலுநிரைத்தகுன்றும்
கீண்டனதகர்ந்துபின்னைப்பொடியொடுங்கெழீஇயவன்றே. (அங)

அந்நிலைகண்டதிண்டோளரிக்குலத்தனிகமம்மா
எந்நிலையுற்றதென்கேன்யாண்டுபுக்கொளித்ததென்கேன்
இந்நிலைகண்டவன்னையேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானைவழியெதிர்விலக்கினின்றாள். (அச)

* போக்கு-நடை.
† வாங்கினர்-எடுத்து.

மங்கையர்மேனிநோக்கான்மைந்தனுமனத்துவந்து
பொங்கியசீற்றம்பற்றிப்புகல்கிலன்பொருமிநின்றான்
நங்கையுமினிதுகூறிநாயகநடந்ததென்றே
எங்கள்பாலென்னச்சொன்னாளண்ணலுமினையசொன்னான். (அரு)

அதுபெரிதறிந்தவன்னையன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன்வெஞ்சினச்சேனைவெள்ளம்
கதுமெனக்கொணருந்தூதுகல்லெதிர்செல்லவேவி
எதிர்முறையிருந்தானென்றானிதுவிங்குப்புகுந்ததென்றான். (அசு)

சொற்றலுமருக்கன்றோன்றல்சொல்லுவான்மண்ணின்விண்ணின்
நிற்குரியார்கள்யாவரனையவர்சினத்தினேர்ந்தால்
விற்குரியாரித்தன்மைவெகுளியின்விளைவினெய்தின்
எற்குரையாதுநீதியற்றியதென்கொலென்றான். (அஎ)

உணர்த்தினேன்முன்னர்நீயஃதுணர்ந்திலையுணர்விற்றீர்ந்தாய்
புணர்ப்பதொன்றின்மைநோக்கிமாருதிக்குரைப்பான்போனேன்
* இணர்த்தொகையின்றபொற்றாரெறுழ்வலித்தடந்தோளெந்தாய்
கணத்திடையவனைநீயுங்காணுதல்கருமமென்றான். (அஅ)

உறவுண்டசிந்தையானுமுறைசெய்வாரொருவர்க்கின்னம்
பெறலுண்டேயவராலீண்டியான்பெற்றபேருதவியுற்ற
திறலுண்டோவென்னிற்றீர்வானிருந்தபேரிடரையெல்லாம்
† நறவுண்டுமறந்தேன்காணநாணுவன்மைந்தவென்றான். (அகூ)

எயினவிதுவலான்மற்றேழைமைப்பாலதென்றே
தாயிவண்மனைவியென்னுந்தெளிவின்றேற்றருமமென்னும்
தீவினையைந்தினொன்றாமன்றியுந்திருக்குநீங்கா
மாயையின்மயங்குகின்றமயக்கின்மேன்மயக்கும்வைததாம். (கூ0)

தெளிந்துதீவினையைத்தீர்ந்தோர்பிறவியிற்றீர்வரென்றே
விளிந்திலாவுணர்வினோரும்வேதமும்விளம்பவேயும்
நெளிந்துறைபுழுவைநீக்கிநறவுண்டுநிறைகின்றேறல்
‡ அளிந்தகத்தெரியுந்தீயைநெய்யினாலவிக்கின்றமால். (கூக)

தன்னைத்தானுணரத்தீருந்தகையறுபிறவியென்ப
தென்னத்தான்மறையுமற்றைத்துறைகளுமிசைத்தவெல்லாம்
முன்னைத்தான்றன்னையோராமுழுப்பிணியழுக்கின்மேலே
பின்னைத்தான்பெறுவதம்மாநறவுண்டுதிகைக்கும்பித்தோ. (கூஉ)

* இணர்த்தொகை-கொத்தின்கூட்டம்.
† நறவுண்டு-கட்குடித்து.
‡ அளிந்து-கனிந்து.

அளித்தவரஞ்சுநெஞ்சினடைத்தவரறிவுமூழ்கிக்
குளித்தவரின்பதுன்பங்குறைத்தவரன்றிவேரி
ஒளித்தவருண்டுமீண்டிவ்வுலகெலாமுணரவோடிக்
களித்தவரெய்திநின்றகதியொன்றுகண்டதுண்டோ. (௯௩)

செற்றதும்பகைஞர்நட்டார்செய்தபேருதவிதானும்
கற்றதுங்கண்கூடாகக்கண்டதுங்கலைவலாளர்
சொற்றதுமானம்வந்துதொடர்ந்ததும்பட்டதுன்பம்
உற்றதுமுணர்வாராயி * னுறுதிவேறிதனினுண்டோ. (௯௪)

வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபில் † கொட்பும்
தஞ்சமென்றுரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணைக்குந்தீருங்கள்ளினாலருந்திறனை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே. (௯௫)

கேட்டனையவாற்கேடுவருமெனக்கிடைத்தவச்சொல்
காட்டியதனுமனீதிக்கல்வியாற்கடந்ததல்லால்
மீட்டினியுரைப்பதென்னேவிரைவின்வந்துடைந்தவீரன்
மூட்டியவெகுளியானென்முடிவுறற்கையமுண்டோ. (௯௬)

ஐயநானஞ்சினேனிந்நறவினினரியகேடு
கையினாலன்றியேயுங்கருதுதல்கருமமன்றால்
‡ வெய்யதாமதுவையின்னும்விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்னசேவடிசிதைக்கவென்றான். (௯௭)

என்றுகொண்டியம்பியண்ணற்கெதிர்கொளற்கியைந்தவெல்லாம்
நன்றுகொண்டினனுநீயேநணுகெனவவனையேவித்
தன்றுணைத்தேவிமாருந்தமரொடுந்தழுவத்தானும்
நின்றனனெடியவாயிற்கடைத்தலைநிறைந்தசீரான். (௯௮)

உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ்சுண்ணமும்புகையுமூழின்
நிரைத்தபொற்குடமுந்தீபசாலமுநிகழ்ந்தமுத்தும்
குரைத்தெழுவிதானத்தோடுதொங்கலுங்கொடியுஞ்சங்கும்
இரைத்துமிழ்முரசுமுற்றுமியங்கினவீதியெல்லாம். (௯௯)

தூயதிண்பளிங்கிற்செய்தசுவர்களின்றலத்திற்சுற்றில்
நாயகமணியிற்செய்தநளிநெடுந்தூணினொப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோரயர்வுறக்கைவிலோடும்
ஆயிரமைந்தர்வந்தாருளரெனப்பொலிந்ததவ்வூர். (௧00)

அங்கதன்பெயர்த்தும்வந்தாண்டடியிணைதொழுதானைய
எங்கிருந்தானுங்கோமானென்றலுமெதிர்கோளெண்ணி

* இறுதி-அழிவு. † கொட்பு-சுழற்சி, அது-தலைசுற்று.
‡ வெய்யதாம்-கொடிதாகிய.

மங்குரேய்கோயில்கொற்றக்கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீரசெய்தவச்செல்வனென்றான். (௧0௧)

சுண்ணமுந்தூசும்வீசிச்சூடகத்தொடிக்கைம்மாதர்
கண்ணகன்கவரிக்கற்றைக்காலுறக்கலைவெண்டிங்கள்
விண்ணுறவளர்ந்ததென்னவெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்க்கவிக்குலத்தரசன்வந்தான். (௧0௨)

அருக்கியமுதலவாயவருச்சனைக்கமைந்தயாவும்
முருக்கிதழ்மகளிரேந்தமுரசினமுகிலினார்ப்ப
இருக்கினமுனிவரோதவிசைதிசையளப்பயாணர்த்
திருக்கிளர்செல்வனோக்கித்தேவருமருளச்சென்றான். (௧0௩)

வெம்முலைமகளிர்வெள்ளமினெனவிளங்கவிண்ணிற்
சும்மைவான்மதியங்குன்றிற்றோன்றியதெனவுந்தோன்றிச
செம்மலையெதிர்சோளெண்ணித்திருவொடுமலர்ந்தசெல்வன்
அம்மலையுதயஞ்செய்த * தாதையுமனையனானான். (௧0௪)

வேறு.

தோற்றியவரிக்குலத்தரசைத்தோன்றலும்
ஏற்றெதிர்நோக்கினனெழுந்ததவ்வழி
சீற்றமங்கதுமனைத்தெளிந்தசிந்தையால்
ஆற்றினன்றருமத்தினமைதியுன்னுவான். (௧0௫)

ஏழுவினுமலையினுமெழுந்ததோள்களால்
தழுவினனிருவருந்தழுவித்தையலார்
குழுவொடும்வீரர்தங்குழாத்தினோடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத்துறையுளெய்தினார். (௧0௬)

அரியணையமைந்ததுகாட்டியையவீண்
டிருவெனக்கவிக்குலத்தரசனேவலும்
திருமகடலைமகன் † புல்லிற்சேரவெற்
குரியதோவீதெனமனத்தினுன்னுவான். (௧0௭)

கல்லணைமனத்தினையுடைக்கைகேசியால்
எல்லணைமணிமுடிதுறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான்பொன்செய்பூந்தொடர்
மெல்லணைவைகலும்வேண்டுமோவென்றான். (௧0௮)

என்றவனுரைத்தலுமிரவிகாதலன்
நின்றனன்விம்மினன்மலர்க்கணீருகக்

* தாதை-சூரியன்.
† புல்லில்-தருப்பாசனத்தில்.

குன்றெனவுயர்ந்தவக்கோயிற் * குட்டிம
வன்றலத்திருந்தனன்மனுவின்கோமகன். (கOக

மைந்தருமுதியருமகளிர்வெள்ளமும்
அந்தமிலேழைக்கினாழுதகண்ணினர்
இந்தியமவித்தவரெனவிருந்தனர்
நொந்தனர்தளர்ந்தனர்நுவல்வதோர்கிலர். (கக(

மஞ்சனவிதிமுறைமரபினுடினை
எஞ்சலிலின்னமுதருந்தின்யாமெலாம்
உய்ஞ்சனமினியெனவரசுரைத்தலும்
அஞ்சனவண்ணனுக்கனுசன்கூறுமால். (ககக

வருத்தமும்பழியுமேவயிறாமீக்கொள
இருத்துமென்றாலெமக்கினியதியாவதோர்
அருத்தியுண்டாயினுமவலந்தான்றழீஇக்
கருத்துவேறுற்றபினமிழ்துங்கைக்குமால். (ககஉ

மூட்டியபழியெனுமுருங்குதீயவித்
தூட்டினைகங்கைநீரரசன்றேவியைக்
காட்டினையெனினெனைக்கடலினாமிழ்
தூட்டினையாற்பிறிதுயவுமில்லையால். (ககங

பச்சிலைகிழங்குகாய்பரமனுங்கிய
† மிச்சிலேநுகர்வதுவேறுநானென்று
நச்சிலேனச்சினேனுயிறுயுண்ட
எச்சிலேயதுவிதற்கையமில்லையால். (ககச)

அன்றியுமொன்றுளதையயாணினிச்
சென்றனன்கொணர்ந்தடைதிருத்திறைலது
நன்றுணைக்கோமகனுகர்வதாதலான்
இன்றிறைதாழ்த்தலுமினிதன்றுமென்றான். (ககரு)

வானரவேந்தனுமினிதின்வைகுதல்
மானவர்தலைமகனிடரின்வைகவே
ஆனதுகுரக்கினத்தெமர்கட்காமெனு
மேனிலையழிந்துயிர்விம்மினனரோ. (ககசு)

எழுந்தனன்பொருக்கெனவிரவிகான்முளை
விழுந்தகண்ணீரினன்வெறுத்தவாழ்வினன்
அழிந்தயர்சிந்தையனுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரனுழைப்போதன்முன்னுவான். (ககஎ)

* குட்டிமவன்றலம்-கற்படுத்ததரை.
† மிச்சில்-உண்டமிகுதி எச்சிலென்ப.

போயினதூதரிற்புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதிநெறிவலோயென
ஏயினனனுமனையிருத்தியீண்டென
நாயகனிருந்துழிக்கடிதுநண்ணுவான். (௧௧௮)

அங்கதனுடன்செலவரிகண்முன்செல
மங்கையருள்ளமும்வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற்றழுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன்கடிதுசென்றனன். (௧௧௯)

ஒன்பதினுயிரகோடி * யூகந்தன்
முன்செலப்பின்செலமருங்குமொய்ப்புற
மன்பெருங்கிளைஞருமருங்குசுற்றுற
மின்பொருபூணினன்செல்லும் † வேலையில். (௧௨௦)

கொடிவனமிடைந்தன ‡ குமுறுபேரியின்
இடிவனமிடைந்தனபணிலமேங்கின
தடிவனமிடைந்தனதயங்குபூணொளி
பொடிவனமெழுந்தனபடிவானம்போர்த்தவே. (௧௨௧)

பொன்னினின்முத்தினிற்புனைமென்றூசினின்
மின்னினமணியினிற்பளிங்கின்வெள்ளியிற்
பின்னினவிசும்பினும்பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண்கவிகைசுற்றின. (௧௨௨)

வீரனுக்கிளையவன்விளங்குசேவடி
பாரினிற்சேறலிற்பரிதிமைந்தனும்
தாரினிற்பொலங் § கழறழுங்கத்தாரணித்
தேரினிற்சென்றனன்சிவிகைபின்செல. (௧௨௩)

எய்தினன்மானவனிருந்த $ மால்வரை
நொய்தினிற்சேனைபின்பொழியநோன்கழல்
ஐயவிற்குமரனுந்தானுமங்கதன்
கைதுறந்தயல்செலக்காதன்முன்செல. (௧௨௪)

கண்ணியகணிப்பருஞ்செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழவணையுமன்பினால்
நண்ணியகவிக்குலத்தரசனொடாறும்
புண்ணியற்றொழுகழற்பரதன்போன்றனன். (௧௨௫)

---

* யூகம்-குரங்கு. † வேலை-சமயம்.
‡ குமுறும்-இரைகின்ற.
§ கழறழுங்க-கழல்முழங்க.
$ மால்வரை-பெருமலை.

பிறிவருந்தம்பியும்பிரியப்பேருல
கிறுதியிற்றுணையெனவிருந்தவேந்தலை
அறைமணித்தாரினோடாரம்பார்தொடச்
செறிமலர்ச்சேவடிமுடியிற்றீண்டினான். (௧௨௬)

தீண்டலுமார்பிடைத்திருவுநோவுற
நீண்டபொற்றடக்கையானெடிதுபுல்லினான்
மூண்டெழுவெகுளிபோயொளிப்பமுன்புபோல்
ஈண்டியகருணைதந்திருக்கையேவியே. (௧௨௭)

அயலினிதிருத்தினனரசுமாணையும்
இயல்பினினியைந்தவெயினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீபுரக்கும்பல்லுயிர்
வெயிலிலவேகுடையெனவிளம்பினான். (௧௨௮)

பொருளுடையவ்வுரைகேட்டபோழ்துவான்
உருளுடைத்தேரினான்புதல்வனூழியின்
இருளுடையுலகினுக்கிரவியன்னநின்
* அருளுடையேற்கவையரியவோவென்றான். (௧௨௯)

பின்னரும்விளம்புவான்பெருமையோய்நின
தின்னருளுதவியசெல்வமெய்தினேன்
மன்னவநின்பணிமறுத்துவைகியென்
† புன்னிலைக்குரக்கியல்புதுக்கினேனென்றான். (௧௩௦)

பெருந்திசையனைத்தையும்பிசைந்துநேடினேன்
தருந்தகையமைந்துமத்தன்மைசெய்திலேன்
திருந்திழைதிறத்தினுற்றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருப்பயான்வாழ்வின்வைகினேன். (௧௩௧)

இனையனயானுடையியல்புமெண்ணமும்
நினைவுமென்றலினினின்றியான்செயும்
வினையுநல்லாண்மையும்விளம்பவேண்டுமோ
வனைகழல்வரிசிலைவள்ளியோவென்றான். (௧௩௨)

திருவுறைமார்பனுந்தீர்ந்ததேயும்வந்
தொருவருங்காலமுன்னுரிமையோருரை
தருவினைத்தாகையிற்றாழ்விற்றாகுமோ
பரதனீயினையனபகரற்பாலையோ. (௧௩௩)

ஆரியன்பின்னருமமைந்துநன்குணர்
மாருதியெவ்வழிமருவினானெனச்

* அருள்-தயவு.
† புன்னிலை-இழிந்தசெயல்.

சூரியன்காண்முளைதோன்றுமாலவன்
நீரரும்பரவையினெடிதுசேனையான். (௧௫௪)

கோடியோராயிரங்குறித்ததூதுவர்
ஓடினர்நெடும்படைகொணரலுற்றதால்
நாடரக்குறித்ததுமின்றுநாளையவ்
* வாடலந்தானையோடவனுமெய்துமால். (௧௫௫)

ஒன்பதினாயிரகோடியுற்றது
நின்பெருஞ்சேனையந்நெடியசேனைக்கு
நன்குறுமவதிநாளைநண்ணிய
பின்செயத்தக்கதுபேசற்பாற்றென்றான். (௧௫௬)

விரும்பியவிராமனும்வீரநிற்கதோர்
அரும்பொருளாகுமோவமைதிநன்றெனாப்
பெரும்பகலிறந்ததுபெயர்திநின்படை
பொருந்துழிவாவெனத்தொழுதுபோயினான். (௧௫௭)

அங்கதற்கினியனவருளியையபோய்த்
தங்குதியுந்தையோடென்றுதாமரைச
செங்கணான்தம்பியுந்தானுஞ்சிந்தையின்
மங்கையுமவவழியன்றுவைகினான். (௧௫௮)

சேயுயர்கீர்த்தியான்கதிரின்செம்மல்பாற்
போயதுமவ்வயிற்புகுந்தயாவையும்
ஓய்வுறுதுணர்த்தெனவுணர்த்தினானரோ
வாய்மையாவுணர்வுறுவலியமொய்ம்பினான். (௧௫௯)

அன்றவணிறுத்தன † னலரிகிட்டிசைப்
பொன்றிணிநெடுவரைபொலியுறுதமுன்
வன்றிறற்றூதுவர்கூடவானரக்
குன்றுறழ்நெடும்படையடைந்தகூறுவாம். (௧௬0)

௧0-வது, கிட்கிந்தைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௭௧௪.

---

* ஆடல்-வெற்றி அல்லது போர்.
† அலரி-சூரியன்.

# ௧௧-வது, தானைகாண்படலம்.



சதவலி வருதல்.

ஆனையாயிரமாயிரத் * தெறுழ்வலியமைந்த
வானராதிபராயிரருடன்வரவகுத்த
கூனன்மாக்குரங்கையிரண்டாயிரகோடித்
தானையோடுமெச்சதவலியென்பவன்சார்ந்தான். (௧)

சுசேடணன் வருதல்.

ஊன்றிமேருவையெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டுதெளிவுறுவானரச்சேனை
† ஆன்றபத்துநூறாயிரகோடியோடமையத்
தோன்றினன்வந்துசுசேடணனென்னுமத்தோன்றல். (௨)

உரோமை தந்தை வருதல்.

ஏறில்வேலையையிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந்திறல்கெழுவானரச்சேனை
ஆறிரண்டாயிரகோடியதுடன்வரவமுதம்
மாறிலாமொழியுருமையைப்பயந்தவன்வந்தான். (௩)

கேசரி வருதல்.

ஐம்பதாயநூறாயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரைபுரைநெடுவானரமொய்ப்ப
இம்பர்ஞாலத்தும்வானத்துமெழுதியசீர்த்தி
‡ நம்பனைத்தந்தகேசரிகடலெனநடந்தான். (௪)

இடும்பன் வருதல்.

மண்கொள்வாளெயிற்றேனத்தின்வலியனவயிரத்
திண்கொண்மால்வரைமயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்கொளாயிரகோடியினிரட்டியிற்கணித்த
எண்கினீட்டங்கொண்டெறுழ்வலியிடும்பன்வந்திறுத்தான். (௫)

கவாட்சன் வருதல்.

முனியுமாமெனினருக்கனைமுரணறமுருக்கும்
தனிமைதாங்கியவுலகையுஞ்சலம்வரிற்குமைக்கும்
இனியமாக்குரங்கீரிரண்டாயிரகோடி
அனிகமுன்வரவான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான். (௬)

---

* எறுழ்வலி-மிக்கவலி.

† ஆன்ற-மிகுந்த.

‡ நம்பனை-அநுமானை.

பனசன் வருதல்.

தனிவருந்தடங்கிரியெனப்பெரியவன்சலத்தால்
நினையுநஞ்செனவுருமெனநடுக்குறுநிலையன்
பனசனென்பவன்பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சினவானரப்படைகொடுபுகுந்தான். (எ)

நீலன் வருதல்.

இடியுமாக்கடன்முழக்கமும்வெருக்கொளவிசைக்கும்
முடிவில்பேர்முழக்குடையனவிசையனமுரண
கொடியகூற்றையுமொப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப்படைகொண்டுபுகுந்தனனீலன். (அ)

தரீமுகன் வருதல்.

மாகரத்தனவுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங்கண்ணுமிழ்வெயிலனமலையின்
* ஆகரத்தினும்பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடுந்தரீமுகனெனன்பவன்சார்ந்தான். (கூ)

கஜன் வருதல்.

இளைத்துவேறொருமாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதிணாயிரகோடியின்முற்றும்
விளைத்தவெஞ்சினத்தரியினம்வெருவுறவிழிக்கும்
அளக்கரோடுமெக்கயனெனும்பெயரன்வந்தடைந்தான். (க0)

சாம்பன் வருதல்.

ஆயிரத்தறுநூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும்படைகொண்டுபரவையிற்றிரையிற்
றுயுருத்துடனேவரத்தடநெடுவரையை
ஏயுருப்புயச்சாம்பனென்பவனும்வந்திறுத்தான். (கக)

துன்முகன் வருதல்.

வகுத்ததாமரைமலரயனிசிசரர்வாணுள்
உகுத்திநீயெனப்பொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூறாயிரப்பத்தியினிரட்டி
தொகுத்தகோடிவெம்படைகொண்டுதுன்முகனொடர்ந்தான். ()

துமிந்தன் வருதல்.

கோடிகோடிநூறாயிரவெண்ணெணக்குவிந்த
நீடுவெஞ்சினத்தரியினமிருபுடைநெருங்க

---

* ஆகரம்-உருவம்.

13

மூடுமும்பருமிம்பரும்பூழியின்மூழ்கத்
தோடிவர்ந்ததார்க்கிரிபுரைதுமிந்தனுந்தொடர்ந்தான். (க

மயிந்தனும் மற்கசனும் கோமுகனும் வருதல்.

இயைந்தபத்துநூறுயிரப்பத்தெனுங்கோடி
உயர்ந்தவெஞ்சினவானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொருவடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன்மற்கசகோமுகன்றன்னொடும்வந்தான். (க

குமுதன் வருதல்.

* கறங்குபோல்வனகாற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக்கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ
மறங்கொள்வானரமொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப்படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான். (க

பதுமுகன் வருதல்.

எழினேழுநூறுயிரகோடியென்றிசைந்த
பாழிநன்னெடுந்தோள்கிளர்படைகொண்டுபாவை
ஊழிபேரினுமுலைவிலவுலகினிலுயர்ந்த
பூழிவிண்புகப்பதுமுகனென்பவன்புகுந்தான். (க௯

இடபன் வருதல்.

எழுமேமுமென்றுரைக்கின்றவுலகங்களைவையும்
தாழுங்காலத்துந்தாழ்விலாத்தடவரைக்குலங்கள்
சூழுந்தோற்றத்தவலிகொடொள்ளாயிரகோடிப்
பாழிவெம்புயத்தரியொடுமிடபனும்படர்ந்தான். (கஎ

தீர்க்கபாதனும் வினதனும் சரபனும் வருதல்.

தீர்க்கபாதனும்வினதனுஞ்சரபனுந்திரைக்கும்
ஆற்கருங்கடற்குயர்ந்துளமைம்முகத்தனிகம்
ஆர்க்குமெண்ணருங்கோடிகொண்டண்டமும்புறமும்
போர்க்கும்பூழியின்மறைதரமுறையினிற்புகுந்தார். (கஅ)

அநுமான் வருதல்.

கையஞ்சாசரமுடையவக்கடவுளைக்கண்டு
மெய்யஞ்சாதவன்மாதிரஞ்சிறிதெனவிரிந்த
வையஞ்சாய்வரத்திரிதருவானரசேனை
ஐயஞ்சாயிரகோடிகொண்டனுமன்வந்தடைந்தான். (க௯)

* கறங்கு-காற்றாடி.

நளன் வருதல்.

* நொய்திற்கூடியசேனை நூறுயிரகோடி
எய்தத்தேவருமென்கொலோமுடிவென்பதெண்ண
மையற்சிந்தையாலந்தகன்மறுக்குற்றுமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த்திருநெடுங்காதலன்சேர்ந்தான். (௨0)

கும்பனுஞ் சங்கனும் வருதல்.

கும்பனுங்குலச்சங்கனுமுதலினர்குரங்கிற்
றம்பெரும்படைத்தலைவர்கடரவந்ததானை
இம்பர்நின்றவர்க்கெண்ணரிதிராகவனுவத்
தம்பெனுந்துணைக்குரியமற்றுரைப்பரிதளவே. (௨௧)

வானரசேனையின் மிகுதியுரைத்தல்.

தோயினுழியோரேழுநீர்சுவறிவெண்டுகளாம்
சாயினண்டமுமேருவுமொருங்குடன்சாயும்
ஏயின்மண்டலமெள்ளிடமின்றியிரியும்
காயின்வெங்கனற்கடவுளுமிரவியுங்கரியும். (௨௨)

வானரசேனையை அளவிடமுடியாதெனல்.

எண்ணினான்முகனெழுபதினாயிரக்கியலா
உண்ணினண்டங்களோர்பிடியுண்ணவுமுதவா
கண்ணினேக்குறிற்கண்ணுதலானையுங்கதுவா
மண்ணின்மேல்வந்தவானரச்சேனையின்வரம்பே. (௨௩)

வானரசேனையின் ஆற்றல்கூறல்.

ஒடிக்குமேல்வடமேருவைவேரொடுமொடிக்கும்
இடிக்குமேனெடுவானகமுகட்டையுமிடிக்கும்
பிடிக்குமேற்பெருங்காற்றையுங்கூற்றையும்பிடிக்கும்
குடிக்குமேற்கடலேழையுங்குடங்கையிற்குடிக்கும். (௨௪)

சேனாதிபதிகள் தொகைகூறுதல்.

ஆறுபத்தெழுகோடியாம்வானரர்க்கதிபர்
கூறுதிக்கினுக்கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவனியீனத்தனமுடிக்குறும்வலியார்
ஊறுமிப்பெருஞ்சேனைகொண்டெளிதின்வந்துற்றார். (௨௫)

சேனாதிபதிகள் சுக்கிரீவனை வணங்குதல்.

எழுமாகடற்பரப்பினும்பரப்பெனவிசைப்பச்
சூழும்வானரப்படையொடவ்வீரருந் † துவன்றி

---

* நொய்தில்-விரைவில்.
† துவன்றி-நெருங்கி.

ஆழிமாபரித்தேரவன்காதலனடிகள்
வாழிவாழியென்றுரைத்தலர்தூவினர்வணங்கி. (உ௬

சுக்கிரீவன் இராமனை வானரசேனைகளைக் காணுமாறு வேண்டுதல்.

அனையதாகியசேனைவந்திறுத்தலுமருக்கன்
தனையனெய்தினிற்றயரதன்புதல்வனைச்சார்ந்தான்
நினையுமுன்னம்வந்தடைந்ததுநின்பெருஞ்சேனை
வினையின்கூற்றுவகண்டருணீயெனவிளம்பும். (உ௭

சேனைகளைக்காண மலைச்சிகரத்தில் ஏறுதல்.

ஐயனும்மூவந்தகமெனமுகமலர்ந்தருளித்
தையலாள்வரக்கண்டனனெனத்தளிர்ப்பான்
எய்தினனங்கோர்நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன்பெயர்த்துமச்சேனையின்மீண்டான். (உ௮)

சுக்கிரீவன் வானரப்படைகளை அழைத்துவருதல்.

அஞ்சொடையிரண்டியோசனையகலத்ததாகிச்
* செஞ்செவேவடதிசைநின்றுதென்றிசைசெல்ல
எஞ்சலில்பெருஞ்சேனையையெழுகெனவேவி
வெஞ்சினப்படைவீரரையுடன்கொண்டுமீண்டான். (உ௯)

வந்த சேனையைக் காணுமாறு சுக்கிரீவனுரைத்தல்.

மீண்டிராமனையடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயெனவரன்முறைதெரியுறக்காட்டி
ஆண்டிருந்தனனேர்த்துளைத்தெழுந்ததையன்றே
ஈண்டுசேனைபாலெறிகடனெறிபடர்ந்தென்ன. (௩0)

எட்டுத்திக்கையுமிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்ட † விண்ணையுமறிகடலனைத்தையுமறையத்
தொட்டுமேலெழுந்தோங்கியதூளியிற்பூழி
இட்டுச்செம்மியநிறைகுடமொத்ததிவ்வண்டம். (௩௧)

அத்திபொப்பெனினன்னவையுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினியுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன்பகலிரவொருவலர்பார்ப்பார்
எத்திறத்தினுநடுவுகண்டிலர்முடிவெவவே. (௩உ)

விண்ணிற்றீம்புனலுலகத்திநுகரின்வெற்றி
எண்ணிற்றுனலதொப்பிலனெனநின்றவிராமன்

* செஞ்செவே-நேரே.
† விண்-சுவர்க்கம்.

கண்ணிற்சிந்தையிற்கல்வியின்ஞானத்திற்கருதி
அண்ணற்றம்பியைநோக்கினனுரைசெய்வதானான். (௫௩)

அடல்கொண்டோங்கியசேனைக்குநாமுநம்மறிவால்
உடல்கண்டோமினிமுடிவுளகாணுமாறுளதோ
மடல்கொண்டோங்கியவலங்கலாய்மண்ணிடைமாக்கள்
கடல்கண்டோமென்பர்யாவரேமுடிவுறக்கண்டார். (௫௪)

* ஈசன்மேனியையீரைந்துதிசைகளையீண்டிவ்
வாசில்சேனையையைம்பெரும்பூதத்தையறிவைப்
பேசும்பேச்சினைச்சமயங்கள்பிணக்குறும் † பிணக்கை
வாசமாலையாயாவரேமுடிவெண்ணவல்லார். (௫௫)

இன்னசேனையைமுடிவுறவிருந்திவணோக்கிப்
பின்னைக்காரியம்புரிதுமேலுளபலபெயரும்
முன்னிச்செய்கைமேலொருப்படலுறுவதேயுறாஅ
என்னவீரனைக்கைதொழுதிளையவனியம்பும். (௫௬)

யாவதெவ்வுலகத்தினினீங்கிவர்க்கியற்றல்
ஆவதாகுவதரியதொன்றுளதெனலாமே
தேவ ‡ தேவியைத்தேடுவதென்பதுசிறிதால்
பாவந்தோற்றதுதருமமேவென்றதிப்படையால். (௫௭)

§ தரங்கநீரெழுந்தாமரைநான்முகன்றந்த
வரங்கொள்பேருலகத்தினின்மற்றைமன்னுயிர்கள்
உரங்கொண்மால்வரையுயிர்படைத்தெழுந்தனவொக்கும்
குரங்கின்மாப்படைக்குறையிடப்படைத்தனன்கொல்லாம். (௫௮)

ஈண்டுதாழ்க்கின்றதென்னினியெண்டிசைமருங்கும்
$ தேண்டுவார்களைவல்லையிற்செலுத்துவதல்லால்
நீண்டநூல்வலாயென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன்காதலற்கொருமொழிபுகலும். (௫௯)

கக-வது, தானைகாண்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௭௫௩.

---

* ஈசன்-கடவுள்.
† பிணக்கு-விரோதம்.
‡ தேவ-தேவனே.
§ தரங்கம்-அலை.
$ தேண்டுவார்-தேடுவோர்.

## கஉ-வது, நாடவிட்டபடலம்.



இராமன் சுக்கிரீவனைப்பார்த்து நின்சேனைக் காணவில்லையென்றல்.

வகையுமானமுமாறெதிர்ந்தாற்றுறு
பகையுமின்றிநிரைந்துபரந்தெழு
தகைவில்சேனைக்கவதிசமைந்ததோர்
தொகையுமுண்டுகொலோவெனச்சொல்லினான். (க)

ஏற்றவெள்ளமெழுபதினிற்றவென்
றூற்றலாளரறிவினமைத்ததோர்
மாற்றமுண்டதுவல்லதுமற்றுமோர்
தோற்றமென்றிதற்கெண்ணுமுன்சொல்லுமோ. (உ)

நீலனதாற்றலைவியத்தல்.

ஆறுபத்தெழுகோடியனீகருக்
கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப்பதிகொடுங்கூற்றையும்
நீறுசெய்திடுநீலனென்றோதினான். (ங)

சுக்கிரீவனை இராமன் ஆகவேண்டிய காரியத்தினைச் செய்யெனல்.

என்றுரைத்தவெரிகதிர்மைந்தனை
வென்றிவிற்கையிராமன்விருப்பினான்
நின்றினிப்பலபேசியென்னோநெறி
சென்றிழைப்பனசிந்தனைசெய்கென்றான். (ச)

சுக்கிரீவன் அநுமனைப்பார்த்துரைத்தல்.

அவனு * மண்ணலனுமனையைநீ
புவனமூன்றுநின்றூதையிற்புக்குழல்
தவனவேகத்தையோர்கிலைதாழ்த்தனை
கவனமாக்குரங்கின்செயல்காண்டியோ. (ரு)

எகியேந்திழைதன்னையிருந்துழி
நாகநாடுகநானிலநாடுக
போகபூமிபொருந்திடவல்லநின்
வேகமீண்டுவெளிப்படவேண்டுமால். (சு)

* அண்ணல்-பெருமை.

சுக்கிரீவன் இராவணநகரந் தென்றிசையிலெனக் கூறக்கேட்டேனெனல்.

தென்றிசைக்கணிராவணன்சேணகர்
என்றிசைக்கின்றதென்னறிவின்னணம்
வன்றிசைக்கினிமாருதிநீயலால்
வென்றிசைக்குரியார்பிறர்வேண்டுமோ. (எ)

பிறர் கூறுமாறே யானுனைக்கின்றேனெனல்.

வள்ளறேவியைவஞ்சித்துவெளவிய
கள்ளவாளரக்கன்செலக்கண்டது
தெள்ளியோயதுதென்றிசையென்பதோர்
உள்ளமும்மெனக்குண்டெனவுன்னுவாய். (அ)

அங்கதனுடன் இரண்டுவெள்ளஞ் சேனையோடேகென அனுமனுக்கிசைத்தல்.

தாரைமைந்தனுஞ்சாம்பனுந்தாமுதல்
வீரர்யாவருமேம்படுமேன்மையாற்
சேர்கநின்னொடுந்திண்டிறற்சேனைகள்
போர்கவெள்ளமிரண்டொடும்பெற்றியால். (௯)

மேற்கிற் சுசேடணனும் வடக்கில் சதவலியும் கிழக்கில் வினதனும் செல்க என்றல்.

குடதிசைக்கணிடபன்குபேரன்வாழ்
வடதிசைக்கட்சதவலிவாசவன்
இடதிசைக்கண்வினதன்விறற்றரு
படையொடேற்றுப்படர்கெனப்பன்னினான். (௧0)

ஒருமாதத்திற்குள் வருகிரென்றல்.

வெற்றிவானரவெள்ளமிரண்டொடும்
சுற்றியோடித் * துருவியொருமதி
முற்றுறாதமுன்முற்றுதிரிவ்விடைக்
கொற்றவாகையினீரெனக்கூறினான். (௧௧)

விந்தமலைக்குச் செல்லுங்களெனல்.

ஈண்டுநின்றெழுந்தீரைந்துநூறெழில்
தூண்டுசோதிக்கொடுமுடிதோன்றலால்
நீண்டநேமிகொலாமெனநேர்தொழ
வேண்டும்விந்தமலையினைமேவுவீர். (௧௨)

நருமதைக்குச் செல்லுங்களெனல்.

தேடியவ்வரைதீர்ந்தபின்றேவரும்
ஆடுகின்றதறுபதமைந்தினைப்

---

* துருவி-தேடி.

பாடுகின்றதுபன்மணியாலிருள்
ஓடுகின்றநருமதையுன்னுவீர். (௧௩)

ஏமகூடமெய்துதிரெனல்.

* வாமமேகலைவானவர்மங்கையர்
காமவூசற்களியிசைக்கள்ளினால்
தூமமேனியசுணந்துயில்வுறும்
ஏமகூடமெனுமலையெய்துவீர். (௧௪)

தொய்தினம்மலைநீங்கிநுமதொடும்
பொய்கையின்கரைபின்படப்போதிரால்
செய்யபெண்ணைக்கரியபெண்ணைச்சில
வைகறேடிக்கடிதுவழிக்கொள்வீர். (௧௫)

தண்டகம் புகுங்களெனல்.

தாங்குவாரகிறருவளர்சந்தனம்
வீங்குவேலிவிதர்ப்பமும்மல்லென
நீங்கினாடுநெடியனபிற்படத்
தேங்குவார்புனற்றண்டகஞ்சேர்திரால். (௧௬)

முண்டகத்துறையென்னுஞ் சோலைக்குச் செல்லுதிரெனல்.

பண்டகத்தியன்வைகியதாப்பகர்
தண்டகத்ததுதாபதர்தம்மையுட்
கண்டகத்துயர்தீர்வதுகாண்டிரால்
முண்டகத்துறையென்றொருமொய்ம்பொழில். (௧௭)

ஞாலநுங்குறுநல்லறத்தோர்பொருள்
போலநின்றுபொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர்வாயெனத்தீங்கனி
காலமின்றிக்கனிவதுகாண்டிரால். (௧௮)

நயனநன்கிமையார்துயிலார்நனி
அயனமில்லையருக்கனுக்கவ்வுழி
சயனமாதர்கலவித்தலைதரும்
பயனுமின்பமுநீரும்பயக்குமால். (௧௯)

பாண்டுகிரிக் கேகுங்களெனல்.

ஆண்டிறந்துபிணந்தரத்திந்துவைத்
தீண்டுகின்றதுசெங்கதிர்ச்செல்வனும்
ஈண்டுறைந்தலதேகலமென்பது
பாண்டுவின்மலையென்னும்பருப்பதம். (௨0)

---

* வாமம்-அழகு.

வேறு.

கோதாவிரியடையுங்கள் எனல்.

முத்தீர்த்துப்பொன்றிரட்டிமணியுருட்டிமுதுநீத்தமுன்றிலாயர்
மத்தீர்த்துமானீர்த்துமலையீர்த்துமானீர்த்துவருவதியார்க்கும்
* புத்தீர்த்திட்டலையாமற் † புலவர்நாடுதவுவதுபுனிதமான
அத்தீர்த்தமகன்கோதாவிரியென்பரம்மலையினருகிற்றம்மா. (உக)

சுவணம் புகுதிரெனல்.

அவ்வாறுகடந்தப்பாலறத்தாறேயெனத்தெளிந்தவருளினோரும்
வெவ்வாறுமெனக்குளிர்ந்துவெயிலியங்காவகையிலங்கும்விரிபூஞ்சோலை
எவ்வாறுமுறத்துவன்றியிருளோடமணியிமைப்பதிமையோர்வேண்டத்
தெவ்வாறுமுகத்தொருவன்றனிக்கிடந்தசுவணத்தைச்சேர்திர்மாதோ.()

சூரியகாந்தி சந்திரகாந்தி கொங்கணகுலிந்தங்களை யடைதிரெனல்.

சுவணத்தைக்கடந்தப்பாற்சூரியகாந்தகமென்னத்தோன்றிமாதர்
கவணுமிழ்கல்வெயிலியங்குங்கனவரையுஞ்சந்திரகாந்தகமுங்காண்டீர்
அவணவைந்தேகியபினகளுடுபலகடந்தாலனந்தனென்பான் [மாதோ.
உவணபதிக்கொளித்துறையுங்கொங்கணமுங்குலிந்தமுஞ்சென்றுறுதிர்

அருந்ததிகிரியை யடைதிரெனல்.

அரனதிகனுலகளந்தவரியதிகனென்றுரைக்குமறிவிலோர்க்குப்
பரகதிசென்றடைவரிய ‡ பரிசேபோற்புகலரியபண்பிற்றுமால் [லாம்
சுரநதியினயலதுவான்றோய்குடுமிச்சுடர்த்தொகைய தொழுதோர்க்கெல்
வரனதிகந்தருந்தகையவருந்ததியாநெடுமலையைவணங்கியப்பால். (உச)

மரகதகிரியை யெய்துதிரெனல்.

அஞ்சுவரும்வெஞ்சுரனுமாறுமகன்பெருஞ்சுனையுமகிலோங்கார
மஞ்சிவருநெடுங்கிரியும்வளநாடும்பிற்படப்போய்வழிமேற்சென்றால்
நஞ்சுவருமிடற்றரவுக்கமிழ்துநனிகொடுத்தாயைக்கலுழனண்ணும்
எஞ்சின்மரகதப்பொருப்பையிறைஞ்சியதன்புறஞ்சாரவேகிர்மாதோ. ()

வேங்கட மடைதிரெனல்.

வடசொற்குந்தென்சொற்கும்வரம்பிற்றாய்நான்மறையுமற்றைநூலும்
இடைசொற்றபொருட்கெல்லாமெல்லையதாய்நல்லறத்துக்கீறாய்வேறு
புடைசுற்றுந்துணையின்றிப்புகழ்பொதிந்தமெய்யேபோற்பூத்துநின்ற
அடைசுற்றுந்தண்சாரலோங்கியவேங்கடத்திற்சென்றடைதிர்மாதோ. ()

வேங்கடத்து ஞானியரைப் புகழ்தல்.

இருவினையுமிடைவிடாவெவ்வினையுமியற்றுதேயிமையோரேத்தும்
திருவினையுமிடைதந்தேர்சிறுமையையுமுறையொப்பத்தெளிந்துநோக்கிக்

---

* புத்து-மகப்பெறுதவர் அடைவதோர். நரகம்.
† புலவர்-விசேஷபுத்தியையுடையவர்; புலம்-தேர்ந்த (அறிவு.)
‡ பரிசேபோல்-தன்மைபோல.

கருவினையதிப்பிறவிக்கென்றுணர்ந்தங்கதுகளையுங்கடையின்ஞானத்
தருவினையின்பெரும்பகைஞராண்டுளரீண்டிருந்துமடிவணங்கற்பாலார்.

வேங்கடத்தின் தன்மை.

சூதகற்றுந்திருமறையோர்துறையாடுநிறையாறுஞ்சுருதித்தொன்னூல்
மாதவத்தோருறைவிடனுமழையுறங்குமணித்தடனும்வானமாதர்
கீதமொத்தகின்னரங்களின்னரம்புவருடுதொறுங்கிளக்குமோதை
போதகத்தின்மழக்கன்றம்புலிப்பறழுமுறங்கிடனும்பொருந்திற்றம்மா.

தொண்டைநாட்டின்வழி காவிரியிங்குமெய்துதிரெனல்.

* கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரேலுநெடியகொடுமைநீங்கி
வீடுறுதிராதலினன்விலங்குதிரப்புறத்துநீர்மேவுதொண்டை
நாடுறுதிருற்றதனைநாடியதற்பின்னையவைநளிநீர்ப்பொன்னிச்
சேடுறுதண்புனற்றெய்வத்திருநதியினிருகரையுஞ்சேர்திர்மாதோ. (௨௯)

சோணாடுமலைநாடு தமிழ்நாடுகளிற் புகுதிரெனல்.

துறக்கமுற்றூர்மனமென்னத்துறைகெழுநீர்ச்சோணாடுகடந்தாற்றொல்லை
மறக்கமுற்றாரதனையேலமறைந்துறைவரவ்வழிநீர்வல்லையேகி [கற்
உறக்கமுற்றாரென்னுற்றாரெனுமுணர்விறேறுமொதுங்கிமணியாலோங்
பிறக்கமுற்றமலைநாடுநொடியகன்றமிழ்நாட்டிற்பெயர்திர்மாதோ. (௩0)

மயேந்திரமுங்கடலுங் காண்டிரென்றல்.

தென்றமிழ்நாட்டகன்பொதியிற் றிருமுனிவன்றமிழ்ச்சங்கஞ் சேர்கிற்பீ
என்றுமவனுறைவிடமாமாதலினம்மலையையிறைஞ்சியேகிப் [ரேல்
பொன்றிணிந்தபுனல்பெருகும் பொருநையெனுந்திருநதிபின்பொழியநா
கக், கன்றுவளர்தடஞ்சாரன்மகேந்திரமாநெடுவரையுங்கடலுங்காண்டிர்.

அனுமானை இராமன் தனியேயழைத்து சீதையிலக்கணமுரைத்தல்.

ஆண்டுகடந்தப்புறத்துமெப்புறத்துமொருதிங்களவதியாகத்
தேண்டியிவண்வந்தடைதிர்விடைகோடிர்கடிதென்னச்செப்பும்வேலை
நீண்டவனுமாருதியைநிறையருளாலுறநோக்கிநீதிவல்லோய்
காண்டியெனிற்குறிகேட்டியெனவேறுகொண்டிருந்துகழறலுற்றான். ()

வேறு.

சீதையின்பாதவருணனை.

பாற்கடல்பிறந்தசெய்யபவளத்தைப்பஞ்சியூட்டி
மேற்படமதியஞ்சூட்டிவிளங்குறநிரைத்தமெய்ய
காற்றகைவிரல்களையகமலமும்பிறவுங்கண்ட
ஏற்பிலவென்பதன்றியிணையடிக்குவமையென்றே. (௩௩)

* கோடு-சிகரம்.

புறவடித்திறம் புகறல்.

நீமெயாயுணர்தியையநிரைவளைமகளிர்க்கெல்லாம
வாய்மையாலுவமையாகமதியறிபுலவர்வைத்த
ஆமையாமென்றபோதுமல்லனசொல்லினாலும்
யாமயாழ்மழலையாடன்புறவடிக்கிழுக்கமன்னோ. (௫௪)

கணைக்காற்றிறமுரைத்தல்.

வினைவராலரியகோதைபேதைமென்கணைக்கான்மெய்ய
நினைவராலரியவின்னநேர்படப்புலவர்போற்றும்
சினைவரால்பகழியாவநெற்சினையென்னுஞ்செப்பம்
எனைவராற்பகருமீட்டியானுரைத்தின்பமென்னோ. (௫௫)

தொடைத்திறஞ்சொல்லல்.

அரம்பையென்றளகமாதர்குறங்கினுக்கமைந்தவொப்பின்
வரம்பையுங்கடந்தபோதுமற்றுரைவகுக்கலாமோ
நரம்பையுமமிழ்தநாறுநறவையுநன்னீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள்கவாற்கிதுகருதுகண்டாய். (௫௬)

கடிதடத்திறங்கட்டுரைத்தல்.

வாராழிக்கலசக்கொங்கைவஞ்சிபோன்மருங்குலாடன்
தாராழிக்கலைசாரல்குறடங்கடற்குவமைதக்கோய்
பாராழிபிடரிற்றாங்கும்பாந்தளும்பணிவென்றோங்கும்
ஓராழித்தேருங்கண்டவுனக்குநானுரைப்பதென்னோ. (௫௭)

இடைத்திறம் இசைத்தல்.

† சட்டகந்தன்னைநோக்கியாரையுஞ்சமைக்கத்தக்காள்
இட்டிடையிருக்குந்தன்மையியம்பக்கேட்டுணர்தியென்னின்
கட்டுரைத்துவமைகாட்டக்கட்பொறிகதுவாகையிற்
றொட்டவெற்குணரலாமற்றுண்டெனுஞ்சொல்லுமில்லை. (௫௮)

வயிற்றின்திறம்வகுத்தல்.

ஆலிலைபடிவந்தீட்டுமையநுண்பலகைநொய்ய
பால்நிறத்தட்டம்வட்டக்கண்ணடிபலவுமின்ன
போலுமென்றுரைத்தபோதும்புனைந்துரைபொதுமைபார்க்கின்
எலுமென்றிசைக்கினேலாவிதுவயிற்றியற்கையின்னும். (௫௯)

நாபியின்றிறத்தை நவிலுதல்.

சிங்கலில்சிறு ‡ கூதாளிநந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றொளையென்றாலும்புல்லியவுவமைத்தாமால்

* அரம்பை-வாழை. † சட்டகம்-வடிவம். ‡ கூதாளி-ஒருவகைத்தாளி.

அங்கவளுந்நியொக்குஞ்சுழியெனக்கணித்ததுண்டால்
கங்கையைநோக்கிச்சேறிகடலினுநெடிதுகற்றேய். (௪0)

உரோமரேகத்திறம் உரைத்தல்.

மயிரொழுக்கெனவொன்றுண்டால்வல்லிசேர்வயிற்றின்மற்றொன்
உயிரொழுக்கதற்குவேண்டுமுவமையொன்றுரைக்கவேண்டின்
செயிரில்சிற்றிடையாயுற்றசிறுகொடிநுடக்கந்தீரக்
குயிலுறுத்தமையவைத்தகொள்கொம்பென்றுணர்ந்துகோடி. (௪௧)

வயிற்றிலுள்ள மூன்றிரேகைகளைக்குறித்துரைத்தல்.

* அல்லியூன்றிமென்றஞ்சியரவிந்தந்துறந்தாட்கம்பொன்
வல்லிமூன்றுளவாற்கோலவயிற்றின்மற்றவையுமார
வில்லிமூன்றுலகின்வாழுமாதருந்தோற்றமெய்ம்மை
சொல்லியூன்றியவாம்வெற்றிவரையெனத்தோன்றுமன்றே. (௪௨)

தனபாரத்திறஞ்சாற்றல்.

செப்பென்பெங்கலசமென்பென்செவ்விளநீருந்தேர்வென்
† துப்பொன்றுதிரள்சூதென்பென்சொல்லுவென்றும்பிக்கொம்பைத்
தப்பின்றிப்பகலின்வந்தசக்கரவாகமென்பென்
ஒப்பொன்றுமுலகிற்காணேன்பலநினைந்துலைவெனின்னும். (௪௩)

தோட்டிறஞ்சொல்லல்.

கரும்புகண்டாலுமாலைக்காம்புகண்டாலுமாலி
அரும்புகண்டாரைசோாவழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டாலுங்கோதைதந்தாணிணைந்துவமைசொல்ல
இரும்புகண்டனையநெஞ்சமெனக்கிலையிசைப்பதென்னே. (௪௪)

முன்கைகளின் தன்மைகூறுதல்.

முன்கையேயொப்பதொன்றுமுண்டுமூன்றுலகத்துள்ளும்
என்கையேயிழுக்கமன்றேயியம்பினுங்காந்தளென்றல்
வன்கையாழ்மணிக்கையென்றன்மற்றொன்றையுணர்த்தலன்றி
நன்கையாடக்கையாமோநலத்தின்மேனலமுண்டாமோ. (௪௫)

கைகளின்தன்மை ஒப்பற்றதெனல்.

ஏலக்கொண்டென்ற ‡ பிண்டியிளந்தளிர்கிடக்கயாணர்க்
கோலக்கற்பகத்தின்காமர்குழைபடுங்கமலமென்பூ
நூலொக்குமருங்குலாடணூபுரம்புலம்புங்கோலக்
காலுக்குத்தொலையுமென்றாற்கைக்கொப்புவைக்கலாமோ. (௪௬)

* அல்லி-அகவிதழ். † துப்பு-தூய்மை. ‡ பிண்டி-அசோகு.

நகங்களின் தன்மைகூறல்.

வெள்ளியமுறுவல்செவ்வாய்விளங்கிழையிளம்பொற்கொம்பின்
* வள்ளுகிர்க்குவமைநம்மான்மயர்வறவகுக்கலாமோ
எள்ளுதிர்நீரேமூக்கையென்றுகொண்டிவறியென்றும்
கிள்ளைகண்முருக்கின்பூவைக்கிழிக்குமேலுரைக்கலாமோ. (௪௭)

கழுத்தின்தன்மைகழறுதல்.

அங்கையுமடியுங்கண்டாலரவிந்தநினையுமாபோல்
செங்களிசிதறிநீலஞ்செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கிவளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுநினைதியாயினவையென்றுதுணிதிதக்கோய். (௪௮)

அதரமுறுந்திறமறைதல்.

பவளமுங்கிடையுங்கொவ்வைப்பழனும்பைங்குமுதப்போதும்
துவள்விலவிலவங்கோபமுருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென்றுரைக்கும்வண்ணஞ்சிவந்துதேன்றதும்புமாயிற்
குவளையுண்கண்ணிவண்ணவாயதுகுறியுமஃதே. (௪௯)

வாயின்திறம்வகுத்தல்.

சிவந்ததோரமிழ்தமில்லைத்தேனில்லையுளவென்றாலும்
கவர்ந்தபோதன்றியுள்ளநினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவாணுதலினுடன்பவளவாய்க்குவமைபாவித்
துவந்தபோதுவந்தவண்ணமுரைத்தபோதுரைத்ததாமோ. (௫0)

பற்களின்தன்மைபகர்தல்.

முல்லையுமுருந்துமுத்துமுறுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமிழ்தும்பாலுந்தேனுமென்றுரைக்கத்தோன்றும்
அல்லதொன்றுவதில்லையமிழ்திற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடிமாறிலாவாறுசான்றோய். (௫௧)

மூக்கின்திறமுரைத்தல்.

ஓதியுமெள்ளுந்தொள்ளைக்குமிழுமூக்கொக்குமென்றாற்
சோதிசெய்பொன்னுமின்னுமணியும்போற்றுளங்கித்தோன்றா
எதுவுமில்லைவல்லாரெழுதுவார்க்கெழுதவொண்ணா
நீதியைநோக்கிநீயேநினைதியானெடிதுகாண்பாய். (௫௨)

காதின்தன்மைகழறுதல்.

† வள்ளைகத்தரிகைவாமமயிர்வினைகருவியென்னப்
பிள்ளைகளுரைத்தவொப்பைப்பெரியவருரைக்கிற்பித்தாம்

---

* வள்ளுகிர்-கூரியநகம்.
† வள்ளை-ஒருகொடி.

வெள்ளிவெண்டோடுசெய்தவிழுத்தவம்விளைந்ததென்றே
உள்ளுதியுலகுக்கெல்லாமுவமைக்குமுவமையுண்டோ. (ருங)

கண்களின் திறங்கள்கூறுதல்.

பெரியவாய்ப்பரவையொவ்வாபிறிதொன்றுநினைந்துபேச
உரியவாவொருவருள்ளத்தொடுங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்காஞேக்கிற்றேவர்க்குந்தேவனென்னக்
கரியவாய்வெளியவாகும்வாட்டடங்கண்களம்மா. (ருச)

புருவங்களின்தன்மைகூறுதல்.

கேளொக்கினன்றியொன்றுகிளத்திஞற்கிழமைத்தாமே
கோளொக்குமென்னினல்லாற்குறியொப்பக்கூறிற்றன்றால்
வாளொக்கும்வடிக்கணுடன்புருவத்துக்குவமைவைக்கின்
தாளொக்க * வளைந்துநிற்பவிரண்டில்லையநங்கசாபம். (ருரு)

முகம் நெற்றி இவைகளையுரைத்தல்.

நன்ஞளுநளினநாணுநளியடிநுதலைநாடிப்
பன்ஞளும்பன்னியாற்றுடதியெனும்பண்பதாகி
முன்ஞளின்முளைவெண்டிங்கண்முழுநாளுங்குறைவேயாகி
எந்நாளும்வளராதென்னினிறையொக்குமியல்பிற்றுமே. (ருசு)

பின்னுமுகத்தின்திறங்கூறுதல்.

வனைபவரில்லையன்றேவனத்துணும்வந்தபின்னை
அனையனவெனினுந்தாந்தமழுகுக்கோரழிவுண்டாகா
வினைசெயக்குழன்றவல்லவிதிசெயவிளைந்தநீலம்
புனைமணியளகமென்றும்புதுமையாமுவமைபூணு. (ருஎ)

முகத்தின் தன்மையுரைத்தல்.

கொண்டலின்குழவியாம்பல்குனிசிலைவள்ளைகொற்றக்
கெண்டையொண்டரளமென்றிக்கேண்மையகிடந்ததிங்கண்
மண்டிலம்வதனமென்றுவைத்தனன்விதியேயப்
புண்டரிகத்தையுற்றபொழுததுபொருந்தித்தோர்வாய். (ருஅ)

கூந்தலின் திறங்கூறுதல்.

காரினைக்கழித்துக்கட்டிக்கள்ளிேடாவியூட்டிப்
பேரிருட்பிழம்புதோய்த்துநெறிவுறீஇப்பிறங்குகற்றைச்
சோர்குழற்றொகுதியென்றுசும்மைசெய்தனையதம்மா
நேர்மையைப்பருமைசெய்தநிறைநறுங்கூந்தனீத்தம். (ருக)

* வளர்ந்தே என்றும் பாடம்.

* புல்லிதழ்கமலத்தெய்வப்பூவிற்குமுண்டுபொற்பின்
எல்லையின்மதிக்குமுண்டாங்களங்கமென்றுரைக்குமேதம்
அல்லவுஞ்சிறிதுகுற்றமகன்றிலவன்னமன்ன
நல்லியலாளுக்கெல்லாநலனன்றிப்பிறிதுண்டன்றால். (௯௦)

திருமகளினுஞ் சீதை இலக்கணநிரம்பினவள்எனல்.

மங்கையர்க்கோதிவைத்தவிலக்கணம்வண்ணவாசப்
பங்கயத்தவட்குமையாநிரம்பலபற்றிநோக்கின்
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்தேவரும்வணங்குந்தெய்வக்
கொங்கையக்குயிலுக்கொன்றுங்குறைவிலைகுறியுமஃதே. (௯௧)

சொல்லின் தன்மைசொல்லுதல்.

குழல்படைத்தியாழைச்செய்துகுயிலொடுகிளியுங்கூட்டி
மழலையும்பிறவுந்தந்துவடித்தகைம்மலரின்மேலான்
இழைபொருமுலையினுடனின்சொற்களியையச்செய்தான்
பிழையிலதுவமைகாட்டப்பெற்றிலன்பெறுங்கொலின்னும். (௯௨)

மொழிக்குவமையிலையெனல்.

வானின்றவுலகமூன்றும்வரம்பின்றிவளர்ந்தவேனும்
நானின்றசுவைமற்றொன்றேயமிழ்தன்றிநல்லதில்லை
மீனின்றகண்ணினுடன்மென்மொழிக்குவமைவேண்டின்
தேனென்றேயமிழ்தமொன்றேயவைசெவிக்கின்பஞ்செய்யா. (௯௩)

நடைத்திறங்கூறுதல்.

பூவருமழலையன்னம்புனைமடப்பிடியென்றின்ன
தேவருமருளத்தக்கசெலவினவெனினுந்தேறேன்
பாவருங்கிழமைத்தொன்மைப்பருணிதர்தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச்செவ்விநடைவருநடையணல்லோய். (௯௪)

நிறத்தின்தன்மைகூறுதல்.

என்நிறமுரைக்கேன்மாவினிளநிறமுதிருமற்றைப்
பொன்னிறங்கருகுமென்றான்மணிநிறமுவமைபோதா
மின்னிறநாணியெங்கும்வெளிப்படாவொளிக்கும்வேண்டின்
தன்னிறந்தானேயொக்குமலர்நிறஞ்சமழ்க்குமன்றே. (௯௫)

எம்மங்கையும் இவட்கொப்பன்றெனல்.

மங்கையரவளையொப்பார்மற்றுளரில்லரொன்னும்
† சங்கையிலுள்ளந்தானேசான்றெனக்கொண்டுசான்றோய்
அங்கவணிலைமையெல்லாமளந்தறிந்தருகுசார்ந்து
திங்கள்வாண்முகத்தினாட்குச்செப்பெனப்பின்னுஞ்செப்பும். (௯௬)

* புல்லிதழ்-புறவிதழ்.
† சங்கையில்-சந்தேகமற்ற.

### வேறு.

கன்னிமாடத்திடைக்கண்டது கூறெனல்.

முன்னைநான் முனியொடும்முதியநீர்மிதிலைவாய்ச்
சென்னிநீண்மாலையான்வேள்விகாணியசெல
அன்னமாடுந்துறைக்கருகுநின்றானையக்
கன்னிமாடத்திடைக்கண்டதுங்கழறுவாய். (௬௭)

சனகன்சபையில் கண்டதையுரையெனல்.

* சூழிமால்யானையின்றுணைமருப்பிணையெனக்
கேழிலாவனமுலைக்கிரிசுமந்திடைவதோர்
வாழிவான்மின்னிளங்கொடியின்வந்தாளையன்
றூழியானரசவைக்கண்டதும்மறைகுவாய். (௬௮)

வில்லிறுத்தவன் வேறொருவனேல் உயிர்விடுவேனென்றதை யுரையெனல்.

வரைசெய்தாள்வில்லிறுத்தவனமாமுனியொடும்
விரைசினானல்லனேல்விடுவல்யானுயிரெனாக்
கரைசெயாவேலையிற்பெரியகற்பினொடிருந்
துரைசெய்தாளஃதெலாமுணரநீயுரைசெய்வாய். (௬௯)

வனத்துக்குவந்து துன்பந்தருதியோ வென்றேனதனை யுரையெனல்.

முன்புநானறிகிலாமுனிநெடுங்கானிலே
என்பினேபோதுவானினைதியோவேழைநீ
இன்பமாயாருயிர்க்கினியையாயினையினித்
துன்பமாய்முடிதியோவென்றதுஞ்சொல்லுவாய். (௭௦)

யானலாதனவெலாமினியவோவெனக் கேட்டதையுரையெனல்.

ஆனபோதரசிழந்தடவிசேர்வாயுனக்
கியானலாதனவெலாமினியவோவினியெனா
மீனுலாநெடுமலர்க்கண்கணீர்விழவிழுந்
தானிலாவுயிரின்வெந்தயர்வதும்முரைசெய்வாய். (௭௧)

மதிற்கதவுகடத்தற்கு முன்னரோகானமெங்ஙனென்றதையுரையெனல்.

† மல்லன்மாநகர்துறந்தேகுநாண்மதிதொடும்
கல்லின்மாமதின்மணிக்கடைகடந்திடுதன்முன்
எல்லைதீர்வரியவெங்கானம்யாதோவெனச்
சொல்லினாளஃதெலாமுணரநீசொல்லுவாய். (௭௨)

---

* சூழி-முகபடாம். † மல்லல்-வளம்,

மோதிரமளித்தல்.

இனையவாறுரைசெயாவினிதினேகுதியெனா
வனையுமாமணிநன்மோதிரமளித்தறிஞனின்
வினையெலாமுடிகெனாவிடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினானருளொடும்போயினான். (௭௩)

சீதையைத்தேட வானரவீரர்போதல்.

அங்கதக்குரிசிலோடடுசினத்துழுவராம்
வெங்கதத்தலைவரும்விரிகடற்படையொடும்
பொங்குவிற்றலைவரைத்தொழுதுமுன்போயினார்
செங்கதிர்ச்செல்வனைப்பணிவுறுஞ்சென்னியார். (௭௪)

கஉ-வது, நாடவிட்டபடலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-அஉஎ.

---

## * கங-வது, பிலநீங்குபடலம்.

போயினார்போனபின்புறநெடுந்திசைகடோ
றேயினானிரவிகாதலனுமேயினபொருட்
காயினாரவருமங்கன்னநாளவதியிற்
றாயினாருலகினைத்தகைநெடுந்தானையார். (௧)

குன்றிசைத்தனவெனக்குலவுதோள்வலியினார்
மின்றிசைத்திடுமிடைக்கொடியைநாடினர்விராய்
வன்றிசைப்படருமாறொழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார்திறனெடுத்துரைசெய்வாம். (௨)

வானரர் விந்தியமலைசேர்தல்.

சிந்துராகத்தொடுந்திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின்றவிர்தலானரவினோ
டிந்தியாறெய்தலானிறைவன்மாமௌலிபோல்
விந்தைநாகத்தின்மாடெய்தினார்வெய்தினால். (௩)

சீதையை விந்தத்திற்றேடுதல்.

அந்நெடுங்குன்றமோடவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப்புரைகளும்புடைகளும்

---

* பிலம்-வடசொல்; நிலத்தின்கீழறை; மலைக்குகைபோல்வது.

நன்னெடுந்தாழ்வரைநாடினார் * நவையிலார்
பன்னெடுங்காலமாமென்னவோர்பகலிடை. (ச

மல்லன்மாஞாலமோர்மறுவுறுவகையினச்
† சில்லலோதியையிருந்துறைவிடந்தேடுவார்
புல்லினுருலகினைப்பொதுவிலாவகையினால்
எல்லைமாகடல்களேயாகுமாறெய்தினார். (ரு

விண்டுபோயிழிவர்மேனிமிர்வர்விண்படர்வர்வேர்
உண்டமாமரனினம்மலையின்வாயுறையுநீர்
மண்டுபாரதனின்வாழுயிர்களம்மதியினார்
கண்டிலாதனவயன்கண்டிலாதனகொலாம். (சு)

(ே வ ம.

வாநரர்நருமதைநதியையடைதல்.

எகினார்யோசனையேழொடேழுபார்
சேகரத்தென்றிசைகடிதுசெல்கின்றார்
மேகமாலையினெடும்விரவிமேநியின்
நாகுசேர்நருமதையாறுகண்ணினார். (எ)

வாநரர்நருமதைக்கரைகளிலுந்துறைகளிலுந்தேடுதல்.

அன்னமாடிடங்களுமமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந்துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ் ‡ சுரும்புமூசுதேன்
பன்னியாடிடங்களும்பரந்துசுற்றினார். (அ)

பெறலருந் § தெரிவையைநாடும்பெற்றியார்
அறனறுங்கூந்தலுமளகவண்டுசூழ்
நிறைநறுந்தாமரைமுகமுநித்தில
முறுவலுங்காண்பரான்முழுதுங்காண்கிலார். (கூ)

செருமதயாக்கையர்திருக்கில்சிந்தையர்
தருமதயாவிவைதழுவுந்தன்மையர்
பொருமதயானையும்பிடியும்புக்குழல்
நருமதையாமெனுநதியைநீங்கினார். (க0)

வாநரர் ஏமகூடமலையையடைதல்.

தாமகூடத்திரைத்தீர்த்தசங்கமும்
நாமகூடப்பெருந்திசையைநல்கிய

* நவையிலார்-குற்றமிலாதார்.
† சில்லலோதி-தகட்டணி நீத்தகூந்தல்.
‡ சுரும்புமூசும்-வண்டுகள் மொய்க்கும்.
§ தெரிவை-சனகி,

வாமகூடச்சுடர்மணிவயங்குறும்
ஏமகூடத்தடங்கிரியையெய்தினார். (௧௧)

இதுமுதல் ௪-பாடல் ஏமகூடத்திறமுரைத்தல்.

மாடுறுகிரிகளுமரனுமற்றவும்
சூடுறுபொன்னெனப்பொலிந்துதோன்றுறப்
பாடுறுசுடரொளிபரப்புகின்றது
வீடுறுமுலகினும்விளங்குமெய்யது. (௧௨)

பறவையும்பல்வகைவிலங்கும்பாடமைந்
துறைவனகனக நுண்பூழியொட்டலான்
நிறைநெடுமேருவைச்சேர்ந்தநீரவாய்ப்
பொறைநெடும்பொன்னொளிமுழுதும்போர்ப்பது. (௧௩)

பரவியகனக நுண் * பராகம்பாடுற
எரிசுடர்ச்செம்மணியீட்டத்தோடிழி
அருவியுநதிகளுமலங்குதீயிடை
உருகுபொன்பாய்வபோன்றொழுகுகின்றது. (௧௪)

விஞ்சையர்பாடலும்விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினாடற்பாணியும்
குஞ்சரமுழக்கமுங்குமுறுபேரியின்
மஞ்சினமுரற்றலுமயங்குமாண்பது. (௧௫)

இதுமுதல் ௪-பாடல் அவ்வேமகூடத்தில் சீதையைத்தேடுதல்.

அனையதுநோக்கினாரமிதாமயில்
இனையவேலிராவணனிருக்கும்வெற்பெனும்
நினைவினருவந்துயர்ந்தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறிசிந்துசெங்கணார். (௧௬)

இம்மலைகாணுதுமேமைமானையச்
செம்மலைநீக்குதுஞ்சிந்தைத்தீதென
விம்மலுற்றுவகையின்விளங்குமுள்ளத்தர்
அம்மலையேறினாரச்சநீங்கினார். (௧௭)

இரிந்தனகரிகளும்யாளியீட்டமும்
விரிந்த † கோளரிகளும்வெருவிநீங்கின
திரிந்தனரெங்கணுந்திருவைக்காண்கிலர்
பரிந்தனசிந்தைபரிகின்றுமெனை. (௧௮)

ஐம்பதிற்றிரட்டிகாவதத்தினலகன்
றும்பரைத்தொடுவதொத்துயர்வினோங்கிய

* பராகம்-பொடி. † கோளரி-சிங்கம்.

செம்பொனற்கிரியையோர்பகலிற்றேடினார்
கொம்பினைக்கண்டிலர்குப்புற்றேகினார். (௧௯)

வெள்ளமோரிரண்டெனவிரிந்தசேனையைத்
தெள்ளுநீருலகெலாந்திரிந்துதேடிநீர்
எள்ளருமகேந்திரத்தெம்பிற்கூடுமென்
றுள்ளினாருயர்நெடுமோங்கனீங்கினார். (௨௦)

வானரர் பாலைவனமடைதல்.

மாருதிமுதலியவயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரேகுழுமிப்போகின்றார்
நீரொனும்பெயருமங்கெறியினீங்கலால்
சூரியன்வெருவுமோர்சுரத்தைநண்ணினார். (௨௧)

இதுமுதன் மூன்றுபாடல் பாலைத்திறம்.

புள்ளடையாவிலங்கரிதுபுல்லொடும்
கள்ளுடைமரனிலகல்லுந்தீந்துகு
முள்ளிடையாவுநுண்பொடியொடோடிய
வெள்ளிடையல்லதொன்றரிதவ்வெஞ்சுரம். (௨௨)

நன்புலனடுக்குறவுணர்வுநாமறப்
பொன்பொலியாக்கைகள்புழுங்கிப்பொங்குவார்
தென்புலந்தங்கெரிநரகிற்சிந்திய
* என்பில்பல்லுயிரெனவெம்மையெய்தினார். (௨௩)

நீட்டியநாவினர்நிலத்திற்றீண்டுதோ
றூட்டியவெம்மையாலுலையுங்காலினர்
காட்டினுங்காய்ந்துதங்காயந்தீதலால்
சூட்டகன்மேலெழுபொரியிற்றுள்ளினார். (௨௪)

வானரர் பிலவழியடைதல்.

ஒதுங்கலாநிழலினைக்காண்கிலாதுயிர்
பிதுங்கலாமுடலினர்முடிவில் † பீழையார்
பதங்கமுடப்பருகிடப்பதைக்கின்றார்பல
விதங்களாநெடும்பிலவழியின்மேவினார். (௨௫)

பிலத்தினுட் புகுதல்.

மீச்செலவரிதினிவிளியினல்லது
தீச்செலவொழியவுந்தடுக்குந்திண்பில

* என்பின்பல்லுயிர்-எலும்பற்ற பலவகைக்கீடமாதியவுயிர். கீடம்-புழு.

† பீழையார்-துன்பத்தினார்.

வாய்ச்செலனன்றெனமனத்தினெண்ணினோர்
போய்ச்சிலவறிதுமென்றதனிற்போயினோர். (உசு)

பிலத்தினுட் புரைக்குட்புகுதல்.

அக்கணத்தப்பிலத்தகணிமெய்தினோர்
திக்கினொடுலகுறச்செறிந்ததேங்கிருள்
எக்கியகதிரவற்கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர்புரைபுக்கெய்தினோர். (உஎ)

இருட்டினால் மூச்சுமூட்டுதல்.

எழுகிலர்காலெடுத்தேகுமெண்ணிலர்
வழியுளதாமெனுமுணர்வுமாறினோர்
இழுகியநெய்யெனுமிருட்பிழம்பினுண்
முழுகியமெய்யரா * யுயிர்ப்புமுட்டினோர். (உஅ)

வானரர் அநுமனைத் தம்மைக்காக்க வேண்டுதல்.

நின்றனர்செய்வதோர்நிலைமையோர்கலர்
பொன்றினராமெனப்பொருமுபுந்தியர்
வன்றிறன்மாருதிவல்லையோவெமை
இன்றிதுகாக்கவென்றிரந்துகூறினோர். (உகூ)

அநுமான் தன்வாலை வானரரைப்பிடிக்கச்செய்து கையாற்
தடவிப் போதல்.

உய்வுறுத்துவென்மனமுலையிருழின்வால்
மெய்யுறப்பற்றுதிர்விடுகிலீரென
ஐயனக்கணத்தினிலகலுநீணெறி
கையினிற்றடவிவெங்காலினேகினான். (ஙo)

பன்னிரண்டியோசனைபடர்ந்தமெய்யினன்
பின்னிரண்டனையகுண்டலங்கள்வில்விடத்
துன்னிருடொலைந்திடத் † துரிதத்தேகினான்
பொன்னெடுங்கிரிகள்போற்பொலிந்ததோளினான். (ஙக)

பிலத்துளொரு நகரங்காணுதல்.

கண்டனர் † கடிநகர்கமலத்தோண்கதிர்
மண்டலமறைந்துறைந்தனையமாண்பது
விண்டலநாணுறவிளங்குகின்றது
புண்டரிகத்தவள்வதனம்போன்றது. (ஙஉ)

---

* உயிர்ப்பு-சுவாசம்.

† கடி-ஒளி.

இதுமுதல்ஐந்துபாடல் பிலநகர்வருணனை.

கற்பகக்கானதுகமலக்காடது
பொற்பெருங்கோபுரப் * புரிசைபுக்கது
அற்புதமமரருமெய்தலாவது
சிற்பியாமயன்மனம்வருந்திச்செய்தது. (நடந)

இந்திரநகரமுமிணையிலாதது
மந்திரமணியினிற்பொன்னின்மண்ணினின்
அந்தரத்தெழுசுடரவையின்றாயினும்
உந்தருமிருளறத்தொளிர்கிற்பது. (நடச)

புவிபுகழ்சென்னிபேரமலன்றேள்புகழ்
கவிகடமனையெனக்கனகராசியும்
சவியுடைத்துகமென்சாந்துமாலையும்
அவிரிழைக்குப்பையுமளவிலாதது. (நடரு)

பயில்குரற்கிண்கிணிபதத்தபாவையர்
இயல்புடைமைந்தர்க † ளியக்கிலாமையால்
துயிலவுநோக்கவுந்துணையதன்றியும்
உயிரிலாவோவியமென்னவொப்பது. (நடசு)

அமிழ்துலையினியையடுத்தவுண்டியும்
தமிழ்நிகர்நறவமுந்தனித்தண்டேறலும்
இமிழ்கனிப்பிறக்கமும்பிறவுமின்னன
கமழ்வுறத்தோன்றியகணக்கில்கொட்பது. (நடஎ)

(வே று.)

இலங்கையிராவணநகரமென வானரர் கருதிச்செல்லுதல்.

கன்னிநெடுமாநகரமன்னதெதிர்கண்டார்
இந்நகரமாயிகலிராவணனதூரென்
றுன்னியுரையாடினருவந்தனர்வியந்தார்
பொன்னினெடுவாயிலதனூடினிதுபுக்கார். (நடஅ)

அந்நகரினுள் மனிதர்முதலிய எவ்வுயிருமில்லாமைகாணுதல்.

புக்கநகரத்தினிதுநாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலைவானுலகின்வையத்
தொக்கவுறைவோருருவமோவியமலான்மற்
றெக்குறியினுள்ளவுமெதிர்ந்திலர்திரிந்தார். (நடக)

* புரிசை-மதில்.
† இயக்கிலாமையால்-சஞ்சாரமின்மையால்.

வாவியுளபொய்கையுளவாசமணநாறும்
காவுமுளகாவிவிழியார்மொழிகளென்னக்
கூவுபிளமென்குயில்கள்பூவைகிளிகோலத்
தூவிமடவன்னமுளதோகையர்களில்லை. (௪௦)

அந்நகரினைமாயாசாலமோ அல்லது சுவர்க்கமோவென அவர்நினைதல்.

ஆயநகரத்தினியல்புள்ளுறவறிந்தார்
மாயைகொலெனக்கருதிமற்றதினையுற்றார்
தீயபிலனுட்பிறவிசென்றவிதுவொன்றோ
தூயதுதுறக்கமெனநெஞ்சுதுணிவுற்றார். (௪௧)

என்செய்வதென வாநரர்மயங்குதல்.

இறந்திலமிதற்குரியதெண்ணியிலமேது
மறந்தில * மயிர்ப்பினொடிமைப்புளமயக்கம்
பிறந்தவர்செயற்குரியசெய்தல்பிழையின்றால்
திறந்தெரிவதென்னெனவிசைத்தனர்திகைத்தார். (௪௨)

சாம்பன் இது இராவணனமைத்த தந்திரமெனல்.

சாம்பனவனென்றுரைசெய்வானெழுசலத்தால்
காம்பனையதோளியையொளித்தபடுகள்வன்
நாம்புகவமைத்தபொறிநன்றுமுடிவின்றால்
ஏம்பலினிமேலவிதியான்முடியுமென்றான். (௪௩)

அனுமன் சீற்றங்கொண்டுரைத்தல்.

இன்றுபிலனீதிடையினேறரிதெனிற்பார்
தின்றுசகரர்க்கதிகமாகிநனிசேறும்
அன்றதெனின்வஞ்சனையரக்கரையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலெனமாருதிகொதித்தான். (௪௪)

அந்நகருள் சடையோடுகூடிய மாதொருத்தி இருக்ககாண்டல்.

மற்றவருமற்றதுமனக்கொளவலித்தார்
உற்றனர்புரத்திடையவ்வொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுருநண்ணியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடையினாளையெதிர்கண்டார். (௪௫)

அவள்நாசிநுனி விழியுடையளாயிருத்தல்.

† மருங்கலசவற்கலைவரிந்துவரிவாளம்
பொருங்கலசமொக்குமுலைமாசுபுடைபூசிப்
பெருங்கலைமதித்திருமுகத்தள்பிறழ்செங்கேழ்
கருங்கயல்களிற்பிறழ்கண்மூக்கினுதிகாண. (௪௬)

---

* அயிர்ப்பினொடு-சந்தேகத்துடன்.

† மருங்கு-இடை-அலச-வருந்த-வற்கலை-மரவுரி-வரிந்து-கட்டி.

அவள் திருப்பின்றிறமுரைத்தல்.

தோரணையவல்குல்செறிதிண்கதலிசெப்பும்
ஊருவினொடொப்புறவொடுக்கியுறவொல்கும்
நேரிடைசலிப்பறநிறுத்திநிமிர்கொங்கைப்
பாரமுளொடுக்குறவுயிர்ப்பிடைபரிப்ப. (சஎ)

அவள்கரங்கள் தொடையிற் பொருந்தியிருத்தலுரைத்தல்.

தாமரைமலர்க்குவமைசால்புறுதளிர்க்கைப்
பூமருவுபொற்செறிகுறங்கிடைபொருந்தக்
காமமுதலுற்றபகைகாறளரவாசை
நாமமறியப்புலனுநல்லறிவுபுல்க. (சஅ)

அவள்விழிகளில் கருணையிருக்கக் காண்டல்.

நெறிந்துநிமிர்கற்றைநிறையோதிநெடுநீலம்
செறிந்தசடையுற்றதுதலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றறமனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணைகண்வழிபிறங்க. (சகூ)

அவளைச் சீதையென வானரர் கருதல்.

இருந்தனளிருந்தவளையெய்தினரிறைஞ்சா
அருந்ததியெனத்தகையசீதையவளாகப்
பரிந்தனர்பதைத்தனர்பணித்தகுறிபண்பிற்
றெரிந்துணர்திமற்றிவள்கொறேவியெனலோடும். (ருO)

சங்குமணி முத்துமணியானல் இவளுஞ் சனகியாகலாமெனல்.

எக்குறியொடெக்குணமெடுத்திவணுரைக்கேன்
இக்குறியுடைக்கொடியிராமன்மனையாளோ
* அக்குவடமுத்தமணியாரமதினேர்நின்
றொக்குமெனினொக்குமெனமாருதியுரைத்தான். (ருக)

அப்பெண் இவரைநீவிர் யாவரெனல்.

அன்னபொழுதின்கணவணங்குமறிவுற்றாள்
முன்னனையர்சேறன்முறையன்றெனமுனிந்தாள்
துன்னரியபொன்னகரியின்னுறைவிரல்லீர்
என்னவரவியாவருரைசெய்மெனவிசைத்தாள். (ருஉ)

வானரர்தாம் வந்தசெயலுரைத்தல்.

வேதனையரக்கரொருமாயைவிளைவித்தார்
சீதையையொளித்தனர்மறைத்த † புரைதேர்வுற்

* அக்கினமணி-சங்குமணி, கவடியுமாம்.
† புரை-வீடு, இடமுமாம்,

றேதமிலறத்துறைநிறுத்தியவிராமன்
றாதருலகிற்றிரிதுமென்னுமுரைசொன்னார். (௫௩)

அதுகேட்டு மகிழ்ந்தவவள் நும்வரவு நல்வரவாகவென்றல்.

என்றலுமிருந்தவளெழுந்தனளிரங்கிக்
குன்றனையதாயதொருபேருவகைகொண்டாள்
நன்றுவரவாகநடனம்புரிவலென்றா
நின்றனணெடுங்கணிணைநீர்கலுழிகொள்ள. (௫௪)

அவள்இராமன் எவ்விடத்தானெனலும் மாருதிகூறுதலும்.

எவ்வுழையிருந்தனனிராமனென * யாணர்ச்
செவ்வுழைநெடுங்கணவள்செப்பிடுதலோடும்
அவ்வுழைநிகழ்ந்ததனையாதியினொடந்தம்
வெவ்விழைவில்சிந்தைநெடுமாருதிவிரித்தான். (௫௫)

பாத்யாதியளித் துபசரித்தல்.

கேட்டவளுமென்னுடையகேடிறவமின்னே
காட்டியதுவீடெனவிரும்பிநனிகாணீர்
ஆட்டியமிழ்தன்னசுவையின்னடிசிலன்போ
டூட்டிமனனுள்குளிரவின்னுரையுரைத்தாள். (௫௬)

அநுமனவளைவணங்கி இந்நகர்த்தலைவர்யாவர் நின்பெயர்யாது
எனவினவுதல்.

மாருதியுமற்றவண்மலர்ச்சரண்வணங்கி
யாரிநகருக்கிறைவர்யாதுநி † னியற்பேர்
பார்புகழ்தவத்தினைப்பணித்தருளுகென்றான்
சோர்குழலுமற்றவனொடுற்றபடிசொன்னாள். (௫௭)

அயன் மயனுக்காக அமைத்ததிந்நகரமெனல்.

நூன்முகநுனித்தநெறிநூறுவரனொய்தாய்
மேன்முகநிமிர்த்துவெயில்காலொடுவிழுங்கா
‡ மான்முகமுகத்தவன்மயன்செய்ததவத்தால்
நான்முகனளித்துளதிந்நகரநல்லோய். (௫௮)

அரம்பையருளொருத்தியை அவன்விருப்பத்திற் கிணங்கியானிவண்
சேர்த்தேனெனல்.

அன்னதிதுதானவனரம்பையருளாங்கோர்
நன்னுதலினுண்முலைநயந்தனனநல்லாள்

---

* யாணர்-அழகிய. † இயற்பெயர்-நாமகரணகாலத்திட்டு வழங்கும் பெயர் அல்லது வழங்கும் பெயருமாம். ‡ மான்முகமுகத்தவன்-மானின் முகம்போலுமுகமுடையவன்.

என்னுயிரனுளவளையானவனிரப்பப்
பொன்னுலகினின்றியல்பிலத்திடைபுணர்த்தேன். (௫௧)

அவனுமவளுநானு மிங்கிருந்தேமெனல்.

புணர்ந்தவளுமன்னவனுமன்றில்விழைபோகத்
துணர்ந்திலர்நெடும்பகலிம்மாநகருறைந்தார்
கணங்குழையினுளொடுயர்காதலொருவாதுற்
றிணங்கிவருபாசமுடையேனுடனிருந்தேன். (௫0)

அவளைத்தேடிக்கண்ட விந்திரன்மயனைக் கொன்றரம்பையைச்
சிறினனெனல்.

இருந்துபலநாள்கழியுமெல்லையினின்வல்லோய்
திருந்திழையைநாடிவருதேவரிறைசீறிப்
பெருந்திறலினனையுயிருண்டுபிழையென்றம்
முருந்துநகர்மூரனகையாளையுமுனிந்தான். (௫௧)

இந்திரனிந்நகருக்கென்னைக் காவலாக்கினனெனல்.

முனிந்தவளையுற்றசெயன்முற்றுமொழிகென்னக்
கனிந்துதுவர்வாயவளுமென்னையிவள் * கண்ணுல்
வனைந்துமுடிவுற்றதெனமன்னனுமிதெல்லாம்
நினைந்திவணிருத்திநகர்காவலினனென்றான். (௫௨)

இந்திரனிந்நகரவழியை யிருளாமாறு சபித்தானெனல்.

என்றலும்வணங்கியிருளேகுநெறியெந்நாள்
ஒன்றுரையெனக்குமுடிவென்றுரைசெயாமுன்
வன்திறலவானரமிராமனருள்வந்தால்
அன்றுமுடிவாகுமிடரென்றவனகன்றான். (௫௩)

யான் உம்மைக்காணுமாறு தவஞ்செய்தேனெனல்.

உண்ணவுளபூசவுளசூடவுளவொன்றோ
வண்ணமணியாடையுளமற்றுமுளபெற்றேன்
அண்ணலவைவிட்டுமையடைந்திடுதல்வேண்டி
எண்ணரியபல்பகலிருந்தவமிழைத்தேன். (௫௪)

சுவர்க்கட் புகமார்க்க முளதேல்நினையுங்களெனல்.

ஐயிருபதோசனையமைந்தபிலமையா
மெய்யுளதுமேலுலகமேறுநெறிகாணேன்
உய்யுநெறியுண்டுதவுவீரெனினுபாயம்
செய்யும்வகைசிந்தையினினைத்திர்சிறிதென்றாள். (௫௫)

* கண்ணுல்-நினைவால்.

அநுமானவனைவணங்கி நினக்கிச்சுவர்க்க மளிப்பலெனல்.

* அன்னதுசுயம்பிரபைகூறவநுமானும்
மன்னுபுலன்வென்றுவருமாதவண்மலர்த்தாள்
சென்னியின்வணங்கிநனிவானவர்கள்சேரும்
பொன்னுலகமீகுவனினக்கெனல்புகன்றான். (௬௬)

வானரர் அநுமானைப்பிலத்தினீங்க வழிதேடெனல்.

முழைத்தலையிருட்கடலின்மூழ்கிமுடிவேமைப்
பிழைத் † துயிருயிர்க்கவருள்செய்தபெரியோனே
இழைத்திசெயலாயவினையென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியுமன்னதுவலிப்பான். (௬௭)

அஞ்சலிரென்றனுமன் விசுவரூபங் கொள்ளுதல்.

நடுங்கன்மினெனுஞ்சொலைநவின்றுநகைநாற
மடங்கலினெழுந்துமழையேறரியவானத்
தொடுங்கலில்பிலந்தலைதிறந்துலகொடொன்ற
நெடுங்கைகள்பெயர்த்துநெடுவானுறநிமிர்ந்தான். (௬௮)

அநுமன் ஆதிவராகத்தை யொத்தானெனல்.

எருத்துயர்சுடர்ப்புயமிரண்டுமெயிறென்ன
மருத்துமக ‡ னப்படியிடந்துறவளர்ந்தான்
கருத்துநிமிர்கண்ணினெதிர்கண்டவர்கலங்க
உருத்துலகெடுத்த § கருமாவினையுமொத்தான். (௬௯)

அநுமனுயர்ந்து வாமனன்சேவடியை யொத்தானெனல்.

மாவடிவுடைக்கமலநான்முகன்வகுக்கும்
தூவடிவுடைச்சுடர்கொள்விண்டலைதொளைக்கும்
மூவடிகுறித்துமுறையீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில்சேவடிபுரைந்தான். (௭௦)

பிலத்தின்மேற்றட்டை அநுமன்கடலிலெறிந்து கர்ச்சித்தானெனல்.

எழிருபதோசனையிடந்துபடியின்மேல்
$ ஊழுறவெழுந்ததனையும்பருமொடுங்கப்
பாழிநெடுவன்பிலனுணின்றுபடர்மேல்பால்
ஆழியினெறிந்தநுமன்மேகமெனவார்த்தான். (௭௧)

அனைவரும் பிலத்தினின்றுட் வெளிப்படுதல்.

இன்றுமுளமேல்கடலியக்கில்பிலநீவா
நின்றுநிலைபெற்றுளதுநீணுதலியோடும்

* அன்னது சுயம்பிரபைகூற என்றும் பாடம். † உயிருயிர்க்க-உயிருண்டாக. ‡ அப்படியிடந்துற-அப்பூமிபிளக்க. § கருமா-பன்றிப்பொதுப்பெயர். $ ஊழுற-நேராக.

குன்றுபுரைதோளவரெழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடைநன்னுதலிபோனாள். (எஉ)

பிலத்துளிருந்தபெண்ணின்பெயர் சுயம்பிரபையெனல்.

* மேருவரைமாமுலையண்மென்சொலினள்விஞ்சு
மாருதியினைப்பலவுவந்துமகிழ்வுற்றே
ஏருறுசுயம்பிரபையேமைநெறியெய்தத்
தாருவளர்பொற்றலனிடைக்கடிதுசார்ந்தாள். (எங)

வாநரர் சக்கரதீர்த்தக்கரையையடைதல்.

மாருதிவலித்தகைமைபேசி † மறவோரும்
பாரிடைநடந்துபகலெல்லைபடரப்போய்
நீருடையபொய்கையினினீள்கரையடைந்தார்
தேருடைநெடுந்தகையுமேலைமலைசென்றான். (எச)

கங-வது, பிலநீங்குபடலம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௯0௧.

---

## கச-வது, ஆறுசெல்படலம்.

வாநரருறங்குங்காலத்தில் அரக்கன்வருதல்.

கண்டார்பொய்கைக்கண்ணகனன்னீர்கையார
வுண்டார்தேனுமொண்கனிகாயுமொருசூழல்
கொண்டாரன்றேவின்றுயில்கொண்டகுறியுன்னித்
தண்டார்வென்றித்தானவன்வந்தான்றகவில்லான். (க)

அவ்வரக்கனுருவத் திறமாதியவுரைத்தல்.

மலையேபோல்வான்மால்கடலொப்பான்மறமுற்றக்
கொலையேயொப்பான்கூற்றைநிகர்ப்பான்கொடுமைக்கோர்
நிலையேபோல்வானீர்மையிலாதானிமிர்திங்கட்
கலையேபோலுங்காலெயிற்றான்கனல்கண்ணான். (உ)

வேறு.

‡ கருவிமாமழைகைகடாவிமீ
துருவமேனிசென்றுலவியொற்றலால்

---

* இந்த எங-ம் பாடல் பலபிரதிகளிற் காணப்படவில்லை.
† மறவோர்-வானரவீரர்.
‡ கருவிமாமழை - உலகபாலனத்திற் குபகரணமாகவுள்ள சிறந்த மேகம்.

பொருவின்மாரிமேலொழுகுபொற்பினல்
அருவிபாய்தருங்குன்றமேயனன். (௩)

வானவர்க்குமற்றவர்வலிக்குநேர்
தானவர்க்குமேயரியதன்மையான்
ஆனவக்கலனவனெடாடவே
றேனவர்க்குமொன்றெண்ணவொண்ணுமோ. (௪)

அரக்கன்வாநரரைச்சமீபித்தல்.

பிறங்குபங்கியான்பெயரும்பெட்பினிற்
கறங்குபோன்றுளான்பியையுங்கையினன்
அறங்கொள்சிந்தையார்நெறிசெலாய்வினல்
உறங்குவாரைவந்தொல்லையெய்தினன். (௫)

அரக்கன் என்குளத்தருகிலெய்தினரியாவரென அங்கதன்
மார்பிலறைதல்.

பொய்கையென்னதென்றணைந்தும்புலியோர்
எய்தினர்கள்யாரிதுவெனவென
ஐயனங்கதனலங்கன்மார்பினிற்
கையின்மோதினன்காலனேயனன். (௬)

அங்கதனவனை இராவணனெனக்கருதி அடித்தலுமவனிறத்தலுங்கூறல்.

மற்றிமைந்தனுமுறக்கமாறினன்
இற்றிவன்கொலாமிலங்கைவேந்தனு
எற்றினனேரெற்றினனவன்
முற்றினனிகற்காதிமூர்த்தியான். (௭)

வாநரகுறக்க நீங்குதல்.

இடியுண்டாங்கணேரோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந்தலறிவீழ்தலும்
தொடியின்றோள்விசைத்தெழுந்துசுற்றினார்
பிடியுண்டாரெனத்துயிலும்பெற்றியார். (௮)

அநுமனங்கதனை இவன்யாவனெனலு மவனறியென்னலும்.

யார்கொலாமிவனிழைத்ததென்னெனத்
தாரைசேயினைத்தனிவினையினன்
* மாருதேயன்மற்றவனும்வாய்மைசால்
ஆரியாதெரிந்தறிகிலேனென்றான். (௯)

சாம்பனவன்பெயர் துமிரனெனல்.

யானிவன்றனைத்தெரியவெண்ணினேன்
தானிவந்தவேற்றுமிரனென்னும்பே

* மாருதேயன்-வாயுகுமாரன்.

ராணிவ்வாழ்புனற்பொய்கையாளுமோர்
தானவன்னெனச்சாம்பன்சாற்றினன். (௧0)

பின்னருறங்கா திருத்தல்.

வேறுமெய்துவாருளர்கொலாமெனத்
தேறியின்றுயிற்செலவுநீர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க்கடவுள்வேலைவாய்
* நாறநாண்மலர்ப்பெண்ணைநாடுவார். (௧௧)

வாநரர் பெண்ணையையடைதல்.

† புண்ணைவெம்முலைபுளினமேய்தடத்
துண்ணவாம்பலினமுதமூறுவாய்
வண்ணவொண்ணகைத்தரளவாண்முகப்
பெண்ணைநண்ணினார்பெண்ணைநாடுவார். (௧உ)

பெண்ணையிற் சீதையைத்தேடுதல்.

துறையுந்தோகைநின்றாடுசூழலும்
குறையுஞ்சோலையுங்குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளுபூந்தடமுந்தெண்பளிக்
கறையுந்தேடினாறிவின்கோடியார். (௧௩)

அணிகொழித்துவந்தெவருமாடினார்
பிணிகொழித்தவெம்பிறவிவேரின்வன்
றுணிகொழித்தருஞ்சுழிகடோறுநன்
மணிகொழிப்பதன்றுறையின்வைகினார். (௧௪)

வாநரர் தசநவநாடடைதல்.

ஆடு ‡ பெண்ணைநீராறுமேறினார்
காடுநண்ணினார்மலைகடந்துளார்
வீடுநண்ணினாரென்னவீச § நீர்
$ நாடுநண்ணினார்நாடுநண்ணினார். (௧௫)

வாநரர் விதர்ப்பநாடு புகுதல்.

தசநவப்பெயர்ச் ¶ சரளசண்பகத்
தசநவப்புலத்தகணிநாடொரீஇ
உசநவப்பெயர்க்கவியுதித்தபேர்
இசைவிதர்ப்பநாடெளிதினெய்தினார். (௧௬)

---

* நாறநாள்-உதிக்குங்காலத்தில்.
† புண்ணை-ஒப்பின்மையால் சக்கரவாகப்பறவைகள் வருந்துகின்ற.
‡ பெண்ணை-உத்தரபினாகி.
§ நீர்நாடு-தசநவமென்னுநாடு.
$ நாடுநண்ணினார்-தேடுதலுக்காக வந்தவர்கள்.
¶ சரளசண்பகம்-வரிசையாகிய சண்பகமரங்களுடன்.

விதர்ப்பநாட்டில் முனிவர்வேடங்கொண்டு வாநரர் சீதையை நாடுதல்.

* வைதருப்பமண்டலனில்வந்துபுக்
கெய்தருப்பமத்தனையுமெய்தினார்
டெய்தருப்பைநூல்பிறழுமேனியார்
செய்தவத்துளார்வடிவிற்றேடினார். (கஎ)

வாநரர் தண்டகாரணியம் எய்துதல்.

அன்னதன்மையாலறிஞர்நாடியச்
செந்நெல்வேலிசூழ்திருநன்றொடாரிந்
தன்னையெண்ணுமத்தகைபுகுந்துளார்
துன்னுதண்டகங்கடிதுதுன்னினார். (கஅ)

சீதையை தண்டகத்திற்றேடிக்காணாது முண்டகத்துறை யெய்துதல்.

உண்டகத்துளாருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங்காலனாயினார்
தண்டகத்தையுந்தடவியேகினார்
† முண்டகத்துறைகடிதுமுற்றினார். (ககூ)

முண்டகத்துறைத்தன்மை.

அள்ளனீரெலாமமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக்கலவைகோதையிற்
கள்ளுநாறலிற்கமலவேலிவாழ்
புள்ளுமீனுமும்புலவுதீர்தலால். (உ0)

குஞ்சரங்குடைந்தொழுகுகொட்பதால்
விஞ்சைமன்னர்பால்விரகமங்கைமார்
நஞ்சுவீணையினடத்துபாடலான்
அஞ்சுவார்கணீரருவியாறரோ. (உக)

கமுகவார்நெடுங்கனகவூசலிற்
குமுதவாயினார்குயிலையேசுவார்
சமுகவாளியுந்தனுவும்வாண்முகத்
தமுதபாடலார்மருவியாடுவார். (உஉ)

இனையவாயவொண்டுறையையெய்தினார்
நினையும்வேலைவாய்நெடிதுதேடுவார்
வினையவார்குழற்றிருவைமேவலார்
புனையுநோயினார்கடிதுபோயினார். (உங)

---

* வைதருப்பம்-விதர்ப்பசம்பந்தம்.
† முண்டகத்துறை-ஒருதீர்த்தம்; சிலர் கடற்றுறை என்ப.

வானரர் பாண்டுகிரியெய்தல்.

நீண்டமேனியானெடியதாளினின்
றீண்டுகங்கைவந்திழிவதென்னலாய்ப்
பாண்டுவெம்மலைபடர்விசும்பினைத்
தீண்டுகின்றதண்சிகரமெய்தினார். (உ௪)

பாண்டுகிரித்தன்மை.

இருளுறத்துமீதெழுந்ததெண்ணிலா
மருளுறத்துவண்சுடர்வழங்கலால்
அருளுறத்திலாவடலரக்கன்மேல்
உருளுறத்ததிண்கயிலையொத்ததால். (உ௫)

வேறு.

சீதையையங்குத் தேடிக்காணாது வருந்துதல்.

விண்ணுறநிவந்தசோதிவெள்ளியகுன்றமேவிக்
கண்ணுறநோக்கலுற்றார்களியுறக்கனிந்தகாமர்ப்
பண்ணுறுகிளவிச்செவ்வாய்ப்படையுறநோக்கினாளை
எண்ணுறுதிறத்துங்காணாரிடருறுமனத்தரெய்த்தார். (உ௬)

வானரர் கோதாவரியடைதல்.

ஊதைபோல்விசையின்வெங்கணுழுவைபோல்வயவராங்கல்
ஆதியையகன்றுசெல்வாரரக்கனால்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல்வழிஇவந்துபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தகோதாவிரியினைக்குறுகிச்சென்றார். (உ௭)

கோதாவரித்திறம்.

எழுகின்றதிரையிற்றாகியிழிகின்றமணிநீர்யாறு
தொழுகின்றசனகன்வேள்விதொடங்கியசுருதிச்சொல்லால்
உழுகின்றபொழுதினீன்றவொருமகட்கிரங்கிஞாலம்
அழுகின்றகலுழிமாரியாமெனப்பொலிந்ததன்றே. (உ௮)

ஆசில்பேருலகிற்காண்போ * ரளவைநூலெனலுமாகிக்
காசொடுகனகந்தூவிக்கலினுறக்கிடந்தகான்யா
றேசில்போரரக்கன்மார்பினிடைபறித்தெருவைவேந்தன்
வீசியவடகமீக்கோளீதெனவிளங்கிற்றன்றே. (உ௯)

வானரர் சுவணகத்துறையெய்துதல்.

அந்நதிமுழுதுநாடியாய்வளைமயிலையாண்டும்
† சந்நிதியுற்றிலாதார்நெடிதுபின்றவிரச்சென்றார்
இன்னதீதிலாததீதென்றியாவையுமெண்ணுங்கோளார்
சொன்னதீவினைகடீர்க்குஞ்சுவணகத்துறையிற்புக்கார். (௩0)

* அளவைநூல்-ஏற்றநூல் அளக்குநூலுமாம்.
† சந்நிதி-சமுகம்.

வானரர் குலிந்தங்கடந்து போதல்.

ஈரும்பொடுதேனும்வண்டுமன்னமுந்துவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெந்நெற்காடுங்கமலவாவிகளுமல்கிப்
பெரும்புனன்மருதஞ்சூழ்ந்தகிடக்கைபின்கிடக்கச்சென்றார்
குரும்பைநீரமுதச்சோலைக்குலிந்தமும்புறத்துக்கொண்டார். (௬௧)

அருந்ததிமலையை வானரரடைதல்.

கொங்கணமேழுநீங்கிக்குடகடற்றரளக்குப்பைச்
சங்கணிபானனெய்தறண்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ்சிமயநீள்கோட்டுத்தேவர்
அங்கைகள்கூப்பநின்றவருந்ததிக்கருகரானார். (௬௨)

வானரர் வேங்கடகிரியெய்துதல்.

அருந்ததிக்கருகுசென்றாண் * டழகினுக்கழகுசெய்தாள்
இருந்ததிக்குணர்ந்திலாதாரேகினாரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறுமாகதப்பெருங்குன்றெய்தி
இருந்ததிற்நீர்ந்துசென்றார்வேங்கடத்திறுத்தவெல்லை. (௬௩)

முனிவருமறைவலோருமுந்தைநாட்சிந்தைமூண்ட
வினைவருநெறியைமாற்றுமெய்யுணர்வோரும்விண்மேனோர்
மனைவருமமரர்மாதர்யாவருஞ்சித்தரென்போர்
அனைவருமருவிநன்னீர்நாளும்வந்தாடுகின்றார். (௬௪)

வேறு.

பெய்தவைம்பொறியும்பெருங்காமமும்
வைதவெஞ்சொலுமங்கையர்வாட்கணின்
எய்தவஞ்சகவாளியும்வென்றுநற்
செய்தவம்பலசெய்குநர்தேவரால். (௬௫)

வலங்கொ † ணேமிமழைநிறவானவன்
அலங்குதாளிணைதாங்கியவம்மலை
விலங்கும்வீடுறுகின்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட்கனையதுபொய்க்குமோ. (௬௬)

ஆயகுன்றினையெய்தியருந்தவம்
மேயசெல்வரைமேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனைநாளும்வணங்கிய
தூயநற்றவர்பாதங்கள்சூடினார். (௬௭)

* அழகினுக்கழகுசெய்தாள்-சீதை.

† நேமி-சக்கரத்தினையுடைய.

17

### வானரர் வேங்கடத்திற் சீதையைக்காணாது தொண்டைநாடு புகுவான் பார்ப்பனவேடமெய்துதல்.

சூடியாண்டச்சுரிகுழற்றோகையைத்
தேடிவார்புனற்றெண்டிரைத்தொண்டைநன்
னாடுநண்ணுகின்றார்மறைநாவலர்
வேடமேயினர்வேண்டுருமேவுவார். (௩௮)

### தொண்டைநாட்டின் றன்மை.

குன்றுசூழ்ந்தகடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்தபடப்பையுமொய்புனல்
சென்றுசூழ்ந்துகிடக்கையுந்தெண்டிரை
மன்றுசூழ்ந்தபரப்புமருங்கெலாம். (௩௯)

சூலடிப்பலவின்சுளைதூங்குதேன்
கோலடிப்பவெரீஇக்குலமள்ளரேர்ச்
சாலடித்தருஞ்சாலியின்வெண்முளை
தோலடிக்கிளையன்னந்துவைப்பன. (௪0)

செருகுறுங்கணிற்றேங்குவளைக்குலம்
அருகுறங்கும்வயன்மருங்காய்ச்சியர்
இருகுறங்குபிறங்கியவாழையிற்
குருகுறங்குங்குயிலுந்துயிலுமால். (௪௧)

தெருவினார்ப்புறும்பல்லியந்தேர்மயில்
கருவிமாமழையென்றுகளிப்புறா
பொருநர்தண்ணுமைக்கன்னமும்போகல
மருவினார்க்குமயக்கமுண்டாங்கொலோ. (௪௨)

* தேரைவான்றலைத்தெங்கிளம்பாளையை
நாரையென்றிளங்கெண்டைநடுங்குவ
தாரைவன்றலைத்தண்ணிளவாம்பலைச்
சேரையென்றுபுலம்புவதேரையே. (௪௩)

நள்ளிவாங்குகடையிளநவ்வியர்
வெள்ளிவால்வளைவீசியவெண்மணி
புள்ளிநாரைசினைபொரியாதவென்
றுள்ளியாமைமுதுகினுடைப்பயால். (௪௪)

சேட்டிளங்கடுவன்சிறுபுன்கையிற்
கோட்டதேம்பலவின்கனிக்கூன்சுளை

---

* தேரைவன்றலை-முற்றி அழகிய வலிய தலையையுடைய.

தோட்டமைந்தபொதும்பரிற்றூங்குதேன்
ஈட்டமென்னச்சென்றீயினமொய்ப்பன. (சரு)

செல்வரென்றும்வடகலைதென்றமிழ்ச்
சொல்வரம்பினரென்றுஞ்சுமடரைக்
கொல்வரென்றுங்கொடுப்பனரென்றுமவ்
* வில்வரம்பினர்க்கீதேனுமீட்டதே. (சசு)

வாநரர் சோழநாடுபுகுதல்.

அன்னதண்டகநாடுகடந்தகன்
பொன்னிநாடுபொருவிலரெய்தினர்
செந்நெலுங்கரும்புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யுநெறியரிதேகுவார். (சஎ)

சோழநாட்டின் றன்மைகூறல்.

கொடிறுதாங்கியவாய்க்குழூஉநாரைவாழ்
தடறுதாங்கியகூனிளந்தாழையின்
மிடறுதாங்கும்விருப்புடைத்தீங்கனி
இடறுவார்நறுந்தேனினிழுக்குவார். (சஅ)

குழுவுமீன்வளர் † குட்டமெனக்கொளா
எழுவுபாடலிமிழ் ‡ கருப்பேந்திரத்
தொழுகுசாறகன்கூனையினூழ்முறை
குழுகிநீர்க்கருங்காக்கைமுளைக்குமே. (சகூ)

பூநெருங்கியபுள்ளுறுசோலைகள்
தேனெருங்குசொரிதலிற்றேர்விலை
மீனெருங்குறும்வெள்ளம்வெரீஇப்பல
வானரங்கண்மரங்களின்வைகுமால். (ருo)

தாறுநாறுவதாழைகடாழையின்
சோறுநாறுவதூங்குறுமாங்கனி
நாறுநாறுவநாறுவளர்க்குறும்
சேறுநாறுவசெங்கழுநீரரோ. (ருக)

வாநரர்தென்றமிழ் நாடெய்துதல்.

அனையபொன்னியகன்புனனாடொரீஇ
மனையின்மாட்சிகுலாமலைமண்டலம்
வினையினீங்கியபண்பினர்மேயினர்
இனியதென்றமிழ்நாடுசென்றெய்தினர். (ருஉ)

---

* வில்வரம்பிலிறைவனையேத்துவார் எனவும் பாடம்.

† குட்டமெனக்கொளா-குளமென்றுநினைத்து. ‡ கருப்பேந்திரம்-கரும்பாலை.

அத்திருத்தகுநாட்டினையண்டர்நா
டொத்திருக்குமென்றாலுரையொக்குமோ
எத்திறத்தினுமேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்துமுற்றலால். (ருரு)

தென்றமிழ்நாட்டினுஞ் சீதையைக்காணாது வருந்திச்செல்லுதல்.

என்றதென்றமிழ்நாட்டினையெங்கணும்
சென்றுநாடித்திரிந்துதிருந்தினார்
பொன்றுவாரிற்பொருந்தினர்போயினார்
துன்றலோதியைக்கண்டிலர்துன்பினார். (ருசு)

வன்றிசைக்களிறன்னமகேந்திரக்
குன்றிசைத்ததுவல்லையிற்கூடினார்
தென்றிசைக்கடற்சீகரமாருதம்
நின்றிசைக்குநெடுநெறிநீங்கினார். (ருஎ)

கச-வது, ஆறுசெல்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-கருக.

---

## †கரு-வது, சம்பாதிப்படலம்.

மழைத்தவிண்ணகமெனமுழங்கிவானுற
விழைத்தவெண்டிரைக்கரமெடுத்திலங்கையாள்
உழைத்தடங்கண்ணியென்றுரைத்திட்டுழின்வந்
தழைப்பதேகடுக்குமவ் * வாழிநோக்கினார். (க)

மற்றைவானரரு மகேந்திரமெய்தல்.

விரிந்துநீரெண்டிசைமேவிநாடினீர்
பொருந்துதிர்மகேந்திரத்தென்றுபோக்கிய
அருந்துணைக்கவிகளாமல்குசேனையும்
பெருந்திரைக்கடலெனப்பெயர்த்துங்கூடிற்றே. (உ)

யாவருமவ்வயினெளிதினெய்தினார்
பூவருபுரிகுழற்பொருவில்கற்புடைத்
தேவியைக்காண்கிலார்செய்வதோர்கிலார்
நாவுறக்குழறிடநவில்கின்றாரரோ. (ங)

---

* ஆழிநோக்கினார்-கடல்கண்டார்.
† சம்பாதி-ஜடாயுவின் அண்ணன்; நன்றாய்ப் பறப்பவன்.

அற்றதுாள்வரையவதியாட்சியும்
உற்றிலமிராகவனுயிரும்பொன்றுமால்
கொற்றவனுணேயுங்குறித்துநின்றனம்
இற்றதுநஞ்செயலினியென்றெண்ணினார். (ரு)

அருந்தவம்புரிதுமோவன்னதன்றெனின்
* மருந்தரு † நெடுங்கடுவுண்டுமாய்துமோ
திருந்தியதியாததுசெய்துதீர்துமென்
றிருந்தனர்தம்முயிர்க்கிறுதியெண்ணுவார். (௬)

கரைபொருகடலையற்கனகமால்வரை
நிரைதுவன்றியவெனநெடிதிருந்தவர்க்
குரைசெயும்பொருளுளதெனவுணர்த்தினன்
அரசிளங்கோளரியயருஞ்சிந்தையான். (௭)

நாடிநாங்கொணருதுநனினத்தாளேவான்
மூடியவுலகினைமுற்றுமுட்டியென்
றூடவர்திலகனுக்கன்பிறெனப்
‡ பாடவம்விளம்பினம்பழியின்மூழ்குவான். (௮)

செய்துமென்றமைந்ததுசெய்துதீர்ந்திலம்
நொய்துசென்றுற்றதுநுவலகிற்றிலம்
எய்தும்வந்தென்படோ § ரிறையுங்கண்டிலம்
உய்துமென்றுலிதோருரிமைத்தாகுமோ. (௯)

அங்கதனுயிர் விடுவேனெனல்.

எந்தையுமுனியுமெம்மிறையிராமனும்
சிந்தனைவருந்துமச்செய்கைகாண்குறேன்
$ நுந்துவெனுயிரினைநுணங்குகேள்வியீர்
புந்தியினன்னதுபுகல்விராமென்றான். (௧௦)

சாம்பன் மறுத்தல்.

விழுமியதுரைத்தனைவிசயம்வீற்றிருந்
தெழுவொடுமலையொடுமிகலுந்தோளினாய்
அழுதுமோவிருந்துநம்மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச்சாம்பன்சொல்லினான். (௧௧)

மீண்டினியொன்றுநாம்விளம்பமிக்கதென்
மாண்டுறுவதுநலமெனவலித்தனம்

* மருந்தரும்-பிரதிவிஷமான மருந்தற்ற.
† நெடுங்கடு-கொடியவிஷம்.
‡ பாடவம்-சாமர்த்தியம்.
§ இறையும்-சிறிதும்.
$ நுந்துவன்-விடுகின்றேன்.

ஆண்டகையரசிளங்குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க்குறுதிவேண்டுமால். (௧௧)

அங்கதன் நீவிரிறக்க யான்போதல் தகுமோவெனல்.

என்றவனுரைத்தலுமிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்தெனவளர்குவவுத்தோளினீர்
பொன்றிநீர்மடியயான்போவனேலது
நன்றதோவுலகமுநயக்கற்பாலதோ. (௧௨)

சான்றவர்பழியுரைக்கஞ்சித்தன்னுயிர்
போன்றவர்மடிதரப்போந்துளானெனை
ஆன்றபேருலகுளோரறைதன்முன்னம்யான்
வான்றொடர்குவெனெனமறித்துங்கூறுவான். (௧௩)

வேறு.

எல்லைநம்மிறுதியாய்க்குமெந்தைக்கும்யாவரேனும்
சொல்லவுங்கூடுங்கேட்டாற்றுஞ்சவுமடுக்குங்கண்ட
வில்லியுமிளையகோவும்வைதுதிண்ணமச்சொல்
மல்லனீரயோத்திபுக்கால்வாழ்வரோபரதன்மற்றோர். (௧௪)

பரதனும்பின்னுளோனும்பயந்தெடுத்தவருமூரும்
சரதமேமுடிவர்கெட்டேன்சனகியென்றுலகஞ்சாற்றும்
விரதமாதவத்தின்மிக்கவிளக்கினாலுலகத்தியார்க்கும்
கரைதெரிவிலாததுன்பம்விளைந்தவாவெனக்கலுழ்ந்தான். (௧௫)

பொருப்புறழ்வயிரத்திண்டோட்பொருசினத்தாளிபோல்வான்
* தரிப்பிலாதுரைத்தமாற்றந்தடுப்பருந்தகைத்ததாய
நெருப்பையேவிளைத்தபோலநெஞ்சமுமறுகக்கேட்டு
விருப்பினாலவனைநோக்கிவிளம்பினனெண்கின்வேந்தன். (௧௬)

வேறு.

சாம்பன் சமாதானமுரைத்தல்.

நீயுநின்றாதையுநீங்கநின்குலத்
தாயம்வந்தவர்க்கொருதநயரில்லையால்
ஆயதுகருதினமன்னதன்றெனின்
நாயகரிறுதியுநவிலற்பாலதோ. (௧௭)

ஏகுநீயவ்வழியெய்தியிவ்வழித்
தோகையைக்கண்டிலாவகையுஞ்சொல்லியென்

---

* தரிப்பிலாது-சகிக்கமாட்டாமல்.

சாகையுமுணர்த்துதிதவிர்திசோகம்போர்
வாகையாயென்றனன்வரம்பிலாற்றலான். (கஅ)

அநுமன் றம்மொழி சரியன்றெனல்.

அவனவையுரைத்தபினனுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொருபுடையிற்புக்கிலம்
கவனமாண்டவரெனக்கருத்திலாரெனத்
தவனவேகத்தினீர்சலித்திரோவென்றான். (ககூ)

பின்னருங்கூறுவான்பிலத்தில்வானத்தில்
பொன்வரைக்குடுமியிற்புறத்துளண்டத்தில்
நன்னுதறேவியைக்காண்குநாமெனிற்
சொன்னநாளவதியையிறைவன்சொல்லுமோ. (உ0)

நாடுதலேநலமின்னுநாடியத்
தோடலர்குழலிதன்றுயரிற்சென்றமர்
வீடியசடாயுவைப்போலவீடுதல்
பாடவமல்லது † பழியிற்றுமென்றான். (உக)

வானரரெதிரே சம்பாதிவருதல்.

என்றலுங்கேட்டனனெருவைவேந்தன்றன்
பின்றுணையாகியபிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொல்புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க்குறுகன்மேயினான். (உஉ)

முறையுடையெம்பியார்முடிந்தவாவெனாப்
பறையிடுநெஞ்சினன்பதைக்குமேனியன்
இறையுடைக்குலிசவேலெறிதலான்முனஞ்
சிறையறுமலையெனச்செல்லுஞ்செய்கையான். (உங)

மிடலுடையெம்பியைவீட்டும்வெஞ்சினப்
படையுளராயினார்பாரில்யாரென
உடலினைவழிந்துபோயுவரிநீருகக்
கடலினைப்புரையுறுமருவிக்கண்ணினான். (உச)

உழுங்கதிர்மணியணியுமிழுமின்னினான்
மழுங்கியநெடுங்கணின்வழங்குமாரியான்
புழுங்குவானழுங்கினான்புடவிமீதினின்
முழங்கிவந்திழிவதோர்முகிலும்போல்கின்றான். (உரு)

* சாகையும்-மரணத்தையும்.
† பழியிற்றும்-இதுபழியாகும்,

வள்ளியுமரங்களுமலையுமண்ணுறத்
தெள்ளுநுண்பொடிபடக்கடிதுசெல்கின்றான்
தள்ளுவன்கால்பொரத்தரணியிற்றவழ்
வெள்ளியம்பெருமலைபொருவுமேனியான். (௨௬)

சம்பாதியை அரக்கனென அநுமன் கருதுதல்.

எய்தினனிருந்தவரிரியல்போயினார்
ஐயனம்மாருதியழலுங்கண்ணினான்
கைதவநிசிசரக்கள்ள * வேடத்தை
உய்திகொலினியெனவுருத்துமுன்னின்றான். (௨௭)
வெங்கதம்வீசியமனத்தன்விம்மலன்
பொங்கியசோரிநீர்பொழியுங்கண்ணினன்
சங்கையிற் † சழக்கிலனென்னுந்தன்மையை
இங்கிதவகையினாலெய்தநோக்கினான். (௨௮)

சம்பாதி சடாயுவைக்கொன்றவ ரியாவருரைமினென்றல்.

நோக்கினனின்றனனுணங்குகேள்வியான்
வாக்கினாலொருமொழிவழங்கலாதமுன்
றாக்கருஞ்சடாயுவைத்தருக்கினாலுயிர்
நீக்கினரியாரதுநிரப்புவீரென்றான். (௨௯)

சம்பாதி தனது வரலாறுரைத்தல்.

உன்னைநீயுள்ளவாறுரைப்பினுற்றதைப்
பின்னையா ‡ நிரப்புதல்பிழைப்பின்றாகுமால்
என்னமாருதியெதிரெருவைவேந்தனும்
தன்னையாந்தன்மையைச்சாற்றன்மேயினான். (௩௦)
மின்பிறந்தாலெனவிளங்கெயிற்றினாய்
என்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன்
முன்பிறந்தேனெனமுடியக்கூறினான். (௩௧)

இராவணன்வாளால் சடாயுவிறந்தானெனல்.

கூறியவாசகங்கேட்டுக்கோதிலான்
ஊறியதுன்பத்தினுவரியுட்புகா
ஏறினனுணர்த்தினனிகலிராவணன்
வீறியவாளிடைவிளிந்ததாமென்றான். (௩௨)

* வேடத்தை-வேடத்தினையுடையாய்.
† சழக்கு-கைதவமாகியவஞ்சனை.
‡ நிரப்புதல்-தெரிவித்தல்,

சம்பாதி வருந்துதல்.

அவ்வுரைகேட்டலுமசனியேற்றினான்
* தவ்வியகிரியெனத்தரையின்வீழ்ந்தனன்
வெவ்வுயிராவுயிர்பதைப்பவிம்மினான்
இவ்வுரையிவ்வுரையெடுத்தியம்பினான். (௩௩)

வேறு.

இளையாநீள்சிறகின்றிவெந்துகத்
தளையானேனுயிர்போதறக்கதால்
வளையாநேமியன்வன்மைசால்வலிக்
கிளையானேயிதுவென்னமாயமோ. (௩௪)

மலரோனின்றுளன்மண்ணும்விண்ணுமுண்
டுலையாநீடறயினுமுண்டரோ
நிலையார்கற்பமுநின்றநின்றநீ
இலையானாயிதுவென்னதன்மையோ. (௩௫)

உடனேயண்டமிரண்டுமுந்துயிர்த்
திடநாள்வந்திருவேமுமெய்தியான்
விடநீயோர்தனிச்சென்றவீழும்
கடனேவெங்கலுழற்குமென்மையோய். (௩௬)

ஒன்றாமூன்றுலகத்துளோரையும்
வென்றானென்னினும்வீரனிற்குநேர்
நின்றானேயவ்வரக்கனின்னையும்
கொன்றானேயிஃதென்னகொள்கையோ. (௩௭)

என்றென்றேங்கியிரங்கியின்னலாற்
பொன்றுந்தன்மைபுரிந்தபோதவற்
† கொன்றுஞ்சொற்கொடுணர்ச்சிநல்கினான்
வன்றிண்டோள்வரையன்னமாருதி. (௩௮)

தேற்றத்தேறியிருந்தசெங்கணான்
கூற்றொப்பான்கொலைவாளரக்கனோ
டேற்றுப்போர்செய்த † தென்னிமித்தெனக்
காற்றின்சேயிதுகட்டுரைக்குமால். (௩௯)

சடாயு இராவணனொடு பொருதற்குக் காரணங்கூறல்.

எங்கோமானவ்விராமனில்லுளாள்
செங்கோலான்மகள்சீதைசெவ்வியாள்

---

* தவ்விய-மோதிய. † அவற்கொன்றுஞ் சொல்கொண்டு-அச்சம்பாதிக்கேற்ற வசனத்தினால்.

‡ என்னிமித்தென-யாதுகாரணத்தாலென.

வெங்கோல்வஞ்சன்விளைத்தமாயையால்
தங்கோனைப்பிரிவுற்றதன்மையாள். (௪௰)

கொண்டேகுங்கொலைவாளரக்கனைக்
கண்டானும்பியறங்கடக்கிலான்
வண்டார்கோதையைவைத்துநீங்கெனத்
திண்டேரானெதிர்சிந்தைச்றினன். (௪௧)

சீறித்தீயவனேறுதேரையும்
கீறித்தோள்கள்கிழித்தழித்தபின்
தேறித்தேவர்கடேவன்றெய்வவாள்
வீறப்பொன்றினன்மெய்ம்மையோனென்றான். (௪௨)

விளித்தானன்னதுகேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தகுநீர்த்தன்மாட்டுயிர்
அளித்தானையதுகன்றநன்றெனக்
களித்தான்வாரிகலுழ்ந்தகண்ணினான். (௪௩)

பைந்தாரெங்களிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சிநிறத்திறந்தவன்
மைந்தாவெம்பிவரம்பில்சீர்த்தியோ
டுய்ந்தானெல்லதுலந்ததன்மையோ. (௪௪)

அறமன்றானுடனெம்பியன்பினே
டுறவுன்றாவுயிரொன்ற * வோவினான்
பெறவொண்ணாததொர்பெற்றிபெற்றவற்
கிறவென்றாயிதினின்பயியாவதோ. (௪௫)

என்றென்றேங்கியிரங்கி † யின்புனல்
சென்றங்காடுதல்செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலிமாறிலாதவன்
துன்றுந்தாரவர்க்கின்னசொல்லினான். (௪௬)

வாழ்வித்தீரெனைமைந்தர்வந்துநீர்
ஆழ்வித்தீரலிர்துன்பவாழிவாய்
கேள்வித்தீவினைகீறினீரருள்
போழ்வித்தீருநைபொய்யினீங்கினீர். (௪௭)

சம்பாதிஅனைவரும் இராமநாமமுரைத்திடுமென் சிறைமுளைக்குமெனல்.

எல்லீருமவ்விராமநாமமே
சொல்லீர்சொல்லவெனக்கொர்சோர்விலா

---

* ஓவினான்-நீங்கினான்.

† இன்புனல் சென்றங்காடுதல்செய்து-சகோதரனது மரணாசூச மொழிய இனியநீரிற் குளித்து.

நல்லீரப்பயனண்ணுநல்லசொல்
வல்லீர்வாய்மைவளர்க்கும்மாண்பினீர். (௪௮)

வானரர் இராமநாமோச்சாரணம் புரிதலும் இறகுவளர்தலும்.

என்றானன்னதுகாண்டும்யாமெனா
நின்றார்நின்றழிநீலமேனியான்
நன்றாநாமநவின்றாநல்கினார்
வன்றோளான்சிறைவானந்தாயவே. (௪௯)

சிறைபெற்றான்றிகழ்கின்றமேனியான்
முறைபெற்றாமுலகெங்குமூடினான்
நிறைபெற்றாவிசெருப்புயிர்க்கும்வாள்
உறைபெற்றாலெனலாமுறப்பிறனான். (௫௦)

தெருண்டான்மெய்ப்பெயர்செப்பலோடும்வந்
துருண்டானுற்றபயர்தையுன்னினார்
மருண்டார்வானவர்கோனைவாழ்த்தினார்
வெருண்டார்சிந்தைதவியந்துவிம்முவார். (௫௧)

வானரர் நின்பூருவசரித முரையெனல்.

அன்னானைக்கடிதஞ்சலித்துநீ
முன்னானுற்றதுமுற்றுமோதெனச்
சொன்னார்சொற்றதுசிந்தைதோய்வுறத்
தன்னாலுற்றதுதான்விளம்புவான். (௫௨)

வேறு.

சம்பாதி தனதுபிறப்புமுதலிய உரைத்தல்.

தாயெனத்தகையநண்பீர்சம்பாதிசடாயுவென்பேஞ்
சேயொளிச்சிறையவேகக்கழுகினுக்கரசுசெய்வேம்
பாய்திரைப்பரவைஞாலம்படரிருளகற்றும்பண்பின்
ஆய்கதிர்க்கடவுட்டேரருணனுக்குமைந்தமைந்தர். (௫௩)

ஆயுயரும்பர்நாடுகொண்டுமென்றறிவுதள்ளி
மீயுயர்விசும்பினூடுமேக்குறச்செல்லும்வேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக்கண்ணுற்றுங்கண்ணுறாமுன்
தீயையுந்தீக்குந்தெய்வச்செங்கதிர்ச்செல்வன்சீறி. (௫௪)

முந்தியவெம்பிமேனிமுருங்கழூன்முடுகும்வேலை
எந்தைநீகாத்தியென்றான்யானிருஞ்சிறையுமேந்தி
வந்தனென்மறைத்தலோடுமற்றவன்மறையப்போனான்
வெந்துமெய்யிறகுதீந்துவிழுந்தனென்விளிகிலாதேன். (௫௫)

மண்ணிடைவிழுந்தவென்னைவானிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்றகருணையன்சனகன்காதற்

பெண்ணிடையீட்டின்வந்தவானரரிராமன்பேரை
எண்ணிடையுற்றகாலத்திறகுபெற்றெழுதியென்றான். (கிசு)

தாழ்ந்தமாதவத்து * லோகசாரங்கனுறையுஞ்சாரல்
வீழ்ந்தனென்சிறைகடையவெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமூன்றவுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனெனாழ்ந்தவென்னையருந்தவனெதிர்ந்துதேற்றி. (கிஎ)

கற்றிலர்போலவுள்ளக்களிப்பினாலமரர்காப்பூ
டற்றிடக்கருதிமீப்போயாதபத்தனதுமேனி
முற்றமுன்முருங்கமண்ணைமுயங்கினையினியென்சின்னாள்
மற்றுநின்னுயிரையோம்பாதிகழ்வதுமாலைத்தன்றால். (கிஅ)

களித்தவர்கெடுதறிண்ணஞ்சனகியைக்கபடன்வௌவி
ஒளித்தவாய்துருவியுற்றவானரரிராமநாமம்
விளித்திடச்சிறைவந்தோங்கும்வெவ்வுயிர்த்துயரலென்றன்
றளித்தனனதனாலியாற்றினேனாற்றன்மொய்ம்பீர். (கிகூ)

அன்றியுமலருள்வைகுமயனைநேர்முனிவன்வாய்மை
நன்றிகொளீசற்காண்பானனுகலும்வினையேனுற்ற
தொன்றெருழிவுருமற்கேட்டதியோகத்தினுணர்ச்சிபேணிப்
பொன்றுதலொழிமின்யானேபுகல்வதுகேண்மினென்றான். (சுo)

தசரதராமன்றேவர்தவத்தினாற்றோய்சொற்றாங்கிக்
கசரததுரகமின்றிக்கானிடையிறத்தகாலை
வசைதருமிலங்கைவேந்தன்வெளவியதிருவைநாடித்
திசைதிரிகவிகளுற்றாற்சிறகுபெற்றெழுதியென்ன. (சுக)

எம்பியுமிடரின்வீழ்வானேயதுமறுக்கவஞ்சி
அம்பரத்தியங்குமியாணர்க்கழுகினுக்கரசனானேன்
நம்பிமீரெதந்தன்மைநீரிவணடைந்தவாற்றை
உம்பருமுவக்கத்தக்கீருணர்த்துமினுணரவென்றான். (சுஉ)

என்றலுமிராமன்றன்னையேத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றைத்தேவியைக்கொண்டுபோந்தான்
தென்றிசையென்னவுன்னித்தேடிநாம்வந்துமென்றார்
நன்றுநீர்வருந்தல்வேண்டாநாணிதுநவில்வனென்றான். (சுங.)

இராவணன் சீதையைக்கொண்டு சென்று
சிறைவைத்தானென்று சம்பாதிகூறியது.

பாகொன்றுகுதலையாளைப்பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுகண்டேன்புக்கனனிலங்கைபுக்கு

---

* லோகசாரங்கன்-ஒருதவசியின்பெயர்.

வேகின்றவுள்ளத்தானை வெஞ்சிறையகத்துவைத்தான்
ஏகுமின்காண்டிராங்கேயிருந்தனனிறைவியின்னும். (சு௪)

ஓசனையொருநூறுண்டாலொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்கரத்துக்கூற்றுங்கட்புலன்பரப்பவஞ்சும்
நீசனவ்வரக்கன்சீற்றநெருப்புக்குநெருப்புநீங்கள்
ஏசறுங்குணத்தீர்சேறலெப்பரிசியைவதென்றான். (சுரு)

நான்முகத்தொருவன்மற்றைநாரியோர்பாகனிற்க
பான்முகப்பரவைப்பள்ளிப்பரம்பரன்பணியென்றாலும்
காலனுக்கேயுஞ்சேறலரிதிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதெண்ணிச்செல்லுமின்விளிவிலீர். (சுசு)

எல்லீருஞ்சேறலென்பதெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரேலொருவரேகிமறைந்தவளுழிவாய்மை
சொல்லீரேதுயரைநீக்கித்தோகையைத்தெருட்டிமீடீர்
அல்லீரேலென்சொற்றேறியுணர்த்துமினமுகற்கம்மா. (சு௭)

காக்குநரின்மையாலக்கழுகினமுழுதுங்கன்றிச்
சேக்கைவிட்டிரியல்போகித்திரிதருமதனைத்தீர்ப்பான்
போக்கெனக்கடுத்தநண்பீர்நல்லதுபுரிமினென்றே
மேக்குறவிசையிற்சென்றான்சிறையினல்விசும்புபோர்ப்பான். (சுஅ)

கரு-வது, சம்பாதிப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-க0உ௪.

---

## கசு-வது, மகேந்திரப்படலம்.

பொய்யுரைசெய்யான் * புள்ளரசென்றேபுகலுற்றார்
கையுறைநெல்லித்தன்மையினெல்லாங்கரைகண்டாம்
உய்யுரைபெற்றாநல்லவையெல்லாமுறவெண்ணிச்
செய்யுமினென்றேசெய்வகைநோக்கிற்செயவல்லீர். (க)

சூரியன்வெற்றிக்காதலனோடுஞ்சுடர்விற்கை
ஆரியனைச்சென்றேதொழுதுற்றதறைகிற்பிற்
சீரியலேமுற்றுந்தேருதல்கொற்றச்செயலம்மா
வாரிகடப்பார்யாவரெனத்தம்வலிசொல்வார். (உ)

மாளவலித்தேமென்றுமிம்மாளாவகையோடு
மீளவுமுற்றேமன்னவைதீரும்வெளிபெற்றேம்
காளமிறத்தோடொப்பவர்மாயக்கடறாவுற்
றாளுநலத்தீராளுமினெம்மாருயிரம்மா. (௩)

* புள்ளரசு-கழுகு அரசு.

நீலன்முதற்பேர்போர்கெழுகொற்றநெடுவீரர்
சாலவுரைத்தார்வாரிகடக்குந்தகவின்மை
வேலைகடப்பன்மீளவிடுக்கின்றெனவிட்டான்
வாலியளிக்கும்வீரவயப்போர்வசையில்லான். (௪)

வேதமனைத்துந்தேர்தரவெட்டாவொருமெய்யன்
பூதலமுற்றுமோரடிவைத்துப்பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ்சூழ்பறைவைத்தேவமேரு
மோதவிளைத்தேதாளுலைவுற்றேன்விறன்மொய்ம்பீர். (௫)

ஆதலினிப்போரார்கலிகுப்புற்றகழிஞ்சி
மீதுகடத்தித்தீயவருட்கும்வினையோடும்
சீதைதனைத்தேராவரமுற்றுந்திறனின்றென்
றோதியிருந்தா * னாலுமுகத்தானுதவுற்றோன். (௬)

யாமினியிப்போதாரிடர்துய்த்திங்கினியாரைப்
போமெனவைப்போமென்பதுபுன்மைப்புகழன்றே
கோமுதல்வர்க்கேறாகியகொற்றக்குமரா நம்
நாமமிறுத்திப்பேரிசைதைக்குநவையில்லோன். (௭)

ஆரியன்முன்னர்ப்போதுறவுற்றவதனாலும்
காரியமெண்ணிச்சோர்வறமுற்றுங்கடனாலும்
மாருதியொப்பார்வேறிலையென்னாவயன்மைந்தன்
சீரியன்மற்றோராண்மைதெரிப்பானிவைசெப்பும். (௮)

மேலைவிரிஞ்சன்வீயினும்வீயா † மிகைநாளீர்
நூலைநயந்துநுண்ணிதுணர்ந்தீர்நுவறக்கீர்
காலனுமஞ்சுங்காய்சினமொய்ம்பீர்கடனின்றீர்
ஆலநுகர்ந்தானுமெனவெம்போரடர்கிற்பீர். (௯)

வெப்புறுசெந்தீநீர்வளியாலும்விளியாதீர்
செப்புறுதெய்வப்பல்படையாலுஞ்சிதையாதீர்
ஒப்புறினொப்பார்நும்மலதில்லீரொருகாலே
குப்புறினண்டத்தப்புறமேயுங்குதிகொள்வீர். (௧௦)

நல்லவுமொன்றோதீயவுநாடிநவைதீரச்
சொல்லவும்வல்லீர்காரியநேரேதுணிகிற்பீர்
வெல்லவும்வல்லீர்மீளவும்வல்லீர் ‡ மிடலுண்டேல்
கொல்லவும்வல்லீர்தோள்வலியென்றுங்குறையாதீர். (௧௧)

மேருகிரிக்குமீதுறநிற்கும்பெருமெய்யீர்
மாரிதுளிக்குந்தாரை § யிடுக்கும்வரவல்லீர்
பாரையெடுக்குநோன்மைவலத்தீர்பழியற்றீர்
சூரியனைச்சென்றொண்கையகத்துந்தொடவல்லீர். (௧௨)

* நாலுமுகத்தானுதவுற்றோன்-சாம்பவன்.
† மிகைநாளீர்-அதிகமானநாளுடையீர்.
‡ மிடலுண்டேல்-எதிரிகள் போர்வன்மை யுடையவர்களானால்.
§ இடுக்கும்-சந்திலும்.

அறிந்துதிறத்தாறெண்ணியறத்தாறழியாமை
மறிந்தருளப்போர்வாலியைவெல்லு * மதிவல்லீர்
பொறிந்திமையாக்கோன்வச்சிரபாணம்புகவூழ்க
எறிந்துழியிற்றோர்புன்மயிரேனுமிழவாதீர். (௧௩)

போர்முனைதிர்ந்தான்மூவுலகேனும்பொருளாகா
ஓர்வில்வலங்கொண்டொல்கலில்வீரத்துயர்தோளீர்
பாருலகெங்கும்பேரிருள்சீக்கும்பகலோன்முன்
தேர்முனடக்கே † யாரியநூலுந்தெரிவுற்றீர். (௧௪)

நீதியினின்றீர்வாய்மையமைந்தீர்நினைவாலும்
மாதர்நலம்பேணாதுவளர்ந்தீர்மறையெல்லாம்
ஓதியுணர்ந்தீரூழிகடந்தீருலகேனும்
ஆதியயன்றானேயெனயாருமறைகின்றீர். (௧௫)

அண்ணலமைந்தற்கன்புசிறந்தீரதனாலே
கண்ணியுணர்ந்தீர்கருமமுமங்கேகடனென்னத்
திண்ணிதமைந்தீர்செய்துமுடிப்பீர்சிதைவின்றால்
புண்ணியமொன்றேயென்றுலகுக்கும்பொருள்கொண்டீர். (௧௬)

அடங்கவும்வல்லீர்காலமதன்றேலார்வந்தால்
மடங்கன்முனிந்தாலன்னவலத்தீர்மதிநாடித்
தொடங்கியதொன்றேமுற்றமுடிக்குந்தொழிலல்லால்
இடங்கெடவெவ்வாயூறுகிடைத்தாலிடையாதீர். (௧௭)

ஈண்டியகொற்றத்திந்திரனென்பான்முதல்யாரும்
பூண்டுநடக்குநன்னெறியானும்பொறையாலும்
பாண்டிதர்நீரேபார்த்தினிதுய்க்கும்படிவல்லீர்
வேண்டியபோதேவேண்டுவவெய்தும்வினைவல்லீர். (௧௮)

ஏகுமினேகியெம்முயிர்நல்கியிசைகொள்ளீர்
ஓகைகொணர்ந்தும்மன்னையுமின்னற்குறையில்லாச்
சாகரமுற்றுந்தாவிடுநீரிக்கடறாவும்
வேகமமைந்தீரென்றுவிரிஞ்சன்மகன் ‡ விட்டான். (௧௯)

சாம்பனியம்பத்தாழ்வதனத்தாமரைநாப்பண்
ஆம்பல்விரிந்தாலன்னசிரிப்பானறிவாளன்
கூம்பலொடுஞ்சேர்கைக்கமலத்தன்குலமெல்லாம்
§ எம்பல்வரத்தன்சிந்தைதெரிப்பானிவைசொன்னான். (௨௦)

வேறு.

இலங்கையையிடந்துவேரோடிவ்வயிற்றருகென்றாலும்
$ விலங்கினர்தம்மையெல்லாம்வேரொடும்விளியநூறிப்
பொலங்குழைமயிலைக்கொண்டுபோதெனப்புகன்றிட்டாலும்
கலங்கலீருரைத்தமாற்றமுடிக்குவல்கடிதுகாண்டிர். (௨௧)

---

* மதி-புத்திசாலித்தனம். § எம்பல்வர-இன்பமுடையனவாக
† ஆரியநூல்-தேவபாடைநூல். $ விலங்கினர்-பகைவர்.
‡ விட்டான்-சொல்லிமுடித்தான்.

ஓசனையொரு நூறு முள்ளளடியுள்ளதாக
ஈசன் மண்ணளந்த தெய்ப்பவிருங்கடலினிது தாவி
வாசவன் முதலோர் வந்து மலையினுமிலங்கைவாழும்
நீசரையெல்லா நூறினித்து முடிப்பல்பின்னும். (உஉ)

நீயிரேநினைவின் முன்னே நெடுந்திரைப்பரவையேழும்
தாயுலகனைத்தும்வென் றுதையலைத்தருதற்கொத்தீர்
போயிது புரிதியென்று புலமைதீர் புன்மைகாண்டற்
கேயினியொன்னினென்னிற் பிறந்தவர் யாவரின்னும். (உ௩)

முற்றுநீருலக முற்றும் விழுங்குவான் முழங்கி முந்நீர்
உற்றதே யெனினு மண்ட முடைந்து போயுயர்ந்ததேனும்
இற்றை நம்மருளு மெங்கோனேவலு மிரண்டு பாலும்
கற்றைவார் சிறைகளாகக் கலுழனிற் கடப்பல் காண்டிர். (உச)

இலங்கை செல்வான் அநுமான் மயேந்திரத்தினுச்சியிலெய்துதல்.

ஈண்டினி துறைமின்யானே யெறிகடலிலங்கையெய்தி
மீண்டிவண் வருதல்காறும் விடைதம்மின் விரைவினென்று
ஆண்டவருவந்து வாழ்த்த வலர்மழை யமரர் தூவச்
சேண்டொடர் சிமயத்தெய்வ மகேந்திரத்தும்பர் சென்றான். (உரு)

அநுமன் பேருருவெய்திநிற்றல்.

பொருவருவேலை தாவும் புந்தியான் புவனந்தாய
பெருவடி யுயர்ந்தமாயோன் மேக்குறப்பெயர்ந்ததாள் போல்
உருவறிவடிவினும்பரோங்கினனுவமையாலும்
திருவடியென்னுந் தன்மையாவர்க்குந் தெரியநின்றான். (உசு)

பார்கிழல்பரப்பும் பொற்றேர் வெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்கிழல்பரப்புமேலோர் புகழெனவுலகம் புக்குத்
தார்கிழல்பரப்புந்தோளான் றடங்கடறுவா முன்னம்
நீர்கிழலுவரி தாவியிலங்கைமேற் செல்லநின்றான். (உஎ)

பருவாயமடங்கல்வைகும் படர்வரை முழுது மூழ்க
உருவாயவிடங்கொணைகத் தொத்தவால் சுற்றியூழின்
வெருவாயசிகரகோடி நெரிவனதெரியநின்றான்
மகவாமைமுதுகிற்றோன்றுமந்தரமெனலுமானான். (உஅ)

மின்னெடுங்கொண்டறானின் வீக்கியகழலினார்ப்பத்
தன்னெடுந்தோற்றம் வானோர்கட்புலத்தெல்லைதாவ
வன்னெடுஞ்சிகரகோடி மகேந்திர மண்டந்தாங்கும்
பொன்னெடுந்தூணின்பாதசிலையெனப் பொலிந்து நின்றான். (உகூ)

கசு-வது, மகேந்திரப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-க0ௌரு.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

கிஷ்கிந்தாகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.



இது

காரப்பங்காடு வித்வான்

கோபாலாசாரியர் மாணாக்கராகிய

தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்கார்

பரிசோதித்தது

அ. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

அவர்களது

சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1927.



# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## ஐந்தாவது,

# *சுந்தரகாண்டம்.

## முதலாவது, † கடறாவுபடலம்

காப்பு.

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கிய ‡ விகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவரைக்கண்டாலவரென்பர்கைவிலேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார். (க)

* இக்காண்டத்திற்கு முன்காண்டங்களைப்போல் லங்காகாண்டம் எனப் பெயரிடாமல் சுந்தரகாண்டம் எனப் பெயரிட்டது என்னை யெனின்: ஏனைய காண்டங்களினது கதைகளினும் இக்காண்டத்தி லுள்ள கதைகள் மனதுக்கு மிக்க சந்தோஷகரமாயும் அனுமானுடைய அருங்குணங்களை நன்கு விளக்குவதாகியும் அழகியதாயிருத்தல்பற்றி சுந்தரகாண்டம் என்றனர். இனி சுந்தரன் என்று அனுமானுக்குப் பெயருண்மையால் அனுமானுடைய செயலைக் கூறும்பாகம் என்றும் கூறுவர்.

† அனுமான் இலங்கை சேருமாறு கடலைத் தாவிச்செல்லுஞ் செய்தியைக் கூறும்பாகம்.

‡ விகாரப்பாட்டின் வேறுபாடு - அறுவகை விகாரப்படுதலுடைய தேவமனுஷ்ய திரியக்ஸ்தாவர வேறுபாடு. அவையாவன: ஊறுபட லொன்றிலே பிறத்தல், பிறந்துளவாதல், வேறுபடவளர்தல், வளர்ந்தய லொன்றாய் விளைந்தமைத்தல், மாறுபடத்தேய்தல், அறமாய்தல்.

நூல்.

* ஆண்டகையாண்டவ்வானோர்துறக்கநாடருகர்கண்டான்
ஈண்டிதுதான்கொல்வேலையிலங்கையென்றையமெய்தா
வேண்டருவிண்ணொடென்னுமெய்ம்மைகண்டுள்ளமீட்டான்
காண்டகுதோகையும்பரில்லெனக்கருத்துட்கொண்டான். (௨)

கண்டனனிலங்கைமூதூர்க்கடிபொழிற்கனகஞாஞ்சில்
மண்டிலமதிலுங்கொற்றவாயிலுமணியிற்செய்த
வெண்டளக்கனகமாடவீதியும்பிறவுமெல்லாம்
அண்டமுந்திசைகளெட்டுநடுங்கத் † தோள்கொட்டியார்த்தான். (௩)

வன்றந்தவரிகொணாகம்வயங்கனலுமிழும்வாய
பொன்றந்த ‡ முழைகடோறும்புறத்துராய்ப்புரண்டுபோவ
நின்றந்தமில்லானூன்றநெரிந்துகீழழுந்துநீலக்
குன்றந்தன்வயிறுகீறிப்பிதுக்கினகுடர்கண்மான (௪)

புகலருமுழையுட்டுஞ்சும்பொங்குளைச்சீயம்பொன்றி
உகலருங்குருதிகக்கியுள்ளுறநெரிந்தவூழின்
அகலிரும்பரவைநாணவரற்றுறுகுரலவாகிப்
பகலொளிகரப்பவானைமறைத்தனபறவையெல்லாம். (௫)

மொய்யுறுசெவிகடாவிமுதுகுறமுறைநாறள்ள
மையுறுவிசும்பினூடுகிமிர்ந்தவாலதியமஞ்சின்
மெய்யுறத்தழீஇயமெல்லென்பிடியொடும்வெருவலோடும்
கையுறமரங்கள்சுற்றிப்பிளிறினகளி § நல்யானை. (௬)

பொன்பிறழிமயக்கோடுபொடியுறப்பொறியுஞ்சிந்த
மின்பிறழ்குடுமிக்குன்றம்வெரிநுறவிரியும்வேலை
புன்புறமயிரும்பூவாக்கட்புலம்புறத்துநாறு
வன்பறழ்வாயிற்கவ்விவல்லிய O மிரிந்தமாதோ. (௭)

தேக்குறுசிகரக்குன்றந்திரிந்துமெய்ந்நெரிந்துசிந்தத்
ஆக்குறுதோலர்வாளர்துரிதத்தினெழுந்ததோற்றம்
தாக்குறுசெருவினோரார்தாளறவீசத்தாவி
மேக்குறவிசைத்தாரென்னப்பொலிந்தனர்விஞ்சைவேந்தர் (௮)

---

* ஆண்டகை - ஆண்மையிற்சிறந்தவரான ஸ்ரீ ஆஞ்சநேயரை; இப்பாட்டால் தேவருலகளவு உயரமும் அவ்வுலகு முழுதும் பார்க்கும் பார்வையுமுடையரானார் சிறியதிருவடி யென்க. சிறியதிருவடி எனினும் ஆஞ்சநேயரெனினும் அனுமாரெனினும் ஒக்கும்.

† தோள்கொட்டியார்த்தான் என்றது தான் காணப்போகிற ஊரை அந்த மயேந்திரகிரியினின்றே கண்டதனாலென்க.

‡ முழைகள்-பிலத்துவாரங்கள்.

§ நல்-நலம்; சுகம். O இரிதல்-ஓடல்.

தாரகைசுடர்கண்மேகமென்றிவைதவிரத்தாழ்ந்து
பாரிடையழுந்துகின்றபடர்நெடும்பனிமாக்குன்றம்
கூருகிர்க்குவவுத்தோளான்கூம்பெனக்குமிழிபொங்க
ஆர்கலியழுவத்தாழுங்கலமெனலாயிற்றன்றே. (௯)

தாதுகுநறுமென்சந்தங்குங்குமங்குலிகந்தண்ணென்
போதுகுபொலன்றாதென்றித்தொடக்கத்தயாவும்பூசி
மீதுறுசுனைநீரோடியருவியொடுலகின்வீழ்வ
ஓதியகுன்றங்கீண்டுகுருதிநீர்சொரிந்தவொத்த. (௧0)

கடலுறுமத்தியென்னக்கருவரைதிரியுங்காலை
யிடலுறுபுலன்கள்வென்றமெய்த்தவர்விசும்பினுற்றார்
திடலுறுகிரியிற்றாந்தஞ்செய்வினைமுற்றிமுற்றா
துடலுறுபாசம்வீசாதும்பர்செல்வாருமொத்தார். (௧௧)

வெயிலியற்குன்றங்கீண்டுவெடித்தலுநடுக்கமெய்தி
மயிலியற்றேவிமார்கடழீஇக்கொளப்பொலிந்தவானோர்
அயிலெயிற்றரக்கனள்ளத்திரிந்தநாளணங்குபுல்லக்
கயிலையினிருந்ததேவைத்தனித்தனிக்கடுத்தல்செய்தார். (௧௨)

ஊறியநறவுமுற்றகுற்றமுமுணர்கையுண்ணச்
சீறியமனத்தர்தெய்வமடந்தையரூடறீர்வுற்
றாறினரஞ்சுகின்றாரன்பரைத்தழுவியும்பர்
ஏறினரிட்டநீத்தபைங்கிளிக்கிரங்குகின்றார். (௧௩)

இத்திறநிகழும்வேலையிமையவர்முனிவர்மற்றை
முத்திறத்துலகத்தாருமுறைமுறைவிரைவின்மொய்த்தார்
தொத்துறுமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தூவி
வித்தகசேறியென்றார்வீரனும்விரைவதானான். (௧௪)

குறுமுனிகுடித்தவேலைகுப்புறங்கொள்ளகத்தாதல்
வெறுவிதுவிசயம்வைகும்விலங்கற்றோளலங்கல்வீர
சிறுவிதென்றிகழற்பாலையல்லைநீசேறியென்னா
உறுவலித்துணைவர்சொன்னாரொருப்பட்டான்பொருப்பையொப்பான்.

* இலங்கையினளவிற்றன் † றாலிவ்வுருவெடுத்ததோற்றம்
விலங்கவுமுளதன்றென்றுவிண்ணவர்வியந்துநோக்க
அலங்கறாழ்மார்பன்முன்றாழ்ந்தடித்துணையழுத்தலோடும்
பொலங்கெழுமலையுந்தாளும்பூதலம்புக்கமாதோ. (௧௬)

வால்விசைத்தெடுத்துவன்றாண்மடக்கிமார்பொடுக்கி ‡ மானத்
தோல்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டும்

---

* இலங்கையின் என்பதில் இன்-சாரியை. † ஆல் அதிசயக்குறிப்பு.
‡ மானத்தோள் என்றும் பாடம்.

கால்விசைத்தடக்கைநீட்டிக்கட்புலக்கதுவாவண்ணம்
மேல்விசைத்தெழுந்தானுச்சிவிரிஞ்சனுமிரிஞ்சவீரன். (௧௭)

ஆயவனெழுதலோடுமரும்பணைமரங்கடாமும்
வேயுயர்குன்றும்வென்றிவேழமும்பிறவுமெல்லாம்
நாயகன்பணியிதென்னாவெளிர்கடலிலங்கைதாழும்
பாய்வனவென்னவானம்படர்ந்தனவெழுவமான. (௧௮)

இசையுடையண்ணல்சென்றவேகத்தாலெழுந்தகுன்றம்
பசையுடை * மரனுமாவும்பல்லுயிர்க்குலமும்வல்லே
திசையுறச்சென்றுசென்றுசெறிகடலிலங்கைசேரும்
விசையிலவாகத்தள்ளிவீழ்ந்தனவென்னவீழ்ந்த. (௧௯)

மாவொடுமரனுங்கல்லும்வல்லியுமியாவுமற்றும்
போவதுபுரிந்தவீரன்விசையினாற்புணரிபொங்கத்
தாவினகீழுமேலுந்தூர்த்தனசுருதியன்ன
சேவகன்சீருமுன்னஞ்சேதுவுந்தெரிந்தமாதோ. (௨௦)

கிண்டது † வேலைநன்னீர்கீழுறக்கிடந்தநாகர்
வேண்டியவுலகமெங்கும்வெளிப்படமணிகண்மின்ன
ஆண்டகையதனைநோக்கியரவினுக்கரசர்வாழ்வும்
காண்டகுதவத்தனேனியானெனக்கருத்துட்கொண்டான். (௨௧)

வெய்தின்வான்சிறையினானீர்வேலையைக்கிழியவீசி
நொய்தினாரமுதங்கொண்டநோன்மைபோனுவலுநாகர்
உய்துநாமென்பதென்னையுறுவலிக்கலுழனாழின்
எய்தினானென்றஞ்சிமறுக்குமுற்றிரியல்போனார். (௨௨)

துள்ளியமகரமீன்கடிப்பறச்சுறவுதூங்க
ஒள்ளியபனைமீன்றுஞ்சுந்திவலையவூழிக்காலின்
வள்ளுகிர்வீரன்செல்லும்விசைபொருமறுகிவாரி
தள்ளியதிரைகண்மூன்றுற்றிலங்கைமேற்றவழ்ந்தமாதோ. (௨௩)

இடுக்குறுபொருள்களென்னுமெண்டிசைசுமந்தயானை
நடுக்குறவிசையிற்செல்லுநாயகன்றூதனாகம்
எடுக்குறுகாலவன்காற்றிடியொடுமொடியவந்தாள்
முடுக்குறக்கடலிற்செல்லு ‡ முத்தலைக்கிரியுமொத்தான். (௨௪)

கொட்புறுபுரவித்தெய்வக்கூர்நுதிக்குலிசத்தாற்கும்
கட்புலங்கதுவலாகாவேகத்தாற்கடலுமண்ணும்

* மரனும்-மரங்களும். † கடலுக்கு நன்னீர்மையாவது வற்றுதிருத்தல். ‡ முத்தலைக்கிரி-திருவடி தோள்களிரண்டும் தலை ஒன்றும் கூட மூன்று சிகரத்தையுடைய ஒருமலையையும் ஒத்தானெனவுமாம்.

உட்பதங்கூட்டியண்டமுறவுளசெலவினொற்றைப்
புட்பகவிமானந்தானவ்விலங்கைமேற்போவதொத்த. (௨௫)

விண்ணவரேத்தவேதமுனிவரர்வியந்துவாழ்த்த
மண்ணவரிறைஞ்சச்செல்லுமாருதிமறமுட்கூர
அண்ணல்வாளரக்கன்றன்னையமுக்குவானின்னமென்னாக்
கண்ணுதலொழியச்செல்லும் * கயிலையங்கிரியுமொத்தான். (௨௬)

† மாணியாம்வேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோர்
ஆணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்
சேணுயர்நெடுநாடளந்ததிரிதலைச்சிறுவன்றன்னைக்
காணியவிரைவிற்செல்லுங்கனகமால்வரையுமொத்தான். (௨௭)

மழைகிழித்துதிரமீன்கண்மறிகடல்பாயவானம்
குழைவுறத்திசைகள்கிறமேருவுங்குலுங்கக்கோட்டின்
முழையுடைக்கிரிகண்முற்றமுடிக்குவான்முடிவுக்காலத்
தழிவுறக்கடுக்கும்வேகத்தாதையுமனையனானான். (௨௮)

தடக்கைநாலைந்துபத்துத்தலைகளுமுடையான்றானே
அடக்கியைம்புலன்கள்வென்றதுவப்பயனறுதலோடும்
கெடக்குறியாகமாகங்கிழக்கெழுவழக்குநீங்கி
வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனுமொத்தான். (௨௯)

புறத்துறலஞ்சிவேற்றோரணம்புக்குறைதல்போக்கி
மறத்தொழிலரக்கர்வாழுமாநகர்மனுவின்வந்த
திறத்தகையிராமனென்னுஞ்சேவகற்பற்றிச்செல்லும்
அறத்தகையரசன்றிண்போராழியுமனையனானான். (௩0)

சேழுலாமுழுநிலாவிற்கிளரொளியிருளைக்கீறப்
பாழிமாமேருநாணவிசும்புறப்படர்ந்ததோளான்
ஆழிசூழுலகமெல்லாமருங்கனன்முருங்கவுண்ணும்
ஊழிநாள்வடபாற்றோன்றுமுவாமுழுமதியுமொத்தான். (௩௧)

அடலெலாந்திகிரிமாயற்கமைந்தனனாற்றல்காட்டக்
குடலெலாமவுணர்சிந்தக்குன்றெனக்குறித்துநின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங்கலங்கத்தாவுங்கலுழனுமனையனானான். (௩௨)

நாலினோடுலகமூன்றுநடுக்குறவடுக்கிநாகர்
மேலின்மேனின்றகாறுஞ்சென்றகூலத்தின்விண்டு
காலினாலளந்தவானமுகட்டையுங்கடக்கக்கால
வாலினாலளந்தானென்றுவானவர்மருளச்சென்றான். (௩௩)

---

* வெள்ளிமலை-நிறத்தாலொப்பு. † மாணி-பிரமசாரி.

விளித்துப்பின்வேலைதாவும்வீரன்வால்வேதமெய்க்கும்
அளித்துப்பினனுமனென்னுமறந்துணைபெற்றதாயும்
களித்துப்புன்றொழின்மேனின்றவரக்கர்கண்ணுறுவ * ராமென்
றொளித்துப்பின்செல்லுங்காலபாசத்தையொத்ததன்றே. (௫௪)

மேருவைமுழுதுஞ்சூழ்ந்துமீதுற்றவேகநாகம்
கார்நிறத்தண்ணலேவக்கலுழன்வந்துற்றகாலை
சோர்வுறுமனத்ததாகிச்சுற்றியசுற்றுநீங்கிப்
பேர்வுறுகின்றவாறுமொத்ததப்பிறங்குபேர்வால். (௫௫)

குன்றொடுகுணிக்குங்கொற்றக்குலவுத்தோட்குரக்குச்சீயம்
சென்றுறுவேகத்திண்காலெறிதரத்தேவர்வைகும்
மின்றொடர்வானத்தானவிமானங்கள்விசையிற்றம்மின்
ஒன்றொடொன்றுடையத்தாக்கிமாக்கடலுற்றமாதோ. (௫௬)

வலங்கையின்வயிரவேதிவைத்தவன்வைகுநாடும்
கலங்குவதேகுவான்றன்கருத்தெதன்கொலென்னுங்கற்பான்
விலங்கயிலெயிற்றுவீரன்முடுக்கியவேகம்வெய்யோன்
இலங்கையினளவன்றென்னாவிம்பர்நாடிரிந்ததிப்பால். (௫௭)

ஓசனையுலப்பிலாதவுடம்பமைந்துடையவென்னத்
தேசமுநூலுஞ்சொல்லுந்திமிங்கிலகிலங்களோடும்
ஆசையையுற்றவேலைகலங்கவன்றண்ணல்யாக்கை
வீசியகாலின்வீந்துமிதந்தனமீன்களெல்லாம். (௫௮)

பொருவருமுருவத்தன்னான்போகின்றபொழுதுவேகம்
தருவனதடக்கைதள்ளாகிமிர்ச்சியதம்முளொப்ப
ஒருவருங் நணைத்துவள்ளலோருயிர்த்தம்பியோடும்
இருவருமுன்னர்ச்சென்றுலொத்தவவ்விரண்டுபாலும். (௫௯)

வேறு.

இந்நாகமன்னானெறிகாலெனவேகும்வேலை
† திந்நாகமாவிற்செறிநீட்டிசைக்காவல்செய்யும்
கைந்நாகமந்நாள்கடல்வந்ததொர்காட்சிதோன்ற
மைந்நாகமென்னுமலைவானுறவந்ததன்றே. (௬௰)

மீயோங்குசெம்பொன்முடியாயிரமின்னிமைப்ப
ஓயாவருவித்திரளுத்தரியத்தையொத்த
தீயோருளராகியதாலவர்தீமைதீர்ப்பான்
‡ மாயோன்மகரக்கடனின்றெழுமாண்பதாகி. (௬௧)

---

* ஆம்-சாரியை. † திக்குநாகம் திந்நாகமெனக் கடைக்குறையுமாய் மரீஇயது தொகுத்தலெனவுமாம். ‡ மாயோன்-ஆச்சரியகுண சேஷ்டிதனான எம்பெருமான்.

நூலேந்துகேள்விநுகராப்புலனோக்கலுற்றார்
போலேந்திநின்றதனியாண்மெய்பொருதுநீங்கக்
காலாழ்ந்தழுந்திக்கடல்புக்குழீஇக்கச்சமாகி
மாலேந்தவோங்குநெடுமந்தரமேயுமான. (௪௨)

தள்ளாற்கருநற்சிறைமாடுதழைப்பொடோங்க
எள்ளாற்கருநன்னிறமெல்லையிலாதபுல்ல
வள்ளாற்கடலைக்கெடநீக்கிமருந்துவவ்வி
உள்ளூற்றெழுமோருவணத்தரசேயுமொத்த. (௪௩)

ஆன்றுநெடுநீரிடையாதியொடந்தமாகித்
தோன்றுநின்றானருடோன்றிடமுந்துதோன்று
மூன்றுமுலகத்திடைமுற்றுயிராயமற்றும்
ஈன்றானையீன்றசுவணத்தனியண்டமென்ன. (௪௪)

இந்நீரினென்னைத்தருமெந்தையையெய்தியன்றிச்
செந்நீர்மைசெய்யேனெனச்சிந்தனைசெய்துநொய்தின்
அந்நீரில்வந்துமுதலந்தணனாதிநாளம்
முந்நீரின்மூழ்கித்தவமுற்றிமுளைத்தவாபோல். (௪௫)

பூவாலிடையூறுபுகுந்தபொருதநெஞ்சிற்
கோவாமுனிசீறிடவாரிகுளித்தவெல்லாம்
மூவாமுதனாயகன்மீளமுயன்றவந்நாள்
தேவாசுரர்வேலையில்வந்தெழுதிங்களென்ன. (௪௬)

நிறங்குங்குமமொப்பனநீணிறம்வாய்த்தநீரின்
இறங்கும்பவளக்கொடிசுற்றினசெம்பொனேய்ந்த
பிறங்குஞ்சிகரப்படர்முன்றிறொறும்பிணாவோ
டுறங்கும்மகரங்களுயிர்ப்பொடுணர்ந்துலாவ. (௪௭)

கூன்கூன்முதி * ரிப்பிகுரைக்கநிரைத்தபாசி
வான்சூழ்மழையொப்பவயங்குபளிங்குமுன்றி
றான்சூலநாளிற்றகைமுத்தமுயிர்த்தசங்கம்
மீன்சூழ்வருமம்முழுவெண்மதிவீறுகீற. (௪௮)

பல்லாயிரமாயிரம் † காசினம்பாடிமைக்கும்
கல்லார்சிமயத்தடங்கைத்தலநீண்டுகாட்டத்
தொல்லார்கலியுட்புகமூழ்கிவயங்குதோற்றத்
தெல்லாமணியீட்டமுகந்தெழுகின்றதென்ன. (௪௯)

* இப்பிகுரைத்தலே மேககர்ச்சிதமாகவும், பாசியே மேகமாகவும், பளிங்குப்பாறையே நிலாப்பரவின ஆகாயமாகவும், முத்துக்களே நக்ஷத்திரங்களாகவும், சங்கே பூரணச்சந்திரனாகவும், சுக்கிலபக்ஷத்தாகாயம் போல் மலைவந்ததென்க.

† காசினம்-இரத்தினவகை.

மனையிற்பொலிமாகநெடுங்கொடிமாலையெய்ப்ப
வினையிற்றிரள்வெள்ளருவித்திரடேங்கிவீழ
நினைவிற்கடலூடெழலோடுமுணர்ந்துநீங்காச்
சுனையிற்பனைமீன்றிமிலோடுதொடர்ந்துதுள்ள. (௫0)

கொடுநாலொடிரண்டுகுலப் * பகை † குற்றமூன்றும்
சுடுஞானம்வெளிப்படவுய்த்ததுயக்கிலார்போல்
விடநாகமுழைத்தலைவிம்மலுழன்றுநீங்க
நெடுநாள்பொறையுற்றவுயிர்ப்புநிமிர்ந்துநிற்ப. (௫௧)

எழுந்தோங்கிவிண்ணோடுமண்ணொக்கவிலங்குமாடி
உழுந்தோடுகாலத்திடையும்பரிணிம்பரெங்கும்
கொழுந்தோடிநின்றகொழுங்குன்றைவியந்துநோக்கி
அழுங்காமனத்தண்ணலிதென்கொலெனாவயிர்த்தான். (௫௨)

நீர்மேற்படாநெடுங்குன்றுநிமிர்ந்துநிற்றல்
சீர்மேற்படாதெனச்சிந்தையுணர்ந்துசெல்வான்
வேர்மேற்படவன்றலைகீழ்ப்படநூக்கிவிண்ணோர்
ஊர்மேற்படரக்கடிதும்பரின்மீதுயர்ந்தான். (௫௩)

உந்தாமுனுலைந்துயர்வேலையொளித்தகுன்றம்
சிந்தாகுலமுற்றதுபின்னருந் ‡ தீர்விலன்பால்
வந்தோங்கியாண்டோர்சிறுமானிடவேடமாகி
எந்தாயிதுகேளெனவின்னவிசைத்ததன்றே. (௫௪)

வேற்றுப்புலத்தோனெனலையவிலங்கலெல்லாம்
மாற்றுச்சிறையென்றரிவச்சிரமாணவோச்ச
வீற்றுப்படநூறியவேலையின்வேலையுய்த்துக்
காற்றுக்கிறைவனெனைக்காத்தனனன்புகாக்க. (௫௫)

அன்னானருங்காதலனாதலினன்புதூண்ட
என்னாலுனக்கீண்டுசெயற்கரிதாயதின்மை
பொன்னார்சிகரத்திடையாறினைபோதியேனும்
உன்னாலுயர்ந்தேனுயர்விற்குமுயர்ந்ததோளாய். (௫௬)

கார்மேகவண்ணன் § பணிபூண்டருங்காலின்மைந்தன்
தேர்வான்வருகின்றதுசீதையைத்தேவருய்யப்
பேர்வானயல்சேறியிதிற்பெறும்பேறிலென்ன
நீர்வேலையுமென்னையுரைத்ததுநீதிநின்றாய். (௫௭)

---

* பகை-யீண்டு காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்களை.

† குற்றமூன்று-ஐயம், திரிபு, அறியாமை.

‡ தீர்வில்-விடுதலில்லாத.

§ பணி-கட்டளை.

நற்றுயினுநல்லனெனக்கிவனென்றுநாடி
இற்றே * யிறையெய்தினேயேய்ந்தது † கோடியென்றல்
பொற்றாரகன்மார்பதம்மில்லுழைவந்தபோதே
உற்றார்செயன்மற்றுமுண்டோவெனவுற்றுரைத்தான். (கஅ)

உரைத்தானுரையாலிவனூறிலனென்பதுன்னி
விரைத்தாமரைவாண்முகம்விட்டுவிளங்குவீரன்
சிரித்தானளவேசிரித்துத்திசைசெல்லநோக்க
வரைத்தாணெடும்பொற்குடுமித்தலைமாடுகண்டான். (கக)

வருந்தேனதுவென்றணைவானவன்வைத்தகாதல்
அருந்தேனினியாதுமென்றைசைசிறப்பினல்லால்
பெருந்தேன் ‡ பொழிசாரனின்னன்புபிணித்தபோதே
இருந்தேனுகர்ந்தேனினிநூங்கினியீவதுண்டே. (௩0)

0 முன்பிற்சிறந்தா § ரிடையுள்ளவர்காதன்முற்றப்
[] பின்பிற்சிறந்தார்குணநன்றிதுபெற்றயாக்கைக்
கென்பிற்சிறந்தாயதொருற்றமுண்டென்னலாமே
அன்பிற்சிறந்தாயதொர்பூசனையார்கணுண்டே. (௩க)

ஈண்டியான்கடிதேகியிலங்கைவிலங்கலெய்தி
ஆண்டானடிமைத்தொழிலாற்றலிஞற்றலுண்டேல்
மீண்டியானுகர்வென்னல்விருந்தெனவேண்டிமெய்ம்மை
பூண்டானவன்கட்புலம்பிற்படமுந்துபோனான். (௩உ)

செவ்வான்கதிருங்குளிர்திங்களுந்தேவர்வைகும்
வெவ்வேறுவிமானமுமீனெடுமேகமற்றும்
எவ்வாயுலகத்தவுநீண்டியிருந்ததம்மின்
ஒவ்வாதனவொத்திடவூழிவெங்காலுமொத்தான். (௩௩)

? நீர்மாக்கடன்மேனியிர்கின்றதிமிர்ச்சிநோக்காப்
பார்மேற்றவழ்சேவடிபாய்நடவாப்பதத்தே
தேர்மேற்குதிகொண்டவனித்திறன்சிந்தைசெய்தான்
ஆர்மேற்கொலென்றெண்ணியருக்கனுமையமுற்றான். (௩௪)

வாளொத்தொளிர்வாலெயிறூழின்மருங்கிமைப்ப
நீளொத்துயர்வாலின்விசும்புநிரம்புமெய்யன்
கோளொத்தவன்மேனிவிசும்பிருகூறுசெய்த
நாளொத்ததுமேலொளிகீழிருளுற்றஞாலம். (௩ரு)

* இறை-கொஞ்சம். † கோடி-அங்கீகரிக்கிறது. ‡ மொழிசாரனின் என்றும் பாடம். 0 முதல்வள்ளல்கள் - இல்லையென்னுமற் கொடுப்பவர்.

§ இடைவள்ளல்கள்-வேண்டக்கொடுப்பவர். [] கடைவள்ளல்கள்-புகழக்கொடுப்பவர்.

? நீர்-ஈண்டு ஊற்றுநீர், ஆற்றுநீர், மேகநீர் ஆக முந்நீரென்க.

மூன்றுற்றதலத்திடைமுற்றியதுன்பம்வீப்பான்
என்றுற்றுவந்தான்வலிமெய்ம்மையுணர்த்துநீயென்
றூன்றுற்றவானோர்குறைநேரவரக்கியாகித்
தோன்றுற்றுநின்றாள்சுரசைப்பெயர்ச்சிந்தைதூயாள். (௬௬)

பேழ்வாயொரரக்கியுருக்கொடுபெட்பினோங்கிக்
கோழ்வாயரியின்குலத்தாய்கொடுங்கூற்றமுட்க
வாழ்வாயெனக்காமிடமாய்வருவாய்கொலென்று
* நீழ்வாய்விசும்பின்றனதுச்சிநெருங்கிநின்றாள். (௬௭)

நீயேயெனலாயபசிப்பிணிதீர்த்தல்செய்வாய்
ஆயேவிரைவுற்றெனையண்மினைவண்மையாள
நீயேயினிவந்தெனிணங்கொள்பிணங்கெயிற்றின்
வாயேபுகுவாய்வழிமற்றிலைவானியென்றாள். (௬௮)

பெண்பாலொருநீபசிப்பீழையொறுக்கநொந்தாய்
உண்பாயெனதாக்கையையானுதவற்குநேர்வல்
விண்பாலவர்நாயகனேவலிழைத்துமீண்டால்
நண்பாலெனச்சொல்லியநல்லறிவாளனக்கான். (௬௯)

காய்ந்தேழுலகங்களுங்காணநின்யாக்கைதன்னை
ஆய்ந்தேபசிதீர்வெனின்றேணையென்றன்னள்சொன்னாள்
ஓர்ந்தானுமிகழ்ந்தொருவேனினதூழில்பேழ்வாய்
சேர்ந்தேகுகின்றேன்வலையாமெனிற்றின்னியென்றான். (௭௦)

அக்காலையரக்கியுமண்டமனந்தமாகப்
புக்கானிறையாதபுகழைப்பெருவாய்திறந்து
விக்காதுவிழுங்கநின்றாளதுநோக்கிவீரன்
திக்காரவள்வாய்சிறிதாம்வகைசேணினீண்டான். (௭௧)

நீண்டானுடனேசுருங்காநிமிர்வாள்வயிற்றின்
ஊண்டானெனவுற்றொருயிர்ப்புயிராதமுன்னர்
மீண்டானதுகண்டனர்விண்ணுறைவோர்களெம்மை
ஆண்டான்வலனென்றலர்தூய்நெடிதாசிசொன்னார். (௭௨)

மின்மேற்படர்நோன்மையனுடல்வீங்கிநீங்கத்
தன்மேனியளாயவடாயினுமன்புதாழ
என்மேன்முடியாதனவென்றினிதேத்திநின்றாள்
பொன்மேனியனுநெடிதாசிபுனைந்துபோனான். (௭௩)

கீதங்களிசைத்தனர்கின்னரர்கீதநின்ற
பேதங்களியம்பினர்பேதையராடல்பின்னர்ப்
பூதங்கடொடர்ந்துபுகழ்ந்தனபூசுரேசர்
வேதங்களியம்பினர்தென்றல்விருந்துசெய்த. (௭௪)

* நீள்-நீழ், என்பதினவெதுகை.

மந்தாரமுந்துமகரந்தமணந்தவாடை
செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைப்பத்
தந்தாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதள்ளும்
கந்தாரவீணைக்களிசெஞ்செவிக்காதுநுங்க. (எரு)

வேறு.

வெங்கார்நிறப்புணரிவேறேயுமொன்றைப்
பொங்கார்கலிப்புனறரப்பொலிவதேபோல்
இங்கார்கடத்திரெனவெண்ணவெழுந்தாள்
அங்காரதாரைபெரிதாலாலமன்னாள். (எசு)

* காதக்கடுங்குறிகணக்கிறுதிகண்ணாள்
பாதச்சிலம்பினொலிவேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிமேனாள்
ஓதத்தின்மேவுமதுகைடவரையொத்தாள். (எஎ)

துண்டப்பிறைத்துணையெனச்சுடரெயிற்றாள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைம்மா
முண்டத்துரித்தவுரியாண்முளரிவந்தான்
அண்டத்தினுக்குறையமைத்தபிலவாயாள். (எஅ)

நின்றாணியிர்ந்தலைநெடுங்கடலினீர்தன்
வன்றாளலம்பமுடிவான்முகடுவவ்வ
அன்றாய்திறத்தவனறத்தையருளோடும்
தின்றாளொருத்தியிவளென்பதுதெரிந்தான். (எகூ)

பேழ்வாயகத்தலதுபேருலகமூடும்
நீழ்வானகத்தினிடையேகுநெறிநேரா
வாழ்வானனுக்கனவளாம்பிலவயிற்றைப்
போழ்வானினைத்தினையவாய்மொழிபுகன்றான். (அ0)

சாயாவரந்தழுவினய்தழியபின்னும்
ஓயாதுவந்தவிசைகண்டுணரகில்லாய்
வாயாலளந்துநெடுவான்வழியடைத்தாய்
நீயாரையென்னையிவணின்றநிலையென்றான். (அக)

பெண்பாலெனக்கருதுபெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்குமுயிர்வீடுறுதன்மெய்யே
கண்பாலடுத்தவுயிர்காலன்வருமேனும்
உண்பானருத்தியதொழிப்பரியதென்றாள். (அஉ)

* காதவழி தூரத்திலுள்ள எப்பொருளாயினும் அப்பொருளி னிழலை யிழுக்கும் அளவுமுடியுள்ள கண்ணை ளென்பதனாலே சாயாக் கிராஹி-நிழலை யிழுக்கிறவள் என்றும் அவளுக்கொருபெயர்.

திறந்தாளெயிற்றையவளண்ணலிடைசென்றான்
அறந்தானரற்றியதயர்த்தமரரெய்த்தார்
இறந்தானெனக்கொடொரிமைப்பதனின்முன்னம்
பிறந்தானெனப்பெரியகோளரிபெயர்ந்தான். (அரு)

* கள்வாயரக்கிகதறக்குடர்கணத்தில்
கொள்வார்தடக்கையின்விசும்பைமிசைகொண்டான்
முள்வாழ்பொருப்பின்முழைமெய்திமிகநொய்தின்
உள்வாளரக்கொடெழுதிண்கலுழனொத்தான். (அச)

சாகாவரத்தலைவரிற்றிலகமன்னான்
ஏகாவரக்கிகுடர்கொண்டெனெழுந்தான்
மாகாலசைப்பவடமண்ணினுறவாலோ
டாகாயமுற்றகதலிக்குவமையானான். (அரு)

ஆர்த்தனர்கள்வானவர்கடானவராழுங்கா
வேர்த்தனர்விரிஞ்சனும்வியந்துமலர்வெள்ளம்
தூர்த்தனனகண்கயிலையிற்றலைவிலோனும்
பார்த்தனன்முனித்தலைவராசிகள்பகர்ந்தார். (அசு)

மாண்டாளரக்கியவள்வாய்வயிறுகாறும்
கீண்டானிமைப்பினிடைமேருகிரிகீழா
நீண்டான்வயக்கதிரினைப்பினெடிதென்றைப்
பூண்டானருக்கனுயர்வானின்வழிபோனான். (அஎ)

சொற்றார்கள்சொற்றதொகையல்லதுணையொன்றோ
முற்றாமுடிந்தநெடுவானினிடைமுந்நீர்
இற்றாவியெற்றெனினும்யானினியிலங்கை
உற்றால்விலங்குமிடையூறெனவுணர்ந்தான். (அஅ)

ஊறுகடிதூறுவனவூறிலறமுன்னாத்
தேறிலியரக்கர்புரிதீமையவைதீர
வேறுவகையாண்டையவிராமனெனவெல்லாம்
மாறுமதின்மாறுபிறிதில்லெனவலித்தான். (அக)

வேறு.

தசும்புடைக்கனகநாஞ்சிற்கடிமதிறரித்துநோக்கான்
அசும்புடைப்பிரசத்தெய்வக்கற்பகநாட்டையண்மி
விசும்பிடைச்செல்லும்வீரன்விலங்கிவேறிலங்கைமூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர்பவளமால்வரையிற்பாய்ந்தான். (கூ0)

* கள்வாய்-கள்ளை ஒழுகவிடுகிறவாய் என உருபும் முடிக்குஞ் சொல்லுந் தொக்கதொகை.

மேக்குறச்செல்வோன்பாயவிலங்கிநீரிலங்கைவெற்பு
நூக்குறத்தங்குமிங்குந்தள்ளுறநுடங்குநோன்மை
போக்கினுக்கிடையூறுகப்புயலொடுபொதிந்தவாடை
தாக்குறத்தளர்ந்துசிந்துங்கலமெனத்தக்கதன்றே. (௧௧)

மண்ணடியுற்றுமீதுவானுறவரம்பின்றன்மை
எண்ணடியுற்றகுன்றத்தலத்துநின்றெய்தநோக்கி
விண்ணிடையுலகமென்னுமெல்லியன்மேனிநோக்கக்
கண்ணடிவைத்ததன்னவிலங்கையைத்தெரியக்கண்டான். (௧௨)

நன்னகரதனைநோக்கிநளினக்கைமறித்துநாகர்
பொன்னகரிதனையொக்குமென்பதுபுல்லி * தம்மா
அந்நகரிதனினன்றேயண்டத்தைமுழுதுமாள்வான்
இந்நகரிருந்துவாழ்வானிதுவதற்கேதுவென்றான். (௧௩)

மாண்டதோர்நலத்திற்றுமென்றுணர்த்துதல்வாய்மைத்தன்றால்
வேண்டியவேண்டினெய்திவெறுப்பின்றிவிழைந்ததுய்க்கும்
† ஈண்டரும்போகவின்பமீறிலதியாண்டுக்கண்டாம்
ஆண்டதுதுறக்கமஃதேயருமறைத்துணிவுமம்மா. (௧௪)

உட்புலனெழுநூறென்பர்யோசனையுலகமுன்றில்
தெட்புறுபொருள்களெல்லாமிதனுழைச்செறிந்தவென்றால்
நுட்புலனுணைங்குகேள்வியுழைபுலவொளினுநோக்கும்
கட்புலன்வரம்பிற்றுமேகாட்சியுங்கரையிற்றுமே. (௧௫)

க-வது, கடறுவுபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௫.

---

## உ-வது, ஊர்தேடுபடலம்.

பொன்கொண்டிழைத்துமணியைக்கொடுபொதிந்த
மின்கொண்டமைத்தவெயிலைக்கொடுசமைத்த
என்கொண்டியற்றியவெனத்தெரிகிலாத
வன்கொண்டல்விட்டுமதிமுட்டுவனமாடம். (௧)

நாகாலயங்களொடுநாகருலகுந்தம்
பாகார்மருங்குதுயில்வென்னவுயர்பண்ப
ஆகாயமஞ்சவகன்மேருவையனுக்கும்
மாகால்வழங்குசிறுதென்றல்வரநின்ற. (௨)

* அம்மா-அசை. அதிசயக்குறிப்பாவதோரிடைச்சொல்.
† ஈண்டரும்-கிடைக்கவரிதான.

மாகாரின்மின்கொடிமடக்கினரடுக்கி
மீகாரமெங்கணுநறுந்துகள்விளக்கி
ஆகாயகங்கையினையங்கையினினள்ளிப்
பாகாயசெஞ்சொலவர்வீசுபடுகாரம். (௩)

வேறு.

பஞ்சியூட்டியபாட்டிசைக்கிண்கிணிப்பதுமஞ்
செஞ்செவிச்செழும்பவளத்தின்கொழுஞ்சுடர்சிதறி
மஞ்சினஞ்சனநிறமறைத்தரக்கியர்வடித்த
அஞ்சிலோதியோடுவமையவவர்க்குறுமுவமை. (௪)

நாணநாண்மலர்க்கற்பகநறுவிரைநாறப்
பானம்வாயுறவெறுத்ததாளாறுடைப்பறவை
தேனவாவிரைச்செழுங்கழுநீர்த்துயில்செய்ய
வானயாறுதம்மரமியத்தலந்தொறுமடுத்த. (௫)

குழலும்வீணையும்யாழுமென்றினையனகுழைய
மழலைமென்மொழிகிளிக்கிருந்தளிக்கின்றமகளிர்
சுழலுநன்னெடுந்தடமணிச்சுவர்தொறுந்துவன்றும்
நிழலுந்தம்மையுமெய்ம்மைநின்றறிவருநிலைய. (௬)

இனையமாடங்களிந்திரற்கமைவரவெடுத்த
மனையின்மாட்சியவென்னினச் * சொல்லுமாசுண்ணும்
அனையதாமெனினரக்கர்தந்திருவுக்குமளவை
நினையலாமன்றியுவமையுமன்னதாநிற்கும். (௭)

மணிகளொத்துணைபெரியவுமாறிருமார்பின்
அணியுங்காசினுக்ககன்றனவுளவெனலரிதால்
திணியுநன்னகர்த்திருமனைதெய்வமாத்தச்சன்
துணிவின்வந்தனன்றெட்டழகிழைத்தவத்தொழில்கள். (௮)

வாழுமன்னுயிர்யாவையுமொருவழிவாழ
வூழிநாயகன்றிருவயிறொத்துளதிவ்வூர்
ஆழியண்டத்தினருக்கன்றனலங்குதேர்ப்புரவி
ஏழுமல்லனவீண்டுளகுதிரையுமெல்லாம். (௯)

மரமடங்கலுங்கற்பகமனையெலாங்கனகம்
அரமடந்தையர்சிலதியரரக்கியர்க்கமரர்
உரமடங்கிவந்துழையராயுழல்பவரொருவர்
தரமடங்குவதன்றிதுதவஞ்செய்ததவமால். (௧௦)

* தோஷமில்லாத சொற்களைத் தோஷமுள்ள பொருள்மேல் ஆரோபிக்கலாகாதென்பார் சொல்லுமாசுண்ணுமென்றார்.

போரியைந்தனதோற்றவென்றிகழ்தலிற்புறம்போய்
நேரியன்றவன்றிசைதொறுமின்றமாதிற்க
ஆரியந்தனியையங்கரக்களிறுமோராழிச்
சூரியன்றனித்தேருமேயிந்நகர்தொகாத. (கக)

தேவரென்பவர்யாருமித்திருநகர்க்கிறைவற்
கேவல்செய்கிலாரேவரேயெண்வகையுருவின்
மூவர்தம்மினுமதிகனென்ருலவன்முயலும்
தாவின்மாதவமல்லதுபிறிதொன்றுதருமோ. (கஉ)

தழங்குபேரியினார்கலிதகைநெடுங்களிறு
முழங்குமோதையுமூரிநீர்முழக்கொடுமுழங்கும்
கொழுங்குழற்புதுக்குதலையர்நூபுரக்குரலின்
வழங்குமப்பெருந்துழனிகள்வயின்ருெறுமறையும். (கங)

மரகதத்தினுமற்றுளமணியினும்வனைந்த
குரகதத்தடந்தேரினமவையயில் * கொட்டில்
இரவிவெள்கநின்றிமைக்கின்றவியற்கையவென்ருல்
நரகமொக்குமானன்னெடுந்துறக்கமிந்நகர்க்கு. (கச)

திருகுறுஞ்சினத்தரக்கருங்கருத்திறந்தீர்ந்தார்
அருகுபோகின்றதிங்களுமறுவற்றதழகைப்
பருகுமிந்நகர்த்துன்னொளிபாய்தலிற்பசும்பொன்
உருகுகின்றதுபோன்றுளதுலகுசூழுவரி. (கரு)

அண்டமுற்றவும்வெங்கிருளகற்றுமின்றலரி
கண்டவாற்றினிக்கடிநகர்நெடுமனைக்கதிர்கள்
உண்டவாற்றினென்றுரைப்பரிதொப்பிடிற்றன்முன்
விண்டவாய்ச்சிறுமின்மினியென்னவும்விளங்கா. (கசு)

† தேனுஞ்சாந்தமுமான்மதஞ்செறிநறுஞ்சேறும்
வானநாண்மலர்க்கற்பகமலர்களும்வயமாத்
தானவாரியுமீரொடுமெத்தலிற்றழீஇய
மீனுந்தானுமோர்வெறிமணங்கமழுமாம்வேலை. (கஎ)

தெய்வத்தச்சனைப்புகழ்துமோசெங்கண்வாளரக்கன்
மெய்யொத்தாற்றியதவத்தையேவியத்துமோவிரிஞ்சன்
ஐயப்பாடிலாவரத்தையேமதித்துமோவறியாத்
‡ தொய்யற்சிந்தையாம்யாவரையாதென்றுதுதிப்பாம். (கஅ)

* கொட்டில்-சாலைகள், காடிகாளு.
† தேன்-வண்டு அத்தர்.
‡ தொய்யல்-வைரதல்.

வேறு.

வானுந்நிலனும்பெறுமாறின்றிமற்றுமுண்டோ
கானும்பொழிலும்மிவைசெங்கனகத்தினாலும்
ஏனைம்மணியாலுமியற்றியவேனும்யாவும்
தேனும்மலருங்கனியுந்தரச்செய்தசெய்கை. (௧௯)

வேறு.

நீரும்வையமுநெருப்புமேனியிர்நெடுங்காலும்
வாரிவானமும்வழங்கலவாகுந்தன்வளர்ச்சி
ஊரினிந்நெடுங்கோபுரத்துயர்ச்சிகண்டுணர்ந்தால்
மேருவெங்ஙனம்விளர்க்குமோமுழுமுற்றும்வெள்ளி. (௨0)

முன்னம்யாவருமிராவணன்முனியுமென்றெண்ணிப்
பொன்னின்மாநகர்மீச்செலான்கதிரெனப்புகல்வார்
கன்னியாரையிவ்வொளியினிற்கண்வழுக்குறுதல்
உன்னிநாடொறும்விலங்கினன்போதலையுணரா. (௨௧)

தீயசெய்குநர்தேவராலனையவர்சேரும்
வாயிலல்லதோர்வரம்பமைக்குவமெனமதியாக்
காயமென்னுமக்கணக்கறுபதத்தையுங்கடக்க
எயுநன்மதிலிட்டனன்கயிலையையெடுத்தான். (௨௨)

கறங்குகால்புகாகதிரவனொளிபுகாமறலி
மறம்புகாதினிவானவர்புகாரென்கைவம்பே
* திறம்புகாலத்துள்யாவையுஞ்சிதையினுஞ்சிதையா
அறம்புகாதிந்தவணிமதிட்கிடக்கைநின்றகத்தின். (௨௩)

கொண்டவான்றிரைக்குரைகடலிடையதாய்க்குடுமி
எண்டவாவிசும்பெட்டநின்றிமைக்கின்றவெழிலால்
பண்டைநாகணைப்பள்ளியானுந்தியிற்பயந்த
அண்டமேயுமொத்திருந்ததவ்வகனகரமைதி. (௨௪)

பாடுவார்பலரென்னின்மற்றவரினும்பலரால்
ஆடுவார்கண்மற்றவரினும்பலருள † ரமைதி
கூடுவாரிடையின்னியங்கொட்டுவார்முட்டில்
வீடுகாண்குறுந்தேவரால்விழுநடங்காண்பார். (௨௫)

வானமாதரோடிகலுவர்விஞ்சையர்மகளிர்
ஆனமாதரோடாடுவரியக்கியரவரைச்
சோனைவார்குழலரக்கியர்தொடர்குவர்தொடர்ந்தால்
ஏனைநாடியராருநடக்கிரியையாய்ந்திருப்பார். (௨௬)

---

* திரம்புகாலம்—அழியுங்காலம்.

† அமைதி கூடுதலாவது-கல்யாணம் உற்சவங்கள் முதலானவை நடக்கிற இடங்களில் ஒருசேரக்கூடுதல்.

* இழையுமாலையுமாடையுஞ்சாந்தமுமேந்தி
உழையரென்னநின்றுதவுவநிதியங்களொருவர்
விழையும்போகமேயிங்கிதுவாய்கொண்டுவிளம்பின்
குழையுநெஞ்சினானினையினுமாசென்றுகொள்ளும். (௨௭)

பொன்னின்மால்வரைமேன்மணிபொழிந்தனன்பொருத்தி
உன்னுநான்முகத்தொருவனின்றாழ்முறையுரைக்கப்
பன்னிநாள்பலபணியுமன்றரிதினிற்படைத்தான்
சொன்னவானவர்தச்சனுமிந்நகர்துதிப்பான். (௨௮)

மகரவீணையின்மந்திரகீதத்தின்மறைந்த
சகரவேலையினார்கலிதிசைமுகன்றடவும்
சிகரமாளிகைத்தலந்தொறுந்தெரிவையர்நிவந்த
அகருதூபத்தினமுந்தினமுகிற்குலமனைத்தும். (௨௯)

பளிக்குமாளிகைத்தலந்தொறுமிடந்தொறும்பசுந்தேன்
துளிக்குங்கற்பகத்தண்ணறுஞ்சோலைகடோறும்
அளிக்குந்தேறலுண்டாடுநர்பாடுநராகிக்
களிக்கின்றாரலாற்கவல்கின்றாரொருவரைக்காணேன். (௩0)

தேறன்மாந்தினர்தேனிசைமாந்தினர்செவ்வாய்
ஊறன்மாந்தினரின்னுரைமாந்தினரூடல்
கூறன்மாந்தினரனையவர்த்தொழுதெழுகோபத்
தாறன்மாந்தினரரக்கியர்க்குயிரன்னவரக்கர். (௩௧)

எறித்தகுங்குமத்திளமுலையெழுதியதொழில்கள்
கறுத்தமேனியிற்பொலிந்தனருடலிற்கன்று
மறித்துநோக்கியர்மலரடிமஞ்சுளப்பஞ்சி
குறித்தகோலங்கள்பொலிந்தனவரக்கர்தங்குஞ்சி. (௩௨)

† விளரிச்சொல்லியர்வாயினான்வேலையுண்மிடைந்த
பவளக்காடெனப்பொலிந்ததுபடைநெடுங்கண்ணால்
குவளைக்கோட்டகங்கடுத்ததுகுளிர்முகக்குழுவான்
முளரிக்கானமுமானதுமுழங்குநீரிலங்கை. (௩௩)

வேறு.

எழுந்தனர்திரிந்துவைகுமிடத்ததாயின்றுகாறும்
கிழிந்திலதண்டமென்னுமிதனையேகிளப்பதல்லால்
அழுந்திநின்றவதென்னேயலருளோனாதியாக
ஒழிந்தபேருயிர்களெல்லாமரக்கருக்குறையும்போதா. (௩௪)

---

* இழை-ஆபரணம்.
† விளரி-விளரிப்பண்.

காயத்தாற்பெரியர்வீரங்கணக்கிலருலகங்கல்லும்
ஆய்த்தார்வரத்தின்றன்மையளவற்றாறிதறேற்று
மாயத்தார்நகர்க்கெங்கேனும்வரம்புமுண்டாமேமற்றோர்
தேயத்தார்தேயஞ்சேறல்தெருவிலோர்தெருவின்சேறல். (௫௫)

கழலிலாக்காலுங்காலவயிலிலாக்கையுங்காந்தும்
அழலிலாக்கண்ணுமில்லாவாடவரில்லையன்னோர்
குழலுலாங்களிவண்டார்க்குங்குஞ்சியாற்பஞ்சிகுன்று
மழலையாழ்க்குதலைச்செவ்வாய்மாதருமில்லைமாதோ. (௫௬)

கள்ளுறக்கனிந்த * பங்கியரக்கரைக்கடுத்தகாதல்
புள்ளுறத்தொடர்வமேனிபுலாலுறக்கடிதுபோவ
வெள்ளுறுப்பெயிற்றசெய்யதலையனகரியமெய்ய
உள்ளுறக்களித்தகுன்றினுயர்ச்சியவோடையானை. (௫௭)

வள்ளிநுண்மருங்குலன்னவானவர்மகளிருள்ளம்
தள்ளுறப் † பாணிதள்ளாநடம்புரிதடங்கண்மாதர்
வெள்ளிவெண்முறுவலரேன்ற ‡ மடந்தையர்வெள்குகின்றார்
கள்ளிசையரக்கர்மாதர்களியிடுகுரவைகாண்பார். (௫௮)

ஒறுத்தலோர்திறகமற்றெம்முயர்படைக்கொருங்கிவ்வூர்வந்
திறுத்தலுமெளிதாமற்றும்யாவர்க்குமியக்கமுண்டே
கறுத்தவாளரக்கிமாருமரக்கருங்கழித்துவீசி
வெறுத்தபூண்வெறுக்கையாலேதூருமிவ்வீதியெல்லாம். (௫௯)

வடங்களுங்குழையும்பூணுமாலையுஞ்சாந்தும்யானைக்
கடங்களுங்கலினமா § விலாழியுங்கணக்கிலாத
இடங்களுமிடங்கடோறும்யாற்றெறுடுமெடுத்தவெல்லாம்
அடங்கியதென்னிலென்னேயாழியினாழ்ந்ததுண்டோ. (௬0)

விற்படைபெரிதென்கோயான்வேற்படைமிகுமென்கோயான்
மற்படையுளதென்கோயான்வாட்படைவலிதென்கோயான்
கற்பணந்தண்டுபிண்டிபாலமென்றினையகாந்தும்
நற்படையுடைத்தென்கோயானுயகற்குரைக்குநாளில். (௬௧)

என்றனனிலங்கைநோக்கியினையனபலவுமெண்ணி
நின்றவாளரக்கர்வந்துநேரினுநேர்வரென்றுத்
தன்றகையனையமேனிசுருக்கியச்சரளச்சாரற்
குன்றிடையிருந்தான்வெய்யோன்குரைகடல்குளிப்பதானன். (௬௨)

---

* பங்கி-உரோமம்.

† பாணி-இசைப்பாட்டு.

‡ மடந்தையர்-மூடத்தன்மையுள்ளவர், மடம்-அறியாமையாகலால் மடந்தையரென்றது தற்குறிப்பு.

§ விலாழி-வாய்நுரை.

வேறு.

எய்வினை * யிறுதியிற்செல்வமெய்தினான்
ஆய்வினைமனத்திலானறிஞர்சொற்கொளான்
ஏய்வினைநினைக்கிலாவொருவன்மெய்யிலான்
தீவினையெனவிருள்செறிந்ததெங்குமே. (௪௩)

கரித்தமூன்றெயிலுடைக்கணிச்சிவானவன்
எரித்தலையந்தணரிழைத்தயானையை
உரித்தபேருரிவையாலுலகுக்கோருறை
புரித்தனனுமெனப்பொலியும்பொற்பதே. (௪௪)

அணங்கசரவரசர்கோனளவிலாண்டெலாம்
பணங்களின்றலைதொறுமுயிர்த்தபாய்விடம்
உணங்கலிலுலகெலாமுறையினுண்டுவெந்
திணங்கெரிபுகையொடுமெழுந்ததென்னவே. (௪௫)

வண்மைநீங்காநெடுமரபின்வந்தவன்
பெண்மைநீங்காதகற்புடையபேதையைத்
திண்மைநீங்காதவன்சிறைவைத்தானெனும்
வெண்மைநீங்கியபுகழ்விரிந்ததென்னவே. (௪௬)

அவ்வழியவ்விருள்பரந்தவாயிடை
எவ்வழிமருங்கினுமரக்கரேகினார்
செவ்வழிமந்திரத்திசையராயினும்
வெவ்வழியிருடரமிதித்துமீச்செல்வார். (௪௭)

இந்திரன்வளநகர்க்கேகுவாரிகற்
சந்திரனுலகினைச்சார்குவார்கலித்
தந்தகனுறையுளையணுகுவாரியல்
வெந்தொழிலரக்கனதேவன்மேயினார். (௪௮)

பொன்னகர்மடந்தையர்விஞ்சைப்பூவையர்
பன்னகவனிதையரியக்கர்பாவையர்
முன்னினபணிமுறைமாறமுந்துவார்
மின்னினமிடைந்தெனவிசும்பின்மீச்செல்வார். (௪௯)

தேவருமவுணருஞ்செங்கணுகரும்
மேவருமியக்கரும்விஞ்சைவேந்தரும்
யாவரும்விசும்பிருளிரியவீண்டினார்
தாவரும்பணிமுறைதழுவுந்தன்மையார். (௫௦)

† சித்திரப்பத்தியிற்றேவர்சென்றனர்
இத்துணைதாழ்ந்தனமுனியுமென்றுதம்

* இறுதி-கேடு.

† கண்ணிமையாமையால் சித்திரப்பத்தி என்றார்.

முத்திணரங்களுமுடியின்மாலையும்
உத்தரீயங்களுமிரியவோடுவார். (ருக)

தீண்டருந்தீவினைதீக்கத்தீர்ந்துபோய்
மாண்டறவுலர்ந்ததுமாருதிப்பெயர்
ஆண்டகைமாரிவந்தளிக்கவாயிடை
ஈண்டறமுளைத்தெனமுளைத்ததிந்துவே. (ருஉ)

வந்தனனிராகவன்றூதன்வாழ்ந்தனன்
எந்தையேயிந்திரனுமென் * றேமுறு
அந்தமில்கீட்டிசையளகவாணுதற்
சுந்தரிமுகமெனப்பொலிந்துதோன்றிற்றே. (ருங)

கற்றைவெண்கவரிபோற்கடலின்வெண்டிரை
சுற்றுநின்றலமரப்பொலிந்துதோன்றிற்றால்
இற்றதெம்பகையெனவெழுந்தவிந்திரன்
கொற்றவெண்குடையெனக்குளிர்வெண்டிங்களே. (ருச)

தெரிந்தொளிர்திங்கள்வெண்குடத்தினூற்றிரை
முரிந்துயர்பாற்கடன்முகந்துமூரிவான்
சொரிந்ததேயாமெனத்துள்ளிமீனொடும்
விரிந்ததுவெண்ணிலாமேலுங்கீழுமே. (ருரு)

† அருந்தவன்சுரபியேயாதிவானமா
விரிந்தபேருதயமேமடிவெண்டிங்களா
வருந்தலின்முலைகதிர்வழங்குதாரையாச்
சொரிந்தபாலொத்ததுநிலவின்றோற்றமே. (ருசு)

எண்ணுடையனுமன்மேலிழிந்தபூமழை
மண்ணிடைவீழ்கிலமறித்தும்போகில
அண்ணல்வாளரக்கனையஞ்சியாய்கதிர்
விண்ணிடைத்தங்கினபோன்றமீனெலாம். (ருஎ)

எல்லையினிமிரிருட்குறையுமவ்விருள்
கல்லியநிலவின்வெண்முறியுங்கள்வன
புல்லியபகையெனப்பொருவபோன்றன
மல்லிகைமலர்தொறும்பொதிந்தவண்டெலாம். (ருஅ)

வீசுறுபசுங்கதிர்க்கற்றைவெண்ணிலா
ஆசுறவெங்கணுநுழைந்தளாயது
‡ காசுறுகடிமதிலிலங்கைக்காவலூர்த்
தூசுறையிட்டதுபோன்றுதோன்றிற்றே. (ருகூ)

---

* ஏமுறு-சந்தோஷமாகி.

† அருந்தவன்-வசிஷ்டர்.

‡ காசு-ரத்னங்கள்.

இகழ்வரும்பெருங்குணத்திராமனெய்ததோர்
பகழியின்செலவெனவனுமன்பற்றினால்
அகழ்புகுந்தரண்புகுந்திலங்கையன்னவன்
புகழ்புகுந்துலாயதோர்பொலிவும்போன்றதே (௬0)

அவ்வழியனுமனுமணுகலாம்வகை
எவ்வழியென்பதையுணர்வினெண்ணினான்
செவ்வழியொதுக்கினன்றேவரேத்தப்போய்
வெவ்வழியரக்கரூர்மேவன்மேயினான். (௬௧)

வேறு.

ஆழியகழாகவரிதாயமரர்வாழும்
எழுலகின்மேலைவெளிகாறுமுகடேறிக்
கேழரியபொன்கொடுசமைத்தகிளர்வெள்ளத்
தாழிதிரிநாளுமுலையாமதிலையுற்றான். (௬௨)

கலங்கலில்கடுங்கதிர்கண்மீதுகடிதேகா
அலங்கலயில்வஞ்சகனையஞ்சியெனினன்றால்
இலங்கைமதிலிங்கிதனையேறலரிதென்றே
விலங்கியகல்கின்றனவிரைந்தெனவியந்தான். (௬௩)

தெய்வவளவிலாதவிறைசேறலுளதென்றால்
அவ்வளவதன்றரணமண்டமிடையாக
எவ்வளவிலுண்டுவெளியீறுமதுவென்னா
வெவ்வளவரக்கனைமனக்கொளவியந்தான். (௬௪)

மடங்கலரியேறுமதமால்களிறுநாண
நடந்துதனியேபுகுதுநம்பிநனிமூதூர்
அடங்கரியதானையயிலந்தகனதானைக்
கடுந்திறலின்வாயனையவாயிலெதிர்கண்டான். (௬௫)

மேருவைநிறுத்திவெளிசெய்ததுகொல்விண்ணோர்
ஊர்புகவமைத்தபடிகால்கொலுலகேழும்
சோர்விலநிலைக்கநடுவிட்டதொருதாணோ
நீர்புகுகடற்குவழியோவெனநினைந்தான். (௬௬)

எழுலகின்வாழுமுயிர்யாவையுமெதிர்ந்தால்
ஊழின்முறையன்றியுடனேபுகுதலுண்டே
வாழியரியங்குவழியீதெனவகுத்தால்
ஆழியுளவேழினளவன்றுபகையென்றான். (௬௭)

வெள்ளமொருநூறொடொருநூறுமுடைவீரக்
கள்ளவினைவெவ்வலியரக்கரிருகையும்

முள்ளெயிறும்வாளுமுறமுன்னமுறைநின்றார்
எள்ளரியகாவலினையண்ணலுமெதிர்ந்தான். (௬௮)

சூலமழுவாளொடயிறோமரமுலக்கை
காலவரிவிற்பகழிகற்பணமுசுண்டி
கோல்கணையநேமிகுலிசஞ்சுரிகைகுந்தம்
வாலமுதலாயுதம்வலித்தனர்வலத்தார். (௬௯)

அங்குசநெடுங்கவணயிற்சிலைவழங்கும்
வெங்குலிசயபாசமுதல்வெய்யபயில்கையார்
செங்குருதியன்னசெறிகுஞ்சியர்சினத்தோர்
பங்குனிமலர்ந்தொளிர் * பலாசவனமொப்பார். (௭௦)

அளக்கவரிதாகியகணக்கொடயனிற்கும்
விளக்கினமிருட்டனைவிழுங்கிவெளிகால
உளக்கடியகாலன்மனமுட்குமணிவாயில்
இளக்கமில்கடற்படையிருக்கையையெதிர்ந்தான். (௭௧)

எவ்வமரரெவ்வவுண † ரெவ்வருளரென்னை
கவ்வைமுதுவாயிலினெடுங்கடைகடப்பார்
தெவ்வரிவர்சேமமிதுசேவகனும்யாமும்
வெவ்வமர்தொடங்கிடினெனுய்விலையுமென்றான். (௭௨)

கருங்கடல்கடப்பதரிதன்றுநகர்காவற்
பெருங்கடல்கடப்பதரிதெண்ணமிறைபேரின்
அருங்கடன்முடிப்பதரிதாமமர்கிடைக்கின்
நெருங்கமர்கிடக்குநெடுநாளெனநினைந்தான். (௭௩)

வாயில்வழிசேறலரிதன்றியும்வலத்தோர்
ஆயிலவர்வைத்தவழியேகலழ ‡ கன்றால்
காய்கதிரியக்கின்மதிலைக்கடிதுதாவிப்
போயிநகர்புக்கிடுவெனென்றோரயல்போனான். (௭௪)

வேறு.

நாணாளுந்தானல்கியகாவனனி § மூதூர்
வாணாளந்நாள்போவதின்மேலேவழிநின்றாள்
தூணாமென்னுந்தோளுடையானைச்சுடரோனைக்
காணாவந்தகட்செவியென்னக்கனல்கண்ணாள். (௭௫)

---

* பலாசவனம்-செம்முருக்கவனம்.

† எவர்-எவ்வரென விரித்தல் விகாரம்.

‡ அன்று-ஒருமைமுடிபு, அல்ல பன்மைமுடிபு, என்பதுணர்க.

§ மூதூர்வாழ்நாளன்னாள் என்றும் பாடம் பெரியஊரிலே வர்த்திக்கிறகாலத்தில் அந்நாள் என்றும் அவ்வூருக்கு ஆயுள்போன்றவள் என்றும் ஆகவே இவள்முடிந்தால் அவ்வூரும் முடிந்தழியுமென்பது கருத்து.

எட்டுத்தோளானுலுமுகத்தானுலகேழும்
தொட்டுப்பேருஞ்சோதிநிறத்தாள்சுழல்கண்ணுள்
முட்டிப்பேரின் * மூவுலகத்தைமுதலோடும்
கட்டிச்சீறுங்காவல்வலத்தாள் † கமையில்லாள். (எசு)

பாராநின்றுளெண்டிசைதோறும்பலரப்பால்
வாராநின்றூரோவெனமாரிமழையேபோல்
ஆராநின்றுணாபுரமச்சந்தருதாளாள்
வேராமெய்யாண்மின்னினிமைக்குமிளிர்பூணுள். (எஎ)

வேல்வாள்சூலம்வெங்கதைபாசம் ‡ விளிசங்கம்
கோல்வாள்குந்தங்கொண்டகரத்தாள்வடகுன்றம்
போல்வாடிங்கள்போழினெயிற்றுள்புகைவாயில்
கால்வாள்காணிற்காலனுமுட்குங்கதமிக்காள். (எஅ)

§ அஞ்சுவணத்துடையுடுத்தாளரவெல்லாம்
0 அஞ்சுவணத்தின்வேகமிகுத்தாளருளில்லாள்
? அஞ்சுவணத்தினுத்தரியத்தாளலையாரும்
0 அஞ்சுவணத்தின்முத்தொளிராரத்தணிகொண்டாள். (எகூ)

சிந்தாரத்தின்செச்சையணிந்தாள்தெளிநூல்யாழ்
அந்தாரத்தினேர்வருசொல்லாளறைதும்பி
கந்தாரத்தினின்னிசைபாடிக்களிகூரும்
மந்தாரத்தின்மாலையலம்புமகுடத்தாள். (அ0)

எல்லாமுட்குமாழியிலங்கையிகன்மூதூர்
நல்லாளவ்வூர்வைகுறையொக்குநயனத்தாள்,
நில்லாய்நில்லாயென்றுரைநேர்வாணிலையாமுன்
வல்லேசென்றுண்மாருதிகண்டான்வருகென்றுன். (அக)

ஆகாசெய்தாயஞ்சலைபோலுமறிவில்லாய்
சாகாமூலந்தின்றுழல்வார்பாற்சலமென்னும்
பாகாரிஞ்சிப்பொன்மதிற்றாவிப்பதையாதே
போகாவென்றுள்பொங்கனலென்னப்புகைகண்ணுள். (அஉ)

களியாவுள்ளத்தண்ணன்மனத்திற்கதமூழ்க
விளியாநின்றேநீதிநலத்தின்விலையோர்வான்
அளியாலிவ்வூர்காணுநலத்தினணைகின்றேன்
எளியேனுற்றால்யாவதுனக்கிங்கிழவென்றுன். (அங)

---

* மூவுலகத்தை-இராவணனுடைய உட்கோட்டையான மூன்றரணையும். † கமை-பொறுமை. ‡ விளி-ஒளிக்கின்ற. § அஞ்சுவணத்தின்-பஞ்சவர்ணங்களுள்ள. 0 அஞ்சு உவணத்தின்—பயப்படும்படியான கருடனைப்போல. ? அம் சுவணத்தின்-அழகான சுவர்ணத்தாலான. 0 அம்சுவள்நத்தின்-நீரிலுள்ள நல்ல பிரகாசமுடைய சங்கிலுண்டான.

என்னுமுன்னமேயெனவேகாதெதிர்மாற்றம்
சொன்னாயேநீயாவனடாதொல்புரமட்டான்
அன்றேரேனுமஞ்சுவரெய்தற்கரியுற்றால்
உன்றெலெய்துமூர்கொலிவ்வூரென் றுநக்காள். (அசு)

நக்காளைக்கண்டையன்மனத்தோர்நகைகொண்டான்
நக்காய்நீயார்யார்சொலவந்தாயுனதாவி
உக்காலேதாமோடலையென்றானினியிவ்வூர்
புக்காலன்றிப்போகிலெனென்றான்புகழ்கொண்டான். (அ௬)

வஞ்சங்கொண்டான்வானரமல்லன்வருகாலன்
துஞ்சுங்கண்டாலென்னையிவன்சூழ்திரையாழி
நஞ்சங்கொண்டகண்ணுதலைப்போனகுகின்றான்
நெஞ்சங்கண்டேகல்லெனநின்றேநினைவுற்றாள். (அ௯)

கொல்வாமன்றேற்கோளுறுமிவ்வூரெனல்கொண்டாள்
வெல்வாய்நீயேவென்றியெனத்தன்விழிதோறும்
வல்வாய்தோறும்வெங்கனல்பொங்கமதில்வாயில்
செல்வாயென்றுமூவிலைவேலைச்செலவிட்டாள். (அஎ)

தடித்தாமென்னத்தன்னெதிர்செல்லுந்தழல்வேலைக்
கடித்தாறுகம்விண்ணின்முரிக்குங்கருளன்போல்
ஒடித்தான்கையாலும்பருவப்பவுயர்காலம்
பிடித்தானைஞ்சந்துண்ணெனவெண்ணம்பிழையாதாள். (அஅ)

இற்றுச்சூலநீறெழுகாலத்தெரியொப்பாள்
மற்றுத்தெய்வப்பல்படைகொண்டுமலைவாண்மேல்
உற்றுக்கையாலாயுதமெல்லாமொழியாமல்
பற்றிக்கொள்ளாவிண்ணிலெறிந்தான்பழியோர்வான். (அகூ)

வழங்குந்தெய்வப்பல்படைகாணுன்மலைவான்மேல்
முழங்கும்மேகமென்னவுரப்பிமுதிர்கின்றாள்
கழங்கும்பந்துங்குன்றுகொடாடுங்கரமோச்சித்
தழங்குஞ்செந்தீச்சிந்தவடித்தா * டகவில்லாள். (௯0)

அடியாமுன்னமங்கையனைத்துமொருகையால்
பிடியாவென்னேபெண்ணிவள்கொல்விற்பிழையென்று
ஒடியாநெஞ்சத்தோரடிகொண்டானுயிரோடும்
இடியேறுண்ட † நாகமெனப்பாரிடைவீழ்ந்தாள். (௯க)

விழுந்தாளைந்தாள்வெங்குருதிச்செம்புனல்வெள்ளத்
தழுந்தாநின்றானுன்முகனூர்தம்மருளேன்றி

---

* தகவில்லாள்-புத்தியில்லாதவள்.
† நாகம்-ப

எழுந்தாள்யாரும்யாவையுமெல்லாவுலகத்தும்
தொழுந்தாள்வீரன்றாதுவன்முன்னின்றிவைசொன்னாள். (௯௨)

வேறு.

ஐயகேள்வையநல்குமயனருளமைதியாக
எய்தியிம்மூதூர்காப்பெனிலங்கைமாதேவியென்பேர்
செய்தொழிலிழுக்கியுள்ளந்திகைத்திந்தச்சிறுமைசெய்தேன்
உய்தியென்றளித்தியாயினுணர்த்துவலுண்மையென்றாள். (௯௩)

எத்தனைகாலங்காப்பல்யானிந்தமூதூரென்று
* முத்தனைவினவினேற்குமுரண்வலிக்குரங்கொன்றுன்னைக்
கைத்தலமதனாற்றீண்டிக்காய்ந்தவன்றென்னைக்காண்டி
சித்திரநகரம்பின்னைச்சிதைவதுதிண்ணமென்றான். (௯௪)

அன்னதேமுடிந்ததையவறம்வெல்லும்பாவந்தோற்கும்
என்னுமீதியம்பவேண்டுந்தகையதோவினிமற்றுன்னால்
உன்னியவெல்லாமுற்றுமுனக்குமுற்றாததுண்டோ
பொன்னகர்புகுதியென்னாப்புகழ்ந்தவளிறைஞ்சிப்போனாள். (௯௫)

வீரனும்விரும்பிநோக்கிமெய்ம்மையேவிளையுமஃதென்
றாரியன்கமலபாதமகத்துறவணங்கியாண்டப்
பூரியரிலங்கைமூதூர்ப்பொன்மதிலுவிப்புக்கான்
சீரியபாலின்வேலைசிறுபிரைதெறித்ததன்னான். (௯௬)

† வான்றொடர்மணியிற்செய்தமையறுமாடகோடி
ஆன்றபேரிருளைச்சீத்துப்பகல்செய்தவழகைநோக்கி
ஊன்றியவுதயத்துச்சியொற்றைவானுருளைத்தேரோன் [ன்.
தோன்றினன்கொல்லோவென்றவறிவனுந்துணுக்கங்கொண்டா

மொய்ம்மணிமாடமூதூர்முழுதிருளகற்றுந்தானே
மெய்ம்மையேயுணரினாமிகையெனவிலங்கிப்போனான்
இம்மதிலிலங்கைநாப்பணெய்துமேற்றன்பாலெய்து
மின்மினியல்லனோவவ்வெயிற்கதிர்வேந்தனென்றான். (௯௮)

பொசிவுறுபசும்பொற்குன்றிற்பொன்மதினடுவட்பூத்து
வசையறவிளங்குஞ்சோதிமணியினாலமைந்தமாடத்
தசைவிலவிலங்கைமூதூராரிருளின்மையாலே
‡ நிசிசரராயிற்றம்மாநெடுநகர்நிருதரெல்லாம். (௯௯)

என்றனனியம்பிவீதியேகுதலிழுக்கமென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கிமாளிகையின்சாரல்

---

* முத்தனை-பிரமனை.

† வான்றொடர்மணி-வானிலே செல்லுகிறதினாலே அந்தரமணி, விண்மணியென்று சூரியனுக்குப்பெயர்.

‡ நிசிசரர்-இராக்காலத்திலும் சஞ்சரிக்கிறவர்கள்.

சென்றனனென்பமன்னோதேவருக்கமுதமீந்த
குன்றெனவயோத்திவேந்தன்புகழெனக்குவவுத்தோளான். (௧00)

ஆத்துறுசாலைதோறுமானையின்கூடந்தோறும்
மாத்துறுமாடந்தோறும்வாசியின்பந்திதோறும்
காத்துறுகடைகடோறுங்கருங்கடல்கடந்தகாலால்
பூத்தொறுமவாவிச்செல்லும்பொறிவரிவண்டிற்போனான். (௧0௧)

பெரியநாளொளிகொளுஞவிதமணிப்பித்திப்பத்தி
சொரியுமாநிழல்களாங்குச்சுற்றலாற்காலின்றோன்றல்
கரியனுய்வெளியனுகிச்செய்யனுய்க்காட்டுங்காண்டற்
கரியனுயெளியனுய்த்தன்னகத்துறையழகனேபோல். (௧0௨)

கானகமயில்களென்னக்களி * மடவன்னமென்ன
ஆனனகமலப்போதுபொலிதரவரக்கர்மாதர்
தேனுகுசரளச்சோலை † தெய்வநீராற்றிற்றெண்ணீர்
வானவர்மகளிராட்டமஞ்சனமாடுவாரை. (௧0௩)

ஈட்டுவார்தவமலான்மற்றீட்டிறைலியைவதின்மை
காட்டினார்விதியாரஃதுகாண்கிற்பார்காண்மினம்மா
பூட்டுவார்முலைபொருதபொய்யிடையையப்பூநீர்
ஆட்டுவாரமரர்மாதராடுவாரரக்கர்மாதர். (௧0௪)

‡ இலக்கணமரபிற்கேற்றவெழுவகைநரம்பினல்யாழ்
அலத்தகத்தளிர்க்கைநோவவளந்தெடுத்தமைந்தபாடல்
கலக்குறமுழங்கிற்றென்றுசேடியர்கன்னிமார்கள்
மலர்க்கையான்மாடத்தும்பர்மழையின்வாய்பொத்துவாரை. ()

சந்தப்பூம்பந்தர்வேய்ந்ததமனியவரங்கிற்றத்தம்
சிந்தித்ததுவுந்தெய்வமணிவிளக்கொளிருஞ்சேக்கை
வந்தொத்துந்துரிதமாக்கள்விளம்பிதநெறிவழாமை
கந்தர்ப்பமகளிராடுநாடகங்காண்கின்றாரை. (௧0௬)

திருத்தியபளிக்குவேதிதெள்ளியவேல்களென்னக்
கருத்தியல்புரைக்குமுண்கட்கருங்கயல்செம்மைகாட்ட
வருத்தியகொழுநர்தம்பால்வரம்பின்றிவளர்ந்தகாம
வருத்தியபயிர்க்குநீர்போலருநறவருந்துவாரை. (௧0௭)

கோதறுங்குவளைநாட்டங்கொழுநர்கணுட்டங்கொள்ளத்
தூதுளங்கனியைவென்றதுவர்த்தவாய்வெண்மைதோன்ற
மாதருமைந்தர்தாமுமொருவர்மேலொருவர்வைத்த
காதலங்கள்ளுண்டார்போன்முறைமுறைகளிக்கின்றாரை. (௧0௮)

---

* மடவன்னம்-முக்தபருவமுள்ள அம்சம்.
† தெய்வநீர்-தெய்வத்தன்மை. ‡ இலக்கணமரபு-இலக்ஷணக்ரமம்.

* விற்படர்பவளப்பாதத்தலத்தகமெழுதிமேனி
பொற்பளவில்லாவாசப்புனைநறுங்கலவைபூசி
அற்புதவடிக்கண்வாளினஞ்சனமெழுதியந்தில்
கற்பகங்கொடுக்கவாங்கிக்கலன்றெரிந்தணிகின்றாரை. (௧0௯)

புலியடுமதுகைமைந்தர்புதுப்பிழையுயிரைப்புக்கு
நலிவிடவமுதவாயானச்சுயிர்த்தயிற்கணல்லார்
மெலிவுடைமருங்குன்மின்னினலமரச்சிலம்புவிம்மி
ஒலிபடவுதைக்குந்தோறுமயிர்புளகுதிக்கின்றாரை. (௧௧0)

உள்ளுடைமயக்காலுண்கண்சிவந்துவாய்வெண்மையூறித்
துள்ளிடைப்புருவங்கோட்டித்துடிப்பவேர்பொடிப்பத்தாய
வெள்ளிடைமருங்குலார்தம்மதிமுகம்வேறொன்றாகிக்
கள்ளிடைத்தோன்றநோக்கிக்கணவரைக்கவல்கின்றாரை. (௧௧௧)

ஆலையின்மலையின்சாரன்முழையினிலமுதவாரிச்
சோலையிற் † றுவசரில்லிற்சோனகர்மனையிற்றூய
வேலையிற்கொளவொணாதவேற்கணார்குமுதச்செவ்வாய்
வாலெயிற்றூறுதீந்தேன்மாந்தினர்மயங்குவாரை. (௧௧௨)

நலனுறுகணவர்தம்மைநவையுறப்பிரிந்துநல்கு
முலையுறுகலவைதீயமுள்ளிலாமுளரிச்செங்கேழ்
மலர்மிசைமலர்பூத்தென்னமலர்க்கையால்வதனந்தாங்கி
உலவருமுயிரினோடுநெடிதிருந்துயிர்க்கின்றாரை. (௧௧௩)

ஏதியங்கொழுநர்தம்பாலெய்தியசலத்தர்வைகும்
தாதியங்கமளிச்சேக்கையுயிரிலாவுடலிற்சார்வார்
மாதுயர்க்காதறூண்டவழியின்மேல்வைத்தகண்ணார்
தூதியர்முறுவனோக்கியுயிர்வந்துதுடிக்கின்றாரை. (௧௧௪)

சங்கொடுசிலம்புநூலும் ‡ பாதசாலகமுந்தாழப்
பொங்குபன்முரசமார்ப்பவில்லுறைதெய்வம்பேணிக்
கொங்கலர்கூந்தற்செவ்வாயரம்பையர்பாணிகொட்டி
மங்கலகீதம்பாடமறிப்பலிவகுக்கின்றாரை. (௧௧௫)

இழைதொடர்வில்லும்வாளுமிருளொடுமலையயாணர்க்
§ குழைதொடர்நயனக்கூர்வேல்குமரர்நெஞ்சுருவக்கோட்டி
முழைதொடர்சங்கம்பேரிமுகிலெனமுழங்கமூரி
மழைதொடர்மஞ்ஞையென்னவிழாவொடுவருகின்றாரை. (௧௧௬)

பள்ளியின்மைந்தரோடுமூடியபண்புநீங்கி
ஒள்ளியகலவிப்பூசலுடற்றுதற்குருத்தநெஞ்சர்

---

* விற்படர்-ஒளிபரவுவதான. † துவசர்-சாணார்.

‡ பாதசாலகம்-பாதசரம்.

§ குழை-குண்டலமணிந்தகாதென்க.

மெள்ளவேயிமையைநீக்கியஞ்சனவிழுதுவேய்ந்த
கள்ளவாணெடுங்கணென்னும்வாளுறைகழிக்கின்றாரை. (கக௭)

ஓவியமனையமாதருடினருணர்வோடுள்ளம்
மேவியகரணமற்றுங்கொழுநரோடொழியயாணர்த்
தூவியம்பேடையென்னமின்னெனத்துவளவேகி
ஆவியுந்தாமுமேசென்றருங்கதவடைக்கின்றாரை. (கக௮)

* கின்னரமிதுனம்பாடவெண்மழைகிழித்துத்தோன்று
மின்னெனத்தாளம்வேய்ந்தவெண்ணிறவிமானமூர்ந்து
பன்னகமகளிர்சுற்றிப்பலாண்டிசைபரவப்பண்ணைப்
பொன்னகர்வீதிதோறும்புதுமனைபுகுகின்றாரை. (கக௯)

கோவையுங்குழையுமின்னக்கொண்டலின்முரசமார்ப்பத்
தேவர்வந்தாசிகூறமுனிவர்சோபனங்கள்செப்பப்
பாவையர்குழாங்கள்சூழப்பாட்டொடுவானநாட்டுப்
பூவையர்பலாண்டுகூறப்புதுமணம்புணர்கின்றாரை. (க௨0)

இயக்கியராக்கிமார்களுகியரெஞ்சில்விஞ்சை
முயற்கறைமலராத்திங்கண்முகத்தியர்முதலினோரை
மயக்கறநாடியேகுமாருதிமலையின்வைகும்
கயக்கமிறுயிற்சிக்கும்பகருணனைக்கண்ணிற்கண்டான். (க௨க)

வேறு.

ஓசனையேழகன்றுயர்ந்தவும்பரின்
வாசவன்மணிமுடிகவித்தமண்டபம்
ஏசறவிளங்கியதிருளையெண்வகை
† ஆசையினிலைகெடவலைக்கலான்றது. (க௨௨)

அன்னதனடுவணோரமளிமீமிசைப்
பன்னகவரசெனப்பரவைதானெனாத்
துன்னிருளொருவழிதொக்கதாமென
உன்னருந்தீவினையுருக்கொண்டென்னவே. (க௨௩)

முன்னியகனைகடன்முழுகிமூவகைத்
தன்னியல் ‡ கதியொடுதழுவித்தாதுகு
மன்னெடுங்கற்பகவனத்துள்வைகிய
இன்னிளந்தென்றல்வந்திழுகியேகவே. (க௨௪)

வானவர்மகளிர்கால்வருடமாமதி
ஆனனங்கண்டமண்டபத்துளாய்கதிர்க்

---

* கின்னரமிதுனம்-இரட்டைக்கின்னரம்.

† ஆசையினிலைகெட-திக்குகளிலும் நிலையில்லாமற்போக.

‡ கதிமூன்று அதாவது மந்தகதி, தீவிரகதி, அதிதீவிரகதி.

கானகுகாந்தமீக்கான்றகாமர்நீர்த்
தூநிறநறுந்தளிமுகத்திற்ரோற்றவே. (௧௨௫)

மூசியவுயிர்ப்பெனுமுடுகுவாதமும்
வாசலின்புறத்திடைநிறுவிவன்மையான்
நாசியினளவையினடத்தக்கண்டவன்
கூசினன்குறித்தனன்விதிர்த்தகையினன். (௧௨௬)

பூழியின்றொகைவிசும்பணவப்போய்ப்புகும்
கேழில்வெங்கிளர்கிடையுயிர்ப்புக்கேடிலா
வாழியவுலகெலாந்துடைக்குமாருதம்
ஊழியின்வரவுபார்த்துழல்வதொத்ததே. (௧௨௭)

பகையெனமதியினைப்பகுத்துப்பாடுற
வகையில்பேழ்வாய்மடுத்தருந்துவானெனப்
புகையொடுமுழங்குபேருயிர்ப்புப்பொங்கிய
நகையிலாமுழுமுகத்தெயிறுநாறவே. (௧௨௮)

தடைபுகுமந்திரந்தகைந்தநாகம்போல்
இடைபுகலரியதோருறக்கமெய்தினன்
கடையுகமுடிவெனுங்காலம்பார்த்தயல்
புடைபெயராவெங்கடலும்போலவே. (௧௨௯)

வேறு.

ஆவதாகியதன்மையவரக்கனையரக்கர்
கோவெனுநின்றகுணமிலியிவனெனக்கொண்டான்
காவனட்டங்கள்பொறியுகக்கனலெனக்கனன்றான்
ஏவனோவிவன்மூவரினொருவனுமீட்டான். (௧௩௦)

குறுகிநோக்கிமற்றவன்றலையொருபதுங்குறித்த
இறுகுதிண்புயமிருபதுங்கிவனிலனென்று
மறுகியேறியமுனிவெனும்வடவைவெங்கனலை
அறிவெனும்பெரும்பரவையம்புனலினலவித்தான். (௧௩௧)

அவித்துநின்றவனயினுமாகவென்றங்கை
கவித்துநீங்கிடச்சிலபகலென்பதுகருதாச்
செவிக்குத்தேனெனவிராகவன்புகழினைத்திருத்தும்
கவிக்குநாயகனனையவனுறையுளைக்கடந்தான். (௧௩௨)

மாடகூடங்கண்மாளிகையோளிகைமகளிர்
ஆடரங்குக * ளம்பலந்தேவராலயங்கள்
பாடல்வேதிகைபட்டிமண்டபமுதற்பலவும்
நாடியேகினனிராகவன்புகழெனுநலத்தான். (௧௩௩)

* அம்பலம்-பொதுச்சாவடி.

மணிகொள் * வாயிலுட்சாளரத்தாள்களின்மலரில்
கணிகொணுளத்திற்காலினும்புகையினுங்கலக்கும்
நுணுகும்வீங்குமற்றவனிலையாவரே நுவல்வார்
அணுவின்மேருவிளுழியாமெனச்செலுமனுமன். (கருச)

ஏந்தலிவ்வகையெவ்வழிமருங்கினுமெய்திக்
காந்தண்மெல்விரன்மடந்தையர்யாரையுங்காண்பான்
வேந்தர்வேதியர்மேலுளோர்கீழுளோர்விரும்பப்
போந்தபுண்ணியன்கண்ணகன்கோயிலுட்புக்கான். (கருரு)

பளிக்குவேதிகைப்பவளத்தின்கூடத்திற்பசுந்தேன்
துளிக்குங்கற்பகப்பந்தரிற் † கருநிறத்தோரை
வெளித்துவைகுவதரிதெனவவருருமேவி
ஒளித்துவாழ்கின்றதருமமன்னுன்றனையுற்முன். (கருசு)

உற்றுநின்றவனுணர்வைத்தன்னுணர்விளுலுணர்ந்தான்
குற்றமில்லதோர்குணமுளனிவனெனக்கொண்டான்
செற்றநீங்கியமனத்தினனொருசிறைசென்முன்
பொற்றைமாடங்கள்கோடியோர்நொடியிடைப்புக்கான். (கருஎ)

முந்தரம்பையர்முதலினர்முழுமதிமுகத்துச்
சிந்துரம்பயில்வாய்ச்சியர்யாரையுந்தெரிந்து
மந்திரம்பலகடந்தவன்மனத்தின்முன்செல்வான்
இந்திரன்சிறையிருந்தவாயிலின்கடையெதிர்ந்தான். (கருஅ)

எதியேந்தியதடக்கையர்பிறையெயிறிலங்க
மூதுரைப்பெருங்கதைகளும்பிதிர்களுமொழிவார்
ஓதிலாயிரமாயிரமுணர்விலியரக்கர்
காதுவெஞ்சினக்களியினர்காவலைக்கடந்தான். (கருக)

முக்கணுக்கினன்முதன்மகனறுவகைமுகனும்
திக்குநோக்கியபுயங்களுஞ்சிலகரந்தனையான்
ஒக்கநோக்கியர்குழாத்திடையுறங்குகின்முனைப்
புக்குநோக்கினன்புகைபுகாவாயிலும்புகுவான். (கசா)

வளையும்வாளெயிற்றரக்கனேகணிச்சியான்மகனே
அளையில்வாளரியனையவன்யாவனேவறியேன்
இளையவீரனுமேந்தலுமிருவரும்பலநாள்
உளையுவுள்ளபோரிவனெடுமுளதெனவுணர்ந்தான். (கசக)

இவனையின்றுணையுடையபோரிராவணனென்னே
புவனமூன்றையும்வென்றதோர்பொருளெனப்புகறல்

* வாயில்-இல்வாய் மூன்றில்-இல்முன் என்பபோல். † கருநிறத் தோரை ஒளித்தெனக்கூட்டி கருநிறத்தோருக்குப் பயந்து மறைந்து வைகியதருமம் எனக்கொள்க.

சிவனைநான்முகத்தொருவனைத்திருநெடுமாலாம்
அவனையல்லவர்பிகர்ப்பவரென்பதுமறிவோ. (௧௪௨)

என்றுகைம்மறித்திடைநின்றுகாலத்தையிகப்ப
தன்றுபோவதென்றுயிரமாயிரத்தடங்காத்
துன்றுமாளிகையோளிகநிசறத்துருவிச்
சென்றுதேடினனிந்திரசித்தினைத்தீர்ந்தான். (௧௪௩)

அக்கன்மாளிகைகடந்துபோய்மேலதிகாயன்
தொக்ககோயிலும்பொருநர்களில்லமுந்துருவித்
தக்கமந்திரத்தலைவர்கண்மனைகளுந்தாவிப்
புக்குநீங்கினனிராகவன்கழலெனப்புகழோன். (௧௪௪)

இன்னராமிரும்பெரும்படைத்தலைவர்களிருக்கைப்
பொன்னின்மாளிகையாயிரகோடியும்புக்கான்
* கன்னிமாநகர்ப்புறத்தகன்கரந்துறைகாண்பான்
சொன்னமூன்றினுநடுவணத்தகழியைத்தொடர்ந்தான். (௧

தனிக்கடக்களிறனைவொருதுணையிலான்றூய
பனிக்கடற்பெருங்கடவுடன்பரிபவந்துடைப்பான்
இனிக்கடப்பதன்றேழ்கடல்கிடந்தவென்றிசைத்தான்
கனிக்கடற்கதிர்தொடர்ந்தவனகழியைக்கண்டான். (௧௪௬)

பாழிநன்னெடுங்கிடங்கெனப்பகர்வரேற்பல்லோர்
ஊழிகாலநின்றுலகெலாங்கல்லினுமுலவா
ஆழிவெற்பினத்தரக்கனையஞ்சியாழ்கடல்கள்
எழுமிந்நகர்சுலாயதுகொலாமெனவிசைத்தான். (௧௪௭)

ஆயதாகியவகன்புனலகழியையடைந்தான்
தாயவேலையினிருமடிவிசைகொடுதாவிப்
போயகாலத்தும்போக்கரிதென்பதுபுகன்றான்
நாயகன்புகழ்நடந்தபேருலகெலாநடந்தான். (௧௪௮)

வேறு.

மேக்குநால்வகைமேகமுங்கீழ்விழத்
தூக்கினாலன்னதோயத்ததாய்த்துயர்
ஆக்கினான்படையன்னவகழியை
வாக்கினாலுரைவைக்கலுமாகுமோ. (௧௪௯)

ஆனைமும்மதமும்பரியாழியும்
வானமங்கையர்குங்குமவாரியும்
நானமாதர்நறைக்குழலாவியும்
தேனுமாரமுந்தேய்வையுநாறுமால். (௧௫0)

---

* கன்னி - அழியாத.

உன்னுநாரைமகன்றில்புதாவுளில்
அன்னங்கோழிவண்டானங்களாழிப்புள்
இன்னரங்குரண்டங்கிலுக்கஞ்சிரல்
சென்னங்காகங்குணாலஞ் * சிலம்புமே. (௧௫௧)

நலத்தமாதர்நறையகிறாவியும்
அலத்தகக்குழம்புஞ்செறிந்தாடிய
விலக்கணக்கரியோடிளமென்னடைக்
குலப்பிடிக்குமொரூடல்கொடுக்குமால். (௧௫௨)

நறவுநாறியநாணறுந்தாமரை
துறைகடோறுமுகிழ்த்தனதோன்றுமால்
சிறையினெய்தியசெல்விமுகத்தினோ
† டுறவுதாமுடையாரொடுங்கார்களோ. (௧௫௩)

பளிங்குசெற்றிக்குயிற்றியபாயொளி
விளிம்பும்வெள்ளமுமெய்தெரியாதுமேல்
தெளிந்தசிந்தையருஞ்சிறியார்களோ
டளிந்தபோதறிதற்கெளிதாவரோ. (௧௫௪)

நீலமேமுதனன்மணிநித்திலம்
மேலகீழபல்வேறொளிவீசலால்
பாலின்வேலைமுதற்பலவேலையும்
கால்கலந்தனவோவெனக்காட்டுமே. (௧௫௫)

அன்னவேலையகழியையார்கலி
என்னவேகடந்திஞ்சியும்பிற்படத்
துன்னருங்கடிமாநகர்துன்னினான்
பின்னரெய்தியதன்மையும்பேசுவாம். (௧௫௬)

கரியநாழிகைபாதியிற்காலனும்
வெருவியோடுமரக்கர்தம்வெம்பதி
ஒருவனே ‡ யொருபன்னிருயோசனைத்
தெருவுமும்மைநூறாயிரந்தேடினான். (௧௫௭)

வேறு.

வேரியுமடங்கின § நெடுங்கடல்விளம்பும்
() பாரியுமடங்கினதடங்கியதுபாடல்
காரியமடங்கினர்கள்கம்மியர்கண்மும்மைத்
தூரியமடங்கினதொடங்கியதுறக்கம். (௧௫௮)

* சிலம்பும் - ஒலிக்கும். † உறவு - ஒப்பு. ‡ ஒரு - ஒப்பற்ற.

§ நெடுங்கடல் என்றதனானே நீண்டவீதிகளெல்லாம் ஜனசந்தடி அடங்கின என்க.

() பாரித்தல் - பரவுதல் - பாரி முதனிலைத்தொழிற்பெயர்.

இறங்கினகிறங்கொள்பரியேமமுறவெங்கும்
கறங்கினமறங்கொளெயில்காவலர்துடிக்கண்
பிறங்கினர்நறுங்குழலரன்பர்பிரியாதோர்
உறங்கினர்பிணங்கியெதிரூடினவரல்லார். (௧௫௯)

வடந்தருதடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தனர்களித்தமயில்போலும்
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருகேதம். (௧௬0)

வாமநறையின்றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின்றிறநுகர்ந்தனர்களித்தார்
பூமனறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின்றுறைபயின்றிலர்துயின்றார். (௧௬௧)

பண்ணிமையடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தனவிளைந்ததிருள்யாணை
தண்ணிமையடைத்தனதழங்கிசைவழங்கும்
கண்ணிமையடைத்தனவடைத்தனகபாடம். (௧௬௨)

விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
தரிஞ்சவருதென்றலுயிரின்புடையுலாவச்
சொரிந்தனகருங்கண்வருதுள்ளிதருவெள்ளம்
எரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதலினெஞ்சம். (௧௬௩)

இளக்கரிழுதெஞ்சவிழுமெண்ணருவிளக்கைத்
துளக்கியதுதென்றல்பகைசோரவுயர்வோரின்
அளக்கரொடளக்கரியவாசையுறவீசா
விளக்கினம்விளக்குமணிமெய்யுறுவிளக்கம். (௧௬௪)

கித்தகியமத்தொழிலராய்கிறையுஞானத்
துத்தமருறங்கினர்கள்யோகியர்துயின்றார்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்றோ. (௧௬௫)

ஆயபொழுதம்மதிலகத்தரசர்வைகும்
தூயதெருவொன்றொடொருகோடிதுருவிப்போய்த்
தீயவனிருக்கையயல்செய்தவகழிஞ்சி
மேயதுகடந்தனன் * வினைப்பகையைவென்றான். (௧௬௬)

வேறு.

போரியற்கையிராவணன்பொன்மனை
சீரியற்கைநிரம்பியதிங்களாத்

* வினைப்பகை - தீவினைச்செய்கைகளான காமக்குரோதங்கள்.

தாரகைக்குழுவிற்றழுவித்தொடர்
நாரியர்க்குறைவாயிடநண்ணினான். (௧௬௭)

முயற்கருங்கறைநீங்கியமொய்ம்மதி
அயர்க்கும்வாண்முகத்தாரமுதன்னவர்
இயக்கர்மங்கையர்யாவருமீண்டினார்
நயக்குமாளிகைவீதியைநண்ணினான். (௧௬௮)

தழைந்தமொய்யொளிபெய்ம்மணித் * தாழ்தொறும்
இழைந்தநூலினுமின்னிளங்காலினும்
நுழைந்துநொய்தினின்மெய்யுறநோக்கினான்
விழைந்தவெவ்வினைவேரறவீசினான். (௧௬௯)

அத்திரம்புனையானையரக்கன்மேல்
வைத்தசிந்தையர்வாங்குமுயிர்ப்பினர்
பத்திரம்புரைநாட்டம்பதைப்பறச்
சித்திரங்களெனவிருந்தார்சிலர். (௧௭0)

வள்ளல்வெஞ்சரமாரனையஞ்சியோ
மெள்ளவேகனவின்பயன்வேண்டியோ
கள்ளமென்கொலறிந்திலங்கண்முகிழ்த்
துள்ளமின்றியுறங்குகின்றார்சிலர். (௧௭௧)

பழுதின்மன்மதன்வெங்கணைபன்முறை
உழுதகொங்கையரூசலுயிர்ப்பினர்
அழுதுசெய்வதென்னாணையரக்கனை
எழுதலாங்கொலென்றெண்ணுகின்றார்சிலர். (௧௭௨)

ஆவதொன்றருளாயெனதாவியைக்
கூவுகின்றிலைகூறலைசென்றெனாப்
பாவைபேசுவபோற்கண்பனிப்புறப்
† பூவையோடும்புலம்புகின்றார்சிலர். (௧௭௩)

ஈரத்தென்றலிழுகமெலிந்துதம்
பாரக்கொங்கையைப்பார்த்தனர்பாதகன்
வீரத்தோள்களின்வீக்ககிலேனர்துயிர்
சோரச்சோரத்துளங்குகின்றார்சிலர். (௧௭௪)

நக்கசெம்மணிநாறியநாணிழல்
பக்கம்வீசுறுபள்ளியிற்பல்பகல்
ஒக்கவாசையுலக்கவுலந்தவர்
செக்கர்வான்றருதிங்களொத்தார்சிலர். (௧௭௫)

* தாழ்தொறும் - தாழ்க்கோல் "திறவுகோல்" செல்லுமிடங்களெல்லாம்.

† பூவை - நாகணவாய்ப்புள்.

வாளினாற்றெளிகற்பகவல்லியர்
தோளினாற்றியதூங்கமளித்துயில்
நாளினாற்செவியிற்புகநாமயாழ்த்
தேளினாற்றிகைப்பெய்துகின்றார்சிலர். (௧௭௬)

கவ்வுதீக்கணைமேருவைக்கால்வளைத்
தெவ்வினான்மலையேந்தியவேந்துதோள்
வவ்வுசாந்துதம்மாமுலைவௌவிய
செவ்விகண்டுகுலாவுகின்றார்சிலர். (௧௭௭)

கூடிநான்குயர்வேலையுங்கோக்கநின்
றாடினான்புகழுங்கைநரம்பினால்
நாடிநாற்பெரும்பண்ணுநயப்புறப்
பாடினான்பெயர்பாடுகின்றார்சிலர். (௧௭௮)

இனையதன்மையியக்கியரெய்திய
மனையொராயிரமாயிரகோடியாம்
அனையவன்குலத்தாயிழையாரிடம்
நினைவினெய்தினனீதியினெய்தினான். (௧௭௯)

வேறு.

எரிசுடர்மணியின்செங்கேழிளவெயிலிடைவிடாது
விரியிருள்பருகிநாளும்விளக்கின்றிவிளங்குமாடத்
தரிவையர்குழுவுநீங்கவாசையும்தாழுமேயாய்
ஒருசிறையிருந்துபோனவுள்ளத்தோடுவாரும். (௧௮௦)

நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனையவோதி
புகையெனத்தும்பிசுற்றப்புதுமலர்பொங்குசேக்கை
பகையெனவேகியான்றபளிங்குடைச்சீதப்பள்ளி
மிகையொடுங்காத * காமவிம்மலின்வெதும்புவாரும். (௧௮௧)

† சவிபடுதகைசால்வானந்தானொருமேனியாகக்
குவியுமீனாரமாகமின்கொடிமருங்குலாகக்
கவிரொளிச்செக்கர்க்கற்றையோதியாமழையுண்கண்ணா
அவிர்மதிநெற்றியாகவந்திவானொக்கின்றாரும். (௧௮௨)

பானலுண்கண்ணும்வண்ணப்படி ‡ முறைமாறப்பண்ணைச்
சோணைபோன்றளிகள்பம்புஞ்சுரிகுழற்கற்றைசோர
மேனிமிர்ந்தெழுந்தமாடவெண்ணிலாமுன்றினண்ணி
வானமீன்கையின்வாரிமணிக்கழங்காடுவாரும். (௧௮௩)

உழையுழைபரந்தவானயாற்றினின்றும்பர்நாட்டுக்
குழைமுகத்தாயந்தந்தபுனல்குளிர்ப்பிலவென்றாடி

* காமவிம்மல்-காமமிகுதி. † சவி-சூரியன்.
‡ முறைமாறல்-தமதுநிலைகுலைதல்.

இழைதொடுத்திலங்குமாடையிடைதடுமாறவேறி
மழைபொதுத்தொழுகுநீரான்மஞ்சனமாடுவாரும். (௧௮௪)

பன்னகவரசர்செங்கேழ்ப்பணமணிவலிதிற்பற்றி
இன்னுயிர்க்கணவனீர்த்தாளுமெனவிருத்திவிஞ்சை
மன்னவர்முடியும்பூணுமாரமும்பணையமாகப்
பொன்னணிபலகைசூதுதுயில்கிலர்பொருகின்றாரும். (௧௮௫)

தென்னகுகுடமுட்பாடல்சித்தியரிசைப்பத்தீஞ்சொற்
பன்னகமகளிர்வள்வார்த் * தண்ணுமைபாணிபேணப்
பொன்னகர்த்தாளப்பந்தர்கற்பகப்பொதும்பர்பொற்பேறள்
இன்னகையரம்பைமாரையாடல்கண்டிருக்கின்றாரும். (௧௮௬)

ஆணியிற்கிடந்தகாதலகஞ்சுடவருவியுண்கண்
சேணுயருறக்கந்தீர்ந்தசிந்தையர்செய்வதோரார்
வீணையுங்குழலுந்தத்தமிடறும்வேற்றுமையுணர்ந்த
பாணிகளளந்தபாடலமிழ்துகப்பாடுவாரும். (௧௮௭)

தண்டலைவாழையன்னகுறங்கிடையல்குற்றட்டில்
கொண்டபூந்துகிலுங்கோவைகலைகளுஞ்சோரக் † கூர்ங்கள்
உண்டலமந்தகண்ணேசெவிட்டலைகின்ற
குண்டலந்திருவில்வீசக்குழையிற்குழற்றுவாரும். (௧௮௮)

நச்சனைக்கொடியநாகக்கள்ளொடுகுருதிநக்கிப்
பிச்சரிற்பிதற்றியல்குற்பூந்துகில்கலாபம்பீறிக்
குச்சரித்திறத்தினோசைகளங்கொளக்குழுக்கொண்டண்டிச்
சச்சரிப்பாணிகொட்டிநிறைதடுமாறுவாரும். (௧௮௯)

தயிர்நிறத்துறுகளுள்ளந்தன்னுறவறிவுதள்ளிப்
பயிர்வுறத்தெய்வமென்மேற்படிந்ததுபார்மினென்று
உயிருயிர்த்திரண்டுகையுமுச்சிமேலுயரநீட்டி
மயிர்சிலிர்த்துடலுங்கூசிவாய்விரித்தொடுங்குவாரும். (௧௯௦)

இத்திறத்தரக்கிமார்களீரிருகோடியீட்டப்
பத்தியருறையுந்தெய்வப்படர்நெடுந்தெருவும்பார்த்தான்
சித்தியருறையுமாடத்தெருவும்பின்னுகச்சென்றான்
‡ உத்திசைவிஞ்சைமாதருறையுளைமுறையினுற்றான். (௧௯௧)

வேறு.

வளர்ந்தகாதலர்மகரிகைநெடுமுடியரக்கனைவரக்காணர்
தளர்ந்தசிந்தைதம்மிடையினுநுடங்கிடவுயிரொடுதடுமாறிக்
களர்ந்தவாநெடுங்கருவியிற்கைகளிற் § செயிரியர்கலைக்கண்ணால்
அளந்தபாடல்வெவ்வரவுதஞ்செவிபுகவலமராலுறுகின்றார். (௧௯௨)

* தண்ணுமைபாணிபேணல்-மத்தளங்களை கைகளாலே முழக்கல்.
† கூர்ங்கள்-மிகவும் மயக்கமுள்ள மது.
‡ உத்திசை-அப்புறமான திக்கு. § செயிரியர்-பாடகர்கள்.

யுநன்னெறிமுனிவரும்புலவரும்புகலிலாப்பொறைகூர
யும்வெஞ்சினத்திகலடுகொடுந்திறலிராவணற்கெஞ்ஞான்றும்
யுநெஞ்சினரிவரெனவயிர்த்தவோர்பகைகொடுபனித்திங்கள்
ாரியும்வெங்கதிர்துணைமுலைக்குவைசுடக்கொடிகளிற்றுடிக்கின்றார்.

றுகுகாலங்களுழிகளாம்வகைதிரிந்துசிந்தனைசிந்த
றுகுகாதலின்வேதனையுறப்பவர்முயங்கினர்முலைமுன்றில்
றுகுசார்ந்தமுமெழுதுநற்றுநிகளுமின்னுயிர்ப்பொறைபீர
றுகுவாட்கண்கள்சிவப்புறநோக்கினர்வயிர்த்தனருயிர்க்கின்றார். (௧௧௪)

பவிஞ்சையர்மடந்தையருறைவிடமாதிரண்டனைநோடி
யமாளிகைநெடுந்தெருத்தருவிப்போய்த்தொலைவின்மூன்றுலகிற்கும்
யகன்பெருங்கோயிலைநண்ணுவான்கண்டனனளிர்திங்கள்
யகந்தியவாண்முகத்தொருதனிமயன்மகளுறைமாடம். (௧௧௫)

ண்டுகண்ணெடுகருத்தொடுகடாவினன்காரணங்கடைநின்ற
ண்டுவேறொருசிறப்பெங்களுயகர்க்குயிரினுமுரியாளைக் [லாம்
காண்டுபோந்தவன் வைத்ததோருறையுள் கொல்குலமணிமனைக்கெல்
ண்டுவின்றடமார்பினின்மணியொத்ததிதுவெனவியப்புற்றான். (௧௧௬)

ரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியாதியர்மலர்க்காமன்
ம்பெய்தூணிபோற்றனிரடிதாந்தொடச்சாமரைபணிமாறும்
நம்பையுஞ்சுவைகைப்பித்தசொல்லியர்காமரங்கனியாழின்
ம்பினின்னிசைசெவிபுகாசியிற்கற்பகவிரைநாற. (௧௧௭)

ழைவுநீங்கியமேன்மையோராயினுங்கீழ்மையோர்வெகுளுற்றால்
ழகொனன்மைகொல்பெறுவதென்றையுறு பீழையாற்பெருந்தென்
ழயர்கூவப்புக்கேதனப்பெயர்வதோருசலினுளதாகும் [றல்
ழயம்யாமெனப்பண்பிலசெய்வரோபருணிதர்பயனோர்வார். (௧௧௮)

ன்னதன்மையினரிமணிவிளக்கங்கவெழில்கெடப்பொலிகின்ற
ன்னதின்னெளிதழைப்புறத்துயில்வுறுதையலைத்தகைவில்லான்
ன்னளாகியசானகியிவளெனவயிர்த்தகத்தெழுவெந்தீத்
ன்னுமாருயிருடலொடுசுடுவதோர்துயருற்றிலைசொன்னான். (௧௧௯)

ற்புவான்றொடர்யாக்கையாற்பெறும்பயனிகந்தனனிதுசிற்க
அற்புவான்றளையிற்பிறப்பதனெடுமிகந்துதன்னருந்தெய்வக்
ற்புநீங்கியகனங்குழையிவளெனிற்காகுத்தன்புகழோடும்
ாற்பும்யானுமிவ்விலங்கையுமரக்கரும்பொன்றுதுமின்றென்றான். ()

னுயர்த்திருவடிவினளவளிவண்மாறுகொண்டனள்கூறின்
னியக்கியோதானவர்தையலோலவையுறுந்தகையாளுள்

* அன்பு-அற்பெனத் திரிந்தது.

காணுயர்த்ததாரிராமன்மேனோக்கியகாதல்காரிகையார்க்கு
மீனுயர்த்தவன்மருங்குதான்மீளுமோநினைந்ததுமிகையென்ருன். (உ0க)

இலக்கணங்களுஞ்சிலவுளவென்னினுமெல்லலெசன்றிறக்கில்லா
அலக்கணெய்துவதணியதுண்டென்றெடுத்தறைகுவதிவள்யாக்கை
மலர்க்கருங்குழல்சோர்ந்துவாய்வெரீஇச்சிலமாற்றங்கள்பறைகின்ருள்
உலக்குநிங்கிவள்கணவனுமழிவுமிவ்வியனகர்க்குளதென்ருன். (உ0உ)

என்றுணர்ந்துநின்றேமுறுமிந்நிலைநிற்கவித்திறனென்னைப்
பின்றுசிந்தையன்பெயர்ந்தனனெடுமனைபிற்படப்பெருமேருக்
குன்றகுன்றியதகையுறவோங்கியகொற்றமாளிகைதன்னில்
சென்றுபுக்கனனிராவணற்கெடுப்பருங்கிரியெனத்திரடோளான். ()

நிலந்துடித்தனநெடுவரைபொடித்தனநிருதர்தங்குலமாதர்
பொலந்துடிக்கமைமருங்குல்போற்கண்களும்புருவமும்பொற்றோளும்
வலந்துடித்தன * மாதிரந்துடித்தனதடித்தின்றிமதிவானம்
கலந்திடித்தனவெடித்தனபூரணமங்கலகலசங்கள். (உ0ச)

புக்குநின்றுதன்புலன்கொடுநோக்கினன்பொருவருந்திருவுள்ளம்
நெக்குநின்றனனிங்குமந்தோவிந்தநெடுநகர்த்திருவென்னே
எக்குலங்களின்யாவரேயாயினுமிருவினையெல்லோர்க்கும்
ஒக்குமூழ்முறையல்லதுவலியதொன்றில்லெனவுணர்வுற்ருன். (உ0ரு)

நூற்பெருங்கடனுணங்கியகேள்வியநோக்கினனியனென்ருன்
வேற்பெருங்கடல்புடைபரந்தீண்டியவென்னடைவியன்கோயில்
பாற்பெருங்கடற்பன்மணிப்பஃறிரைப்பரப்புடைப்படர்வேலை
மாற்பெருங்கடல்வதிந்தவேயனையதோர்வனப்பினன்றுயில்வானை. ()

குழவிஞாயிறுகுன்றிவர்ந்தனையனகுருமணிநெடுமோலி
இழைகளோடுநின்றிளவெயிலெறித்திடவிரவெனும்பொருள்வீய
முழைகொண்மேருவின்பொருகுட்டிடைக்கனகனைமுருக்கியமுரட்சீயம்
தழைகொடோளொடுதலைபலபரப்பிமுன்றுயில்வதோர்தகையானை. ()

ஆயபொற்றலத்தாய்வளையரம்பையராயிரரணிநின்று
தூயபொற்கவரித்திரளியக்கிடச்சுழிபடுபசுங்காற்றின்
வீயகற்பகத்தேன்றுளிவிராயனவீழ்தொறுநெடுமேனி
தீயாற்றெறுடிச்சீதையைநினைதொறுமுயிர்த்துயிர்தேய்வானை. (உ0அ)

குழந்தைவெண்மதிக்குடையினெடுவரைகுலுக்கியகுலத்தோளைக்
கழிந்துபுக்கிடைகரந்தன † வனங்கன்வெங்கடுங்கணைபலபாய
உழந்தவெஞ்சமத்துயர்திசையானையினொளிமருப்புற்றிற்ற
பழந்தழும்பினுக்கிடையிடையேசிலபசும்புண்களசும்பூற. (உ0கூ)

* மாதிரம்-திசை.

† அனங்கன்-தேகமில்லாதவன், மன்மதன்.

ாந்தளாவியகலவைமேற்றவழ்வுறுதண்டமிழ்ப்பசுந்தென்றல்
ந்துகாமவெங்கனலினுக்குமிழுதட்டுருத்தியினுயிர்ப்பேறக்
ாந்தண்மெல்லிரற்சனகிமேன்மனமுதற்கரணங்கள்கடிதோடப்
ாந்தணீங்கியமுறைமுறையெனக்குழைவுறுநெஞ்சுபாழ்பட்டானே. (உகo)

வேறு.

கொண்டபேருக்கமுளத்திசைதொறுங்குறித்துமேனுள்
ண்டியசெருவின்வீரத்தோள்களால்வாரிவாரி
ண்டதுதெவிட்டிப்பேழ்வாய்க்கடைகடோறொழுகிப்பாயும்
ண்டர்தம்புகழிற்றேன்றும்வெள்ளையிற்றமைதியானே. (உகக)

வெள்ளிவெண்சேக்கைவெந்துபொறியெழவெதும்புமேனி
ள்ளிவெண்மொக்குளன்னப்பொடித்துவேர்கொதித்துப்பொங்கக்
ள்ளவிழ்மாலைத்தும்பிவண்டொடுங்கரிந்துசாம்ப
ள்ளிணர்மாலைதீயவுயிர்க்கின்றவுயிர்ப்பினானே. (உகஉ)

தவியனேமியாளிற்சிந்தைமெய்த்திருவினைகப்
வியலமளிமேலாப்பொய்யுறக்குறங்குவானைக்
ாவியங்கண்ணிதன்பாற்கண்ணியகாதனீரின்
வியையுயிர்ப்பென்றேதுமம்மியிட்டரைக்கின்றானே. (உகங)

குந்தைகரினைப்புமுற்றவுருவெளிப்பட்டவேலை
குந்தைமுகத்தன்காதனைக்குறுமெய்யன்வார்மேகம்
குந்தைமொழியாண்முன்னமொருவகையுறையுளுள்ளே
குந்தனனென்றேவென்றுமயிர்புறம்பொடிக்கின்றானே. (உகச)

மென்றொழிற்கலாபமஞ்ஞைவேட்கைமீக்கூருமேனும்
நன்றொழித்தொருமாக்குன்றினரிதிற்சேர்கொள்கைபோல
வன்றொழிற்கொற்றப்பொற்றேண்மணந்தருமயிலையன்னோர்
ன்றொழித்தொன்றினைகவரியதோரொழுக்கினானே. (உகரு)

வேறு.

முவாநின்றகருங்கடன்மீதுதயகிரியிற்சுடர்தயங்க
முவாவென்னமின்னிமைக்குமாரம்புரளுமியல்பிற்றாய்
முழுவானவராயுலகமொருமூன்றுங்காக்கு * முதற்றேவர்
முவாணேமிகுவிசத்தின்வாய்மைதுடைத்தமார்பானே. (உகசு)

வேறு.

தாமுழுதண்டார்வண்டுந்திசையானைமதர்த்துதைந்தவண்டுஞ்சுற்றி
ாமுழுதநறுங்கலவையயக்களிற்றின்சிந்தூரத்தைமாறுகொள்ளக்

* முதற்றேவரொன்றது — சண்டு (நான்முகனிவனுக்குறவாகலால்) ருத்திரன், விஷ்ணு, இந்திரனை என்க.

கோடுழுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுததழும்பிருந்தசரணத்தானை. (உகஎ)

வேறு.

கொண்டதோருருவமாயன்குறளினுங்குறுகநின்றான்
திண்டலைபத்துந்தோள்களிருபதுந்தெரியநோக்கிக்
கண்டனன்கண்டலோடுங்கருத்தின்முன்காலச்செந்தீ
விண்டனகண்கள் * கீண்டுவெடித்தனகீழுமேலும். (உகஅ)

வேறு.

தோளாற்றலென்னருமேனிற்குஞ்சொல்லென்னும்
வாளாற்றுகண்ணாளைவஞ்சித்தான்மணிமுடியென்
தாளாற்றலாலிடித்துத்தலைபத்துந்தகர்த்தென்றன்
ஆளாற்றல்காட்டேனலடியேனுய்முடியேனே. (உகக)

நடித்துவாழ்தகைமையதோவடிமைதானன்னுதலைப்
பிடித்தவாளரக்கனார்யான்கண்டும்பிழைப்பரோ
ஒடித்துவான்றோளைத்துந்தலைபத்துமுறைதத்துருட்டி
முடித்திவ்வூர்முடித்தான்மேன்முடிவதெலாமுடிந்தொழிக. (உஉ0)

என்றாக்கியெயிறுகடித்திருகரனும்பிசைந்தெழுந்து
நின்றாக்கியுணர்ந்துரைப்பானேமியோன்பணியன்றால்
ஒன்றாக்கியொன்றிழைத்தலுணர்வுடைமைக்குரித்தன்றால்
பின்றாக்கினிதுசாலப்பிழையாகுமெனப்பெயர்ந்தான். (உஉக)

ஆலம்பார்த்துண்டவன்போலாற்றலமைந்துளரெனினும்
சீலம்பார்க்குரியோர்களெண்ணாதுசெய்பவோ
மூலம்பார்க்குறினுலகைமுற்றவிக்குமுறைதெரினும்
காலம்பார்த்திறைவேலைகடவாதகடலொத்தான். (உஉஉ)

இற்றைப்போர்ப்பெருஞ்சீற்றமென்னோடுமுடிந்திடுக
கற்றைப்பூங்குழலாளைச்சிறைவைத்தகண்டகனை
முற்றப்போர்முடித்தொருகுரங்கென்றேன்முனைவீரன்
கொற்றப்போர்ச்சிலைத்தொழிற்குக்குறைவுண்டாமெனக்குறைந்தான். ()

அந்நிலையான்பெயர்ந்துரைப்பானவ்வளைக்கையணியிழையார்
இந்நிலையானுடன்றுயில்வாருளரல்லரிவணிலையும்
புன்னிலையகாமத்தாற்புலர்கின்றநிலைபுகைவை
நன்னிலையினுளளென்னுநலனெனக்குரிகுறிகால். (உஉச)

என்றெண்ணியீண்டினியோர்பயனில்லையெனநினையாக்
குன்றன்னதோளவன்றன்கோமனைபிற்படப்பெயர்ந்தான்

* கீழ்கீண்டு மேல்வெடித்தன எனக்கூட்டுக.

நின்றெண்ணியுன்னுவானந்தோவிந்நெடுநகரம்
பொன்றுன்னுமணிப்பூணாரிலரென்னப் * பொருமுவான். (௨௨௫)

கொன்றானோகற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலால்
தின்றானோவப்புறத்தேசெறித்தானோசிறையறியேன்
ஒன்றானுமுணரகிலேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம்போகாதால். (௨௨௬)

கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன்கவிக்குலக்கோன்
கொண்டுவருமென்றிருக்கும்யாணிழைத்தகோளிதுவால்
† புண்டரிகநயனத்தான்பாலின்னம்போவேனோ
‡ விண்டவரோடென்னியாதியான்வாளாவிளிவேனோ. (௨௨௭)

§ கண்ணியநாள்கழிந்துளவாற்கண்டிலெனாற்கனங்குழையை
விண்ணடைதுமென்றுரையாண்டிருத்திவிரைந்தயான்
எண்ணியதுமுடிக்ககிலேன்யான்முடியாதிருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளென்னுமின்றாம்போயதால். (௨௨௮)

எழுநூறுசனைசூழ்ந்தெயில்கிடந்தவிவ்விலங்கை
வாழு ·|· மாமன்னுயிர்யான்காணாதமற்றில்லை
ஊழியான்பெருந்தேவியொருவரையும்யான்காணேன்
ஆழிதாயிடராழியிடையேவீழ்ந்தழிவேனோ. (௨௨௯)

வல்லரக்கன்றனைப்பற்றிவாயாறுகுருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ
எல்லரக்குமயினுதிவேலிராவணனுமிவ்வூரும்
மெல்லரக்கினுருக்கிபுகவெந்தழலால்வேய்கேனோ. (௨௩௦)

வானவரேமுதலோரைவினவுவெனேல்வல்லரக்கன்
தானொருவனுளனாகவுரைசெய்யுந்தருக்கிலரால்
ஏனையர்களெங்குரைப்பாரெவ்வண்ணந்தெரிகேனோ
ஊனழியநீங்காதவுயிர்சுமந்தவுணர்வில்லேன். (௨௩௧)

எருவைக்குமுதலாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனனென்றனவனுரையுஞ்சிதைந்ததால்
% கருவைக்குநெடுநகரைக்கடலிடையேகரையாதென்
உருவைக்கொண்டின்னமுநானுளனாகியுழல்கேனோ. (௨௩௨)

வடித்தாய்பூங்குழலாளைவானறியமண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனெனுமாற்றம்பிழையாதால்

* பொருமுவான்-துக்கிக்கலானார். † புண்டரிகநயனத்தான்-தாமரைக்கண்ணன். ‡ விண்டவர்-விட்டவர். § கண்ணியநாள்-கெடுவுசெய்தனுப்பின காலவளவு. ·|· மாமன்னுயிர்-பெருமையும் சரமும் நிலைமையும் அசரமுமான உயிர்களில். % கரு-தெய்வக்கம்மாளன்.

எடுத்தாழியிலங்கைதனையிருங்கடலினிட்டிவனை
முடித்தாலேயான்முடிதன்முறைமன்றவென்றுணர்வான். (௨௯௩)

எள்ளுறையுமொழியாமல்யாண்டையுளுமுளனாய்த்தன்
உள்ளுறையுமழகனைப்போலெம்மருங்குமுலாவினான்
புள்ளுறை * யுய்யானத்தையுறநோக்கியயல்போவான்
கள்ளுறையுமலர்ச்சோலையயலொன்றுகண்ணுற்றான். (௨௯௪)

௨-வது, ஊர்தேடுபடலம்—முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௯0.

---

## ௩-வது, காட்சிப்படலம்.

பிராட்டியைக் கண்டது.

மாடுநின்றவம்மணிமலர்ச்சோலையைமருவித்
தேடியவ்வழிகாண்பெனேற்றீருமென்சிறுமை
ஊடுகண்டிலெனெனிற்பின்னருரியதொன்றில்லை
வீடுவேன்மற்றிவ்விலங்கன்மேலிலங்கையைவீட்டி. (௧)

என்றுசோலைபுக்கெய்தினனிராகவன்றூதன்
ஒன்றிவானவர்பூமழைசொரிந்தனருவந்தார்
அன்றவாளரக்கன்சிறையவ்வழிவைத்த
துன்றலோதிதன்னிலையினைச்சொல்லுவான்றுணிந்தாம். (௨)

வன்மருங்குல்வாளரக்கியர் † நெருக்கவங்கிருந்தாள்
கன்மருங்கெழுந்தென்றுமோர்துளிவரக்காணா
நன்மருந்துபோனலனறவுணங்கியநங்கை
மென்மருங்குல்போல்வேறுளவங்கமுமெலிந்தாள். (௩)

துயிலெனக்கண்களிமைத்தலுமுகிழ்த்தலுந்துறந்தாள்
வெயிலிடைத்தந்தவிளக்கெனவொளியிலாமெய்யாள்
மயிலியற்குயின்மழலையாண்மானிளம்பேடை
அயிலெயிற்றுவெம்புலிக்குழாத்தகப்பட்டதன்னாள். (௪)

விழுதல்விம்முதன்மெய்யுறவெதும்புதல்வெருவல்
எழுதலேங்குதலிரங்குதலிராமனையெண்ணித்
தொழுதல்சோருதறுளங்குதறுயருழந்துயிர்த்தல்
அழுதலன்றிமற்றயலொன்றுஞ்செய்குவதறியாள். (௫)

---

* உய்யானம்-தோப்பு, சோலை. † நெருக்க-ஈண்டு வருத்தப்படுத்தல்.

தழைத்தபொன்முலைத்தடங்கடந்தருவிபோய்த்தாழப்
புழைத்தபோலநீர்நிரந்தரம்பொழிகின்றபொலிவால்
இழைக்குநுண்ணியமருங்குலாளிணைநெடுங்கண்கள்
மழைக்கணென்பதுகாரணக்குறியெனவகுத்தாள். (௬)

அரியமஞ்சினோடஞ்சனமுதலிவையதிகம்
கரியகாண்டலுங்கண்ணினீர்கடல்புகக்கலுழ்வாள்
உரியகாதலினொருவரோடொருவரையுலகில்
பிரிவெனுந்துயருருவுகொண்டாலனபிணியாள். (௭)

துப்பினாற்செய்தகைகொடுகால்பெற்றதுளிமஞ்
சொப்பினான்றனைநினைதொறுநெடுங்கண்களுகுத்த
அப்பினாலனைத்தருந்துயருயிர்ப்புடையாக்கை
வெப்பினாற்புலர்ந்தொருநிலையுறுதமென்றகிலாள். (௮)

* அரிதுபோகவோவிதிவலிகடத்தலென்றஞ்சிப்
பரிதிவானவன்குலத்தையும்பழியையும்பாராச
சுருதிநாயகன்வரும்வருமென்பதோர்துணிவால்
சுருதி † மாதிரமனைத்தையுமளக்கின்றகண்ணாள். (௯)

கமையினொடிருமுகத்தயல்கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றைநிலத்திடைக்கிடந்ததூமதியை
அமையவாயிற்பெய்துமிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொருசடையாகியகுழலாள். (௧௦)

ஆவியந்துகில்புனைவதொன்றன்றிவேறறியாள்
தூவியன்னமென்புனலிடைத்தோய்கிலாமெய்யாள்
தேவுதெண்கடலமிழ்துகொண்டனங்கவேள்செய்த
ஓவியம்புகையுண்டதேயொக்கின்றவுருவாள். (௧௧)

கண்டிலன்கொலாமிளவலுங்கனைகடனெடுவண்
மண்டிலங்கையென்றுணர்ந்திலருலகெலாமொறுப்பான்
கொண்டிருந்தமையறிகிலராமெனக்குழையாப்
புண்டிறந்ததினெரிநுழைந்தாலெனப்புகைவாள். (௧௨)

மாண்டுபோயின ‡ னெருவைகட்கரசன்மன்மற்றோர்
யாண்டையென்னிலையறிவுறுப்பார்களிப்பிறப்பில்
காண்டலோவரிதென்றென்றுவிம்முறுங்கலங்கும்
மீண்டுமீண்டுபுக்கெரிநுழைந்தாலெனமெலிவாள். (௧௩)

என்னைநாயகனிளவலையெண்ணலாவினையேன்
சொன்னவார்த்தைகேட்டறிவிலளெனத்துறந்தானே

---

* அரிது-விதிவலிகடத்தல் தானே செல்லமாட்டாமையால் பே அரிதென்றும் தன்னாலொன்றுஞ் செய்யக்கூடாமையால் விதிவலிக ப்பதென்றுங் கூறினள் என்க.

† மாதிரம்-திக்கு ‡ எருவைகட்கரசன்-சடாயு.

முன்னையூழ்வினைமுடிந்ததோவென்றென்றுமுறையால்
பன்னவாய்புலர்ந்துணர்வுதேய்ந்தாருயிர்பதைப்பாள். (௧௪)

அருந்துமெல்லடகாரிடவருந்துமென்றழுங்கும்
விருந்துகண்டபோதென்னுறுமோவென்றுவிம்மும்
மருந்துமுண்டுகொல்யான்கொண்டநோய்க்கென்றுமயங்கும்
இருந்தமாநிலஞ்செல்லரித்திடவுமாண்டெழாதாள். (௧௫)

வன்கண்வஞ்சனையரக்கரித்துணைப்பகல்வையார்
தின்பரென்னினிச்செயத்தக்கதென்றுதீர்ந்தாளோ
* தன்குலப்பொறைதன்பொறையெனத்தணிந்தாளோ
என்கொலெண்ணுவேனென்னுமங்கிராப்பகலில்லாள். (௧௬)

பெற்றதாயருந்தம்பியும்பெயர்த்தும்வந்தெய்திக்
கொற்றமாநகர்கொண்டிறந்தார்களோகுறித்துச்
சொற்றவாண்டெலாமுறைந்தன்றியந்நகர்துன்னேன்
உற்றதுண்டெனப்படருழந்துருதேயுறுவாள். (௧௭)

மூரனைத்தகுமொய்ம்பினோர்முன்பொருதவர்போல்
வரனுமாயமும்வஞ்சமும்வரம்பிலவல்லார்
பொரநிகழ்ந்ததோர்பூசலுண்டாமெனப்பொருமாக்
கரனெதிர்ந்ததுகண்டனளாமெனக்கவல்வாள். (௧௮)

வேறு.

தெம்மடங்கியசேணிலங்கைகயர்
தம்மடந்தையுன்றம்பியதாமென
மும்மடங்குபொலிந்தமுகத்தினன்
வெம்மடங்கலையுன்னிவெதும்புவாள். (௧௯)

மெய்த்திருப்பதமேவென்றபோதினும்
இத்திருத்துறந்தேகென்றபோதினும்
சித்திரத்தினலர்ந்தசெந்தாமரை
ஒத்திருக்குமுகத்தினையுன்னுவாள். (௨0)

தேங்குகங்கைத்திருமுடிச்செங்கணான்
வாங்குகோலவடவரைவார்சிலை
† ஏங்குமாத்திரத்திற்றிரண்டாய்விழ
வீங்குதோளினைநினைந்துமெலிந்துளாள். (௨௧)

இன்னலம்பரவேந்தற்கியற்றிய
பன்னலம்பதினாயிரம்படை

* தன் குலப்பொறை-தணிந்தாளோ-உலகையாளுகிறது தன்குலப் பொறை ஆகலால் இப்போ தாள்வோரில்லாமைபற்றித் தனது சுமை யென்று போயினளோ வென்பது கருத்து.

† ஏங்குமாத்திரத்து-தக்கிக்குமளவில்.

கன்னன்மூன்றிற்களப்படக்கால்வளை
வின்னலம்புகழ்ந்தேற்றிவெதும்புவாள். (௨௨)

ஆழநீர்க்கங்கையம்பிகடாவிய
எழைவேடனுக்கெம்பிநின்றம்பிநீ
தோழன்மங்கைகொழுந்தியெனச்சொன்ன
வாழிநண்பினையுன்னிமயங்குவாள். (௨௩)

மெய்த்ததாதைவிரும்பினனீட்டிய
கைத்தலங்களைக்கைகளினீக்கிவே
றுய்த்தபோது * தருப்பையிலொண்பதம்
வைத்தவேதிகைச்செய்தினங்கொள்வாள். (௨௪)

உரங்கொடேமலர்ச்சென்னியுரிமைசால்
வரங்கொள்பொன்முடிதம்பிவனைந்திலன்
திரங்குசெஞ்சடைகட்டியசெய்வினைக்
கிரங்கியேங்குவதெண்ணியிரங்குவாள். (௨௫)

பரித்தசெல்வமொழியப்படருநாள்
அருத்திவேதியற்கான்குலமீந்தவர்
கருத்திறைசைக்கரையின்மைகண்டிறை
சிரித்தசெய்கைநினைந்தழுஞ்செய்கையாள். (௨௬)

மழுவின்வாளினின்மன்னரை † மூவெழு
பொழுதினாறிப்புலவுறுபுண்ணினீர்
முழுகினான்றவமொய்ம்பொடுமுரிவில்
தழுவுமேன்மைநினைந்துயிர்சாம்புவாள். (௨௭)

ஏகவாளியவ்விந்திரன்காதன்மேல்
போகவேவியதுகண்பொடித்தநாள்
காகமுற்றுமோர்கண்ணிலவாக்கிய
வேகவென்றியைத்தன்றலைமேற்கொள்வாள். (௨௮)

வெவ்விராதனைமேல்வருந் ‡ தீவினை
வவ்விமாற்றருஞ்சாபமுமாற்றிய
அவ்விராமனையுன்னித்தன்றருயிர்
செவ்விராதுணர்வோய்ந்துடறேம்புவாள். (௨௯)

வேறு.

இருந்தனடிரிசடையென்னுமின்சொலில்
திருந்தினளொழியமற்றிருந்ததீவினை

* தருப்பையில் என்பது அசம்ஹ்ரியப்படாமல் பரிசத்தமுள்ளதை யெடுக்கிறதுபோல் எடுத்து அம்மிமேல்வைத்த குணத்தை மனக்கொள்வாளென்க. † மூவெழுபொழுதின் — இருபத்தொரு வம்சத்தளவும்.
‡ தீவினை எண்டு - ஆகாமியகர்மங்களனைத்தும்.

அருந்திறலரக்கியரல்லுகள்ளுறப்
பொருந்தலுந் துயினறைக்களிபொருந் கின்றார். (௫0)

ஆயிடைத்திரிசடையென்னுமன்பிறுள்
தாயினுமினியவடன்னை நோக்கினுள்
தூயைநீகேட்டியென்றனைவியாமெனு
மேயதோர்கட்டுரைவிளம்பன்மேயினுள். (௫க)

நலந்துடிக்கின்றதோநான்செய்தீவினைச்
சலந்துடித்தின்னமுந்தருவதுண்மையோ
பொலந்துடிமருங்குலாய்புருவங்கண்முதல்
வலந்துடிக்கின்றிலவருவதோர்கிலேன். (௫உ)

முனிவொடிதிலையின்முதல்வன்முந்துநாள்
துனியறுபருவமுந்தோளுநாட்டமும்
இனியனதுடித்தனவீண்டுமாண்டென
நனிதுடிக்கின்றனவாய்ந்துசொல்லுவாய். (௫௩)

மறந்தனெனிதுவுமோர்மாற்றங்கேட்டியால்
அறந்தருசிந்தையென்னுவிநாயகன்
பிறந்தபார்முழுவதுந்தம்பியேபெறத்
துறந்துகாண்புகுந்தநாள் * வலந்துடித்ததே. (௫௪)

நஞ்சனையான்வனத்திழைத்தநாளிடை
வஞ்சனையால்வலந்துடித்தவாய்மையால்
எஞ்சலவீண்டுதாமிடந்துடித்ததால்
அஞ்சலென்றிரங்குதற்கடுப்பதியாதென்ருள். (௫௫)

என்றலுந்திரிசடையியைந்தசோபனம்
நன்றிதுநன்றெனுநயந்தசிந்தையாள்
உன்றனைக்கணவனையுறுதலுண்மையால்
† அன்றியுங்கேட்டியென்றறைதன்மேயினுள். (௫௬)

உன்னிறம்பசப்புறவுயிருயிர்ப்புற
இன்னிறத்தேனிசையினியநண்பினல்
மின்னிறமருங்குலாய்செவியின்மெல்லெனப்
பொன்னிறத்தும்பிவந்தூதிப்போயதால். (௫௭)

ஆயதுதேரினுன்னுவிநாயகன்
ஏயதூதுவந்தெதிர்தலுண்மையால்
தீயதுதீயவர்க்கெய்தறிண்ணமென்
வாயதுகேளெனமறித்துங்கூறுவாள். (௫அ)

---

* வலந்துடித்தல் பெண்களுக்குக்கெடுதியையும் புருஷர்களுக்குநன்மையையும்பயக்கும். † அன்றியுமென்றது தனக்குத்தோற்றினகுறிகளை

துயிலிலதாதலிற்கனவுதோன்றல
அயில்விழியொருகனவமர்ந்துநோக்கினேன்
பயில்வனபழுதிலபழுதிநரடென
வெயிலினு * மெய்யனவுரைத்தன்மேயினாள். (௩௯)

எண்ணெய்பொன்முடிதொறுமிழுகியீறிலாத்
திண்ணெடுங்கழுதைபேய்பூண்டதேரின்மேல்
அண்ணலவ்விராவணனரத்தவாடையன்
நண்ணினன்றென்புலனவையில்கற்பினாய். (௪0)

மக்களுஞ்சுற்றமுமற்றுளோர்களும்
புக்கனரப்புலம்போந்ததில்லையால்
சிக்கறநோக்கினென்றீயவின்னமும்
மிக்கனகேட்டெனவிளம்பன்மேயினாள். (௪௧)

ஆண்டகையிராவணன்வளர்க்குமவ்வனம்
† ஈண்டினவிறந்தவாலினங்கொள்செஞ்சிகை
தூண்டருமணிவிளக்கழலுந்தொன்மனை
தீண்டதால்வானவேறெறியக்கீழைநாள். (௪௨)

பிடிமதம்பிறந்தனபிறங்குபேரியும்
இடியெனமுழங்குமாலிரட்டலின்றியே
‡ தடியுடைமுகிற்குலமின்றித்தாவில்வான்
வெடிபடவதிருமாலுதிருமினெலாம். (௪௩)

விற்பகலின்றியேயிரவுவிண்டற
எற்பகவெரிந்துளதென்னத்தோன்றுமால்
மற்பகமலர்ந்ததோண்மைந்தர்சூடிய
கற்பகமாலையும்புலவுகாலுமால். (௪௪)

திரியுமாவிலங்கையுமதிலுந்திக்கெலாம்
எரியுமாற் § கந்தர்ப்பநகரமெங்கணும்
தெரியுமான்மங்கலகலசஞ்சிந்தின
விரியுமால்விளக்கினைவிழுங்குமாவிருள். (௪௫)

தோரணமுறிந்தனதுணியச்சூழ்மால்
வாரணமுறியுமால்வலத்தவாண்மருப்
பாரணமந்திரத்தறிஞர்நாட்டிய
பூரணகுடத்துநீர்நறவுபொங்குமால். (௪௬)
விண்டொடர்மதியினைப்பிளந்துமீனெழும்
புண்டொடர்குருதியிற்பொழியும்போர்மழை

* வெய்யன என்றும் பாடம்.
† ஈண்ட-மரக்கூட்டத்துடனே.
‡ தடி-மின்னல்.
§ கந்தர்ப்பநகரம்-மன்மதபுரம் பெண்குறி.

தண்டொடுதிகிரிவாடனுவென்றின்னன
மண்டமர்புரியுமாலாழிமாறுற. (௪௭)

மங்கையர்மங்கலத்தாலிமற்றையோர்
அங்கையின்வாங்கினரெவருமன்றியே
கொங்கையின்வீழ்ந்தனகுறித்தவாற்றினால்
இங்கிதனற்புதமின்னுங்கேட்டியால். (௪௮)

மன்னவன்றேவியம்மயன்மடந்தைதன்
பின்னவிழோதியும் * பிறங்கிவீழ்ந்தன
துன்னிருஞ்சுடர்சுடச்சுறுக்கொண்டேறின
இன்னலுண்டெனுமிதற்கேதுவீதெனா. (௪௯)

என்றனளியம்பிவேறிசைப்பக்கேட்டியால்
இன்றிவணிப்பொழுதியைந்ததோர்கனா
வன்றுணைக்கோளரியிரண்டுமாறிலாக்
குன்றிடையுழுவையங்குழுக்கொண்டுண்டியே. (௫௦)

வரம்பிலாமதகரியுறையுமவ்வனம்
நிரம்புறவளைந்தனநெருக்கிநேர்ந்தன
குரம்பறுபிணம்படக்கொன்றமாறிலாப்
புரம்புகவிருந்ததோர்மயிலும்போயதால். (௫௧)

ஆயிரந்திருவிளக்கமையமாட்டிய
சேயொளிவிளக்கதொன்றேந்திச் † செய்யவள்
நாயகன்றிருமனைநின்றுநண்ணுதல்
மேயினள்வீடணன்கோயின் ‡ மென்சொலாய். (௫௨)

பொன்மனைபுக்கவப்பொருவில்போதினில்
என்னைநீயுணர்த்தினைமுடிந்ததில்லெனா
அன்னையேயதன்குறைகாணென்றாயிழை
இன்னமுந்துயில்கெனவிருகைகூப்பினாள். (௫௩)

§ இவ்விடையண்ணலவ்விராமனேவிய
வெவ்விடையனையபோர்வீரத்தூதனும்
அவ்விடையெய்தினனரிதினோக்குவான்
நொவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினான். (௫௪)

அவ்வயினரக்கியாறிவுற்றம்மவோர்
செவ்வையிறுயினமைச்செருத்தநீதெனா
எவ்வயின்மருங்கினுமெழுந்துவீங்கினார்
வெவ்வயின்மழுவெழுச்சூலவெங்கையார். (௫௫)

* பிறங்கி-சுழன்று. † செய்யவள்-ராஜலட்சுமி. ‡ மென்சொலாய்-மிருதுபாஷி. § இவ்விடை யென்பதற்கு பிராட்டியும் திரிசடையும் பேசிக்கொண்டிருக்கிற இத்தருணத்திலென்று கொள்க.

வயிற்றிடைவாயினர்வளைந்தநெற்றியில்
குயிற்றியவிழியினர்கொடியநோக்கினர்
எயிற்றினுக்கிடையிடையானையாளிபேய்
துயிற்கொள்வெம்பிலனெனத்தொட்டவாயினர். (ருசு)

ஒருபதுகையினரொற்றைச்சென்னியர்
இருபதுதலையினரிரண்டுகையினர்
வெருவருதோற்றத்தர்விகடவேடத்தர்
பருவரையெனமுலைபலவுநாற்றினர். (ருஎ)

சூலம்வாள்சக்கரந்தோட்டிதோமரம்
காலவேல்கப்பணங்கற்றகையினர்
ஆலமேயுருவுகொண்டனையமேனியர்
* வாலமேதரித்தவன்வெருவும்வண்மையர். (ருஅ)

கரிபரிவேங்கைமாக்கரடியாளிபேய்
அரிநரிநாயெனவணிமுகத்தினர்
வெரிநுறுமுகத்தினர்விழிகண்மூன்றினர்
புரிதருகொடுமையர்புகையும்வாயினர். (ருகூ)

எண்ணினுக்களவிடலரியவீட்டினர்
கண்ணினுக்களவிடலரியகாட்சியர்
பெண்ணெனப்பெயர்கொடுதிரியும்பெற்றியர்
துண்ணெனத்துயிலுணர்ந்தெழுந்துசுற்றினர். (சு0)

ஆயிடையுரையழிந்தழகன்றேவியும்
தீயனையவர்முகநோக்கித்தேம்பினாள்
நாயகன்றாதனும்விரைவினண்ணினான்
ஓய்விலதுயர்மரப்பணையினும்பரான். (சுக)

அரக்கியரயின்முதலேந்துமங்கையர்
நெருக்கியகுழுவினர்துயிலுநீங்கினர்
இருக்குநர்பலரிதற்கேதுவென்னெனாப்
பொருக்கெனவவரிடைப்பொருந்தநோக்கினான். (சுஉ)

விரிமழைக்குலங்கிழித்தொளிருமின்னெனக்
கருநிறத்தரக்கியர்குழுவிற்கண்டனன்
உருநிறத்தொருதனிக்கொண்டலூழியான்
இருநிறத்துற்றவெற்கியைந்தகாந்தத்தை. (சுங)

தொடற்கருமரக்கியர்காவல்சுற்றுளாள்
மடக்கொடிசீதையாமாதரேகொலாம்

---

* வால்அம்—சுத்தஜலம்.

கடற்றுணைநெடியதன்கண்ணினீர்ப்பெருந்
தடத்திடையிருந்ததோரன்னத்தன்மையாள். (௬௪

வீடினதன்றறன்யானும்வீகலேன்
தேடினென்கண்டனென்றேவியேயென
ஆடினன்பாடினனாண்டுமீண்டும்பாய்ந்
தோடினனுலாவினனுவகைத்தேனுண்டான். (௬௫)

எள்ளருமுருவினவ்விலக்கணங்களும்
வள்ளறன்னுரையொடுமாறுகொண்டில
* கள்ளவாளரக்கனற்கமலக்கண்ணனார்
உள்ளுறையுயிரினையொளித்துவைத்தவா. (௬௬)

மூவகையுலகையுமுறையினீக்கிய
பாவிதன்னுயிர்கொள்வானிழைத்தபண்பிதால்
ஆவதேதையமிலரவினீங்கிய
தேவனேயவனிவள்கமலச்செல்வியே. (௬௭)

மாசுண்டமணியனாள்வயங்குவெங்கதிர்த்
தேசுண்டதிங்களுமென்னத்தேய்ந்துளாள்
காசுண்டகூந்தலாள்கற்புங்காவலும்
ஏசுண்டதில்லையாலறத்துக்கீறுண்டோ. (௬௮)

புனைகழலிராகவன்புயத்தையோபுகழ்
வனிதையர்திலகத்தின்மனத்தின்மாண்பையோ
வனைகழலரசரின்வண்மைவீக்கிடும்
சனகர்தங்குலத்தையோயாதைச்சாற்றுகேன். (௬௯)

தேவரும்பிழைத்திலர்தெய்வவேதியர்
ஏவரும்பிழைத்திலரறமுமீறின்றால்
யாவதிங்கினிச்செயலரியதெம்பிராற்
காவவென்னடிமையும்பிழைத்தின்றாமன்றே. (௭௰)

† கேழிலாணிறையிறைகீண்டதாமெனின்
ஆழியான்முனிவெனுமாழிமீக்கொள
ஊழியினிறுதிவந்துறுமென்றுன்னினேன்
வாழியருலகினிவரம்பினாளெலாம். (௭௧)

வெங்கனன்முழுகியும்புலன்கள்வீக்கியும்
நுங்குவவருந்துவநீக்கிநோற்றவர்
எங்குளர்குலனில்வந்தில்லின்மாண்புடை
நங்கையர்மனத்தவநவிலற்பாலதே. (௭௨)

---

* அரக்கனென்றது-இழிவுகுறிப்பு, கமலக்கண்ணனார் என்றது உயர்வுகுறிப்பு. † கேழ்இலாள்—ஒப்பில்லாத.

பேணநோற்றதுமனைப்பிறவிபெண்மைபோல்
நாணநோற்றுயர்ந்ததுநங்கைதோன்றலால்
மாணநோற்றீண்டிவளிருந்தவாறெலாம்
காணநோற்றிலனவன்கமலக்கண்களால். (௭௩)

முனிபவரரக்கியர்முறையினீங்கினார்
இனியவடானலாதியாருமில்லையால்
தனிமையும்பெண்மையுந்தவமுமின்னதே
வனிதையர்க்காகநல்லறத்தின்மாண்பெலாம். (௭௪)

தருமமேகாத்ததோசழக்கன்றன்வினைக்
கருமமேகாத்ததோகற்பின்காவலோ
அருமையேயருமையேயாரிதாற்றுவார்
ஒருமையேயெம்மனோர்க்குரைக்கற்பாலதோ. (௭௫)

செல்வமோவதுவவர்சிறுமையோவிது
அல்லினும்பகலினுமரராட்செய்வார்
ஒவ்வுமோவொருவர்க்கித்துறகண்யாதினி
வெல்லுமோதீவினையறத்தைமெய்ம்மையால். (௭௬)

என்றிவையினையனவெண்ணிவண்ணவான்
பொன்றிணிநெடுமரப்பொதும்பர்புக்கவண்
நின்றனனவ்வழிநிகழ்ந்ததென்னெனின்
துன்றுபூஞ்சோலைவாயரக்கன்றோன்றினான். (௭௭)

௬-வது, காட்சிப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௩௦௭.

---

## ௭-வது, நிந்தனைப்படலம்.

## பிராட்டிராவணனைத்தூஷித்தல்.

சிகரவண்குடுமிநெடுவரையெவையுமொருவழிதிரண்டனசிவண
மகரிகைவயிரகுண்டலமலம்புர்திண்டிறற்றோள்புடைவயங்கச்
சகரவேலையினீர்தழுவியகிரிற்றலைதொறுந்தலைதொறுந்தயங்கும்
வகையபன்மகுடமிளவெயிலெறிப்பக்கங்குலும்பகல்படவந்தான். (௧)

*உருப்பசியுடைவாளெடுத்தனடொடரமேனகைவெள்ளடையுதவச்[றக்
செருப்பினைத்தாங்கித்திலோத்தமை செல்லவரம்பையர்குழாம்புடைசுற்
கருப்புரஞ்சாந்துங்கலவையுமலருங்கலந்துமிழ்பரிமளகந்தம் [டுப்ப.
மருப்புடைப்பொருப்போர்மாதிரக்களிற்றின் வரிக்கைவாண்மூக்கிடைம

---

* ஊரு-தொடை, தொடையிற்பிறந்தவள், ஊருவசி.

நானநெய்விளக்கநாலிருகோடிநங்கையரங்கையிலெடுப்ப
மேனிவந்தெழுந்தமணியுடையணியின்விரிகதிரிருளெலாம்விழுங்கக்
கான்முதற்றொடர்ந்தநூபுரஞ்சிலம்பக்கிண்கிணிகலையொடுங்கலிப்பப்
பானிறத்தன்னக்குழாம்படர்ந்தென்னப்பற்பலமழலையும்பகர. (௫)

அந்தரம்புகுந்ததுண்டெனமுனிவுற்றருந்துயினீங்கினனண்டைச்
சந்திரவதனத்தருந்ததியிருந்ததண்ணறுஞ்சோலையின்றனேயோ
மந்திரம்யாதோயாரொடும்போமோவென்றுமாமனமறுக்குறலால்
இந்திரன்முதலோரிமைப்பிலாநாட்டமுகிழ்த்தனருயிர்ப்பவிந்திருப்ப. ()

நீனிறக்குன்றினெடிதினிற்றூழ்ந்தநீத்தவெள்ளருவியினிமிர்ந்த
பானிறப்பட்டின்மாலையுத்தரியம்பண்புறப்பசும்பொனூரத்தின்
மானிறப்புடவியுடையுறப்பரந்தவளர்கதிர்ளவெயில்பொருவச்
சூனிறக்கொண்மூக்கிழித்திடைதுடிக்குமின்னெனமார்பினூறுளங்க. ()

தோடொறுந்தொடர்ந்தமகரிகைவயிரக்கிம்புரிவலயமாச்சுடர்கள்
நாடொறுஞ்சுடருங்கலிகெழுவிசும்பினுளொடுகோளினைநக்கத் [வக்
தாடொறுந்தொடர்ந்ததழங்குபொற்கழலின்றகையொளிநெடுநிலந்தட
கேடொறுந்தொடர்ந்தமுறுவல்வெண்ணிலவின்முசமலரிரவினுங்கிளர.

தன்னிறத்தோடுமாறுதந்திமைக்குநீவியந்தழைபடவுடுத்த
பொன்னிறத்தூசுகருவரைமருங்கிற்றழுவியபுதுவெயில்பொருவ
மின்னிறக்கதிர்ச்சுற்றியபசும்பொன்விரற்றலையவிரொளிக்காசின்
கன்னிறக்கற்றைநெடுநிழல்பூத்தகற்பகமுழுவனங்கவின. (௭)

* சன்னவீரத்தகோவைவெண்டரளமூழியினிறுதியிற்றனித்த
பொன்னெடுவரையிற்றோற்றியகோளுநாளுமொத்திடையிடைபொலிய
மின்னொளிமௌலியுதயமால்வரையின்மீப்படர்வெங்கதிர்ச்செல்வர்
பன்னிருவரினுமிருவரைத்தவிர்வுற்றுதித்ததோர்படியொளிபரப்ப. (அ)

பயிலெயிற்றிரட்டைப்பணைமருப்பொடியப்படியினிற் † பரிவஞ்சுமந்த
மயிலடித்தொழுக்கினனையமாமதத்தமாதிரக்காவன்மால்யானை
கயிலையிற்றிரண்டமுரண்டொடர்தடந்தோட்கனகனதுயர்வரங்கடந்த
அயிலெயிற்றரியின்சுவடுதன்கரத்தாலனந்தமாக்கரியினின்றஞ்ச. (௯)

அங்கயற்கருங்கணியக்கியர்துயக்கிலரம்பையர்விஞ்சையர்க்கமைந்த
மங்கையர்நாகமடந்தையர்சித்தர்நாரியரரக்கியர்முதலாக் [தலை
குங்குமக் ‡ கொங்கைக்குவிமுலைக்கனிவாய்க்கோகிலந்துயர்ந்தமென்கு
மங்கையரீட்டமால்வரைதழீஇயமஞ்ஞைகுயங்குழுவெனமயங்க. (௧0)

---

* சன்னவீரம்-கழுத்திலணிகிற ஒருவகைமாலை இக்காலத்து மூந்நூலென்ப.

† பரிவம்-துன்பம். ‡ கொங்கு-வாசனை, ஐ-சாரியை என்க.

தொளையுறுபுழைவேய்த்தூக்கிசைக்கானந்துயலுறவொருநிலைபடர
இளையவர்மிடறுமிந்நிலையிசைப்பக்கிந்நரர்முறைநிறுத்தெடுத்த
கிளையுறுபாடல் * சில்லரிப்பாண்டிறழுவியமுழவொடுகெழுமி
அளையுறுமரவுமமுதுவாயுகுப்பவண்டமும்வையமுமளப்ப. (௧௧)

அன்னபூஞ்சதுக்கஞ்சாமரை † யுக்கமாதியாம்வரிசையிற்கமைந்த
உன்னரும்பொன்னின்மணியினிற்புனைந்தவிழைக்குலமுழைக்குலமனைய
மின்னிடைச்செவ்வாய்க்குவிமுலைப்பணைத்தோள் வீங்குதேரல்குலார்தா
நன்னிறக்காரின்வரவுகண்டுவக்குநாடகமயிலெனநடப்ப. [ங்கி

தந்திரிநெறியிற்றுக்குறுகருவிதூக்கினரெழுவிதச்சதியின்
முந்துறுகுணிலோடியையுறுகுறட்டிற்சில்லரிப்பாண்டிலின்முறையின்
மந்திரகீதத்திசைப்பதந்தொடரவகையுறுகட்டளைவழாமல்
அந்தரவானத்தரம்பையர்கரும்பிற்பாடலாரருகுவந்தகல. (௧௩)

அந்தில்வே ‡ ளனங்கனழல்படத்துரந்தவயின்முகப்பகழிவாயறுத்த
வெந்துறுபுண்ணின்வேனுழைந்தாங்குவெண்மதிப்பசுங்கதிர்விரவ
மந்தமாருதம்போய்மலர்தொறும்வாரிவயங்குநீர்மம்மரின்வருதேன்
சிந்துநுண்டுளியின்சீகரத்திவலையுருக்கியசெம்பெனத்தெறிப்ப. (௧௪)

இழைபுரைமருங்குலிறுமிறுமெனவுமிறுகலாவனமுலையிரட்டை
§ உழைபுகுசெப்பிஞெளிதரமறைத்தவுத்தரியத்தினரொல்கிக்
குழைபுகுகமலங்கோட்டினர்நோக்குங்குறுநகைக்குமுதவாய்மகளிர்
மழைபுரைதடங்கட்செங்கடையீட்டமார்பினுந்தோளினுமலைய. (௧௫)

மாலையுஞ்சாந்துங்கலவையும்பூணும்வயங்குநுண்டூசொடுகோசும்
சோலையின்றொழுதிக்கற்பகத்தருவுநிதிகளுங்கொண்டுபின்றொடரப்
பாலின்வெண்பரவைத்திரைகருங்கிரிமேற்பரந்தெனச்சாமரைபதைப்ப
வேலையின்றுயருமுயலில்வெண்மதியின்வெண்குடைநீழறவிளங்க. (௧௬)

ஆர்தருமகழியருவரையிலங்கையடிபெயர்த்திடுதொறுமழுந்தி
நேர்தரும்பரவைப்பிறழ்திரைதவழ்ந்துநெடுந்தடந்திசைதொறுமிமிரச்
சார்தருங்கடுவினெயிறுடைப்பகுவாயனந்தனுந்தலைதடுமாற
மூரிநீராடையிருநிலமடந்தைமுதுகுளுக்குற்றனண்முரல. (௧௭)

கேடகத்தோடுமழுவெழுச்சூலமங்குசங்கப்பணங்கிடுகோ
டாடகச்சுடர்வாளயில்சிலைகுலிசமுதலியவாயுதமனைத்தும் [ம்
தாடகைக்கிரட்டியெறழ்வலிக்கமைந்ததகைமையர் தடவரைபொறுக்கு
கூடகத்தடக்கைச்சுடுசினத்தடுபோரரக்கியர்தலைதொறுஞ்சுமப்ப. (௧௮)

---

* சில்லரி-நாகசுரம், பாண்டில்-பிரமதாளம்.
† உக்கம்-விசிறி.
‡ அநங்கன்-உருவமில்லாதவன், மன்மதன்.
§ உழை-ஏழனுருபு கச்சினிடத்தே என்க.

விரிதளிர்முகைபூக்கொம்படைமுதல்வே றிவையெலாமணிபொனால்விரி
தருவுயர்சோலைதிசைதொறுங்கரியத்தழலுமிழுயிர்ப்புமுன்றவழத் [ந்த
திருமகளிருந்ததிசையறிந்திருந்துந்திகைப்புறாசிந்தையன்கெடுத்த
தொருமணிநெடும்பற்பஃறலையரவினுழைதொறுமுழைதொறுமுலாவ.

இனையதோர்தன்மையெறுழ்வலியரக்கரேந்தல்வந்தெய்துகின்றானை
அனையதோர்தன்மையஞ்சனைசிறுவன்கண்டனனவையுறநோக்கி
வினையமுஞ்செயலுமேல்விளைபொருளுமிவ்வழிவிளங்குமென்றெண்ணி
வனைகழலிராமன்பெரும்பெயரோதியிருந்தனன்வந்தயன்மறைந்தே. ()

ஆயிடையரக்கனரம்பையர்குழுவுமல்லவும்வேறயலகல [ருவிப்
மேயினன்பெண்ணின்விளக்கெனுந்தகையா ளிருந்துழியாண்டவள்வெ
போயினவுயிராளாமெனநடுங்கிப்பொறிவரியெறுழ்வலிப்புகைக்கண்
காய்சினவுழுவைதின்னியவந்தகலையிளம்பிணையெனக்கரைந்தாள். (உ௧)

வேறு.

கூசியாவிகுலைவுறுவாளையும்
ஆசையாலுயிராசழிவாளையும்
காசில்கண்ணிணைசான்றெனக்கண்டனன்
ஊசலாடியுளையுமுளத்தினான். (உ௨)

வாழிசானகிவாழியிராகவன்
வாழிநான்மறைவாழியரந்தணர்
வாழிநல்லறமென்றுறவாழ்த்தினான்
ஊழிதோறும்புதிதுறுங்கீர்த்தியான். (உ௩)

அவ்விடத்தருகெய்தியரக்கன்றான்
எவ்விடத்தெனக்கின்னருளீவது
நொவ்விடைக்குயிலேநுவல்கென்றனன்
வெவ்விடத்தையமிழ்தெனவேண்டுவான். (உ௪)

ஈசற்காயினுமீடழிவுற்றிறை
வாசிப்பாடழியாதமனத்தினான்
ஆசைப்பாடுமந்நாணுமடர்த்திடக்
கூசிக்கூசியினையனகூறினான். (உ௫)

இன்றிறந்தனநாளையிறந்தன
என்றிறந்தருந்தன்மையிதாலெனைக்
கொன்றிறந்தபின்கூடுதியோகுழை
சென்றிறங்கிமறந்தருசெங்கணாய். (உ௬)

உலகமொன்றொடிரண்டொருங்கோம்புமென்
அலகில்செல்வத்தரசியலாணையில்

திலகமேயுன்றிறத்தரங்கன்றரு
கலகமல்லதெளிமையுங்காண்டியோ. (௨௭)

பூந்தண்வார்குழற்பொற்கொழுந்தேபுகழ்
ஏந்துசெல்வமிகழ்ந்தனையின்னுயிர்க்
காந்தன்மாண்டிலன்காடுகடந்துபோய்
வாழ்ந்தவாழ்வதுமானுடர்வாழ்வன்றே. (௨௮)

நோற்கின்றார்களுநுண்பொருணுண்ணிதின்
பார்க்கின்றாரும்பெறும்பயன்பார்த்தியேல்
வார்க்குன்றாமுலையென்சொன்மொழியால்
ஏற்கின்றாரொடுடனுறையின்பமால். (௨௯)

* பொருளும்யாழும்விளரியும்பூவையும்
மருளுநாளுமழலைவழங்குவாய்
தெருளுநான்முகன்செய்ததன்சிந்தையின்
அருளுமின்மருங்கும்மரிதாக்கியோ. (௩0)

ஈண்டுநாளுமிளமையுமீண்டில
மாண்டுமாண்டுபிறிதுறுமாலைய
வேண்டுநாள்வெறிதேவிளிந்தாலினி
யாண்டுவாழ்வல்விடருழன்றழ்தியோ. (௩௧)

இழவெனக்குயிர்க்கெய்தினுமெய்துக
குழைமுகத்துநின்சிந்தனைகோடினல்
பழகிற்புறும்பண்பிவைகாமத்தோ
டழகினுக்கினியாருளராவரோ. (௩௨)

† பெண்மையும்மழகும்பிறழாமனத்
திண்மையும்முதல்யாவையுஞ்செய்யவாய்க்
கண்மையும்பொருந்திக்கருணைப்படர்
வண்மையென்கொல்சனகின்மாண்டவா. (௩௩)

வீட்டுங்காலத்தலறிய ‡ மெய்க்குரல்
கேட்டுங்காண்டற்கிருத்திகொல்கிள்ளைநீ
நாட்டுங்காணொடுநல்லறத்தின்பயன்
ஊட்டுங்காலத்திகழ்வதுறுங்கொலோ. (௩௪)

தக்கதென்னுயிர்வீடெனிற்றாழ்கிலா
தொக்கசெல்வமுலையுமொருத்திநீ

* பொருள்-பிள்ளை. † பெண்ணுக்குள்ள நற்குணங்களெல்லாமுன்னிடத்திலேயிருந்தும் தாக்ஷிண்ணியமும் ஈகையுமில்லையென்கிறாய் என்றால் எனக்கு உயிர்பலிதவேணுமென்கை. பலி-பச்சை.

‡ மாரீசன் ராமன்குரலாக ஆலட்சுமணா என்றது மெய்க்குரல்.

புக்குயர்ந்ததெனும்புகழ்போக்கிவே
றுக்கதென்னுமுறுபழி * கோடியோ. (௩௫)

தேவர்தேவியர்சேவடிகைதொழும்
தாவின்மூவுலகின்றனிநாயகம்
மேவுகின்றது நுன்கண்விலக்கினை
யாவரேழையர்நின்னினிலங்கிழாய். (௩௬)

குடிமைமூன்றுலகுஞ்செயுங்கொற்றத்தென்
அடிமைகோடியருளுதியாலென்று
முடியின்மீதுமுகிழ்த்துயர்கையினன்
படியின்மேல்விழுந்தான்பழிபார்க்கலான். (௩௭)

வேறு.

காய்ந்தனசலாகையன்னவுரைவந்துகதுவாமுன்னம்
தீய்ந்தனசெவிகளுள்ளந்திரிந்ததுசிவந்தசோரி
பாய்ந்தனகண்களொன்றும் † பரிந்திலளுயிர்க்கும்பெண்மைக்
கேய்ந்தனவல்லவெய்யமாற்றங்களினையசொன்னாள். (௩௮)

மல்லலதிரடோள்வஞ்சன்மனம்பிறிதாகும்வண்ணம்
கல்லொடுந்தொடர்ந்தநெஞ்சங்கற்பின்மேற்கண்டதுண்டோ
இல்லொடுந்தொடர்ந்தமாதர்க்கேய்வனவல்லவெய்ய
சொல்லிதுதெரியக்கேட்டிதுரும்பெனக்கனன்றுசொன்னாள். (௩௯)

மேருவையுருவல்வேண்டின்விண்பிளந்தேகல்வேண்டின்
ஈரெழுபுவனம்யாவுமுற்றுவித்திடுதல்வேண்டின்
‡ ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித்தலைபத்துஞ்சிந்துவாயோ. (௪0)

அஞ்சினையாதலானன்றாரியனற்றநோக்கி
வஞ்சனைமானொன்றேவிமாயையான்மறைத்துவந்தாய்
உய்ஞ்சனைபோதியாயின்விடுதியுன்குலத்துக்கெல்லாம்
நஞ்சினையெதிர்ந்தபோதுநோக்குமேநினதுநாட்டம். (௪௧)

பத்துளதலையுந்தோளும்பலபலபகழிதூவி
வித்தகவில்லினாற்குத்திருவிளையாடற்கேற்ற
சித்திரவிலக்கமாகுமல்லதுசெருவிலேற்கும்
சத்தியைபோலுமேனாள்சடாயுவாற்றரையின்வீழ்ந்தாய். (௪௨)

தோற்றனைபறவைக்கன்றுதுள்ளுநீர்வெள்ளஞ்சென்னி
ஏற்றவன்வாளால்வென்றாயன்றெனினிறத்தியன்றே

---

* கோடி - கொள்தி. † பரிந்திலள் என்றது - அவள்பேசுகிறது பெண்கள்போலன்று ஆண்கள்போல் பேசுகிறாளென்க. தன் உயிர்க்குப் பரிந்திலளெனவுமாம். ‡ ஆரியன்-ஸ்ரீராமன்.

நோற்றநோன்புடையவாழ்நாள்வரமிவை நுனித்தவெல்லாம்
கூற்றினுக்கன்றேவீரன்சரத்திற்குங்குறித்ததுண்டோ. (௪௩)

பெற்றுடைவரனுநாளும்பிறந்துடையுரனும்பின்னும்
மற்றுடையெவையுந்தந்தமலரயன்முதலோர்வார்த்தை
விற்றொடையிராமன்கோத்துவிடுதலும்விலக்குண்டெல்லாம்
இற்றிடைந்திறுதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ. (௪௪)

குன்றுநீயெடுத்தநாடன்சேவடிக்கொழுந்தாலுன்னை
வென்றவன்புரங்கள்வேவத்தனிச்சரந்துரந்தமேரு
என்றுணைக்கணவனுற்றற்குரனிலாதிற்றவீழ்ந்த
அன்றெழுந்துயர்ந்தவோசைகேட்டிலைபோலுமம்மா. (௪௫)

வேறு.

மலையெடுத்தெண்டிசைகாக்குமாக்களை
நிலைகெடுத்தேனெனுமாற்றநேருநீ
சிலையெடுத்திளையவனிற்கச்சேர்ந்திலை
தலையெடுத்தின்னமுமகளிற்றாழ்தியோ. (௪௬)

* ஏழைநின்னொளித்துறையின்னதாமென
வாழியெங்கோமகனறியவந்தநாள்
ஆழியுமிலங்கையுமழியத்தாழுமோ
ஊழியுந்தீயுமுன்னுயிரொடோயுமோ. (௪௭)

வெஞ்சினவரக்கரைவிளித்துவீயுமோ
வஞ்சனைநீசெயவள்ளல்சீற்றத்தால்
எஞ்சவிலுலகெலாமெஞ்சுமெஞ்சுமென்
றஞ்சுகின்றேனிதற்கனுஞ்சான்றரோ. (௪௮)

அங்கண்மாஞாலமும்விசும்புமஞ்சவாழ்
வெங்கணைப்புன்றொழில்விலக்கிமேற்கொளாய்
செங்கண்மானுன்முகன்சிவனென்றேகொலோ
எங்கணையகனையுநினைந்ததேழைநீ. (௪௯)

மானுயரிவரெனமனங்கொண்டாயெனின்
† கானுயர்வரைநிகர்கார்த்தவீரியன்
தானொருமனிதனுற்றளர்ந்துளானெனின்
தேனுயர்தெரியலான்றன்மைதேர்தியால். (௫௦)

இருவரென்றிகழ்ந்தனையென்னின்யாண்டெல்லை
ஒருவனன்றேயுலகழிக்குமூழியான்
செருவருங்காலையென்மெய்ம்மைதேர்தியால்
பொருவருந்திருவிழந்தநாயம்பொன்றுவாய். (௫௧)

---

* ஏழை-ஈண்டு அறிவில்லாதவன். † கானுயர்...காத்தவீரியன்-விருக்ஷாதிகள்போற்கைகளும்மலைபோற்காத்தவீரியனுமாகக்கொள்க.

பொற்கணான்றம்பியென்றினையபோர்த்தொழில்
விற்கொணாண்பொருவுதோளவுணர்வேறுளார்
நற்கணார்நல்லறந்துறந்தநாளினும்
இற்கணாலிறந்திலரிறந்துநீங்கினார். (ருஉ)

வேறு.

* பூவிலோனாதியாகப்புலன்கள்போநெறியிற்போகாத்
தேவரோவவுணர்தாமோநிலைநின்றவினையிற்றீர்ந்தார்
ஏவலெவ்வுலகுஞ்செய்யச்செல்வநிற்கிசைந்ததென்றால்
பாவமோமுன்னீசெய்ததருமமோதெரியப்பாராய். (ருங.)

† இப்பெருஞ்செல்வநின்கணீந்தபேரீசன்யாண்டும்
அப்பெருஞ்செல்வந்துய்ப்பானின்றுமாதவத்தினன்றே
ஒப்பருந்திருவுநீங்கியுறவொடுமுலக்கவுன்னித்
தப்புதியறத்தையேழாய்தருமத்தைக்காமியாதே. (ருச)

மறந்திறம்பாததோலாவலியினரெனினுமாண்டார்
அறந்திறம்பினருமக்கட்கருடிறம்பினருமன்றே
பிறந்திறந்துழலும்பாசப்பிணக்குடைப்பிணியிற்றீர்ந்தார்
துறந்தரும்பகைகண்மூன்றுந்துடைத்தவர்பிறர்யார்சொல்லாய். ()

தென்றமிழுரைத்தோன்முன்னாத்தீதீர்முனிவர்யாரும்
புன்றொழிலரக்கர்க்காற்றேநோற்கிலம்புகுந்தபோதே
கொன்றருணின்னாலன்னார்குறைவது ‡ சரதங்கோவே
என்றனர்யானேகேட்டேனீயிதற்கியையவசெய்தாய். (ருசு)

உன்னையுங்கேட்டுமற்றுன்னாற்றமுமுடையநாளும்
பின்னையிவ்வரக்கர்சேனைப்பெருமையுமுனிவர்பேணிச்
சொன்னபினுங்கைமூக்குமும்பியர்தோளுந்தாளும்
சின்னபின்னங்கள்செய்தவதனைநீசிந்தியாயோ. (ருஎ)

ஆயிரந்தடக்கையானின்னைநான்குகரமும்பற்றி
வாய்வழிகுருதிசோரக்குத்திவான்சிறையில்வைத்த
தூயவன்வயிரத்தோள்கடுணித்தவன்றொலைந்தமாற்றம்
நீயறிந்திலையோவேகுநெறியறிந்திலாதநீசா. (ருஅ)

கடிக்கும்வல்லரவுங்கேட்குமந்திரங்களிக்கின்றோயை
அடுக்குமீதடாதென்றான்றவேதுவோடறிவுகாட்டி
இடிக்குநரில்லையுள்ளாரெண்ணியதெண்ணியுன்னை
முடிக்குநரென்றபோதுமுடிவன்றிமுடிவதுண்டோ. (ருகூ)

---

* பூவிலோன் பூவேவீடாகவுடைய பிரமன். † இப்பெருஞ்செல்வநின்கணீந்ததோரீசன் யாண்டுமப்பெருஞ் செல்வந்துய்ப்பானினது மாதவத்தினன்றே எனப்பாடபேதமும் உண்டு. ‡ சரதம்-சத்தியம்.

வேறு.

நன்றறத் துறைகேட்டலுமிருபதுநயனம்
நின்றிறப்பனவொத்தனவெயில்விடுபகுவாய்
தன்றிறத் * தெழித்துரப்பினன்குறிப்பதென்காமன்
றன்றிறத்தையுங்கடந்ததுசீற்றத்தின்றகைமை. (௬0)

வளர்ந்தநாணினன்மாதிரமனைத்தையுமறைவித்
தளர்ந்ததோளினனனல்சொரிகண்ணினனிவளைப்
பிளந்துதின்பெனென்றுடன்றனன்பெயர்ந்தனன்பெயரான்
கிளர்ந்தசீற்றமுங்காதலுமெதிரெதிர்கிடைப்ப. (௬௧)

அன்னகாலையினனுமனுமருந்ததிக்கற்பின்
என்னையாளுடைநாயகன்றேவியையென்முன்
சொன்னநீசன்கைதொடுவதன்முன்றகைத்துழக்கிப்
பின்னைநின்றதுசெய்குவெனென்பதுபிடித்தான். (௬௨)

தனியினின்றனன்றலைபத்துங்கடி † துகத்தாக்கிப்
பனியின்வேலையிலிலங்கையைக்கீழுறப்பாய்ச்சிப்
புனிதமாதவத்தணங்கினைச்சுமந்தனன்போவான்
இனிதிதென்பதுநினைந்தனன்கரம்பிசைந்திருந்தான். (௬௩)

ஆண்டவாளரக்கன்சனன்றண்டத்தையழிப்பான்
மூண்டகாலவெந்தீயெனமுற்றியசீற்றம்
நீண்டகாதனீர்நீத்தத்தின்வீவுறுநிலையின்
மீண்டுநின்றொருதன்மையாலிவையிவைவிளம்பும். (௬௪)

வேறு.

கொல்வெனென்றுடன்றேனுன்னைக்கொல்கிலன்குறித்துச்சொன்ன
சொல்லுளவவற்றுக்கெல்லாங்காரணந்தெரியச்சொல்லின்
ஒல்வதீதொல்லாதீதென்றெனக்குமொன்றுலகத்துண்டோ
வெல்வதுந்தோற்றனுனும்வினையாட்டின்விளைந்தமேனாள். (௬௫)

ஒன்றுகேளுரைக்கநிற் ‡ கோருயிரெனவுரியோன்றன்னைக்
கொன்றுகோளிழைத்தானீநின்னுயிர்விடிற்கூற்றங்கூடும்
என்றனுருயிருநீங்குமென்பதையியையவெண்ணி
அன்றுநான்வஞ்சஞ்செய்ததாரெனக்கமரினோர்வார். (௬௬)

மானென்பதறிந்துபோனமானுடராவார்மீண்டி
யானென்பதறிந்தால்வாராரேழைமையெண்ணிநோக்கல்
தேனென்பதறிந்தசொல்லாய்தேவர்தாம்யாவரேயெங்
கோனென்பதறிந்தபின்னைத்திறம்புவார்குறையினல்லால். (௬௭)

* தெழித்து-அதட்டி. † உக-உதிர. ‡ ஓர்-ஒப்பற்ற.

வென்றோருமிருப்பயார்க்குமேலவர்விளிவிலாதோர்
என்றோருமிருப்பவன்றேயிந்திரனேவல்செய்ய
ஒன்றாதவுலகமூன்றுமுணர்வின்றவொருவன்யானே
மென்றோளாயிதற்குவேறோர்காரணம்விரிப்பதுண்டோ. (௬அ)

மூவருந்தேவர்தாமுமுரணுசுமுற்றுங்கொற்றம்
பாவைநின்பொருட்டினுலோர்பழிபெறப்பயன்றீர்நோன்பின்
ஆவியின்மனிதர்தம்மையடுகிலேனவரையீண்டுக்
கூவினன்றேவல்கொள்வென்காணுதிருதலைச்சொல்லாய். (௬௯)

சிற்றியற்சிறுமையாற்றல்சிறுதொழின்மறவரோடு
முற்றிய * தாவில்வீரமுனிவென்கண்விளையாதேனும்
இற்றையிற்பகலினெய்தியிருவரையொருகையாலே
பற்றினென்கொணருந்தன்மைகாணுதிபழிப்பிலாதாய். (௭0)

பதவியமனிதரேனும்பைந்தொடிநின்னைத்தந்த
உதவியையுணரநோக்கினுயிர்க்கொலைக்குரியரல்லர்
சிதைவுறலவர்க்குவேண்டிற்செய்திறன்றேர்ந்ததெண்ணின்
இதனினக்கிதேயாகினியற்றுவல்காண்டியின்னும். (௭௧)

பள்ளநீரயோத்திமண்ணிப்பரதனேமுதலினோராண்
டுள்ளவர்தம்மையெல்லாமுயிர்குடித்தூழித்தீயின்
வெள்ளநீர்மிதிலையோரைவேரறுத்தெளிதினெய்திக்
கொள்வெனின்னுயிருமென்னையறிந்திலைகுறைந்தநாளோய். (௭௨)

ஈதுரைத்தழன்றுபொங்கியெரிகதிர்வாளைநோக்கித்
தீதுயிர்க்கிழைக்குநாளுந்திங்களோரிரண்டிற்றேய்ந்த
தாதலினின்றதெண்ணென்றறிந்தவாறறிவாயென்னுப்
போதரிக்கண்ணினுளையகத்துவைத்துரப்பிப்போனன். (௭௩)

அஞ்சுவித்தானுமொன்றாலறிவுறத்தேற்றியானும்
வஞ்சியிற்செவ்வியாளைவசித்தென்பால்வருவீரன்றால்
நஞ்சுமக்காவெனென்றுநகையிலாமுகத்துப்பேழ்வாய்
வெஞ்சினத்தரக்கிமார்க்குவேறறவுணர்த்திப்போனன். (௭௪)

போயினனரக்கன்பின்னைப்பொங்கராநுங்கிக்கான்ற
தூயவெண்மதியையொத்ததோகையைத்தொடர்ந்துசுற்றித்
தீயவல்லரக்கிமார்கடெழ்இத்தெழித்துரப்பிச்சிந்தை
மேயினவண்ணமெல்லாம்விளம்புவருடன்றுயிக்கார். (௭௫)

வேறு.

† முன்முன்னின்றார்கண்கனல்சிந்தமுடுகுற்றார்
மின்மின்னென்னுஞ்சூலமும்வேலுமிவையோச்சிக்

* தா இல்-வருத்தமில்லாத. † முன் முன் ஒருத்திக்கு முன்னே ஒருத்தி முந்தி எனவுமாம்.

கொன்மின்கொன்மின்கொன்றுகுறைத்துக்குடராரத்
தின்மின்றின்மினென்றுதெழித்தார்சிலரெல்லாம். (எசு)

* வையந்தந்தநான்முகன்மைந்தன்மகன்மைந்தன்
ஐயன்வேதமாயிரம்வல்லோனறிவாளன்
மெய்யன்புன்பால்வைத்துளதல்லால்வினைவென்றோன்
செய்யும்புன்மையாதுகொலென்றார்சிலரெல்லாம். (எஎ)

மண்ணிற்றீயமானுயர்தத்தம்வழியோடும்
பெண்ணிற்றீயோய்நின்முதன்மாயும்பிணிசெய்தாய்
புண்ணிற்கோலிட்டாலனசொல்லிப்பொதுநோக்கால்
எண்ணிக்காணாய்மெய்ம்மையுமென்றார்சிலரெல்லாம். (எஅ)

புக்கவழிக்கும்போந்தவழிக்கும் † புகழ்வெந்தீ
ஒக்க ‡ விதைப்பாயுற்றனையன்றேவுணர்வில்லாய்
இக்கணமிற்றாய்முந்தினமெல்லாமினிவாழாய்
சிக்கவுரைத்தேமென்றுதெழித்தார்சிலரெல்லாம். (எகூ)

கொல்வானுற்றோர்பெற்றிமையாதுங்குறையாதாள்
வெல்வானங்கோனின்னுயிர்வம்மென்பவர்மெய்யும்
வல்வாய்வெய்யோனேவலுமெல்லாமனம்வைத்தாள்
நல்லாணல்லகண்கள்கலுழ்ந்தேநகுகின்றாள். (அ0)

இன்னோரன்னவெய்தியகாலத்திடைநின்றாள்
முன்னேசொன்னேன்கண்டகனாவின்முடிவம்மா
பின்னேவாளாபேதுறவீரேற்பிழையென்றாள்
அன்னேநன்றென்றாரவரெல்லாமறிவுற்றார். (அக)

அறிந்தாரன்னமுச்சடையென்பாளவள்சொல்லப்
பிறிந்தார்சீற்றமன்னனையஞ்சிப்பிறிதில்லார்
செறிந்தாராயநீவினையன்னார்தெறலெண்ணார்
நெறிந்தாரோதிப்பேதையுமாவிநிலைநின்றாள். (அ௨)

௲-வது, நிந்தனைப்படலம்-முற்றிற்று.
ஆ௲ திருவிருத்தம்-௲அகூ.

---

* வையத்...மைந்தன்-உலகத்தைத்தந்தவன் பிரமன், அவன் மைந்தன் புலத்தியன், அவன் மைந்தன் விச்சிரவாகு, அவன் தநயன் இராவணன்.

† புகைவெந்தீ என்றும் பாடம். புகைகிறவெப்பமுள்ள நெருப்பு. கழ்வெந்தீயென்றும் பாடமாயின் இருகுலத்துப் புகழையும் அரக்கராய நெருப்பிலே வீழ்த்துகிறாயென்க.

‡ விதைத்தல்-வளரச்செய்தல்.

## ௫-வது, உருக்காட்டுபடலம்.

### சிறியதிருவடி தம்வடிவைப் பிராட்டிக்குக் காட்டுதல்.

* காண்டற்கொத்தகாலமுமீதேதெறுகாவல்
தூண்டற்கொத்தசிந்தையினாருந்துயில்கில்லார்
வேண்டத்துஞ்சாரென்றொருவிஞ்சைவினைசெய்தான்
மாண்டற்குற்றாராமெனவெல்லாமயர்வுற்றார். (௧)

துஞ்சாதாருந்துஞ்சுதல்கண்டாடுயராற்றாள்
நெஞ்சாலொன்றுமுய்வழிகாணாணெகுகின்றாள்
அஞ்சாநின்றாள்பன்னெடுநாளுமழிவுற்றாள்
எஞ்சாவன்பாலின்னபகர்ந்தாங்கிடருற்றாள். (௨)

வேறு.

† கருமேகநெடுங்கடல்காரனையான்
தருமேதனியேனெனதாருயிர்தான்
உருமேறுறழ்வெஞ்சிலைநாணொலிதான்
வருமேயுரையாய்வலியார்வலியே. (௩)

கல்லாமதியேகதிர்வாணிலவே
செல்லாவிரவேசிறுகாவிருளே
எல்லாமெனையேமுனிவீர்நினையா
வில்லாளனையாதும்விளித்திலிரோ. (௪)

தழல்வீசவுலாய்வருவாடைதழீஇ
அழல்வீரெனதாவியறிந்திலிரோ
நிழல்வீரையனாருடனீர்நெடுநாள்
உழல்வீர்கொடியீருரையாடிலிரோ. (௫)

வாராதொழியானெனும்வண்மையினால்
‡ ஓராயிரகோடியிடர்க்குடையேன்
தீராவொருநாள்வலிசேவகனே
நாராயணனேதனிநாயகனே. (௬)

தருவொன்றியகானடைவாய்தவிர்நீ
வருவென்சிலநாளினின்மாநகர்வாய்
இருவென்றனையின்னருடானிதுவேல்
ஒருவென்றனியாவியையுண்ணுதியோ. (௭)

பேணும் § முணர்வேயுயிரேபெருநாள்
நாணின்றுழல்வீர்தனிநாயகனைக்

* காணச்சமையம் கிடையாமையைக்குறித்து காலமும் என்றார். அருமைச்சிறப்பு † கருமேகத்திலு நெடுங்கடலிலுமுள்ள கருநிறத்தை ஒத்தவனெனவுமாம். ‡ ஓராயிரகோடி-அளவிறந்தகோடி. § உணர்வே-மனமே.

காணுந்துணையுங்கழிவீரலிர்நான்
பூணும்பழியோடுபொருந்துவதோ. (௮)

முடியாமுடிமன்னன்முடிந்திடவும்
படியேழுநெடுந்துயர் * பாவிடவும்
மடியாநெறிவந்துவனம்புகுதும்
கொடியார்வருமென்றுகுலாவுவதோ. (௯)

என்றென்றுயிர்விம்மியிருந்தழிவாள்
மின்றன்னுமருங்குல்விளங்கிழையாள்
ஒன்றென்னுயிருண்டெனினுண்டிடர்யான்
பொன்றும்பொழுதேபுகழ்பூணுமெனா. (௧௦)

வேறு.

பொறையிருந்தாற்றியென்னுயிரும்போற்றினேன்
அறையிருங்கழலவற்காணுமாசையால்
நிறையிரும்பல்பகலிருந்தர்நீணகர்
சிறையிருந்தேனையப்புனிதன்றீண்டுமோ. (௧௧)

உன்னினர்பிறரெனவுணர்ந்துமுய்ந்தவர்
† சொன்னனசொன்னனசெவியிற்றூங்கவும்
மன்னுயிர்காத்திருங்காலம்வைகினேன்
என்னின்வேறரக்கியர்யாண்டையார்கொலோ. (௧௨)

சொற்பிரியாப்பழிசுமந்துழங்குவேன்
நற்பிறப்புடைமையுநாணுநன்றரோ
கற்புடைமடந்தயர்கதையுளோர்கடாம்
இற்பிரிந்துய்ந்தவர்யாவர்யானலால். (௧௩)

பிறர்மனையெய்தியபெண்ணைப் ‡ பேணுதல்
திறனலதென்றுயிர்க்கிறைவன்றீர்ந்தனன்
புறனலரவனுறப்போதுபோக்கியான்
அறனலதியற்றிவேறென்கொண்டாற்றுகேன். (௧௪)

எப்பொழுதிப்பெரும்பழியினெய்தினேன்
அப்பொழுதேயுயிர்துறக்குமாணையேன்
ஒப்பரும் § பெருமறுவுலகமோதயான்
துப்பழிந்துய்வதுதுறக்கந்துன்னவோ. (௧௫)

அன்பழிசிந்தையராயவாடவர்
வன்பழிசுமக்கினுஞ்சுமக்கவானுயர்
துன்பழிபெரும்புகழ்க்குலத்துட்டோன்றினேன்
என்பழிதுடைப்பவரென்னின்யாவரே. (௧௬)

* பாவிடவும்-பரவவும். † சொன்னன சொன்னன-சொல்லுமவைகளெல்லாம். ‡ பேணுதல்-ஈண்டுவேண்டல். § பெருமறு-பெரியகுற்றம்.

வஞ்சனையானின்பின்மன்னைப்போக்கியென்
* மஞ்சனைவைதுபின்வழிக்கொள்வாயென
நஞ்சனையானகம்புகுந்தநங்கையான்
உய்ஞ்சனெனிருத்தலுமுலகங்கொள்ளுமோ. (௧௭)

வல்லியன்மறவர்தம்வலிதீர்பவர்
வெல்லினும்வெல்கபோர்விளிந்துவீடுக
இல்லியலறத்தையானிறந்துவாழ்ந்தபின்
சொல்லியவென்பழியவரைச்சுற்றுமோ. (௧௮)

வருந்தலின்மானமாவனையமாட்சியர்
பெருந்தவமடந்தையர்முன்புபேதையேன்
கருந்தனிமுகிலினைப்பிரிந்துகள்வனூர்
இருந்தவளிவளெனவேசநிற்பெனே. (௧௯)

அற்புதனரக்கர்தம் † வருக்கமாசற
விற்பணிகொண்டருஞ்சிறையின்மீட்டநாள்
இற்பிறப்புகத்தக்கிலையென்னின்யானுடைக்
கற்பினையெப்பரிசிழைத்துக்காட்டுகேன். (௨௦)

ஆதலானிறத்தலேயறத்தி ‡ றெனறெனச்
சாதல்காப்பவருமென்றவத்திற்சாம்பினர்
ஈதலாதிடமும்வேறில்லையென்றொரு
போதுலாமாதவிப்பொதும்பரெய்தினள். (௨௧)

கண்டனனனுமனுங்கருத்துமெண்ணினன்
கொண்டனனன்றுணுக்கமெய்தீண்டக்கூசுவான்
அண்டர்நாயகனருடூதன்யானெனத்
தொண்டைவாய்மயிலினைத்தொழுதுதோன்றினன். (௨௨)

அடைந்தனெனடியனேனிராமனுணையால்
குடைந்துலகனைத்தையுநாடுங்கொட்பினால்
மிடைந்தவருலப்பிலர்தவத்தைமேவலான்
மடந்தைநின்சேவடிவந்துநோக்கினேன். (௨௩)

ஈண்டுநீயிருந்ததையிடரின்வைகுறும்
§ ஆண்டகையறிந்திலனதற்குக்காரணம்
வேண்டுமேயரக்கர்தம்வருக்கம்வேரொடு
மாண்டிலவீதலான்மாறுவேறுண்டோ. (௨௪)

* மஞ்சனை-புத்திரபாவமான இளையபெருமாளை. † வருக்கம்-கூட்டம். ‡ ஆறு-ஒழுங்கு. § ஆண்டகை ...வேறுண்டோ—புருஷரத்னரான ஸ்ரீராமன் நீ இருக்குமிடம் தெரிந்தால் ராக்ஷதர்கள் அழிந்துபோவார்கள் அவர் தெரியாதிருத்தலால்இவர்கள் சாவாதிருக்கிறார்கள். சாவாதிருக்கின்றதே அவர் தெரிந்திலரென்பதற்குக் காரணமென்க.

ஐயுறலுள தடையாளமாரியன்
மெய்யுறவுணர்த்தியவுரையும்வேறுள
கையுறுசெல்வியங்கனியிற்காண்டியால்
செய்யுறுவிளக்கனுய்நினையல்வேறென்றான். (௨௫)

வேறு.

என்றவனிறைஞ்சநோக்கியிரக்கமுமுனிவுமெய்தி
நின்றவனிருதனல்லனெறிநின்றுபொறிகளைந்தும்
வென்றவனல்லனாகில்விண்ணவனாகவேண்டும்
நன்றுணர்வுரையன்றாயனவையிலன் * போலுமென்னா. (௨௬)

அரக்கனேயாகவேறோரமரனேயாகவன்றிக்
குரக்கினத்தலைவனேதானாகுககொடுமையாக
இரக்கமேயாகவந்திங்கெம்பிரானாமஞ்சொல்லி
உருக்கினனுணர்வைத்தந்தானுயிரிதினுதவியுண்டோ. (௨௭)

எனநினைத்தெய்தநோக்கியிரங்குமென்னுள்ளங்கள்ளம்
மனனகத்துடையராயவஞ்சகர்மாற்றமல்லன்
நினைவுடைச்சொற்கள்கண்ணீர்நிலம்புகப்புலம்பாநின்றான்
வினவுதற்குரியனென்னாவீரநீயாவனென்றாள். (௨௮)

ஆயசொற்றலைமேற்கொண்டவங்கையனன்னைநின்னைத்
தாயவன்பிரிந்தபின்புதேடியதுணைவன்றொல்லைக்
காய் † கதிர்ச்செல்வன்மைந்தன்கவிக்குலமவற்றுக்கெல்லாம்
நாயகன்சுக்கிரீவனென்றுளனவையிற்றீர்ந்தான். (௨௯)

மற்றவன்முன்னோனாந்நாளிராவணன்வலிதன்வாலின்
இற்றுகக்கட்டியெட்டுத்திசையினுமெழுந்துபாய்ந்த
வெற்றியன்றேவர்வேண்டவேலையை ‡ விலங்கன்மத்தில்
சுற்றியநாகந்தேயவமுதெழக்கடைந்ததோளான். (௩0)

அன்னவன்றன்னையுங்கோனம்பொன்றாலாவிவாங்கிப்
பின்னவற்கரசுநல்கித்துணையெனப்பிடித்தானங்கள்
மன்னவன்றனக்குநாயேன்மந்திரத்துள்ளேன்வானின்
நன்னெடுங்காலின்மைந்தனுமமுமநுமனென்றான். (௩௧)

எழுபதுவெள்ளங்கொண்டவெண்ணனவுலகமெல்லாம்
தழுவிநின்றெடுப்பவேலைதனித்தனிக்கடக்குந்தாள
குழுவினவுங்கோன்செய்யக்குறித்ததுகுறிப்பினுன்னி
வழுவிலசெய்தற்கொத்தவாநரம்வானினீண்ட. (௩௨)

துப்புறுபரவையேழுஞ்சூழ்ந்தபாரேழுமாழ்ந்த
ஒப்புறுநாகர்நாடுமும்பரினிம்பர்காறும்

* போலும்-அசை. † கதிர்ச்செல்வன் மைந்தன்-ஈண்டு சுக்கிரீவன்.
‡ விலங்கல்-மலை, ஈண்டு மந்தரகிரியை.

இப்புறந்தேடிநின்னையெதிர்ந்திலவென்னினண்டத்
தப்புறம்போயுந்தேடவவதியினமைந்துபோன. (௩௩)

புன்றொழிலரக்கன்கொண்டுபோந்தநாள்பொதிந்தநூசின்
குன்றினெம்மருங்கினிட்டவணிகலக்குறியினாலே
வென்றியானடியன்றன்னைவேறுகொண்டிருந்துகூறித்
தென்றிசைசேறியென்றானவனருள்சிதைவதாமோ. (௩௪)

கொற்றவற்காண்டுக்காட்டிக்கொடுத்தபோதடுத்ததன்மை
பெற்றியினுணர்தற்பாற்றோவுயிர்நிலைபிறிதுமுண்டோ
இற்றைநாளளவுமன்னானவன்றுநீயிழித்துநீத்த
மற்றைநல்லணிகள் * காணுன்மங்கலங்காத்த † மன்னோ (௩௫)

ஆயவன்றன்மைநிற்கவங்கதன்வாலிமைந்தன்
ஏயவன்றென்பால்வெள்ளமிரண்டினோடெழுந்துசேனை
மேயினபடர்ந்துதீரவனையவன்விடுத்தானென்னைப்
பாய்புனலிலங்கைமூதூர்க்கென்றனன்பழியைவென்றான். (௩௬)

எய்தவனுரைத்தலோடுமெழுந்துபேருவகையேற
வெய்துறவொடுங்குமேனிவானுறவிம்மியோங்கி
உய்தல்வந்துற்றதோவென்றருவிநீரொழுகுகண்ணாள்
அய்யசொலையன்மேனியெப்படிக்கறிதியென்றாள். (௩௭)

‡ படியெடுத்துரைத்துக்காட்டும் § படித்தன்றுபடிவம்பண்பின்
முடிவுளவுவமமெல்லாமிலக்கணமொழியுமுன்னர்த்
துடியிடையடையாளத்தின்றொடரவைதொடர்தியென்னு
அடிமுதன்முடியின்காறுமறிவுறவநுமன்சொல்வான். (௩௮)

வேறு.

சேயிதழ்த்தாமரையென்றுசேனுளோர்
ஏயினரதன்றுணையெளியதில்லையால்
நாயகன்றிருவடிகுறித்துநாட்டுறின்
பாய்திரைப்பவளமுங்குவளைப்பண்பிறும். (௩௯)

தளங்கெழுகற்பகமுகிழுந்தண்டுறை
இளங்கொடிப்பவளமுங்கிடக்கவென்னவை
துளங்கொளிவிரற்கெதிருதிக்குஞ்சூரியன்
இளங்கதிரொக்கினுமொக்குமேந்திழாய். (௪0)

சிறியவும்பெரியவுமாகித்திங்களோ
மறுவிலபத்துளவல்லமற்றினி
எறிசுடர்வயிரமோதிரட்சியெய்தில
அறிகிலெனுகிர்க்கியானுவமமாவன. (௪௧)

* காண்-முன்னிலையசை. † மன்னோ-அசை. ‡ படி-ஒப்பு. § படி-விதம், தன்மை.

பொருந்திலநிலனொடுபோந்துகானிடை
வருந்தினவெனினதுநூலைமாறுகொண்
டிருந்ததுநின்றதுபுவனம்யாவையும்
ஒருங்குடன்புணர்வஃதுரைக்கற்பாலதோ. (௪௨)

தாங்கணைப்பணிலமும்வளையுந்தாங்கரா
வீங்கணைப்பள்ளியானெனினும்வேறினிப்
பூங்கணைக்காற்கொருபரிசுதான்பொரும்
ஆங்கணைக்காவமோவாவதன்னையே. (௪௩)

அறங்கிளர்பறவையினரசனொடெழிற்
பிறங்கெருத்தனையனபெயரும்பெற்றுடை
மறங்கிளர்மதகரிகரமு * நாணின
குறங்கினுக்குவமையிவ்வுலகிற்கூடுமோ. (௪௪)

வலஞ்சுழித்தொழுகுநீர்வழங்குகங்கையின்
பொலஞ்சுழியென்றலும்புன்மைபூவொடு
நிலஞ்சுழித்தெழுமணியுந்திநேரினி
† இலஞ்சியும்போலும்வேறுவமையாண்டரோ. (௪௫)

பொருவருமரகதப்பொலங்கொண்மால்வரை
வெருவுறவிரிந்துயர்விலங்கலாகத்தைப்
பிரிவறநோற்றிலளென்னிற்பின்னையத்
திருவினிற்றிருவுளார்யாவர்தெய்வமே. (௪௬)

நீடுறுக்கட்டிசைநின்றயானையின்
கோடுறுகரமெனச்சிறிதுகூறலாம்
தோடுறுமலரெனச்சுரும்புசுற்றறாத்
தாடொடுதடக்கைவேறுவமைசாலுமே. (௪௭)

பச்சிலைத்தாமரைபகல்கண்டாலெனக்
கைச்செறிமுகிழுகிர் ‡ கனகனென்பவன்
வச்சிரயாக்கையைவகிர்ந்தவன்றொழில்
நிச்சயமன்றெனினையநீக்குமே. (௪௮)

திரண்டிலவொளியிலதிருவின்சேர்வில
முரண்டருமேருவின்முரியமூரிநாண்
புரண்டிலபுகழிலபொருப்பென்றொன்றுபோன்
றிரண்டிலபுயங்களுக்குவமமேற்குமோ. (௪௯)

கடற்படுபணிலமுங்கன்னிப்பூகமும்
மிடற்றினுக்குவமையென்றுரைக்குமெல்லியோர்

---

* நாணினது என்பது நாணினவெனக் கடைக்குறையாயிற்று.

† இலஞ்சி-மகிழம். ‡ கனகன்-இரணியன்.

உடற்படவொண்ணுமோவுரகப்பள்ளியான்
இடத்துறைசங்கமொன்றிருக்கவெங்களால். (௫௦)

அண்ணறன்றிருமுகங்கமலமாமெனின்
கண்ணினுக்குவமைவேறியாதுகாட்டுகேன்
தண்மதியாமெனவுரைக்கத்தக்கதோ
வெண்மதிபொலிந்ததுமெலிந்துதேயுமால். (௫௧)

வேறு.

ஆரமுமகிலுநீவியகன்றதோளமலன்செவ்வாய்
நாரமுண்டலர்ந்தசெங்கேழ்நளினமென்றுரைக்கநாணும்
ஈரமுண்டமுதமூறுமின்னுரையியம்பாதேனும்
மூரல்வெண்முறுவல்பூவாப்பவளமோமொழியற்பாற்றே. (௫௨)

வேறு.

முத்தங்கொல்லோமுழுநிலவின்முறியின்றிறனோமுறையமுதச்
சொத்தின்றுள்ளிவெள்ளியினந்தொடுத்தகொல்லோதுறையறத்தின்
வித்துமுளைத்த * வங்குரங்கொல்வேறேசிலகொன்மெய்ம்முகிழ்த்த
தொத்தின்றொகைகொல்யாதென்றுபல்லுக்குவமைசொல்லுகேன். ()

எள்ளாநிலத்திந்திரநிலத்தெழுந்தகொழுந்துமரகதத்தின்
விள்ளாமுழுமாநிழற்பிழம்பும்வேண்டவேண்டுமேனியதோ
தள்ளாவோதிகோபத்தைக்கவ்வவந்துசார்ந்ததுவும்
கொள்ளாவள்ளறிருமூக்கிற்குவமைபின்னுங்குணிப்பாமோ. (௫௪)

பணிக்கச்சுரத்துக்கரன்முதலோர்கவந்தப்படையும்பல்பேயும்
தணிக்கைச்சிலையும்வானவருமுனிவர்குழுவுந்தனியறனும்
இனிக்கட்டழிந்ததரக்கர்குலமென்னுஞ்சுருதியீரண்டும்
† குணிக்கக்குணிந்தபுருவத்துக்குவமனீயேகோடியால். (௫௫)

வருநாட்டோன்றுந்தனிமறுவும்வளர்வுந்தேய்வும்வாளரவம்
ஒருநாட்கவ்வுமுறுகோளு ‡ மிறப்பும்பிறப்புமொழிவுற்றால்
இருநாற்பகலினிலங்குமதியலங்கலிருளினெழினிழற்கீழ்ப்
பெருநாணிற்பினவனெற்றிப்பெற்றித்தாகப்பெறுமன்றே. (௫௬)

நீண்டுகுழன்றுநெய்த்திருண்டுநெறிந்துசெறிந்துநெடுநீலம்
பூண்டுபுரிந்துசரிந்துகடைசுருண்டுபுகையுநறும்பூவும்
வேண்டுமல்லவெனத்தெய்வவெறியேகமழுநறுங்குஞ்சி
ஈண்டுசடையாயினதென்றன்மழையென்றுரைத்தலிழிபன்றே. (௫௭)

புல்லலேற்றதிருமகளும்பூவும்பொருந்தப்புவியேழும்
எல்லையேற்றநெடுஞ்செல்வமெதிர்ந்தஞான்றுமஃதின்றி

---

* அங்குரம்-முளை. † குணிக்க-கூத்தாட. ‡ இறப்பும் பிறப்பும் ஈண்டு அஸ்தமிக்கிறதும் உதயமாகிறதும்.

அல்லலேற்றகானகத்துமழியாநடையையிழிவான
மல்லலேற்றினுளதென்றன்மத்தயானைவருந்தாதோ. (௫௮)

இன்னமொழியவம்மொழிகேட்டெரியினிட்டமெழுகென்னத்
தன்னையறியாதயர்வாளைத்தரையின்வணங்கிநாயகனார்
சொன்னகுறியுண்டடையாளச்சொல்லுமுளவாலவைதோகை
அன்னநடையாய்கேட்கென்னவறியவறைவானாயினான். (௫௯)

வேறு.

நடத்தலரிதாகுநெறிநாள்கள்சிலதாயர்க்
கடுத்தபணிசெய்திவணிருத்தியெனவச்சொற்
குடுத்ததுகிலோடுமுயிருக்கவுடலோடும்
எடுத்தமுனிவோடுமயணீன்றதுமிசைப்பாய். (௬0)

நீண்டமுடிவேந்தனருளேந்தி * நிறைசெல்வம்
பூண்டதனைநீங்கிநெறிபோதலுறுநாளின்
ஆண்டநகராரையொடுவாயிலகலாமுன்
யாண்டையதுகாவெனவிசைத்ததுமிசைப்பாய். (௬௧)

எள்ளரியதேர்தருசுமந்திரனிசைப்பாய்
வள்ளன்மொழிவாசகமனத்துயர்மறந்தாள்
கிள்ளையொடுபூவைகள்கிளத்தல் † கிளவென்னும்
பிள்ளையொடுதன்றிறமுணர்த்துதிபெயர்த்தும். (௬௨)

மீட்டுமுறைவேண்டுவனவில்லையெனமெய்ப்போர்
தீட்டியதுதீட்டரியசெய்கையதுசெவ்வே
நீட்டிதெனநேர்ந்தனனெனுநெடியகையால்
காட்டினனொராழியதுவாணுதலிகண்டாள். (௬௩)

இறந்தனர்பிறந்தபயனெய்தினர் ‡ கொலென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்கொலென்கோ
துறந்தவுயிர்வந்திடைதொடர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவதென்னைகொலிநன்னுதலிசெய்கை. (௬௪)

இழந்தமணிபுற்றரவெதிர்ந்ததெனலானாள்
பழந்தனமிழந்தனபடைத்தவரையொத்தாள்
குழந்தையையுயிர்த்தமலடிக்குவமைகொண்டாள்
உழந்துவிழிபெற்றதொருயிர்ப்பொறையுமொத்தாள். (௬௫)

வாங்கினண்முலைக்குவையில்வைத்தனள்சிரத்தால்
தாங்கினண்மலர்க்கண்மிசையொத்தினடடந்தோள்

* நிறைசெல்வம்-மகதைசுவரியம்.

† கிள-சொல்லுக.

‡ கொல்-ஈ-ம்-அசைகள். என்னைகொல்-எப்படியோ எனவுமாம்.

வீங்கினண்மெலிந்தனள்குளிர்ந்தனள்வெதுப்போ
டேங்கினளுயிர்த்தனளிதின்னதெனலாமே. (சுசு)

மோக்குமுலைவைத்துறமுயங்குமொளிர்நன்னீர்
நீக்கிநிறைகண்ணிணைததும்பவொடுகீள
நோக்குநுவலக்கருதுமொன்றுநுவல்கில்லாள்
மேக்குநிமிர்விம்மலள்விழுங்கலுறுகின்றாள். (சுஎ)

நீண்டவிழிநேரிழைதன்மின்னினிறமெல்லாம்
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
ஆண்டகைதன்மோதிரமடுத்தபொருளெல்லாம்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிசொல்லோ. (சுஅ)

இருந்துபசியாலிடருழந்தவர்களெய்தும்
அருந்துமமுதாகியதறத்தவரையண்மும்
விருந்துமெனலாகியதுவீயுமுயிர்மீளும்
மருந்துமெனலாகியதுவாழிமணியாழி. (சுகூ)

இத்தகையளாகியுயிரேமுறவிளங்கும்
முத்தநகையாள்விழியினலிமுலைமுன்றில்
தத்தியுகமென்குதலைதன்னவுயிர்தந்தாய்
உத்தமவெனுவிணையவாசகமுரைத்தாள். (எ0)

வே று.

மும்மையாமுலகந்தந்தமுதல்வற்குமுதல்வன்றாதாய்ச்
செம்மையாலுயிர்தந்தாய்க்குச்செயலென்னுலெளியதுண்டே
அம்மையாயத்தனுயவப்பனேயருளின்வாழ்வே
இம்மையேமறுமைதானுநல்கினையிசையோடென்றாள். (எக)

பாழியபணைத்தோள்வீரதுணையிலேன்பரிவுதீர்த்த
வாழியவள்ளலேயான்மறவிலாமனத்தேனென்னின்
ஊழியோர்பகலாயோதும்யாண்டெலாமுலகமேழும்
எழும்வீவுற்றஞான்றுமின்றெனவிருத்தியென்றாள். (எஉ)

மீண்டுரைவிளம்பலுற்றாள்விழுமியகுணத்தோய்வீரன்
யாண்டையானிளவலோடுமெவ்வழியெய்திற்றுன்னை
ஆண்டகையடியேன்செய்கையார்சொலவறிந்ததென்றாள்
தூண்டிரடடந்தோளானுமுற்றதுசோறலுற்றான். (எங)

உழைக்குலத்தீயமாயவுருவுகொண்டுறுதல்செய்தான்
மழைக்கருநிறத்துமாயவரக்கன்மாரீசனென்பான்
இழைத்தடமார்பத்தண்ணலெய்யப்போய்வையஞ்சேர்வான்
அழைத்ததவ்வோசையுன்னைமயக்குதற்கரக்கன்சொல்ல. (எச)

இக்குரலிளவல்கேளாதொழிகெனவிறைவனிட்டான்
மெய்க்குரல்சாபம்பின்னைவிளைந்ததுவிதியின்மெய்ம்மை
பொய்க்குரலன்றுபோலாம்பொருள்பின்னர்ப்பயக்குமென்பான்
கைக்குரல்வரிவில்லானுமிளையவன்வரவுகண்டான். (எரு)

கண்டபினிளையவீரன்முகத்தினுற்கருத்தையோர்ந்த
புண்டரிகக்கணுனுமுற்றதுபுகலக்கேட்டான்
வண்டுறைசாலைவந்தானின்றிருவடிவுகாணுன்
உண்டுயிரிருந்தானின்னலுழப்பதற்கேதுவொன்றே. (எசு)

தேண்டிநேர்கண்டேன்வாழிநீதிலனெங்கோனுகம்
பூண்டமெய்யுயிரேபோகப்பொய்யுயிர்போலநின்ற
ஆண்டகைநெஞ்சினின்றுமகன்றிலையழிவுண்டாமோ
ஈண்டுநீயிருந்தாயாண்டங்கெவ்வுயிர்விடுமிராமன். (எஎ)

அந்நிலையாயவண்ணலாண்டுநின்றன்னைநின்னைத்
தன்னிருங்காணும்யாறுமலைகளுந்தொடர்ந்துநாடி
இன்னுயிரின்றியேகுமியந்திரப்படிவமொப்பான்
தன்னுயிர்புகழ்க்குவிற்றசடாயுவைவந்துசார்ந்தான். (எஅ)

வந்தவன்மேனிநோக்கிவானுயர்துயரின்வைகி
எந்தைநீயுற்றதன்மையியம்பெனவிலங்கைவேந்தன்
சுந்தரிதன்னைச்செய்தவஞ்சனைசொல்லச்சொல்ல
வெந்தனவுலகமென்ன * நிமிர்ந்ததுசீற்றவெந்தீ. (எகூ)

சீறியிவ்வுலகமூன்றுந்தீந்துகச்சினவாயம்பால்
நூறுவெனென்றுகைவிற்ஞேக்கியகாலைநோக்கி
ஊறொருசிறியோன்செய்யமுனிதியோவுலகையுள்ளம்
ஆறுதியென்றுதாதையாற்றலிற்சீற்றமாறி. (அ0)

எவ்வழியேகியுற்ருன்யாண்டையானுறையுள்யாது
செவ்வியோய்கூறுகென்னச்செப்புவானுற்றசெவ்வி
வெவ்வியல்விதியின்கொட்பால்வீடினன்கழுகின்வேந்தன்
எவ்வியவரிவிற்செங்கையிருவருமிடரின்வீழ்ந்தார். (அக)

அயர்த்தவரிதிற்றேறியாண்டொழிற்ருதைக்காண்டுச்
செயத்தகுகடன்மையாவுந்தேவருமருளச்செய்தார்
கயத்தொழிலரக்கன்றன்னைநாடிநாங்காண்டுமென்றேப்
புயற்றெருடுகுமிக்குன்றுங்கானமுங்கடந்துபோனர். (அஉ)

அவ்வழிநின்னைக்காணுதயர்த்தவரிதிற்றேறிச்
செவ்வழிநயனஞ்செல்லுநெடுவழிசேறசெய்ய
வெவ்வழலுற்றமெல்லென்மெழுகெனவழியுமெய்யன்
இவ்வழியினையபன்னியறிவழிந்திரங்கலுற்ருன். (அஙு)

---

* நிமிர்ந்தது-மேன்மேலாயிற்று.

வேறு.

கன்மத்தைஞாலத்தவராருளரேகடப்பார்
பொன்மொய்த்ததோளான்மயல்கொண்டுபுலன்கள்வேறாய்
நன்மத்தைநாகத்தயல்சூடியநம்பனேபோல்
உன்மத்தனானான்றனையொன்றுமுணர்ந்திலாதான். (௮௪)

போதாயினபோதுனதண்புனலாடல்பொய்யோ
சீதாபவளக்கொடியன்னவட்டேடியென்கண்
நீதாதருகிற்றிலையேனெருப்பாதியென்னாக்
கோதாவரியைச்சினங்கொண்டனன்கொண்டலொப்பான். (௮௫)

குன்றேகடிதோடினைகோமளக்கொம்பரன்ன
என்றேவியைக்காட்டுதிகாட்டலையென்னினிவ்வம்
பொன்றேயமையும்முனுடைக்குலமுள்ளவெல்லாம்
இன்றேபிளவாவெரியாக்கரியாக்கவென்றான். (௮௬)

* பொன்மானுருவாற்சிலமாயைபுணர்க்கவன்றோ
† என்மானகல்வுற்றனளிப்பொழுதென்கணென்னா
‡ நன்மான்களைநோக்கிநுந்நாமமுமாய்ப்பெனின்றே
வின்மாண்கொலைவாளியினென்றுவெகுண்டுநின்றான். (௮௭)

வேறுற்றமனத்தவனின்னதொர்விம்மனோவ
ஆறுற்றநெஞ்சிற்றனதாருயிராயதம்பி
கூறுற்றசொல்லென்றுளகோதறுநன்மருந்தால்
தேறுற்றுயிர்பெற்றியல்புஞ்சிலசொல்லலுற்றான். (௮௮)

வந்தானிளையானெடுவானுயர்தேரின்வைகும்
நந்தாவிளக்கின்வருமெங்குலநாதன்வாழும்
சந்தார்தடங்குன்றினிற்றன்னுயிர்க்காதலோனும்
செந்தாமரைக்கண்ணனுநட்டனர்தேவருய்ய. (௮௯)

உண்டாயதுமுற்றதுமுற்றுமுணர்த்தியுள்ளம்
புண்டானெனநோயுறவிம்முறுகின்றபோழ்தின்
எண்டானிழந்திட்டனனேந்திழையாங்கள்காட்டக்
கண்டானுயர்வேதமும் § போதமுங்காண்கிலாதான். (௯0)

தணிகின்றநஞ்சொற்றொடர்தன்மையதன்மைதன்னைத்
துணிகொண்டிலங்குஞ்சுடர்வேலவன்றாயநின்கண்
அணிகண்டுழியேயமுதந்தெளித்தாலுமாறாப்
பிணிகொண்டதுபண்டதுண்டாயினும்பேர்ப்பதன்றால். (௯௧)

---

* பொன்மானுருவால்-பொன்மான்வடிவுகொண்டு.
† என்மான்-எனதுமானனை சீதை.
‡ நன்மான்-நல்லமான்கள்.
§ போதம்-ஞானம்.

அயர்வுற்றரிதிற்றெளிந்தம்மலைக்கப்புறத்தோர்
உயர்பொற்கிரியுற்றுளன்வாலியென்றோங்கலொப்பான்
துயருற்றவிராவணன்வாலிடைப்பண்டுதூங்க
* மயர்வுற்றபொருப்பொடுமால்கடறாவிவந்தான். (கூஉ)

ஆயானையொரம்பினிலோருயிர்வாங்கியன்பிற்
றாயான்வயினவ்வரசிந்தவன்சுற்றுசேனை
மேயான்வருவானெனவிட்டனன்மேவுகாறும்
ஏயானிருந்தானிடைதிங்களிரண்டிரண்டும். (கூங)

பிற்கூடியசேனைபெருந்திசைபின்னவாக
விற்கூடுழுதற்றிருவின்னிடைமேவமேவித்
தெற்கூடுருவக்கடிதேவினன்சேர்ந்ததென்ன
முற்கூடியகூறினன்காலமொர்மூன்றும்வல்லான். (கூச)

வேறு.

அன்பினனிவ்வுரையுணர்ந்தவாரியன்
வன்பொறைநெஞ்சினன்வருத்தமுன்றுவான்
என்புறவுருகினனிரங்கியேங்கினன்
துன்பமுமுவகையுஞ்சுமந்தவுள்ளத்தான். (கூரு)

நையுறுசிந்தையனையனவாரியின்
தொய்யல்வெஞ்சுழியிடைச்சுழிக்குமேனியன்
ஐயநீயளப்பருமளக்கர்நீந்தினை
எய்தியதெப்பரிசியம்புவாயென்றான். (கூசு)

சுருங்கிடையுன்னொருதுணைவன்றாயதாள்
ஒருங்குடையுணர்வினோய்வின்மாயையின்
பெருங்கடல்கடந்தனர்பெயரும்பெற்றிபோல்
கருங்கடல்கடந்தனென்காலினாலென்றான். (கூஎ)

இத்துணைச்சிறியதோரெண்ணில்யாக்கையை
தத்தினாகடலதுதவத்தினாயதோ
சித்தியினியன்றதோசெப்புவாயென்றான்
முத்தினுநிலவினுமுறுவன்முற்றினாள். (கூஅ)

சுட்டினனின்றனன்றொழுதகையினன்
விட்டுயர்தோளினன்விசும்பின் † மேக்குயர்
எட்டருநெடுமுகடெய்திநீளுமேல்
முட்டுமென்றுருவொடுவளர்ந்தமூர்த்தியான். (கூகூ)

செவ்வழிப்பெருமையென்றுரைக்குஞ்செம்மைதான்
வெவ்வழிப்பூதமோரைந்தின்மேலதோ

---

* மயர்வு-இங்கு கலந்திருத்தல். † மேக்கு-மேலே.

அவ்வழித்தன்றெனினநுமன்பாலதோ
எவ்வழித்தாகுமென்றெண்ணுமீட்டதே. (க00)

ஒத்துயர்கனகவான்கிரியினோங்கிய
மெய்த் * துறுமரந்தொறுமின்மினிக்குலம்
மொய்த்துளவாமெனமுன்னும்பின்னரும்
தொத்தினதாரகைமயிரின்சுற்றெலாம். (க0க)

கண்டலமறிவொடுகடந்தகாட்சியன்
விண்டலமிருபுடைவிளங்குமெய்ம்மையக்
குண்டலமிரண்டுமக்கோளின்மாச்சுடர்
மண்டிலமிரண்டொடுமாறுகொண்டவே. (க0உ)

எண்ணிலவொருகுரங்கிதென்றெண்ணலா
ஆணியையநுமனையமையநோக்குவான்
சேணுயர்பெருமையோர்திறத்ததன்றெனா
நாணுறுமுலகெலாமளந்தநாயகன். (க0௩)

எண்டிசைமருங்கினுமுலகம்யாவினும்
தண்டலிலுயிரெலாந்தன்னைநோக்கின
அண்டமென்றதினுறையமரர்யாரையும்
கண்டனன்றானுந்தன்கமலக்கண்களால். (க0ச)

எழுந்துயர்நெடுந்தகையிரண்டுபாதமும்
அழுந்துறவழுத்தலினிலங்கையாழ்கடல்
விழுந்ததுநிலமிசைவிரிந்தவெண்டிரை
தழைந்தனபுரண்டனமீனந்தாமெலாம். (க0ரு)

வஞ்சியம்மருங்குலம்மறுவில்கற்பினாள்
கஞ்சமும்புரைவனகழலுங்கண்டிலாள்
துஞ்சினரரக்கரென்றுவக்குஞ்சூழ்ச்சியாள்
அஞ்சினளிவ்வுருவடங்குவாயென்றாள். (க0சு)

முழுவதுமிவ்வுருக்காணமுற்றிய
குழுவிலதுலகினிக்குறுகுவாயென்றாள்
எழுவினுமெழிலிலங்கிராமன்றோள்களைத்
தழுவினளாமெனத்தளிர்க்குந்தன்மையாள். (க0எ)

ஆண்டகையநுமனுமருளதாமெனா
மீண்டனன்விசும்பெனும்பதத்தைமீச்செல்வான்
காண்டலுக்குரியதோருருவங்காட்டினான்
தூண்டருவிளக்கனாளினையசொல்லினாள். (க0அ)

---

* துறு-நெருங்கின.

வேறு.

இடந்தாயுலகைமலேயோடுமெடுத்தாய்விசும்பையிவைசுமக்கும்
படந்தாழரவையொருகரத்தாற்பறித்தாயெனினும்பயனின்றால்
நடந்தாயிடையேயென்றாலுநாணுநினைக்குநளிர்கடலைக்
கடந்தாயென்றாலென்னுகுங்காற்றுமன்னகடுமையாய். (௧௦௯)

ஆழிநெடுங்கையாண்டகைதனருளும்புகழுமழிவின்றி
ஊழிபலவுநிலைநிறுத்தற்கொருவனீயேயுளையானாய்
* பாழிநெடுந்தோள்வீரநின்பெருமைக்கேற்பப்பகையிலங்கை
ஏழுகடற்கும்அப்புறத்ததாகாதிருந்ததிழிபன்றே. (௧௧௦)

அறிவுமீதேயுருவீதேயாற்றலீதேயரும்புலத்தின்
செறிவுமீதேசெயலீதேதேற்றமீதேதேற்றத்தின்
நெறியுமீதேநினைவீதேநீதியீதேநினைக்கென்றால்
வெறியரன்றோகுணங்களான்விரிஞ்சன்முதலாமேலானோர். (௧௧௧)

மின்னேயெயிற்றுவல்லரக்கர்விக்கநோக்கிட்டரற்குப்
பின்னேபிறந்தானல்லதோர்துணையிலாதபிழைநோக்கி
உன்னுநின்றேயுடைகின்றேனொழிந்தேனையழுயிருயிர்த்தேன்
அன்னேநிருதரென்னுவரிவனையெங்கோன்றுணையென்றால். (௧௧௨)

மாண்டேனெனினும்பழுதன்றேயின்றேமாயச்சிறைநின்றும்
மீண்டேனென்னையொறுத்தாரைக்குலங்களோடும்வேரறுத்தேன்
பூண்டேனெங்கோன்பொலங்கழலும்புகழேயன்றிப்புன்பழியும்
தீண்டேனென்றுமனமகிழ்ந்தாடிருவின்முகத்துத்திருவன்னாள். (௧௧௩)

† அண்ணற்பெரியோனடிவணங்கியறியவுரைப்பானருந்ததியே
வண்ணக்கடலினிடைக்கிடந்தமணலிற்பலரால்வானரத்தின்
எண்ணற்கரியபடைத்தலைவரிராமற்கடியாரியானவர்தம்
பண்ணைக்கொருவனெனப்போந்தேனேவக்கடவபணிசெய்வேன். ()

வெள்ளமேழுபத்துளதால்வீரன்சேனையிவ்வேலைப்
பள்ளமொருகைநீரள்ளிக்குடிக்கச்சாலும்பான்மையதோ
கள்ளவரக்கர்குடியிலங்கைகாணுதொழிந்ததாலன்றோ
உள்ளதுணையுமுளதாவதறிந்தபின்னுமுளதாமோ. (௧௧௫)

வாலியிளவலவன்மைந்தன்மயிந்தன்றுமிந்தன்வயக்குமுதன்
நீலனிடபன்குமுதாக்கன்பனசன்சரபனெடுஞ்சாம்பன்
காலனனையதுன்மருடன்காம்பன்கவயன்கவயாக்கன்
ஞாலமறியுநற்சங்கன்வினதன்றுவிந்தனளனென்பான். (௧௧௬)

---

* பாழி-விசாலமான.

† அண்ணற்பெரியோன்-உருவாலும் அறிவாலும், பெருமையுள்ள அனுமார்.

தம்பன்றாமத்தனிப்பேரோன்றதியின்வதனன்சதவலியென்
றிம்பருலகோடெவ்வுலகுமெடுக்குமிடுக்கரிராமன்கை
அம்பினுதவும்படைத்தலைவரவரைநோக்கினிவ்வரக்கர்
வம்பின்முலையாயுறையிடவும்போதார்கணக்குவரம்புண்டோ. (ககஎ)

ரு-வது, உருக்காட்டுபடலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சா0சா.

## சா-வது, சூளாமணிப் படலம்.



வேறு.

உண்டுதுணையென்னவெளிதோவுலகினம்மா
புண்டரிகைபோலுமிவளின்னல்புரிகின்றாள்
அண்டமுதனாயகனதாவியனையாளைக்
கொண்டகல்வதேகருமமென்றுணர்வுகொண்டான். (க)

கேட்டியடியேனுரைமுனிந்தருளல்கேளார்
வீட்டியிடுமேலவனைவேறல்வினையன்றால்
ஈட்டியினியென்பலவிராமனெதிர்நின்னைக்
காட்டியடிதாழ்வெனிதுகாண்டியிதுகாலம். (உ)

பொன்றிணிபொலங்கொடியென்மென்மயிர்பொருந்தித்
துன்றியபுயத்தினிதிருக்கதுயர்விட்டாய்
இன்றுயில்விளைக்கவொரிமைப்பினிறைவைகும்
குன்றிடையுனைக்கொடுகுதிப்பெ * னிடைகொள்ளேன். (ங)

அறிந்திடையரக்கர்தொடர்வார்களுளராமேல்
முறிந்துதிரநூறியெதிரென்சினமுடிப்பேன்
செறிந்தகுழனின்னிலைமைகண்டுநெடியோன்பால்
வெறுங்கைபெயரேனொருவராலும்விளியாதேன். (ச)

இலங்கையொடுமேருகிரிகொலென்னினுமிடந்தேன்
வலங்கொளொருகைத்தலையில்வைத்தெதிர்தடுப்பான்
விலங்கினரைநூறிவரிவெஞ்சிலையினோர்தம்
பொலங்கொள்கழறாழ்குவெனிதன்னைபொருளன்றால். (ரு)

அருந்ததியுரைத்தியழகற்கருகுசென்றான்
† மருந்தனையதேவிநெடுவெஞ்சர்சிறைவைப்பில்
பெருந்துயரினோடுமொருவீடுபெறலில்லா
இருந்தனளெனப்பகரினென்னடிமையென்னாம். (சா)

* இடைகொள்ளேன்-நடுவேதங்கேன். † மருந்து-தேவாமிர்தம்.

புண்டொடர்வகற்றியபுயத்தினொடுபுக்கேன்
விண்டவர்வலத்தையும்விரித்துரைசெய்கேனோ
கொண்டுவருகிற்றிலெனுயிர்க்குறுதிகொண்டேன்
கண்டுவருகிற்றிலெனெனக்கழறுகேனோ. (௭)

இருக்குமதில்சூழ்கடியிலங்கையையிமைப்பின்
உருக்கியெரியாவிகலரக்கரையுமொன்றா
முருக்கிநிருதக்குலமுடித்துவினைமுற்றிப்
பொருக்கவகல்கென்னினுமதின்றுபுரிகின்றேன். (௮)

* இந்துநுதனின்னொடிவனெய்தியகல்வீரன்
சிந்தையுறுவெந்துயர்தவிர்ந்துதெளிவோடும்
அந்தமிலரக்கர்குலமற்றவியநூறி
நந்தவில்புலிக்கணிடர்பிறக்களைதனன்றால். (௯)

வேறினிவிளம்பவுளதன்றுவிதியாலிப்
பேறுபெறவென்கணருடந்தருளுபின்போய்
ஆறுதுயரஞ்சொலிளவஞ்சியடியன்றோள்
ஏறுகடிதென்றுதொழுதின்னடிபணிந்தான். (௧௦)

வேறு.

ஏயநன்மொழியெய்தவிளம்பிய
தாயின்முன்னியகன்றனையான்றனை
ஆயதன்மையரியதன்றாமெனத்
ஆயமென்சொலினையனசொல்லினாள். (௧௧)

அரியதன்றுநின்னாற்றலுக்கேற்றதே
தெரியவெண்ணினைசெய்வதுஞ்செய்தியே
உரியதன்றெனவோர்கின்றதுண்டதென்
பெரியபேதைமைச்சின்மதிப்பெண்மையால். (௧௨)

வேலையின்னிடையேவந்துவெய்யவர்
கோலிவெஞ்சரநின்னொடுங்கோத்தபோ
தாலமன்னவர்க்கல்லையெற்கல்லையால்
சாலவுந்தமொறுந்தனிமையோய். (௧௩)

அன்றியும்பிறிதுள்ளதொன்றாரியன்
வென்றிவெஞ்சிலைமாசுணும்வேறினி
நன்றியென்பதம்வஞ்சித்தநாய்களின்
நின்றவஞ்சனைநீயுநினைத்தியோ. (௧௪)

கொண்டபோரினுங்கொற்றவன்விற்றொழில்
அண்டரேவருநோக்கவென்னாக்கையைக்

* இந்து-ஈண்டு அஷ்டமிசந்திரன்.

கண்டபோரரக்கன்விழிகாகங்கள்
உண்டபோதன்றியானுமொன்றுவெனோ. (கரு)

வெற்றிநாணுடைவில்லியர்விற்றொழில்
முற்றநாணிலரக்கியர்மூக்கொடும்
அற்றநாணினராயினபோதன்றிப்
பெற்றநாணமும்பெற்றியதாகுமோ. (கசு)

பொற்பிறங்கலிலங்கைபொருந்தலர்
எற்புமால்வரையாகிலதேயெனின்
இற்பிறப்புமொழுக்குமிழுக்கமில்
* கற்புமியான்பிறர்க்கெங்ஙனங்காட்டுகேன். (கஎ)

அல்லன்மாக்களிலங்கையதாகுமோ
எல்லை † நீத்தவுலகங்கள்யாவுமென்
சொல்லினாற்சுடுவேனது தூயவன்
வில்லினாற்றற்குமாசென்றுவீசினேன். (கஅ)

வேறுமுண்டுரைகேளதுமெய்ம்மையோய்
ஏறுசேவகன்மேனியல்லாலிடை
ஆறுமைம்பொறிநின்னையுமாணெனக்
கூறுமிவ்வுருத்தீண்டுதல்கூடுமோ. (க௯)

தீண்டுவானெனினித்தனைசேண்பல்
ஈண்டுமோவுயிர்மெய்யினிமைப்பின்முன்
மாண்டுதீர்வனென்றேநிலம்வன்மையால்
கீண்டுகொண்டெழுந்தேகினன்கீழ்மையான். (உ0)

மேவுசிந்தையின்மாதரைமெய்தொடின்
தேவுவன்றலைசிந்துகவீதெனப்
பூவின்வந்தபுராதனனேபுகல்
சாவமுண்டெனதாருயிர்தந்ததால். (உக)

அன்னசாவமுளதெனவாண்மையான்
மின்னுமௌலியன்மெய்ம்மையன்வீடணன்
கன்னி ‡ யென்வயின்வைத்தகருணையாள்
சொன்னதுண்டுதுணுக்கமகற்றுவாள். (உஉ)

ஆயதன்மையினுமதன்றெனின்
மாய்வென்மன்றவறம்வழுவாதென்றும்
நாயகன்வலியெண்ணியுநாணுடைத்
தூய்மைகாட்டவுமித்துணைதாங்கினேன். (உங)

* கற்பும்-கலங்காநிலைமையும். † நீற்ற என்றும்பாடம். ‡ என்வயின்-என்னிடத்தே.

ஆண்டுநின்றுமரக்கனகழ்ந்துகொண்
டண்டுவைத்ததிளவலியற்றிய
நீண்டசாலையொடுநிலைநின்றது
காண்டியையநின்மெய்யுணர்கண்களால். (உச)

தீர்விலேனினிதொருபகலுஞ்சிலை
வீரன்மேனியைமானுமிவ்வீங்குநீர்
நாரநாண்மலர்ப்பொய்கையைநண்ணுவேன்
சோருமாருயிர்காக்குந்துணிவினால். (உரு)

ஆதலானதுகாரியமன்றைய
வேதநாயகன்பாலினிமீண்டனை
போதல்காரியமென்றனள்பூவையக்
கோதிலானுமினையனகூறினன். (உசு)

நன்றிநன்றிவ்வுலகுடைநாயகன்
தன்றுணைப்பெருந்தேவிதவத்தொழில்
என்றுசிந்தைகளித்துவந்தேத்தினன்
நின்றசங்கையிடரொடுநீங்கினன். (உஎ)

* இருளுஞாலமிராவணனாலிது
தெருளுநீயினிச்சில்பகறங்குறின்
மருளுமன்னவற்கியான்சொலும்வாசகம்
அருளுவாயென்றடியினிறைஞ்சினன். (உஅ)

இன்னுமீண்டொருதிங்களிருப்பல்யான்
நின்னைநோக்கிப்பகர்ந்ததுநீதியோய்
பின்னையாவிபிடிக்கின்றிலேனந்த
மன்னனாணையிதனைமனக்கொணீ. (உகூ)

ஆரந்தாழ்திருமார்பற்கமைந்ததோர்
தாரந்தானலளேனுந்தயாவெனும்
ஈரந்தானகத்தில்லையென்றாலுந்தன்
வீரங்காத்தலைவேண்டென்றுவேண்டுவாய். (௩0)

எத்தும்வென்றியிளையவற்கீதொரு
வார்த்தைகூறுதிமன்னருளாலெனைக்
காத்திருந்தவற்கேகடனென்றிடை
கோத்தவெஞ்சிறைவீடென்றுகூறுவாய். (௩க)

திங்களொன்றினென்செய்தவந்தீர்ந்ததால்
இங்குவந்திலனேயெனின்யாணர்நீர்க்

---

* இராவணனாலே அஞ்ஞாநாந்தகாரத்திலே முழுகிக்கிடக்கிற இந்த இலங்கைமுதலான எல்லாவுலகங்களும் இனியுன்னாலே தெளிவுபெறும் என்பது கருத்து என்ற அளவில் பிராட்டி சொல்லுகிறாள்.

கங்கையாற்றங்கரையடியேற்குந்தன்
செங்கையாற்கடன்செய்கென்றுசெப்புவாய். (௩௨)

சிறக்குமாமியர்மூவர்க்குஞ்சீதையாண்
டிறக்கின்றடொழுதாளெனுமின்னசொல்
அறத்தினாயகன்பாலருளின்மையால்
மறக்குமாயினுநீமறவேலையா. (௩௩)

வந்தெனைக்கரம்பற்றியவைகல்வாய்
இந்தவிப்பிறவிக்கிருமாதரைச்
சிந்தையாலுந்தொடேனென்றசெவ்வரம்
தந்தவார்த்தைதிருச்செவிசாற்றுவாய். (௩௪)

ஈண்டுநானிருந்தின்னுயிர்மாயினும்
மீண்டுவந்துபிறந்துதன்மேனியைத்
தீண்டலாவதொர்தீவினைதீர்வரம்
வேண்டினாளொழுதென்றுவிளம்புவாய். (௩௫)

அரசுவீற்றிருந்தாளவுமாய்மணிப்
புரசையானையின்வீதியிற்போகவும்
விரசுகோலங்கள்காணவிதியிலேன்
உரைசெய்தென்னையென்னூழ்வினையுன்னுவேன். (௩௬)

தன்னைநோக்கியுலகந்தளர்தற்கும்
அன்னைநோய்க்கும்பரதனங்காற்றுறும்
இன்னலுக்குமங்கேகுவதன்றியே
என்னைநோக்கியிங்கெங்ஙனமெய்துமோ. (௩௭)

வேறு.

எந்தையாய்முதலியகிளைஞர்யார்க்குமென்
வந்தனைவிளம்புதிகவியின்மன்னனைச்
சுந்தரத்தோளனைத்தொடர்ந்துகாத்துப்போய்
† அந்தமினெடுநகர்க்கரசனாக்கென்பாய். (௩௮)

இத்திறமினையனவியம்பவின்னுநீர்
தத்துறலொழிந்திலீர்தையலீரெனா
எத்திறத்தேதுவுமியைந்தவின்னுரை
ஒத்தனதெரிவுறவுணர்த்தினரோ. (௩௯)

வேறு.

வீவாய்நீயிவண்மெய்யஃதே
ஒய்வானின்னுயிருய்வானும்
போய்வானந்நகர்புக்கன்றோ
வேய்வான்மௌலியுமெய்யன்றோ. (௪0)

† அந்தமில்—பகைவரால் முடிவு பெறுதலில்லாத.

கைத்தோடுஞ்சிறைகற்போயை
வைத்தோனின்னுயிர்வாழ்வானும்
பொய்த்தோர்வில்லிகள்போவாராம்
இத்தோடொப்பதியாதுண்டே. (௪௧)

நல்லோய்நின்னைநலிந்தோரைக்
கொல்லோமெம்முயிர்கொண்டங்கே
எல்லோருஞ்செலவெங்கோனும்
வில்லோடுஞ்செலவேண்டாவோ. (௪௨)

நீந்தாவின்னலினீந்தாமே
தேய்ந்தாறுதபெருஞ்செல்வம்
ஈந்தானுக்குனையீயாதே
ஓய்ந்தாலெம்மினுயர்ந்தார்யார். (௪௩)

நன்றாய்நல்வினைநல்லோரைத்
தின்றார்தங்குடர்பேய்தின்னக்
கொன்றாலல்லதுகொள்ளேறு
டென்றானுக்கிவையேலாவோ. (௪௪)

மாட்டாதார்சிறைவைத்தோயை
மீட்டாமென்கிலமீள்வாமேல்
நாட்டார்நல்லவர்நன்றாலும்
கேட்டாரிவ்வுரைகேட்பாரோ. (௪௫)

பூண்டாள்கற்புடையாள்பொய்யாள்
தீண்டாவஞ்சகர்தீண்டாமுன்
மாண்டாளென்றுமனந்தேறி
மீண்டால்வீரம்விளங்காதோ. (௪௬)

கெட்டேனீயுயிர்கேதத்தால்
விட்டாயென்றிடின்மெல்லம்பால்
* ஒட்டாரோடுலகோரேழும்
சுட்டாலுந்தொலையாவன்றே. (௪௭)

முன்னேகொல்வான்மூவுலகும்
பொன்னேயோங்கியபோர்வில்லான்
என்னேநின்னிலையீதென்றால்
பின்னேசெம்மைபிடிப்பானோ. (௪௮)

கோளாளுருயிர்கோளோடும்
மூளாவெஞ்சினமுற்றாகா
மீளாவேலையல்வேறுண்டோ
மாளாதோபுலிவானோடும். (௪௯)

* ஒட்டார்-சத்துருக்கள். ஒட்டு-சிநேகம்.

தாழித்தண்கடறம்மோடும்
ஏழுக்கேழுலகெல்லாமன்
றூழிக்கையவனம்பம்மா
ஊழித்தீயெனவுண்ணுவோ. (ருo)

படுத்தான்வானவர்பற்றுரைத்
தடுத்தான்றீவினைதக்கோரை
எடுத்தானல்வினையெந்நாளும்
கொடுத்தானென்றிசைகொள்ளாயோ. (ருக)

சின்னாணியிடர்தீராதாய்
இன்னவைகலினெல்லோரும்
நன்னாள்காணுதனன்றன்றே
உன்னனல்லறமுண்டானல். (ருஉ)

* புளிக்குங்கண்டகர்புண்ணீருள்
குளிக்கும்பேய்குடையுந்தோறும்
ஒளிக்குந்தேவருவந்துள்ளம்
களிக்குநல்வினைகாணுயோ. (ருங)

வேறு.

ஊழியினிறுதியினுருமெறிந்தெனக்
கேழ்கிளர்சுடுகணைகிழித்தபுண்பொழி
தாழிருங்குருதியிற்றரங்கவேலைகள்
ஏழுமொன்றாகநின்றிரைப்பக்காண்டியால். (ருச)

சூலியம்பெருவயிறலைத்துச்சோர்வுறும்
ஆலியங்கண்ணியரறுத்துநீத்தன
வாலியுங்கடப்பருவனப்பவாறுயர்
தாலியம்பெருமலைதயங்கக்காண்டியால். (ருரு)

விண்ணினீளியநெடுங் † கழுதும்வெஞ்சிறை
எண்ணினீளியபெரும்பறவையீட்டமும்
புண்ணினீர்ப்புணரியிற்படிந்துபூவையர்
கண்ணினீராற்றினிற்குளிப்பக்காண்டியால். (ருசு)

கரம்பயின்முரசினங்கறங்கக்கைதொடர்
நரம்பினுமிழிசைநவிலநாடகம்
அரம்பையராடியவரங்கினண்டொழிற்
குரங்குகண்முறைமுறைகுனிப்பக்காண்டியால் (ருஎ)

புரையுறுபுன்றொழிலரக்கர்புண்பொழி
திரையுறுகுருதியாறீர்ப்பச்செல்வன

* புளிக்கும்-எல்லாரும் வெறுக்கத்தக்க. † கழுது - பசாசு.

வரையுறுபிணப்பெரும்பிறக்கமண்டின
கரையுறுநெடுங்கடலார்ப்பக்காண்டியால். (௫௮)

வினையுடையரக்கராமிருந்தைவெந்துகச்
சனகியென்றொருதழனடுவெட்டங்கலான்
அனகன்கையம்பெனுமளவிலாதையால்
கனகநீடிலங்கைநின்றுருகக்காண்டியால். (௫௯)

தாக்கிகலிராவணன்றலையிற்றாவின
பாக்கியமனையநின்பழிப்பின்மேனியை
நோக்கியகண்களைநுதிகொண்மூக்கினால்
காக்கைகள்கவர்ந்துகொண்டுண்ணக்காண்டியால். (௬0)

மேலுறவிராவணற்கழிந்துவெள்கிய
நீலுறுதிசைக்கரிதிரிந்துநிற்பன
வாலுறவனையவன்றலையைவவ்வலில்
காலுறுகணைகடிந்திடுவகாண்டியால். (௬௧)

நீர்த்தெழுகணைமழைவழங்கநீலவான்
வேர்த்ததென்றிடையிடைவீசுந்தூசுபோல்
போர்த்தெழுபொலங்கொடியிலங்கைப்பூழியோ
டார்த்தெழுகழுதிரைத்தாடக்காண்டியால். (௬௨)

நீணிறவரக்கர்தங்குருதிநீத்தநீர்
வேலைமிக்காற்றொடுமீளவேலைசூழ்
ஞாலமுற்றுங் * கடையுகத்துநச்சறுக்
காலனும்வெறுத்துயிர்காலக்காண்டியால். (௬௩)

அணங்கிளமகளிரொடரக்கராடுறு
மணங்கிளர்கற்பகச்சோலைவாவிவாய்ப்
பிணங்குறுவான்முறைபிடித்துமாலைய
கணங்கொடுகுரக்கினங்குளிப்பக்காண்டியால். (௬௪)

செப்புறலென்பலதெய்வவாளிகள்
இப்புறத்தரக்கரைமுருக்கியேகின
முப்புறத்துலகையுமுடிக்கமூட்டலான்
அப்புறத்தரக்கருமவியக்காண்டியால். (௬௫)

ஈண்டொருதிங்களிவ்விடரின்வைகுதல்
வேண்டுவதன்றுநான்விரைவின்வீரனைக்
காண்டலேகுறைவுபின்காலம்வேண்டுமோ
† ஆண்டகையினியொருபொழுதுமாற்றுமோ. (௬௬)

---

* கடையுகத்து-உகாந்தகாலத்திலே.

† ஆண்டகை-புருஷசிரேஷ்டர்.

ஆவியுண்டென்னுமீதுண்டென்றோருயிர்ச்
சேவகன்றிருவுருத்தீண்டத்தீதிலாப்
பூவிலைதளிரிலைபொரிந்துவெந்திலாக்
காவிலைகொடியிலைநெடியகானெலாம். (௬௭)

சோகம்வந்துறுவதுதெளிவுதோய்ந்தன்றே
மேகம்வந்திடித்துவந்துருமுவீழ்கினும்
ஆகமும்புயங்களுமழுந்தவைந்தலை
நாகம்வந்தடர்ப்பினுமுணர்வுநாறுமோ. (௬௮)

மத்துறுதயிரெனவந்துசென்றிடை
தத்துறுமுயிரொடுபுலன்கடள்ளுறும்
பித்துநின்பிரிவினிற்பிறந்தவேதனை
எத்தனையுளவவையெண்ணுமீட்டவோ. (௬௯)

இந்நிலையுடையவன்றரிக்குமென்றியேல்
மெய்ந்நிலையுணர்ந்துழியிடைந்ததீதெனின்
பொய்ந்நிலைகாண்டியான்புகன்றயாவுமுன்
கைந்நிலைநெல்லியங்கனியிற்காட்டுகேன். (௭0)

தீர்த்தனுக்கவிக்குலத்திறையுந்தேவிநின்
வார்த்தைகேட்டுவப்பதன்முன்னர்மாக்கடல்
தூர்த்தனவிலங்கையைச்சூழுமாக்குரங்
கார்த்ததுகேட்டுவந்திருத்தியன்னைநீ. (௭௧)

எண்ணரும்பெரும்படைநாளையிந்நகர்
நண்ணியபொழுததுநடுவணங்கைநீ
விண்ணுறக்கருளன்மேல்விளங்கும்விண்டுவின்
கண்ணனையென்னொடு * வெரிநிற்காண்டியால். (௭௨)

அங்கதன்றோண்மிசையிளவலம்மலை
பொங்குவெங்கதிரெனப்பொலியப்போர்ப்படை
இங்குவந்திறுக்குமீயிடருமையமும்
சங்கையுநீங்குதிதனிமைநீங்குவாய். (௭௩)

† குராவருங்குழலியிக்குறித்தநாளினே
விராவருநெடுஞ்சிறைமீட்கிலானெனின்
பராவரும்பழியொடும்பாவம்பற்றுதற்
கிராவணனவனிவனிராமனென்றனன். (௭௪)

வேறு.

ஆகவிம்மொழியாசிலகேட்டறிவுற்றாள்
ஓகைகொண்டுகளிக்குமனத்தளுயர்ந்தாள்

---

* வெரிநில்-முதுகின்மேல். † குரா-குரவமலர்கள்.

போகைநன்றிவனென்பதுபுந்தியின்வைத்தாள்
தோகையுஞ்சிலவாசகமின்னனசொன்னாள். (எ௫)

சேறியையவிரைந்தனைதீயவையெல்லாம்
வேறியானினியொன்றும்விளம்பலென்மேலோய்
கூறுகின்றனமுன்குறியுற்றனகோமாற்
கேறுமென்றவைசொல்லெனவின்னவிசைப்பாள். (எ௬)

நாகமொன்றியநல்வரையின்றலைமேனாள்
ஆகம்வந்தெனையள்ளுகிர்வாளினளைந்த
காகமொன்றைமுனிந்தயல்கல்லெழுபுல்லால்
வேகவெம்படைவிட்டதுமெல்லவிரிப்பாய். (எஎ)

அங்கதஞ்சிநடுங்கியயன்பதியண்மி
இங்குநின்வரவென்னவெனக்கனல்வெய்த
மங்கைபங்கனொடெண்டிசையுஞ்செலமற்றோர்
தங்கடங்களிடங்கண்மறுத்தமை * தைப்பாய். (எஅ)

இந்திரன்றருமைந்தனுறுந்துயர்யாவும்
அந்தரத்தினினின்றவர்கண்டினியந்தோ
எந்தைதன்சரணன்றியொர்தஞ்சமுமின்றால்
வந்தவன்சரண்வீழ்கெனவுற்றதும்வைப்பாய். (எ௯)

ஐயநின்சரணஞ்சரணென்றவனஞ்சி
வையம்வந்துவணங்கிடவள்ளன்மகிழ்ந்தே
வெய்யவன்கணிரண்டொடுபோகெனவிட்ட
தெய்வவெம்படையுற்றுளதன்மைதெரிப்பாய். (அ0)

எந்தைநின்சரணஞ்சரணென்றவிதன்றால்
முந்துநின்குறையும்பொறைதந்தனமுந்துன்
சந்தமொன்றுகொடித்திரள்கண்கடமக்கே
வந்தொர்நன்மணிசிற்கெனவைத்ததும்வைப்பாய். (அக)

வேகம்விண்டுசெயந்தன்வணங்கிவிசும்பில்
போகவண்டர்கள்கண்டலர்கொண்டுபொழிந்தார்
† நாகநம்பனிளங்கிளைநன்குணராத
பாகுதங்கியவென்றியினின்சொல்பணிப்பாய். (அஉ)

என்றுநின்னுயிர்மென்கிளிக்கியார்பெயர்கேன்
மன்னவென்றலுமாசறுகைகயன்மாதென்
அன்னைதன்பெயராகெனவன்பினொடன்னாட்
சொன்னமெய்ம்மொழிசொல்லுதிமெய்ம்மைதொடர்ந்தோய். (

---

* தைப்பாய் - தெரியச்சொல்லு. † பருவதராசன்_பிள்ளையென்றது மேருமலை போல்வார் இளையபெருமானென்க.

என்றுரைத்தினிதித்தனைபேரடையாளம்
ஒன்றுணர்த்துவதில்லெனவெண்ணியுணர்ந்தாள்
தன்றிருத்துகிலிற்பொதிவுற்றதுதானே
வென்றதச்சுடர்மேலொடுகீழுறமெய்யால். (அச)

வாங்கினுடன்மலர்க்கையினன்னதுமுன்னு
எங்கினனவ்வனுமனுமென்கொலிதென்று
வீங்கினன்வியந்தானுலகேழும்விழுங்கித்
தூங்குகாரிருண்முற்றுமிரிந்ததுசுற்றும். (அரு)

மஞ்சலங்கொளியோனுமிம்மாநகர்வந்தான்
அஞ்சலன்னெனவெங்கணரக்கரயிர்த்தார்
சஞ்சலம்புரிசக்கரவாகமுடன்றும்
கஞ்சமும்மலர்வுற்றனகாந்தினகாந்தம். (அசு)

கூந்தன்மென்மழைகொண்முகின்மேலெழுகோளின்
வேந்ததன்னதுமெல்லியறன்னெழின்மேனி
சேந்ததந்தமில்சேவகன்சேவடியென்னக்
காந்துகின்றதுகாட்டினண்மாருதிகண்டான். (அஎ)

சூடையின்மணிகண்மணியொப்பதுதொன்றுள்
ஆடையின்கணிருந்ததுபேரடையாளம்
நாடிவந்தெனதின்னுயிர்நல்கிய * நம்பா
கோடியென்றுகொடுத்தனண்மெய்ப்புகழ்கொண்டாள். (அஅ)

தொழுதுவாங்கினன்சுற்றியதூசினன்முற்றப்
பழுதுறுவகைபந்தனைசெய்தனன்வந்தித்
தழுதுமும்மைவலங்கொடிறைஞ்சினனன்போ
டெழுதுபாவையுமேத்தினளேகினனிப்பால். (அகூ)

சு-வது, சூளாமணிப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-ளகூ௫.

---

## கு-வது, பொழிலிறுத்தபடலம்.

அசோகவனத்தையழித்தது.

நெறிக்கொடுவடக்குறநினைப்பினினிமிர்ந்தான்
பொறிக்குலமலர்ப்பொழிலிடைக்கடிதுபோவான்
சிறுத்தொழின்முடித்தகறற்தெனநெரிந்தான்
மறித்துமொர்செயற்குரியகாரியமதித்தான். (க)

* நம்பா-ஆணில்சிரேஷ்டன்.

ஈனமுறுபற்றலரையெற்றியெயின்மூதூர்
மீனநிலயத்தினாகவீசிவிழிமானை
மானவன்மலர்க்கழலின்வைத்திலெனென்றால்
ஆனபொழுதெப்பரிசினானடியனாவேன். (௨)

வஞ்சனையர்க்கனைநெருக்கிநெடுவாலால்
அஞ்சினுடனஞ்சுதலைதோளுறவசைத்தே
வெஞ்சிறையில்வைத்திலென்வென்றிலெனென்றால்
தஞ்சமொருவர்க்கொருவரென்றறகுமன்றே. (௩)

கண்டநிருதக்கடல்கலக்கினன்வலத்தில்
திண்டிறலரக்கனுமிருக்கவொர்திறத்தின்
* மண்டவுதரத்தவண்மலர்க்குழல்பிடித்துக்
கொண்டுசிறைவைத்திடுதலிற்குறைவதுண்டோ. (௪)

மீட்டுமினியெண்ணும்வினைவேறுமுளதன்றால்
ஓட்டியிவ்வரக்கரையுலைத்துரிமையெல்லாம்
காட்டுமிதுவேகருமமன்னவர்கடும்போர்
மூட்டும்வகையாவது † கொலென்றுமுயல்கின்றான். (௫)

இப்பொழிலினைக்கடிதிறுக்குவெனிறுத்தால்
அப்பெரியபூசல்செவிசார்தலுமரக்கர்
வெப்புறுசினத்தெதிர்மேல்வருவர்வந்தால்
துப்புறமுருக்கியுயிருண்பலிதருதால். (௬)

வந்தவர்கள்வந்தவர்கண்மீள்கிலர்மடிந்தால்
வெந்திறலரக்கனும்விலக்கருவலத்தால்
முந்துமெனினன்னவன்முடித்தலை ‡ முசித்தென்
சிந்தையுறுகோபமுமவித்தினிதுசெல்வேன். (௭)

என்றுநினையாவிரவிசந்திரனியங்கும்
குன்றமிருதோளனையதன்னுருவுகொண்டான்
அன்றுலகெயிற்றிடைகொளேனமெனலானான்
துன்றுகடிகாவினையடிக்கொடுதுகைத்தான். (௮)

முடிந்தனபிளந்தனமுரிந்தனநெரிந்த
மடிந்தனபொடிந்தனமறிந்தனமுறிந்த
இடிந்தனதகர்ந்தனவெரிந்தனகரிந்த
ஒடிந்தனவொசிந்தனவுதிர்ந்தனபிதிர்ந்த. (௯)

வேரொடுமறிந்தசிலவெந்தசிலவிண்ணி
னாரொடுமறிந்தசிலகாலினொடுவேலைத்
தூரொடுமறிந்தசிலதும்பியொடுவானோர்
ஊரொடுமறிந்தசிலவுக்கசிலநெக்க. (௧௦)

---

* மந்தோதரி-இராவணன் மனைவி. † கொல்-அசை. ‡ முசித்து-இருசி.

சோலைமுதன்மற்றவைசுழற்றியதிசைப்போர்
ஆனைநுகரக்குளகுமானவடிபற்று
மேனிமிரவிட்டனவிசும்பின்வழிமீப்போய்
வானவர்கணந்தனவனத்தையுமடித்த. (௧௧)

அலைந்தனகடற்றிரையரக்கரகன்மாடம்
குலைந்துகவிடிந்தனகுலக்கிரிகளோடு
மலைந்துபொடியுற்றனமயங்கிநெடுவானத்
துலைந்துவிழுமீனினொடுவெண்மலருதிர்ந்த. (௧௨)

முடக்குநெடுவேரொடுமுகந்துலகமுற்றும்
கடக்கும்வகைவீசினகளித்ததிசையானை
மடப்பிடியினுக்குதவமையினிமிர்கைவைத்
திடுக்கியனவொத்தனவெயிற்றினிடைஞால்வ. (௧௩)

விஞ்சையுலகத்தினுமியக்கர்மலைமேலும்
துஞ்சுதலில்வானவர்துறக்கநகரத்தும்
பஞ்சியடிவஞ்சியர்கண்மொய்த்தனர்பறித்தார்
நஞ்சமனையானுடையசோலையினறும்பூ. (௧௪)

பொன்றிணிமணிப்பருமரன்றிசைகள்போவ
மின்றிரிவவொத்தனவெயிற்கதிருமொத்த
ஒன்றினொடுமொன்றிடைபுடைத்துதிரவூழின்
தன்றிரளொழுக்கிவிழுதாரகையுமொத்த. (௧௫)

புள்ளினொடுவண்டுமிஞிறுங்களிகொள்பூவும்
கள்ளுமுகையுந்தளிர்களோடினியகாயும்
வெள்ளநெடுவேலையிடைமீனினம்விழுங்கித்
துள்ளினமரன்படநெரிந்தனதுடித்த. (௧௬)

தூவியமலர்த்தொகைசுமந்துதிசைதோறும்
பூவின்மணநாறுவபுலால்கமழ்கிலாத
தேவியர்களோடுமுயர்தேவரினிதாடும்
ஆவியெனலாயதிரையார்கலிகளம்மா. (௧௭)

இடந்தமணிவேதியுமிறுத்தகடிகாவும்
தொடர்ந்தனதுரந்தனபடிந்துநெறிதூரக்
கடந்துசெலவென்பதுகடந்தவிருகாலால்
நடந்துசெலலாகுமெனலாகியதுநன்னீர். (௧௮)

வேனில்விளையாடுசுடரோனினொளிவிம்மும்
வானினிடைவீசியவரும் * பனைமரத்தால்
தானவர்கண்மாளிகைதகர்ந்துபொடியாய
வானவிடியாலொடியுமால்வரைகண்மான. (௧௯)

* பனை-கிளை.

எண்ணிறருகோடிகளெறிந்தனசெறிந்தே
* தண்ணமழைபோலிடைதழைந்ததுசலத்தால்
அண்ணலனுமானடவிராவணனதந்நாள்
விண்ணுமொருசோலையுளதாமெனவிதித்தான். (உ0)

தேனுறைதுளிப்பநிறைபுட்பலசிலம்பப்
பூநிறைமணித்தருவிசும்பினிடையேபோய்
மேன்முறைநெருக்கவொளிவாளொடுவில்வீச
வானிடைநடாயநெடுமானமெனலான. (உ௧)

சாகநெடுமாப்பணைதழைத்தனதனிப்போர்
† நாகமனையானெறியமேனிமிர்வநாறு
மாகநெடுவானிடையிழிந்துபுனல்வாரும்
மேகமெனலாயநெடுமாகடலின்வீழ்வ. (உஉ)

வேறு.

ஊனமுற்றிடைமண்ணினுதித்தவர்
ஞானமுற்றுபுநண்ணினர்வீடெனத்
தானகற்பகத்தண்டலைவிண்டலம்
போனபுக்கனமுன்னுறைபொன்னகர். (உ௩)

மணிகொள்குட்டிமமட்டித்துமண்டபம்
துணிபடுத்தயல்வாவிகடூர்த்தொளிர்
திணிசுவர்த்தலஞ்சிந்திச்செயற்கரும்
பணிபடுத்துயர்குன்றம்படுத்தரோ. (உ௪)

வேங்கைசெற்று ‡ மராமரம்வேர்பறித்
தோங்குகற்பகம்பூவொடொடித்துராய்ப்
பாங்கர்சண்பகப்பந்திபறித்தயல்
மாங்கனிப்பணைமட்டித்துமாற்றியே. (உ௫)

சந்தனங்கடகர்ந்தனதாள்பட
இந்தனங்களின்வெந்தெரிசிந்திட
முந்தனங்கவசந்தன்முகங்கெட
நந்தனங்கள்கலங்கிநடுங்கவே. (உ௬)

காமரங்களிவண்டுகலங்கிட
மாமரங்கண்மடிந்தனமண்ணொடு
தாமரங்கவரங்குதகர்ந்துகப்
பூமரங்களெரிந்துபொரிந்தவே. (உ௭)

குழையுங்கொம்புங்கொடியுங்குயிற்குலம்
விழையுந்தண்டளிர்ச்சூழலுமென்மலர்ப்

* தண்ணம்-குளிர்ந்தநீர். † நாகம் அனையான்-மலையையும் யானையையுமொத்த திருவடி. ‡ மராமரம்-கடப்பமரங்கள்.

* புழையும்வாசப்பொதும்பும்பொலன்கொடேன்
மழையும்வண்மெயிலுமடிந்தவே. (உ௯)

பவளமாக்கொடிவீசினபன்மழை
துவளுமின்னெனச்சுற்றிடச்சூழ்வரை
திவளும்பொற்பணைமாமரஞ்சேர்ந்தன
† கவளயானையின்னுடையிற்காந்தவே. (௨௧)

பறவையார்த்தெழுமோசையும்பன்மரம்
இறவெடுத்தவிடிக்குரலோசையும்
அறவனூர்த்தெழுமோசையுமண்டத்தின்
புறநிலத்தையுங்கைம்மிகப்போயதே. (௩0)

பாடலம்படர்கோங்கொடும்பன்னிசைப்
பாடலம்பனிவண்டொடும்பஃறிரைப்
பாடலம்புயர்வேலையிற்பாய்ந்தன
பாடலம்பெறப்புள்ளினம்பாறவே. (௩௧)

வண்டலம்புநலாற்றின்மராமரம்
வண்டலம் ‡ புனலாற்றின்மடிந்தன
விண்டலம்புகநீங்கியமென்புனல்
விண்டலம்புகநீண்மரம்வீழ்ந்தவே. (௩௨)

தாமரைத்தடம்பொய்கைசெஞ்சந்தனம்
தாமரைத்தனவொத்ததுகைத்தலின்
காமரக்களிவண்டொடுங்கள்ளொடும்
காமரக்கடல்பூக்கடல்கண்டவே. (௩௩)

§ சிந்துவாரந்திசைதொறுஞ்சென்றன
சிந்துவாரம்புரைதிரைசேர்ந்தன
() தந்துவாரம்புதவொடுதாளறத்
? தந்துவாரந்துகள்படச்சாய்ந்தவே. (௩௪)

() நந்தவானத்துநாண்மலர்நாறின
[] நந்தவானத்துநாண்மலர்நாறின
() சிந்தவானந்திரிந்துகச்செம்மணி
! சிந்தவானந்திரிந்ததிரைக்கடல். (௩௫)

---

* புழையாவது-மலரினதுகாம்பு பொதிந்துள்ள இடம். † கவளம்-யானையுணவு. ‡ புனலாறு—நீராறு, உப்பங்கழி. § சிந்துவாரம்—நொச்சி மரங்கள். சிந்து-கடலினது, வாரம்-கரையிலும். () தந்து-எறிதல், வார்—நீண்ட, அம்-அழகிய. ? தம்-அந்த (அரக்கருடைய) துவாரம்-வாயிலும், தம்-அக்கதவுகளையுடையனவான எனவுமாம். () நந்தவானம்-அசோகவனம். [] நந்தவான—அதிகமான ஆகாயத்திலேபோய். () சிந்தவானம்-நீரைப்பெய்கிற அவ்வானம். ! சிந்தவானந்து—பெறும்படி வெண்சங்குகள், செம்மணிசிந்த—சங்குகள் கர்ப்பம்கலங்க.

புல்லும்பொற்பணைப்பன்மணிப்பொன்மரம்
கொல்லுமிப்பொழுதேயெனுங்கொள்கையால்
எல்லியிட்டுவிளக்கியவிந்திரன்
வில்லுமொத்தனவிண்ணுறவீசின. (௩௬)

ஆனைத்தானமுமாடலரங்கமும்
பானத்தானமும்பாய்பரிப்பந்தியும்
ஏனைத்தாரணிதேரொடுமிற்றன
கானத்தார்தருவண்ணல்கடாவவே. (௩௭)

மயக்குபொற்குலவல்லிகள்வாரிநேர்
இயக்குறத்திசைதோறுமெறிந்தன
வெயிற்கதிர்க்கற்றையற்றுறவீழ்ந்தன
புயற்கடற்றலைபுக்கனபோல்வன. (௩௮)

பெரியமாமரமும்பெருங்குன்றமும்
இரியவீசலினிந்நெடும்பொன்மதில்
நெரியமாடநெருப்பெழநீறெழ
இரியல்போனவிலங்கையுமெங்கணும். (௩௯)

வேறு.

தொண்டையங்கனிவாய்ச்சீதைதுயக்கினுலென்னைச்சுட்டாய்
விண்டவானவர்தம்முன்னேவிரிபொழிலிறுத்துவீசக்
கண்டனைநின்றாயென்றுகாணுமேலரக்கன்காய்தல்
உண்டெனவெருவினன்போலொளித்தனனுதிவின்கோமான். (௪௦)

காசறுமணியும்பொன்னுங்காந்தமுங்களுல்வதாய
மாசறுமரங்களாகக்குயிற்றியமதனச்சோலை
ஆசைகடோறுமையன்கைகளாலள்ளியள்ளி
வீசியவிளக்கலாலேவிளங்கினவுலகமெல்லாம். (௪௧)

கதறினவெருவியுள்ளங்கலங்கினவிலங்குகண்கள்
குதறினபறவைவேலைகுளித்தனகுளித்திலாத
பதறினபதைத்தவானிற்பறந்தனபறந்துபார்வீழ்ந்
துதறினசிறையைமீளவொடுக்கினவுலந்துபோன. (௪௨)

தோட்டொடுந்துதைந்ததெய்வமரந்தொறுந்தொடுத்தபுட்டம்
கூட்டொடுந்துறக்கம்புக்ககுன்றெனக்குவவுத்திண்டோள்
சேட்டகன்பரிதிமார்பன்சீறியுந்தீண்டறன்றால்
மீட்டவன்கருணைசெய்தாற்பெறும்பதம்விளம்பலாமோ. (௪௩)

பொய்ம்முறையரக்கர்காக்கும்புள்ளுறைபுதுமென்சோலை
விம்முறுமுள்ளத்தன்னமிருக்குமவ்விருக்கமொன்றும்

மும்முறையுலகமெல்லாமுற்றுறமுடிவதான
அம்முறையயன்வைகுமாலெனநின்ற * தம்மா. (சச)

உறுசுடர்ச்சூடைக்காசவ்வுயிரினையுயிரொப்பானுக்
கறிகுறியாகவிட்டாளாதலான்வறியளன்றோ
† செறிகுழற்சீதைக்கென்றோர்சிகாமணிதெரிந்துவாங்கி
எறிகடலீவதென்னவெழுந்தனனிரவியென்பான். (சரு)

தாழிரும்பொழில்களெல்லாந்துடைத்தொருதமியனின்றான்
எழினோடேழுநாடுமளந்தவனெனலுமானான்
ஆழியினடுவணின்றவருவரைக்கரசுமொத்தான்
ஊழியினிறுதிக்காலத்துருத்திரமூர்த்தியொத்தான். (சசு)

இன்னனநிகழும்வேலையரக்கியரெழுந்துபொங்கிப்
பொன்மலையென்னநின்றபுனிதனைப்புகன்றுநோக்கி
அன்னையீதென்னைமேனியார்கொலென்றச்சமுற்றார்
நன்னுதறன்னைநோக்கியறிதியோநங்கையென்றார். (சஎ)

தீயவர்தீயசெய்தறீயவர்தெரியினல்லால்
தூயவர்துணிதலுண்டேநும்முடைச்சூழலெல்லாம்
ஆயமானெய்தவம்மானிளையவனரக்கர்செய்த
மாயமென்றுரைக்கவேயுமெய்யெனமையல்கொண்டேன். (சஅ)

என்றனளரக்கிமார்கள்வயிறலைத்திரியல்போகிக்
குன்றமுமுலகும்வானுங்கடல்களுங்குலையவோட
நின்றதோர்சமித்தங்கண்டானீக்குவலிதனையென்னாத்
தன்றடக்கைகணீட்டிப்பற்றினன்றாதையொப்பான். (சகூ)

கண்கொளவரிதுமீதுகால்கொளவரிதுதிண்கால்
எண்கொளவரிதிராவுமிருள்கொளவரிதுமாக
விண்கொளநிவந்தமேருவெள்குறவெதும்பியுள்ளம்
புண்கொளவுயர்ந்ததிப்பார்பொறைகொளவரிது ‡ போலாம். (ரு0)

பொங்கொளிநெடுநாளீட்டிப்புதியபால்பொழிவதொக்கும்
திங்களைநக்குநின்றவிருளெலாம்வாரித்தின்ற
அங்கைபத்திரட்டியான்றனாணையாலழகுமானப்
பங்கயத்தொருவன்றானேபசும்பொனாற்படைத்ததம்மா. (ருக)

தூணெலாஞ்சுடருங்காசுசுற்றெலாமுத்தஞ்சொன்னம்
பேணலாமணியின்பத்திபிடரெலாமொளிகள்விம்மச்
சேணெலாம்விரியுங்கற்றைச்சேயொளிச்செல்வற்கேயும்
பூணலாமெம்மனோராற்புகழலாம்புதுமைத்தன்றே. (ருஉ)

* அம்மா—அசை. † செறிகுழல்—சிறையிருத்தலாலே சடையாகச் செறிந்த கூந்தலெனலாம். ‡ போல் ஐயத்தில்வந்த அசை.

வெள்ளியங்கிரியைப்பண்டவ்வெந்தொழிலரக்கன்வேரோ
டள்ளினனென்னக்கேட்டானத்தொழிற்கழிவுதோன்றப்
புள்ளிமாமேருவென்னும்பொன்மலையெடுப்பான்போல
வள்ளுகிர்த்தடக்கைதன்னான்மண்ணின்றும்வாங்கியண்ணல். (௫௩)

விட்டனனிலங்கைதன்மேல்விண்ணுறவிரிந்தமாடம்
பட்டனபொடிகளானபகுத்தனபாங்குநின்ற
சுட்டனபொறிகள்பின்னைத்துளங்கினரரக்கர்தாமும்
கெட்டனர்வீரம்மாபிழைப்பரோகேடுசூழ்ந்தார். (௫௪)

நீரிடுதுகிலரச்சர்நெருப்பிடுநெஞ்சர்நெக்குப்
பீரிடு * முருவர்தெற்றிப்பிணங்கிடுதாளர்பேழ்வாய்
ஊரிடுபூசலாரவுளைத்தனரோடியுற்றார்
பாரிடு † பழுவச்சோலைபாரிக்கும் ‡ பருவத்தேவர். (௫௫)

அரிபடுசீற்றத்தான்றனருகுசென்றடியின்வீழ்ந்தார்
கரிபடுதிசையினீண்டகாவலாகாவலாற்றோம்
கிரிபடுகுவவுத்திண்டோட்குரங்கிடைகிழித்துவீச
எரிபடுதுகிலினொய்தினிற்றதுகடிகாவென்றார். (௫௬)

சொல்லிடவெளியதன்றாற்சோலையைக்காலிற்கையின்
புல்லொடுதுகளுமின்றிப்பொடிபடநூறிப்பொன்னால்
வில்லிடுவோமந்தன்னைவேரொடுவாங்கிவீசச்
சில்லிடமொழியத்தெய்வவிலங்கையுஞ்சிதைந்ததென்றார். (௫௭)

ஆடகத்தருவின்சோலைபொடிபடுத்தரக்கர்காக்கும்
தேடருமோமம்வாங்கியிலங்கையுஞ்சிதைத்ததம்மா
§ கோடரமொன்றேநன்றிராக்கதர்கொற்றஞ்சொற்றல்
மூடருமொழியாரென்னமன்னனுமுறுவல்செய்தான். (௫௮)

தேவர்கள்பின்னுமன்னவதனுருச்சுமக்குந்திண்மைப்
பூவலயத்தையன்றேபுகழ்வதுபுலவர்போற்றும்
மூவரினொருவனென்றுபுகல்கினுமுடிவிலாத
ஏவமக்குரங்கையையகாணுதியின்னேயென்றார். (௫௯)

மண்டலங்கிழிந்தவாயின்மறிகடன்மோழைமண்ட
எண்டிசைசுமந்தமாவுந்தேவருமிரியல்போகத்
தொண்டைவாயரக்கிமார்கள்சூல்வயிறுடைந்துசோர
அண்டமும்பிளந்துவிண்டதாமெனவனுமனார்த்தான். (௬0)

௭-வது, பொழிலிறுத்தபடலம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௭௫௫.

---

* உருவர்-உடம்புகளுடனே. † பழுவச்சோலை-அடர்ந்தசோலை. ‡ பருவத்தேவர்-காலதேவதைகள், சோலையின்பருவம் தெரிந்து பாலிக்குந் தேவரென்க. § கோடரம்-குரங்கு.

# அ-வது, கிங்கரர்வதைப்படலம்.

அருவரைமுழையின்முட்டுமசனியினிடிப்புமாழி
வெருவருமுழக்குமீசன்வில்லிறுமொலியுமென்னக்
குருமணிமகுடகோடிமுடித்தலைகுலுங்கும்வண்ணம்
இருபதுசெவியினூடுநுழைந்ததவ்வெழுந்தவோசை. (௧)

பல்லியமுறுவரேன்றப்பொருமையுஞ்சிறிதுபொங்க
எல்லையிலாற்றன்மாக்களெண்ணிறந்தாரையேவி
வல்லையினகலாவண்ணம்வானையும்வழியைமாற்றிக்
கொல்லலீர்குரங்கைநொய்திற்பற்றுதிர்கொணர்திரென்றான். (௨)

சூலம்வாண்முசலங்கூர்வே * றோமரந்தண்டுபிண்டி
† பாலமேமுதலாவுள்ளபடைக்கலம்பரித்தகையர்
ஆலமேயனையமெய்யரகலிடமழிவுசெய்யும்
காலமேலெழுந்தவூழிக்காற்றெனக்கடிதுசெல்வார். (௩)

நாணிலமதனினுண்டுபோரெனநவிலினச்சொல்
தேனினுங்களிப்புச்செய்யுஞ்சிந்தையர்தெரித்துமென்னின்
கானினும்பெரியரோசைகடலினும்பெரியர்கீர்த்தி
வானினும்பெரியர்மேனிமலையினும்பெரியர் ‡ மாதோ. (௪)

திருகுறுஞ்சினத்துத்தேவர்தானவரென்னுந்தெவ்வர்
இருகுறும்பெறிந்துநின்றவிசையினார்வசையென்றெண்ணிப்
பொருகுறும்பென்றுவென்றுபுணர்வதுபூவுண்வாழ்க்கை
ஒருகுறுங்குரங்கென்றெண்ணிநெடிதுநாணுழக்குநெஞ்சர். (௫)

கட்டியவாளரிட்டகவசத்தர்கழலர்திக்கைத்
தட்டியதோளர்மேகந்தடவியகையர்வானை
எட்டியமுடியர்தாளாலிடறியபொருப்பரீட்டிக்
கொட்டியபேரியென்னமழையெனக்குமுறுஞ்சொல்லார். (௬)

வானவரெறிந்ததெய்வவடுபடைவடுக்கண்மற்றைத்
தானவர்துரந்தவேதித்தழும்பொடுதயங்குந்தோளர்
யானையும்பிடியும்வாரியிடுக்கியவாயரீன்ற
கூனவெண்பிறையிற்றோன்றுமெயிற்றினர்கொதிக்குங்கண்ணர். (௭)

சக்கரமுலக்கைதண்டுதாரைவாள் § பரிகஞ்சங்கு
முற்கரமுசுண்டிபிண்டிபாலம்வேல்சூலமுட்கோல்
பொற்கரங்குலிசம்பாசம்புகர்மழுவெழுப்பொற்குந்தம்
விற்கருங்கணைவிட்டேறுகழுக்கடையெழுக்கண்மின்ன. (௮)

---

* தோமரம்-எறியாயுதம். † பாலமே என்பதில்-இடைச்சொல்.
‡ மாது ஓ-அசைகள். § பரிகம்-வளைதடி.

பொன்னின்றுகளுலுந்தெய்வப்பூணினர்பொருப்புத்தோளர்
மின்னின்றபடையுங்கண்ணும்வெயில்விரிக்கின்றமெய்யர்
என்னென்றார்க்கென்னென்னென்றெய்தியதறிந்திலாதார்
முன்னின்றார்முதுகுதீயப்பின்னின்றார்முடுகுகின்றார். (௯)

வெய்துறுபடையின்மின்னர்வில்லினர்வீசுகாலர்
மையுறுவிசும்பிற்றோன்றுமேனியர்மடிக்கும்வாயர்
கைபரந்துலகுபொங்கிக்கடையுகமுடியுங்காலைப்
பெய்யவென்றெழுந்தமாரிக்குவமைசால்பெருமைபெற்றார். (௧௦)

பணியுறுசெயலைசிந்தியோமமும்பறித்ததம்மா
தனியொருகுரங்குபோலாநன்றுநந்தருக்கென்கின்றார்
இனியொருபழிமற்றுண்டோவிதனினென்றிரைத்துப்பொங்கி
முனிவுறுமனத்திற்றாவிமுந்துறமுடுகுகின்றார். (௧௧)

எற்றுறுமுரசும்வின்னாணேறவிட்டெடுத்தவார்ப்பும்
சுற்றுறுகழலுஞ்சங்குந்தெழிதெழித்துரப்புஞ்சொல்லும்
உற்றுடன்றொன்றாயோங்கியொலித்தெழுந்தூழிப்பேர்வில்
நற்றிரைக்கடல்களோடுமழைகளைநாவடக்க. (௧௨)

தெருவிடமில்லென்றெண்ணிவானிடைச்செல்கின்றாரும்
புருவமுஞ்சிலையுங்கோட்டிப்புகையுயிர்த்துயிர்க்கின்றாரும்
ஒருவரினொருவர்முந்திமுறைமறுத்துருக்கின்றாரும்
விரிவிலஇலங்கையென்றுவழிபெறார்விளிக்கின்றாரும். (௧௩)

வாளுறைவிதிர்க்கின்றாரும்வாயினைமடிக்கின்றாரும்
தோளுறத்தட்டிக்கல்லைத்துகள்படத்துகைக்கின்றாரும்
தாள்பெயர்த்திடம்பெறாதுதருக்கினர்நெருக்குவாரும்
கோள்வளையெயிறுதின்றுதீயெனக்கொதிக்கின்றாரும். (௧௪)

வேறு.

அனைவருமலையெனநின்றாரளவறுபடைகள்பயின்றார்
அனைவருமமரினுயர்ந்தாரகவிடநெளியநடந்தார்
அனைவரும்வானினமைந்தாரசனியினணிகளணிந்தார்
அனைவருமமரரைவென்றாரசுரரையுயிரையயின்றார். (௧௫)

* குறுகினகவசருமின்போல்குரைகழலுரகரும்வன்போர்
முறுகினபொழுதினுடைந்தார்முதுகிடைமுறுவல்பயின்றார்
இறுகின † நிதிகிழவன்பேரிசைகெடவளைகையெறிந்தார்
தெறுகுநரின்மையர்வன்றோடினவுறவுலகுதிரிந்தார். (௧௬)

வரைகளையிடறுமினென்றான்மறிகடல்பருகுமினென்றால்
இரவியைவிழவிடுமென்றாலெழுமழைபிழியுமினென்றால்

* குறுகினகவசம்-அரச்சட்டை. † நிதிகிழவன்-சங்கநிதி பதுமநிதிகளுக்கு பாத்தியனான குபேரன்.

அரவினதரசனையொன்றோதரையினொடரையுமினென்றால்
தரையினையெடுமெடுமென்றாலொருவரதமைதல்சமைந்தார். (௧௭)

தூளியினிமிர்படலம்போயிமையவர்விழிதுறவெம்போர்
மீளியினினமெனவன்றாள்விரைபுலிதிரையெனவிண்டோய்
ஆளியினணியெனவன்றேலலைகடல்விடமெனவஞ்சா
வாளியின்விசைகொடுதிண்கார்வரைவருவனவெனவந்தார். (௧௮)

பொறிதரவிழியுயிரொன்றோபுகையுகவயிலொளிமின்போல்
செறிதரவுருமதிர்கின்றார்திசைதொறும்விசைகொடுசென்றார்
எறிதருகடையுகவன்காலிடறிடவுருமினினம்போய்
மறிதரமழையகல்விண்போல்வடிவழிபொழிலைவளைந்தார். (௧௯)

வயிரொலிவளையொலிவன்கார்மழையொலிமுரசொலிமண்பால்
உயிருலைவுறநிமிரும்போருறுமொலிசெவியினுணர்ந்தான்
வெயில்விரிகதிரவனும்போய்வெருவிடவெளியிடைவிண்டோய்
கயிலையின்மலையெனநின்றானனையவர்வருதொழில்கண்டான். (௨௦)

இதவியலிதுவெனமுந்தேயியைவுறவினிதுதெரிந்தான்
பதவியலறிவுபயந்தாலதினலபயனுளதுண்டோ
சிதவியல்கடிபொழிலொன்றேசிதறியசெயறருதிண்போர்
உதவியலினிதினுவந்தானெவரினுமதிகமுயர்ந்தான். (௨௧)

இவனிவனிவனெனநின்றாரிதுவெனமுதலியெதிர்ந்தார்
பவனனின்முடுகிநடந்தார்பகலிரவுறமிடைகின்றார்
புவனியுமலையும்விசும்பும்பொருவருநகருமுடன்போர்
துவனியிலதிர * விடம்போற்சுடர்விடுபடைகடுரந்தார். (௨௨)

மழைகளுமறிகடலும்போய்மதமறமுரசமறைந்தார்
முழைகளினிதழ்கடிறந்தார்முதுபுகைகதுவமுனிந்தார்
பிழையிலபடவரவின்றோள்பிடருறவடியிடுகின்றார்
கழைதொடர்வனமெரியுண்டாலெனவெறிபடைஞர்கலந்தார். (௨௩)

அறவனுமதனையறிந்தானருகினினழகினமைந்தார்
இறவினினுதவுநெடுந்தாருயர்மரமொருகையியைந்தான்
உறவருதுணையெனவன்றோவுதவியவதனையுவந்தான்
நிறைகடல்கடையுநெடுந்தாண்மலையெனநடுவணிமிர்ந்தான். (௨௪)

பருவரைபுரைவனவன்றோள்பனிமலையருவிநெடுங்கால்
சொரிவனபலவெனமண்டோய்துறைபொருகுருதிசொரிந்தார்
ஒருவரையொருவர்தொடர்ந்தாருயர்தலையுடையவுருண்டார்
அருவரைநெரியவிழும்பேரசனியுமசையவறைந்தான். (௨௫)

* விடம்போற்சுடர்விடுதல் - விஷாக்கினிபோல் சுவலித்தல்.

* பறைபுரைவிழிகள்பறிந்தார்படியிடைநெடிதுபடிந்தார்
பிறைபுரையெயிறுமிழந்தார்பிடரொடுதலைகள்பிளந்தார்
குறையுயிர்சிதறநெரிந்தார்குடரொடுகுருதிகுழைந்தார்
முறைமுறைபடைகளெறிந்தார்முடையுடன்மறியமுறிந்தார். (௨௬)

புடையொடுவிடுகனலின்காய்பொறியிடைமயிர்கள்புகைந்தார்
தொடையொடுமுதுகுதுணிந்தார்சுழிபடுகுருதிசொரிந்தார்
படையிடையொடியநெடுந்தோள்பறிதரவயிறுதிறந்தார்
இடையிடைமலையின்விழுந்தாரிகல்பொரமுடுகியெழுந்தார். (௨௭)

புதைபடவிருளின்மிடைந்தார்பொடியிடைநெடிதுபுரண்டார்
விதைபடுமுயிரர்விழுந்தார்விளிவொடுவிழியுமிழந்தார்
கதையொடுமுதிரமலைந்தார்கணைபொழிசிலையர்கலந்தார்
உதைபடவுரனுநெரிந்தாருத்தெருடுகுருதியுமிழ்ந்தார். (௨௮)

அயலயன்மலையொடறைந்தானடுபகையளகையடைந்தார்
வியலிடமறையவிரிந்தார்மிசையுலகடையமிடைந்தார்
புயெருடுகடலின்விழுந்தார்புடைபுடைசிதைவொடுசென்றார்
உயர்வுறவிசையினெறிந்தானுடலொடுமுலகுதுறந்தார். (௨௯)

வேறு.

பற்றித்தாளொடுதோள்பறித்தெறிந்தனன்பாரின்
இற்றவெஞ்சிறைவெற்பினமாமெனக்கிடந்தார்
கொற்றவாலிடைக்கொடுந்தொழிலரக்கரையடங்கச்
சுற்றிவீசலிற்பம்பரமாமெனச்சுழன்றார். (௩௦)

வாள்களிற்றனவிற்றனவரிசிலைவயிரத்
தோள்களிற்றனவிற்றனசுடர்மழுச்சூலம்
நாள்களிற்றனவிற்றனநகையெயிற்றீட்டம்
தாள்களிற்றனவிற்றனபடையுடைத்தடக்கை. (௩௧)

தெறித்தவன்றலைதெறித்தனசெறிசுடர்க்கவசம்
தெறித்தபைங்கழல்தெறித்தனசிலம்பொடுபொலந்தார்
தெறித்தபன்மணிதெறித்தனபெரும்பொறித்திறங்கள்
தெறித்தகுண்டலந்தெறித்தனகண்மணிசிதறி. (௩௨)

உக்கபற்குலையுக்கனதுவக்கெலும்புதிர்வுற்
றுக்கமுற்கரமுக்கனமுசண்டிகளுடைவுற்
றுக்கசக்கரமுக்கனவுடறிறந்துயிர்கள்
உக்ககப்பணமுக்கனவுயர்மணிமகுடம். (௩௩)

---

* பறை - அகன்றவாயுள்ள தோட்பறை அதாவது ஒருதோளிலே சேர மார்பிலும் இடக்கையிலுங்கொண்டு கொட்டுகிற ஓர்வகை வாத்தியம்.

தாள்களாற்பலர்தடக்கைகளாற்பலர்தாக்கும்
தோள்களாற்பலர்சுடர்விழியாற்பலர்தொடரும்
கோள்களாற்பலர்குத்துகளாற்பலர்தத்தும்
வாள்களாற்பலர்மரங்களினாற்பலர்மடிந்தார். (௩௪)

ஈர்க்கப்பட்டனர்சிலர்சிலரிடிப்புண்டுபட்டார்
பேர்க்கப்பட்டனர்சிலர்சிலர்பிடியுண்டுபட்டார்
ஆர்க்கப்பட்டனர்சிலர்சிலரடியுண்டுபட்டார்
பார்க்கப்பட்டனர்சிலர்சிலர்பயமுண்டுபட்டார். (௩௫)

ஓடிக்கொன்றனன் * சிலவரையுடலுடனேறும்
கூடிக்கொன்றனன்சிலவரைக்கொடிநெடுமரத்தால்
சாடிக்கொன்றனன்சிலவரைப்பிணந்தொறுந்தடவித்
தேடிக்கொன்றனன்சிலவரைக்கறங்கெனத்திரிவான். (௩௬)

முட்டினார்படமுட்டினான்முறைமுறைமுடுகிக்
கிட்டினார்படக்கிட்டினான்கிரியெனநெருங்கிக்
கட்டினார்படக்கட்டினான்கைகளின்மெய்யின்
தட்டினார்படத்தட்டினான்மலையெனத்தகுவான். (௩௭)

மறக்கினுங்கொல்லுமுணரினுங்கொல்லுமால்விசும்பின்
பறக்கினுங்கொல்லும்படரினுங்கொல்லுமின்படைக்கை
நிறக்கருங்கழலரக்கர்கணெரிதொறும்பொறிகள்
பிறக்கநின்றெரிபடைகளைத்தடக்கையாற்பியையும். (௩௮)

சேறும்வண்டலுமூளையுநிணமுமாய்த்திணிய
நீறுசேர்நெடுந்தெருவெலாநீத்தமாய்நிரம்ப
ஆறுபோல்வருங்குருதியவ்வநுமனாலலைப்புண்
டேறில்வாய்தொறுமுமிழ்வதேயொத்ததவ்விலங்கை. (௩௯)

கருதுகாலினுங்கையினும்வாலினுங்கட்டிச்
சுருதியேயன்னமாருதிமரத்திடைதுரப்பான்
நிருதரெந்திரத்திடுகரும்பாமெனநெரிவார்
குருதிசாறெனப்பாய்வதுகுரைகடற்கூனில். (௪0)

எடுத்தரக்கரையெறிதலுமவருடலெற்றக்
கொடித்திண்மாளிகையிடிந்தனமண்டபங்குலைந்த
தடக்கையானைகண்மறிந்தனகோபுரந்தகர்ந்த
பிடிக்குலங்களும்புரவியுமவிந்தனபெரிய. (௪௧)

தத்தமாடங்கடம்முடலாற்சிலர்தகர்த்தார்
தத்தமாதரைத்தங்கழலாற்சிலர்சமைத்தார்
தத்தமாக்களைத்தம்படையாற்சிலர்தடிந்தார்
எற்றிமாருதிதடக்கைகளான்விசித்தெறிய. (௪௨)

* சிலவரை—சிலரை.

ஆடன்மாக்களிற்றனையவனரக்கியர்க்கருளி
வீடுநோக்கியேசெல்கென்றுசிலவரைவிட்டான்
கூடினார்க்கவருயிரெனச்சிலவரைக்கொடுத்தான்
ஊடினார்க்கவர்மனைதொறுஞ்சிலவரையுய்த்தான். (௪௩)

தருவெலாமுடறெற்றியெலாமுடல்சதுக்கத்
தெருவெலாமுடலுவரியெலாமுடலுள்ளோர்க்
கருவெலாமுடல்காயமெலாமுடலரக்கர்
தெருவெலாமுடறேயமெலாமுடல்சிதறி. (௪௪)

ஊனெலாமுயிர்கவருறுங்காலனேய்ந்துலந்தான்
தானெலாரையுமாருதிசாடுகைதவிரான்
மீனெலாமுயிர்மேகமெலாமுயிர்மேன்மேல்
வானெலாமுயிர்மற்றுமெலாமுயிர்சுற்றி. (௪௫)

ஆகவிச்செருவிளைவுறுமமைதியினரக்கர்
மோகமுற்றனராமெனமுறைமுறைமுனிந்தார்
மாகமுற்றவுமாதிரமுற்றவும்வளைந்தார்
மேகமொத்தனர்மாருதிவெய்யவனொத்தான். (௪௬)

அடலரக்கருமார்த்தலினலைத்தலினயரப்
புடைபெருத்துயர்பெருமையிற்கருமையிற்பொலிவின்
மிடலயிற்படைமீனெனவிலங்கலிற்கலங்கும்
கடனிகர்த்தனர்மாருதிமந்தரங்கடுத்தான். (௪௭)

கரதலத்தினுங்காலினும்வாலினுங்கதுவ
நிரைமணித்தலைநெரிந்துகச்சாய்ந்துயிர்நீப்பார்
சுரர்நடுக்குறவமுதுகொண்டெழுந்தநாடொடரும்
உரகரொத்தனரநுமனுங்கலுழனையொத்தான். (௪௮)

மானமுற்றதம்பகையினான்முனிவுற்றுவளைந்த
மீனுடைக்கடலுலகினிலுளவெலாமிடைந்த
ஊனறக்கொன்றுதைக்கவுமொழிவிலாநிருதர்
ஆனையொத்தன * ராளரியொத்தனனனுமன். (௪௯)

எய்தவெற்றினவெறிந்தனவீர்த்தனவிகலின்
பொய்தகுத்தினபொதுத்தனதொளைத்தனபோழ்ந்த
கொய்தசுற்றினபற்றினகுடைந்தனபொலிந்த
அய்யன்மற்பெரும்புயத்தனபுண்ணளப்பரிதால். (௫௦)

கார்க்கருந்தடங்கடல்களுமழைமுகிற்கணனும்
வேர்க்கவெஞ்செருவிளைத்தெழும்வெள்ளெயிற்றரக்கர்
போர்க்குழாம்படிபூசலினையனைப்புகழ்வுற்
றார்க்கும்விண்ணவ † ரமலையேயுயர்ந்ததன்றமரில். (௫௧)

* ஆளரி-நரசிங்கம். † அமலை-சத்தம்.

மேவும்வெஞ்சினத்தரக்கர்கண்முறைமுறைவிசையால்
ஏவும்பல்படையெத்தனைகோடிகளெனினும்
தாவுந்தேவருமகளிருமுனிவருஞ்சொரிந்த
பூவும்புண்களுந்தெரிந்திலமாருதிபுயத்தில். (௩௨)

பெயர்க்குஞ்சாரிகைகறங்கெனத்திசைதொறும்பெயர்வின்
உயர்க்கும்விண்மிசையோங்கலின்மண்ணின்வந்துறலின்
அயர்த்துவீழ்ந்தனரழிந்தனரரக்கராயுள்ளோர்
வெயர்த்திலன்மிசை * யுயிர்த்திலனல்லறவீரன். (௩௩)

எஞ்சலக்கணத்தறிந்திலமிராவணனேவ
நஞ்சமுண்டவராமெனவனுமன்மேனடந்தார்
துஞ்சினாரல்லதியாவருமறத்தொடுந்தொலைவுற்
றஞ்சினாரில்லையரக்கரில்வீரர்மற்றியாரே. (௩௪)

வந்தகிங்கர † ரேயெனுமாத்திரைமடிந்தார்
நந்தவானத்துநாயகரோடினர்நடுங்கிப்
பிந்துகாலினர்கையினர்பெரும்பயம்பிடரின்
உந்தவாயிரம்பிணக்குவைமேல்விழுந்துளைவார். (௩௫)

விரைவினுற்றனர்விம்மலுற்றியாதொன்றும்விளம்பார்
கரதலத்தினுற்பட்டதுங்கட்டுரைக்கின்றார்
தரையினிற்கிலர்திசைதொறுநோக்கினர்சலிப்பார்
அரசன்மற்றவரலக்கணேயுரைத்திடவறிந்தான். (௩௬)

இறந்துநீங்கினரோவின்றெறுணையையிகழ்ந்து
துறந்துநீங்கினரோவன்றிவெஞ்சமர்தொலைந்தார்
மறந்துநீங்கினரோவென்கொல்வந்ததென்றுரைத்தான்
கிறஞ்செருக்குறவாய்தொறுநெருப்புமிழ்கின்றான். (௩௭)

வேறு.

சலந்தலைக்கொண்டனராயதன்மையார்
அலந்திலர்செருக்களத்தஞ்சினாரலர்
புலந்தெரிபொய்க்கரிபுகலும்புன்கணார்
குலங்களினவிர்ந்தனர்குரங்கினாலென்றார். (௩௮)

ஏவலினெய்தினரிருந்தவெண்டிசைத்
தேவரைநோக்கினானுஞ்சிந்தையான்
யாவதென்றறிந்திலிர் ‡ போலுமாலென்றான்
மூவகையுலகையும்விழுங்கமூள்கின்றான். (௩௯)

---

* உயிர்த்திலன்-மூச்சுவிடுதலுமிலன்.
† ஏயெனுமாத்திரை—உம்மென்னும்மளவில்.
‡ போலும், ஆல்—அசைகள்.

மீட்டவருரைத்திலர்பயத்தின்விம்முவார்
தோட்டலரினமலர்த்தொங்கன்மோலியான்
வீட்டியதாக்கரையென்னும்வெவ்வுரை
கேட்டதோகண்டதோகிளத்துவீரென்றான். (௬0)

கண்டனமொருபுடைநின்றுகண்களால்
தெண்டிரைக்கடலெனவளைந்தசேனையை
மண்டலந்திரிந்தொருமரத்தினாலடித்து
உண்டதக்குரங்கினமொழிவதன்றென்றார். (௬௧)

அ-வது, கிங்கரர்வதைப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-அ௧௬.

---

## ௬-வது, சம்புமாலிவதைப்படலம்.

கும்பினகையனின்றகுன்றெனக்குவவுத்திண்டோட்
பாம்பிவர்தறுகட்சம்புமாலியென்பவனைப்பாரா
வாம்பரித்தானையோடுவளைத்துதன்மறனைமாற்றித்
தாம்பினிற்பற்றித்தந்தென்மனச்சினந்தணித்தியென்றான். (௧)

ஆயவன்வணங்கிவீரமளக்கருமளக்கர்முன்னர்
நீயிதுமுடித்தியென்றுநேர்ந்தனைநினைவினெண்ணி
எயினையென்னப்பெற்றலென்னின்யாருயர்ந்தாரென்றுப்
போயினனிலங்கைவேந்தன்போர்ச்சினம்போலத்தொப்பான். (௨)

தன்னுடைத்தானையோடுந்தயமுகன்றருகென்றேய
மன்னுடைச்சேனையோடுந்தாதைவந்தீந்தவாளின்
மின்னுடைப்பாவையோடும் * வேறுளோர்சிறப்பின்விட்ட
பின்னுடையனிகத்தோடும்பெயர்ந்தனன்பெரும்போர்பெற்றான். (௩)

உருமொத்தமுழக்கிற்செங்கண்வெள்ளெயிற்றோடைநெற்றிப்
பருமித்தகிரியிற்றோன்றும்வேழமும்பதுமத்தண்ணல்
நிருமித்தவெழிலிமுற்றிற்றென்னலாநிலையகேமிச்
சொரிமுத்தமாலைசூழ்ந்துகிற்கொடித்தடந்தேர்சுற்ற. (௪)

காற்றினைமருங்கிற்கட்டிக்கால்வகுத்துயிருங்கூட்டிக்
கூற்றினையேற்றியன்னகுலப்பரிகுழுவக்குன்றின்
தூற்றினியெழுப்பியாண்டுத்தொகுத்தெனச்சுழல்பைங்கண்ண
வேற்றினப்புலியேயென்னவியர்த்தெழும்பதாதியீட்டம். (௫)

---

* வேறுளோர்-இவனுக்குச்சரியான ராக்ஷத ராஜர்கள்.

தோமரமுலக்கைகூர்வாள்சுடர்மழுகுலிசந்தோட்டி
தாமரந்தின்றகூர்வேறழலொளிவட்டஞ்சாபம்
காமர்தண்டெழுக்கள்காந்துங்கற்பணங்காலபாசம்
மாமரம்வலயம்வெங்கோன்முதலியவயங்கமாதோ. (௬)

எத்தியவயில்வேல் * குந்தமெழுக்கழுமுதலவேந்திக்
குத்தியதிளப்பமீதிற்குழுவினமழைமாக்கொண்டல்
பொத்துகுபொருவினன்னீர்சொரிவனபோவபோலச்
சித்திரப்பதாகையீட்டந்திசைதொறுஞ்செறிவசெல்ல. (௭)

பல்லியந்துவைப்பநன்மாப்பணிலங்கண்முரலப்பொன்றேர்ச்
சில்லிகளிடிப்பவாசிசிரித்திடச்செறிபொற்றூரும்
வில்லுநின்றிசைப்பயானைமுழக்கம்விட்டார்ப்பவிண்டோய்
ஒல்லொலிவானிற்றேவருரைதெரிவொழிக்கமன்னோ. (௮)

மின்னகுகிரிகள்யாவுமேருவின்விளங்கித்தோன்றத்
தொன்னகர்பிறவுமெல்லாம்பொலிந்தனதுறக்கமென்ன
அன்னவன்சேனைசெல்லவார்கலியிலங்கையாய
பொன்னகர்தகர்ந்துபொங்கியார்த்தெழுதூளிபோர்க்க. (௯)

ஆயிரமைந்தொடைந்தாமாழியந்தடந்தேரத்தேர்க்
கேயினவிரட்டியானையானையினிரட்டிபாய்மா
போயினபதாதிசொன்னபுரவியினிரட்டிபோலாம்
தீயவன்றடந்தேர்சுற்றித்தெற்றெனச்சென்றசேனை. (௧0)

வின்மறைக்கிழவர்நாளுவிஞ்சையர்வரத்தின்மிக்கார்
வன்மறக்கண்ணராற்றல்வரம்பிலாவயிரத்தோளார்
தொன்மறக்குலத்தர் † தூணிதூக்கியபுறத்தர்மார்பின்
கன்மறைத்தொளிருஞ்செம்பொற்கவசத்தர்கடுந்தேராட்கள். (௧௧)

பொருதிசையானையூரும்புனிதனைப்பொருவும்பொற்பர்
சுரிபடைத்தொழிலுமற்றையங்குசத்தொழிலுந்தொக்கார்
நிருதியிற்பிறந்தவீரர்நெருப்பிடைப்பரப்புங்கண்ணர்
பரிதியிற்பொலியுமெய்யர்படமெதக்களிற்றின்பாகர். (௧௨)

ஏர்கெழுதிசையுஞ்சாரிபதினெட்டுமியல்பினெண்ணிப்
போர்கெழுபடையுங்கற்றவித்தகப்புலவர்போரில்
தேர்கெழுமறவர்யானைச்சேவகர்சிரத்திற்செல்லும்
தார்கெழுபுரவியென்னுந்தம்மனந்தாவப்போனார். (௧௩)

அஃதெனுந்தானைசுற்றவமரரையச்சஞ்சுற்றப்
பொன்னெடுந்தேரிற்போனான்பொருப்பிடைநெருப்பிற்பொங்கித்
தன்னெடுங்கண்கள்காந்தத்தாழ்பெருங்கவசமார்பின்
மின்னிடவெயிலும்வீசவில்லிடுமெயிற்றுவீரன். (௧௪)

* குந்தம்-எறியீட்டி. † தூணி—அம்பறாத்தூணி.

நந்தனவனத்துணின்றநாயகன்றூதன்றானும்
வந்திலரரக்கரென்னுமனத்தினன்வழியைநோக்கிச்
சந்திரன்முதலவானமீனெலாந்தழுவநின்ற
இந்திரதனுவிற்றோன்றுந்தோரணமிவர்ந்துநின்றான். (க௫)

கேழிருமணியும்பொன்னும்விசும்பிருள்கிழித்துவீங்க
ஊழிருங்கதிர்களோடுந்தோரணத்தும்பர்மேலான்
சூழிருங்கதிர்களெல்லாந்தோற்றிடச்சுடருஞ்சோதி
ஆழியினடுவட்டோன்றுமருக்கனையனையனானான். (கசா)

செல்லொடுமேகஞ்சிந்தத்திரைக்கடல்சிலைப்புத்தீரக்
கல்லளைகிடந்தநாகமுயிரொடுவிடமுங்காலக்
கொல்லியலரக்கர்நெஞ்சிற்குடிபுகவச்சம்வீரன்
வில்லெனவிடிக்கவிண்ணோர்நடுக்குறவீரனார்த்தான். (கஎ)

நின்றனதிசைக்கண்வேழநெடுங்களிச்செருக்குநீங்கத்
தென்றிசைநமனுமுள்ளந்துணுக்கெனச்சிந்திவானில்
பொன்றலின்மீன்களெல்லாம்பூவெனவுதிரப்பூவும்
குன்றமும்பிளக்கவேலைதுளக்குறக்கொட்டினான்றோள். (கஅ)

அவ்வழியரக்கரெல்லாமலைநெடுங்கடலினார்த்தார்
செவ்வழிச்சேறலாற்றார்பிணப்பெருங்குன்றந்தெற்றி
வெவ்வழிகுருதிவெள்ளம்புடைமிடைந்துயர்ந்துவீங்க
எவ்வழிச்சேறுமென்றார்தமருடம்பிடறிவீழ்வார். (கசு)

ஆண்டுநின்றரக்கன்வெவ்வேறணிவகுத்தனீகந்தன்னை
மூண்டிருபுடையுமுன்னுமுறைமுறைமூசவேவித்
தூண்டினன்றானுந்திண்டேர்தோரணத்திருந்ததோன்றல்
வேண்டியதெதிர்ந்ததென்னவைக்கினன்விசயத்திண்டோள். (உ0)

ஐயனுமமைந்துநின்றானூழியானனைவிறோமம்
நெய்சுடர்விளக்கிற்றோன்றுநெற்றியேநெற்றியாக
மொய்ம்மயிர்ச்சேனைபொங்கமுரணயிலுகிர்வாண்மொய்த்த
கைகளேகைகளாகக்கடைக்கூழைதிருவாலாக. (உக)

வயிர்கள்வால்வளைகள்விம்மவரிசிலைசிலைப்பமாயப்
பயிர்களார்ப்பெடுப்பமூரிப்பல்லியங்குமுறப்பற்றிச்
செயிர்கொள்வாளரக்கர்சீற்றஞ்செருக்கினர்படைகள்சிந்தி
வெயில்கள்போலொளிகள்வீசவீரன்மேற்கடிதுவிட்டார். (உஉ)

வேறு.

கருங்கடலரக்கர்தம்படைக்கலங்கரத்தால்
பெருங்கடலுறப்புடைத்திறத்துகப்பிசைந்தான்

விரிந்தனபொறிக்குலநெருப்பெனவெகுண்டாண்
டிருந்தவன்கிடந்ததொரெழுத்தெரிந்தெடுத்தான். (௨௩)

இருந்தனனெழுந்தனனிழிந்தனனுயர்ந்தான்
திரிந்தனன்புரிந்தனனெனைநனிதெரியார்
விரிந்தவர்குவிந்தவர்விலங்கினர்கலந்தார்
பொருந்தினர்நெருங்கினர்களப்படப்புடைத்தான். (௨௪)

* எறிந்தனவெய்தனவிடியுருமெனமேல்
செறிந்தனபடைக்கலமிடக்கையிற்சிதைத்தான்
முறிந்தனதெறுங்கரிமுடிந்தனதடந்தேர்
மறிந்தனபரிநிரைவலக்கையின்மலைந்தான். (௨௫)

இழந்தனநெடுங்கொடியிழந்தனவிருங்கோ
டிழந்தனநெடுங்கரமிழந்தனவியன்றாள்
இழந்தனமுழங்கொலியிழந்தனமதம்பா
டிழந்தனபெருங்கதமிருங்கவுளியானை. (௨௬)

நெரிந்தனதடஞ்சுவர்நெரிந்தனபெரும்பார்
நெரிந்தனநுகம்புடைநெரிந்தனவதன்கால்
நெரிந்தனகொடிஞ்சில்கணெரிந்தனவியன்றார்
நெரிந்தனகடும்பரிநெரிந்தனநெடுந்தேர். (௨௭)

ஒடிந்தனவுருண்டனவுலந்தனபுலந்த
இடிந்தனவெரிந்தனநெரிந்தனவெழுந்த
மடிந்தனமறிந்தனமுறிந்தனமலைபோல்
படிந்தனமுடிந்தனகிடந்தனபரிமா. (௨௮)

வெருண்டனர்வியந்தனர்விழுந்தனரெழுந்தார்
மருண்டனர்மயங்கினர்மறிந்தனரிறந்தார்
உருண்டனருலைந்தனருழைத்தனர்பிழைத்தார்
சுருண்டனர்புரண்டனர்தொலைந்தனர்மலைந்தார். (௨௯)

வே று.

கரிகொடுகரிகளைக்களப்படப்புடைத்தான்
பரிகொடுபரிகளைத்தலத்திடைப்படுத்தான்
வரிசிலைவயவரைவயவரின்மடித்தான்
நிரைமணித்தேர்களைத்தேர்களினிரைத்தான். (௩0)

மூளையுமுதிரமுமுழங்கிருங்குழம்பாய்
மீளிருங்குழைபடக்கரிவிழுந்தழுந்தத்
தாளொடுந்தலையுகத்தடநெடுங்கிரிபோல்
தோளொடுநிருதரைவாளொடுந்துகைத்தான். (௩௧)

* எறிந்தன-எறிந்தசஸ்திரங்களும். எய்தன - எய்தஅஸ்திரங்களும்.

மல்லொடுமலைமலைத்தோளரைவளைவாய்ப்
பல்லொடுநெடுங்கரப்பகட்டொடும்பருந்தாள்
வில்லொடுமயிலொடும்விறலொடும்விளிக்கும்
சொல்லொடுமுயிரொடுசிலத்தொடுந்துகைத்தான். (௩௨)

* புகைநெடும்பொறிபுகுந்திசைதொறும்பொலிந்தான்
சிகைநெடுஞ்சுடர்விடுந்தேர்தொறுஞ்சென்றான்
தகைநெடுங்கரிதொறும்பரிதொறுஞ்சரித்தான்
நகைநெடும்படைதொறுந்தலைதொறுநடந்தான். (௩௩)

வென்றிவெம்புரவியின்வெரிநினும்விரவார்
மன்றலந்தாரணிமார்பினுமணித்தேர்
ஒன்றினின்றொன்றினுமுயர்மதமழைதாழ்
குன்றினுங்கடையுகத்துருமெனக்குதித்தான். (௩௪)

பிரிவருமொருபெருங்கோலெனப்பெயரா
இருவினைதுடைத்தவரறிவெனவெவர்க்கும்
வருமுலைவிலைக்கெனமதித்தனர்வழங்கும்
தெரிவையர்மனமெனக்கறங்கெனத்திரிந்தான். (௩௫)

அண்ணலவ்வரியினுக்கடியவரவன்சீர்
நண்ணுவரெனும்பொருணையறத்தெரிப்பான்
மண்ணினும்விசும்பினுமருங்கினும்வலித்தார்
கண்ணினு † மனத்தினுந்தனித்தனிகலந்தான். (௩௬)

கொடித்தடந்தேரொடுங்குரகதக்குழுவை
அடித்தொருதடக்கையினிலத்திணிட்டரைத்தான்
இடித்துநின்றதிர்கதத்தெயிற்றுவன்பொருப்பைப்
பிடித்தொருதடக்கையினுயிருகப்பிழிந்தான். (௩௭)

கறுத்தெழுநிறத்தினரெயிற்றினர்கயிற்றார்
செறுத்தெரிவிழிப்பவர்சிகைக்கழுவலத்தார்
மறுத்தெழுமறலிகளிவரெனவதிர்ந்தார்
ஒறுத்துருத்திரனெனத்தனித்தனியுதைத்தான். (௩௮)

சக்கரந்தோமரமுலக்கைதண்டயில்வாள்
மிக்கனதேர்பரிகுடைகொடிவிரவி
உக்கனகுருதியம்பெருந்திரையுருட்டிப்
புக்கனகடலிடைநெடுங்காப்பூட்கை. (௩௯)

* புகைநெடும் பொறிபுகுந்திசைதொறுமென்பது - தமக்குக்கோபமூண்ட இடமெல்லாஞ்சென்று விளங்கினானென்க.

† மனத்தினும் என்பதனால் மனோவேகத்திலும் அதிகமாய் அவ்விடங்களெல்லாம் கலந்தானெனவுமாம்.

எட்டினவிசும்பினையெழுப்படவெழுந்த
முட்டினமலைகளைமுயங்கினதிசையை
ஒட்டினவொன்றையொன்றூடடித்துதைந்து
தட்டுமுட்டாடினதலையொடுதலைகள். (௪௦)

வேறு.

கானேகாவல்வேழக்கணங்கள்கதவாளரிகொன்ற
வானேயெய்தத்தனியேநின்றமதமால்வரையொப்பான்
தேனேபுரைகண்கனலேசொரியச்சீற்றஞ்செருக்கினான்
தானேயானான்சம்புமாலிகாலன்றன்மையான். (௪௧)

காற்றிற்கடியகலினப்புரவிதிருதர்களத்துக்கார்
ஆற்றுக்குருதிகிணைத்தோடடுத்தவள்ளற்பெருங்கொள்ளைச்
சேற்றிற்செல்லாத்தேரினூழியாழிமலைத்தேரா
வீற்றுச்செல்லும்வெளியேயோவில்லையளியன்விரைகின்றான். (௪௨)

* எதிரொன்றூற்றேறுமஃதாலெலாயோருயிர்கோடல்
நீதியன்றாலுடன்வந்தாரைக்காக்குநிலையில்லாய்
சாதியன்றேற்பிறிதென்செய்தியவர்பின்றனிநின்றாய்
போதியென்றான்பூத்தமரம்போற்புண்ணாற்பொலிகின்றான். (௪௩)

நன்றுநன்றுன்கருணையென்னுநெருப்புநகநக்கான்
பொன்றுவாரிலொருவனென்றாய்போலுமெனையென்னு
வன்றிண்சிலையின்வயிரக்காலால்வடித்திண்சுடர்வாளி
ஒன்றுபத்துநூறுநூறாயிரமுமுறைதப்பித்தான். (௪௪)

செய்திசெய்திசிலைகைக்கொண்டால்வெறுங்கைதிரிவோரை
நொய்தின்வெல்வதரிதோவென்னுமுறுவலுகநக்கான்
அய்யனங்குமிங்குங்காலாலழியுமழையென்ன
எய்தவெய்தபகழியெல்லாமெழுவால்வழுவித்தான். (௪௫)

முற்றமுனிந்தானிருதன்முனியாமுன்னும்பின்னுஞ்சென்
றுற்றபகழியுறாதுமுறியாவுதிர்கின்றதையுன்னுச்
சுற்றுநெடுந்தேரோட்டித்தொடர்ந்தான்றொடருந்துறைகாணான்
வெற்றவெழுவைமழுவாயம்பாலறுத்துவீழ்த்தினான். (௪௬)

சலித்தானையன்கையாலெய்யுஞ்சரத்தையுகச்சாடி
ஒலித்தாரமரர்கண்டாரார்ப்பத்தேரினுட்புக்குக்
கலித்தான்சிலையைக்கையால்வாங்கிக்கழுத்தினிடையிட்டு
வலித்தான்பகுவாய்மடித்துமலைபோற்றலைமண்ணிடைவீழ. (௪௭)

---

* எதிரொன்று தேரொன்றென்றதனாலே ஒரே அடிக்குத்தான் காணும் ஓடிப்போவென்று கருத்து.

குதித்துத்தேருங்கோல்கொளாளும்பரியுங்குழம்பாக
மிதித்துப்பெயர்த்துநெடுங்தோரணத்தைவீரன்மேற்கொண்டான்
கதித்துப்பழிந்துகழிந்தார்பெருமைகண்டுகளத்தஞ்சி
உதித்துப்புலர்ந்ததோல்போலுருவத்தமரரோடினூர். (சஅ)

பரிந்துபுலம்புமகளிர்காணக்கணவர்பிணம்பற்றி
விரிந்தகுருதிப்போராறீர்த்துமனைகடொறும்வீச
இரிந்ததிலங்கையெழுந்ததழுகையின்றிங்கிவருமேல
சரிந்ததரக்கர்வலியென்றெண்ணியறமுந்தளிர்த்ததால். (சகூ)

புக்காரமரர்பொலந்தாரரக்கன்பொருவில்பெருங்கோயில்
விக்காநின்றார்விளம்பலாற்றார்வெருவிவிம்முவார்
நக்கானரக்கனடுங்கலென்றானையாமரெல்லாம்
உக்கார்சம்புமாலியுலந்தானென்றேகுரங்கென்றார். (ருO)

என்னுமளவினெரிந்துவீங்கியெழுந்தவெகுளியான்
உன்னவுன்னவுதிரக்குமிழிவிழியூடுமிழ்கின்றான்
சொன்னகுரங்கையானேபிடிப்பன்கடிதுதொடர்ந்தென்று
அன்னதுணர்ந்தசேனைத்தலைவரைவரறிவித்தார். (ருக)

கூ-வது, சம்புமாலிவதைப்படலம்-முற்றிற்று.
ஆ. திருவிருத்தம்-அகூஎ.

---

## கO-வது, பஞ்சசேனாபதிகள்வதைப்படலம்.

* சிலந்தியுண்பதோர்குரங்கின்மேற்சேறியேற்றிறலோய்
கலந்தபோரிடைக்கட்புலன்கடுங்கனல்கது
உலந்தமால்வரையருவியாறொழுக்கற்றொழுகப்
புலர்ந்தமாமதம்பூக்குமன்றேதிசைப்பூட்கை. (க)

இலங்குவெஞ்சினத்தஞ்சிறைறயெறுழ்வலிக்கலுழன்
உலங்கின்மேலுருத்தென்னநீகுரங்கின்மேலுருக்கின்
அலங்கன்மாலைநின்புயகிரிநோந்தல்லுநன்பகலும்
குலுங்கும்வன்றுயர்நீங்குமால்வெள்ளியங்குன்றம். (உ)

உறுவதென்கொலோவானிழிவென்பதொன்றுடையார்
பெறுவதியாதொன்றுங்காண்கிலர்கேட்கிலர்பெயர்ந்தார்
சிறுமையீதொப்பதியாதுநீகுரங்கின்மேற்சேறின்
முறுவல்பூக்குமன்றேநின்றமூவர்க்குமுகங்கள். (ங)

---

* சிலம்பி-நூல்நூற்கிற ஒருவகைச்செந்து; அதை எட்டுக்காற்பூச்சியுமென்பர்.

அன்றியும்முனக்காளின்மைதோன்றுமாலரச
வென்றியில்லவர்மெல்லியோர்தமைச்செலவிட்டாய்
நன்றியின்றொன்றுகாண்டியேலெமைச்செலநயத்தி
என்றுகைதொழுதிறைஞ்சினரரக்கனுமிசைந்தான். (௪)

உலகமூன்றிற்குமுதன்மைபெற்றோரெனவுயர்ந்தார்
திலகமண்ணுறவணங்கினர்கோயிலிற்றீர்ந்தார்
அலகிறேர்பரிகரியொடாண்மிடைந்தபோரரக்கர்
தொலைவிலாதனகதுமெனவருகெனச்சொன்னார். (௫)

ஆனைமேன்முரசறைந்தனர்வள்ளுவரமைந்தார்
* பேனவேலையிற்புடைபரந்ததுபெருஞ்சேனை
சோனைமாமழைமுகிலெனப்போர்ப்பணைதுவைப்ப
மீனவானிடைமின்னெனப்படைக்கலமிடைந்த. (௬)

தானைமாக்கொடிமழைபொதுத்துயர்நெடுந்தாள
மானமாற்றருமாருதிமுனிவநாளுலந்து
போனமாற்றலர்புகழெனக்கால்பொரப்புரண்ட
வானயாற்றுவெண்டிரையெனவரம்பிலபரந்த. (௭)

விரவுபொற்கழல்விசித்தனர்வெரிநுற்றுவிளங்கச்
சரமொடுக்கினபுட்டிலுஞ்சாத்தினர்சமையக்
கருவிபுக்கனரரக்கர்மாப்பல்லணங்கவினப்
புரவியிட்டதேர்பூட்டினபருமித்தபூட்கை. (௮)

ஆறுசெய்தனவானையின்மதங்களவ்வாற்றைச்
சேறுசெய்தனதேர்களின்சில்லியச்சேற்றை
நீறுசெய்தனபுரவியின்குரமற்றநீற்றை
வீறுசெய்தனவப்பரிக்கலினமாவிலாழி. (௯)

வழங்குதேர்களினிடிப்பொடுவாசியினார்ப்பும்
முழங்குவெங்களிற்றதிர்ச்சியுமொய்கழலொலியும்
தழங்குபல்லியத்தமலையுங்கடையுகத்தாழி
விழுங்குமோதையின்மும்மடங்கெழுந்ததுமுடுகி. (௧௦)

ஆழித்தேர்த்தொகையைம்பதினாயிரமஃதே
சூழிப்பூட்கைக்குத்தொகையவற்றிரட்டியின்றொகைய
ஊழிக்காற்றன்னபுரவிமற்றவற்றினுக்கிரட்டி
பாழித்தோணெடும்படைக்கலப்பதாதியின்பகுதி. (௧௧)

கூய்த்தருந்தொறுந்தருந்தொறுந்தானைவெங்குழுவின்
நீத்தம்வந்துவந்தியங்கிடமின்றிநெருங்கக்
காய்த்தமைந்தவெங்கதிர்ப்படையொன்றொன்றுகதுவித்
தேய்த்தெழுந்தனபொறிக்குலமழைக்குலந்தீய. (௧௨)

---

* பேனம்-நுரை.

பண்மணிக்குலம்யானையின்புடைதொறும்பரந்த
ஒண்மணிக்குலமழையிடையுருமெனவொலிப்பக்
கண்மணிக்குலங்கனலெனக்காந்துவகதுப்பின்
தண்மணிக்குலமழையெழுகதிரெனத்தழைப்ப. (௧௩)

தொக்கதாம்படைசரிகுழன்மடந்தையர்தொடிக்கை
மக்கடாயர்மற்றியாவருந்தடுத்தனர்மறுகி
ஒக்கவேகூதுங்குரங்கினுக்குயிர்தரவொருவர்
புக்குமீண்டிலரென்றழுதிரங்கினர்புலம்பி. (௧௪)

கைபரந்தெழுசேனையங்கடலிடைக்கலந்தார்
செய்கைதாம்வருந்தேரிடைக்கதிரெனச்செல்வார்
மெய்கலந்தமானிகர்வருமுவமையையவென்றார்
ஐவரும்பெரும்பூதமோரைந்துமொத்தமைந்தார். (௧௫)

முந்தியம்பலகறங்கிடமுறைமுறைபொறிகள்
சிந்தியம்புறுகொடுஞ்சிலையுருமெனத்தெறிப்பார்
வந்தியம்புறுமுனிவர்க்குமமரர்க்கும்வலியார்
இந்தியம்பகையாயவைவயைந்துமொத்தியைந்தார். (௧௬)

வாசவன்வயக்குலிசமும்வருணன்வன்கயிறும்
ஏசிறென்றிசைக்கிழவன்றனெரிமுனையெழுவும்
ஈசன்வன்றனிச்சூலமுமென்றிவையொன்றும்
ஊசிபோல்வதோர்வடுச்செயாநெடும்புயமுடையார். (௧௭)

சூர்தடிந்தவன்மயிலிடைப்பறித்தவன்றோகை
பார்பயந்தவனன்னத்தினிறகிடைப்பறித்த
மூரிவெஞ்சிறகிடையிட்டுத்தொடுத்தனமுறுக்கி
* வீரசூடிகைநெற்றியினயலிட்டுவிசித்தார். (௧௮)

பொன்றிணிந்ததோளிராவணன்மார்பொடும்பொருத
அன்றிழந்தகோடரிந்திடுமழகுறுகுழையர்
நின்றவன்றிசை † நெடுங்களியானையினெற்றி
மின்றிணிந்தனவோடையின்வீரபட்டத்தர். (௧௯)

வேறு.

நிதிநெடுங்கிழவனைநெருக்கிநீணகர்ப்
பதியொடும்பெருந்திருப்பறித்தபண்டைநாள்
விதியொடுமன்னவன்விழுந்துவெந்நிடப்
‡ பொதியொடும்வாரியபொலன்கொள்பூணினார். (௨௦)

---

* வீரசூடிகை-வீரத்தினாலே உச்சிக்கொண்டையிலே சேர்த்துக் கட்டுகிற இறகுகள் மயில்வாலும் அன்னத்திற்குமெனக.

† நெடுங்களி-அதிக மதமயக்கங்கொண்ட திக்கஜங்களெனக.

‡ பொதி-பொதியப்படுதல்.

இந்திரனிசையிழந்தேகுவானிகற்
றந்திமுன்கடாவினன்முடுகத்தாமதன்
மந்தரவாலடிபிடித்துவல்லையேல்
உந்துதிநீயெனவலிந்தவூற்றத்தார். (௨௧)

பானிறுத்தந்தணன்பணியனாகிநின்
கோணினைத்திலனெனவுலகங்கூறலும்
நீணிறத்திராவணன்முனிவுநீக்குவான்.
காலனைக்காலினிற்கையிற்கட்டினார். (௨௨)

மலைகளைநகுந்தடமார்பர்மால்கடல்
அலைகளைநகுநெடுந்தோளரந்தகன்
கொலைகளைநகுநெடுங்கொலையர்கொல்லனா
துலைகளைநகுமனலுமிழுங்கண்ணினார். (௨௩)

தோல்கிளர்திசைதொறுமுலகைச்சுற்றிய
சால்கிளர்முழங்கெரிதழங்கியேறினும்
கால்கிளர்ந்தோங்கினுங்காலங்கையுற
மால்கடல்கிளரினுஞ்சரிக்கும்வன்மையார். (௨௪)

இவ்வகையனைவருமெழுந்ததானையர்
மொய்கிளர்தோரணமதனைமுற்றினார்
* கையொடுகையுறவணியுங்கட்டினார்
ஐயனுமவர்நிலையமையநோக்கினான். (௨௫)

அரக்கரதாற்றலுமளவில்சேனையின்
தருக்குமம்மாருதிதனிமைத்தன்மையும்
பொருக்கெனநோக்கியபுரந்தராதியர்
இரக்கமுமவலமுந்துளக்குமெய்தினார். (௨௬)

இற்றனரரக்கரிப்பகலுளேயெனாக்
கற்றுணர்மாருதிகளிக்குஞ்சிந்தையான்
முற்றுறச்சுலாவியமுடிவிருனையைச்
சுற்றுறநோக்கித்தன்றோளைநோக்கினான். (௨௭)

புன்றலைக்குரங்கிதுபோலுமாலமர்
வென்றதுவிண்ணவர்புகழைவேரொடும்
தின்றவல்லரக்கரைத்திருகித்தின்றதால்
என்றனரயிர்த்தனர்நிருதரெண்ணிலார். (௨௮)

ஆயிடையனுமனுமமரர்கோனகர்
வாயினின்றவ்வழிக்கொணர்ந்துவைத்தமாச்
சேயொளித்தோரணத்தும்பர்ச்சேணொடு
மீயுயர்விசும்பையுங்கடக்கவீங்கினான். (௨௯)

---

* கையொடு கையுறுதல்-வகுப்போடுவகுப்புச்சேர்ந்து நிற்றல்.

வீங்கியவீரனைவியந்துநோக்கிய
தீங்கியலரக்கருந்திருகினார்சினம்
வாங்கியசிலையினர்வழங்கினார்படை
ஏங்கியசங்கினமிடித்தபேரியே. (கூo)

எறிந்தனரெய்தனரெண்ணிறந்தன
பொறிந்தெழுபடைக்கலமரக்கர்போக்கினார்
செறிந்தனமயிர்ப்புறந்தினவுதீர்வுறச்
சொறிந்தனவெனவிருந்தையன்றாங்கினான். (கூக)

உற்றுடன்றரக்கருமுருத்துடற்றினர்
செற்றுறநெருக்கினர்செருக்குஞ்சிந்தையர்
மற்றையர்வரும்பரிசிவரைவல்விரைந்
தெற்றுவனெனவெழுவனுமனேந்தினான். (கூஉ)

ஊக்கியபடைகளுமுருத்தவீரரும்
தாக்கியபரிகளுந்தடுத்ததேர்களும்
மேக்குயர்கொடியுடைமேகமாலைபோல்
நூக்கியகரிகளும்புரளநூக்கினான். (கூங)

வார்மதக்கரிகளின்கோடுவாங்கிமாத்
தேர்படப்புடைக்குமத்தேரின்சில்லியால்
வீரரையுருட்டுமெய்வீரர்வாளினால்
தாருடைப்புரவியைத்துணியத்தாக்குமால். (கூச)

இரண்டுதேரிரண்டுகைத்தலத்துமேந்திவே
றிரண்டுமால்யானைபட்டுருளவெற்றுமால்
இரண்டுமால்யானைகையிரண்டினேந்திவே
றிரண்டுபாலினும்வரும்பரியையெற்றுமால். (கூரு)

மாயிருநெடுவரைவாங்கிமண்ணினிட்
டாயிரந்தேர்படவரைக்குமாலுறித்
தாயிரங்கரிற்றையோர்மரத்தினாலடித்
தேயெனுமாத்திரைபெற்றிமுற்றுமால். (கூசு)

உதைக்கும்வெங்கரிகளையுழக்குந்தேர்களை
மிதிக்கும்வன்புரவியைத்தேய்க்கும்வீரரை
மதிக்கும்வல்லெழுவினாலரைக்குமண்ணிடைக்
குதிக்கும்வன்றலையிடைக்கடிக்குங்குத்துமால். (கூஎ)

விசையின்மான்றேர்களுங்களிறும்விட்டகன்
றிசையுமாகாயமுஞ்செறியச்சிந்துமால்
குசைகொள்பாய்பரியொடுங்கொற்றவேலொடும்
பிசையுமாலரக்கரைப்பெருங்கரங்களால். (கூஅ)

தீயுறுபொறியுடைச்செங்கண்வெங்கைமா
மீயுறத்தடக்கையால்வீரன்வீசுதோ
றுய்பெருங்கொடியனகடலினாழ்வன
பாயுடைநெடுங்கலம்படுவபோன்றவே. (௩௯)

தாரொடுமுருளொடுந்தடக்கையாற்றனி
வீரன்விட்டெறிந்தனகடலின்வீழ்வன
வாரியினெழுஞ்சுடர்க்கடவுள்வானவன்
தேரினைநிகர்த்தனபுரவித்தேர்களே. (௪0)

மீயுறவிண்ணிடைமுட்டிவீழ்வன
வாய்பெருந்திரைக்கடலழுவத்தாழ்வன
ஓய்வ:னபுரவிவாயுதிரங்கால்வன
வாயிடையெரியுடைவடவைபோன்றவே. (௪௧)

வரிந்துறவல்லிதிற்சுற்றிவாலினால்
விரிந்துறவீசலிற்கடலின்வீழ்குநர்
திரிந்தனர்செறிகயிற்றரவினாற்றிரி
அருந்திறன்மந்தரமனையராயினார். (௪௨)

வீரன்வன்றடக்கையாலெடுத்துவீசிய
வார்மதகரியினிற்றேரின்வாசியின்
மூரிவெங்கடல்புகக்கடிதின்மூந்தின
ஊரின்வெங்குருதியாறீர்ப்பவோடின. (௪௩)

பிறைக்கடையெயிற்றினபிலத்தின்வாயன
கறைப்புனல்பொறிகளோடுமிழுங்கண்ணன
உறைத்தபுபடையனவுதிர்ந்தயாக்கைகள்
மறைத்தனமகரதோரணத்தைவானுற. (௪௪)

குன்றுளமரமுளகுலங்கொள்பேரெழு
வொன்றலபலவுளவுயிருண்பானுள
அன்றினர்பலருளரையன்கையுள
பொன்றுவதல்லதுபுறத்துப்போவரோ. (௪௫)

முழுமுதற்கண்ணுதன்முருகன்றாதைகைம்
மழுவெனப்பொலிந்தொளிர்வயிரவான்றனி
எழுவினிற்பொலங்கழலரக்கரீண்டிய
குழுவினைக்களப்படக்கொன்றுநீக்கினான். (௪௬)

வேறு.

உலந்ததுதானையுவந்தனரும்பர்
அலந்தலையுற்றதவ்வாழியிலங்கை
கலந்ததழுங்குரலின்கடலோதை
வலந்தருதோளவரைவரும்வந்தார். (௪௭)

ஈர்த்தெழுசெம்புனலெக்கரிழுக்கத்
தேர்த்துணையாழியழுந்தினர்சென்றார்
ஆர்த்தனராயிரமாயிரமம்பால்
தூர்த்தனரஞ்சனைதோன்றலுநின்றான். (சஅ)

எய்தகடுங்கணையாவையுமெய்தா
நொய்தகலும்படிகைகளினூறாப்
பொய்தகடொன்றுபொருந்திநெடுந்தேர்
செய்தகடும்பொறியொன்றுசிதைத்தான். (சகூ)

உற்றுறுதேர்சிதையாமுனுயர்ந்தான்
முற்றினவீரனைவானின்முனிந்தான்
பொற்றிரணீளெழுவொன்றுபொறுத்தான்
எற்றினனைந்தவன்வில்லினினேற்றான். (ருo)

முறிந்தது * மூரிவிலம்முறியேகொ
டெறிந்தவரக்கரோர்வெற்பையெடுத்தான்
அறிந்தமனத்தவனவ்வெழுவேகொ
டெறிந்தவரக்கனையின்னுயிருண்டான். (ருக)

ஒழிந்தவர்நால்வருமூழியுருத்த
கொழுந்துறுதீயெனவெய்துறகொட்பர்
பொழிந்தனர்வாளிபுகைந்தனகண்கள்
விழுந்தனசோரியவ்வீரன்மணித்தோள். (ருஉ)

ஆயிடைவீரனுமுள்ளமழன்றான்
மாயவரக்கர்வலத்தையுணர்ந்தான்
மீயெரியுய்ப்பதொர்கற்செலவிட்டான்
தீயவரச்சிலையைப்பொடிசெய்தார். (ருங)

தொடுத்ததொடுத்தசரங்கடுரந்த
அடுத்தகன்மாரிபினழுந்தியகன்ற
மிடற்றொருழிலான்விடுதேரொடுநொய்தின்
எடுத்தொருவன்றனைவிண்ணினெறிந்தான். (ருச)

எய்ந்தெழுதேரிமிழ்விண்ணினையெல்லாம்
நீந்தியதோடிநிமிர்ந்ததுவேகம்
ஓய்ந்ததுவீழ்வதன்முன்னுயர்பாரில்
பாய்ந்தவன்மேலுடன்மாருதிபாய்ந்தான். (ருரு)

மதித்தகளிற்றினின்வாளரியேறு
கதித்ததுபாய்வதுபோற்கதிகொண்டு
குதித்தனன்மால்வரைமேனிகுழம்ப
மிதித்தனன்வெஞ்சினவீரருள்வீரன். (ருசு)

---

* மூரிவில் — பெரியவில்.

மூண்டசினத்தவர்மூவர்முனிந்தார்
தூண்டியதேரர்சரங்கடெரிந்தார்
வேண்டியவெஞ்சமம்வேறுவிளைப்பார்
யாண்டினியேகுதியென்றெதிர்சென்றார். (௫௭

திரண்டுயர்தோளிணையஞ்சனைசிங்கம்
அரண்டருவிண்ணுறைவார்களுமஞ்ச
முரண்டருதேரவையாண்டொருமூன்றின்
இரண்டுமிரண்டுகையிற்கொடெழுந்தான். (௫௮

தூங்கியபாய்பரிசூதருலந்தார்
வீங்கியதோளவர்விண்ணின்விசைத்தார்
ஆங்கதுகண்டவர்போயகலாமுன்
ஓங்கியமாருதியொல்லையினுற்றான். (௫௯)

கானிமிர்வெஞ்சிலைகையினிறுத்தான்
ஆனவர்தூணியும்வாளுமகைத்தான்
ஏனையவெவ்வம்படையில்லவரெஞ்சார்
வானிடைநின்றுயர்மல்லின்மலைந்தார். (௬0)

வெள்ளையெயிற்றர்கறுத்துயர்மெய்யர்
பிள்ளவிரித்தபிலப்பெருவாயர்
கொள்ளவுருத்தடர் * கோளரவொத்தார்
ஒள்ளிக்கல்வீரனருக்கனையொத்தான். (௬௧)

தாம்பெனவாலின்வரிந்துயர்தாளோ
டேம்பலிலாரிருதோள்களிறுத்தான்
பாம்பெனநீங்கினர்பட்டனர்வீழ்ந்தார்
ஆம்பனெடும்பகைபோல்பவனின்றான். (௬௨)

நின்றனனேனையனின்றதுகண்டான்
குன்றிடைவாவுறுகோளரிபோல
மின்றிரிவன்றலைமீதுகுதித்தான்
பொன்றியவன்புவிதேரொடுபுக்கான். (௬௩)

வேறு.

வஞ்சமுங்களவும்வெஃகிவழியலாவழிமேலோடி
நஞ்சினுங்கொடியராகிநவைசெயற்குரியநீரார்
வெஞ்சினவரக்கரைவரொருவனேவெல்லப்பட்ட
அஞ்செனும்புலன்களொத்தாரவனுநல்லறிவையொத்தான். (௬௪)
நெய்தலையுற்றவேற்கைநிருதரச்செருவினேர்ந்தார்
உய்தலையுற்றுமீண்டாரொருவருமில்லையுள்ளார்

---

* கோளரவு-இராகு கேதுக்களை.

கைதலைப்பூசல்பொங்கக்கடுகினர்காலனுட்கும்
ஐவருமுலந்ததன்மையனைவருமமையக்கண்டார். (௬௫)

இறக்குறுமின்னேநம்மைக்குரங்கெனவிரங்கியேங்கி
மறக்குறுகின்றநெஞ்சின்மாதரைவைதுநோக்கி
உறக்குறுசொல்லருழித்தீயெனவுலகமேழும்
சுறக்கொளநோக்குவான்றன்செவித்தொளைதீயச்சொன்னார். (௬௬)

தானையுமுலந்தைவர்தலைவருஞ்சமைந்தார்தாக்கப்
போனபின்மீள்வேம்யாமேயதுவும்போர்புரிகிலாமை
வானையும்வென்றுளோரைவல்லையின்மடியநூறி
ஏனையரின்மைசோம்பியிருந்ததக்குரங்குமென்றார். (௬௭)

௧௰-வது, பஞ்சசேனாபதிகள் வதைப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௬௱௪.

---

## ௧௧-வது, அட்சகுமாரன்வதைப்படலம்.

கேட்டலும்வெகுளிவெந்தீக்கிளர்ந்தெழுமுயிர்ப்பனாகித்
தோட்டலர்தெரியன்மாலைவண்டொடுஞ்சுறக்கொண்டேற
ஊட்டரக்குண்டபோலுநயனத்தானொருப்பட்டானைத்
தாட்டுணைதொழுதுமைந்தன்றடுத்திடைதருதியென்றான். (௧)

முக்கணானூர்தியன்றேன்மூன்றுலகடியிற்றாயோன்
ஒக்கவூர்பறவையன்றேலவன்றுயிலுரகமன்றேல்
திக்கயமல்லதேற்புன்குரங்கின்மேற்சேறிபோலாம்
இக்கடனடியேற்கீதியிருத்தியீண்டினிதினெந்தாய். (௨)

அண்டர்கோன்றன்னைப்பற்றித்தருகெனவடியேனிற்கக்
கொண்டனையென்முன்றன்னைப்பணியெனநெஞ்சங்கோடல்
உண்டதுதீருமன்றேயுரனிலாக்குரங்கொன்றேனும்
எண்டிசைவென்றநீயேயேவுதியென்னையென்றான். (௩)

கொய்தளிர்கோதும்வாழ்க்கைக்கோடரத்துருவுகொண்டு
கைதவமியற்றியீண்டோர்சிறுபழியிழைக்குங்கற்பான்
எய்தினனிமையாமுக்கணீசனேயென்றபோதும்
நொய்தினின்வென்றுபற்றித்தருகுவெனடியினுன்பால். (௪)

துண்டத்தூணதனிற்றோன்றுங்கோளரிசுடர்வெண்கோட்டு
மண்டொத்தகிமிராண்கேழலாயினுமலைதலாற்றா
தண்டத்தைக்கடந்துபொங்கியப்புறத்தகலினென்பால்
தண்டத்தையிடுதியன்றேநின்வயிற்றந்திலேனேல். (௫)

எனவிவையியம்பியீதிவிடையெனவிறைஞ்சிநின்ற
வனைகழல்வயிரத்திண்டோண்மைந்தனைமகிழ்ந்துநோக்கித்
துனைபரித்தேர்மேலேறிச்சேறியென்றினையசொன்னான்
புனைமலர்த்தாரினானும் * போரணியணிந்துபோனான். (சு)

எறினனென்பமன்னோவிந்திரனிகலினிட்ட
நூறொடுநூறுபூண்டநொறில்வயப்புரவிநோன்றேர்
கூறினாரக்கராசிகுமுறினமுரசக்கொண்மூ
ஊறினவுரவுத்தானையூழிபேர்கடலையொப்ப. (எ)

பொருகடன்மகரமெண்ணினெண்ணலாம்பூட்கைபொங்கித்
திரிவனமீன்களெண்ணினெண்ணலாஞ்செம்பொற்றிண்டேர்
உருவுறுமணலையெண்ணினெண்ணலாமுரவுத்தானை
வருதிரைமரபினெண்ணினெண்ணலாம்வாயும்வாசி. (அ)

ஆறிரண்டடுத்தவெண்ணினாயிரங்குமரராவி
வேறிலாத்தோழர்வென்றியரக்கர்தம்வேந்தர்மைந்தர்
எறியதேரர்சூழ்ந்தாரிறுதியின்யாவுமுண்பான்
சீறியகாலத்தீயின்செறிசுடர்ச்சிகைகளன்னார். (கூ)

மந்திரக்கிழவர்மைந்தர்மதிநெறியமைச்சர்மக்கள்
† தந்திரத்தலைவரீன்றதனயர்கள்பிறருந்தானைக்
கந்தரத்தரம்பைமாரிற்றோன்றினராதியாயோர்
எந்திரத்தேரர்சூழ்ந்தாரீரிரண்டிலக்கம்வீரர். (க0)

தோமரமுலக்கைசூலஞ்சுடர்மழுக்குலிசந்தோட்டி
ஏமருவரிவில்வேல்கோலீட்டிவாளெழுவிட்டேறு
மாமரம்வீசுபாசமெழுமுளைவயிரத்தண்டு
காமருகணையங்குந்தங்கப்பணங்காலநேமி. (கக)

என்றிவைமுதலயாவுமெறிதருபடைகளீண்டி
மின்றிரண்டனையவாகிவெயிலொடுநிலவுவீசத்
துன்றிருந்தூளிபொங்கித்துறுதலாலிறுதிசெல்லாப்
பொன்றிணியுலகமெல்லாம்பூதலமாயமாதோ. (கஉ)

காகமுங்கழுகும்பேயுங்காலனுங்கணக்கில்காலம்
‡ சேகுறவினையிற்செய்ததீமையுந்தொடர்ந்துசெல்லப்
பாகியல்கிளவிசெவ்வாய்படைவிழிபணைத்தவேய்த்தோட்
டோகையர்மனமுந்தொக்கதும்பியுந்தொடர்ந்துசுற்ற. (கங)

உழைக்குலநோக்கினார்களுலந்தவர்க்குரியமாதர்
அழைத்தழுகுரலின்வேலையமலையினரவச்சேனை

---

* போரணி-யுத்தவேஷம். † தந்திரம்-ஈண்டு சாம, பேத, தான, தண்டம் என சதுர்விதவுபாயம். ‡ சேகுஉற-சஞ்சிதமாயிருக்க.

தழைத்தெழுமொலியிஞெப்பல்லியந்துவைத்தலால்விண்
மழைக்குரலிடியிற்சொன்னமாற்றங்கனொழிப்பமன்னோ. (கச)

வெயிற்கரமணிகள்வீசும்விரிகதிர்விழுங்கவெய்ய
அயிற்கரமணிகள்காலுமவிரொளிபருகவஃகா
எயிற்றிளம்பிறைகளீன்றவிலங்கொளியொதுங்கயாணர்
உயிர்க்குலவிரவுமன்றுபகலன்றென்றுணர்வுதோன்ற. (கரு)

ஓங்கிருந்தடங்தேர்பூண்டவுளைவயப்புரவியொல்கித்
தூங்கினவீரர்தோளுங்கண்களுமிடத்துத்துள்ள
வீங்கினமேகமெங்குங்குருதிநீர்த்துள்ளிவீழ்ப்ப
ஏங்கினகாகமார்ப்பவிருளில்விண்ணிடிப்பமாதோ. (கசு)

வெள்ளவெஞ்சேனைசூழவிண்ணுளோர்வெருவிவிம்ம
உள்ளநொந்தனுங்கிவெய்யகூற்றமுமுறுவதன்னத்
துள்ளியசுழல்கட் * பேயடோள்புடைத்தார்ப்பத்தோன்றும்
கள்ளவிழலங்கலானைக்காற்றின்சேய்வரவுகண்டான். (கஎ)

இந்திரசித்தோமற்றவ்விராவணனேயோவென்னுச்
சிந்தையினுவகைகொண்டுமுனிவுற்றகுரக்குச்சீயம்
வந்தனன்முடிந்ததன்ரேமனக்கருத்தென்னவாழ்த்திச்
சுந்தரத்தேரைநோக்கியிராமனைத்தொழுதுசொன்னான். (கஅ)

எண்ணியவிருவர்தம்முளொருவனேல்யான்முன்செய்த
புண்ணியமுளதாலெங்கோன்றவத்தொடும்பொருந்திஞனே
நண்ணினனுநின்றேன்காலனுநணுகிநின்றான்
கண்ணியகருமமின்றேமுடிக்குவென்கடிதினென்றான். (கசு)

பழியிலதுருவென்றாலும்பஃறலையரக்கனல்லன்
விழிகளாயிரமுங்கொண்டவேந்தைவென்றானுமல்லன்
மொழியின்மற்றவர்க்குமேலான்முரட்டொழின்முருகனல்லன்
அழிவிலொண்குமரன்யாரோவஞ்சனக்குன்றமன்னான். (உ0)

என்றவனுவந்துவிண்டோயிந்திரசாபமென்ன
நின்றதோரணத்தினும்பரிருந்ததோர்நீதியானை
வன்றொழிலரக்கனேக்கிவாளெயிறிலங்கநக்கான்
கொன்றதிக்குரங்குபோலாமரக்கர்தங்குழாத்தையென்றான். (உக)

அன்னதாமச்சொற்கேட்டசாரதியையகேண்மோ
இன்னதாமென்னலாமோவுலகியலிகழ்தலம்மா
மன்னனேடெதிர்ந்தவாலிகுரங்கென்றான்மற்றுமுண்டோ
சொன்னதுதுணிவிற்கொண்டுசேறியென்றுணரச்சொன்னான். (உஉ)

* பேய்கடோள் எனப் பாடமுமுண்டு.

விடந்திரண்டனையமெய்யானவ்வுரைவிளம்பக்கேளா
இடம்புகுந்திளையசெய்தவிதனெனுசீற்றமெஞ்சத்
தொடர்ந்துசென்றுலகமூன்றுந் * துருவினெனெழிவுறுமல்
கடந்துபின்குரங்கென்றேறுதுங்கருவையுங்களோவெனென்றான். (உரு)
ஆர்த்தெழுந்தரக்கர்சேனையஞ்சனைக்குரியகுன்றைப்
போர்த்ததுபொழிந்ததம்மாபொருபடைப்பருவமாரி
வேர்த்தனர்திசைகாப்பாளர்சலித்ததுவிண்ணுமண்ணும்
தார்த் † தனிவீரன்றானுந்தனிமையும்வரமேற்சார்ந்தான். (உசு)
எறிந்தனர்நிருதர்வெய்திணெய்தனபடைகள்யாவும்
முறிந்தனவீரன்மேனிமுட்டினமுகரயானை
மறிந்தனமடிந்ததேரும்வாவுமாக்குழுவுமற்றும்
நெறிந்தனவரம்பில்யாக்கையிலங்கைதன்னிலையிற்பேர. (உஎ)
காயெரிமூளிபுறகாணிற்கலந்தெனக்காற்றின்செம்மல்
ஏயெனுமளவிற்கொல்லுநிருதர்க்கோரெல்லையில்லை
போயவருயிரும்போகித்தென்புலம்படர்தல்பொய்யா
தாயிரகோடிதூதருளர்கொலோநமனுக்கம்மா. (உஅ)
வரவுற்றார்வாராநின்றார்வந்தனர்வரம்பில்வெம்போர்
பொரவுற்றபொழுதும்வீரன்மும்மடங்காற்றல்பொங்கி
எரியிற்போய்க்கதிரோனூழியிறுதியினென்னலானான்
உரவுத்தோளரக்கரெல்லாமென்பிலாவுயிர்களொத்தார். (உக)

வேறு.

பிள்ளப்பட்டனநுதலோடைக்கரிபிறழ்பொற்றேர்பரிபிழையாமல்
அள்ளப்பட்டழிகுருதிப்பொருபுனலாறகப்படிசேறாக
வள்ளப்பட்டனமகரக்கடலெனமதில்சுற்றியபதிமறலிக்கோர்
கொள்ளைப்பட்டனவுயிரென்னும்படிகொன்றானைம்புலன்வென்றானே. ()
தேரேபட்டனவென்றார்சிலர்சிலர்தெறுகட்செம்முகவயிரத்தோள்
பேரேபட்டனவென்றார்சிலர்சிலர்பரியேபட்டனபெரிதென்றார்
காரேபட்டனநுதலோடைக்கடகரியேபட்டனகடிதென்றார்
நேரேபட்டனர்பட ‡ மாடேதனிநில்லாவுயிரொடுநின்றோரே. (உக)
ஆழிப்பொருபடைநிருதப்பெருவலியடலோராய்மகளடுபேழ்வாய்த்
தாழிப்படுதயிரொத்தார்மாருதிதனிமத்தென்பதொர்தகையானான்
ஏழிப்புவனமுமிடைவாழுயிர்களுமெறிவேலினையவரினமாக
ஊழிப்பெயர்வதொர்புனலொத்தாரனலொத்தான்மாருதமொத்தானே.
கொன்றானுடன்வருகுழுவைச்சிலர்பலர்குறைகின்றாருடல்குலைகின்றார்
பின்றாநின்றனவுதிரப்பெருநதிபெருகாநின்றனவருகாரும்

* துருவுதல்-தேடுதல். † தனி-ஒப்பிலாத. ‡ மாடு-பக்கம்.

நின்றார்நின்றிலர்தனிநின்றானொருநேமித்தேரொடுமவனேரே
சென்றான்வன்றிறலயில்வாயம்புகடெரிகின்றான்விழியெரிகின்றான். ()

உற்றானிந்திரசித்துக்கிளையவனொருகாலேபலருயிருண்ணக்
கற்றானும்முகமெதிர்வைத்தானதுகண்டார்விண்ணவர் * கசிவுற்றார்
எற்றாமாறுதிநிலையென்பாரினியிமையாவிழியினையிவையொன்றோ
பெற்றாநல்லதுபெற்றாமென்றனர்பிறியாதெதிரெதிர்செறிகின்றார். ()

எய்தான்வாளிகளெரிவாயுமிழ்வனவீரேழெதிரலைபார்சோரப்
பொய்தான்மணியெழுவொன்றலன்றதுபொடியாயுதிர்வுறவடிவாளி
வெய்தாயினபலவிட்டான்வீரனும்வேறோர்படையிலன்மாறுவெங்
கைதானேபொருபடையாகத்தொடர்காலார்தேரதன்மேலானான்.(௩௩)

தேரிற்சென்றெதிர்கோல்கொள்வானுயிர்தின்றானப்பொருசெறிதிண்
பாரிற்சென்றதுபரிபட்டனவவன்வரிவிற்சிந்தியபகழிக்கோன் [டேர்
மார்பிற்சென்றனசிலபொற்றோளிடைமறைவுற்றனசிலமறவோனும்
நேரிற்சென்றவன்வயிரக்குனிசிலைபற்றிக்கொண்டெதிருறநின்றான். ()

ஒருகையாலவன்வயிரத்திண்சிலையுற்றுப்பற்றலுமுரவோனும்
இருகையாலிவன்வலியாமுன்னமதிற்றோடியதிவர்பொற்றோளான்
சுரிகையாலவனுருவிக்குத்தலுமதனைச்சொற்கொடுவருநூதன்
பொருகையாலிடைபிதிர்வித்தான்முதிர்பொறியோடும்படிபறியாவே. ()

வாளாலேபொரலுற்றானிற்றதுமண்சேராமுனம்வயிரத்திண்
தோளாலேபொரமுடுகிப்புக்கிடைதழுவிக்கோடலுமுடன்முற்றும்
நீளாரயிலெனமயிர்தைத்திடமணிநெடுவாலவனுடனியிர்வுற்று
நீளாவகைபுடைசுற்றிக்கொண்டதுபற்றிக்கொண்டனன்மேலானான். ()

பற்றிக்கொண்டவன் வடிவாளெனவொளிர்பல்லிற்றுகநிமிர் படர்கை
யால், எற்றிக்கொண்டலினிடை நின்றுமிழ்சுடரினமின்னினம் விழுவன
வென்ன, முற்றிக்குண்டல † முதலாமணியுகமுழைநாலாவிவர்குடர்நா
லக், கொற்றத்திண்சுவல்வயிரக்கைகொடுகுத்திப்புடையொரு குதிகொ
ண்டான். (௩௭)

நீத்தாயோடினவுதிரப்பெருநதிநீராகச்சிலைபாராகப் [ன்
போய்த்தாழ்செறிதசையரிசிந்தினபடிபொங்கப்பொருமுயிர்போகாமு
மீத்தாநிமிர்சுடர்வயிரக்கைகொடுபிடியாவிண்ணொடுமண்காணத்
தேய்த்தானூழியினுலகேழ்தேயினுமொருதன்புக ‡ ழிறைதேயாதான்.()

புண்டாழ்குருதியின்வெள்ளத்துயிர்கொடுபுக்கார்சிலர்சிலர்பொதிபேயி
பண்டாரத்திடையிட்டார்தம்முடல்பட்டார்சிலர்சிலர்பயமுந்தத் [ன்
திண்டாடித்திசையறியாமறுகினர்செற்றார்சிலர்சிலர்செலவற்றார் [டோர்.
கண்டார்கண்டதொர்திசையேவிசைகொடுகால்விட்டார்படைகைவிட்

* கசிவுறுதல்—மனமிளகுதல். † முதல்-எழனுருபு. ‡ இறை-கொஞ்சம்.

மீனாய்வேலையையுற்றார்சிலர்சிலர்பசுவாய்வழிதொறுமேய்வுற்றார்
ஊனார்பறவையின்வடிவுற்றார்சிலர்சிலர்நான்மறையவருருவானார்
மானார்கண்ணிளமடவாராயினர்முன்னேதங்குழல்வகிர்வுற்றார்
ஆனார்சிலர்சிலரையாநின்சரணென்றார்நின்றவரரியென்றார். (௪௦)

தந்தாரமுமுறுகிளையுந்தமையெதிர்தழுவுந்தொறுநுமதமரல்லேம்
வந்தேம்வானவரென்றேகினர்சிலர்சிலர்மானுயரெனவாய்விட்டார்
மந்தாரங்கிளர்பொழில்வாய்வண்டுகளானார்சிலர்சிலர்மருள்கொண்டார்
இந்தாரெயிறுகளிறுவித்தார்சிலரெரிபோற்குஞ்சியையிருள்வித்தார். ()

வேறு.

குண்டலக்குழைமுகக்குங்குமக்கொங்கையார்
வண்டலைத்தெழு * குழற்கற்றைகால்வருடவாய்
விண்டலத்தகவிரைக்குமுதவாய்விரிதலால்
அண்டமுற்றுளதவூரமுதபேரமலையே. (௪௨)

கதிரெழுந்தனையசெந்திருமுகக்கணவன்மா
ரெதிரெழுந்தடிவிழுந்தழுதுசோரிளநலார்
அதிநலங்கோதைசேரோதியோடன்றவூர்
உதிரமுந்தெரிகிலாதிடைபரந்தொழுகியே. (௪௩)

தாவில்வெஞ்செருநிலத்திடையுலந்தவர்தமேல்
ஓவியம்புரைநலார்விழிதொறுஞ்சிலருயிர்த்
தேவுகண்களுமிமைத்திலர்களாமிதுவெலாம்
ஆவியொன்றுடலிரண்டாயதாலேகொலாம். (௪௪)

ஓடினாருயிர்களுடல்கள்போலுதவியால்
வீடினார்வீடினார்மிடையுடற்குவைகள்வாய்
நாடினார்மடநலார்நவையிலாநண்பனைக்
கூடினாருடினாரும்பர்வாழ்கொம்பனார். (௪௫)

நீட்டுவாளனையகட்டெரிவையோர்திருவனாள்
ஆட்டிநின்றயர்வதோரறுதலைக்குறையினைக்
கூட்டிநீயோருயிர்த்துணைவனெங்கோவினைக்
காட்டுவாயாதியென்றழுதுகைகூப்பினாள். (௪௬)

எந்தினாடலையையோரெழுதருங்கொம்பனாள்
காந்தனின்றுவானுடற்கவந்தத்தினை
வேந்தனீயலசினாய்விடுதியானடமெனாப்
பூந்தளிர்க்கைகளான்மெய்யுறப்புல்லினாள். (௪௭)

---

* குழற்கற்றை கால்வருடலாவது தலைமயிரவிழ்ந்து காலளவுந் தொங்க யுத்தகளத்துக்குவந்து கணவர்மேல் விழுந்தழுகிறார்களெனக் கொள்க, அவ்வூரிலே பெண்களழுத பேரமலையெனவுமாம்.

நாடினூர்நாடியோரனைவருங்கொம்பனூர்
வாடினூர்கணவர்தம்மார்புறத்தழுவியே
வீடினூரவ்வயின்வெருவிவிண்ணவர்கடாம்
ஓடினூராசன்மாட்டணுகியின்றுரைசெய்வார். (௪௮)

வேறு.

கயன்மகிழ்கண்ணிணைகலுழிகான்றுகப்
புயன்மகிழ்புரிகுழல்பொடியளாவுற
அயன்மகன்மகன்மகனடியின்வீழ்ந்தனள்
மயன்மகள்வயிறலைத்தலறிமாழ்கினூள். (௪௯)

தாவருந்திருநகர்த்தையலார்முதல்
ஏவருமிடைவிழுந்திரங்கியேங்கினூர்
காவலன்கான்மிசைவிழுந்துகாவன்மாத்
தேவருமழுதனர்களிக்குஞ்சிந்தையார். (௫௦)

கக-வது, அட்சகுமாரன்வதைப்படலம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௯௮௪.

## ௧௨-வது, பாசப்படலம்.

அவ்வழியவ்வுரைகேட்டவாண்டகை
வெவ்விழியெரியுகவெகுளியீங்கினூன்
எவ்வழியுலகமுங்குலையவிந்திரத்
தெவ்வழிதரவுயர்விசயச்சீர்த்தியான். (௧)

அரஞ்சுடர்வேற்றன * தனுசனிற்றசொல்
உரஞ்சுடவெரியுயிர்த்தொருவனேங்கினூன்
புரஞ்சுடவரிசிலைப்பொருப்புவாங்கிய
பரஞ்சுடரொருவனைப்பொருவும்பான்மையான். (௨)

ஏறினன்விசும்பினுக்கெல்லைகாட்டுவ
ஆறிருநூறுபேய்பூண்டவாழித்தேர்
கூறினகூறினசொற்கள்கோத்தலால்
பீறினநெடுந்திசைபிளந்ததண்டமே. (௩)

வேறு.

ஆர்த்தனகழலுந் † தாரும்பேரியுமசனியஞ்ச
வேர்த்துயிர்குலையமேனிவெதும்பினனமரர்வேந்தன்
சேர்த்ததுபோருமென்றுத்தேவர்க்குந்தேவராய
மூர்த்திகடாமுந்தத்தம்யோகத்தின்முயற்சிவிட்டார். (௪)

* அநுஜன்-தம்பி. † தார்-மாலை, சேனையெனவுமாம்.

தம்பியையுன்னுந்தோறுந்தாரைநீர்ததும்புங்கண்ணான்
வம்பியல்சிலையைநோக்கிவாய்மடித்துருத்துநக்கான்
கொம்பியன்மாயவாழ்க்கைக்குரங்கினாற்குறங்காவாற்றல்
எம்பியோதேய்ந்தானெந்தைபுகழன்றோதேய்ந்ததென்றான். (௫

வேறிரண்டனவும்வில்லுமிடைந்தவும்வெற்பென்றாலும்
கூறிரண்டாக்கும்வாட்கைக்குழுவையுங்குணிக்கலாற்றேம்
சேறிரண்டருகுசெய்யுஞ்செறிமதச்சிறுகண்யானை
ஆறிரண்டஞ்சுநூற்றினிரட்டிதேர்த்தொகையுமஃதே. (௬

ஆயமாத்தானைதான்வந்தண்மியதண்மவேனைத்
தீயவாணிருதர்வேந்தர்சேர்ந்தவர்சேரத்தேரின்
ஏயெனுமளவின்வந்தானிராவணனிருந்த * யாணர்
வாயிறோய்கோயில்புக்கானருவிசோர்வயிரக்கண்ணான். (௭)

தாளிணைவிழுந்தான்றம்பிக்கிரங்கினான்றறுகணானும்
தோளிணைபற்றியேந்தித்தழுவினனழுதுசோர்ந்தான்
வாளிணைநெடுங்கண்மாதர்வயிறலைத்தலறிமாழ்க
மீளிபோன்மொய்ம்பினானும்விலக்கினன்விளம்பலுற்றான். (௮)

ஒன்றுநீயுறுதியோராயுற்றிருந்துளையகிற்றி
வன்றிறற்குரங்கினாற்றன்மரபுளியுணர்ந்துமன்றே
சென்றுநீர்பொருதிரென்றுதிறத்திறஞ்செலுத்தித்தேயக்
கொன்றனைநீயேயன்றோவரக்கர்தங்குழுவையென்றான். (௯)

கிங்கரர்சம்புமாலிகேடிலாவைவரென்றிப்
பைங்கழலரக்கரோடுமுடன்சென்றபகுதிச்சேனை
இங்கொருவருமீண்டார்தாமில்லையேற்குரங்கதெந்தாய்
சங்கரனயன்மாலென்பார்தாமெனுந்தகையதாமே. (௧௦)

திக்கயவலியுமேனுடிரிபுரந்தீயச்செற்ற
முக்கணன்கயிலையோடுமுலகொருமூன்றும்வென்றாய்
அக்கனைக்கொன்றுநின்றகுரங்கினையாற்றல்காண்டி
புக்கினிவென்றுமென்றாற்புலம்பன்றிப்புலமைத்தாமோ. (௧௧)

ஆயினுமையநொய்தினண்டொழிற்குரங்கையானே
ஏயெனுமளவிற்பற்றித்தருகுவெனிடரொன்றொன்றும்
நீயினியுழக்கற்பாலையல்லைநீடிருத்தியென்னாப்
போயினனமரர்கோவைப்புகழொடுகொண்டுபோந்தான். (௧௨)

உடைந்தவலிருஞ்சோற்றுப்பலுருக்கொடக்கதிர்க்குழாங்கள்
மிடைந்தனமிலைச்சியாங்குமெய்யணிபலவுமின்னக்
குடைந்துவெம்பகைவரூன்றோய்கொற்றப்போர்வாள்வில்வீச
அடைந்தகாரரக்கர்தானையகலிடமிடமின்றென்ன. (௧௩)

* யாணர்-அழகான.

ஆழியந்தேருமாவுமரக்கருமுருக்குஞ்செங்கட்
சூழிவெங்கோபமாவுந்துவன்றியகிருதர்சேனை
ஊழிவெங்கடலிற்சுற்றவொருதனிநவெணின்ற
பாழிமாமேருவொத்தான்வீரத்தின்பான்மைதீர்ப்பான். (கச)

சென்றனனென்பமன்னோதிசைகளோடுலகமெல்லாம்
வென்றவனிவனென்றாலும்வீரத்தேநின்றவீரன்
அன்றதுகண்டவாழியனுமனையமரினாற்றல்
நன்றெனவுவகைகொண்டான்யாவருநடுக்கமுற்றார். (க௫)

இலைகுலாம்பூணினானுமிரும்பிணக்குருதிவீரத்
தலைகில்வெம்படைகடெற்றியளவிடற்கரியவாகி
மலைகளுங்கடலும்யாறுங்கானமும்பெற்றுமற்றோர்
உலகமேயொத்ததம்மாபோர்ப்பெருங்களமென்றான். (கசு)

வெப்படைகில்லாநெஞ்சிற்சிறியதோர்விம்மல்கொண்டான்
அப்படைவேலையன்னபெருமையராற்றலோடும்
ஒப்படைகில்லாரெல்லாமுலந்தனர்குரங்குமொன்றே
எப்படைகொண்டுவெல்வதிராமன்வந்தெதிர்க்கினென்றான். (கஎ)

கண்ணனாருயிரேயொப்பார்கைப்படைக்கலத்திற்காப்பார்
எண்ணலாந்தகைமையில்லாரிறந்திடைக்கிடந்தார்தம்மை
மண்ணுளேநோக்கிநின்றுவாய்மடித்துருத்துமாயாப்
புண்ணுளேகோலிட்டன்னமானத்தாற்புழுங்குகின்றான். (கஅ)

கானிடையத்தைக்குற்றகுற்றமுங்கரனார்பாடும்
யானுடையெம்பிவீந்தவிடுக்கணும்பிறவுமெல்லாம்
மானிடரிருவரானும்வானரமொன்றினானும்
ஆனிடத்துளவென்வீரமழகிற்றேயம்மவென்றான். (கசு)

நீப்புண்டவுயிரவாகிநெருப்புண்டகிறத்திற்றோன்றி
ஈர்ப்புண்டற்கரியவாயபிணக்குவடிடறச்செல்வான்
தேய்ப்புண்டதம்பியாக்கைசிவப்புண்டகண்கடீயில்
காய்ப்புண்டசெம்பிற்றோன்றக்கறுப்புண்டமனத்தன்கண்டான். (உ௦)

தாருகன்குருதியன்னதருதியிற்றனிமாச்சீயம்
கூருகிர்கிளைத்தகொற்றக்கனகன்மெய்க்குழம்பிற்றோன்றத்
தேருகக்கையின்வீரச்சிலையுகவயிரச்செங்கண்
நீருகக்குருதிசிந்தநெருப்புகவயிர்த்துநின்றான். (உக)

வெவ்விலையயில்வேலுந்தைவெம்மையைக்கருதிநோக்கி
வவ்வுதல்கூற்றுமாற்றான்மாறுமாறுலகின்வாழ்வார்
அவ்வுலகத்துளாருமஞ்சுவரொளிக்கவையா
எவ்வுலகத்தையுற்றாயெம்மைநீத்தெளிதினெந்தாய். (உஉ)

ஆற்றலனை யனுகியறிவழிந்தயரும்வேலை
சீற்றமென்றொன்றுதானேமேனிமிர்செலவிற்றூகித்
தோற்றியதன்பகோரையையுள்ளூறத்தூரந்ததம்மா
ஏற்றஞ்சாலாணியாணியெதிர்செலக்கடாயதென்ன. (உ௫)

வேறு.

ஈண்டிவைநிகழ்வுழியிரவிதேரெனத்
தூண்டுறுதேரின்மேற்றோன்றுந்தோன்றலை
மூண்டெழுப்புரஞ்சுடமுடுகுமீசனின்
ஆண்டகைவனைகழலநுமனேகினான். (உ௬)

வேறு.

வென்றேனிதன்முன்சிலவீரரையென்னும்வெம்மை
அன்றேமுடுகிக்கடிதெய்தவழைத்ததம்மா
ஒன்றேயினிவெல்லுதரேற்பதடுத்ததுள்ளத்
தின்றேசமையும்மிவனிந்திரசித்துவென்பான். (உ௭)

* கட்டேறுகறுங்கமழ்கண்ணியிக்காளையென்கைப்
பட்டாலதுவேயவிராவணன்பாடுமாகும்
கெட்டோடுமெனவெண்ணியக்கேடருங்கற்பினானை
† விட்டேகுமதன்றியரக்கரும்வெம்மைதீர்வார். (உ௮)

ஒன்றேவிதனுன்வருமூதியமொண்மையானைக்
கொன்றேனெனினிந்திரனுந்துயர்க்கோளுநீங்கும்
இன்றேகடிகெட்டதரக்கரிலங்கையானே
வென்றேனவிராவணன்றன்னையும்வேறொடென்றான். (உ௯)

அக்காலையரக்கருமானையுந்தேருமாவும்
முக்காலுலகம்மொருமூன்றையும்வென்றுமுற்றிப்
புக்கானின்முன்புக்குயர்பூசல்பெருக்கும்வேலை
மிக்கானும்வெகுண்டெடார்மராமரங்கொண்டுமிக்கான். (உ௮)

வேறு.

உதைப்புண்டனயானையுருண்டனயானையொன்றோ
மிதிப்புண்டனயானைவிழுந்தனயானைமேன்மேல்
புதைப்புண்டனயானைபுரண்டனயானைபோரால்
வதைப்புண்டனயானைமறிந்தனயானைமண்மேல். (உ௯)

வேறு.

முடிந்ததேர்க்குலமுறிந்தனதேர்க்குலமூரணிற்
றிடிந்ததேர்க்குலமிற்றனதேர்க்குலமச்சிற்
றொடிந்ததேர்க்குலமுக்கனதேர்க்குலநெக்குப்
படிந்ததேர்க்குலம்பறிந்தனதேர்க்குலம்படியில். (௩0)

* கட்டேறுகறுங்கமழ்-கறுங்கள்-தேறு-தெளிவு-கமழென்பதுமாம்.
† விட்டேகும்-விட்டுப்போவான்.

சிரனெரிந்தவுங்கண்மணிசிதைந்தவுஞ்செறிதாட்
டரனெரிந்தவுமுதுகிறச்சாய்ந்தவுந்தார்ப்பூண்
உரனெரிந்தவுமுதிரங்களுமிழ்ந்தவுமொண்பொற்
குரனெரிந்தவுங்கொடுங்கழுத்திழந்தவுங்குதிரை. (௩௧)

பிடியுண்டார்களும்பிளத்தலுண்டார்களும்பெருந்தோள்
ஒடியுண்டார்களுந்தலையுடைந்தார்களுமுருவக்
கடியுண்டார்களுங்கழுத்திழந்தார்களுங்கரத்தால்
அடியுண்டார்களுமச்சமுண்டார்களுமரக்கர். (௩௨)

வட்டவெஞ்சிலையோட்டியவாளியும்வயவர்
விட்டவிட்டவெம்படைகளும்வீரன்மேல்வீழ்ந்த
சுட்டவல்லிரும்படைகலைச்சுடுகலாதனபோல்
பட்டபட்டனதிசையொடும்பொறியொடும்பரந்த. (௩௩)

சிகையெழுஞ்சுடர்வாளிகளிந்திரசித்து
மிகையெழுஞ்சினத்தநுமன்மேல்விட்டனவெந்து
புகையெழுந்தனவெரிந்தனகரிந்தனபோக
நகையெழுந்தனவழிந்தனவானுளோர்நாட்டம். (௩௪)

தேரும்யானையும்புரவியுமரக்கருஞ்சிந்திப்
பாரின்வீழ்தலுந்தானொருதனிநின்றபணைத்தோள்
வீரவீரனுமுறுவலும்வெகுளியும்வீங்க
வாரும்வாருமென்றழைக்கின்றவநுமன்மேல்வந்தான். (௩௫)

புரந்தரன்றலைபொதிரெறிந்திடப்புயல்வானில்
பரந்தபல்லுருமேற்றினம்வெறித்துயிர்பதைப்ப
* நிரந்தரந்தலைநெடுநிலஞ்சுமந்தபேருரகன்
சிரந்துளங்கிடவரக்கன்வெஞ்சிலையைநாண்டெறித்தான். (௩௬)

ஆண்டநாயகன்றாதனுமயனுடையண்டம்
கீண்டதாமெனக்கிரியுகநெடுநிலங்கிழிய
நீண்டமாதிரம்வெடிபடவவனெடுஞ்சிலையில்
பூண்டநாணிறத்தன்னெழிற்றோள்களைப்புடைத்தான். (௩௭)

நல்லைநல்லையிஞ்ஞாலத்துணின்னொக்கநல்லார்
இல்லையில்லையாலெறுழ்வலிக்கியாரொடுமிகல
வல்லைவல்லையின்றுகுநீபடைத்துளவாழ்நாட்
கெல்லையெல்லையென்றிந்திரசித்துவுமிசைத்தான். (௩௮)

நாளுக்கெல்லையுநிருதராயுலகத்தைநலியும்
† கோளுக்கெல்லையுங்கொடுந்தொழிற்கெல்லையுங்கொடியீர்
வாளுக்கெல்லையும்வந்தனவகைகொடுவந்தேன்
தோளுக்கெல்லையொன்றில்லையென்றநுமனுஞ்சொன்னான். (௩௯)

---

* நிரந்தரம்-எப்போதும். † கோளுக்கு-கொள்கைக்கு.

இச்சிரத்தையைத்தொலைப்பெனென்றிந்திரன்பகைஞன்
பச்சிரத்தம்வந்தொழுகிடவானவர்பதைப்ப
வச்சிரத்தினும்வலியனவயிரவான்கணைகள்
அச்சிரத்தினுமார்பினுமழுத்தலுமநுமன். (௪௦)

குறிதுவாவென்றுகுறைந்திலனெடுஞ்சினங்கொண்டான்
மறியும்வெண்டிரைமாகடலுலகெலாம்வழங்கிச்
சிறியதாய்சொன்னதிருமொழிசென்னியிற்சூடி
நெறியினின்றதன்னாயகன்புகழெனநிமிர்ந்தான். (௪௧)

பாகமல்லதுகண்டிலனநுமனைப்பார்த்தான்
மாகவன்றிசைபத்தொடும்வரம்பிலாவுலகிற்
ஏகநாதனையெறுழ்வலித்தோள்பிடித்தீர்த்த
மேகநாதனுமயங்கினனெனவியந்தான். (௪௨)

நீண்டவீரனுநெடுந்தடங்கைகளைநீட்டி
ஈண்டுவெஞ்சரமெய்தனவெய்திடாவண்ணம்
மீண்டுபோய்விழவீசியாங்கவன்மிடற்றடந்தேர்
பூண்டமாவொடுசாரதிதரைப்பட * புடைத்தான். (௪௩)

ஊழிக்காற்றன்னவொருபரித்தேரவனுதவப்
பாழித்தோளவனத்தடந்தேர்மிசைப்பாய்ந்தான்
ஆழிப்பல்படையனையனவளப்பருஞ்சரத்தால்
வாழிப்போர்வலிமாருதிமேனியைமறைத்தான். (௪௪)

உற்றவாளிகளுரத்தடங்கினவுகவுதருக்
கொற்றமாருதியனையவன்றேர்மிசைக்குதித்துப்
பற்றிவன்கையாற்பறித்தெழுந்துலகெலாம்பலகால்
முற்றவென்றபோர்மூரிவெஞ்சிலையினைமுறித்தான். (௪௫)

முறிந்தவில்லின்வல்லோசைபோய்முடிவதன்முன்னர்
மறிந்துபோரிடைவழிக்கொள்வான்வயிரவாட்படையால்
செறிந்தவான்பெருமலைகளைச்சிறகறச்செயிரா
எறிந்தவிந்திரனிட்டவார்சிலையினையெடுத்தான். (௪௬)

நூறுநூறுபோர்வாளியோர்தொடைகொடுநொய்தின்
மாறில்வெஞ்சினத்திராவணன்மகன்சிலை † வளைத்தான்
ஊறுதன்னெடுமேனியிற்பலபடவொல்கி
ஏறுசேவகன்றாதனுஞ்சிறிதுபோதிருந்தான். (௪௭)

ஆர்த்தவானவராவலங்கொளீஇயறிவழிந்தார்
பார்த்தமாருதிதாருவொன்றங்கையிற்பற்றித்
தூர்த்தவாளிகண்முறைமுறைதுணிபடச்சுற்றிப்
போர்த்தபொன்னெடுமணிமுடித்தலையிடைப்புடைத்தான். (௪௮)

---

* புதைத்தான் என்றும் பாடம். † வளைத்தானென்பதை வளைத்தெய்தானெனக் கூட்டுக.

ாரமாமரமுடியுடைத்தலையிடைப்படலும்
ாரையின்னெடுங்கற்றைகள்சொரிவனதயங்க
ூரமால்வரையருவியினழிகொழுங்குருதி
'சாரதின்றுடறுளங்கினனமரரைத்தொலைத்தான். (௪௯)

ன்றுபோதம்வந்துறுதலுநிறைபிறையெயிற்றைத்
தின்றுதேவருமுனிவருமவுணருந்திகைப்பக்
நன்றுபோனெடுமாருதியாகமுங்குலுங்க
ஒன்றுபோல்வனவாயிரம்பகழிகோத்துய்த்தான். (௫௦)

உய்த்தவெஞ்சரமுரத்தினுங்கரத்தினுமொளிப்பக்
கைத்தசிந்தையன்மாருதிகனிதவகனின்றான்
வித்தகன்சிலைவிடுகணைவிசையினுங்கடுகி
அத்தடம்பெருந்தேரொடுமெடுத்தெறிந்தார்த்தான். (௫௧)

கண்ணின்மீச்சென்றவிமையிடைக் * கலப்பதன்முன்னே
எண்ணின்மீச்சென்றவெறுழ்வலித்திறலுடையிகலோன்
புண்ணின்மீச்சென்றுபொழிபுனல்பசும்புலால்பொடிப்ப
விண்ணின்மீச்சென்றுதேரொடும்பார்மிசைவிழுந்தான். (௫௨)

விழுந்துபாரடையாமுனமின்னெனுமெயிற்றான்
எழுந்துமாவிசும்பெய்தினனிடையவன்படையில்
செழுந்தண்மாமணித்தேர்க்குலம்யானையுஞ்சிதைய
உழுந்துபேர்வதன்முன்னெடுமாருதியுதைத்தான். (௫௩)

ஏறுதேரிலனெதிர்நிற்குமுரணிலனெரியின்
சீறுவெஞ்சினந்திருகுகின்றான்றிரிவானும்
வேறுசெய்வதோர்வினைபிறிதின்மையின்விரிஞ்சன்
மாறிலாப்பெரும்படைக்கலந்தொடுப்பதாய்மதித்தான். (௫௪)

பூவும்பூசிற † வயினியுந்தீபமும்புகையும்
தாவில்பாவனையாற்கொடுத்தருச்சனைசமைத்தான்
தேவியானையுமுலகமுந்திருத்தியதெய்வக்
கோவினுன்முகன்படைக்கலந்தடக்கையிற்கொண்டான். (௫௫)

கொண்டகொற்றவெஞ்சிலை ‡ நெடுநாணொடுகூட்டிச்
சண்டவேகத்தமாருதிதோளொடுஞ்சாத்தி
மண்டுளங்கிடமாதிரந்துளங்கிடமதிதோய்
விண்டுளங்கிடமேருவுந்துளங்கிடவிட்டான். (௫௬)

தணிப்பரும்பெரும்படைக்கலந்தழலுமிழ்தறுகட்
பணிக்குலங்களுக்கரசினதுருவினைப்பற்றித்

* கலப்பதன்முன்னே-கூடுவதன்முன்னே என்றால் இமைக்குமுன்னே. † அயினியும்-பிரசாதவெண்சோறும். ‡ நெடுநாண்-நீண்டநாரி.

துணுக்கமுற்றுயர்கலுழனுநடுக்குறச்சுற்றிப்
பிணித்ததப்பெருமாருதிதோள்களைப்பிறங்க. (௫௭)

திண்ணென்யாக்கையைத்திசைமுகன்படைசென்றுதிருக
அண்ணன்மாருதியன்றுதன்பின்சென்றவறத்தின்
கண்ணினீரொடுங்கனகதோரணத்தொடுங்கடைநாள்
தண்ணென்மாமதிகோளொடுஞ்சாய்ந்தெனச்சாய்ந்தான். (௫௮)

சாய்ந்தமாருதிசதுமுகன்படையெனுந்தன்மை
ஆய்ந்துமற்றிதனுணையயவமதித்தகறல்
ஏய்ந்ததன்றெனவெண்ணினன்கண்முகிழ்த்திருந்தான்
ஓய்ந்ததாமிவன்வலியெனவரக்கன்வந்துற்றான். (௫௯)

உற்றகாலையினுயிர்கொடுதிசைதொறுமொதுங்கி
அற்றநோக்கினர்நிற்கின்றவாளெயிற்றரக்கர்
சுற்றும்வந்துடல்சுற்றியதொளையெயிற்றரவைப்
பற்றியீர்த்தனரார்த்தனர்தெழித்தனர்பலரால். (௬௦)

குரக்குநல்வலங்குறைந்ததென்றுவலங்கொட்டி
இரைக்குமாநகரெறிகடலொத்ததெம்மருங்கும்
திரைக்குமாசுணம்வாசுகியொத்ததுதேவர்
அரக்கரொத்தனர்மந்தரமொத்தனனநுமன். (௬௧)

கறுத்தமாசுணங்கனகமாமேனியைக்கட்ட
அறத்துக்காங்கொருதனித்துணையாநின்றவனுமன்
மறத்துமாருதம்பொருதநாள்வாளராவரசு
புறத்துச்சுற்றியமேருமால்வரையையும்போன்றான். (௬௨)

வந்திரைத்தனர்மைந்தருமகளிருமழைபோல்
* அந்தரத்தினும்விசும்பினுந்திசைதொறுமார்ப்பார்
முந்தியுற்றதோருவகைக்கோர்கரையிலைமொழியின்
இந்திரன்பிணிப்புண்டாளொத்ததவ்விலங்கை. (௬௩)

௧௨-வது, பாசப்படலம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௧௦௪௭.

---

* அந்தரத்தினும் விசும்பினும்-அவ்விடத்திலும் ஆகாசத்திலும்.

## கரு-வது, பிணிவீட்டுபடலம்.

அனுமாரைக் கட்டினது விடுதல்.

வேறு.

எய்யுமினீருமினெறிமின்போழுமின்
கொய்யுமின்குடரினைக்கூறுகூறுகள்
செய்யுமினுலகிடைத்தேய்மின்றின்னுமின்
உய்யுமேலில்லைநம்முயிரென்றோடுவார். (க)

மைத்தடங்கண்ணியர்மைந்தர்யாவரும்
பைத்தலையரவெனக்கனன்றுபைதலை
இத்தனைபொழுதுகொண்டிருப்பதோவெனு
மொய்த்தனர்கொலைசெயமுயல்கின்றார்சிலர். (உ)

நச்சடைபடைகளானலியுமீட்டதோ
வச்சிரமுடன்மறிகடலின்வாய்மடுத்
துச்சியினழுத்துமினுருத்தவென்றெனின்
இச்சிடையிடுமெனக்கிளக்கின்றார்சிலர். (ங)

எந்தையையெம்பியையெம்முனோர்களைத்
தந்தனைபோவெனத்தடுக்கின்றார்பலர்
அந்தரத்தமரர்தமாணையாலிவன்
வந்தவென்றுயிர்கொளமறுகினார்பலர். (ச)

ஒங்கலம்பெருவலியுயிரினன்பழை
நீங்கலமின்றெடுநீங்கினுமினி
ஏங்கலமிவன்சிரத்திருந்தலாற்றிரு
வாங்கலமென்றழுமாதரார்பலர். (ரு)

கொண்டனரெதிர்செலுங்கொற்றமாநகர்
அண்டமுற்றதுநெடிதார்க்குமார்ப்பது
கண்டமுற்றுளவருங்கணவர்க்கேங்கிய
குண்டலமுகத்தியர்க்குவகைகூரவே. (சு)

வடியுடைக்கனற்படைவயவர்மால்கரி
கொடியுடைத்தேர்பரிகொண்டுவீசலின்
இடிபடச்சிதைந்தமால்வரையினில்லெலாம்
பொடிபடக்கிடந்தனகண்டுபோயினான். (எ)

* முயிறலைத்தெழுமுதுமரத்தின்மொய்ம்புதோள்
கயிறலைப்புண்டதுகண்டுகொண்டிலா

---

* முயிறு-ஒருவகைச்செவ்வெறும்புகள்.

தெயிறலைத்தெழுமிதழரக்கரேழையர்
வயிறலைத்திரியலின்மயங்கினார்பலர். (௮)

ஆர்ப்புறவஞ்சினாடங்கினார்பலர்
போர்ப்புறச்செயலினைப்புகல்கின்றார்பலர்
பார்ப்புறப்பார்ப்புறப்பயத்தினற்பறைத்
தூர்ப்புறத்திரியலுற்றோடுவார்பலர். (௯)

காந்துறுகதமெழுயிற்றரவின்கட்டொரு
பூந்துணர்சேர்த்தெனப்பொலியும்வாண்முகம்
தேர்ந்துறுபொருள்பெறவெண்ணிச்செய்யுமின்
வேந்துறல்பழுதெனவிளம்புவார்சிலர். (௧௦)

ஒளிவருநாகத்துக்கொல்கியன்றுதன்
இளிவரலின்றுபின்னெண்ணம்வேறெனக்
களிவருசிந்தையாற்காண்டிநங்களைச்
சுளிகிலையாமெனத்தொழுகின்றார்சிலர். (௧௧)

பைங்கழலநுமனைப்பிணித்தபாந்தளைக்
கிங்கரரொருபுடைகிளர்ந்துபற்றினார்
ஐம்பதினாயிரரளவிலாற்றலர்
மொய்ம்பினிநெறுழ்வலிக் * கருளன்மும்மையார். (௧௨)

திண்டிறலரக்கர்தஞ்செருக்குச்சிந்துவான்
தண்டலிறன்னுருக்கரந்ததன்மையான்
மண்டமர்தொடங்கினன்வானரத்துருக்
கொண்டனனந்தகன்கொல்லென்றார்பலர். (௧௩)

அரமியத்தலந்தொறுமம்பொன்மாளிகைத்
தரமுறுநிலைதொறுஞ் † சாளரந்தொறும்
முரசெறிகடைதொறுமிரைத்துமொய்த்தனர்
நிரைவளைமகளிருநிரைந்தமைந்தரும். (௧௪)

கயிலையிலொருதனிக்கணிச்சிவானவன்
மயிலியற்சீதைதன்கற்பின்மாட்சியான்
எயிலுடைத்திருநகர்சிதைப்பவெய்தினன்
அயிலெயிற்றொருகுரங்காயென்பார்பலர். (௧௫)

அரம்பையர்விஞ்சைநாட்டளகவல்லியர்
நரம்பினுமினியசொனாகநாடியர்
கரும்பியல்சித்தியரியக்கர்கன்னியர்
வரம்பறுசும்மையர்தலைமயங்கினார். (௧௬)

---

* கருளன் - கருடன்.
† சாளரம் - சன்னல்.

நீரிடைக்கண்டுயினெடியநேமியும்
தாருடைத்தனிமலருலகின்றாதையும்
ஒருடற்கொண்டுதம்முருவமாற்றினர்
பாரிடைப்புகுந்தனர்பகைத்தென்பார்பலர். (கஎ)

அரக்கருமரக்கியர்குழாமுமல்லவர்
கரக்கிலர்நெடுமழைக்கண்ணினீரது
விரைக்குழற்சீதைதன்மெலிவுநோக்கியோ
இரக்கமோவறத்தினதெண்மையேகொலோ. (கஅ)

ஆண்டொழிலநுமனுமவரொடேகினான்
மீண்டிலன்வேறிலன்விரும்பலுற்றிலன்
ஈண்டிதுவேதொடர்ந்திலங்கைவேந்தனைக்
காண்டலேநலமெனக்கருத்தினெண்ணினான். (ககூ)

எந்தையதருளினுமிராமன்சேவடி
சிந்தைசெய்நலத்தினுஞ்சீதைவானவர்
தந்துளவரத்தினுந்தறுகட்பாசமும்
சிந்துவெனபர்வுறுசிந்தைசீரிதால். (உ0)

வளையெயிற்றரக்கனையுற்றமந்திரத்
தளவுறுமுதியருமறியவாணையால்
விளைவினைவிளம்பினன்மிதிலைநாடியை
இளகினனென்வயினீதலேயுமால். (உக)

அல்லதூஉமவனுடைத்துணைவராயினார்க்
கெல்லையுந்தெரிவுறுமெண்ணுந்தேறலாம்
வல்லவனிலைமையுமனமுந்தேறலாம்
சொல்லுகமுகமெனுந்தூதுசொல்லவே. (உஉ)

வாலிதன்னிறுதியுமரத்துக்குற்றதும்
கூலவெஞ்சேனையின் * குணிப்பிலாமையும்
மேலவன்காதலன்வலியுமெய்ம்மையான்
நீணிறத்திராவணனெஞ்சினிற்குமால். (உங)

ஆதலானரக்கனையெய்தியாற்றலும்
நீதியுமனக்கொளாநிறுவிநின்றவும்
பாதியின்மேற்செலநூறிப்பைப்பையப்
போதலேகருமமென்றநுமன்போயினான். (உச)

கடவுளர்க்கரசனைக்கடந்ததோன்றலும்
புடைவரும்பெரும்படைப்புணரிபோர்த்தெழ

* குணிப்பிலாமை - அளவிலாமை.

விடைபிணிப்புண்டதுபோலும்வீரனைக்
குடைகெழுமன்னனிற்கொண்டுபோயினான். (௨௫)

தூதுவரோடினர்தொழுதுதொல்லைநாள்
மாதிரங்கடந்தவற்குறுமிமன்னநின்
காதலன்மரைமலர்க்கடவுள்வாளியால்
ஏதில்வானரம்பிணிப்புண்டதாமென்றார். (௨௬)

கேட்டலுங்கிளர்சுடர்கேட்டவாறென
வீட்டிருள்விழுங்கியமார்பின்யானையின்
கோட்டெதிர்பொருதபோராரங்கொண்டெதிர்
நீட்டினனுவகையினிமிர்ந்தநெஞ்சினான். (௨௭)

எல்லையிலுவகையாலிவர்ந்ததோளினன்
புல்லுறமலர்ந்தகட்குமுதப்பூவினன்
ஒல்லையிலோடிநீருரைத்தென்னாணையால்
கொல்லலைதருகெனக்கூறுவீரென்றான் (௨௮)

அவ்வுரைதூதருமாணையால்வரும்
தெவ்வுரைநீக்கினானறியச்செப்பினார்
இவ்வுரைநிகழ்வுழியிருந்தசீதையாம்
வெவ்வுரைநீங்கினாணிலைவிளம்புவாம். (௨௯)

இறுத்தனன்கடிபொழிலெண்ணிலோர்பட
ஒறுத்தனனென்றுகொண்டுவக்கின்றாருயிர்
வெறுத்தனள்சோர்வுறவீரற்குற்றதைக்
கறுத்தவில்சிந்தையாள்கவன்றுகூறினாள். (௩0)

வேறு.

ஓவியம்புகையுண்டதுபோலொளிர்
பூவின்மெல்லியன்மேனிபொடியுறப்
பாவிவேடன்கைப்பார்ப்புறப்பேதுறும்
தூவியன்னமன்னாளிவைசொல்லினாள். (௩௧)

உற்றுண்டாயவிசும்பையுருவினாய்
முற்றுண்டாய்கலையாவையுமுற்றுறக்
கற்றுண்டாயொருகள்ளவரக்கனால்
பற்றுண்டாயிதுவோவறப்பான்மையே. (௩௨)

கடர்கடந்துபுகுந்தனை * கண்டகர்
உடர்கடந்தினினூழிகடந்திலை
அடர்கடந்ததிரள்புயத்தையநீ
இடர்கடந்தனைவந்திடர்மேலுமே. (௩௩)

* கண்டகர் - வஞ்சகர்.

ஆழிகாட்டியென்றனுயிர்காட்டினாய்க்
கூழிகாட்டுவெனென்றுரைத்தேனது
வாழிகாட்டுமென்றுண்டுன்வரைப்புயப்
பாழிகாட்டியரும்பழிகாட்டினாய். (௩௪)

கண்டுபோயினைநீநெறிகாட்டிட
மண்டுபோரினரக்கனைமாய்த்தெனைக்
கொண்டுமன்னவன்போமெனுங்கொள்கையைத்
* தண்டினாயெனக்காருயிர்தந்தநீ. (௩௫)

எயப்பன்னினளின்னனதன்னுயிர்
தேயக்கன்றுபிடியுறத்தீங்குறு
தாயைப்போலத்தளர்ந்துமயர்ந்தனள்
தீயைச்சுட்டதொர்கற்பெனுந்தீயினாள். (௩௬)

பெருந்தகைப்பெரியோனைப்பிணித்தபோர்
முருந்தன்மற்றையுலகொருமூன்றையும்
அருந்தவப்பயனாலரசாள்கின்றான்
இருந்தவப்பெருங்கோயில்சென்றெய்தினான். (௩௭)

வேறு.

† தலங்கண்மூன்றிற்கும்பிறிதொருமதிதழைத்தென்ன
அலங்கல்வெண்குடைத்தண்ணிழலவிரொளிபரப்ப
வலங்கொடோளினான்மண்ணின்றுவானுறவெடுத்த
பொலங்கொண்மாமணிவெள்ளியங்குன்றெனப்பொலிய. (௩௮)

புள்ளுயர்த்தவன்றிகிரியும்புரந்தரனயிலும்
தள்ளின்முக்கணன் ‡ கணிச்சியுந்தாக்கியதழும்பும்
கள்ளுயிர்க்குமென்குழலியர்முகிழ்விரற்கதிர்வாள்
வள்ளுகிர்ப்பெருங்குறிகளும்புயங்களின்வயங்க. (௩௯)

துன்றுசெம்மயிர்ச்சுடர்நெடுங்கற்றைகள்சுற்றி
நின்றுதிக்குறநிரல்படக்கதிர்க்குழாநிமிர
ஒன்றுசீற்றத்தினுயிர்ப்பெனும்பெரும்புகையுயிர்ப்பத்
தென்றிசைக்குமோர்வடவனறிருத்தியதென்ன. (௪௰)

மரகதக்கொழுங்கதிரொடுமாணிக்கநெடுவாள்
நரகதேயத்துணடுக்குறுவிருளையுநக்கச்
சிரமனைத்தையுந்திசைதொறுந்திசைதொறுஞ்செலுத்தி
உரகர்கோனிணிதரசுவீற்றிருந்தனனெனப்ப. (௪௧)

* தண்டினாய்-தடைசெய்தாய்.
† தலங்கண்மூன்று-திரிலோகம். ‡ கணிச்சி-சூலாயுதம்.

குவித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச்
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றோளொடுதயங்கப்
புவித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
கவித்துமாலிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப. (சஉ)

சிந்துராகத்தின்செறிதுகிற்கச்சொடுசெறியப்
பந்திவெண்முத்தினணிகலன்முழுநிலாப்பரப்ப
இந்துவெண்குடைநீழலிற்றாரகையினம்பூண்
டந்திவானுடுத்தல்லுவீற்றிருந்ததாமென்ன. (சங)

வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைக்குந்தனியுறையுளாமுழுமுகந்திசையின்
கண்வைக்குந்தொறுங்களிற்றொடுமாதிரங்காக்கும்
எண்மர்க்கும்மற்றை * யிருவர்க்கும்பெரும்பயமியற்ற. (சச)

† ஏகநாயகன்றேவியையெதிர்ந்ததற்பின்னை
நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகும்
மாகமால்விசும்பீறெனநடுவணவரைப்பில்
தோகைமாதர்கண்மைந்தரிற்றோன்றினர்சுற்ற. (சரு)

வானரங்களும்வானவரிருவருமனிதர்
ஆனபுன்றொழிலோரெனவிகழ்கின்றவவரும்
ஏனைநின்றவரிருடியர்சிலரொழிந்தியாரும்
தானவின்றவேலரக்கர்தங்குழுவொடுசுற்ற. (சசு)

நரம்புகண்ணகத்துள்ளுறைநறைநிறைபாண்டில்
நிரம்புசில்லரிபாணியுங்குறடுநின்றிசைப்ப
அரம்பைமங்கையரமிழ்துகுத்தாலன்னபாடல்
வரம்பிலின்னிசைசெவிதொறுஞ்செவிதொறும்வழங்க. (சஎ)

கூடுபாணியினிசையொடுமுழவொடுங்கூடத்
தோடுசீறடிவிழிமனங்கையொடுதொடரும்
ஆடனூக்குறினருந்தவமுனிவர்க்குமமைந்த
வீடுமீட்குறுமேனகைமேனகைவிளங்க. (சஅ)

ஊடினார்முகத்துறுநறையொருமுகமுண்ணக்
கூடினார்முகக்களிநறையொருமுகங்குடிப்பப்
பாடினார்முகத்தாரமுதொருமுகம்பருக
ஆடினார்முகத்தணியமுதொருமுகமருந்த. (சகூ)

தேவரோடிருந்தாசியலொருமுகஞ்செலுத்த
மூவரோடுமோமந்திரமொருமுகமுயலப்

---

* இருவர்-சேடன் துருவன். † ஏகநாயன்-ஒன்றானகடவுள்.

பாவகாரிதன்பாவகமொருமுகம்பயிலப்
* பூவைசானகியுருவொடுமொருமுகம்பொருந்த. (௰ப)

காந்தண்மெல்விரற்சனகிதன்கற்பெனுங்கடலை
நீந்தியேறுவதெங்ஙனென்றொருமுகநினையச்
சாந்தளாவியகொங்கைநன்மகளிர்தற்சூழ்ந்தார்
ஏந்துமாடியினொருமுகமியல்புடனிலங்க. (௰க)

பொதும்பர்வைகுதேன்புக்கருந்துதற்ககம்புலரும்
மதம்பெய்வண்டெனச்சனகிமேன்மனஞ்செலமறுகி
வெதும்புவாரகம்வெந்தழிவார்நகில்விழிநீர்
ததும்புவார்விழித்தாரைவேறொடாறுந்தாக்க. (௰உ)

மாறளாவிய † மகரந்தநறவுண்டுமகளிர்
வீறளாவியமுகிழ்முலைமெழுகியசாந்தின்
சேறளாவியசிறுநறுஞ்சீகரத்தென்றல்
ஊறளாவியகடுவெனவுடலிடைநுழைய. (௰௩)

திங்கள்வாணுதன்மடந்தையர்சேயரிக்கிடந்த
அங்கயற்றடந்தாமரைக்கலரியோனுகி
வெங்கண்வானவர்தானவரென்றிவர்விரியாப்
பொங்குகைகளாந்தாமரைச்சிந்துவேபோன்று. (௰௪)

இருந்தவெண்டிசைக்கிழவனைமாருதியெதிர்ந்தான்
கருந்திறைத்தைநோக்கியகலுழனிற்கனன்றான்
திருந்துதோளிடைவீக்கியபாசத்தைச்சிந்தி
உருந்துஙஞ்சுபோல்பவன்வயிற்பாய்வெனென்றுடன்றான். (௰௫)

உறங்குகின்றபோதுயிருண்டல்குற்றமென்றொழிந்தேன்
பிறங்குபொன்மணியாசனத்திருக்கவும்பெற்றேன்
இறங்கவென்பலசிந்திப்பதிவன்றலைசிதறி
அறங்கொள்கொம்பினைமீட்டுடனகல்வேனென்றமைந்தான். (௰௬)

தேவர்தானவர்முதலினர்சேவகன்றேவி
காவல்கண்டிவணிருந்தவர்கட்புலன்கதுவப்
பாவகாரிதன்முடித்தலைபறித்திலெனென்றால்
ஏவதியானினிமேற்செயுமாள்வினையென்றான். (௰எ)

மாடிருந்தமற்றிவன்புணர்மங்கையர்மயங்கி
ஊடிரிந்திடமுடித்தலைதிசைதொறுமுருட்டி
ஆடல்கொண்டுநின்றார்க்கின்றததுகொடிதம்மா
தேடிவந்ததோர்குரங்கெனும்வாசகஞ்சிறிதோ. (௰அ)

---

* பூவை-நாகணவாய்ப்புள் சொல்லுக்குவமை.
† மகரந்தநறவு-வாசனையுள்ள கள்.

நீண்டவாளெயிற்றரக்கனைக்கண்களினேரே
காண்டல்வேண்டியிவ்வுயிர்சுமந்தெதிர்கிலகழறி
மீண்டபோதுண்டுவசைப்பொருள்வென்றிலேனெனினும்
மாண்டபோதினும்புகழன்றிமற்றுமொன்றுண்டோ. (ருகூ)

என்றுதோளிடையிறுக்கியபாசமிற்றேகக்
குன்றின்மேலெழுகோளரியேயெனக்குதியின்
சென்றுகூடுவலென்பதுசிந்தனைசெய்யா
நின்றுகாரியமன்றெனநீதியினினைந்தான். (சுo)

(வேறு.)

கொல்லலாம்வலத்தனுமல்லன்கொற்றமும்
வெல்லலாந்தரத்தனுமல்லன்மேலைநாள்
அல்லெலாந்திரண்டனநிறத்தனுற்றலை
வெல்லலாமிராமனுற்பிறரும்வெல்வரோ. (சுக)

என்னையும்வெலற்கரிதிவனுக்கீண்டிவன்
தன்னையும்வெலற்கரிதெனக்குத்தாக்கினல்
அன்னவேகாலங்கள்கழியுமாதலான்
துன்னருஞ்செருத்தொழிற்றுடங்கறாயதோ. (சுஉ)

ஏழுயருலகங்கள்யாவுமின்புறப்
பாழிவன்புயங்களோடரக்கன்பஃறலைப்
பூழியிற்புரட்டலென்பூணிப்பாமெனை
ஊழியான்விளம்பியவுரையுமொன்றுண்டால். (சுரு)

இங்கொருதிங்களேயிருப்பல்யானெனை
* அங்கணுயகன்றனதாணைகூறிய
மங்கையுமின்னுயிர்துறத்தல்வாய்மையால்
பொங்குவெஞ்செருவிடைப்பொழுதுபோக்கினல். (சுச)

ஆதலானமர்த்தொழிலழிக்கிற்றன்றருந்
தூதனுந்தன்மையேதூய்தென்றன்னினன்
வேதநாயகன்றனித்துணைவன்வென்றிசால்
ஏதில்வாளரக்கனதிருக்கையெய்தினன். (சுரு)

நீட்டியவாளெனத்தெறுகட்டேவியர்
ஈட்டியகுழுவிடையிருந்தவேந்தற்குக்
காட்டினனனுமனைக்கடலினூழு
ஆட்டியவும்பரையுலையவோட்டினன். (சுசு)

புவனமெத்தனையவையனைத்தும்போர்கடந்
தவனையுற்றரியுருவானவாண்டகை

* அங்கண்-அப்போது, அழகியகண்.

சிவனெனச்செங்கணானென்னச்சேவகன்
இவனெனக்கூறிநின்றிருகைகூப்பினான். (௬௭)

நோக்கிய * கட்பொறிநுவன்றவாய்களில்
தூக்கியபொறியொடுமயிர்சுறுக்கொளத்
தாக்கியவுயிர்ப்பொடுந்தவழவெம்புகை
வீக்கினனவ்வுடல்விசித்தபாம்பினே. (௬௮)

அன்னவோர்வெகுளியனமராதியர்
துன்னியதுன்னலர்த்துணுக்கஞ்சுற்றுற
என்னிவண்வரவுநீயாரையென்றவன்
தன்மையைவினாயினான்கூற்றின்றன்மையான். (௬௯)

நேமியோகுலிசியோநெடுங்கணிச்சியோ
தாமரைக்கிழவனோதறுகட்பஃறலைப்
பூமிதாங்கொருவனோபொருதுமுற்றுற
நாமமுமுருவமுங்கரந்துநண்ணினாய். (௭0)

நின்றிசைத்துயிர்கவர்நீலக்காலனோ
குன்றிசைத்தயிலுறவெறிந்தகொற்றனோ
தென்றிசைக்கிழவனோதிசைநின்றாட்சியர்
என்றிசைக்கின்றவர்யாருள்யாவனீ. (௭௧)

அந்தணர்வேள்வியினாக்கியாணையின்
வந்துறவிடுத்ததோர்வயவெம்பூதமோ
முந்தொருமலருளோனிலங்கைமுற்றுறச்
சிந்தெனத்திருத்தியதறுகட்டெய்வமோ. (௭௨)

ஆரைநீயென்னையிங்கெய்தகாரணம்
ஆருனைவிடுத்தவரறியவாணையால்
சோர்விலசொல்லுதியென்னச்சொல்லினான்
வேரொடுமமரர்தம்புகழ்விழுங்கினான். (௭௩)

சொல்லியவனைவருமல்லென்சொன்னவப்
புல்லியவலியினோரேவல்பூண்டிலேன்
அல்லியங்கமலமேயனையசெங்கணோர்
வில்லிதன்றூதன்யானிலங்கைமேயினேன். (௭௪)

அனையவன்யாரெனவறிதியாதியேல்
முனைவருமமரருமூவர்தேவரும்
எனையவரெனையவர்யாவர்யாவையும்
நினைவருமிருவினைமுடிக்கநின்றுளோன். (௭௫)

* கட்பொறி-கண்ணாகிய அறிவு.

வேறு.

ஈட்டியவலியுமேனையியற்றியதவமும்யாணர்
கூட்டியபடையுந்தேவர்கொடுத்தநல்வரமுங்கொட்பும்
றீட்டியபிறவுமெய்தித்திருத்தியவாழ்வுமெல்லாம்
நீட்டியபகழியொன்றான்முதலொடுநீக்கநின்றான். (எசு)

தேவரும்பிறருமல்லன்றிசைக்களிறல்லன்றிக்கிற்
காவலரல்லனீசன்கயிலையங்கிரியுமல்லன்
மூவருமல்லன்மற்றை * முனிவருமல்லனெல்லைப்
பூவலயத்தையாண்டபுரவலன்புதல்வன்போலாம். (எஎ)

போதமும்பொருந்துகேள்விப்புரையறுபயனும்பொய்தீர்
மாதவஞ்சார்ந்ததீராவரங்களுமற்றுமுற்றும்
யாதவனினைந்தானன்னபயத்தனவேதுவேண்டின்
வேதமுமறனுஞ்சொல்லுமெய்யறமூர்த்திவில்லோன். (எஅ)

காரணங்கேட்டியாயிற்கடையிலாமறையின்கண்ணும்
ஆரணங்காட்டமாட்டாவறிவினுக்கறிவுமன்னோன்
போரணங்கிடங்கர்கவ்வப்பொதுநின்றுமுதலேயென்ற
வாரணங்காக்கவந்தானமரரைக்காக்கவந்தான். (எகூ)

மூலமுநடுவுமீறுமில்லதோர்மும்மைத்தாய
காலமுங்கணக்குநீத்தகாரணன்கைவிலேந்திச்
சூலமுந்திகிரிசங்குங்கரகமுந்துறந்துதொல்லை
ஆலமுமலரும்வெள்ளிப்பொருப்பும்விட்டயோத்திவந்தான். (அ0)

அறந்தலைநிறுத்திவேதமருள்சுரந்தறைந்தநீதித்
திறந்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோர்
இறந்துகநூறித்தக்கோரிடர்துடைத்தேகவிண்டு
† பிறந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான். (அக)

அன்னவற்கடிமைசெய்வேனுமமுமனுமனென்பேன்
நன்னுதறன்னைத்தேடிநாற்பெருந்திசையும்போந்த
மன்னரிற்றென்பால்வந்ததானைக்குமன்னன்வாலி
தன்மகனவன்றன்றூதன்வந்தனென்றனியேனென்றான். (அஉ)

என்றலுமிலங்கைவேந்தனெயிற்றினமெழிலிநாப்பண்
மின்றிரிந்தென்னநக்குவாலிசேய்விடுத்ததூத
வன்றிறலாயவாலிவலியன்கொலரசின்வாழ்க்கை
நன்றுகொலென்னலோடுநாயகன்றூதனக்கான். (அங)

அஞ்சலையரக்கபார்விட்டந்தரமடைந்தானன்றே
வெஞ்சினவாலிமீளான்வாலும்போய்விளிந்ததன்றே

* முனிவர்-ஈண்டு சனகாதியர். † ஈண்டுப்பிறந்தனனென்றால் இவ்வுலகத்தவதரித்தானதன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுக்கவல்லவன்என்க

அஞ்சனமேனியான்றனடிகளையொன்றான்மாழ்கித்
துஞ்சினனெங்கள்வேந்தன்சூரியன்சேயன்றலென்றான். (அச)

என்னுடையீட்டினலவ்வாலியையெறும்வாயம்பால்
இன்னுயிருண்டதிப்போதியாண்டையானிராமனென்பான்
அன்னவன்றேவிதன்னையங்கதனுடனுற்ற
தன்மையையுரைசெய்கென்னச்சமீரணன்றனயன்சொல்வான். (அரு)

தேவியைநாடிவந்தசெங்கணற்கெங்கள்கோமான்
ஆவியொன்றாகநட்டானருந்துயர்துடைத்தியென்ன
ஓவியர்க்கெழுதவொண்ணாவுருவத்தனுருமையோடும்
கோவியற்செல்வமுன்னேகொடுத்துவாலியையுங்கொன்றான். (அசு)

ஆயவன்றன்னோடாண்டோர் * திங்களோர்நான்கும்வைகி
மேயவெஞ்சேனைசூழவீற்றினிதிருந்தவீரன்
போயினிச்சீர்கொமென்னப்போந்தனம்புகுந்ததீதென்
றேயவன்றாதன்சொன்னனிராவணனிதனைச்சொன்னான். (அஎ)

உங்குலத்தலைவன்றன்னொடொப்பிலாவுயர்ச்சியோனை
வெங்கொலையம்பிற்கொன்றாற்காட்டொழின்மேற்கொண்டேரேல்
எங்குலப்புறநுஞ்சீர்த்திநுமொடுமியைந்ததென்றால்
மங்குலிற்பொலிந்தனாலமாதுமையுடைத்துமாதோ. (அஅ)

தம்முனைக்கொல்வித்தன்னற்கொன்றவற்கன்புசான்ற
உம்மினத்தலைவனேயாதெனக்குணர்த்தலுற்ற
தெம்முனைத்தூதுவந்தாயிகல்புரிதன்மையென்னை
நம்மினைக்கொல்லாநெஞ்சமஞ்சலைநுவறியென்றான். (அகூ)

வேறு.

துணர்த்ததாரவன்சொல்லியசொற்களைப்
புணர்த்துநோக்கிப்பொதுவின்றநீதியை
உணர்த்திறைலதுறுமெனவுன்னருங்
குணத்தினுனுமினையனகூறினன். (கூ0)

தூதுவந்ததுசூரியன்கான்முளை
ஏதுவொன்றியநீதியைந்தன
சாதுவென்றுணர்கிற்றியேற்றக்கன
கோதிறந்தனகின்வயிற்கூறுவாம். (கூக)

வறிதுவீழ்த்தனைவாழ்க்கையைமன்னறம்
சிறிதுநோக்கலைதீமைதிருத்தினெய்
இறுதியுற்றுளதாயினுமின்னுமோர்
உறுதிகேட்டியுயிர்கொடிதோம்புவாய். (கூஉ)

* திங்களோராறு எனப் பாடமுமுண்டு.

போயிற்றீர்நும்புலன்வென்றுபோற்றிய
ஆயிற்றீர்வரிதாகியமாதவம்
காயிற்றீர்வருங்கேடருங்கற்பினாள்
தீயிற்றாயவளைத்துயர்செய்ததால். (௯௨)

இன்றுவீந்ததுநாளைச்சிறிதிறை
நின்றுவீந்ததலாணிறைநிற்குமோ
ஒன்றுவீந்ததுநல்லுணரும்பரை
வென்றுவீங்கியவீக்கமிகுத்ததால். (௯௩)

தீமைநன்மையைத்தீர்த்தலொல்லாதெனும்
வாய்மைநீக்கினைமாதவத்தால்வந்த
தூய்மைதூயவடன்மையிற்றோன்றிய
நோய்மையாற்றுடைக்கின்றனைநோக்கலாய். (௯௪)

திறந்திறம்பிய * காமச்செருக்கினால்
மறந்துதத்தமதியின்மயங்கினார்
இறந்திறந்திழிந்தேறுவதேயலால்
அறந்திறம்பினராருளராயினார். (௯௫)

நாமத்தாழ்கடன்ஞாலத்தவிந்தவர்
ஈமத்தான்மறைந்தாரிளமாதர்பால்
காமத்தாலிறந்தார்களிவண்டுறை
தாமத்தாரினரெண்ணினுஞ்சால்வரோ. (௯௬)

பொருளுங்காமமுமென்றிவைபோக்கிவே
றிருளுண்டாமெனவெண்ணலரீதலும்
அருளுங்காதலிற்றீர்தலுமல்லதோர்
தெருளுண்டாமெனவெண்ணலர்சீரியோர். (௯௭)

இச்சைத்தன்மையினிற்பிற † ரில்வினை
நச்சினாளுநகையுறநாணிலன்
பச்சைமேனிபுலர்ந்துபழிபடூஉம்
கொச்சையாண்மையுஞ்சீர்மையிற்கூடுமோ. (௯௮)

ஓதநீருலகாண்டவருன்றனைப்
போதநீதியராருளர்போயினார்
வேதநீதிவிதிவழிச்செல்வரும்
காதனீயறத்தெல்லைகடத்தியோ. (௧00)

வெறுப்புண்டாயவொருத்தியைவேண்டினால்
மறுப்புண்டாயபின்வாழ்கின்றவாழ்வினின்

* காமச்செருக்கு - காமமயக்கம். † இல்வினை – மனைவியை.

உறுப்புண்டாய்நடுவோங்கியாசிவை
அறுப்புண்டாலதழுகெனலாகுமே. (௧௦௧)

பாரைஞ்ஞூறுவபற்பலபொற்புயம்
ஈரைஞ்ஞூறுதலையுளவென்னினும்
ஊரைஞ்ஞூறுங்கடுங்கனலுட்பொதி
சீரைஞ்ஞூறவைசேமஞ்செலுத்துமோ. (௧௦௨)

புரம்பிழைப்பருந்தீப்புகப்பொங்கியோன்
நரம்பிழைத்தனபாடலினல்கிய
வரம்பிழைக்குமறைநபிழையாதவன்
சரம்பிழைக்குமென்றெண்ணுதல்சாலுமோ. (௧௦௩)

ஈறிலூழிகவெஞ்சலினற்றிரு
நூறுகொய்திணையாகிநுழைதியோ
வேறுமின்னுநகையாம்வினைத்தொழில்
தேறினர்பலர்காமிக்குஞ்செவ்வியோய். (௧௦௪)

பிறந்துளார்பிறவாதபெரும்பதம்
சிறந்துளார்மற்றுந்தேவர்க்குந்தேவராய்
இறந்துளார்பிறர்யாருமிராமனை
மறந்துளாருளராகிலர்வாய்மையால். (௧௦௫)

ஆதலாற்றனரும்பெறற்செல்வமும்
ஓதுபல்கிளையும்முயிரும்பெறச்
சீதையைத்தருகென்றெனச்செப்பினன்
சோதியான்மகனிற்கெனச்சொல்லினன். (௧௦௬)

என்றலும்மிவைசொல்லியதெற்கொரு
குன்றில்வாழுங்குரங்குகொலாமிது
நன்றுநன்றெனமாநகைசெய்தனன்
வென்றியென்றுன்றுதானன்றிவேறிலான். (௧௦௭)

குரக்குவார்த்தையுமானிடர்கொற்றமும்
இருக்கநிற்கநீயென்கொலடாவிரும்
புரத்தினுட்டூருந்தூதுபுகுந்தபின்
அரக்கரைக்கொன்றதஃதுரையாயென்றான். (௧௦௮)

காட்டுவாரின்மையாற்கடிகாவினை
வாட்டினேனென்னைக்கொல்லவந்தார்களை
வீட்டினேன்பின்னுமென்மையினலுன்றன்
மாட்டுவந்ததுகாணுமதியினல். (௧௦௯)

என்னுமாத்திரத்தீண்டெரிநீண்டுக
மின்னும்வாளெயிற்றன்சினம்வீங்கினன்

நொன்மினென்றனன்கொல்லியர்சேர்தலும்
நின்மினென்றனன் * வீடணனீதியான். (கக0)

ஆண்டெழுந்துநின்றண்ணலரக்கனை
நீண்டகையன்வணங்கினனீதியான்
மூண்டகோபமுறையதன்றுமென
வேண்டுமெய்யுரைபையவிளம்பினான். (ககக)

வேறு.

அந்தணனுலகமூன்றுமாதியினறத்தினாற்றல்
தந்தவனன்புக்கான்றதவநெறியுணர்ந்துதக்கோய்
இந்திரன்கருமமாற்றுமிறைவனீயியம்புதூது
வந்தனையென்றபின்புங்கொல்லியோமறைகள்வல்லோய். (கக௨)

பூதலப்பரப்பினண்டப்பொகுட்டினுட்புறத்துட்பொய்தீர்
வேதமுற்றியங்குவைப்பின்வேறுவேறிடத்துவேந்தர்
மாதரைக்கொலைசெய்தார்களுளரெனவரினும்வந்த
தூதரைக்கொன்றுளார்கள்யாவரேதொல்லைநல்லோர். (கக௩)

பகைப்புலனணுகியுய்த்தார்பகர்ந்ததுபகர்ந்துபற்றார்
மிகைப்புலனடக்கிமெய்ம்மைவிளம்புதல்விரதம்பூண்ட
தகைப்புலக்கருமத்தோரைக்கோறலிற்றக்கார்யார்க்கும்
நகைப்புலன்பிறிதுண்டாமோநங்குலநவையுண்டாமே. (கக௪)

முத்தலையெஃகன்மற்றைமுராந்தகன்முனிவன்மூன்று
அத்தலைநம்மைநோனாவமரர்க்குநகையிற்றாமால்
எத்தலையுலகங்காக்கும்வேந்தநீவேற்றோரேவ
இத்தலையெய்தினானைக்கொல்லுதலிழுக்கமின்னும். (கக௫)

இளையவடன்னைக்கொல்லாதிருசெவிமூக்கொடீர்ந்து
விளைவுரையென்றுவிட்டார்வீரராய்மெய்ம்மையோர்வார்
களைதியேலாவிநம்பாலிவன்வந்துகண்ணிற்கண்ட
வளவுரையாமற்செய்தியாதியென்றமையச்சொன்னான். (கக௬)

நல்லதுரைத்தாய்நம்பியிவனவைசெய்தானேயானாலும்
கொல்லல்பழுதேபோயிடைநீகூறிக்கொணர்திகடிதென்னாத்
தொல்லைவாலைமூலமறச்சுட்டுநகரைச்சூழ்போக்கி
எல்லைகடக்கவிடுமின்களென்றானின்றாரிரைத்தெழுந்தார். (கக௭)

ஆயகாலத்தயன்படையோடிருப்பவாகாதனவிடுதல்
தூயபாசமெனப்பலவுங்கொணர்ந்துபிணிமின்றோவென்று

* விபீஷணன் (சத்தியத்திற்கஞ்சி) பலவிதமாகப் பயப்படுவன்.

மேயதெய்வப்படைக்கலத்தைவிட்டானமரர்போர்வென்றான்
ஏயெனுமுன்னிடைபுக்குத்தொடைவன்கயிற்றாற்பிணித்தீர்த்தார். ()

நாட்டினகரினடுவுள்ளகயிறுநவிலுந்தகைமையவே
வீட்டினாசனெடும்பாசமற்றதேரும்விசிதுறந்த
மாட்டும்புரவியாயமெலாமருவிவாங்குந்தொடையழிந்த
பூட்டும்வல்வின்முட்டோடும்புரசையிழந்தபோர்யானை. (கக௯)

மண்ணிற்கண்டவானவரைவலியிற்கவர்ந்தவரம்பெற்ற
எண்ணற்கரியவேலையரையிகலிற்பறித்ததமக்கியைந்த
பெண்ணிற்கிசையுமங்கலத்திற்பிணித்தகயிறேயிடைபிழைத்த
கண்ணிற்கண்டவன்பாசமெல்லாமிட்டுக்கட்டினார். (கஉ0)

கடவுட்படையைக்கடந்தறத்தினானைகடந்தேனாகாமே
விடுவித்தளித்தார் * தெவ்வரேவென்றேனன்றோவிவர்வென்றி
சுடுவிக்கின்றதிவ்வூரைச்சுடுகென்றுரைத்ததுணிவென்று
நடுவுற்றமையவுறநோக்கிமுற்றுமுவந்தானவையற்றான். (கஉக)

நொய்யபாசம்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுணங்கி
வெய்யவரக்கர்புறத்தலைப்பவீடுமுணர்ந்தேவிரைவில்லா
வையன் † விஞ்சைதனையறிந்துமறியாதான்போலவிஞ்சையெனும்
பொய்யைமெய்போனடிக்கின்றயோகிபோன்றான்போகின்றான். (கஉஉ)

வேந்தன்கோயில்வாயிலொடுவிரைவிற்கடந்துவெள்ளிடையின்
போந்துபுறநின்றிரைக்கின்றபொறைதீர்மறவர்புறஞ்சுற்ற
ஏந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றுந்தோய்த்தாரிழுதெண்ணெய்
காந்துகடுந்தீக்கொளுத்தினாரார்த்தாரண்டங்கடிகலங்க. (கஉ௩)

ஒக்கவொக்கவுடன்விசித்தவுலப்பிலாதவுரப்பாசம்
பக்கம்பக்கமிருகூறாய்நூறாயிரவர்பற்றினார்
புக்கபடைஞர்புடைகாப்போர் ‡ புணரிக்கணக்கர்புறஞ்செல்வோர்
திக்கினளவாலயனின்றுகாண்போர்க்கெல்லைதெரிவரிதால். (கஉ௪)

அந்தகருங்கடிகாவுமழிவித்தக்கன்முதலாயோர்
சிந்தனூறிச்சீதையொடும்பேசிமனிதர்திறஞ்செப்ப
வந்தகுரங்கிற்குற்றதனைவம்மின்காணவம்மென்று
தந்தந்தெருவும்வாயிறொறும்யாருமறியச்சாற்றினார். (கஉ௫)

ர்த்தாரண்டத்தப்புறத்துமறிவிப்பார்போலங்கோடிங்
ர்த்தார்முரசமெற்றினாரிடித்தார்தெழித்தாரெம்மருங்கும்
ர்த்தாரோடிச்சானகிக்கும்பகர்ந்தாரவளுமுயிர்பதைத்தாள்
வேர்த்தாளுலர்ந்தாள்விம்மினாள்விழுந்தாளழுதாள்வெய்துயிர்த்தாள். ()

---

* தெவ்வர்-பகைவர்.
† விஞ்சை-ஞானம்.
‡ புணரி-சமுத்திரம்-பத்துலக்ஷங்கோடி.

தாயேயனையகருணையான் * துணையேயேதுந்தகவில்லா
நாயேயனையவல்லரக்கர்நலியக்கண்டானல்காயோ
நீயேயுலகுக்கொருசான்றநிற்கேதெரியுங்கற்பதனில்
தூயேனென்னினிற்றொழுகின்றேனெரியேயவனைச்சுடலென்றாள். (கஉஎ)

வேறு.

வெளுத்தமென்னகையவள் விளம்புமேல்வையின்
ஒளித்தவெங்கனலவனுள்ளமுட்கினான்
தளிர்த்தனமயிர்புறஞ்சிலிர்ப்பத்தண்மையால்
குளிர்த்ததக்குரிசில்வாலென்புகூரவே. (கஉஅ)

வேறு.

மற்றினிப்பலவென்வேலைவடவனல்புவியளாய
† கற்றையங்கனலிமற்றைக் ‡ காயத்தீமுனிவர்காக்கும்
முற்றுறு § மும்மைச்செந்தீமுப்புரமுருங்கச்சுட்ட
கொற்றவனெற்றிக்கண்ணின்வன்னியுங்குளிர்ந்தவன்றே. (கஉகூ)

அண்டமுங்கடந்தானங்கையனலியுங்குளிர்ந்ததங்கிக்
குண்டமுங்குளிர்ந்தமேகத்துருமெலாங்குளிர்ந்தகொற்றச்
சண்டவெங்கதிரவாகித்தழுங்கிருள்விழுங்குந்தாவில்
மண்டலங்குளிர்ந்தமீனாரகமுங்குளிர்ந்தமாதோ. (கஙo)

வெற்பினாலியன்றதன்னமேனியைவிழுங்கிவெந்தீ
நிற்பினுஞ்சுடாதுநின்றநீர்மையைநினைவினோக்கி
அற்பினாருதசிந்தையனுமனுஞ்சனகன்பாவை
கற்பினாலியன்றதென்பான்பெரியதோர்களிப்பனானான். (கஙக)

அற்றையவ்விரவிற்றான்றனறிவினான்முழுதுமுன்னப்
பெற்றிலனெனினுமாண்டொன்றுள்ளதுபிழையுறாமே
மற்றுறுபொறிமுன்செல்லமறைந்துசெல்லறிவுமானக்
கற்றிலாவரக்கர்தாமேகாட்டலிற்றெரியக்கண்டான். (கஙஉ)

முழுவதுந்தெரியநோக்கிமுற்றுமோர்முடிவிற்சென்றான்
வழுவுறுகாலமீதென்றெண்ணினன்வலிதிற்பற்றித்
தழுவினனிரண்டுநூறாயிரம்புயத்தடக்கைதாம்போ
டெழுவெனநாலவிண்மேலெழுந்தனன்விழுந்தவெல்லாம். (கஙங)

இற்றவாளரக்கர்நூறாயிரவருமிழந்ததோளார்
முற்றினாருலந்தாரையன்மொய்ம்பினோடுலைமூழ்கச்

---

* அக்கினிக்குச் சகாயன் வாயுவாகலாலே வாயுபுத்திரனுக்கு நீ துணையாக வேண்டுமென்று துணையே யென்றாள்.

† கற்றையங்கனலி-பௌமனென்னும் சுவாலாக்கினி.

‡ காயத்தீ-ஔதாரியமென்னு மக்கினி.

§ மும்மைச்செந்தீ-காருகபத்தியம் ஆகவனீயம் தட்சிணாக்கினி.

சுற்றியகயிற்றினோடுந்தோன்றுவானரவின்சுற்றம்
பற்றியகலுழனென்னப்பொலிந்தனன்விசும்பின்பாலான். (௧௫௪)

துன்னலர்புரத்தைமுற்றுஞ்சுடுதொழிற்றொல்லையோனும்
பன்னினபொருளுநாணப்பாதகரிருக்கைபற்ற
மன்னனைவாழ்த்திப்பின்னைவயங்கெரிமடுப்பெனென்னாப்
பொன்னகர்மீதேதன்போர்வாலினைப்போகவிட்டான். (௧௫௫)

தன்னிறைக்குறுகண்செய்யோர்தாமியற்றலுங்கேட்டின்னே
அன்னவர்க்கிறுதியாகவணிநகராழிப்பனென்னாச்
செந்திறச்சிகையவெம்போர்மழுப்பின்னர்ச்சேறலொக்கும்
அன்னிறத்தண்ணறாதனனல்கெழுதொற்றநீள்வால். (௧௫௬)

அப்புறம்வேலைதாறுமலங்குபேரிலங்கைதன்னை
எப்புறத்தளவுந்தீயவொருகணத்தெரித்தகோட்பால்
துப்புறழ்மேனியண்ணன்மேருவிற்குழையத்தோளால்
முப்புரத்தெய்தசோலையொத்ததம்மூரிப்போர்வால. (௧௫௭)

உகக்கடையுலகம்யாவுமுணங்குறவொருதன்னாட்டம்
சிகைக்கொழுங்கனலைவீசுஞ்செயன்முனம்பயில்வான்போல
மிகைத்தெழுதீயராயோர்விரிநகர்வீயப்போர்வால்
தகைத்தலினோன்மைசாலுந்தனிவீரன்சேணிலுய்த்தான். (௧௫௮)

வெள்ளியிற்பொன்னினானுவிளங்குபொன்மணியினிஞ்சை
தெள்ளியகடவுட்டச்சன்கைமுயன்றரிதிற்செய்த
தள்ளறுமனைகடோறுமுறைமுறைதாவிச்சென்றான்
ஒள்ளரியோடுங்குன்றத்துழிவீழுருமொடொப்பான். (௧௫௯)

நீணிறநிருதரீண்டுநெய்பொழில்வேள்விநீங்கிப்
பால்வருபசியனென்பான்மாருதிவாலைப்பற்றி
ஆலமுண்டவனன்றாட்டவுலகெலாமழிவினுண்ணும்
காலமேயென்னமன்னோகனலியங்கடிதினுண்டான். (௧௬௦)

௧௫-வது, பிணிவீட்டுபடலம் - முற்றிற்று.

ஆ, திருவிருத்தம்-௧௧௮௭.

## ௧௬-வது, இலங்கையெரியூட்டுபடலம்.

கொடியைப்பற்றிவிதானங்கொளுத்தித்தான்
நெடியதூணைத்தழுவிநெடுஞ்சுவர்
முடியச்சுற்றிமுழுதுமுருக்கிற்றால்
கடியமாமனைதோறுங்கடுங்கனல். (௧)

வாசலிட்டவெரிமணிமாளிகை
மூசமுட்டிமுழுதுமுருக்கலால்
* ஊசலிட்டனவோடியுலைந்துளைப்
பூசலிட்டவிரியற்புரமெலாம். (உ)

மணியினுயவயங்கொளிமாளிகை
பிணியிற்செஞ்சுடர்க்கற்றைபெருக்கலால்
திணிகொடீயுற்றதுற்றிலதேர்கிலார்
அணிவளைக்கைநல்லாரலமந்துளார். (௩)

வானகத்தைநெடும்புகைமாய்த்தலால்
போனதிக்கறியாதுபுலம்பினர்
தேனகத்தமலர்பலசிந்திய
கானகத்துமயிலன்னகாட்சியார். (௪)

கூய்க்கொழுங்கனல்குஞ்சியிற்கூந்தலில்
மீச்சொரிந்தனமாதரும்வீரரும்
ஏய்த்ததன்மையினுலெரியின்மையும்
தீக்கொளுந்தினவுந்தெரிகின்றிலார். (௫)

இல்லிற்றங்குவயங்கெரியாவையும்
சொல்லிற்றீர்ந்தனபோல்வனதொல்லுருப்
புல்லுக்கொண்டனமாயைப்புணர்ப்பறக்
கல்வித்தம்மியல்பெய்துங்கருத்தர்போல். (௬)

ஆயதங்கொர் † குறளுருவாயடித்
தாயளந்துலகங்கடாக்கொள்வான்
மீயெழுந்தகரியவன்மேனியில்
போயெழுந்துபரந்ததுவெம்புகை. (௭)

நீலநின்றநிறத்தனகீழ்நிலை
மாலின்வெஞ்சினயானையமானுவ
மேல்விழுந்தெரிமுற்றும்விழுங்கலால்
தோலுரிந்துகழன்றனதோலெலாம். (அ)

மீதிமங்கலந்தாலன்னவெம்புகை
சோதிமங்கலத்தீயொடுசுற்றலால்
மேதிமங்குலின்வீழ்புனல்வீழ்மட
வோதிமங்களின்மாதரோதுங்கினர். (௯)

பொடித்தெழுந்துபெரும்பொறிபோவன
இடிக்குலங்களின்வீழ்தலுமெங்கணும்

* ஊசலிட்டன...மெலாம்-நெருப்புக்குப் பயந்து வெளியே போகிறதும் பின்னைமுதலியவைகளை நினைந்து திரும்பவருகிறதுமாயின என்க.
† குறளுரு-வாமனவடிவு.

வெடித்தவேலைவெதும்பிடமீன்குலம்
துடித்துவெந்துபுலர்ந்துயிர்சோர்ந்தவால். (௧0)

பருகுதீமடுத்துள்ளுறப்பற்றலால்
அருகுநீடியவாடகத்தாரைகள்
உருகிவேலையினூடுபுக்குற்றன
திருகுபொன்னெடுந்தண்டிற்றிரண்டவால். (௧௧)

உரையின்முந்துலகுண்ணுமெரியதால்
வரைநிவந்தனபன்மணிமாளிகை
நிரையினீணெடுஞ்சோலையினிற்குமோ
தரையும்வெந்ததுபொன்னெனுந்தன்மையால். (௧௨)

கல்லினும்வலிதாம்புகைக்கற்றையால்
எல்லிபெற்றதிமையவர்நாடியல்
வல்லிகோலிநிவந்தனமாமணிச்
சில்லியோடுந்திரண்டனதேரெலாம். (௧௩)

பேயமன்றினினின்றுபிறங்கெரி
மாயருண்டநறவுமடுத்ததால்
தூயரென்றவர்வைகிடந்துன்னினால்
தீயரன்றியுந்தீமையுஞ்செய்வ * ரால். (௧௪)

தழுவிலங்கைதழங்கெரிதாய்ச்செலீஇ
வழுவில்வேலையுலையின்மறுகின
எழுமெழுஞ்சுடர்க்கற்றைசென்றெய்தலால்
குழுவுதண்புனன்மேகங்கொதித்தவே. (௧௫)

ஊனிலோடுமெரியொடுயங்குவார்
கானிலோடுநெடும்புனல் † காணெனா
வானிலோடுமகளிர்மயங்கினர்
வேனிலோடருந்தேரிடைவீழ்ந்தனர். (௧௬)

தேனவாம்பொழினீப்படச்சிந்திய
சோனைமாமலர்த்தும்பிதொடர்ந்தயல்
போனதீச்சுடர்புண்டரிகத்தடங்
கானமாமெனவீழ்ந்துகரிந்தவே. (௧௭)

நற்கடன்னிதுநம்முயிர்நாயகன்
மற்கடந்தெறமாண்டனன்வாழ்விலம்
இற்கடந்தினியேகலம்யாமெனா
விற்கடந்தநுதற்சிலர்வீடினர். (௧௮)

---

* ஆல்-இது ஆச்சரியம். † காண்-முன்னிலையசை.

பூக்கரிந்துமுறிபொறியாயடை
நாக்கரிந்துசினைநறுஞ்சாம்பராய்
மீக்கரிந்துநெடும்பணைவேருறக்
காக்கரிந்துகருங்கரியானவே (௧௯)

கார்முழுக்கவெழுங்கனற்கற்றைபோய்
ஊர்முழுக்கவெதுப்பவுருகின
சோரொழுக்கமருமையிற்றன்றுபொன்
வேர்விடுப்பதுபோன்றனவிண்ணெலாம். (௨0)

நெருக்கமீமிசையொக்கநெருப்பெழச்
செருக்கும்வெண்கதிர்த்திங்களைச்சென்றுற
உருக்குமெய்யினமுதமுகுத்தலால்
அரக்கருஞ்சிலராவிபெற்றாரரோ. (௨௧)

பரிதிபற்றிமிர்ந்தெழுபைங்கனல்
கருகிமுற்றுமெரிந்தெழுகார்மழை
அருகுசுற்றுமிருந்தையதாயதின்
உருகுபொற்றிரளொத்தனவெண்கதிர். (௨௨)

தலைகொளுத்தியதாவெரிதாமணி
முளைகொளுத்திமுகத்திடைமொய்த்தபோர்
உளைகொளுத்தவுலந்துலைவுற்றன
வளைகுளப்பின்மணிநிறவாசியே. (௨௩)

எழுந்துபொற்றலத்தேறலினீள்புகைக்
கொழுந்துசுற்றவுயிர்ப்பிலர்கோளுமுற்
றழுந்துபட்டுளரொத்தயர்ந்தாரழல்
விழுந்துமுற்றினர்கூற்றைவிழுங்குவார். (௨௪)

* கோசிகத்துகிலுற்றகொழுங்கனல்
தூசினுத்தரிகத்தொடுசுற்றுறா
வாசமைக்குழல்பற்றமயங்கினார்
பாசிழைப்பரவைப்படரல்குலார். (௨௫)

வேறு.

நிலவிலங்கியதுகிலினைநெருப்புணநிருதர்
இலவினுஞ்சிலமுத்துளவெனுநகையனையார்
புலவியின்கரைகண்டவரமுதுகப்புணரும்
கலவியின்கரைகண்டிலர்மண்டினர்கடன்மேல். (௨௬)

பஞ்சரத்தொடுபசுநிறக்கிளிவெந்துபதைப்ப
அஞ்சனக்கணினருவிநீர்முலைமுன்றிலலைப்பக்

* கோசிகத்துகில்-பட்டுச்சீலை.

குஞ்சரத்தனகொழுநரைத்தழுவுறுங்கொதிப்பால்
மஞ்சுறப்புகுமின்னெனப்புகையிடைமறைந்தார். (௨௭)

வரையினைப்புரைமாடங்களெரிபுகமகளிர்
புரையில்பொற்கலன்விசும்பிடைவில்விடப்போவார்
கரையினுட்புகைப்படலையிற்கரிந்தனர்கலங்கித்
திரையினுட்பொலிசித்திரப்பாவையின்செயலார். (௨௮)

அகருமஞ்ஞுறுஞ்சாந்தமுமுதலியவனேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாம்போர்ப்பப்
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகும்
மகரவேலையின்வெந்தனநந்தனவனங்கள். (௨௯)

மினைப்பரந்தெழுகொழுஞ்சுடருலகெலாம்விழுங்க
நினைப்பரும்பெருந்திசையுரவிரிகின்றநிலையால்
சினைப்பரந்தெரிசேர்ந்திலகின்றவுஞ்சிலவும்
கனற்பரந்தவுந்தெரிகிலகற்பகக்கானம். (௩௦)

மூளும்வெம்புகைவிழுங்கலிற்சுற்றுறமுழுநீர்
மாளும்வண்ணமாமலைநெடுந்தலைதொறுமயங்கிப்
பூளைவீயன்னபோவனபுணரியிற்புனன்மீன்
மீளயானையுந்தெரிந்திலமுகிற்கணமிசைய. (௩௧)

மிக்கவெம்புகைவிழுங்கலின்வெள்ளியங்கிரியும்
ஒக்கவெற்பினோடன்னமுங்காக்கையினுருவ
பக்கவேலையின்படியதுபாற்கடன்முடிவில்
திக்கயங்களுங்கயங்களும்வேற்றுமைதெரியா. (௩௨)

கரிந்துசிந்திடக்கடுங்கனனூடர்ந்துடல்கதுவ
உரிந்தமெய்யினரோடினர்நீரிடையொளிப்பார்
விரிந்தகூந்தலுங்குஞ்சியுமிடைதலிற்றுமும்
எரிந்துவேகின்றவொத்தனவெறிதிரைப்பரவை. (௩௩)

மருங்கின்மேலொருமகவுகொண்டொரு * தனிமகவை
அருங்கையாற்பற்றிமற்றொருமகவுபின்னரற்ற
நெருங்கினாரொடுநெறிகுழல்சுறுக்கொளநீக்கிக்
கருங்கடற்றலைவீழ்ந்தனரரக்கியர்கதறி. (௩௪)

வில்லும்வேலும்வெங்குந்தமுமுதலியவிறகாய்
எல்லுடைச்சுடரெனப்புகரெஃகெலாமுருகித்
தொல்லைநன்னிலைதொடர்ந்துபேருணர்வன்னதொழிலால்
சல்லியுண்டையிற்றிரண்டனபடைக்கலச்சாலை. (௩௫)

---

* தனி-(கைப்பிள்ளையை) நேராகாத.

செய்தொடர்க்கழல்வல்லியும்புரசையுஞ்சிந்தி
நொய்தினிட்டவன்றறிபறித்துடலெரிநுழைய
மொய்தடச்செவிநிறுத்திவான்முதுகினின்முறுக்கிக்
கையெடுத்தழைத்தோடினவோடைவெங்களிமா. (௩௬)

வெருளும்வெம்புகைப்படலையின்மேற்செலவெருவி
இருளும்வெங்கடல்விழுந்தனவெழுந்திலபறவை
மருளின்மீன்கணம்விழுங்கிடவுலந்தனமனத்தோர்
அருளில்வஞ்சரைத்தஞ்சமென்றடைந்தவரனைய. (௩௭)

நீரைவற்றிடப்பருகிமாநெடுநிலந்தடவித்
தாருவைச்சுட்டுமலைகளைத்தழற்செய்துதனிமா
மேருவைப்பற்றியெரிகின்றகாலவெங்கனல்போல்
ஊரைமுற்றுவித்திராவணன்மனைபுக்கதுயர்தீ. (௩௮)

வானமாதருமற்றுளமகளிருமறுகிப்
* போனபோனதிக்கறிகிலரனைவரும்போனார்
ஏனைநின்றவரெங்கணும்பிரிந்தனரிலங்கைக்
கோனவானவர்பதிகொண்டநாளெனக்குலைந்தார். (௩௯)

நாவியுந் † நறுங்கலவையுங்கற்பகக்கப்
பூவுமாரமுமகிலுமென்றினையனபுகையத்
தேவுதேன்மழைசெறிபெருங்குலமெனத்திசையிற்
பாவைமார்நறுங்குழல்களும்பரிமளங்கமழ்ந்த. (௪0)

சூழும்வெஞ்சுடர்தொடர்ந்திடயாவருந்தொடரா
வாழிவெஞ்சினத்தாண்டொழிலிராவணன்மனையின்
ஊழிவெங்கனலுண்டிடவுலகமென்றுயர்ந்த
எழும்வெந்தனவெரிந்தனநெடுநிலையேழும். (௪௧)

பொன்றிருத்தியதாயதாலிராவணன்புரைதீர்
குன்றமொத்துயர்தடநெடுமாநிலைக்கோயில்
நின்றதுற்றெரிபருகிடநெரிவுறவுருகித்
தென்றிசைக்குமோர்மேருவுண்டாமெனத்தெரிந்த. (௪௨)

அனையகாலையினரக்கனுமரிவையர்குழுவும்
புனைமணிப்பொலிபுட்பகவிமானத்துப்போனார்
நினையுமாத்திரையாவருநீங்கினர்நினையும்
வினையிலாமையின்வெந்ததவ்விலங்கன்மேலிலங்கை. (௪௩)

ஆழித்தேரவனரக்கரையழலெழநோக்கி
எழுக்கேழெனவடுக்கியவுலகங்களெரியும்

* போனபோன திக்கறிகிலர்-போனபோன ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு திசைகளிலேபோய்ப் புகைக்கம்மலாலே இன்னதிசை வந்தோமென் றறிந்திலர். † நறுங்குழல்-இயற்கைமணமுள்ள கூந்தல்.

ஊழிக்காலம்வந்துற்றதோபிறிதுவேறுண்டோ
ாழித்தீச்சுடவெந்ததென்னகரெனப்பகர்ந்தான். (௪௪)

ரங்கள்கூப்பினர்தங்கிளைதிருவொடுங்காணார்
ரங்குநின்றவல்லரக்கரீதியம்பினரிறையோய்
ரங்கவேலையினெடியதன்வாலிட்டதழலால்
நரங்குசுட்டதீதென்றலுமிராவணன்கொதித்தான். (௪௫)

ன்றுகொல்குரங்கன்னதிவ்வலியுளதிலங்கை
நின்றுவெந்துமாநீறெழுகின்றதுநெருப்புத்
தின்றுதேக்கிடுகின்றதுதேவர்கள்சிரிப்பார்
நன்றுநன்றுபோர்வலியெனவிராவணனக்கான். (௪௬)

வேறு.

உண்டநெருப்பைக்
கண்டனர்பற்றிக்
கொண்டணைகென்றான்
அண்டரைவென்றான். (௪௭)

உற்றகலாமுன்
கற்றகுரங்கைப்
பற்றுமினென்றான்
முற்றுமுனிந்தான். (௪௮)

சாரயனின்றார்
வீரர்விரைந்தார்
நேருதுமென்றார்
தேரினர்சென்றார். (௪௯)

எல்லையிகந்தார்
வில்லர்வெகுண்டார்
பல்லதிகாரத்
தொல்லர்தொடர்ந்தார். (௫0)

வேறு.

நீர்கெழுவேலைநிமிர்ந்தார்
தார்கெழுதானைசமைந்தார்
போர்கெழுமாலைபுனைந்தார்
ஓரெழுவீரருயர்ந்தார். (௫௧)

விண்ணினைவேலைவிளிம்பார்
மண்ணினையோடிவளைந்தார்
அண்ணலைநாடியணைந்தார்
கண்ணினின்வேறயல்கண்டார். (௫௨)

பற்றுதிர்பற்றுதிரென்பார்
எற்றுதிரெற்றுதிரென்பார்
முற்றினர்முற்றுமுனிந்தார்
சுற்றுணர்மாருதிகண்டான். (௫௩)

வல்கொடுவஞ்சரெதிர்ந்தார்
கால்கொடுகைகொடுகார்போல்
வேல்கொடுகோலினர்வெந்தீ
வால்கொடுதானும்வளைந்தான். (௫௪)

பாதவமொன்றுபகுத்தான்
மாதிரம்வாலின்வளைத்தான்
மோதினன்மோதமுனிந்தார்
ஏதியுநாளுமிழந்தார். (௫௫)

நூறிடமாருதிநொந்தார்
ஊறிடவூனிடுபுண்ணீர்
சேறிடவூரடுசெந்தீ
ஆறிடவோடினதாறாய். (௫௬)

தோற்றினர்துஞ்சினரல்லார்
எற்றிகல்வீரரெதிர்ந்தார்
காற்றின்மகன்கலைகற்றான்
கூற்றினுமும்மடிகொன்றான். (௫௭)

மஞ்சுறழ்மேனியர்வன்றாள்
மொய்ம்பினவீரர்முடிந்தார்
ஐம்பதினாயிரரல்லார்
பைம்புனல்வேலைபடிந்தார். (௫௮)

தோய்ச்சனன்வாலதிதோயாக்
காய்ச்சினவேலைகலந்தார்
போய்ச்சிலர்பொன்றினர்போனார்
எச்சனமைந்தரெதிர்ந்தார். (௫௯)

சுற்றினதேரினர்தோலா
விற்றொழில்வீரம்விளைத்தார்
எற்றினன்மாருதியெற்ற
உற்றெழுவோருமுலந்தார். (௬0)

* விட்டுயர்விஞ்சையர்வெந்தீ
வட்டமுலைத்திருவைகும்
புட்டிரன்சோலைபுறத்தும்
சுட்டிலதென்பதுசொன்னார். (௬௧)

* விண்டு விட்டு என வலித்தல்.

வந்தவர்சொல்மகிழ்ந்தான்
வெந்திறன்வீரன்வியந்தான்
உய்ந்தனெனென்னவுயர்ந்தான்
பைந்தொடிதாள்கள்பணிந்தான். (௬௨)

பார்த்தனள்சானகிபாரா
வேர்த்தெரிமேனிகுளிர்ந்தாள்
வார்த்தையென்வந்தனையென்னப்
போர்த்தொழின்மாருதிபோனான். (௬௩)

தெள்ளியமாருதிசென்றான்
கள்ளவரக்கர்கள்கண்டால்
எள்ளுவர்பற்றுவரென்னு
ஒள்ளெரியோனுமொளித்தான். (௬௪)

௧௪-வது, இலங்கையெரியூட்டுபடலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௨௫௧.

## ௧௫-வது, * திருவடிதொழுதபடலம்.

நீங்குவென்விரைவினென்னுநினைவினன்மருங்குநின்ற
தாங்கொருகுடுமிக்குன்றையருக்கனினணைந்தவையன்
வீங்கினனுலகையெல்லாம்விழுங்கினனென்னவீரன்
பூங்கழலிரண்டுவாழ்த்திவிசும்பிடைக்கடிதுபோனான். (௧)

† மைந்நாகமென்னநின்றகுன்றையுமரபினெய்திக்
‡ கைந்நாகமனையோனுற்றதுணர்த்தினன்கணத்தின்காலைப்
§ பைந்நாகநிற்கும்வீரர்தன்னைவரவுபார்க்கும்
|| கொய்ந்நாகநறுந்தேன்சிந்துங்குன்றிடைக்குதியுங்கொண்டான். (௨)

போய்வருங்கருமமுற்றிற்றென்பதோர்பொம்மல்பொங்க
வாய்வெரீஇநின்றவென்றிவானரவீரர்மன்னோ
பாய்வருநீளத்தாங்கணிருந்தனபறவைப்பார்ப்புத்
தாய்வரக்கண்டதன்னவுவகையிற்றளிர்த்தாரம்மா. (௩)

அழுதனர்சிலவர்முன்னின்றார்த்தனர்சிலவரண்மித்
தொழுதனர்சிலவராடித்துள்ளினர்சிலவரள்ளி
முழுதுறவிழுங்குவார்போன்மொய்த்தனர்சிலவர்சுற்றும்
தழுவினர்சிலவர்கொண்டுசுமந்தனர்சிலவர்தாங்கி. (௪)

---

* திரு-மேன்மை; அழகு. அடி-பாதம். அனுமானுக்குத் திருவடி என்று பெயர். † மைந்நாகம்-மைந்நாகமலை. ‡ கைந்நாகம்-யானை. § பைந்நாகம் - படமுள்ளபாம்பு. || கொய்ந்நாகம் - (மலர்) பறிக்கும் புன்னைமரம்.

தேனொடுகிழங்குங்காயுநறியனவரிதிற்றேடி
மேன்முறைவைத்தேமன்னனுகர்ந்தனைமெலிவுதீர்தி
மானவாண்முகமேநங்கட்குரைத்ததுமாற்றமென்று
தானுயர்சாகமெல்லாமுறைமுறைசிலவர்தந்தார். (௫)

தாள்களின்மார்பிற்றோளிற்றலையினிற்றடக்கைதம்மில்
வாள்களின்வேலிற்கோலின்மழையினின்வகுத்தபுண்கள்
நாள்கண்மேனுலகிற்சென்றவெண்ணனநம்பிகண்ணை
ஊழ்கொளநோக்கிநோக்கியுருகவுளைந்துயிர்த்தார். (௬)

வாலிகாதலனைமுந்தைவணங்கினனெண்கின்வேந்தைக்
காலுறப்பணிந்துபின்னைக்கடன்முறைகடவோர்க்கெல்லாம்
மேலுறவியற்றியாங்கணிருந்திவணிருந்தோர்க்கெல்லாம்
ஞாலநாயகன்றன்றேவிசொல்லினணன்மையென்றான். (௭)

என்றலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சித்தாழா
நின்றனருவகைபொங்கவிம்மலாணியிர்ந்தநெஞ்சர்
சென்றதுமுதலாவந்ததிறுதியாச்செப்பற்பாலை
வன்றிறலுரவோயென்னச்சொல்லினன்மருத்தின்மைந்தன். (௮)

ஆண்டகைதேவியுள்ளத்தருந்தவமமையச்சொல்லிப்
பூண்டபேரடையாளங்கைக்கொண்டதும்புகன்றுபோரில்
நீண்டவாளரக்கரோடிகழ்ந்ததுநெருப்புச்சிந்தி
மீண்டதும்விளம்பான்றான்றன்வென்றியையுரைப்பவெள்கி. (௯)

பொருதமைபுண்ணேசொல்லவென்றமைபோர்ததன்மை
உரைசெயவூர்தீயிட்டதோங்கிரும்புகையையோதக்
கருதலர்பெருமைதேவிமீண்டிலாச்செயலேகாட்டத்
தெரிதரவுணர்ந்தேம்பின்னரென்னினிச்செய்துமென்றார். (௧௦)

யாவையுமினிவேறெண்ணல்வேண்டுவதிறையுமில்லை
சேவகன்றேவிதன்னைக்கண்டமைவிரைவிற்செப்பி
ஆவதவ்வண்ணலுள்ளத்தருந்துயராற்றலேயாம்
போவதுபுலமையென்னப்பொருக்கெனவெழுந்துபோனார். (௧௧)

போயினர்களிப்பினோடும்புங்கவன்சிலையினின்றும்
எயினபகழியென்னவெழுந்துவிண்படர்ந்துதாவிக்
காய்கதிர்க்கடவுள்வானத்துச்சிசென்றிறுக்குங்காலத்
தாய்வரும்வீரரும்போய்மதுவனமதிலிறுத்தார். (௧௨)

எதுகாளிறந்தசாலவென்பதோர்வருத்தநெஞ்சத்
தாதலா * னுணர்வுதீர்ந்துவருந்தினமளியமெம்மைச்

* உணர்வுதீர்ந்தென்றால்-பொசிப்பில்லாமலென்க.

சாதநீர்த்தளித்தவீரதந்தருளுணவுமென்னப்
போதுநாம்வாலிசெய்பாலென்றுடனெழுந்துபோனார். (கங)

அங்கதன்றன்னையண்மியனைவருமிருகைகூப்பிக்
கொங்குதங்கலங்கன்மார்பநின்னுடைக்குரக்குச்சேனை
வெங்கதமொழிந்துசாலவருந்தினவேடையோடி
இங்கிதற்களித்தல்வேண்டுமிறாலுமிழ்பிரசமென்றார். (கச)

நன்றெனவவனுநேர்ந்தானரலையுநடுங்கவார்த்துச்
சென்றுறுபிரசந்தூங்குஞ்செழுவனமதனினூடே
ஒன்றின்முனொன்றுபாயுமொடிக்குமென்பிரசமெல்லாம்
தின்றுதின்றுவகைகூருந்தேனுகரளியின்மொய்த்தே (கரு)

ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவார்
ஒருவர்கைக்கொள்ளுந்தேனையொருவர்கொண்டோடிப்போவார்
ஒருவரோடொருவரொன்றத்தழுவுவர்விழுவரோடி
ஒருவர்மேலொருவரேறியோகையென்றுவகைகூர்வார். (கசு)

இன்னணமிகழுஞ்சாலையெரிவிழித்தெழுந்துசீறி
அந்நெடுஞ்சோலைகாக்கும்வானரரவரைநோக்கி
மன்னெடுங்கதிரோன்மைந்தனாணையைமறுத்துநீயிர்
என்னினைந்தென்செய்தீர்மன்னுமுயிர்க்கிறுதியென்ன. (கஎ)

முனியுமாலெம்மையெங்கோனென்றவர்மொழிந்துபோந்து
கனியுமாமதுவனத்தைக்கட்டழித்திட்டதின்று
நனிதருகவியின்றானைநண்ணலார்செய்கைநாண
இனியெம்மாற்செயலின்றென்றத்ததிமுகற்கியம்பினாரே. (கஅ)

கேட்டவன்யாவரேயம்மதுவனங்கேடுசூழ்ந்தார்
காட்டிரென்றெழுந்தானன்னார்வாலிசேய்முதலகற்றோர்
ஈட்டம்வந்திறுத்ததாகவங்கதனேவறன்னால்
மாட்டினகவியின்றானைமதுவளருலவையீட்டம். (ககூ)

உரங்கிளர்மதுகையான்றனாணையாலுறுதிகொண்டே
குரங்கினந்தம்மையெல்லாம்விலக்கினங்கொடுமைகூறிக்
கரங்களாலெற்றநொந்தேங்காவலோவென்னவோடும்
தரங்கிளர்தாதைபட்டதறிந்திலன்றனயன்போலும். (உ0)

எனவுரைத்தனலிற்பொங்கியெழுந்திரைத்திரண்டுகோடி
கனைகழற்கவியின்சேனைகல்லெனக்கலந்துபுல்லப்
புனைமதுச்சோலைபுக்கான்மதுநுகர்புனிதச்சேனை
அனகனைவாழ்த்தியோடியங்கதனடியின்வீழ்ந்த. (உக)

இந்திரன்வாலிக்கீந்தவின்சுவைமதுவின்கானம்
அந்தரத்தவர்க்குநோக்கற்கரியவென்றுணைதன்னைச்

சிந்தினைகதிரோன்மைந்தன்றிறலினையறிதியன்றே
மந்தரமனையதோளாயிற்றதுன்வாழ்க்கையின்றே. (௨௨)

மதுவனந்தன்னையின்னேமாட்டுவித்தனைநீயென்னாக்
கதுமெனவாலிசெய்மேலெறிந்தனன்கருங்கற்பாறை
அதுதனைப்புறங்கையாலேயகற்றியங்கதனுஞ்சீறித்
ததிமுகன்றன்னைப்பற்றிக்குத்தினன்றடக்கைதன்னால். (௨௩)

வாய்வழிகுருதிசோரமணிக்கையான்மலங்கமோதிப்
போய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்
தீயெழும்வெகுளிபொங்கமற்றவன்சேனைதன்னைக்
காய்கனல்பொழியுங்கையாற்குத்துதிர்கட்டியென்றான். (௨௪)

பிடித்தனர்கொடிகடம்மாற்பிணித்தனர்பின்னுமுன்னும்
இடித்தனரசனியஞ்சவெறுழ்வலிக்கரங்களோச்சித்
துடித்தனருடலஞ்சோர்ந்தார்சொல்லும்போய்நீருமென்னாப்
படித்தனன்வாலிமைந்தன்பயத்துடனவரும்போனார். (௨௫)

அலைபுனல்குடையுமாபோன்மதுக்குடைந்தாடித்தத்தம்
தலைவர்கட்கினியதேனுங்கனிகளும்பிறவுந்தந்தே
உலைவுறுவருத்தந்தீர்ந்திட்டுபவனத்திருந்தாரப்பால்
அலைவளைத்துலவுந்தேரோன்றெறும்வெயிறணிவுபார்த்தே. (௨௬)

மூத்தலையெஃகினாற்குமுடிப்பருங்கருமமுற்றி
வித்தகன்றூதுமீண்டதிறுதியாய்விளைந்ததன்மை
அத்தலையறிந்தவெல்லாமறைந்தனமாழியான்மாட்
டித்தலைநிகழ்ந்தவெல்லாமியம்புவானெடுத்துக்கொண்டாம். (௨௭)

வேறு.

சேற்றிளமரைமலர்த்திருவைத்தேர்கெனக்
காற்றின்மாமகன்முதற்கவியின்சேனையை
நாற்றிசைமருங்கினுமேவிநாயகற்
றேற்றினனிருந்தனன்கவியின்செம்மலே. (௨௮)

கார்வரையிருந்தனன்கதிரின்காதலன்
சீரியசொற்களிற்றெருட்டச்செங்கணான்
ஆருயிராயிரமுடையனாமெனச்
சோர்தொறுஞ்சோர்தொறுமுயிர்த்துத்தோன்றினான். (௨௯)

தண்டலினெடுந்திசைமூன்றுந்தாயினர்
கண்டிலர்மடந்தையையென்னுங்கட்டுரை
உண்டுயிரகத்தெனவொறுக்கவும்முளன்
திண்டிறலனுமனைநினையுஞ்சிந்தையான். (௩0)

ஆரியனருந்துயர்க்கடலினாழ்பவன்
சீரியதன்றாஞ்செய்கைதீர்வரும்
பூரியவெம்பழிபொடித்ததாமெனாச்
சூரியன்சிறுவனைநோக்கிச்சொல்லினான். (௩௧)

குறித்தநாளிகந்தனகுன்றத்தென்றிசை
வெறிக்கருங்குழலியைநாடன்மேயினார்
மறித்திவண்வந்திலர்மாண்டுளார்கொலோ
பிறித்தவர்க்குற்றுளதென்னைபெற்றியோ. (௩௨)

மாண்டனளவளிவண்மாண்டவார்த்தையை
மீண்டவர்க்குரைத்தலின்விளிதனன்றெனாப்
பூண்டதோர்துயர்கொடுபொன்றினார்கொலோ
தேண்டினரின்னமுந்திரிகின்றார்கொலோ. (௩௩)

கண்டனரரக்கரைக்கறுவுகைம்மிக
மண்டமர்தொடங்கினார்வஞ்சர்மாயையால்
விண்டலமதனின்மேயினர்கொல்வேறிலாத்
தண்டலினெடுஞ்சிறைத்தளைப்பட்டார்கொலோ. (௩௪)

கூறினநாளவதிருக்கைகூடலம்
ஏறலஞ்சுதுமெனவின்பதுன்பங்கள்
ஆறினாருந்தவமயர்கின்றார்கொலோ
வேறவர்க்குற்றதென்விளம்புவாயென்றான். (௩௫)

என்றுரைத்திடருழந்திருக்குமெல்லையில்
வன்றிறற்றதிமுகன்வானரேசன்முன்
தன்றலைப்பொழிதருகுருதிதன்னொடும்
குன்றெனப்பணிந்தனனிருகைகூப்பியே. (௩௬)

எழுந்துநின்றையகேளின்றுநாளையோ
டழிந்ததுமதுவனமடையவென்றலும்
வழிந்திடுகுருதியின்வதனநோக்கியே
மொழிந்திடங்கியாரதுமுடித்துளோரென. (௩௭)

நீலனுங்குமுதனுநெடியகுன்றமே
போலுயர்சாம்பனும்புணரிபோர்த்தென
மேலெழுசேனையும்விரைவின்வந்துறாச்
சால்புடைமதுவனந்தனையழிப்பவே. (௩௮)

தகைந்தவச்சேனையைத்தள்ளிநின்னையும்
இகழ்ந்துரைத்தியைந்தனன்வாலிசேயெமக்
குகந்தனபுகன்றவவ்வுரைபொறாமையே
புகைந்தொருபாறையின்புணர்ப்புநீக்கியே. (௩௯)

இமைத்தன்முன்வாலிசேயெழில்கொள்யாக்கையைச்
சமைத்தியென்றெறிதரப்புறங்கையாற்றகைத்
தமைத்தருகனலெனவழன்றெற்பற்றியே
குமைத்துயிர்பதைப்பநீகூறுபோயென்றான். (௪0)

ஏம்பலொடெழுந்துநின்றிரவிகான்முளை
பாம்பணையமலனைவணங்கிப்பைந்தொடி
மேம்படுகற்பினளென்னுமெய்ம்மையைத்
தாம்புகன்றிட்டதிச்சலமென்றோதினான். (௪௧)

பண்டருகிளவியாடன்னைப்பாங்குறக்
கண்டனரன்னதோர்களிப்பினாலவர்
வண்டுறைமதுவனமழித்துமாந்திய
தண்டநாயகவினியவலந்தீர்கெனா. (௪௨)

வந்தனர்தென்றிசைவாவினாரெனப்
புந்திநொந்தென்னைகொல்புகலற்பாலரென்
றெந்தையுமிருந்தனனிரவிகான்முளை
நொந்தவத்ததிமுகன்றன்னைநோக்கியே. (௪௩)

யாரவணிறுத்தவரியம்புவாயென
மாருதிவாலிசேய்மயிந்தன்சாம்பவன்
சோர்வறுபதினெழுவோர்கடென்னினார்
* ஆர்கலிநாணவந்தார்க்குஞ்சேனையார். (௪௪)

என்றவனுரைத்தபோதிரவிகாதலன்
வன்றிறற்றதிமுகன்வதனநோக்கியே
ஒன்றுனக்குணர்த்துவதுளதுவாலிசேய்
புன்றொழிற்செய்கைசேர்புணர்ப்பனல்லனால். (௪௫)

கொற்றவன்பணிதலைக்கொண்டுதெண்டிரை
சுற்றியதிசையெலாந்துருவித்தோகையைப்
பற்றியபகைஞரைக்கடிந்துபாங்கர்வந்
துற்றனரவரையாமுரைப்பதென்னையே. (௪௬)

அன்றியும்வாலிசேயரசதாதலின்
பின்றுதறீதரோபிணங்குஞ்சிந்தையாய்
ஒன்றுநீயுணரலையுறுதிவேண்டுமேல்
சென்றவன்றனைச்சரண்சேர்தியீண்டென. (௪௭)

வணங்கியசென்னியன்மறைத்தவாயினன்
உணங்கியசிந்தையனொடுங்குமேனியன்

---

* ஆர்கலி-சமுத்திரம்.

கணங்களோடேகியக்கானநண்ணினான்
மணங்கிளர்தாரினான்மறித்தும்வந்தரோ. (௪௮)

கண்டனன்வாலிசெய்கறுவுகைம்மிக
விண்டவனம்மெதிர்மீண்டுளானெனின்
உண்டிடுகுதுமுயிரென்னவுன்னினான்
தொண்டெனத்ததிமுகன்றொழுதுதோன்றினான். (௪௯)

போழ்ந்தனையான்செய்தகுறைபொறுக்கெனா
வீழ்ந்தனனடிமிசைவீழவாலிசேய்
தாழ்ந்துகைபற்றிமெய்தழீஇக்கொண்டும்மையான்
சூழ்ந்ததும்பொறுக்கெனுந்தன்மைசொல்லினான். (௫௦)

யாழுதற்குறித்தநாளிறத்தலெண்ணியே
ஏழுறத்துயர்துடைத்தளித்தவேற்றம்போல்
தாமரைக்கண்ணவன்றுயரந்தள்ளநீர்
போமெனத்தொழுதுமுன்னனுமன்போயினான். (௫௧)

வன்றிறற்குரிசிலுமுனிவுமாறினான்
வென்றிகொள்கதிருந்தன்வெம்மையாறினான்
என்றுகொண்டியாவருமெழுந்துபோதலே
நன்றெனவேகினார்நவைக்கணீங்கினார். (௫௨)

இப்புறத்திராமனுமிரவிசேயினை
ஒப்புறநோக்கிவந்துற்றதானையர்
தப்பறக்கண்டனமென்பரோதகா
தப்புறத்தென்பரோவறைதியாலென்றான். (௫௩)

என்புழியனுமனுமிரவியென்பவன்
தென்புறத்துளனெனத்தெரிவதாயினான்
பொன்பொழிதடக்கையப்பொருவில்வீரனும்
அன்புறுசிந்தைய * னமையநோக்கினான். (௫௪)

எய்தினனனுமனுமெய்தியேந்தறன்
மொய்கழறொழுகிலன்முளரிநீங்கிய
தையலைநோக்கியதலையன்கையினன்
வையகந்தழீஇநெடிதிறைஞ்சிவாழ்த்தினான். (௫௫)

திண்டிறலவன்செயறெரியநோக்கினான்
வண்டியலோதியும்வலியண்மற்றிவன்
கண்டதுமுண்டவள்கற்புநன்றெனக்
கொண்டனன்குறிப்பினாலுணருங்கொள்கையான். (௫௬)

* அமைய என்பது-குறிப்புத்தோன்றவெனக் கொள்க.

ஆங்கவன்செய்கையையளவையாமெனா
ஓங்கியவுணர்வினால்விளைந்ததுன்னினான்
* வீங்கினன்றோள்புனல்கண்கள்விம்மினன்
நீங்கியதருந்துயர்காதனீண்டதே. (௫௭)

கண்டனென்கற்பினுக்கணியைக்கண்களால்
தெண்டிரையலைகடலிலங்கைத்தென்னகர்
அண்டர்நாயகவினித்துறத்தியையமும்
பண்டுளதுயருமென்றனுமன்பன்னுவான். (௫௮)

வேறு.

உன்பெருந்தேவியென்னுமுரிமைக்குமுன்னைப்பெற்ற
மன்பெருமருகியென்னும்வாய்மைக்குமிதிலைமன்னன்
தன்பெருந்தனையையென்னுந்தகைமைக்குந்தலைமைசான்றாள்
என்பெருந்தெய்வமையாவின்னமுங்கேட்டியென்பான். (௫௯)

பொன்னலதில்லைப்பொன்னையொப்பெனப்பொறையினின்றாள்
தன்னலதில்லைத்தன்னையொப்பெனத்தனக்குவந்த
நின்னலதில்லைநின்னையொப்பெனநினைக்குநேர்ந்தாள்
என்னலதில்லையென்னையொப்பெனவெனக்குமீந்தாள். (௬௦)

† உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கொருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னையித்தனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்
தென்குலமெனக்குத்தந்தாளென்னினிச்செய்வதெம்மோய். (௬௧)

விற்பெருந்தடந்தோள்வீரவீங்குநீரிலங்கைவெற்பின்
நற்பெருந்தவத்தளாயநங்கையைக்கண்டேனல்லேன்
இற்பிறப்பென்பதொன்றுமிரும்பொறையென்பதொன்றும்
கற்பெனும்பெயரதொன்றுங்களிநடம்புரியக்கண்டேன். (௬௨)

‡ கண்ணினுமுளைநீதையல்கருத்தினுமுளைநீவாயின்
எண்ணினுமுளைநீகொங்கையிணைக்குவைதன்னினெவ்வா
தண்ணல்வெங்காமனெய்தவலரம்புதொளைத்தவாறாப்
புண்ணினுமுளைநீநின்னைப்பிரிந்தமைபொருந்திற்றாமோ. (௬௩)

வேலையுளிலங்கையென்னும்விரிநகரொருசார்விண்டோய்
காலையுமாலைதானுமில்லதோர்கனகக்கற்பச்
சோலையங்கதனினும்பிபுல்லினாற்றொடுத்ததூய
சாலையினிருந்தாளையதவஞ்செய்ததவமாந்தையல். (௬௪)

---

* தோள்வீங்கினன்-புஜங்கள் பூரித்தார். † பிராட்டியினுடைய கலங்காநிலையினாலே ராட்சதர்களுக்கழிவும் மற்றெல்லாருக்கு நன்மையுமே உண்டாயிற்றென்று கருத்து. ‡ இதன்கருத்து பிராட்டி உம்மைப் பிரியவில்லை யென்பதாம்.

மண்ணொடுங்கொண்டுபோனான்வானுயர்கற்பினாடன்
புண்ணியமேனிதீண்டவஞ்சுவானுலகம்பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதல்கண்ணின்
எண்ணருங்கூறாய்மாய்தியென்றதோர்மொழியுண்டென்பான். (௬௫)

நீண்டிலனென்னும்வாய்மைதிசைமுகன்செய்தமுட்டை
கீண்டிலதனந்தனுச்சிகிழிந்திலதெழுந்துவேலை
மீண்டிலசுடர்கள்யாவும்விழுந்திலவேதஞ்செய்கை
மாண்டிலதென்னுந்தன்மைவாய்மையானுணர்திமன்னோ. (௬௬)

சோகத்தாளாயநங்கைகற்பினாற்றொழுதற்கொத்த
மாகத்தார்தேவிமாரும்வான்சிறப்புற்றார்மற்றைப்
பாகத்தாளிப்போதீசன்மகுடத்தாள்பதுமத்தாளும்
ஆகத்தாளல்லண்மாயனாயிரமௌலிமேலாள். (௬௭)

இலங்கையைமுழுதுநாடியிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழையவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போந்தேன்
அலங்குதண்சோலைபுக்கேனவ்வழியணங்கனாளைக்
கலங்குதெண்டிரையிற்றாயகண்ணினீர்க்கடலிற்கண்டேன். (௬௮)

அரக்கியரளவற்றாருமலகையின்குழுவுமஞ்சச்
செருக்கினல்கண்டுசெய்யமெய்க்கனநீக்கச்சீர்த்த
இரக்கமென்றொன்றுதானேயேந்திழைவடிவமெய்தித்
தருக்கியசிறையுற்றன்னதகையளத்தமியளம்மா. (௬௯)

மாண்பிறந்தமைந்தகற்பின்வானுதனின்பால்வைத்த
சேண்பிறந்தமைந்தகாதல்கண்களிற்றெறிவிட்டித்தீராக்
காண்பிறந்தமையானீயேகண்ணகன்ஞாலந்தன்னுள்
ஆண்பிறந்தமைந்தசெல்வமுண்டனையாதியன்றே. (௭௦)

அயிர்ப்பிலர்காண்பார்முன்னுமறிந்திலரெனினுமைய
வெயிற்புனையிலங்கைமூதூ * ரிந்திரன்யாக்கைக்கேற்ற
மயிற்புனையியலினாருமைந்தருநாளு மாங்கே
உயிர்ப்பொடுமுயிரினோடுமொசனின்றாடுவாரும். (௭௧)

தையலைவணங்கற்கொத்தவிடைபெறுந்தன்மைநோக்கி
ஐயநானிருந்தகாலையலங்கல்வேலிலங்கைவேந்தன்
எய்தினனிரந்துகூறியிறைஞ்சினனிருந்துநங்கை
வெய்துரைசொல்லச்சீறிக்கோறன்மேற்கொண்டுவிட்டான். (௭௨)

---

* இந்திரனியற்கைக்கு என்றும் பாடம்.

ஆயிடையணங்கின்கற்புமையநின்னருளுஞ்செய்ய
தூயநல்லறனுமென்றிங்கினையனதொடர்ந்துகாப்பப்
போயினனரக்கிமாரைச்சொல்லுமின்பொதுவினென்றாங்
கேயினனவரெலாமென்மந்திரத்துறங்கியிற்றார். (௭௩)

அன்னதோர்பொழுதினங்கையாருயிர்துறப்பதாக
உன்னினள்கொடியொன்றேந்திக்கொம்பொடுமுறைப்பச்சுற்றித்
தன்மணிக்கழுத்திற்சார்த்துமளவையிற்றடுத்துநாயேன்
பொன்னடிவணங்கிநின்றுநின்பெயர்புகன்றபோழ்தில். (௭௪)

வஞ்சனையரக்கர்செய்கையிதுவெனமனக்கொண்டேயும்
அஞ்சனவண்ணத்தான்றன்பெயருரைத்தனிமையென்பால்
துஞ்சுறுபொழுதிற்றந்தாய்துறக்கவென்றுவந்துசொன்னாள்
மஞ்செனவனமென்கொங்கைவழிகின்றமழைக்கணீராள். (௭௫)

அறிவினிற்றேறிச்சொன்னபேரடையாளம்யாவும்
செறிவுறநோக்கிநாயேன்சிந்தையிற்றிருக்கமின்மை
முறிவுறவெண்ணிவண்ணமோதிரங்காட்டக்கண்டாள்
இறுதியினுயிர்தந்தீயுமருந்தொத்ததனையதெந்தாய். (௭௬)

ஒருகணத்திரண்டுகண்டேனொளிமணியாழியான்ற
திருமுலைத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ் * செல்வநின்பால்
விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிர்ப்புள்ளூற. (௭௭)

வாங்கியவாழிதன்னைவஞ்சனூர்வந்ததாமென்
றோங்குயர்மழைக்கணீராலாயிரங்கலசமாட்டி
ஏங்கினளிருந்ததல்லாலியம்பலளொய்த்தமேனி
வீங்கினள்வியர்த்ததல்லாலிமைத்திலளுயிர்ப்புவிண்டாள். (௭௮)

அன்னவர்க்கடியனேனிற்பிரிந்தபினடுத்தவெல்லாம்
சொன்முறையறியச்சொல்லித்தோகைநீயிருந்தசூழல்
இன்னதென்றறிகிலாமேயித்தனைதாழ்த்ததென்றே
மன்னநின்வருத்தப்பாடுமுணர்த்தினேனுயிர்ப்புவந்தாள். (௭௯)

இங்குளதன்மையெல்லா † மியைபுளியியையக்கேட்டாள்
அங்குளதன்மையெல்லாமடியனுக்கறியச்சொன்னாள்
திங்களொன்றிருப்பெனின்னேதிருவுளந்தீர்ந்தபின்னை
மங்குவெனுயிரொடென்றுன்குரைகழற்றலைக்கண்வைத்தாள். (௮௦)

---

* செல்வ-ஓ மஹாப்பிரபு. † இயைபு உளி-கிரமப்படியே.

வைத்தபின்றுகிலின்வைத்தமா * மணிக்கரசைவாங்கிக்
கைத்தலத்தினிதினீந்தாடாமரைக்கண்களார
வித்தககாண்டியென்றுகொடுத்தனன்வேதநன்னூல்
உய்த்துளகாலமெல்லாம்புகழொடுமொக்கநிற்பான். (அக)

பைப்பயப்பயந்தகாமம்பரிணமித்துயர்ந்துபொங்கி
மெய்யுறவெதும்பியுள்ளமெலிவுறுநிலையைவிட்டான்
ஐயனுக்கங்கிமுன்னரங்கையாற்பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்கமணியின்காட்சி. (அஉ)

பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தனமார்புந்தோளுந்தோன்றினவியர்வின்றுள்ளி
மடித்ததுமணிவாயாவிவருவதுபோவதாகித்
தடித்ததுமேனியென்னையாருளர்தன்மைதேர்வார். (அங)

ஆயிடைக்கவிகளோடுமங்கதன்முதலினோயோர்
மேயினர்வணங்கிப்புக்கார்வீரனைக்கவியின்வேந்தைப்
போயினகருமமுற்றிப்புகுந்ததோர்பொம்மறனால்
சேயிருமதியமென்னத்திகழ்தருமுகத்தரானார். (அச)

ஆண்டையினருக்கன்மைந்தனையகேளரிவைநம்பால்
காண்டலுக்கெளியளானாளென்றலுங்காலந்தாழ
ஈண்டினுமிருத்திபோலாமென்றனனென்றலோடும்
தூண்டிரண்டனையதோளான்பொருக்கெனவெழுந்துசொன்னான். (அரு)

எழுகவெம்படைகளென்றானேயெனுமளவினெங்கும்
முழுமுரசெற்றிக்கொற்றவள்ளுவர்முடுக்கமுந்திப்
பொழிதிரையன்னவேலைபுடைபரந்தென்னப்பொங்கி
வழுவலில்வெள்ளத்தானைதென்றிசைவளர்ந்ததன்றே. (அசு)

நீலனைநெடிதுநோக்கிநேமியோன்பணிப்பானந்தம்
பால்வருஞ்சேனைதன்னைப்பகைஞர்வந்தடராவண்ணம்
சால்புறமுன்னர்ச்சென்றுசரிநெறிதுருவிப்போதி
மால்தருகளிறுபோலும்படைஞர்பின்மருங்குசூழ. (அஎ)

என்றுரைத்தெழுந்தவேலைமாருதியிருகைகூப்பிப்
புன்றொழிற்குரங்கெனதென்றோளிடைப்புகுதியென்னாத்
தன்றலைபடியிற்றாழ்ந்தானண்ணலுஞ்சரணம்வைத்தான்
வன்றிறல்வாலிசேயுமிளவலைவணங்கிச்சொன்னான். (அஅ)

---

* மணிக்கரசை - சூடாமணியை.

நீயினியென் றன்றோண்மேலே றுதிமலவென்ன
வாய்புதைத்திறைஞ்சிநின் றவாலிகாதலனைநோக்கி
நாயகற்கிளையசோவுநன்றெனவவன் றன்றோண்மேல்
பாய்தலுந்தகைப்பிறனைபடர்நெறிபடர்ந்ததன்றே. (அகூ)

கருடனில்விடையிற்றோன் றுமிருவருங்கப்பக்காலின்
அருடருகுமரன்றோண்மேலங்கதனலங்கற்றோண்மேல்
பொருடருவீரர்போகப்பொங்கொளிவிசும்பிற்றங்கும்
தெருடரும்புலவர்வாழ்த்திச்சிந்தினர்தெய்வப்பொற்பூ. (கூ0)

வையகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனை
எய்திடினென்பதன்னியிராகவனினிதினைவப்
பெய்கனிகிழங்குதேனென்றினையனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாறுச்சென் றனதகைப்பில்சேனை. (கூக)

வீரரும்விரைவிற்போனார்விலங்கன்மேலிலங்கைவெய்யோர்
சேர்விலாக்காவற்பாடும்பெருமையுமரணுநொற்றக்
கார்நிறத்தரக்கரென்போர்முதலியகணிப்பிலாத
வார்கழலனுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனார். (கூஉ)

அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனோடு
மன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனை
இன்னெடும்பவழக்குன்றிற்பகலெல்லாமிறுத்தபின்னர்ப்
பன்னிருபகலிறசென்றுதென்றிசைப்பரவைகண்டார். (கூ௩)

கஙி-வது, திருவடிதொழுதபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கஙசச.

---

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

ஆஞ்சநேயர் திருவடிகளே சரணம்.

சுந்தரகாண்டம் முற்றிற்று.

---

# சுந்தரகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.